கிறீஸ்துவர்களுக்கும் சந்நியாசிகளுக்குமுரிய

# புண்ணிய சாங்கோபாங்க முயற்சி.

இதை

மகா பேர்போன அல்போன்சுஸ் ரோதிரீகெஸ் என்னும்

இயேசு சபை சுவாமியார் இயற்றித்தந்த

வண்ணம்

இயேசு சபை சுவாமிமார்களில் ஒருவர் தமிழில் மொழி

பெயர்த்துத் தந்தனர்.

இஃது

மதுரைநாட்டு அப்போஸ்தோலிக்கு விக்காரியராகிய

அலெக்சிஸ் கானோஸ் என்னும்

நாமதேயம் கொண்டிருக்கிற

தாமாசேன் மேற்றிராணியாரவர்கள்

அநுமதியில்.

---

## மூன்றும் புத்தகம்.

---

திரிசிராப்பள்ளி :

வ. பாக்கியம் பிள்ளை

தென். இந்தியா டைம்ஸ். அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1886.





# முதற் பே

ஒறுத்தலின்

## க-ம் அதி

செபத்தியானத்தோடு ஒறுத்

இவ்விரண்டையும் ஒன்றுக்

கொள்ள வேணுமென்

இரபயேலென்னும் சம்மனசா
யாசுக்கு வெளிப்படுத்தும்போது, ஒ
த்துச் செய்கிறது நலமாகுமென்று
தில் ஒருசந்தியென்கிற வார்த்தையி
யும் குறித்திருக்கிறதென்று வேதபா
ணிமித்தம் நாம் புண்ணியத்தில் வர்
யானமும் இவ்விரண்டும் முக்கியமா
ல் ஒன்றையும்விடாமல் செய்துகொ
சொன்ன வேதபாரகர் நிரூபித்தார்க
யும் சேர்த்துச் செய்த சுகந்த வாசனை
லே வனாந்தரத்துக்குமேலாய் உயர்
தேவகானத்தில் சொல்லியிருக்கின்
க்கியத்தை வியாக்கியானித்துச் செ
சாம்பிராணியுமாகிறது ஏதென்றால்
விரண்டும் எப்போதும் நம்மைத்
இவ்விரு முயற்சியையும்கொண்டு
ன் மேலான கொடுமுடியில் ஏறி
வ சிம்மாசனத்தில் வீச வேண்டும்
ன்றை மாத்திரம் செய்தால், அதி






# முதற் போதகம்.

## ஒறுத்தலின் பேரில்.

## ௧-ம் அதிகாரம்.

செபத்தியானத்தோடு ஒறுத்தலையும் சேர்த்துச் செய்து
இவ்விரண்டையும் ஒன்றுக்கொன்று உதவியாக்கிக்
கொள்ள வேணுமென்று சொல்லுவது.

இரபயேலென்னும் சம்மனசானவர் தாம் இன்னொன்று தொபியாசுக்கு வெளிப்படுத்தும்போது, ஒருசந்தியோடு செபத்தையும் சேர்த்துச் செய்கிறது நலமாகுமென்று அருளிச் செய்தார். இவ்வாக்கியத்தில் ஒருசந்தியென்கிற வார்த்தையினாலே சரீர தபசையும் ஒறுத்தலையும் குறித்திருக்கிறதென்று வேதபாரகர் நிச்சயித்திருக்கிறார்கள். இதினிமித்தம் நாம் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு ஒறுத்தலும் செபத்தியானமும் இவ்விரண்டும் முக்கியமான வழிபாடென்றும் இவ்விரண்டில் ஒன்றையும்விடாமல் செய்துகொண்டுவர வேணுமென்றும் மேற்சொன்ன வேதபாரகர் நிரூபித்தார்கள். மீறையையும் சாம்பிராணியையும் சேர்த்துச் செய்த சுகந்த வாசனையுள்ள பரிமளப் புகையைப்போலே வனாந்தரத்துக்குமேலாய் உயர்ந்து எழும்புகிற இவள் ஆரென்று தேவகானத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். பெர்நர்துஸ் இந்த வாக்கியத்தை வியாக்கியானித்துச் சொல்லுகிறதாவது: இதில் மீறையும் சாம்பிராணியுமாகிறது ஏதென்றால் ஒறுத்தலும் செபமுமாகும். இவ்விரண்டும் எப்போதும் நம்மைத் தொடர்ந்துகொண்டு வரவேண்டும். இவ்விரு முயற்சியையும்கொண்டு நாம் புண்ணிய சாங்கோபாங்கத்தின் மேலான கொடுமுடியில் ஏறி நமது புண்ணிய சுகந்த வாசனை தேவ சிம்மாசனத்தில் வீச வேண்டும். இவ்விரண்டில் ஒன்றைவிட்டு ஒன்றை மாத்திரம் செய்தால், அதினாலே ஒரு பிரயோசனமுமில்லை. ஏ







னென்றால் செபத்தினாலே மனசைத் தாழ்த்தாமல் தன் சரீரத்தை மாத்திரம் ஒறுக்கிறவன் ஆங்காரியாவான். மாட்டுச் சதையைச் சாப்பிடுவேனோ வெள்ளாட்டு இரத்தத்தைக் குடிப்பேனோவென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, சர்வேசுரனும் இவனை நோக்கிச் சொல்லுவதற்கு இடமாகும். சதையும் இரத்தமுமாத்திரமுள்ள இவ்வித பலி சர்வேசுரனுக்குப் பொருந்தாது. அன்றியும் தன் சரீரத்தை ஒறுக்காமல் செபத்தியானம் பண்ணுகிறவனுக்கு இயேசுநாதர் சுவிசேஷத்தில் சொன்ன வாக்கியம் செல்லுமென்று பயப்படுகிறதற்கு இடமாகும். இந்த வாக்கியமாவது : நாம் உங்களுக்குச் சொல்லுகிறதைச் செய்யாதேபோனால், ஆண்டவரே, ஆண்டவரேயென்று நம்மை என் கூப்பிடுகிறீர்களென்றார். அன்றியும் தேவ கட்டளையைக் கேளாதபடிக்குக் காதைத் திருப்பிக்கொள்ளுகிறவன் செய்கிற செபத்தைக் கர்த்தர் தள்ளிவிடுவாரென்று ஞானியானவர் வசனித்தார். ஆகையால் தேவசித்தமாகிற அவர் திருக்கற்பனையை நீ அநுசரியாதேபோனால், உன் செபம் அவருக்குப் பிரியமாயிருக்கமாட்டாது.

அர்ச். அகுஸ்தீன் சொல்லுமாப்போலே, சலோமோன் கட்டுவித்த கோவிலிலே இரண்டு பீடம் இருந்தது. பலியிடவேண்டிய மிருகங்களைக் கொல்லுவதற்குத் தேவாலயத்துக்கு வெளியே ஒரு பீடம் இருந்தது. தூபத்தைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுப்பதற்குத் தேவாலயத்துக்குள் வேறோர் பீடம் இருந்தது. இவ்வண்ணமே நம்மிடத்திலும் இரண்டு பீடம் இருக்க வேண்டும். செபமாகிற தூபத்தைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுப்பதற்காக நமதாத்துமத்துக்குள்ளே ஒரு பீடம் இருக்க வேண்டும். இதினாலல்லோ நீ செபம் பண்ணவேணுமானால், உன் அறைக்குள் புகுந்து கதவைச் சாத்திக்கொண்டு இரகசியமாய் உன் பிதாவை நோக்கிச் செபித்துக்கொள்ளென்று இயேசுநாதர் திருவுளம் பற்றினார். சரீர ஒறுத்தலைக் கொண்டு நம்மை நாமே பலியிடுவதற்காக வேறோர் வெளிப் பீடம் இருக்க வேண்டும். ஆகையால் ஒறுத்தலும் செபத்தியானமுமாகிற இவ்விரண்டையும் விடாமல் எப்போதும் சேர்த்துச் செய்துகொண்டு வரவேண்டும். ஒன்று வேறொன்றைச் செய்வதற்கு உதவியாயிருக்க வேண்டும். ஏனென்றால் ஒறுத்தலானது செபத்தியானம் செய்வதற்கு அவசரமான ஆயத்தமாய் இருப்பதுபோலே உத்தமமான ஒறுத்தலென்னும் புண்ணியத்தை அடைவதற்குச் செபத்தியானம் மிகவும் பிரயோசனமுள்ள வழிபாடாகும்.





முந்த முந்த ஒறுத்தலானது செபத்தியானம் செய்வதற்கு அவசரமான வழிபாடென்று சகல அர்ச்சியசிஷ்டவர்களும் ஞானசீவிய கிரந்தகர்த்தாக்கள் அனைவரும் போதித்த சத்தியமாமே. ஆட்டுத்தோலிலுள்ள சதையையும் மயிரையும் பிடுங்கி அதைப் பதம் பண்ணாவிட்டால், அது ஒரு வேலைக்கும் உதவாது. இவ்வண்ணமே சரீர இச்சை எல்லாத்தையும் நமதிருதயத்திலிருந்து வேர்ப்பிடுங்காய்ப் பிடுங்கி எறிந்து நமதிருதயத்தைச் சுத்தம்பண்ணாவிட்டால், ஞானத்தையும் வரப்பிரசாதத்தையும் கர்த்தர் நமதிருதயத்தில் சொரிவதற்கான ஆயத்தம் இல்லையென்னத்தகும். இதினாலல்லோ யாருக்குச் சாஸ்திரத்தைக் கற்றுக்கொடுப்பார்? யாருக்கு அறிவென்னும் வாத்தை அளித்தருளுவார்? பால்குடி மறந்தபிள்ளைகளுக்கே இதை அளித்தருளுவாரென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். அதாவது, தேவ சினேகத்தைப்பற்றி உலக இன்பத்தையும் சரீர இச்சையையும் வெறுத்துத் தங்களை ஒறுக்கிறவர்களுக்கே இதை அளித்தருளுவாரென்று அர்த்தமாகும். சர்வேசுரன் நமதிருதயத்தில் பிரவேசிக்க வேணுமானால், அதிலே உலோகபற்றுதல் ஒன்றுமில்லாமல் சுத்தமாயிருக்க வேண்டும். அதிலேஆழ்ந்த சமாதானமும் அமரிக்கையும் இருப்பது அவசரம். இதினாலல்லோ சமாதானமுள்ள இடத்தில் அவர் குடிகொண்டிருக்கிறாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது.

அஞ்ஞான சாஸ்திரிகள் முதலாய் இச்சத்தியத்தை அறிந்துகொண்டார்கள். ஆத்தும அமரிக்கையானது ஞானமென்றும் சரீர இச்சையை முழுதும் ஒடுக்கினால் மாத்திரம் இந்த அமரிக்கையைச் சுகித்தநுபவிக்கலாமென்றும் அவர்கள் எல்லாரும் ஒத்துக்கொண்டார்கள். ஏனென்றால் பெலத்த ஆசாபாசம் ஆத்துமத்தில் இருக்கும்போது, அது ஒழுங்கற்ற பற்றுதலை மூட்டிவிட்டு மனசமாதானத்தைக் கலக்கிப் புத்தியை மங்கடிக்கும். புத்தியைக் குருடாக்கி மனசைப் பலவீனப்படுத்துகிறது ஆசாபாசத்துக்குரிய குணமாகும். கோபமுள்ளவனிடத்தில் தினந்தோறும் நாம் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிற காரியமிதுவே. கோபமென்கிற ஆசாபாசம் அவன் புத்தியை நீக்கி அவனைப் பைத்தியகாரனாக்கிறதென்று அறிந்திருக்கிறோம். கோபம் அமர்ந்தபின் இதை ஏன் சொன்னாய், இன்னின்ன காரியத்தை ஏன் செய்தாயென்று அவனிடத்தில் கேட்டால், என் நிலைபரம் தட்டுக்கெட்டுப்போயிற்றென்று சொல்லுவான். ஆனால் ஆசாபாசமெல்லாம் நீங்கி அமரிக்



கையாயிருக்கும்போது, நன்மையை அறிந்துகொள்ளுவதற்குப் புத்தியில் வெகு தெளிவுண்டாகும்; நன்மை செய்து முடிப்பதற்கு அதிக பெலன் மனசுக்கு வரும். சர்வேசுரன் நமதிருதயத்தில் குடிகொண்டிருந்து ஞானத்தையும் தேவ வரங்களையும் நமதுபேரில் பொழியவிடும் பொருட்டு இந்தச் சமாதானமும் அமரிக்கையும் அவசரமாமே. இந்தச்சமாதானத்தை அடைவதற்கு ஆசாபாசங்களையும் ஒழுங்கற்ற பற்றுதல்களையும் ஒறுத்து அடக்குகிறது மெய்யான வழிபாடாகும். இதினாலல்லோ சமாதானம் நீதியின் அலுவலென்று இசாயியாசென்னும் திர்க்கதரிசி அருளிச்செய்தார்.

நீதியும் சமாதானமும் அந்நியோந்நியமாய் முத்தமிட்டுக்கொண்டதென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அகுஸ்தீன் வியாக்கியானம் பண்ணி இச்சத்தியத்தை உத்தமமாய் விளக்கிக் காட்டியிருக்கிறார். அவர் சொல்லுகிறதாவது: நீதியும் சமாதானமும் உன்னிடத்தில் முத்தமிட்டுக்கொள்ள வேணுமென்று உனக்கு மனசுண்டோ? உண்டானால் நீதியுள்ள கிரிகையை நிறைவேற்றி முடி; அப்போது உன்னிடத்தில் மனசமாதானம் உண்டாகுமென்பது நிச்சயம். நீதியை நீ சினேகியாதிருந்தால், உன்னிடத்தில் மனசமாதானம் உண்டாகாது. ஏனென்றால், சமாதானமும் நீதியுமாகிய இவ்விரண்டும் சினேகிதர்; இவ்விரண்டும் ஏகபந்தனமாய் ஒன்றித்திருப்பதினாலே, ஒன்றை விட்டு ஒன்றைப் பிரிப்பதற்கு ஒருவராலும் முடியாது. ஆகையால் நீதியை நீ சினேகியாதிருந்தால், மனசமாதானமும் உன்னைச் சினேகிக்க மாட்டாது, உன்னிடத்தில் வரவும் மாட்டாதென்றார். சண்டை போட்டல்லோ சமாதானம் பண்ணவேண்டும். உன்னை ஒறுத்து உன் ஆசைக்கு விரோதமாய் நடந்து உன்னைச் செயித்து உன்னோடுதானே யுத்தம் பண்ணவிட்டால், செபத்தியானம் பண்ணுவதற்கு அவசரமான மனசமாதானத்தை ஒருகாலும் அடைய மாட்டாய். இதினாலல்லோ நீ ஒறுத்து அடக்காத இருதயப்பற்றுதலைப்போலே உன் மனதைக் குழப்பி உன் புண்ணிய வர்த்திப்புக்கு விரோதம் பண்ணுகிற காரியம் வேறொன்றுமில்லையென்று கிறீஸ்துநாதர் அநுசாரத்தில் சொல்லியிருக்கின்றது. உன் மனதைக் கலக்கி நீ செபத்தியானம் நன்றாய்ச் செய்யாதபடிக்கு விக்கினம் பண்ணுகிறது உன்னிடத்திலுள்ள ஒழுங்கற்ற ஆசாபாசமும் கெட்ட பற்றுதலுமே யல்லாமல் வேறொன்றுமில்லை; செபத்தியான நேரத்தில் உன்






மனதைக் கலக்குகிறது உன் ஆசாபாசங்கள்தான் ; உன் ஆத்துமத்தில் பெலத்த சத்தமிட்டுக் கத்திச் செபத்தியானமாகிற மதுரமான நித்திரையை க்ஷணத்துக்கு க்ஷணம் கலேக்கிறது உன் ஆசாபாசங்கள்தான்; நீ செபத்தியானமாகிற இளேப்பாற்றியும் நித்திரையும் கொள்ளாதபடிக்கு விக்கினம் பண்ணுகிறது உன்னிடத்திலுள்ள ஒழுங்கற்ற பற்றுதல்தான். திரமாய்ச் சாப்பட்டவன் சிலவிசை இராத்திரி நித்திரை போகக்கூடாமலிருப்பான்; ஏனென்றல் அவன் வயிற்றிலே உள்ள சமிக்காத ஆகாரவஸ்துக்களிலிருந்து அடர்ந்த புகை இடைவிடாமல் எழும்பி மூளையைக் குழப்புகிறதினலே, அவன் இராத்திரி முழுதும் இப்பக்கமும் அப்பக்கமும் புறண்டுகொண்டு தூக்கமில்லாமலிருப்பான். செபத்தியானத்திலும் நடக்கிறது இதுவே. தாறுமாறன சுய சினேகமும் ஆசாபாசமும் சொல்லுகிறபடி நடக்கவேணுமென்கிற ஆவலும் மற்றவர்கள் நம்மைக் கனம்பண்ணி நாம் சொன்னபடி கேட்கவேணுமென்கிற ஆசையும் இதுவெல்லாம் நமது இருதயத்தை அமுக்கி நம்மிடத்தில் புகையாகிற தாறுமாறன பற்றுதலே எழுப்பி நமது புத்தியில் எண்ணிக்கைக்குள்ளடங்காத உருபிகரங்களைத் தோற்றுவிக்கிறதினலே செபத்தியானத்தில் நாம் கவனமுற்றிருக்கவும் நமது புத்தியும் மனசும் சர்வேசுரனேடு ஒன்றிக்கவும் கூடாமல்போகின்றது. குடியும் வெறியும் இவ்வுலோக நன்மைகளின் பேரிலுள்ள கவலே விசாரமும் உங்கள் இருதயத்தை அமுக்காதபடிக்கு எச்சரிக்கையாய் இருங்களென்று இரட்சகர் சுவிசேஷத்தில் திருவுளம்பற்றின வாக்கியத்துக்கு அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுகிற அர்த்தமிதுவே. ஏனென்றல் இலாகிரியான பானத்தைக் குடிப்பதினல் வெறி உண்டாவதுபோலே, உலக நன்மைகளின்பேரில் பற்றுதல் வைப்பதினலேயும் ஒருவித ஞானவெறி உண்டாகும். இந்த ஞான வெறியைக் குறித்துத்தான் இயேசுநாதர் மேற்கண்ட வசனத்தில் சொல்லியிருக்கிறர். இதினலல்லோ நிர்ப்பாக்கியமானவளே, இதைக் கேள் : சாராயம் குடியாதேபோனலும், நீ வெறிகொண்டிருக்கிறயென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். ஆகையால் சாராயத்தினலே வரும் வெறியுமல்லாமல் ஆசாபாசங்களினல் உண்டாகும் ஞான வெறியும் உண்டென்று இந்த வசனத்துக்கு அர்த்தமாகும். ஒறுத்தலேக்கொண்டு ஆசாபாசங்களே அடக்கி இருதயத்தைச் சுத்தம்பண்ணிவிட்டால், அந்த ஆசாபாசங்களிலிருந்து எழும்பும் அடர்ந்த மேகமாகிற புகை புத்தியை மங்கடித்து ஞான வெறி உண்டாக்கி ஆத்துமம் தேவசந்நிதானத்தை சுகித்தநுபவியாதபடிக்கும்

ஞான நன்மைகளை அறிந்துகொள்ளாதபடிக்கும் விக்கினம் பண்ணும். இதினிமித்தமாகச் சரீர இச்சையுள்ள மிருகத்துக்கொத்த மனுஷன் இஸ்பிரீத்துசாந்து சொல்லுகிறதைக் கண்டுபிடிக்கிறதில்லையென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஏனென்றால் செபத்தியானத்தில் இஸ்பிரீத்துசாந்து ஏவுகிற புத்தி மேலான ஞானத்துக்கடுத்தது ; மனுஷன் கீழ்ங்கிஷத்துக்குரிய துர்க்குணம் ஆசாபாசங்களினால் அலைக்கழிக்கப்பட்டவன். ஆகையால் இவன் செபத்தியானத்திலே இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதலை அறிந்து சுகித்தநுபவிக்கும் பொருட்டு ஒறுத்தலைக் கொண்டு ஆசாபாசங்களை அடக்கி ஆத்துமத்தைச் சுத்தப்படுத்தி ஞானமுள்ளவனாக வேண்டும்.

இப்போது சொன்னதைக் கொண்டு இது காரியத்தில் வழக்கமாய் நேரிடுகிற ஓர் சந்தேகத்தை நிவாரணம் பண்ணலாம். அதென்னவென்றால், செபத்தியானமானது நாம் சர்வேசுரனோடு சகசமாய்ப் பேசுகிற பேச்சாமே. ஆகையால் இது இன்பமும் சந்தோஷமும் நிறைந்த முயற்சியாகும். இதினாலல்லோ சர்வேசுரனுடைய பேச்சிலே கசப்பும் உருசியற்றதும் ஒன்றுமில்லை; அவரோடு புழங்குகிறது சந்தோஷமும் பிரியமுமாயிருக்குமென்று ஞானியானவர் வசனித்தார். ஆகையால் செபத்தியானம் இவ்வளவு இன்பம் நிறைந்தும் இவ்வளவு பிரயோசனமும் அவசரமுமான முயற்சியாயிருக்கையிலே, இது வெகு வருத்தமாக நமக்குத் தோன்றுகிறதென்ன? செபத்தியானம் செய்கிறதற்கு நாம் அவ்வளவு வருத்தப்படுகிறதென்ன? அத்தனை கொஞ்சம் பேர் மாத்திரம் அதைச் செய்துகொண்டு வருகிறதென்ன? இதினாலல்லோ ஞானக் கிருத்தியங்களைச் செய்கிறது நமக்கு அருவருப்பும் வருத்தமுமாயிருக்கின்றது ; தூணிலே கட்டியிருக்கிற நாயைப்போலே நாம் செபத்தியானத்தைக் கட்டாயமாய்ச் செய்துகொண்டு வருகிறோமென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். நாம் கொஞ்சத்துக்குமுன் சொன்னதே இதற்குக் காரணமாகும். செபத்தியானம் வருத்தமான காரியமல்ல ; ஆனால் ஒறுத்தல் வருத்தமான காரியம். செபத்தியானத்துக்கு ஒறுத்தல் அவசரமான ஆயத்தமாயிருப்பதினாலேயும் நாம் ஒறுத்தலை அநுசரியாததினாலேயும் செபத்தியானம் நமக்கு வருத்தமாகத் தோன்றும். உலகத்தில் நடக்கிறதைக் கொண்டு இச்சத்தியத்தை அறிந்துகொள்ளலாம். அதெப்படியென்றால், நெருப்பிலே பச்சைக் கட்டையைப் போட்டால், என்னநடக்கிறதென்று பார். இந்தக் கட்





டையிலே உள்ள ஈரத்தை வாங்குகிறதற்காக நெருப்பு எவ்வளவு பிரயாசப்படும் ; அதிலிருந்து அடர்ந்த புகை எழும்பும் ; அந்தக் கட்டையிலுள்ள ஈரம் நீங்கி அதிலே நெருப்புப் பற்றுவதற்கு எவ்வளவு நேரம் செல்லுமென்று பார். ஆனால் அதிலுள்ள ஈரமெல்லாம் காய்ந்த உடனே நெருப்புப் பற்றி எளிதாய் அதை எரித்துச் சாம்பலாக்கும். இவ்வண்ணமே நமதாத்துமத்திலுள்ள துர்க்குணம் ஆசாபாசங்களாகிற ஈரத்தை நீக்கி ஒழுங்கற்ற ஆசைகளை ஒறுத்து இவ்வுலோக நன்மைகளின்பேரிலுள்ள பற்றுதல் எல்லாத்தையும் முழுதும் நமதிருதயத்தில் நின்று பிடுங்கி எறிகிறது வருத்தமான காரியம். இதைமாத்திரம் நாம் செய்து முடித்தால், அப்புறம் பிரயாசம் ஒன்றுமில்லை ; நமதாத்துமம் தன்னாலே சர்வேசுரனை நாடிச் செபத்தியானத்தில் அவரோடு சகசமாய்ப் பேசுவதற்குப் பிரியப்படும். ஒவ்வொருவனும் தனக்கொத்தவர்களோடு பேசப் பிரியப்படுவான். இவ்வண்ணமே தன் சரீரத்தை ஒறுத்துக்கொண்டு வருகிறவன் ஞானமுள்ளவனாகிச் சர்வேசுரனுக்கு எவ்வளவாகிலும் ஒத்தவனாயிருப்பான். இதினாலே செபத்தியானத்தில் அவரோடு பேசுவதற்குப் பிரியப்படுவான் ; சர்வேசுரனும் தமது ஞான வரங்களை அவனுக்குக் கொடுக்கத் தாற்பரியப்படுவார். இதினாலல்லோ மனுமக்களோடே இருப்பது நமக்குப் பிரியமென்று ஞானிவாயாலே வசனித்தார். ஆனால் ஆசாபாசங்கள் உன் இருதயம் நிறைய மூடிக்கொண்டு வீண்மகிமை அதிலே ஆட்கொண்டிருந்தால், நீ உலக காரியங்களிலே ஊடாடி உன் சந்தோஷத்தையும் சுகத்தையும் நாடி நடந்தால், நீ சர்வேசுரனுக்கு ஒத்தவனாய் இராததினாலே, செபத்தியானத்தில் அவரோடு பேசுகிறது உனக்கு மிகவும் வருத்தமாயிருக்கும். நீ உலக காரியங்களுக்கு ஒத்தவனாய் இருக்கிறதினாலே, அதுகளை நாடித் திரிவதே உனக்கு இன்பமாயிருக்கும். இதினிமித்தமாக மனுஷர் தாங்கள் சிநேகிக்கிற காரியங்களைப்போலே தாங்களும் அருவருப்புக்குரியவர்களானார்களென்று ஓசே என்னும் தீர்க்கதரிசி வசனித்தார்.

ஓர் வேதபாரகர் சொல்லுமாப்போலே, தண்ணீர் கலங்கியிருந்தால், அதிலே தன் முகத்தையும் வேறொன்றையும் பார்க்க முடியாது. இவ்விதமாகவே உலோக நன்மைகளின்பேரிலும் வீணும் வியர்த்தமுமான எந்தெந்தக் காரியத்தின்பேரிலும் இருதயத்திலுள்ள பற்றுதலைப் பிடுங்கி எறிந்து அதைச் சுத்தமாக்காவிட்டால், செபத்தியானத்தில்






தேவ திருமுகத்தை ஒருகாலும் பார்க்க முடியாது. அதாவது பரம இரகசியங்களை ஆழ்ந்து கண்டுபிடிக்க நம்மாலே ஆகாது ; சர்வேசுரனும் நம்மோடு ஒருகாலும் ஒன்றிக்கமாட்டார். இதினாலல்லோ பரிசுத்தமான இருதயமுள்ளவர்கள் பாக்கியவான்கள் ; ஏனென்றால் அவர்கள் சர்வேசுரனைத் தரிசிப்பார்களென்று இயேசுநாதர் திருவுளம் பற்றினார். பரம இரகசியங்களையும் சர்வேசுரனுடைய கிரிகைகளையும் ஞான விதமாய்ப் பார்ப்பதே செபத்தியானமென்று சொல்லப்படும். சரீரக் கண்ணாலே நன்றாய்ப் பார்க்கவேணுமானால், கண் சுத்தமாயும் தெளிவாயும் இருக்கவேண்டும். இவ்வண்ணமே ஆத்தும கண்ணைக் கொண்டு செபத்தியானத்திலே தேவ கிரிகைகளை நன்றாய்ப் பார்க்கும்பொருட்டு இருதயம் பரிசுத்தமாயிருக்க வேண்டும். ஆகையால் நீ சர்வேசுரனைப் பார்க்க வேணுமானால், அவருக்குப் பொருந்தாததெல்லாத்தையும் உன் இருதயத்தைவிட்டு அகற்றி அதைச் சுத்தம் பண்ணுவதற்கு முந்த முந்தப் பிரயாசப்படவேணுமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார்.

காசியான் சொன்ன ஓர் உவமையை ஈசாக்கென்னும் மடாதிபதி எடுத்துக் காட்டி இச்சத்தியத்தை விளங்கப் பண்ணியிருக்கிறார். அதாவது, நமதாத்துமம் மகா இலேசான இறகுபோலிருக்கின்றது. இறகு நனையாமலும் வேறெந்த வஸ்துவோடும் ஒட்டிக்கொள்ளாமலும் இருந்தால், கொஞ்சம் காற்று வீசவே பூமிக்குமேலாய் எழும்பி ஆகாசத்திலே பறந்துகொண்டிருக்கும். ஆனால் அது நனைந்து அல்லது யாதொரு வஸ்துவோடே ஒட்டிக்கொண்டிருந்தால், மேலேஎழும்பாமல் பூமியில் சேறு சகதிக்குள்ளே கிடக்கும். அப்படியே நமதாத்துமம் ஓர் அற்ப உலக பற்றுதலுமில்லாமல் பரிசுத்தமாயிருந்தால், செபத்தியானத்திலே தேவ ஏவலாகிற ஓர் அற்பக் காற்று வீசவே சர்வேசுரன்மட்டும் ஆத்துமம் எழும்பும். ஆனால் ஆத்துமம் உலக நன்மையின்பேரில் பற்றுதல் வைத்து அதில் ஒட்டிக்கொண்டிருந்தால், அல்லது ஒழுங்கற்ற ஆசாபாசங்களாலே அது அசுத்தப்பட்டிருந்தால், பாரமாகி மோக்ஷ நன்மைகளை நோக்கி உயர எழும்பவும் செபத்தியானத்திலே திருந்தி அடையவும் மாட்டாது. மோயிசென்பவர் சப்பாத்தைக் கழற்றாமல் எரிகிற முட்செடிக்கிட்ட வரப்படாதென்று சர்வேசுரன் விலக்கியிருக்க, உன் துர்க்குணம் ஆசாபாசங்களையும் உலக நன்மையின்பேரில் உன்னிடத்திலுள்ள பற்றுதல் எல்லாத்தையும் நீக்கிவிடாமல் சர்





வேசுரனை அண்டி அவரோடு சம்பாஷிப்பது உன்னாலே ஆருமோவென்று நீலென்னும் மடாதிபதி வசனித்தார்.

நாம் செபத்தியானம் செய்யத் துவக்கிச் சர்வேசுரனோடு சம்பாஷிப்பதற்கு நமது ஆசாபாசங்கள் எவ்வளவு அமரிக்கையாயிருக்க வேணுமென்று துலக்கிக் காட்டுவதற்காக அரசராகமத்தின் நாலாம் புத்தகத்திலுள்ள ஓர் வர்த்தமானம் மிகவும் உதவியாயிருக்கும். அதென்னவென்றால், இசராயேல் இராசாவாகிய யோராமென்பவனும் யூதேய இராசாவாகிய யோசப்பாத்தென்பவரும் எதோம் இராசாவும் ஆக மூவரும் மோவாபு இராசாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போகையில் வனாந்திரத்திலே தண்ணீரில்லாமல் போய்விட்டதினாலே அவர்கள் படை சாகிறதாயிருந்தது. இச்சமயத்தில் இந்த இராசாக்கள் செய்யவேண்டியது இன்னதென்று எலிசேயுசென்னும் தீர்க்கதரிசியிடத்தில் கேட்கப் போனார்கள். அஞ்ஞானியாயிருந்த இசராயேல் இராசா அந்தத் தீர்க்கதரிசியை நோக்கிச் சொன்னதாவது: கர்த்தர் இங்கே மூன்று இராசாக்களையும் சேர்த்து மோவாபு கையிலே பிடித்துக்கொடுக்கப் போகிறாரோவென்றான். அதற்குத் தீர்க்கதரிசியானவர் சொன்னதாவது: எனக்கும் உனக்கும் காரியமென்ன ? உன் ஆத்தாள் அப்பனுடைய தீர்க்கதரிசிகள் கிட்டப்போ. சேனைகர்த்தராகிய சுயஞ்சீவிய சர்வேசுரன் சமுகத்திலே நான் இருக்கிறேன்; யூதேய இராசாவாகிய யோசப்பாத்தென்பவருடைய முகத்தாக்ஷிணை பாராவிட்டால், உன்னைச் சட்டைபண்ணவுமாட்டேன், உன்னை எறெடுத்துப் பார்க்கவுமாட்டேன். இப்போது ஒரு கீத வாத்தியனை அழைத்துக்கொண்டு வாருங்களென்றார். இந்த அர்ச்சியசிஷ்ட தீர்க்கதரிசியானவர் கெட்டு அஞ்ஞானியாய்ப்போன இசராயேல் இராசாவின் ஆத்தும ஈடேற்றத்தின்பேரிலுள்ள பற்றுதலினாலே, தைரியத்தோடு அவனைக் கண்டித்துப் புத்திசொன்ன விதமிதுவே. ஆகிலும் பரிசுத்தரும் புண்ணியவாளருமாயிருந்த யோசப்பாத்தென்னும் இராசாவின் முகத்தாக்ஷிணைக்காகச் சர்வேசுரன் அவர்களுக்குச் செய்யச் சித்தமாயிருந்த ஆச்சரியங்களை அவர்களுக்கு வெளிப்படுத்தவேணுமென்று மனசாயிருந்தார். ஆனால் இசராயேல் இராசாவுக்குக் கடிந்து புத்திசொன்னதினாலே அவர் மனம் கலங்கியிருந்ததைப் பற்றிக் கீதவாத்தியத்தைக் கொண்டு அந்தக் கலக்கத்தை நீக்கி மன அமரிக்கை அடைந்தபின், சர்வேசுரனைச் செபித்து அவர் கிருபையை மன்றாடவேணுமென்று கீதவாத்திய





னை வரவழைக்கச் சொன்னார். அவரிடத்தில் இருந்த ஞானமுனிவு தீர்ந்து மனம் அமரிக்கையான உடனே சர்வேசுரனைச் செபித்து அவர்களுக்கு அவர் செய்யத் திருவுளமாயிருந்த ஆச்சரியங்களை வெளிப்படுத்தி உங்களுக்குத் திரளான தண்ணீர் வரும், உங்கள் சத்துருக்களின் பேரில் செயம் அடைவீர்களென்று அறிவித்தார். இந்த அர்ச்சியசிஷ்ட தீர்க்கதரிசியானவர் பரிசுத்த ஞான முனிவுகொண்டிருந்தாலும், அதினாலே வந்த கலக்கத்தை அமர்த்தினபின் மாத்திரம், சர்வேசுரனைச் செபிக்க வேண்டியிருந்ததல்லோ? இதிப்படியிருக்கச் செபத்தியானத்தில் நாம் சர்வேசுரனோடு ஒன்றிப்பதற்கு ஒழுங்கற்ற பற்றுதலினாலே வருகிற கலக்கத்தையெல்லாம் நீக்கி மனஅமரிக்கையாயிருப்பது எவ்வளவு அவசரமென்று சொல்லவேண்டுமோ?

இரண்டாவது, ஒறுத்தலை அடைவதற்குச் செபத்தியானம் எவ்வளவு தகுந்த வழிபாடென்று ஐந்தாம் போதகத்திலே நாம் சொன்னதே போதும். இந்த ஒறுத்தல் நாம் செபத்தியானத்தினால் அடைய வேண்டிய பலனாகும். நாம் செபத்தியானம் பண்ணிக்கொண்டு வருகையிலே, ஒறுத்தலென்னும் புண்ணியம் நம்மிடத்தில் விளங்காவிட்டால், நாம் பண்ணுகிற செபத்தியானம் நல்லதோ உதவாததோவென்று சந்தேகப்படுவதற்கு இடமுண்டென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இது ஞாயந்தானே. ஏனென்றால் இரும்பைக் கொண்டு யாதொரு வேலை செய்யவேணுமானால், அதை உலையிலே வைத்துப் பழுக்கக் காய்ச்சி இளக்கினபின், சம்மட்டியால் அடித்து நீட்டவேண்டும். நெருப்பிலே மாத்திரம் அதை வைத்துக் காச்சினது போதுமென்று அடித்து நீட்டாதேபோனால், நாம் நினைத்தவேலையைச் செய்துமுடிக்கக் கூடாதல்லோ? இவ்வண்ணமே செபத்தியானத்தைக் கொண்டு நமதிருதயத்தைக் காய்ச்சி இழக்குகிறது போதாது. நமதாத்துமத்தைத் திருத்திக் குற்றங்குறைகளையெல்லாம் அதை விட்டு நீக்கி நமக்கு அவசரமான புண்ணியங்களையெல்லாம் அதிலே பதிக்கிறதற்காக ஒறுத்தலென்னும் சம்மட்டியால் அதை அடித்து ஒழுங்குப் படுத்த வேண்டும். செபத்தியானத்திலும் தேவசினேக முயற்சியிலும் நாம் சுகித்தநுபவிக்கிற ஞான இன்பமும் மதுரமும் ஒறுத்தலிலே நமக்குண்டாகிற வருத்தத்தைத் தணிப்பதற்கு உதவியாயிருக்க வேண்டும்; நமது சுயமனசை அடக்கி நமது கெட்டகுணத்தையும் ஆசாபாசங்களையும் செயிப்பதற்கான தைரியம் செபத்தியானத்தினால் நம






க்கு உண்டாக வேண்டும். நமக்கு மிகவும் அவசரமான இந்த உத்தம ஒறுத்தலை நாம் தேவ கிருபையினால் அடையும் மட்டும் சுறுசுறுப்போடு இடைவிடாமல் செபத்தியானம் பண்ணிக்கொண்டு வரக்கடவோம். இந்த உத்தம ஒறுத்தலை நாம் அடையவேணுமென்று வேதாகமத்திலும் சொல்லியிருக்கின்றது ; அர்ச்சியசிஷ்டவர்களும் வெகு அக்கறையோடு நமக்கு புத்தி சொல்லியிருக்கிறார்கள்.

பிள்ளை வளர்ந்து பால்குடி மறந்தது. அது பால்குடி மறந்த அன்றைக்கு அபிராமென்பவர் பெரிய விருந்து செய்தாரென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தீன் இவ்வாக்கியத்தின் பேரில் சொல்லுகிறதாவது : இங்கே சொல்லியிருக்கிற பிள்ளை ஈசாக்கென்பவர்தானே. அத்தனை காலத்துக்குமுன்னே சர்வேசுரன் வாக்குத்தத்தம் கொடுத்திருந்தவருமாய்ச் சகலராலும் ஆசிக்கப்பட்டவருமாய்ச் சகல சாதி சனங்களுக்கும் தேவாசீர்வாதத்தைப் பெறுவிக்கக் குறிக்கப்பட்டவருமாயிருந்த இந்தப் பிள்ளை பிறந்த அன்றைக்குச் சந்தோஷம் கொண்டாடவுமில்லை ; அவருக்கு ஆரபாரமான விருத்த சேதனச் சடங்கு செய்த அன்றைக்கு விருந்து பண்ணவுமில்லை. அவர் பால் குடியாதபடிக்குச் செய்ததினாலே அவர் அழுதுகொண்டிருந்த அன்றைக்கு அவருடைய தகப்பனார் சந்தோஷித்துச் சிநேகிதருக்குப் பெரிய விருந்திட்டாரே. இதுக்கு முகாந்தரமென்ன? இதிலே யாதொரு ஞான அர்த்தம் அடங்கியிருக்க வேண்டும். அதென்னவென்றால், யாதொருவன் புண்ணியத்தில் வர்த்தித்துச் சாங்கோபாங்கத்தில் ஸ்திரப்பட்டுப் பெரியமனுஷனாகிறதைக் கண்டால், நாம் ஞான சந்தோஷப் படவேணுமென்று இஸ்பிரீத்துசாந்து நமக்கு வெளிப்படுத்தச் சித்தமானார். இதினாலல்லோ நீங்கள் இயேசுநாதரிடத்தில் சிறுபிள்ளைகளாயிருக்குமட்டும் உங்களுக்குக் கெட்டியான சாப்பாடு கொடாமல் பாலூட்டி வளர்த்தோமென்று அர்ச். சின்னப்பர் கிறீஸ்துவர்களை நோக்கிச் சொன்னதாக அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். இச்சத்தியத்தை நமக்குத்தானே சாட்டிக்கொள்ளக் கடவோம். நாம் நவசந்நியாசத்தில் பிரவேசிக்கும்போதும் நவசந்நியாசம் முடிந்து வார்த்தைப்பாடு கொடுக்கும்போதும் நமது ஞானப் பிதாக்களாகிய சிரேஷ்டர்கள் வெகு சந்தோஷப்படுகிறதில்லை. நாம் எளிதான புண்ணியங்களைவிட்டுக் குழந்தைச் சுபாவத்தை நீக்கிப் பிள்ளைகளுக்குரிய வீண்விளையாட்டுகளை அகற்றி ஸ்திரமான புண்ணியங்க





ளைச் செய்து ஒறுத்தலும் உறுதியுமுள்ளவர்களாக நடக்கிறதைக் கண்டால், அப்போது நமது சிரேஷ்டர்கள் வெகுவாய் அகமகிழ்ந்து சந்தோஷம் கொண்டாடுவார்கள்.

இன்னமும் செபத்தியானத்துக்கும் ஒறுத்தலுக்கும் வேறே ஒரு விசேஷ தொந்தார்த்தம் உண்டு. அதென்னவென்றால், செபத்தியானம் ஒறுத்தலை அடைவதற்கான வழிபாடாயிருக்கிறதுமல்லாமல் செபத்தியானமே மகா பெரிய ஒறுத்தலாகும். இதினாலல்லோ நல்ல யோசனை செய்வதில் படுகிற பிரயாசம் உடம்பை மெலியப்பண்ணும்; அடிக்கடி செய்கிற தியானம் சரீரத்தைக் கஸ்திப்படுத்துமென்று இஸ்பிரீத்துசாந்து திருவுளம்பற்றினார். அன்றியும் யக்கோபென்பவரும் சம்மனசுவும் மல்லுக்கட்டிக்கொண்டார்களே. இதினாலே நாம் இப்போது சொன்ன சத்தியத்தை இஸ்பிரீத்துசாந்து நமக்கு வெளிப்படுத்தியிருக்கிறார். இப்படி மல்லுக்கட்டினபின், யக்கோபென்பவர் நொண்டியானார். இப்படியே செபத்தியானத்தின் பேரில் மிகுந்த பற்றுதல் வைத்து அதை அடிக்கடி செய்துகொண்டுவருகிறவர்கள் மெலிந்து பலவீனப்பட்டு வெளுத்துப்போயிருக்கிறதாக அநுபவசித்தியினால் கண்டிருக்கிறோம். செபத்தியானம் ஓர்வித அரமாகும். அது கொஞ்சங் கொஞ்சமாய் சரீரத்தைத் தேய்த்து மெலியப்பண்ணிச் சௌக்கியத்தைக் குறைக்கும். ஆகையால் எவ்விதமாய் இந்த காரியத்தை யோசித்துப் பார்த்தாலும், செபத்தியானம் ஒறுத்தலென்னும் புண்ணியத்தை அடைவதற்கு எப்போதும் மிகுந்த உதவியாயிருக்கும்.

## உ-ம் அதிகாரம்.

ஒறுத்தலாகிறது இன்னதென்றும் அது நமக்கு எவ்வளவு அவசரமாயிருக்கிறதென்றும் சொல்லுவது.

இவ்விஷயத்தை நன்றாய் விளக்கிக் காட்டும்பொருட்டு முந்த முந்த மனுஷனுடைய ஆத்துமத்திலுள்ள இரண்டு பங்கை அறிந்துகொள்ளுகிறது அவசரமாமே. இதற்கு மேலங்கிஷம் கீழங்கிஷமென்று பேராகும்; மேலங்கிஷத்தை நீதி நியாயமென்றும் கீழங்கிஷத்தை இந்





திரிய இச்சை யென்றும் சொல்லுகிறது வழக்கம். ஆதாம் பாவம் கட்டிக்கொள்ளுகிறதற்கு முன்னே, சர்வேசுரன் அவனை உண்டாக்கின மாசற்றதனமும் சென்ம நீதியுமுள்ள பாக்கியமான அந்தஸ்தில் அவன் இருக்கும்போது, மேற்சாதியானுக்குக் கீழ்ச்சாதியானும் எசமானுக்கு ஊழியனும் கீழ்ப்பட்டிருக்கிறதுபோலே, மேலங்கிஷத்துக்குக் கீழங்கிஷம் கீழ்ப்பட்டிருந்தது. இதினலல்லோ மனுஷனை ஒழுங்குள்ளவனைச் சர்வேசுரன் படைத்தாரென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. நம்மைப்போலே ஒழுங்கற்றவனை அவனைச் சர்வேசுரன் படைக்கவில்லை. அப்போது இந்திரிய இச்சை வருத்தமும் விரோதமுமில்லாமல் நீதி நியாயத்துக்குக் கீழ்ப்பட்டிருந்தது. மனுஷன் உச்சாயமாய்த் தன் சிஷ்டிகரைச் சிநேகித்து அவருக்கு ஊழியம் பண்ணிக்கொண்டு வந்தான் ; அதுக்கு விக்கினம் பண்ணுகிறதற்கு அவனிடத்தில் ஓர் ஆசாபாசமுமில்லை. அப்போது இந்திரிய இச்சை நீதி நியாயத்துக்கு முழுதும் கீழ்ப்படிந்திருந்ததினலே, மனுஷனிடத்தில் ஒழுங்கற்ற பற்றுதல் ஒன்றும் எழும்பவே கூடாது ; அவன் வேணுமென்று விரும்பினலொழிய அவனிடத்தில் சோதனை ஒன்றும் வர அறியாது. அந்த அந்தஸ்தில் இருக்கும்போது, கோபமும் காய்மகாரமும் போசனப் பிரியமும் மோக இச்சையும் வேறெந்தக் கெட்ட பற்றுதலும் அவனிடத்தில் வரவேயில்லை. அவன் வேணுமென்று விரும்பி அதை வரவழைத்தாலல்லாமல், அது அவனை அண்டிவரக்கூடாது. ஆனல் பாவத்தினலே மனுஷனுடைய நீதி நியாயம் சர்வேசுரனுக்கு விரோதமாய் எழும்பினது. ஆகையால் நமக்கு மனசில்லாவிட்டாலும், நமக்கு அருவருப்பான கெட்ட பற்றுதலும் தாறுமாருன சோதனையும் நமது இந்திரிய இச்சையில் சில விசை எழும்புகிறதாகக் கண்டு உணருகிருேம். இதினலல்லோ நான் விரும்புகிற நன்மையைச் செய்கிறதில்லை; நான் விரும்பாத தின்மையைச் செய்கிறேனென்று அர்ச். சின்னப்பர் அங்கலாய்த்துச் சொன்னர். ஆதித் தகப்பன் பாவம் கட்டிக்கொள்ளாதிருந்தால், ஆத்துமம் வேணுமென்று விரும்புகிறதெல்லாத்தையும் சரீரம் வருத்தமும் விரோதமுமில்லாமல் எப்போதும் செய்துகொண்டுவரும். ஆனல் இப்போது கெட்டுப்போன சரீரம் ஆத்துமத்தை ஏறி அமுக்குகின்றது. ஆத்துமம் செய்யவேணுமென்று விரும்புகிற அநேக காரியங்களைச் செய்யாதபடிக்குச் சரீரம் விக்கினம் பண்ணுகின்றது. சரீரம் முரட்டுக் குதிரைபோலிருக்கின்றது. அதின் மேலேறி வெகுதூரப் பயணம் செய்யவேண்டியிருந்தாலும், அது நடக்க மாட்டேனென்று

முறைத்துக்கொண்டு அடிக்கடி காலிடறி அற்பக் காரியத்தின் நிமித்தம் அசர்ந்து நின்று சில விசை அடங்காமல் படுத்துக்கொள்ளும். இது மனுஷனுக்கு வரவேண்டிய ஆக்கினை தானே. அவன் தன் சிஷ்டிகருக்குக் கீழ்ப்படியாமல் போனான். இதினாலே அவன் சரீரமும் அவனுக்குக் கீழ்ப்படியாமல் இந்திரிய இச்சை இடைவிடாமல் அவனோடு சண்டை செய்யவேணுமென்று சர்வேசுரன் நீதியுள்ள தீர்மானமிட்டார். அர்ச். பேதென்பவர் சொல்லுமாப்போலே, பாவத்தினிமித்தம் மனுஷன் ஞானவரங்களை இழந்து சுபாவ வரங்களிலே காயப்பட்டானென்று வேதசாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். ஏனென்றால் அவன் சென்ம நீதியையும் அத்தோடு சேர்ந்த ஞான வரங்களையும் இழந்து போனதுமல்லாமல், சுபாவ வரங்களும் அவனிடத்தில் வெகுவாய் மாறிப்போனது. அவன் புத்தி மங்கினது ; அவன் மனசு பலவீனப்பட்டது ; நன்மையின் பேரில் அவனுக்குள்ள ஆசை தளர்ந்துபோனது ; தின்மையின்பேரில் அவனுக்குள்ள பற்றுதல் பெலன்கொண்டு எழும்பினது ; அவனுடைய ஞாபகம் குறைந்துபோயிற்று; அவனுடைய உருபிகரம் கலக்கமுற்றுச் சிதறிப்போய் எப்பக்கத்திலும் சுற்றித் திரிகின்றது ; இதினாலே பராக்கில்லாமல் கவனத்தோடு அற்ப செபமும் செய்வதற்குக் கூடாமல் போகின்றது ; அவன் ஐம்புலன்களில் நன்மையாயிருந்ததெல்லாம் நீங்கிப்போனது ; அவன் சரீரத்தில் கெட்ட ஆசாபாசங்களும் துர்க்குணங்களும் நிறைந்திருக்கின்றது ; கடைசியாய் அவன் சுபாவம் முழுதும் மாறிக் கெட்டுப்போனதினாலே, பாவம் செய்வதற்கு முன் எளிதாயிருந்தது பாவத்துக்குப் பின் கூடாத காரியமாயிற்று. ஆதித் தகப்பனுடைய பாவத்துக்கு முன், மனுஷன் தன்னைவிடச் சர்வேசுரனை அதிகமாய்ச் சினேகித்தான் ; பாவத்துக்குப் பின் சர்வேசுரனைவிடத் தன்னை அதிகமாய்ச் சினேகிக்கிறான், அல்லது சரியாய்ச் சொல்லவேணுமானால், தன்னை மாத்திரம் சினேகிக்கிறானென்று சொல்லவேண்டும். தன் மனசுபோலே நடந்து தன் இச்சையை நிறைவேற்றித் தன் ஆசாபாசம் நீதி நியாயத்துக்கும் தேவ கற்பனைக்கும் எவ்வளவு விரோதமாயிருந்தாலும், அது சொற்படி கேட்டு நடப்பதே அவனுக்குப் பிரியமாயிருக்கின்றது.

இந்தத் தாறுமாறுக்கெல்லாம் காரணமாயிருக்கிற சென்மப் பாவம் ஞானஸ்நானத்தின் வழியாய் நீங்கிப்போனாலும், நீதி நியாயத்துக்கும் சர்வேசுரனுக்கும் விரோதமாய் இந்திரிய இச்சையில் எழும்புகிற





விரோதம் நம்மை விட்டு அகன்றுபோகவில்லை. இந்த விரோதத்துக்குப் பாவ போசனமென்று வேத சாஸ்திரிகள் பேரிட்டிருக்கிறார்கள். நம்மைத் தெண்டித்து நமது ஆங்காரத்தை அடக்குவதற்காகவும் நமது நீசத்தனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் நாம் அறிந்துகொண்டு சர்வேசுரனுக்கு முன்பாக நம்மை நாமே தாழ்த்திக்கொள்ளுவதற்காகவும் இந்தச் சண்டை நம்மிடத்தில் எப்போதும் இருக்க வேணுமென்று ஆராதனைக்குரிய தேவ திருவுளம் நீதிப் பிரகாரம் நிரூபித்தது. சர்வேசுரன் மனுஷனைப் படைக்கும்போது, மகிமைப்பிரதாபத்தால் அவனை நிரப்பினார்; தமது வரங்களாலும் வரப்பிரசாதங்களாலும் அவனை அலங்கரித்துச் சிங்காரித்தார். ஆனால் மனுஷன் இந்த நன்மையை அறியாமல் பாவம் செய்து தன் சிஷ்டிகருக்கு நன்றிகெட்டவனாய்ப்போய் மிருகங்களுக்குரிய ஆசைக்கும் ஆசாபாசத்துக்கும் இடங் கொடுத்ததினாலே, மிருகத்துக்கு ஒத்தவனாகித் தான் பெற்றிருந்த ஞான வரங்களையும் இழந்தான். ஆகையால் அவன் தன்னை அறிந்துகொண்டு ஆங்காரிப்பதற்கு இடமில்லாமலிருக்கும் பொருட்டுச் சர்வேசுரன் அவனைத் தாழ்த்தினார். மெய்யாகவே நம்மை நாமே அறிந்துகொண்டால், ஆங்காரிப்பதற்கு ஒரு முகாந்தரமுமில்லை, எக்ஷணத்திலும் நம்மைத் தாழ்த்திக்கொள்ளுகிறதற்கு எண்ணிறந்த ஞாயமுண்டு.

இரண்டாவது, இன்னம் இது காரியத்திலே நாம் அறிந்துகொள்ளவேண்டிய வேறொரு பிரதான சத்தியமுண்டு. இதையும் நாம் இப்போது சொன்னதைக்கொண்டு எளிதாய் அறிந்துகொள்ளலாம். அதென்னவென்றால், தாறுமாறான நமது ஆசாபாசங்களும் சரீர இச்சையும் நாம் புண்ணியத்தில் வர்த்திப்பதற்குப் பிரதான விக்கினமாகும். நமக்கு வருகிற சகல சோதனையும் நாம் கட்டிக்கொள்ளுகிற சகல பாவமும் குற்றங் குறைகளும் நமது ஆசாபாசத்தினாலும் சரீர இச்சையினாலும் உண்டாகிறதினாலே, சரீரம் நமக்கு மகா பெரிய சத்துருவென்று சொல்லுகிறது வழக்கம். இதினாலல்லோ உங்களிடத்தில் உண்டாகிற சண்டையும் விரோதமும் எங்கேயிருந்து வருகின்றது ? உங்கள் புத்தியோடு சண்டை பிடிக்கிற ஆசாபாசத்தினாலல்லோ வருகிறதென்று அர்ச். யாகப்பர் அருளிச்செய்தார். நமது மனசுக்குள் நடக்கிற சண்டைக்கும் நாம் கட்டிக்கொள்ளுகிற பாவம் குற்றங் குறைகளுக்கும் காரணமென்ன ? நம்மிடத்திலுள்ள இந்திரிய பிரியமும் துர் இச்சையும் தாறுமாறான சுய சினேகமுமே இதற்குக் காரணம் ; புண்ணிய சாங்




கோபாங்க மார்க்கத்தில் நமக்கு நேரிடுகிற விக்கினத்துக்கும் இதுவே முகாந்தரம். பூர்வீக அஞ்ஞான சாஸ்திரிகள் முதலாய்ச் சுபாவ புத்தியினாலே மாத்திரம் இந்தச் சத்தியத்தை அறிந்துகொண்டார்கள். சந்தோஷத்தையும் கஸ்தியையும் மட்டுப்படுத்துகிறதே புண்ணியத்தில் நமக்கு நேரிடுகிற வருத்தமென்று அரிஸ்தோத்தென்னும் சாஸ்திரி நிரூபித்தான். கஸ்தியைப் பட்டநுபவித்துப் பிரியத்தை அடக்குகிறது ஞானமென்று எப்பிக்தேத்தென்னும் சாஸ்திரி தீர்மானித்தான். நமக்கு நேரிடுகிற கஸ்தி துன்ப துரிதங்களைத் தைரியமாய்ப் பட்டநுபவித்து நமக்குப் பிரியமானதைப் புத்தியோடு விலக்கி நடக்கிறதே புண்ணியமாகும். தினந்தோறும் பரீட்சையினாலே இதை அறிந்திருக்கிறோமே. யாதொரு கஸ்தி வருத்தத்தை விலக்குவதற்காகவாகிலும் யாதொரு இன்ப சுகத்தை அநுபவிப்பதற்காகவென்கிலும் இந்த இன்ப சுகத்தை விலக்காததினாலேயாகிலும் பாவத்தில் விழுகிறோமென்பது நிச்சயம். சிலர் ஆஸ்தி மகிமை இன்ப சுகத்தின்பேரில் ஆசையினாலே பாவம் கட்டிக்கொள்ளுவார்கள் ; வேறு சிலர் தேவ கற்பனையையும் திருச்சபைக் கட்டளையையும் அநுசரிப்பதிலே வருகிற வருத்தத்துக்குப் பயந்தாகிலும் தங்கள் சத்துருக்களை சினேகிப்பதற்கும் ஒருசந்திபிடிப்பதற்கும் இரகசியமான வெட்கத்துக்குரிய பாவங்களைப் பாவசங்கீர்த்தனத்தில் வெளிப்படுத்துவதற்கும் வருத்தப்பட்டடென்கிலும் தேவ கற்பனையை அநுசரியாமல் பாவம் கட்டிக்கொள்ளுவார்கள். ஆகையால் சகல பாவமும் நாம் புண்ணிய வழியில் கட்டிக்கொள்ளுகிற சகல பெரிய குற்றங்களும் சொற்பக் குற்றங்களும் அற்பக் குறையுமெல்லாம் மேற்சொன்ன அந்த இரண்டு ஊற்றிலிருந்து புறப்படுகிறதென்பதற்குச் சந்தேகமில்லை.

இதுவெல்லாம் இப்படியாகக்கொள்ள, நமது கெட்ட பற்றுதல்களையும் ஒழுங்கற்ற சுய சினேகத்தையும் அடக்கித் தாறுமாறான நமது ஆசாபாசங்களைத் திருத்திக்கொள்ளுகிறதே ஒறுத்தலென்று கண்டுபிடிப்பது வருத்தமல்ல. யாதொருவன் நம்மைப் பின்சென்று வரவேணுமானால், தன்னை மறுதலித்துத் தன் சிலுவையைச் சுமந்துகொண்டு நம்மைப் பின்செல்லக் கடவானென்று இயேசுநாதர் திருவுளம் பற்றினர். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். எரோணிமுஸ் எழுதிவைத்ததாவது : முன்னமே காமாதுரனாயிருந்தவன் கற்புள்ளவனாவதும் முன்னமே அடக்க ஒடுக்கமில்லாமல் திரிந்தவன் அடக்க ஒடுக்கமுள்ள



வனாவதும் முன்னே புண்ண
மாயிருந்தவன் பெலமும்
லித்துத் தன் சிலுவையைச்
அடையாளமாகுமென்றார்.
வேறே மனுஷனாக மாறுகிற
ப்படும்.

ஆனால் அர்ச். பசிலியா
ம் புண்ணியம் நமக்கு எவ்வ
முந்தமுந்தத் தன்னை மறுத
மைப் பின்செல்லக் கடவா
றினர். அதாவது, முந்தமுந்
விட்டு உன் கெட்ட ஆசாபா
தலிக்காவிட்டால், இயேசுநா
தமும் ஆயிரம் விக்கினமும்
கையால் இயேசுநாதரைப்
முந்தமுந்த வழி செப்பனிட
சாங்கோபாங்கத்துக்கும் கிறி
ஸ்திவாரமாக ஒறுத்தலென்
கையால் இயேசுநாதரைக்
மது சிலுவையைச் சுமந்து
ஒறுத்தலென்னும் புண்ணி
டைய சீவியத்தின் பரிசுத்தத்
டு அவருடைய ஒறுத்தலை ந
ள்ளக் கடவோமென்று அர்
லோகத்தில் மனுஷனுடைய
ன்று யோபென்னும் மகாத்து
ம ஆசைக்கு விரோதமான இ
சைக்கு விரோதமான ஆசை
ர்ச். சின்னப்பர் அருளிச்செ
டாத சண்டைக்குக் காரண
ளையும் செயிக்கிறவன் இயே
மேற்பட்டவனென்பது நிச்ச
வீரசூரத்தனமாகுமென்று






வனாவதும் முன்னே புண்ணிய வழியில் பலவீனனும் பயமுள்ளவனுமாயிருந்தவன் பெலமும் தைரியமுமுள்ளவனாவதுமே தன்னை மறுதலித்துத் தன் சிலுவையைச் சுமந்துகொண்டு போகிறானென்பதற்கு அடையாளமாகுமென்றார். தான் முன்னிருந்ததுபோலே இராமல் வேறே மனுஷனாக மாறுகிறது தன்னை மறுதலிக்கிறதென்று சொல்லப்படும்.

ஆனால் அர்ச். பசிலியார் சொல்லுமாப்போலே, ஒறுத்தலென்னும் புண்ணியம் நமக்கு எவ்வளவு அவசரமென்று காட்டும்பொருட்டு முந்தமுந்தத் தன்னை மறுதலிக்கக் கடவானென்றும் அதின்பின் நம்மைப் பின்செல்லக் கடவானென்றும் உலக இரட்சகர் திருவுளம்பற்றினார். அதாவது, முந்தமுந்த உன் சுயமனசை முழுதும் வெறுத்துவிட்டு உன் கெட்ட ஆசாபாசங்களை ஒறுத்து உன்னைத்தானே நீ மறுதலிக்காவிட்டால், இயேசுநாதரை பின்செல்லுவதற்கு ஆயிரம் வருத்தமும் ஆயிரம் விக்கினமும் உனக்கு நேரிடுமென்று அர்த்தமாகும். ஆகையால் இயேசுநாதரைப் பின்செல்லுவதற்கு ஒறுத்தலைக் கொண்டு முந்தமுந்த வழி செப்பனிடவேண்டும். இதினிமித்தமாகப் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் கிறீஸ்துவர்களுக்குரிய நன்னடக்கைக்கும் அஸ்திவாரமாக ஒறுத்தலென்னும் புண்ணியத்தை ஏற்படுத்தினார். ஆகையால் இயேசுநாதரைக் கண்டுபாவிக்க நமக்கு மனசுண்டானால், நமது சிலுவையைச் சுமந்துகொண்டு போகவேண்டும். இந்தச் சிலுவை ஒறுத்தலென்னும் புண்ணியந்தானே. இதினாலல்லோ இயேசுநாதருடைய சீவியத்தின் பரிசுத்தத்தனம் நமது சரீரத்தில் விளங்கும்பொருட்டு அவருடைய ஒறுத்தலை நமது சரீரத்தில் எப்போதும் தரித்துக்கொள்ளக் கடவோமென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினார். இவ்வுலோகத்தில் மனுஷனுடைய ஆயுசுகாலம் இடைவிடாத சண்டையென்று யோபென்னும் மகாத்துமா வசனித்தார். ஏனென்றால் நமதாத்தும ஆசைக்கு விரோதமான இச்சை நமது சரீரத்திலும் நமது சரீர இச்சைக்கு விரோதமான ஆசை நமதாத்துமத்திலும் இருக்கிறதென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். நமதுள்ளத்தில் நடக்கிற இடைவிடாத சண்டைக்குக் காரணமிதுவே. தன் சரீரத்தையும் ஆசாபாசங்களையும் செயிக்கிறவன் இயேசுநாதருடைய போர்வீரர் எல்லாருக்கும் மேற்பட்டவனென்பது நிச்சயம். இது தேவதாசருக்குரிய மெய்யான வீரசூரத்தனமாகுமென்று அர்ச். கிரெகோரியாரும் அர்ச். அம்புரோ







சியாரும் அருளிச்செய்தார்கள். சரீரபெலன் ஒன்றுக்குமுதவாது. தன் சரீரத்தைச் செயித்து ஆசாபாசங்களை அடக்கி இன்ப சுகங்களைப் பிறக்கணித்து வருத்தம் பிரயாசங்களைப் பொறுமையோடு சகித்துக் கொள்ளுகிற தைரியமே மெய்யான வீரசூரத்தனமாகும். மற்றவர்களை ஆண்டு நடத்துகிறதைவிடத் தன்னைத்தானே ஆண்டு தன் சுய இச்சையையும் ஆசாபாசங்களையும் அடக்கி நடத்துகிறது மேலான அதிகாரமென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலல்லோ வீரசூரனைவிடப் பொறுமையுள்ளவனை அதிகமாய்க் கனம் பண்ணவேண்டும் ; பட்டணங்களை முத்திக்கைபோட்டுப் பிடிக்கிறவனைப் பார்க்கக் கோபத்தை அடக்குகிறவன் மேற்பட்டவனென்று ஞானியானவர் வசனித்தார். இதற்கு அர்ச். அம்புரோசியார் சொல்லுகிற நியாயமாவது : நமது வெளிச்சத்துருக்கள் எல்லாரையும்விட நமது உள்ளத்திலுள்ள கெட்ட பற்றுதல் அதிக ஆபத்துக்குரிய சத்துருவாகும். ஆகையால் உள்ச் சத்துருக்களைச் செயிக்கிறவன் வெளிச்சத்துருக்களைச் செயிக்கிறவனுக்கு மேற்பட்டவன். இதினாலல்லோ சூசையென்பவர் எஜிப்த்து தேசத்தை ஆளும்போது, அடைந்த பிரதாபத்தைப் பார்க்கப் புத்திப்பாரென்பவனுடைய பெண்சாதியின் கெட்ட கருத்துக்கு இடங்கொடாமல் தம்மை அடக்கினபோது அதிக மகிமை பிரதாபமடைந்தாரென்றார். அர்ச். கிறிசோஸ்தொமுஸ் சொல்லுகிறதும் இதற்கு ஒத்திருக்கும். அதென்னவென்றால், தமது சத்துருவாகிய சவுலென்பவன் குகையில் தூங்கும்போது, தாவீதென்பவர் அவனைக் கண்டு கொல்லாமல் விட்டுவிட்டாரே. அவர் கொலியாத்தைக் கொன்றபோது அடைந்த செயத்தைப் பார்க்க தமது கோபத்தை அடக்கிச் சவுலென்னும் சத்துருவைக் கொல்லாமல் பொறுத்துக்கொண்டபோது, தன்பேரில் மேலான செயமடைந்தாரென்றார். சவுலைக் கொல்லாமல் விட்டுவிட்டதினாலே அவர் அடைந்த செயத்தை மோக்ஷ எருசலேமா நகரில் வாழும் முத்தர்கள் புகழ்ந்து பாராட்டினார்கள். அவர் கொலியாத்தைச் செயித்துத் திரும்பி வரும்போது, இசராயேலருடைய பெண்கள் அவரைப் புகழ்ந்தேற்றினார்கள். ஆனால் அவர் தமது கோபத்தை அடக்கிச் சவுலென்னும் சத்துருவைக் கொல்லாமல் விட்டபோது, மோக்ஷத்திலுள்ள சகலவிசுவாச சபைசம்மனசுகளும் அக்களித்து • ஆநந்தம் கொண்டாடி அவருடைய புண்ணியத்தையும் தைரியத்தையும் கண்டு பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.

## ௩-ம் அதிகாரம்.

தன் இச்சைபோலே நடந்து தன் ஆசாபாசத்தின்படி திரியட்டுமென்று சர்வேசுரன் மனுஷனை விட்டுவிடுகிறது கனமான தேவகோபாக்கினையென்று சொல்லுவது.

நமது சரீரத்தை ஒறுப்பது எவ்வளவு அவசரமென்று நாம் அதிக தெளிவாய் அறிந்துகொண்டு அதற்கு விரோதமாய் ஆயுதமெடுத்துச் சண்டைபோட நமக்கு அதிக தைரியமுண்டாகும்படியாக நமது சரீரமும் ஆசாபாசம் துர்க்குணங்களும் நமக்கு எவ்வளவு மோசத்துக்குரிய சத்துருக்களென்று அறிந்துகொள்ளுவது மிகவும் அவசரமாமே. இது மிகவும் பயங்கரமான சத்துருவாயிருப்பதினாலே, மனுஷன் தன்னாசைபோலே நடந்து இந்திரிய இச்சைப்படி திரியட்டுமென்று இந்தச் சத்துருவின் கையிலே சர்வேசுரன் அவனைப் பிடித்துக் கொடுக்கிறது அவர் மனுஷனுக்கிடுகிற கனமான தெண்டனையென்றும் பாவியின்பேரில் அவருக்குள்ள கோபாக்கினையின் அகோரம் அப்போது விளங்குகிறதென்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இதை ஒப்பிப்பதற்காக வேதாகமத்திலிருந்து பற்பல வாக்கியங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இவ்வண்ணமே நமது பிரசைகள் நமது சத்தத்தைக் கேட்கவில்லை; இசராயேல் சனங்கள் நம்மைக் கவனிக்கவில்லை. ஆகையால் அவர்கள் இருதய இச்சைப்படி நடக்கட்டுமென்று விட்டுவிட்டோம்; இனிமேல் தங்கள் மன இச்சைப் பிரகாரம் நடப்பார்களல்லாமல் மற்றப்படியல்லவென்று சர்வேசுரன் தேவ சங்கீதத்தில் திருவுளம் பற்றினார். சர்வேசுரன் இவ்விதமாய் அஞ்ஞான சாஸ்திரிகளின் ஆங்காரத்தைத் தெண்டித்தாரென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். இதினாலல்லோ இவர்கள் சர்வேசுரனை அறிந்திருந்தும் அவரைச் சர்வேசுரனாகக் கனம்பண்ணவுமில்லை; அவருக்கு நன்றியறிந்த தோத்திரமும் செய்யாமல் வீண் எண்ணங்களினாலே கெட்டுச் சிதறிப்போனார்கள். இதினிமித்தமாகச் சர்வேசுரன் இவர்கள் இருதய இச்சையும் அசுத்தமான ஆசையும் ஏவு






கிறபடி நடக்கட்டுமென்று விட்டுவிட்டார்; இவர்கள் தங்கள் இச்சைபோலே நடந்து தங்கள் சரீரத்தை அவமானப்படுத்திக்கொண்டார்களென்றார். இவர்கள் ஆசைபோலே நடக்கட்டுமென்று சர்வேசுரன் இவர்களை விட்டுவிட்டதே இவர்களுக்கிட்ட ஆக்கினையாகும். ஆனால் அர்ச். அம்புரோசியார் சொல்லுமாப்போலே, சர்வேசுரன் மனுஷனைத் தன் ஆசைபோலே நடக்கும்படி விட்டுவிட்டாரென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதினாலே, சர்வேசுரன் மனுஷனைத் தின்மைக்குத் தூண்டி ஏவிப் பாவத்தில் விழப்பண்ணுகிறாரென்று எண்ணவும் கருதவும்படாது. மனுஷன் இருதயத்தில் கொண்ட கெட்ட இச்சை வெளியில் தோன்றிப் பசாசின் ஏவலினாலும் உதவியினாலும் அதைச் செய்து நிறைவேற்றுகிறான். இதற்குச் சர்வேசுரன் விக்கினம் பண்ணாமல் விட்டுவிடுகிறாரல்லாமல் மற்றப்படியல்ல.

அர்ச். சின்னப்பர் இன்னம் இதுகாரியத்தில் சொன்னதை உற்றுப்பார்த்தால், இது எவ்வளவு நடுக்கத்துக்குரிய ஆக்கினையென்று அறிந்துகொள்ளலாம். ஆசாபாசமாகிற வெறிகொண்ட இந்தச் சத்துருவின் கையிலே மேட்டிமையுள்ள அந்தச் சாஸ்திரிகளைச் சர்வேசுரன் ஒப்புக்கொடுத்தபின், அது அவர்களை எவ்விதமாய் நடத்தினதென்று மேற்சொன்ன அர்ச். சின்னப்பர் விவரித்துக் காட்டியிருக்கிறார். அது அவர்களை எவ்வளவு தாறுமாறில் இழுத்துக்கொண்டுபோனதென்று சொல்லிமுடியாது. சகலவித துர்க்குணங்களிலும் அவர்களைத் தள்ளி மகா வெட்கத்துக்குரிய அருவருப்பான பாவங்களில் அவர்களை அமிழ்த்தினது. இதினாலல்லோ அவமானத்துக்குரிய ஆசாபாசங்களின் கையில் சர்வேசுரன் அவர்களை ஒப்படைத்தாரென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினார். ஆசாபாசமாகிற இவ்வளவு பயங்கரமான சத்துருவின் கையிலும் அடங்காத துஷ்டக்குணமுள்ள இந்த மிருகத்தின் நிகத்திலும் அகப்பட்டுக் கொள்ளுவாயாகில், ஐயோ! உனக்கு நிர்ப்பாக்கியம். இப்படி அகப்பட்டுக்கொண்டால், அது உன்னை எப்படி நடத்துமென்று அர்ச். அம்புரோசியார் சொல்லுகிறார். கேள்: "தன் ஆசாபாசத்தை அடக்காதவன் முரட்டுக் குதிரைமேல் ஏறினவனுக்கு ஒப்பாவான். அது கடிவாளத்தைக் கெட்டியாய்க் கடித்துக்கொண்டு கண்ணுக் கெட்டாத தூரம் தன் பெலன் கொண்டமட்டும் ஓடித் தானும் தன்மேல் ஏறினவனும் பாதாளத்தில் விழுந்து சாகுமட்டும் நிற்கமாட்டாதென்றார். இப்படியே உன் துர் இச்சையை அடக்கி அ






ளை ஒடுக்காவிட்டால், அது உன்னைச் சகல தாறுமாறிலும் இழுத்து
க்கொண்டுபோய்ச் சகல துர்க்குணத்திலும் உன்னை விழத்தாட்டி அ
கோரமான பாவங்களிலும் நரக பாதாளத்திலும் உன்னைத் தள்ளிவி
டும். இதினாலல்லோ துராசைக்கு இடங்கொடாதே, உன் சுயமனசு
போலே நடவாதே ; உன் ஆசை கேட்பதை நீ அதுக்குக் கொடுத்தா
ல், உன் சத்துருக்களுக்குச் சந்தோஷத்தை வருவிப்பாயென்று ஞானி
யானவர் வசனித்தார். நமது ஆசாபாசம்போலே நடப்பதைவிட வே
றெவ்விதத்திலும் பசாசுக்கு நாம் அதிக சந்தோஷம் வருவிக்க முடியா
து. ஏனென்றால் நரகத்திலுள்ள பசாசுகள் எல்லாம் கூடினாலும், நம
து ஆசாபாசம் நமக்குச் செய்யக்கூடுமான பொல்லாப்பைப்போலே அ
வ்வளவு பொல்லாப்புச் செய்ய அதுகளாலே முடியாது. இதினிமித்த
ம் இந்த ஆக்கினையை என்னைவிட்டு அகற்றியருளுமென்று மேற்சொ
ன்ன ஞானியானவர் உருக்கமாய்ச் சர்வேசுரனைப் பார்த்து வேண்டி
க் கொண்டிருக்கிறார். என் பிதாவும் சர்வேசுரனுமாகிய கர்த்தாவே, ச
கலவித அசுத்தமான நினைவுகளையும் என்னைவிட்டு அகற்றியருளும் ;
சரீர இச்சை என் மனதைப் பிடியாதபடிக்குக் கிருபைசெய்தருளும் ;
வெட்கமற்ற ஆத்தும இச்சையின் கையில் என்னை ஒப்படையாதேயு
மென்றார். ஆகையால் பாவி தன் மனசுபோலே நடந்து தன் ஆசாபா
சப் பற்றுதல் பிரகாரம் திரியட்டுமென்று சர்வேசுரன் அவனை விட்டு
விடுகிறது அவன்பேரில் அவருக்குள்ள கோபாக்கினைக்கு அடையா
ளமாகுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுகிறது ஞாயந்தானே.
நோவாளி தனக்குப் பிரியமானதெல்லாத்தையும் சாப்படலாம் குடி
க்கலாமென்று வைத்தியன் சொன்னால், இது கெட்ட அடையாளமாகு
ம் ; ஏனென்றால் இவனுக்குச் சௌக்கியமாக மாட்டாதென்று முழு
தும் அவநம்பிக்கைப்பட்டு இவன் செத்தவனுக்கு ஒப்பானவனென்று எ
ண்ணியிருக்கிறதினாலே, இப்படிப்பட்ட உத்தரவு கொடுக்கிறது வழக்
கம். தேவ கோபாக்கினையை மூட்டின பாவிபேரிலும் சர்வேசுரன் ந
டக்கும் விதமிதுவே. அவன் மனசுக் கானதெல்லாம் செய்யட்டுமென்
று விட்டுவிடுவார் ; அப்போது இவ்வளவு தாறுமாறான துர்க்குணமு
ம் கெட்டபற்றுதலுமுள்ள பாவி தனக்குக் கெடுதலானதெல்லாம் செ
ய்து தன் ஆத்துமத்தைக் கொலைப்படுத்துகிறதேயொழிய வேறொன்று
ம் செய்ய மாட்டான். தங்கள் மனசுக் கானதெல்லாம் செய்கிறதே சொ
க்கென்று எண்ணுகிறவர்கள் எவ்வளவு பிரலாபத்துக்குரிய கெட்ட அ







ந்தஸ்தில் இருக்கிறார்களென்று மேற்சொன்னதைக் கொண்டு அறிந்துகொள்ளலாம்.

## ௪-ம் அதிகாரம்.

தன்னைப் பகைப்பதின்பேரிலும்
அதினால் உண்டாகும் ஒறுத்தலின்பேரிலும்
தவப்பிரியத்தின் பேரிலும்.

**நா**ம் மேற்சொன்னதை உற்றுவிசாரித்தால், இயேசுநாதர் விரும்புகிற இந்தப் பரிசுத்த பகையையும் பரிசுத்த அருவருப்பையும் நம்மிடத்தில் எழுப்புவதற்குப் போதும். நமதுபேரில் நாமே பரிசுத்த பகை வைக்காவிட்டால் நாம் இயேசுநாதருடைய சிஷாக்களாயிருக்கக் கூடாது. ஏனென்றால் நமது சரீரமே எல்லாத்தைவிட நமக்குப் பெரிய பகையாளியென்றும் பெருந்துரோகியென்றும் பிராண சத்துருவென்றும் தன்னைத் தாங்கித்தனக்கு வேண்டியதெல்லாம் கொடுத்துக் கொண்டு வருகிற ஆத்துமத்தைக் கொன்று நித்திய நரகத்தில் தள்ளுவதற்கு எந்நேரமும் தேடிக்கொண்டிருக்கிற துரோகியென்றும் கொஞ்சத்துக்குள் அழிந்தொழியும் அற்ப சுகத்துக்காகச் சர்வேசுரனுக்கு இரண்டகம்பண்ணி ஆத்துமத்தை நித்தியபாதாளத்தில் தள்ளினாலும் பறவாயில்லையென்று எண்ணுகிற சத்துருவென்றும் நாம் அறிந்திருக்கக்கொள்ள, இவ்வளவு கொடுந்துரோகியான நமது சரீரத்தைப் பகைப்பதற்கு இதுவே போதும். ஒரு எசமானை நோக்கி உன்னோடு தினந்தோறும் சாப்படுகிற உன் ஊழியர்களில் ஒருவன் உன்னைக் கொல்ல எத்தனித்திருக்கிறானென்று சொன்னால், அந்த எசமான் எவ்வளவோ பயப்படுவான்? அன்றியும் அவன் உன்பேரில் பிராணபகை கொண்டிருக்கிறதினாலே உன்னைக் கொன்றாலே போதும்; நான் அதின்பிறகு செத்துப்போனாலும் பறவாயில்லை; என்னைப் பிடித்து என் எசமானைக் கொன்ற கொலைபாதகத்துக்காக நிஷ்டூரமாய்க் கொல்லுவார்களென்று எனக்குத் தெரியும்; ஆனால் என் உயிர்போனாலும் பறவாயில்லை; எப்படியாகிலும் என் எசமானைக் கொல்லவேணுமென்று அவன் எண்ணியிருக்கிறானென்று எசமானுக்குச் சொன்னால், அவன் எவ்வள




வோ பயந்து நடுங்குவான்? அவன் எப்போ வந்து தன்னைக் குத்திக் கொல்லப் போகிறானோவென்று எந்நேரத்திலும் எச்சமயத்திலும் பயந்துகொண்டிருப்பானல்லோ? இந்தத் துரோகி யாரென்று அறிந்தால், அவன்பேரில் எவ்வளவோ பகைவைப்பான்? அவனைப் பழிவாங்கவேணுமென்று எவ்வளவோ ஆசைப்படுவான்? இப்படிப்பட்ட துரோகி நமது சரீரந்தானே. அது நம்மோடு சாப்பட்டுக் குடித்து நம்மோடு படுத்துக்கொள்ளுகின்றது. ஆத்துமத்தைக் கெடுத்தால், தானும் கெட்டுப் போகுமென்றும் ஆத்துமத்தைப் பிடித்து நரகத்திலே தள்ளினால் தானும்கூட விழவேணுமென்றும் அதுக்கு நன்றாய்த் தெரியும். ஆகிலும் தனக்குப் பிரியமானதைச் செய்தாலே போதுமென்று மற்றதெல்லாத்தையும் காலுக்குக் கீழே வைத்து மிதித்துக் கவனியாமலிருக்கின்றது. இப்படிப்பட்ட சரீரத்தைப் பகைப்பதற்கு முகாந்தரமுண்டோ இல்லையோவென்று யோசித்துப்பார். உன் சரீரமாகிய இந்தத் துரோகி பாதாளத்தின் ஓரத்திலே எத்தனைவிசை உன்னைப்பிடித்துத் தள்ளினது? எத்தனைவிசை நீ சர்வேசுரனுக்குத் துரோகம்பண்ணும்படி செய்தது? எத்தனை வரப்பிரசாதங்களை நீ இழந்துபோவதற்குக் காரணமாயிருந்தது? தினந்தோறும் எத்தனைவிசை உன் ஆத்தும ஈடேற்றத்துக்குக் கனத்த ஆபத்தைக்கொண்டுவந்து விடுகின்றது. உனக்கு இத்தனை பொல்லாப்புகளைச் செய்து இத்தனை நன்மைகளை உன்னைவிட்டு நீக்கி க்ஷணத்துக்கு க்ஷணம் உன்னை இவ்வளவு கனமான ஆபத்துக்குள்ளாக்கிற உன் சரீரமாகிற இந்தச் சத்துருவின்பேரில் நீ எவ்வளவு பரிசுத்தமுனிவுகொள்ளவேண்டும்! பசாசு நமக்கு இடைவிடாமல் செய்கிற பொல்லாப்பினிமித்தம் அதைப் பகைத்து அது நமக்குப் பிராண சத்துருவென்று எண்ணவேண்டியிருக்கையிலே, நமதுபேரில் அதிக கொடூர கோபம்கொண்டு நமக்கு அதிக ஆபத்தை வருவிக்கிற சரீரமாகிற இந்தச் சத்துருவை அதிகமாய்ப் பகைக்கவேண்டியதல்லோ? நமது சரீரம் பசாசின் பாரிசமாய்ச் சேர்ந்துகொண்டு நம்மோடு இடைவிடாமல் சண்டைபோடாவிட்டால், பசாசுக்குப் பெலனிராது.

இதினிமித்தமாக அர்ச்சியசிஷ்டவர்கள் தங்கள் சரீரத்தின்பேரில் வெகு பிராணபகை கொண்டிருந்தார்கள். இதினாலேதான் இடைவிடாத ஒறுத்தலையும் தபசையுங்கொண்டு தங்கள் சத்துருவாகிய சரீரத்தைப் பழிவாங்கி எந்நேரமும் அதைக் கீழ்ப்படுத்திக்கொண்டு வந்

தார்கள். தங்கள் சரீரத்தைப் பேணி அதுக்கு ஒரு சுகத்தையும் ஒரு
காலும் கொடுத்தவர்களல்ல. அதைப் பேணிறல், அது புதிதான பெ
லனும் தைரியமும் கொண்டு ஆயுதம் எடுத்துத் தங்களோடு சண்டை
போடுமென்று அவர்கள் நன்ருய் அறிந்திருந்ததினுலே, அதை எந்நே
ரமும் உபாதித்துக்கொண்டு வந்தார்கள். இதினுலல்லோ நமது சரீர
ம் வெகு பெலன் கொள்ளாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக் கட்வோ
ம் ; அதற்குப் பெலன் வந்தால், அதைக் கொண்டு நமதாத்துமத்துக்கு
விரோதமாய்ச்சண்டைபோடுமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார்.
ஆகையால் அது நமக்கு விரோதமாய் எழும்பாதபடிக்கு அதை உபா
தித்து ஒறுக்கக் கடவோம். ஏனென்றல் தன் ஊழியனைச் சுகமாய் வ
ளர்க்கிறவன் அதினுலே அவன் ஆங்காரியாய்ப் போகிறதைக் கண்டு
கொள்ளுவானென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது.

பூர்வீக வனவாசிகள் தங்கள் சரீரத்தைப் பலவீனப்படுத்துகிற
து அவசரமென்று அறிந்திருந்ததினுலே, வெகு ஆவலோடு தங்கள் ச
ரீரத்தை ஒறுத்துக்கொண்டு வருவார்கள். சரீரத்தை ஒறுப்பதற்கு
வேறே வழி இல்லாவிட்டால், அதைப் பலவீனப்படுத்தித் தளர அடி
ப்பதற்காக மிதமிஞ்சின வேலைசெய்து தங்களுக்கு இளைப்புண்டாக்கிக்
கொள்ளுவார்கள். வனவாசி ஒருவர் தம்மிடத்தில் ஆங்காரத்துக்கும்
வீண் மகிமைக்குமுரிய சோதனை வந்து அதை விலக்கக் கூடாததினு
லே, கூடையை எடுத்து ஓரிடத்திலிருந்து வேருரிடத்துக்கு மண்
ணை வாரிச் சுமந்துகொண்டு போவார். நீர் என்னசெய்கிறீரென்று
கேட்டதற்கு அவர் சொன்ன மறுமொழியாவது : என்னை வருத்தப்ப
டுத்துகிற இந்தச் சரீரத்தை நானும் வருத்தப்படுத்துகிறேன் ; இந்த
ச் சத்துருவைப் பழிவாங்குகிறேனென்ருர். அர்ச். மக்காரியாரும் செ
ய்ததுமிதுவே. அர்ச். தொரோத்தேயர் அருந்தவமும்வெகு ஒறுத்தலு
ம் செய்துகொண்டு வருவார். ஏன் உமது சரீரத்தை இவ்வளவு உபா
திக்கிறீரென்று ஒருநாள் அவரிடத்தில் கேட்டதற்கு அவர் சொன்ன
தாவது : அது என்னை உபாதிக்கிறதினுலே, நானும் அதை உபாதிக்கி
றேனென்ருர். அர்ச். பெர்நர்துஸ் தமது சரீரம் தமக்குப் பிராணசத்
துருவென்றெண்ணி அதின்பேரில் பரிசுத்த கோப உக்கிரமங்கொண்டு
சொன்னதாவது : சர்வேசுரா, தேவரீர் எழும்பும் ; ஆயுதம் அணிந்த
இராக்ஷதனுகிய இந்தச் சரீரம் உமக்குமுன்பாக அடித்துமோதி விழ
க்கடவது ; உமது சத்துருவும் சுயபிரியமுள்ளதும் உலகத்தோடு சே





ர்ந்த கூட்டாளியும் பசாசுக்கு அடிமையுமாகிய இந்தச் சரீரம் கீழேவிழுந்து நசுங்கிப்போகக் கடவது. என் சகோதரரே, இது காரியத்தில் நீங்கள் நினைக்கிறதென்ன ? நீங்கள் இச்சத்தியத்தைச் சரியாய் அறிந்திருந்தால், இந்தச் சரீரம் சாவுக்குப் பாத்திரமானது ; இதைக் கழுமரத்திலே தூக்கவேண்டும் ; இதைச் சிலுவையில் அறையவேணுமென்று என்னோடேகூடக் கதறிக் கூவுவீர்களென்றார்.

அர்ச். பெர்நர்துசைப்போலே நாமும் நமது சரீரத்தின்பேரில் கோப அக்கினிகொண்டு அதோடு போராடி அதைக் கீழ்ப்படுத்தவேண்டும். இல்லாவிட்டால், அது மேலிட்டெழும்பி நமது புத்தியையும் மனதையும் பாவத்தில் இழுத்துக் கெடுக்கும். நமது சரீரத்தைச் செயித்தால், இதினாலே வேறோர் செயமும் உண்டாகும். அதென்னவென்றால், சரீரம் தோர்வைப் பட்டவுடனே பசாசைச் செயிப்பது எளிதாயிருக்கும். ஏனென்றால் பசாசு நமது சரீரத்தைத் தூண்டிவிட்டு அதின் ஒத்தாசையைக் கொண்டு நம்மோடு யுத்தம் பண்ணுகிறதினாலே, நாம் சரீரத்தை ஒறுத்து உபாதித்து அது பசாசோடு சேராதபடிக்கு விலக்கினால், பசாசோடு யுத்தம்பண்ணி எளிதாய் அதைச் செயிக்கலாம். இதினாலல்லோ கண்ணை மூடிக்கொண்டு ஓடுகிறாப்போலே நான் ஓடுகிறதில்லை ; குருட்டாம்போக்கிலே சண்டைபோடுகிறாப்போலே நான் போடுகிறதில்லை ; ஆனால் என் சரீரத்தைத் தெண்டித்து அதை அடிமைப் படுத்துகிறேனென்று அர்ச். சின்னப்பர் திருவுளம் பற்றினார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது : பசாசைச் செயிப்பதற்கு இதுவே மெய்யான வழிபாடு. சரீரத்தைத் தெண்டி ; அப்போது பசாசைச் செயிப்பாய். ஏனென்றால் நாம் யுத்தம் பண்ணுவதற்கு இதுவே ஆனவழிபாடென்று அர்ச். சின்னப்பர் போதித்திருக்கிறாரென்றார். துலுக்கர் தேசத்துக் கிட்ட தானயம் இறங்கியிருக்கிற படைத்தலைவன் சண்டைக்கு அடையாளம் கண்டவுடனே தன்னோடு இருக்கிற துலுக்க அடிமைகள் தனக்கு விரோதமாய் எழும்பித் தன் சத்துருக்களாகிய துலுக்கருக்கு உதவிசெய்யாதபடிக்கு அவர்களுக்கு விலங்குமாட்டிச் சிறைச்சாலையில் போட்டு அடைப்பானல்லோ ? நமது சரீரத்தின்மட்டில் நாமும் நடக்கவேண்டிய விதமிதுவே. நமது சத்துருக்கள் நம்மோடு யுத்தம்பண்ண வரும்போது, நமது சரீரம் அதுகளோடே சேர்ந்துகொள்ளாதபடிக்கு அதை ஒறுத்து அதுக்கு விலங்கு மாட்டவேண்டும்.






# ரு-ம் அதிகாரம்.

---

நமது புண்ணியவர்த்திப்பும் சாங்கோபாங்கமும் ஒறுத்தலில் அடங்கியிருக்கிறதென்று சொல்லுவது.

---

**நா**ம் இப்போது சொல்லிக் காட்டின சத்தியங்களை ஞானசிவிய கிரந்தகர்த்தாக்கள் நன்றாய் அறிந்திருந்ததினாலே, நமது புண்ணியவர்த்திப்பும் சாங்கோபாங்கமும் ஒறுத்தலில் அடங்கியிருக்கிறதென்று நிரூபித்தார்கள். நீ உன் சுயமனசுக்கு எவ்வளவு கட்டாயம் பண்ணுவாயோ அவ்வளவு புண்ணியத்தில் வர்த்திப்பாயென்று அர்ச். எரோணிமுஸ் அருளிச்செய்தார். இதினாலல்லோ சுகமாய் வாழுகிறவர்களுடைய நிலத்தில் ஞானம் அகப்படாதென்று யோபென்பவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். எரோணிமுஸ் சொல்லுகிறதாவது: இவ்வாக்கியத்தில் சுகமாய் வாழுகிறதென்பதற்குத் தன் மனசுபோலே நடக்கிறதென்று அர்த்தமாகும். நிலத்தை உழுது பயிரிடாமல் அதிலே முளைக்கிறது முளைக்கட்டுமென்று தரிசாய்ப் போட்டால், அந்த நிலம் இளைப்பாறுகிறதென்று சொல்லுகிறது வழக்கம். இப்படிப்பட்ட நிலத்தில் முள்ளும் முட்செடியும் மாத்திரம் முளைக்கும். ஆனால் அதை உழுது பயிரிட்டால், அதிலே தவசதானியம் விளையும். அப்போது அந்த நிலம் வேலைசெய்கிறதென்று சொல்லுவார்கள். இவ்வண்ணமே ஒருவன் தன் மனசுபோலே நடந்து திரிந்தால், அவன் சுகமே வாழ்ந்து வீண்காலம் போக்குகிறானென்று சொல்லுவோம். ஆனால் இப்படி நடக்கிறவனுடைய நிலமாகிற இருதயம் வெள்ளாண்மை செய்யாமல் தரிசாய்க்கிடக்கிற நிலத்துக்கு ஒப்பாகும்; இதிலே முள்ளும் முடலும் முளைக்குமல்லாமல் ஞானம் முளைக்க மாட்டாது. தங்களை ஒறுத்துத் தங்கள் ஆசாபாசத்தை அடக்கிக்கொண்டு வருகிறவர்களுடைய இருதயமானது உழுது பயிரிட்ட நிலத்துக்கு ஒப்பாகும்; இதிலேதான் ஞானமென்னும் பயிர் விளையுமென்றார். இந்த ஒறுத்தலும் அடக்குதலுமே புண்ணியத்தில் வர்த்திப்பதற்கான வழிபாடும் அளவுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் தீர்மானித்தார்கள். நீ புண்ணியத்தில் எவ்வளவு வர்த்தித்திருக்கிறாயென்று அறியவேணுமோ? இதை அறியவேணுமானால், நீ உன்னைத்தானே எவ்வளவு ஒறுத்திருக்கிறாயெ





ன்றும் உன் ஆசாபாசங்களின்பேரில் எவ்வளவு செயம்கொண்டிருக்கிறுயென்றும் எவ்வளவு தாழ்ச்சியும் பொறுமையும் உன்னிடத்தில் உண்டென்றும் இப்பிரபஞ்ச நன்மைகளின்பேரில் உன்னிடத்தில் பற்றுதல் இல்லையோவென்றும் சரீரத்துக்கும் இரத்தத்துக்கும் அடுத்த பட்சமெல்லாம் உன்னிடத்தில் செத்துப்போயிருக்கிறதோவென்றும் சோதித்துப்பார். இதைக் கொண்டுதான் நீ புண்ணியத்தில் வர்த்தித்திருக்கிறுயோ இல்லையோவென்று அறிந்துகொள்ள வேணுமல்லாமல் செபத்தியானத்தில் ஞான ஆறுதலையும் மதுரத்தையும் சுகித்தநுபவிக்கிறுயோ இல்லையோவென்று கவனிக்கவொண்ணுது. அர்ச். இஞ்ஞாசியாருடைய எண்ணமும் இதற்கு ஒத்திருக்கும். செபத்தியானத்தைவிட ஒறுத்தலை அவர் கனமாய் எண்ணிக்கொண்டு வருவார் ; யாதொருவன் புண்ணியத்தில் வர்த்திக்கிறுனே இல்லையோவென்று ஒறுத்தலைக் கொண்டு தீர்மானிப்பார். இன்னுன் அர்ச்சியசிஷ்டவனென்று அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியாவிடத்தில் யாதொருவன் சொன்னுல், அவர் சொல்லும் மறுமொழியாவது : அவனிடத்திலே மெய்யான ஒறுத்தலென்னும் புண்ணியம் இருந்தால், அவன் அர்ச்சிய சிஷ்டவன்தானென்பார். புலோசியுஸ் சொல்லுகிறதாவது : ஒறுத்தலென்னும் புண்ணியமுடைய தேவதாசன் நன்றுய்ப் பழுத்த முந்திரிகைக் குலைக்கு ஒப்பாவான். அது தித்திப்பாயும் வாய்க்கு உருசியாயும் இருப்பதுபோலே அவனும் சர்வேசுரனுக்குப் பிரியமாயிருப்பான். தன்னை ஒறுக்காதவன் பழுக்காமல் காயாயிருக்கிற முந்திரிகைக் குலைபோலிருக்கிறுன். அது புளிப்பாயிருப்பதுபோலே இவனும் சர்வேசுரனுக்குப் பொருந்தாதவனுய்ப் போவான். இதினுலல்லோ நமது திராட்சத்தோட்டம் நல்ல முந்திரிகைப் பழம் பழுக்குமென்று காத்துக்கொண்டிருந்தோம்; ஆனுல் அது புளித்த முந்திரிகைக் காயைக் காய்த்ததென்று சர்வேசுரன் முறைப்பட்டுச் சொன்னுர்.

தேவ புத்திரர்களுக்கும் உலோக புத்திரர்களுக்குமுள்ள வித்தியாசமேதென்றுல், உலோக புத்திரர் தங்கள் ஆசாபாசத்தின் இச்சைப்படி நடப்பார்கள் ; தங்கள் சரீரத்தை ஒறுக்கிறதில்லை. ஆனுல் இயேசுநாதருக்குச் சொந்தமான தேவ புத்திரர் தங்கள் சரீரத்தையும் அதிலுள்ள துர்க்குணங்களையும் கெட்ட ஆசைகளையும் சிலுவையில் அறைந்து நீதி நியாயத்துக்கு ஒத்தபடி நடப்பார்களென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார்.





ஒறுத்தலொன்றே கிறிஸ்துவனுக்குரிய புண்ணிய சாங்கோபாங்கமல்லவென்பது மெய்தான். தேவ சிநேகமே புண்ணிய சாங்கோபாங்கமாகும். யாதொருவன் தேவ சிநேகபந்தனத்தால் சர்வேசுரனோடு எவ்வளவு ஒன்றித்திருப்பானோ, அவ்வளவு அவன் புண்ணிய சாங்கோபாங்கனாய் இருப்பானென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் மேலே இருக்கிற கல்லைத் தாங்கிக்கொண்டிருக்கிற முட்டுக்காலை எடுத்துப்போட்டால், அது உடனே கீழே விழுவதுபோலே அரூபியுமாய்ச் சர்வேசுரனுக்காக உண்டாக்கப் பட்டதுமாயிருக்கிற நமதாத்துமமானது ஆசாபாசங்களும் இவ்வுலோக நன்மைகளின்பேரில் பற்றுதலுமாகிற விக்கினங்கள் இல்லாவிட்டால், தேவ வரப்பிரசாதத்தின் உதவியைக்கொண்டு உடனே தன் கதியாகிற சர்வேசுரனிடத்தில் எழும்பித் தேவ சிநேகத்தால் அவரோடு முழுதும் ஒன்றிக்கும். ஒவ்வொரு வஸ்துவும் தனக்குரிய சுபாவபற்றுதல் பிரகாரம் நடக்கும்; இலேசான வஸ்து மேலே எழும்பும், பாரமான வஸ்து கீழே கிடக்குமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். கண்டிப்புள்ள வஸ்துக்கள் தங்களிடத்திலுள்ள சுபாவப் பற்றுதலின்படி நடக்கிறதுபோலே, புத்தியுள்ள வஸ்துக்கள் சிநேகப் பற்றுதலைக் கொண்டு நடக்கும்; ஏனென்றால் சிநேகமே புத்தியுள்ள வஸ்துவுக்குச் சுபாவப் பற்றுதலாகும். சிநேகம் மனுஷனை எங்கே இழுத்துக்கொண்டு போகுமோ, அங்கேதான் அவனும் போவான். புத்தியில்லாத வஸ்துக்கள் தங்களுக்குரிய சுபாவப்பற்றுதலின்படி நடக்கிறதுபோலே, புத்தியுள்ள வஸ்துக்கள் தங்களிடத்திலிருந்து ஆட்கொள்ளுகிற சிநேகபாசத்தின்படி நடக்குமென்பது நிச்சயம். ஆகையால் இப்பிரபஞ்ச நன்மைகளின்பேரிலுள்ள பற்றுதலும் மகிமை பெருமை அடையவேணும் தன் மனசுபோலே நடக்கவேணும் இன்ப சுகங்களை அநுபவிக்கவேணுமென்கிற ஆசையும் நமதிருதயத்தில் ஆட்கொண்டிருந்தால், நமது மனப்பற்றுதலும் ஆசையுமெல்லாம் இந்திரிய இச்சைக்குரியதாயிருக்கிறதினாலே நாம் இவ்வுலோக நன்மைகளை நாடும்படி செய்யும். ஆனால் ஒறுத்தலைக் கொண்டு இப்பிரபஞ்ச நன்மைகளின்பேரிலுள்ள பற்றுதலை அறுத்துத்தள்ளுவோமானால், தேவ சிநேகம் நமதிருதயத்தில் ஆட்கொள்ளும்; தேவ சிநேகமே நமக்கு மனப்பற்றுதலாகி மேலே எறிந்த கல் கீழே விழுகிறதைப் பார்க்க அதிக சீக்கிரமாய் நமதிருதயம் சர்வேசுரனிடத்தில் உயர்ந்துபோகும். இதினாலல்லோ சர்வேசுரா, உமக்காக எங்களைப் படைத்தீர்; எங்கள் இருதயம் உம்மிடத்தில் மாத்திரம் இளைப்பாறக் கூடுமே






ன்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். இதினிமித்தமாகவே ஒறுத்தலானது கிறீஸ்துவர்களுடைய புண்ணிய வர்த்திப்புக்கும் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் அளவென்று அர்ச்சியசிஷ்டவர்கள் தீர்மானித்தார்கள். ஏனென்றால் தன்னை மிகவும் ஒறுக்கிறவன் மிகவும் தேவசினேகமுள்ளவனும் மிகவும் புண்ணிய சாங்கோபாங்கனும் ஆவானென்பது நிச்சயம்.

மான் நீர்ச்சுனையைத் தேடுகிறதுபோலே, சர்வேசுரா, என் ஆத்துமம் உம்மைத் தேடுகிறதென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தீன் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம் பண்ணிச் சொல்லுகிறதாவது : மான் தண்ணீரைத் தேடி ஓடும்போது, வழியில் குறுக்கிட்ட பாம்பை மிதித்து நசுக்கிப்போடும்; அதை நசுக்கினபின், தாகம் அதிசப்பட்டு அதிக விசையோடு ஓடும். உன்னிடத்தில் புண்ணிய சாங்கோபாங்கத்தின்பேரில் வெகு தாகமும் வெகு தேவ சினேகமும் இல்லாதிருப்பதற்குக் காரணமென்னவென்று அறியவேணுமோ ? கேள் : நீ மானைப்போலே பாம்பை மிதித்து நசுக்காததினாலேதான் மேற்சொன்ன ஆசையாகிற தாகம் உன்னிடத்தில் இல்லை. நீ நசுக்கவேண்டிய பாம்பு உன் துர்க்குணங்கள்தான். இந்தக் கெட்ட பாம்பை நசுக்கு ; அப்போது சத்தியத்தையும் சீவியத்தையும் தருகிற ஊற்றாகிய சர்வேசுரனை நோக்கி ஆவலோடு ஓடுவாயென்றார். ஆகையால் நாம் ஒறுத்தலிலே எவ்வளவு வர்த்திப்போமோ, அவ்வளவு புண்ணிய சாங்கோபாங்கத்திலும் தேவ சினேகத்திலும் வர்த்திப்போமென்பது நிச்சயம். நமது கெட்ட ஆசாபாசம் எவ்வளவு குறையுமோ, அவ்வளவு தேவ சினேகம் நம்மிடத்தில் வளரும் ; கெட்ட ஆசாபாசம் முழுதும் எடுபட்டுப்போனால், மேலான புண்ணிய சாங்கோபாங்கம் நம்மிடத்தில் உண்டாகுமென்று அர்ச். அகுஸ்தீன் வேறோரிடத்தில் சொல்லியிருக்கிறார். தங்கத்திலுள்ள துரு எவ்வளவு எடுபடுமோ, அவ்வளவு தங்கம் சுத்தமாகி நகாசுப்படும். இவ்வண்ணமே இவ்வுலோக நன்மைகளின்பேரிலுள்ள பற்றுதலும் சுயசினேகமும் நம்மைவிட்டு எவ்வளவு எடுபட்டுப்போகுமோ, அவ்வளவு தேவ சினேகம் நம்மிடத்தில் உத்தமமாகி ஓங்கி வளரும். ஒழுங்கற்ற சுய்சினேகம் முழுதும் அழிந்தொழிந்துபோனால், தேவ சினேகம் நம்மிடத்தில் முழுதும் உத்தமமாகும்.

காசியான் வெளிப்படுத்தின சங்கதியாவது : அருளப்பரென்னும் மடாதிபதி சாகுந்தருணத்தில் அவர் அதிகாரத்துக்குட்பட்ட சந்நியாசிகள் சாகப்போகிற தங்கள் தகப்பனைச் சுற்றிப் பிள்ளைகள் வர்திருப்பதுபோலே அவரிடத்தில் வந்து எங்கள் ஆறுதலுக்கும் புண்ணிய வர்த்திப்புக்குமான யாதொரு புத்திமதி சொல்லவேண்டும், புண்ணிய சாங்கோபாங்கத்தின் கொடுமுடியில் எளிதாய் ஏறுவதற்கான யாதொரு போதகத்தை ஞான மரணசாதனமாக எங்களுக்குச் சொல்லவேணுமென்று வெகு ஆவலோடு கேட்டுக் கொண்டார்கள். அதுக்கு அவர் பெருமூச்செறிந்து நான் ஒருகாலும் என் சுயமனசுபோலே நடந்ததுமில்லை, நான் அநுசரியாத்தை ஒருவருக்கும் போதித்ததுமில்லையென்றார்.

## ௯-ம் அதிகாரம்.

ஒறுத்தலானது சந்நியாசிகளுக்கும் விசேஷமாய் பிறசினேகத்துக் கடுத்த அலுவலைச் செய்துகொண்டு வருகிறவர்களுக்கும் அவசரமென்று சொல்லுவது.

ஒறுத்தல் தேவதாசர் எல்லாருக்குமுரிய புண்ணியமாமே ; தினந்தோறும் மேன்மேலும் தேவ சித்தத்தோடு ஒன்றிப்பதற்குச் சகலருக்கும் ஒறுத்தல் அவசரம். ஆனால் சந்நியாசிகளுக்கு இது விசேஷமாய் அவசரமாகும் ; ஏனென்றால் நம்மை ஒறுப்பதற்காகவே உலகத்தை வெறுத்துச் சந்நியாசத்தில் பிரவேசித்திருக்கிறோம். கெட்ட வழக்கங்களைத் திருத்திக்கொள்ளுகிறதே சந்நியாச அந்தஸ்தென்று அர்ச். ஆசிர்வாதேந்திரர் திருவுளம் பற்றினார். இதினாலே அவருடைய சபை சந்நியாசிகள் வார்த்தைப்பாடு கொடுக்கும்போது, என் நடக்கையைத் திருத்திக்கொள்ளுவேனென்று வார்த்தைப்பாடு கொடுக்கிறேனென்பார்கள். நாமெல்லாரும் உலகத்தை வெறுத்துச் சந்நியாசத்தில் பிரவேசிக்கும்போது, சர்வேசுரனுக்கு இந்த வார்த்தைப்பாடு கொடுக்கிறோமென்பது நிச்சயம். ஆகையால் ஒறுத்தலைக் கொண்டு பழைய மனுஷனையும் அவன் கிரிகைகளையும் உரிந்துபோட்டுப் புது மனுஷனை ஆடையாகத் தரித்துக்கொள்ள வேணுமென்று அர்ச். சின்னப்பர் தி






ருவுளம்பற்றினர். சந்நியாசத்தில் பிரவேசிக்கிறவர்களுக்கு அர்ச். பெர்நர்துஸ் வழக்கமாய்ச் சொல்லிக்கொண்டுவந்ததாவது : ஆத்துமம் மாத்திரம் இங்கே பிரவேசிக்கவேண்டும், சரீரம் வாசற்படிக்கிட்ட நிற்கவேணுமென்று எண்ணிக்கொள்ளுங்களென்பார். இதினலே சந்நியாசத்திலே தன் சரீரத்தைப் பேணித் தன் மனச்சார்புக்கு ஒத்தாப்போலே நடவாமல் ஆத்துமத்தைப் பேணி நடக்கவேணுமென்று சொன்னாற்போலாயிற்று. இதினலல்லோ புத்திக்கொத்தபடி நடங்கள் ; இப்படி நடந்தால், சரீர இச்சையை அநுசரிக்கமாட்டீர்களென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். புத்தி ஞாயமாகிற மேலங்கிஷத்துக்குரிய பற்றுதலின்படி நடந்து சரீரமும் இந்திரிய இச்சையுமாகிற கீழங்கிஷத்துக்குரிய பற்றுதல் எல்லாத்தையும் அறுத்துத் தள்ளுகிறதுதான் புத்தி ஞாயத்துக்கொத்தபடி மெய்யாகவே நடக்கிறதென்று சொல்லப்படும். யாதொருவன் தன் மனப்பற்றுதலைச் செயித்தடக்காவிட்டால், சந்நியாசத்திலே நிலைநிற்பது கூடாதகாரியமென்று நாம் அநுபவசித்தியினலே ஸ்திரமாய் அறிந்துகொண்ட சத்தியமாகும். இச்சத்தியத்தைப் பூர்வீக வனவாசிகள் எல்லாரும் ஒருவாக்கொருமொழியாய் அங்கீகரித்துக்கொண்டார்களென்று காசியான் சொல்லியிருக்கிறர். நாம் உலகத்தை விட்டுச் சந்நியாசத்துக்கு வரும்போது, நம்மிடத்திலிருந்த ஆகாத பற்றுதலைப்போலே சந்நியாச சீவியத்துக்கு விரோதமான காரியம் ஒன்றுமில்லையென்பது நிச்சயம்.

ஆனல் சந்நியாசிகள் எல்லாருக்கும் ஒறுத்தல் அவசரமானலும், பிறசினேகத்துக்குரிய அலுவலைச் செய்துகொண்டுவருகிற நமக்கு அதிக அவசரமாகும். பிறருக்கு ஒத்தாசை செய்வதற்குச் சமுசாரவாசிகளுக்குள்ளே சஞ்சரிக்கிறவர்கள் தங்கள் ஆசாபாசங்களை ஒறுப்பது விசேஷமாய் அவசரமென்று காட்டுவதற்காக அர்ச். கிறிசோஸ்தொமுஸ் சொல்லுகிறதாவது : இவர்களுக்குப் பாவ சமயம் வெகு அடிக்கடி நேரிடும் ; அச்சமயங்கள் வெகு ஆபத்துக்குரியது ; காட்டு மிருகங்கள் போலேயிருக்கிற நமது ஆசாபாசங்களுக்குப் பிரியமான சமயம் அடிக்கடி நேரிடும். போர்வீரனெருவன் சண்டையில்லாத காலத்தில் தன் கோழைத்தனத்தை மறைத்துக்கொண்டிருக்கலாம் ; ஆனல் சண்டை நேரிட்டவுடனே அவன் கோழைத்தனம் வெளிப்படும். கிறீஸ்துவர்கள் மட்டிலும் நடக்கிறது இதுவே. உலகத்தை விட்டு ஒதுங்கியிருக்கிறவன் தன் குற்றங்களை மறைத்துக்கொண்டிருக்கலாம் ; ஆன





ல் உலகத்தோடு யுத்தம்பண்ணுவதற்காக உலகத்தில் ஊட்டாடுகிறவன் ஒறுத்தலிலும் புண்ணியத்திலும் உத்தமனாயிருக்க வேண்டும். அன்றியும் நாம் பேசிப் புழங்கிக்கொண்டு வருகிறவர்களுடைய மனதைத்திருப்பி அவர்களைச் சர்வேசுரனிடத்தில் கொண்டுவந்து சேர்ப்பதற்காகக் கூடினமாத்திரம் அவர்களுடைய குணத்தோடும் நடக்கையோடும் நமது குணமும் நடக்கையும் ஒத்திருக்க வேண்டும். இதினாலல்லோ எல்லாரையும் ஈடேற்றுவதற்காக எல்லாருக்கும் எல்லாமும் ஆனேனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இதற்கு ஒறுத்தலும் சுயமனதை மறுத்தலும் எவ்வளவு அவசரமென்று நீங்களே அறிந்துகொள்ளலாம் ; நாம் சொல்லுவது அவசரமல்ல.

கண்ணிலே நிறங்களெல்லாம் கூடிப் பார்வை உண்டாகிற இடத்துக்கு ஒரு நிறமும் இல்லையென்று சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். சகல நிறங்களையும் பார்த்து அது என்ன நிறமென்று தீர்மானிக்கிற இடத்துக்கு ஒரு நிறமும் இல்லாதிருப்பது அவசரந்தானே. ஏனென்றால் அந்த இடத்துக்கு யாதோர் விசேஷ நிறமுண்டாயிருந்தால், அந்த நிறம் மாத்திரம் கண்ணுக்குத் தோன்றுமேயல்லாமல் மற்ற நிறம் ஒன்றும் தோன்றாது. இதினாலல்லோ ஒவ்வொரு வஸ்துக்குள்ளேயும் இருக்கிறது வெளி வஸ்து உள்ளே வராதபடிக்கு விலக்குமென்று சொல்லுவார்கள். கண்ணிலே பார்வை உண்டாகிற இடம் சிவப்பாயிருந்தால், நாம் பார்க்கிற காரியமெல்லாம் சிவப்பாய்த் தோன்றும். இதினாலே சிவப்புக் கண்ணாடியைக் கண்ணில் வைத்துப் பார்த்தால், பார்க்கிறதெல்லாம் சிவப்பாய்க் காணப்படும். அது பச்சையாயிருந்தால், நாம் பார்க்கிறதெல்லாம் பச்சையாய்த் தோன்றும். ஆகையால் நாம் எல்லாருக்கும் எல்லாமுமாகி எல்லாரையும் சர்வேசுரனிடத்தில் கொண்டுவந்து சேர்ப்பதற்காக நமது ஆசாபாசங்களை ஒறுத்தடக்கி நமது சுபாவ குணத்தை முழுதும் நீக்கி நம்மிடத்தில் சுபாவ குணம் ஒன்றுமில்லாதிருக்க வேண்டும். நமது குணத்துக்கு ஒத்தவர்களோடுமாத்திரம் ஒத்திருக்கிறது சந்நியாச நடக்கைக்குப் பொருந்தாத காரியமாமே. முன்கோபிகள் முன்கோபிகளோடு மாத்திரம் ஒத்திருக்கிறதும் கரும்பித்தக்காரர் கரும்பித்தமில்லாதவர்களுக்குப் பொருந்தாதிருக்கிறதும் ஒரு சாதியார் அந்தச் சாதியாரோடு மாத்திரம் சேர்ந்திருக்கிறதும் உதவாத நடக்கையாகும். உன் கண் ஒரே நிறத்தை மாத்திரம் பார்ப்பதேயல்லாமல் வேறே நிறத்தைப் பார்க்கக் கூ





டாதிருந்தால், இது கனத்த பொல்லாப்பென்று எண்ணுவாயல்லோ? இவ்வண்ணமே நமது குணத்துக்கு ஒத்தவர்களோடும் நமது தேசத்தாரோடும் மாத்திரம் நாம் ஒத்திருந்தால், இது அதிக கனத்த பொல்லாப்பாகும். மெய்யான பிறசினேகமுள்ளவர்கள் சர்வேசுரனுக்காகவும் சர்வேசுரனைக் குறித்தும் சகலரையும் சினேகிக்கிறதினாலே, எல்லாரையும் சரியாய்ச் சினேகிப்பார்கள்; யாதொருவன் என்ன சாதியானென்றும் எவ்வகை மனுஷனென்றும் அவர்கள் வித்தியாசம் பார்க்கிறதில்லை. இதினாலல்லோ அஞ்ஞானியென்றும் யூதனென்றும் விருத்தசேதனப்பட்டவனென்றும் விருத்தசேதனப்படாதவனென்றும் காட்டுமிறண்டியென்றும் சித்தியனென்றும் அடிமையென்றும் குடியானவனென்றும் மெய்யான பிறசினேகமுள்ளவர்கள் வித்தியாசம் பார்க்கிறதில்லை ; எல்லாத்துக்கும் எல்லாமுமாயிருக்கிற இயேசுநாதரை மாத்திரம் நோக்கி நடப்பார்களென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். மெய்யான பிறசினேகமுள்ளவர்கள் சகலரும் சர்வேசுரனுடைய பிள்ளைகளென்றும் இயேசுநாதருடைய சகோதரரென்றும் எண்ணியிருக்கிறதினாலே சகலரையும் தங்கள் இருதயத்துக்குள் வைத்துக்கொண்டிருப்பார்கள். இப்பேர்ப்பட்ட பொதுச் சினேகத்தை அடைவதற்கு ஒறுத்தலைவிட அவசரமான காரியம் ஒன்றுமில்லை.

இன்னமும் சகோதர சினேகபந்தனம் தமது சீஷாக்களுக்கு அடையாளமென்று இயேசுநாதர் புகழ்ந்து கொண்டாடியிருக்கிறாரே. இந்தச் சகோதர சினேகபந்தனத்தை நம்மிடத்தில் காப்பாற்றும்பொருட்டு ஒறுத்தலென்னும் புண்ணியம் மிகவும் அவசரமாகும். ஏனென்றால் சகலத்திலும் தன்னைத்தானே தேடுகிறதும் தன் சுகபோகங்களை நாடுகிறதும் தனக்கு மகிமை கீர்த்தி உண்டாகப் பிரயாசப்படுகிறதும் இதுவெல்லாம் பிறசினேகபந்தனத்தை அழித்துக் கெடுக்கும். ஒவ்வொருவனும் தன் நடக்கையைச் சோதித்துப் பார்க்கட்டும் ; பிறசினேகத்துக்கு விரோதமான குற்றத்தை நீ கட்டிக்கொள்ளும்போதெல்லாம், நாம் இப்போது சொன்ன காரியங்களில் எதையாகிலும் நீ தேடினதினாலே மாத்திரம் இந்தக் குற்றம் வந்ததென்று அறிந்துகொள்ளுவாய். ஆனால் ஒறுத்தலென்னும் புண்ணியமானது நம்மிடத்திலுள்ள கெட்டபற்றுதல் எல்லாத்தையும் அறுத்துத் தள்ளிப் பிறசினேகத்துக்கு வழியைச் செப்பனிடும். இதினாலல்லோ பிறசினேகம் தன் சொந்தப் பிரயோசனத்தைத் தேடுகிறதில்லையென்று அர்ச். சின்னப்






பர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அம்புரோசியார் சொல்லுகிறதாவது : யாதொருவன் சகலருக்கும் பிரியப்படவேணுமானால், தன் பிரயோசனத்தைத் தேடாமல் மற்றவர்களுடைய நன்மையை நாடவேண்டும். இதினாலே நமது சொந்தப் பிரயோசனத்தை நினையாமல் மற்றவர்களுடைய பிரயோசனத்தைக் கவனிக்கவேணுமென்று அர்ச். சின்னப்பர் வசனித்தாரென்றார்.

---

## எ-ம் அதிகாரம்.

---

### இரண்டுவித ஒறுத்தலின் பேரிலும் தபசின் பேரிலும்.

---

ஸ்நாபக அருளப்பர் காலந்துவக்கி மோக்ஷ இராச்சியம் பலவந்தப்படும் ; தங்களுக்குப் பலவந்தம்பண்ணுகிறவர்கள் மாத்திரம் அதைப் பறித்துக் கொள்ளுவார்களென்று சுவிசேஷத்தில் எழுதியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தின் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம் பண்ணிச் சொல்லுகிறதாவது : இரண்டுவித ஒறுத்தலும் சிலுவையுமுண்டு : ஒன்று சரீர ஒறுத்தலும் வேறொன்று ஆத்தும ஒறுத்தலுமாகும். ஒரு சந்திபிடித்தல் தன் சரீரத்தை அடித்துக்கொள்ளுதல மயிரொட்டியாணம் தரித்துக் கொள்ளுதல் தரையிலே படுத்துக்கொள்ளுதல் முதலியவைகளைப்போலே சரீரத்தை உபாதிக்கிறதெல்லாம் சரீர தபசாகும் ; இது சரீர இன்ப சுகங்களை நீக்குகிறதினாலே வெளித்தபசென்று சொல்லுகிறது வழக்கம். தன் ஆசாபாசங்களை அடக்கித் தினந்தோறும் தன் துர்க்குணத்தை விரோதித்துத் தன்பேரில் எப்போதும் கண்டிப்பாயிருந்து உள்ளத்தில் எழும்புகிற ஒழுங்கற்ற பற்றுதலோடு இடைவிடாமல் யுத்தம்பண்ணி க்ஷணத்துக்கு க்ஷணம் தன் மனதை ஒடுக்கித் தன் சுயபுத்தியை நீக்கிக் கோபத்தைச் செயித்துப் பொறுமையை அடக்கித் தன் வாயையும் கண்ணையும் நாக்கையும் பஞ்சேந்திரியங்களையும் கெட்ட பற்றுதல் எல்லாத்தையும் கீழ்ப்படுத்துகிறது ஆத்தும தபசாகும். இது சரீர தபசுக்கு மேற்பட்டதும் அதிக பேறுபலனுள்ளதுமான தபசாமே. இவ்விதமாய் ஆசாபாசங்க






ளாகிற கோட்டை கொத்தளத்தை உடைத்துத் தகர்த்துக் கட்டாயமாய் மோக்ஷ இராச்சியத்தில் ஏறவேணுமென்றூர். மோக்ஷத்தைக் கட்டாயமாய்க் கைப்பற்றுவதற்காகத் தைரியமாய் நம்மை ஒறுத்து வீரசூரராக வேண்டும். ஆகையால் இவ்வித ஆத்தும ஒறுத்தல் சரீர ஒறுத்தலுக்கு மிகவும் மேற்பட்டதென்பது நிச்சயம். ஒரு சந்தியினுலும் அடியினுலும் மயிரொட்டியாணத்தினுலும் சரீரத்தைக் கஸ்திப்படுத்துகிறதைவிட உலக மகிமையையும் கீர்த்தியையும் காலுக்குக் கீழே வைத்து மிதித்து மனதை அடக்குகிறது அதிக பேறுபலனுள்ள முயற்சியாமே. ஆனல் இவ்வித ஆத்தும தபசு சரீர தபசுக்கு மேற்பட்டதும் அதிக பலாபலனுள்ளதுமாயிருப்பதுபோலே சரீர தபசைவிட அதிக வருத்தமுள்ளதாயுமிருக்கும். ஏனென்றல் அதிக உத்தமமாயிருப்பதெல்லாம் எப்போதும் அதிக வருத்தமாயுமிருக்கும். அர்ச். கிரெகோரியாரும் அர்ச். தொரோத்தேயரும் வேறநேக அர்ச்சியசிஷ்டவர்களும் பல இடங்களில் போதித்திருக்கிற சத்தியமிதுவே.

நமது இயேசு சபையானது இவ்விரு தபசையும் கைக்கொண்டு அநுசரித்து வருகின்றது. இன்னின்ன சரீர தபசு செய்யவேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் இயேசு சபையில் ஒரு ஒழுங்கும் ஏற்படுத்தவில்லையென்பது மெய்தான். ஏனென்றல் இயேசு சபையார் வெளிப்பார்வைக்கு மற்றவர்களைப்போலே நடக்கவேணுமென்று அவர் விரும்பியிருந்ததினுலே, இன்ன வெளித்தபசு செய்யவேணுமென்று அவர் கற்பியாமலிருந்தது ஞாயந்தானே. ஆகிலும் நாம் இனிமேல் சொல்லப்போகிறதுபோலே இயேசுசபையார் சரீர தபசை அநுசரிப்பதற்கான ஏற்பாடெல்லாம் செய்திருக்கிறூர். இயேசு சபையார் வெளிப்பார்வைக்கு மற்றவர்களைப்போலே நடக்கவேணுமென்று அவர் தீர்மானித்ததற்குப் பலமுகாந்தரமுண்டு. கதியை அடைவதற்கு வழிபாடு எப்போதும் ஒத்திருக்க வேண்டுமல்லோ? தன் புண்ணிய சாங்கோபாங்கத்துக்காக உழைக்கிறதுமல்லாமல் பிறர் ஈடேற்றத்துக்காகவும் புண்ணிய சாங்கோபாங்கத்துக்காகவும் உழைக்கிறது இயேசு சபைக்குக் கதியாகக்கொள்ளச் சகலவித மனுஷரோடும் சஞ்சரித்து அவர்களோடு எளிதாய்ப் புழங்குவதற்காகக் குருக்களுக்குரிய வழக்கமான உடுபாவனையை மாத்திரம் தரித்துக்கொள்ளுகிறது நலமாகும். ஏனென்றல் இந்த உடுப்பு சந்நியாசிகளோடு சந்நியாசிகள் உடுப்புமாய் வெற்றுக் குருக்களோடு வெற்றுக் குருக்கள் உடுப்புமாய்த் தோன்றும். வெற்றுக் கு





ருக்கள் உடுப்புக்கும் நமது உடுப்புக்கும் வித்தியாசமில்லாததினாலே, இது உலக வாசிகளுக்குத் தகுந்த உடுப்பாமே. அன்றியும் லுத்தேர் காலத்திலே இயேசு சபை ஏற்படுத்தப்பட்டது. அக்காலத்திலிருந்த பதிதர் சந்நியாசிகள்பேரிலும் அவர்கள் உடுபாவனையின்பேரிலும் வெகு அருவருப்பாயிருந்தார்கள். ஆகையால் பதிதரை நெருங்கி அவர்களோடு தர்க்கம்பண்ணி அவர்கள் தப்பறையைத் தெளிவித்துக் காட்டுவதற்கு மற்றக் குருக்களுடைய உடுபாவனையல்லாமல் வேறே உடுப்பு அணிந்திருக்கிறது தகுந்ததல்ல. ஏனென்றால் சந்நியாசிகளுக்குரிய விசேஷ உடுப்பை நாம் அணிந்திருந்தால், நம்மைக் கண்டவுடனே நமது பேரில் அருவருப்புண்டாகி நம்மோடு பேசமுதலாய் மாட்டார்கள். இது இயேசு சபைக்குரிய முக்கியமான அலுவலில் ஒன்றைச் செய்து முடிப்பதற்கு விக்கினமாயிருக்கும். அன்றியும் நாம் தபசுக்குரிய உடுப்பை அணிந்துகொண்டிருந்தால், பாவிகள் நம்மைக் கண்டு பயந்து இவர்கள் தவ உடுப்புப் போட்டிருக்கிறதினாலே, இவர்களிடத்திலே போனால், நம்மை வெகுவாய்க் கண்டிப்பார்களென்று நம்மிடத்தில் அண்டிவரமாட்டார்கள். ஆகையால் சகலரிடத்திலும் எளிதாய்ப் போய் ஒருவரும் நம்மோடு பேசிப் புழங்குவதற்கு மனதில் ஐயுறவுப் படாதபடிக்குச் சகல குருக்களுக்கும் பொதுவான உடுப்பை நாமும் அணிந்திருப்பது நலமாகும். சகலரையும் மனந் திருப்பிச் சர்வேசுரனிடத்தில் கொண்டுவந்து சேர்ப்பதற்காக உடுப்பிலே முதலாய் நாம் எல்லாருக்கும் எல்லாமுமாய் ஆகவேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் தீர்மானித்தார். அர்ச். அகுஸ்தினும் அர்ச். தோமாசும் சொல்லுமாப்போலே, இயேசுநாதர் மற்ற மனுஷரைப்போலே நடந்துகொண்டுவந்தார். அவர்களுக்கு வெகு நன்மையைப் பெறுவிப்பதற்காக அர்ச். ஸ்நாபக அருளப்பருடைய தபசையும் ஒறுத்தலையும் விட்டு வெளிப்பார்வைக்கு மற்றவர்களைப்போலே வழக்கமான நடக்கையாய் நடந்துகொண்டு வந்தார்.

வெளித் தபசு செய்யவேணுமென்று நமக்கு விசேஷ ஒழுங்கில்லாவிட்டாலும், நமது சிரேஷ்டர்களே அதுக்கு உயிருள்ள ஒழுங்கு: ஒவ்வொருவரும் என்ன தபசு செய்யவேணுமென்று அவர்கள் கற்பிப்பார்கள். அர்ச். இஞ்ஞாசியார் சொல்லியிருக்கிறதுபோலே, இந்தத் தபசை இரண்டு விதமாய்ச்செய்துகொண்டுவரலாம். புண்ணியத்தில் மேன்மேலும் வர்த்திப்பதற்காகச் சிரேஷ்டருடைய உத்தரவின்படி





யாதோர் தபசை ஒவ்வொருவரும் தெரிந்துகொண்டு செய்துவரலாம். அல்லது இன்ன தபசு செய்யவேணுமென்று சிரேஷ்டர் கற்பிக்கிறது வழக்கம். தபசு செய்யவேணுமென்று ஓர் ஒழுங்கு ஏற்படுத்துகிறதைப் பார்க்க இப்போது சொன்ன விதமாய் நடப்பது அதிக நலமாகுமென்று அர்ச். இஞ்ஞாசியார் தீர்மானித்தது ஞாயந்தானே. ஏனென்றால் செத்த ஒழுங்கு எல்லாருக்கும் சரியாயிருக்க மாட்டாது ; ஒரே தபசைச் செய்ய எல்லாருக்கும் சரியான பெலன் இருக்க மாட்டாது. ஆகையால் எல்லாருக்கும் பொதுவான யாதோர் ஒழுங்கை ஏற்படுத்தினால், அதை அநுசரிக்கக்கூடாதவர்கள் மற்றவர்களைப்போலே நாங்களும் நடக்க முடியவில்லையே என்று கஸ்திப்படுவார்கள். சகல வித நோவாளிகளுக்கும் ஒரே மருந்தும் ஒரே பந்தியமும் உதவாது. அப்படிப்போலே சகலருக்கும் ஒரே தபசு ஒத்திராது. வாலிபருக்குத் தகுந்த தபசு வேறே ; விருத்தாப்பியருக்கு அடுத்த தபசு வேறே. வியாதிஸ்தருக்கு ஓர்வித தபசு நலமாயிருக்கும் ; சுகமே இருக்கிறவர்களுக்கு வேறுவித தபசு பொருந்தும். தங்கள் ஆயுசு காலத்திலே ஒரு சாவான பாவமும் கட்டிக்கொள்ளாமலிருந்து சந்நியாசத்தில் பிரவேசிக்கிறவர்களுக்கு ஓர்வித தபசு நலமாயிருக்கும் ; சாவான பாவத்தினாலே ஆத்துமம் முழுதும் காயப்பட்டு ஈட்டியினால் குத்தப்பட்டவர்கள் போலே சந்நியாசத்தில் பிரவேசிக்கிறவர்களுக்கு வேறுவித தபசு பொருந்தும். இதினாலே சந்நியாசத்தில் எல்லாரையும் ஒரே விதமாய் நடத்தவில்லையென்றும் சிலரைப் பார்க்க வேறு சிலர் அதிக தபசு செய்துகொண்டு வருகிறார்களென்றும் ஆச்சரியப்படவொண்ணாது ; ஏனென்றால் எல்லாரையும் ஒரே விதமாய் நடத்துகிறது சரியல்லவென்று அர்ச். அகுஸ்தீனும் அர்ச். பசிலியாரும் வசனித்தார்கள். ஆனால் ஒவ்வொருவரையும் வெவ்வேறு விதமாய் நடத்துகிறது முதலாய்ப் பற்றாது. சமயா சமயத்துக்கும் அவசரத்துக்கும் தக்கதா ஒருவனைத் தானே வெவ்வேறு விதமாய் நடத்திக்கொண்டு வருகிறது அவசரமாகும். சோதனையும் மன வறட்சியுமுள்ள காலத்தில் ஒருவித தபசு செய்கிறது நலம் ; மன சமாதானமும் புண்ணிய சுறுசுறுப்புமுள்ள காலத்தில் வேறுவித தபசு செய்யவேண்டும். தேவ சமாதானத்தை இருதயத்தில் காப்பாற்றுவதற்கு ஓர்வித தபசு உதவும் ; தேவ சமாதானத்தை இழந்துபோனால், அதைத் திரும்பி அடைவதற்கு வேறுவித தபசு தகுந்ததாயிருக்கும். இதினாலே தான் சகலருக்கும் பொதுவான ஒரு விசேஷ தபசை அர்ச். இஞ்ஞாசியார் ஏற்படுத்தவில்லை ;








ஆனால் ஒவ்வொருவருடைய பெலனுக்கும் அவசரத்துக்கும் தக்கது சிலருக்கு அதிக தபசும் சிலருக்குக் கொஞ்ச தபசும் குறிக்கட்டுமென்று ஞான வைத்தியராகிய சிரேஷ்டர் மனசுபோலே விட்டுவிட்டார். சர்வேசுரனிடத்திலிருந்து சம்மனசானவர் அர்ச். பக்கோமியாருக்குக் கொண்டுவந்த ஒழுங்கில் இவ்விதமாய்க் கற்பித்திருந்தது. அதெப்படியென்றால், ஒவ்வொரு சந்நியாசியாரும் என்ன தபசு செய்யவேணுமென்று சிரேஷ்டர் குறிப்பாராகவென்று எழுதியிருந்தது. மற்றச் சந்நியாச சபைகளில் வழங்குகிறதுபோலே இன்னின்ன தபசு செய்யவேணுமென்று இயேசு சபை ஒழுங்கில் குறியாதிருந்தாலும், நாம் சரீர தபசு செய்கிறதில்லையென்றும் மற்றச் சந்நியாசிகள் சபையில் விதித்திருக்கிற பரிசுத்த தவமுயற்சியை நாம் கனம் பண்ணுகிறதில்லையென்றும் எண்ணவும் கருதவும் படாது. ஆனால் ஒவ்வொருவருக்கும் அடுத்த தபசு இன்னதென்றும் இவ்வளவென்றும் சிரேஷ்டர் குறிப்பது நமது சபையின் அலுவலுக்குத் தகுந்ததென்றும் பூர்வீக அர்ச்சியசிஷ்டவர்களுடைய போதனைக்கு ஒத்ததென்றும் அறிந்திருப்பதினாலே, இப்படி ஏற்படுத்தியிருக்கின்றது. ஆகிலும் இதினிமித்தம் இயேசுச் சபையார் கொஞ்ச தபசு மாத்திரம் செய்கிறார்களென்று எண்ணப்படாது. அவர்கள் அதிக தவமுயற்சிகளை அதிக ஆவலோடு செய்து கொண்டு வருகிறார்களென்பது நிச்சயம். இன்னின்ன தபசு செய்யவேணுமென்று ஒழுங்கில் கற்பித்திருந்தால், அவர்கள் செய்யப்போகிற தபசைவிட இப்போது தேவ கிருபையினாலே அதிக தபசு செய்து கொண்டு வருகிறார்களென்று இதுவரையில் கண்டுவருகிறோம். இவ்வளவு புகழ்ச்சிக்குரியதும் பரிசுத்தமானதும் திருச்சபைப் போதகத்துக்கு முழுதும் ஒத்திருக்கிறதுமான தவமுயற்சியை எப்போதும் மேன்மேலும் அதிகமதிகமாய் நாம் செய்துகொண்டு வரும்பொருட்டுச் சர்வேசுரன் கிருபைசெய்யக் கடவார். இதுவரையில் நாம் அநுபவசித்தியினால் அறிந்துகொண்டதுபோலே நாம் தபசுசெய்யவேணுமென்று புத்திசொல்ல அவசரமில்லாமல் தவத்தின்பேரில் நமக்குள்ள ஆவலை மட்டுப்படுத்துகிறது அவசரமாயிருக்கக்கடவது.

நமது ஆசாபாசங்களையும் சுயசிநேகத்தையும் ஒறுப்பது இரண்டாம் வகைத் தபசாகும். இந்தத் தபசை இயேசுசபையானது அதிக முக்கியமாய் அநுசரித்துக்கொண்டுவருகின்றது. நமதுள்ளத்தில் இருக்கிற ஆசாபாசங்களையும் துர்க்குணங்களையும் சகலத்திலும் ஒறுத்து





மேலான பேறுபலனுள்ள இந்த ஆத்தும தபசைச் செய்துகொண்டுவருகிறதே நமக்கு முக்கியமான வேலையும் விசேஷ பிரயாசையுமாயிருக்க வேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் சித்தமாயிருந்ததினலே, வழக்கமான சரீரதபசு செய்யவேணுமென்று விசேஷ ஒழுங்கு ஏற்படுத்தவில்லை. நமது ஏற்பாட்டாகமத்தில் மகாமேலான புண்ணிய சாங்கோபாங்கத்துக்கடுத்தவைகளைக் கற்பித்திருக்கிருர். அதையெல்லாம் அநுசரிப்பதற்கு நாம் சுயமனசை முழுதும் மறுதலித்து வெகு ஆத்தும ஒறுத்தலுள்ளவர்களாயிருப்பது அவசரம். இப்படி நமது சுயமனசை மறுதலித்து ஒறுப்பது நமக்கு முக்கியமான அலுவலாயிருக்க வேண்டும், ஸ்திரமான புண்ணியத்திலும் மெய்யான சாங்கோபாங்கத்திலும் எப்போதும் அதிகரிப்பதற்கு நம்மாலான பிரயாசமெல்லாம்பட்டுத் தெண்டிக்க வேண்டும். ஒருசந்தி மயிரொட்டியாணம் முதலிய தபசு இத்தனைசெய்ய வேணுமென்று கற்பித்திருந்தால், சந்நியாசிகள் அதைச் செய்தாலே போதுமென்றிருப்பார்களென்றும் அதைச் செய்கிறதினலே எங்கள் கடமை நிறைவேறினதென்றெண்ணித் தங்கள் ஆசாபாசங்களை ஒறுத்து ஸ்திரமான புண்ணியங்களை அநுசரிப்பதற்கு வழியான ஆத்தும தபசை விட்டுவிடுவார்களென்றும் எண்ணியிருந்ததினலே, அர்ச். இஞ்ஞாசியார் விசேஷ சரீரதபசை கற்பிக்கவில்லை. ஆகையால் ஆத்துமதபசை நமது நடக்கைக்கு அஸ்திவாரமாகவும் ஆதாரமாகவும் ஏற்படுத்தினர். நாம் மேன்மேலும் புண்ணியசாங்கோபாங்கமுள்ளவர்களாகி நமது நடக்கை பரிசுத்தமும் உத்தமமும் அர்ச்சியசிஷ்டதுமாயிருக்கும்பொருட்டு நாம் முழுதும் தெண்டித்துழைத்து நமது அர்ச்சியசிஷ்டதனத்தைக் கொண்டு மற்றவர்களுக்கு நன்மாதிரிகையாகி நாம் மெய்யான சந்நியாசிகளென்று தோன்றும்பொருட்டு வழக்கமான சரீர தவமுயற்சியொன்றும் அவர் நமக்குக் கற்பிக்கவில்லை. மற்றுச் சந்நியாசிகளைவிட ஆத்தும தபசு நமக்கு அதிக அவசரமென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றல் அவர்களுடைய உடுபாவனையைக் கொண்டு அவர்கள் சந்நியாசிகளென்று எல்லாரும் அறிந்துகொள்ளுவார்கள்; அவர்கள் செய்கிற தபசைக் கண்டு மற்றவர்களுக்கு நன்மாதிரிகையாகும். ஆனல் நாம் மேற்சொன்ன முகாந்திரங்களைப்பற்றி நமது உடுபாவனைக்கும் குருக்களுடைய உடுபாவனைக்கும் வித்தியாசமில்லாததினலே, நமது சுகிர்த புண்ணியங்களையும் அர்ச்சியசிஷ்டதனத்தையுங் கொண்டு நாம் சந்நியாசிகளென்று மற்றவர்கள் அறிந்துகொள்ளவேண்டும். நாம் தாழ்ச்சியும் அடக்க ஒடுக்கமும் பிற சிநேகமும்






ஆத்தும ஈடேற்றத்தின்பேரில் ஆவலும் உருக்கமான பத்தியும் நிறைந்தவர்களாயிருந்தால், நம்மைக் காண்கிறவர்களும் நம்மோடு புழங்குகிறவர்களும் நாம் இயேசுசபைக்கு யோக்கியமான சந்நியாசிகளென்று அங்கீகரித்துக்கொண்டு வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, இவர்களே கர்த்தாவின் ஆசீர்வாதம் அடைந்த வித்தென்றுசொல்லுவார்கள். ஆகையால் ஆத்தும தபசை முக்கியமாய் அநுசரிப்பதற்கு நம்மாலான பிரயாசமெல்லாம் படவேண்டும். இப்படி நடவாமல் ஆத்தும தபசை விட்டுவிட்ட அந்தக்ஷணமே நாம் இயேசு சபைக்குரிய மெய்யான சந்நியாசிகளாயிருப்பதையும் விட்டுவிட்டோமென்று எண்ணிக்கொள்ளக் கடவோம். ஆத்தும தபசை அடைவதற்கு உதவியாகச் சரீரதபசு செய்துகொண்டுவரவேண்டும். இந்துதேசத்துக்கு அப்போஸ்தலராகிய அர்ச். சவேரியார் சொன்ன புத்தி யிதுவே. அவருக்குமுன் அர்ச். பொனவெந்தூரும் இந்தப் புத்தியைச் சொல்லிக்கொண்டுவருவார்.

இயேசு சபையிலே சிரேஷ்டர்கள் சந்நியாசிகளை வெகு சாந்தகுணமாய் நடத்திக்கொண்டு வருகிறார்களென்று சொல்லுகிறது வழக்கம். தேவ கிருபையினாலே இது மெய்யான காரியந்தான். இயேசுசபை சந்நியாசிகளிடத்திலுள்ள ஆத்தும தபசு இதுக்குக் காரணம். ஏனென்றால் அநுசரிப்பதற்கு வருத்தமான காரியம் இயேசு சபையில் இல்லையென்றும் இருந்தாலும், சிரேஷ்டர்கள் தயவு தாக்ஷணியத்தினாலே இப்படிச் சாந்தகுணமாய் அவர்களை நடத்துகிறார்களென்றும் எண்ணாதே. இப்படியானால், இந்தச் சந்நியாசிகள் பேருக்கு மாத்திரம் சந்நியாசிகளேயல்லாமல் மெய்யான சந்நியாசிகளல்லவென்று சொல்லவேண்டும். அநுசரிப்பதற்கு மகா வருத்தமான காரியங்கள் இயேசுசபையில் மெத்தவுண்டு. ஆனால் இயேசு சபை சந்நியாசிகள் தங்கள் சுயமனசை மறுதலித்து ஒறுத்துச் சிரேஷ்டரிடுகிற கற்பனையெல்லாம் செய்துமுடிப்பதற்கு எப்போதும் ஆயத்தமாயிருக்கிறதினாலே இதுவெல்லாம் அநுசரிக்கிறது எளிதாயிருக்கும். சிரேஷ்டர்கள் சந்நியாசிகளை நடத்திக்கொண்டுவருகிற விதத்திலேயும் சந்நியாசிகள் சிரேஷ்டர்களுக்கு அமைந்திருக்கிற விதத்திலேயும் விளங்குகிற சாந்தமான நடக்கைக்கு இப்போது சொன்ன இந்த ஒறுத்தலும் பரிசுத்த அமைதலுமே காரணமாகும். ஏனென்றால் இந்த ஒறுத்தலின் நிமித்தம் குசவனுடைய கையில் இருக்கும் மண்ணைப்போலே சந்நியாசிகள் எல்லாரு





ம் சிரேஷ்டருடைய கையில் இருக்கிறார்கள். சந்நியாசிகள் தாங்களாய் ஒன்றையும் ஆசியாமல் இருக்கிறதினாலே, சிரேஷ்டர் தமது மனசுபோலே அவர்களை எளிதாய் நடத்துகிறார். அர்ச். இஞ்ஞாசியார் நமது சுயமனசை மறுதலித்து நம்மை ஒறுக்கவேணுமென்று முக்கியமாய் நமக்குக் கற்பித்திருக்கிறதினாலே, அவரிடத்திலுள்ள ஆச்சரியமான புத்திக் கூர்மை விளங்குகிறதுமல்லாமல் சர்வேசுரனுடைய விசேஷ ஏவுதலும் அவரிடத்தில் இருந்ததென்று சொல்லவேண்டும். ஏனென்றால் இயேசு சபையிலே மிகவும் வருத்தமும் அருமையுமான காரியங்கள் உண்டென்று அவர் அறிந்திருந்தார்; ஆனால் அதுகளைச் சகலருக்கும் எளிதாக்கவும் சிரேஷ்டர்களுக்கு வருத்தத்தைக் குறைக்கவும் ஒறுத்தலென்கிற புண்ணியத்தை அஸ்திவாரமாக ஏற்படுத்தவேணுமென்று அறிந்துகொண்டார். இதினாலே நமது சுயமனசை முழுதும் விட்டுச் சிரேஷ்டருடைய மனசுக்கு முழுதும் அமைந்து குசவனுடைய கையில் இருக்கிற மண்ணைப்போலேயும் தையல்க்காரனுடைய கையில் இருக்கிற துணியைப் போலேயும் சிரேஷ்டருடைய சித்தம்போலே நடக்கவேணுமென்று கற்பித்திருக்கிறார். தையல்க்காரன் தன் மனதுபோலே துணியை வெட்டுவான். ஒரு துண்டு கைக்கும் வேறொரு துண்டு காலுக்கும் மற்றொரு துண்டு விளிம்புக்கும் இன்னொரு துண்டு கழுத்துக்கும் வெட்டுவான். ஆகிலும் எல்லாத் துண்டும் ஒரே துணியாயிருக்கிறதினாலே, அதுவெல்லாம் ஒன்றுக்கொன்று இளப்பமானதல்ல. சமையல் வீடு கட்டுகிறதற்கு எடுக்கிற மண் சாப்பாட்டறை கட்டுகிறதற்கு எடுத்த மண்ணுக்கு இளப்பமான மண்ணல்ல; ஏனென்றால் எல்லாம் ஒரு பூமியிலிருந்து எடுப்பட்ட மண்தானே. இவ்வண்ணமே ஒரே சமயத்தில் பல சந்நியாசிகள் இயேசு சபையில்கூடப் பிரவேசிக்கிறார்களென்றும் அவர்கள் எல்லாரும் முன்னமே ஒரே படிப்புப் படித்திருந்தார்களென்றும் வைத்துக்கொள்ளுவோம். இயேசு சபையில் பிரவேசித்தபின், இவர்களில் ஒரு சந்நியாசியாரைப் பிள்ளைகளுக்கு இலக்கணம் கற்றுக்கொடுக்கவும் வேறொருவரை ஞான சாஸ்திரம் அல்லது தேவ சாஸ்திரம் படித்துக்கொடுக்கவும் நியமித்தால், முதலில் சொல்லப்பட்ட சந்நியாசியார் எனக்கு ஏன் இந்தச் சொற்ப அலுவலைத் தந்தார்களென்று முறைப்படுகிறதற்குக் காரணமில்லை. ஆகையால் சிரேஷ்டர் சொல்லுகிறதெல்லாம் செய்வதற்கு மனசிலேயும் வெளியிலேயும் அருவருப்பும் விரோதமுமில்லாமல் உன் மனசை ஒறுத்தடக்கி எல்லாத்தையும் செய்வதற்கு நீ ஆயத்தமாயிருக்கிறாயே.





இதுவே சிரேஷ்டர் உன்னைச் சாந்தமாய் நடத்துகிறதற்குக் காரணமாகும். சிரேஷ்டர் உனக்கிடுகிற கட்டளையைச் செய்கிறது சிலவிசை வருத்தமாகவும் கக்கிஷமாகவும் உனக்குத் தோன்றினால், சிரேஷ்டரிடுகிற கட்டளையினாலே இப்படித் தோன்றுகிறதென்றெண்ணாதே. உன்னிடத்தில் ஒறுத்தலும் மனஅமைவும் இல்லாததினாலேதான் இப்படியாகிறதென்று அறிந்துகொள். ஏனென்றால் சிரேஷ்டர் தம்து கடமையை நிறைவேற்றுகிறார். நீ மெய்யான சந்நியாசியென்றும் ஒறுத்தலும் மனஅமைவும் உன்னிடத்தில் மெய்யாகவே உண்டென்றும் உன் மனதுக்குப் பிரியமானதென்னவென்று உன்னிடத்திலே கேட்க அவசரமில்லையென்றும் தாம் கட்டளையிடுகிறதெல்லாம் செய்துமுடிக்க நீ எப்போதும் ஆயத்தமாயிருக்கிறாயென்றும் அவர் நிச்சயித்திருக்கிறதினாலே உனக்கு எந்தக் கட்டளையுமிடுவார். இப்படி உன்னைக் கனமாயெண்ணி நீ எல்லாத்தையும் செய்துமுடிப்பாயென்று நம்பி உனக்கு யாதோர் கட்டளையிடுகிறதினாலே உன்னை மகிமைப்படுத்துகிறாரென்று சொல்ல வேண்டும். கல்லை நன்றாய்ப் பொளிந்திருந்தால், அதை வைத்துச் சுவர் கட்டுகிறது வெகு எளிதாயிருக்கும்; அதை விழவிட்டாலேபோதும்; நன்றாய்ப் படிந்துபோகும். ஆனால் பொளியாத கல்லை வைத்துக் கட்டுவதற்குச் சுத்தியலாலே எவ்வளவு அடித்து வருத்தப்படவேண்டும்!

நாம் இப்போது சொன்னதைக் கொண்டு வேறொரு விசேஷ சத்தியத்தையும் அறிந்துகொள்ளலாம். அர்ச். பொனவெந்தூர் இதுகாரியத்தைவெளிப்படுத்தியிருக்கிறார். அதென்னவென்றால், ஆத்தும தபசு சரீரதபசைப் பார்க்க மிகவும் வருத்தமாயிருந்தாலும், சரீரதபசைச் சிலவிசை விட்டுவிடலாம்; ஆத்தும தபசை ஒருகாலும் விடப்படாது. ஒரு சந்திபிடிக்கவும் மயிரொட்டியாணம் தரித்துக்கொள்ளவும் தன்னை அடித்துக்கொள்ளவும் பாதரட்சையில்லாமல் நடக்கவும் தினந்தோறும் நடுச்சாமத்தில் எழுந்திருந்து செபம் பண்ணவும் எனக்குப் பெலனில்லையென்று சொல்லலாம்; இது சிலவிசை மெய்யாயிருக்கும். ஆனால் தாழ்ச்சியாயிருக்கவும் பொறுமையாயிருக்கவும் சிரேஷ்டர் சித்தத்துக்கு அமைந்திருக்கவும் எனக்கு பெலனில்லையென்று ஒருவரும் சொல்லப்படாது. சந்நியாசத்துக்கு அவசரமான மேலான தாழ்ச்சியையும் கீழ்ப்படிதலையும் அமைதலையும் அநுசரிப்பதற்குத் தகுந்த புண்ணியம் என்னிடத்தில் இல்லையென்று சொல்லலாம்; ஆனால் இந்தப் புண்ணிய





ங்களை அநுசரிப்பதற்கு என்னிடத்திலே பெலனில்லையென்று சொல்லப்படாது. ஏனென்றால் இதை அநுசரிப்பதற்குச் சரீரபெலன் அவசரமில்லை ; மனப்பெலனேபோதும் ; இது எல்லாரிடத்திலுமுண்டு. மனசுண்டானால், தேவ கிருபையினாலே நோவாளிகளும் சௌக்கியமுள்ளவர்களும் பராக்கிரமசாலிகளும் பலவீனரும் யாவரும் ஆத்தும தபசை அநுசரிக்கக் கூடும்.

இயேசு சபையின் மேலான கதியை நிறைவேற்றி முடிப்பதற்கு அவசரமான குணாகுணங்கள் எங்களிடத்தில் இல்லையென்றெண்ணிச் சில்விசை அவநம்பிக்கைக்குரிய சோதனைப்படுகிறவர்களுக்கு நாம் இப்போது சொன்னது வெகு ஆறுதலாயிருக்கும். அரசராகமத்தின் முதல் புத்தகத்திலே சொல்லியிருக்கிறதாவது : சவுலரசன் தன் மகளைத் தாவீதென்பவருக்கு விவாகம் பண்ணிக்கொடுக்க மனதாயிருக்கிறேனென்று அவருக்கு அறிவிப்பதற்காக அவரிடத்தில் ஸ்தானாபதிகளை அனுப்பினான். அப்போது தாவீதென்பவர் ஸ்தானாபதிகளை நோக்கிச் சொன்னதாவது : இராசாவுக்கு மருமகனாகிறதென்றால் அற்பக்காரியமென்று உங்களுக்குத் தோன்றுகிறதோ ? நான் ஏழையும் வகையில்லாதவனுமாயிருக்கிறேனென்றார். அவர்கள் சவுலிடத்தில் திரும்பிவந்து தாவீதென்பவர் சொன்னதை வெளிப்படுத்தினார்கள். அதற்குச் சவுலரசன் சொன்னதாவது : நீங்கள் திரும்பித் தாவீதிடத்திலே போய் இராசாவின் மகளைக் கலியாணம் பண்ணுகிறதற்கு ஆஸ்தியும் பரிசமும் அவசரமில்லை ; பிலிஸ்தினராகிய சத்துருக்களைப் பழிவாங்குவதற்காக அவர்களில் நூறுபேருடைய தலை கொண்டுவந்தாலே போதுமென்று சொல்லுங்களென்றான். சந்நியாசத்திலே உள்ள புண்ணிய முயற்சிகளைச் செய்ய எங்களாலே கூடுமோ கூடாதோவென்று அவநம்பிக்கைப் படுகிறவர்களுக்கு நாம் சொல்லுகிறதாவது : உன்னிடத்தில் வெகு சாமர்த்தியமும் புத்திக் கூர்மையும் வேணுமென்று சர்வேசுரன் கேட்கிறதில்லை. இதினாலல்லோ தேவரீர் என் சர்வேசுரனாயிருக்கிறதினாலே, என் ஆஸ்தி உமக்குத் தேவையில்லையென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. உன் ஆசாபாசங்களைச் செயித்து உன் துர் இச்சையை ஒறுக்க வேணுமென்று சர்வேசுரன் உன்னிடத்தில் கேட்கிறார் : பிலிஸ்தினராகிய உன் துர்க்குணங்களைச் சங்கரி. இயேசு சபை உன்னிடத்தில் கேட்கிற காரியமிதுவே. ஆகையால் உனக்கு மனசுண்டானால், நீ இயேசு சபைக்கு மிகவும் யோக்கியமா






ன பிள்ளையாகலாம். தாழ்ச்சியாயிரு, அமைவாயிரு; உனக்குக் கற்பிப்பதெல்லாத்தையும் செய்வதற்கு எப்போதும் ஆயத்தமாயிரு; இதே போதும். ஆங்காரமும் வீண் மகிமையுமாகிற புகையைத் தேடி உன் மனப்பற்றுதலிலே ஊன்றிநின்று சுகத்தையும் வீண் விளையாட்டையும் தேடிச் சிரேஷ்டருக்கு மறைவுள்ளபிரகாரமாய் நடவாதே; ஏனென்றால் இப்படி மறைவுள்ளபிரகாரமாய் நடந்தால், சந்நியாச சீவியத்தைப்போலே இவ்வுலோகத்தில் உனக்கு வருத்தமான காரியம் ஒன்றுமிராது. ஆனால் தாழ்ச்சியும் ஒறுத்தலும் மெய்யான மனத்தரித்திரமும் உள்ளவனாகித் தன் மனதை மறுதலித்து எல்லாத்துக்கும் அமைந்திருக்கிறவனுக்கு இயேசு சபையில் செய்யவேண்டியதெல்லாம் எளிதும் இன்பமுமாயிருக்கும்.

ஆகையால் இவ்வளவு வருத்தமும் கக்கிஷமுமான புண்ணிய முயற்சிகளைச் சர்வேசுரன் நமக்கு எளிதும் இன்பமுமாக்கினதினாலே, நாம் அவருக்கு மிகவும் நன்றியறிந்திருக்க வேண்டும். ஏனென்றால் நமது ஒழுங்கில் விதித்திருக்கிறது மிகவும் மேலான புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் வருத்தத்துக்குமுரிய முயற்சிகளாயிருக்கிறதினாலே, சகல சரீர தபசையும் சரீர ஒறுத்தலையும் இதோடு ஒப்பிட்டுப்பார்த்தால், இதுவெல்லாம் ஒன்றுமில்லையென்று சொல்லவேண்டும். இதை ஒப்பிப்பதற்காக நாம் சொல்லுவதைக் கேள்: நமதுள்ளத்தில் பிறக்கிற சகல நினைவு சோதனை பற்றுதல்களையும் நாம் கட்டிக்கொள்ளுகிற குற்றங் குறைகள் எல்லாத்தையும் நமது ஆத்துமத்தில் நடக்கிற சகலத்தையும் சிரேஷ்டருக்கும் ஞான பிதாவுக்கும் சரியாய்ச் சொல்லிக் காட்டவேண்டுமென்று நமக்கு ஓர் ஒழுங்குண்டே. இது இயேசு சபையிலுள்ள முக்கியமான ஒழுங்குகளில் ஒன்றென்று சொல்லத்தகும். ஒரு சந்தி மயிரொட்டியாணம் முதலிய சகல தபசுகளையும் செய்கிறதைவிட மேற்சொன்ன ஒழுங்கை அநுசரிக்கிறது அதிக வருத்தமல்லவா? அன்றியும் புண்ணியத்தில் மேன்மேலும் வர்த்திப்பதற்காகவும் விசேஷமாய்த் தாழ்ச்சி முயற்சி செய்துகொள்ளுவதற்காகவும் பாவசங்கீர்த்தனத்துக்கு வெளியே நமது குற்றங் குறைகளை அறிந்துகொண்டவர்கள் ஆரானாலும் அதை நமது சிரேஷ்டரிடத்தில் சொல்லிக் காட்டுகிறது நன்மையாக நாம் எல்லாரும் எண்ணிக்கொள்ளவேணுமென்று நமக்கு ஓர் ஒழுங்குண்டே. இப்படி நமது குற்றத்தை நம்மிடத்திலே சொல்லாமல் நமது சிரேஷ்டரிடத்திலே போய்ச் சொன்னார்களே; ந





மது குற்றத்தைச் சிலவிசை அதிகமாய்ப் பெருக்கிக் காட்டியிருக்கிறீர்களேயென்று முறைப்பட்டாமலிருப்பதற்கு மிகவும் ஆழ்ந்த தாழ்ச்சியும் மிகுந்த மன அமைதலும் வேண்டியிருக்கிறதல்லோ? ஆனால் இன்னம் இத்தோடே போகவில்லை: நமதுபேரில் குற்றமிருந்தாலுஞ் சரி, இல்லாவிட்டாலுஞ் சரி, மற்றவர்களுக்கு முன்பாக நமக்குச் செய்கிற கண்டனை தெண்டனையை நல்ல மனதோடு சகித்துக்கொள்ளுவதற்கு நாம் எப்போதும் ஆயத்தமாயிருக்கவேணுமென்று அந்த ஒழுங்கிலே தானே சொல்லியிருக்கின்றது. அன்றியும் மற்றவர்கள் நமது பேரில் இல்லாத குற்றத்தைச் சாட்டினால், அதினிமித்தம் கஸ்திப்பட்டு மொறுமொறுக்காமல் சந்தோஷத்தோடு பட்டநுபவிப்பதற்கு எப்போதும் ஆயத்தமாயிருக்க வேணுமென்றும், உலகவாசிகள் தங்களுக்கு மகிமை பெருமை வந்தால் சந்தோஷப்படுகிறதுபோலே, நமக்கு நிந்தை அவமானம் இகழ்ச்சி நேரிட்டால் அகமகிழ்ந்து அக்களிக்க வேணுமென்றும் அர்ச். இஞ்ஞாசியார் கற்பித்திருக்கிறார். இப்படி நடப்பதற்கு மேலான புண்ணியம் அவசரமென்று சொல்லவேணுமோ? மேலும் சிரேஷ்டர் என்னென்ன வேலை என்னென்ன அலுவல் கொடுத்தாலும், இயேசு சபை நம்மை எந்தெந்த அந்தஸ்தில் வைத்தாலும், அதுவெல்லாம் சரியென்று முழு மன அமைவோடு நாம் அங்கீகரித்துக்கொள்ளவேணுமே. இயேசு சபையில் எண்ணிக்கைக்குள்ளடங்காத அலுவலும் ஒன்றுக்கொன்று மேலான பல அந்தஸ்தும் இருக்கிறதினாலே, மேலான அலுவலும் கீழான அலுவலும் சரியென்று நிச்சயித்துக்கொண்டு உயர்ந்த அலுவலில் வைத்தால் சந்தோஷப்படுகிறதுபோலே, தாழ்ந்த அலுவலிலும் சந்தோஷப்படுகிறதற்கு நடுத்தரமான புண்ணியம் பற்றாதென்றும் மேலான மன ஒறுத்தல் அவசரமென்றும் சொல்லவேணுமோ? இன்னமும் சிரேஷ்டர் மனசுபோலே உலகத்தின் எத்திசையிலும் போய் உழைப்பதற்கு நாம் எப்போதும் ஆயத்தமாயிருக்க வேண்டும். வேறே நாட்டுக்கும் வேறே தேசத்துக்கும் கீழ் இந்தியா மேல் இந்தியாவுக்கும் ரோமாபுரிக்கும் ஜெர்மானிய இராச்சியத்துக்கும் இங்கிலீஷ் தேசத்துக்கும் திரான்சில்வானியா நாட்டுக்கும் கண்ணுக்கெட்டாத தூரம் போகச் சொன்னாலும், அதின்பின் நமது உற்றார் உறமுறையாரைப் பார்க்கவும் அவர்கள் நம்மைக் காணவும் ஒருகாலும் நம்பிக்கை இல்லையென்றிருந்தாலும், நாம் சிரேஷ்டருக்குக் கீழ்ப்படிந்து அவர் சித்தம்போலே அங்கே போகவேண்டுமே. இது இலேசான காரியமென்று உனக்குத் தோன்றுகிறதோ? இயேசு சபையில் ஏற்படுத்

தியிருக்கிற தரித்திரமென்னும் புண்ணியம் மிகவும் கண்டிப்பாயிருக்கிறதினாலே, ஒருவரும் ஒன்றையும் வாங்கவும் கூடாது; சாப்படுவதற்காகவாகிலும் வேறே எதுக்காகவென்கிலும் அறையில் ஒன்றும் வைத்திருக்கவும் படாது; அறையிலுள்ள புத்தகத்தில் ஒரு அடையாளம் போடவும், ஒரு மடத்திலிருந்து வேறோர் மடத்துக்குப் போகும்போது, அதை எடுத்துக்கொண்டு போகவும் படாது. கடைசியாய் நாம் சகல காரியத்தின் பேரிலும் முழுதும் மனப் பற்றுதல் அற்றுப்போயிருக்க வேண்டியிருப்பதினாலே, உடுப்புப் பெட்டியிலே சாவி போட்டு பூட்டப் படாது. உமது சித்தம்போலே எல்லாத்தையும் எடுத்துக்கொள்ளும், எனக்குச் சொந்தமானது ஒன்றுமில்லையென்று சிரேஷ்டனை நோக்கிச் சொன்னதுபோலே நமது அறையிலுள்ளதெல்லாத்தையும் எப்போதும் திறந்துவைக்க வேண்டும்.

இப்போது நாம் சொன்ன இந்தப் புண்ணிய முயற்சிகளும் இன்னும் இயேசு சபையார் அநுசரித்துக்கொண்டுவருகிற இதற்கொத்த வேறே அநேக முயற்சிகளும் சகல சரீர தபசு ஒறுத்தலைவிட உத்தமமானதென்றும் அதிக வருத்தமானதென்றும் அறிந்துகொள்ளுகிறது எளிதே. ஆகையால் தன்னை மிகவும் ஒறுத்து அருந்தவம் பண்ணவேணுமென்று பரிசுத்த ஆவலுள்ளவன் தன் ஆசைக்களவாக அருந்தவம் புரிவதற்கு இயேசு சபையிலே இடமுண்டென்று கண்டுகொள்ளுவான். ஏனென்றால் இயேசு சபையில் இருந்த சிலர் வேறொரு சந்நியாச சபையில் இதுக்கு மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தையும் அருந்தவத்தையும் செய்ய ஆசையாயிருக்கிறோமென்று சாக்குப் போக்குச் சொல்லி இயேசு சபையை விட்டுப்போனார்களென்பது மெய்தான். ஆனால் இவர்கள் அதிக மேலான சாங்கோபாங்கத்தை அடைவதற்காகப் போகாமல் இயேசு சபையில் அநுசரிக்கவேண்டிய உத்தமமான ஆத்தும தபசைச் செய்யமாட்டாமல் இயேசு சபையை விட்டு வேறே சபையில் போனார்களென்பது நிச்சயம். அவர்களே அதின்பின் இது மெய்யென்று ஒத்துக்கொண்டார்கள். அர்ச். பாப்பானவரும் இது காரியத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். ஏனென்றால் முன்னமே அர்ச். தொமினீக்கு சபை சந்நியாசியாராயிருந்த ஐந்தாம் பத்திநாதரென்னும் பாப்பானவர் இயேசு சபையை விட்டுச் சமுசார அந்தஸ்திலாகிலும் கர்த்தூசிய சபைதவிர வேறெந்தச் சந்நியாச சபையிலென்கிலும் பிரவேசிக்கிறவர்களுக்கு விரோதமாய்க் கொடுத்த நிருபத்திலே இ





வ்விஷயத்தைத் தெளிவாய் விளக்கிக் காட்டியிருக்கிறார். இந்த நிருபத்தில் இயேசு சபையிலுள்ள மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தையும் இச்சபையாருக்குக் கற்பித்திருக்கிற வருத்தமான காரியங்களையும் எடுத்துக் காட்டினபின், இயேசு சபையை விட்டு மற்றச் சபைகளில் பிரவேசிப்பதற்கு எத்தனிக்கிறவர்களைக் குறித்து அவர் சொன்ன வார்த்தைகளாவது : இயேசு சபையாருக்குள்ளே சிலர் அற்பப் புத்தியினால் ஏவப்பட்டுச் சத்திய வேத நன்மைக்காகவும் வேதப் பரம்புதலுக்காகவும் இயேசு சபை சந்நியாசிகள் இடைவிடாமல் செய்துகொண்டு வருகிற வேலை பிரயாசங்களைத் தாங்கமாட்டாமல் இச்சபைக்கும் சத்திய வேதத்துக்கும் வருவிக்கக் கூடுமான பொது நன்மையை வருவிக்க மனசில்லாமல் புத்தி கெட்டதனமாய்த் தங்கள் சுகத்தைப் பேண விரும்பி இச்சபையை விட்டுப்போக எத்தனித்தார்கள். ஆகிலும் இவர்கள் தங்கள் கோழைத்தனத்தை மறைப்பதற்காக அதிக மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தை அநுசரித்து அதிக கண்டிப்பான தபசு செய்வதற்காக இயேசு சபையை விட்டு வேறே சபைக்குப் போகிறோமென்று சாக்குப் போக்குச் சொல்லி இதை மற்றவர்கள் நம்பும்படி பிரயாசப்பட்டுக் கர்த்தூசிய சபை தவிர மற்றச் சபைகளில் போகலாமென்று எண்ணினார்களென்றார். ஆகையால் இவர்கள் அதிக புண்ணிய சாங்கோபாங்கத்தை அநுசரித்து அதிக தபசு செய்யவேணுமென்கிற ஆசையினாலே இயேசு சபையை விட்டுப் போகவில்லை ; ஆனால் இச்சபையில் விதித்திருக்கும் மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தையும் முழு ஆத்தும தபசையும் மட்டுக்கடந்த அமைதலென்னும் புண்ணியத்தையும் அநுசரிப்பதற்குத் தங்களாலே கூடாததினாலே, இதற்குப் பயந்து வருத்தப்பட்டு இயேசு சபையை விட்டுப்போனார்களென்பது நிச்சயம். ஆகையால் இயேசு சபையின் மேலான கதியை எளிதாய் அடையும்படியாய் நாம் ஆத்தும தபசு செய்யவேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் வெகு கண்டிப்பாய்ப் போதித்து நாம் இடைவிடாமல் தவமுயற்சி செய்வதற்குவேண்டிய பிரயாசமெல்லாம் படவேணுமென்றும் ஆத்தும தபசு செய்வதே நமக்கு எப்போதும் முக்கியமான அலுவலாயிருக்க வேணுமென்றும் புத்தி சொல்லியிருக்கிறார்.





# அ-ம் அதிகாரம்.

தன்னை ஒறுக்கிறவன் தன்னைப் பகைக்காமல் தன் ஆத்துமத்தையும சரீரத்தையும் மெய்யாகவே சிநேகிக்கிறானென்று சொல்லுவது.

சுவிசேஷ போதனைக்கும் அர்ச்சியசிஷ்டவர்கள் சொன்ன புத்திக்கும் ஒத்த பிரகாரம் நம்மை நாமே பகைக்க வேணுமென்று நாம் முன்னமே சொன்னது சரியே. ஆனால் இது வருத்தமாகவும் நமது சுபாவத்துக்குப் பொருந்தாததாகவும் இருப்பதினாலே, ஒருவரும் அவநம்பிக்கைப் பட்டு ஒறுத்தலைக் கைவிடாதபடிக்கு நாம் மேற்சொன்னதுக்கு அர்த்தம் இன்னதென்று இங்கே விளக்கிக் காட்டுவோம். தன்னைத்தானே ஒறுக்கிறவன் தனக்குப் பொல்லாப்புச் செய்யாமலிருக்கிறதுமன்றி தன் ஆத்துமத்தையும் சரீரத்தையும் மெய்யாகவே சிநேகிக்கிறானென்றும் தன்னை ஒறுக்காதவன் தன் ஆத்துமத்தையும் சரீரத்தையும் மெய்யாகவே பகைக்கிறானென்றும் ஒப்பித்துக் காட்டுவோம். புத்தி சரீரத்தோடு சண்டை போடுகிறதென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றின வாக்கியத்தின் பேரில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: என் சகோதரரே, "புத்தி சரீரத்தோடு சண்டை போடுகிறதினாலே சரீரத்தைப் பகைக்கிறதென்று எண்ணாதேயுங்கள். சரீரத்தில் உள்ள துர்க்குணங்களை மாத்திரம் பகைக்கின்றது; சரீரத்தின் தாறுமாறான விவேகத்தைப் பகைக்கின்றது; ஆத்துமத்தைக் கொல்லுவதற்காகச் சரீரம் செய்கிற விரோதத்தை மாத்திரம் பகைக்கிறதென்றார். புத்தி சரீரத்தை ஒறுத்து அதுக்கு விரோதம் பண்ணும்போது, சரீரத்தை மெய்யாகவே சிநேகிக்கின்றது. இவ்வண்ணமே வைத்தியன் நோவாளியைப் பகைக்கிறதில்லை; அவனுடைய வியாதியை மாத்திரம் பகைக்கிறான்; அதுக்கு விரோதமாய் மாத்திரம் சண்டை போடுகிறான். நோவாளியைப் பகைக்காதிருக்கிறதுமன்றி அவனைச் சிநேகிக்கிறான். அரிஸ்தோத்தென்னும் சாஸ்திரி சொல்லுமாப்போலே, ஒருவனுக்கு நன்மை வரவேணுமென்று ஆசைப்படுகிறது அவனைச் சிநேகிக்கிறதென்று சொல்லப்படும். இவ்வண்ணமே ஒருவனுக்குப் பொல்லாப்பு வரவேணுமென்று ஆசிப்பது அவனைப் பகைக்கிறதென்று சொல்ல




வேண்டும். தன் சரீரத்தை ஒறுத்து அதின் ஒழுங்கற்ற பற்றுதலையும் ஆசையையும் விரோதிக்கிறவன் நித்திய இளைப்பாற்றியையும் நிலைநிற்கும் பாக்கியத்தையும் சரீரத்துக்கு வருவிப்பதினாலே, அதை மெய்யாகவே சினேகிக்கிறானென்னத்தகும். ஆனால் சரீரத்தைப் பேணி அதின் கெட்ட ஆசாபாசத்தின்படி நடக்கிறவன் நித்திய ஆக்கினையையும் வேதனையையும் தன் சரீரத்துக்கு வருவிப்பதினாலே, அதை மெய்யாகவே பகைக்கிறானென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்குமாப்போலே, பாவ தோஷத்தைச் சினேகிக்கிறவன் ஆத்துமத்துக்கு நரகத்தை வருவிக்கிறதினாலே அதைப் பகைக்கிறான்; அப்படிப்போலே பாவ தோஷத்தைச் சினேகிக்கிறவன் தன் சரீரத்துக்கு நரக ஆக்கினையை வருவிப்பதினாலே தன் சரீரத்தைப் பகைக்கிறானென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆகையால் புண்ணியவான்களும் நல்லவர்களும் பாவிகளைவிடத் தங்கள் ஆத்துமத்தையும் சரீரத்தையும் அதிகமாய்ச் சினேகிக்கிறார்கள் ; ஏனென்றால் அவர்கள் நித்திய பாக்கியமாகிற மெய்யான நன்மை சரீரத்துக்கு வரவேணுமென்று ஆசைப்பட்டு அதை வருவிக்கிறார்களென்று வேத சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். இதினிமித்தம் புண்ணியவான் தன் சரீரத்தை மற்றவர்களைப்போலே சினேகியாமல் மிகவும் மேலான உன்னத சினேகத்தோடு சினேகிக்கிறானென்று அர்ச். தோமாஸ் வசனித்தார்.

இரண்டு நோவாளிகளுடைய உதாரணத்தை எடுத்துக் காட்டினால், இச்சத்தியம் தெளிவாய் விளங்கும். ஒரு நோவாளி எனக்கு இரத்தம் வாங்கப் படாது ; நான் பேதிக்குச் சாப்பிடமாட்டேன் ; மருந்து குடிக்கமாட்டேனென்று தன் மனதுக்கானதெல்லாம் சாப்பிடுவான், குடிப்பான். வேறொருவனோவென்றால், புத்தியோடு பத்தியம் பிடிப்பான். எவ்வளவு பசியும் தாகமும் இருந்தாலும், இவன் ஒன்றும் சாப்பிடுகிறதுமில்லை, குடிக்கிறதுமில்லை ; எவ்வளவு கசப்பான மருந்து கொடுத்தாலும், அதுவெல்லாம் சாப்பிடுவான் ; எவ்வளவு வேதனையாயிருந்தாலும், அறுத்து இரத்தம் வாங்குவதற்குச் சம்மதித்துக்கொள்ளுவான். இப்படியிருக்க, இந்த வியாதிஸ்தன் தன் சரீர சௌக்கியத்துக்காகப் பத்தியம் பிடித்துப் பேதிக்குச் சாப்பிட்டுக் கொஞ்சம் வருத்தப்படுகிறதினாலே, தன் சரீரத்தை சினேகிக்கிறானென்பது மெய்யல்லோ ? முந்தின வியாதிஸ்தன் தனக்குக் கக்கிஷம் பண்ணிக் கொஞ்





சம் வருத்தப்பட மாட்டானென்கிறதினாலே, தன் சரீரத்தைக் கொல்லுகிறானென்று எல்லாரும் சொல்லுவார்களே. இவ்வண்ணமே அர்ச். பெர்நர்துசின் அதிகாரத்துக்குட்பட்ட சந்நியாசிகள் தங்கள் சரீரத்தை உபாதிக்கிறதினாலே, அதைப் பகைக்கிறார்களென்று சில சமுசாரவாசிகள் சொல்லும்போது, அவர் சொன்ன மறுமொழியாவது : நீங்கள் சொல்லுகிறது சரியல்ல ; உங்கள் சரீரத்துக்கு அழிந்துபோகிற சுகபோகங்களை வருவிப்பதற்காக அதை நித்திய உபாதைக்கு நீங்கள் உட்படுத்துகிறதினாலே, நீங்கள்தான் உங்கள் சரீரத்தைப் பகைக்கிறீர்கள் ; நம்து சந்நியாசிகளோவென்றால் தங்கள் சரீரத்துக்கு நித்திய இளைப்பாற்றியையும் பாக்கியத்தையும் பெறுவிப்பதற்காக அதைக் கொஞ்ச காலம் உபாதிக்கிறதினாலே, அதை மெய்யாகவே சிநேகிக்கிறார்களென்றார்.

இந்தச் சத்தியத்தைத் தேவசுதன் சுவிசேஷத்தில் போதித்திருக்கிறார். ஏனென்றால் நம்மைப் பின்செல்ல மனசுள்ளவன் தன்னை மறுதலித்துத் தன் சிலுவையைச் சுமந்துகொண்டு நம்மைப் பின்செல்லக் கடவானென்று சொன்னபின், இதற்கு ஞாயம் என்னவென்று காட்டுவதற்காக அவர் தானே சொன்னதாவது : தன் ஆத்துமத்தை ஈடேற்ற மனசுள்ளவன் அதை இழந்துபோவான் ; நமக்காகத் தன் ஆத்துமத்தை இழக்கிறவன் அதைக் கண்டுபிடிப்பானென்றார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். அகுஸ்தீன் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது : ஒகோ! இது எவ்வளவு ஆச்சரியத்துக்குரிய மேலான போதகம்! மனுஷன் தன் ஆத்துமத்தைச் சிநேகிக்கிறது அதை இழந்துபோகிறதற்குக் காரணமாகும் ; அவன் தன் ஆத்துமத்தைப் பகைக்கிறது அதை ஈடேற்றுவதற்குக் காரணமாகுமே! இதற்கு முகாந்தரமேதென்றால், அதை ஒழுங்கற்ற பற்றுதலோடு சிநேகிக்கிறவன் அதை மெய்யாகவே பகைக்கிறான் ; அதைத் தகுந்தபடி பகைக்கிறவன் அதுக்கு நித்திய பாக்கியத்தைப் பெறுவிக்கிறதினாலே, அதை மெய்யாகவே சிநேகிக்கிறான். இதினாலல்லோ இவ்வுலகத்தில் தன் ஆத்துமத்தைப் பகைக்கிறவன் அதுக்கு நித்திய சீவியத்தைப் பெறுவிக்கிறானென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். தன் ஆத்துமத்தை மிதமிஞ்சினவிதமாய்ச் சிநேகித்து அதைக் கெடுத்துப்போடாதபடிக்கு அதைத் தகுந்தபடி பகைத்துக் காப்பாற்றுகிறவர்கள் பாக்கியவான்கள். ஆகையால் மறுலோகத்தில் உன் ஆத்துமம் நித்திய கேட்டுக்கு உள்ளாகாதப





டிக்கு இவ்வுலோகத்தில் அதைச் சினேகியாதே யென்றார். இப்போது சொன்னதெல்லாத்தையும் ஒப்பித்துக் காட்டுவதற்காக வேறோர் ஸ்திரமான ஞாயத்தையும் மேற்சொன்ன அர்ச். அகுஸ்தீன் வெளிப்படுத்தியிருக்கிறார். அதென்னவென்றால், இரண்டு காரியத்தில் ஒன்றை அதிகமாய்ச் சினேகிக்கிறதினாலே, வேறொன்றைச் சினேகிக்கவில்லையென்று சொல்லப் படாது. இப்படியே உயிரைக் காப்பாற்றுவதற்காகக் கையையாகிலும் காலையென்கிலும் வாங்குவதற்குச் சம்மதிக்கிறவன் கையையும் காலையும் சினேகிக்கவில்லையென்று சொல்லப் படாது ; ஆனால் இதுகளைவிட உயிரை அதிகமாய்ச் சினேகித்து மேலான வஸ்துவைக் காப்பாற்றுவதற்காகக் கீழான வஸ்துவைக் கைவிடுகிறானென்று சொல்ல வேண்டும். அன்றியும் பொருளாசைக்காரன் பணத்தைச் சினேகித்து அதைக் காப்பாற்றுவதற்காக மகா மகாப்பட்ட ஆசையாய் இருப்பானென்பதற்குச் சந்தேகமில்லை ; ஆகிலும் பணத்தைப் பார்க்கத் தன் உயிரை அதிகமாய்ச் சினேகிக்கிறதினாலே, உயிர் பிழைப்பதற்கு அவசரமான காரியங்களைப் பணம் கொடுத்து வாங்குவான். ஆகையால் பணத்தைவிட உயிர் இவனுக்குப் பிரியமாயிருக்கிறதினாலே, உயிரைக் காப்பாற்றுவதற்காகப் பணம் போனாலும் பறவாயில்லையென்று நினைப்பான். இவ்வண்ணமே தன் சரீரத்தை ஒறுக்கிறவன் சரீரத்தைச் சினேகிக்கிறதில்லையென்று சொல்லப் படாது ; ஆனால் சரீரத்தைவிட ஆத்துமத்தை அதிகமாய்ச் சினேகித்து ஆத்துமத்தை ஈடேற்றுவதற்காகச் சரீரத்தை ஒறுத்து உபாதிக்கிறது அவசரமாயிருக்கிறதினாலே, அதை ஒறுத்து உபாதிக்கிறானென்று சொல்ல வேண்டும். இதினாலே தன் சரீரத்தைப் பகைக்கிறானென்று சொல்லப் படாது ; தன் சரீரத்தைப்பார்க்கச் சர்வேசுரனையும் தன் ஆத்துமத்தையும் புண்ணிய சாங்கோபாங்கத்தையும் நித்திய சீவியத்தையும் அதிகமாய்ச் சினேகிக்கிறானென்று சொல்ல வேண்டும்.





## ௬-ம் அதிகாரம்.

தன்னை ஒறுக்காதவன் கிறீஸ்துவனுக்கும் மனுஷனுக்கும் யோக்கியமானவிதமாய் நடக்கிறதில்லையென்று சொல்லுவது.

அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: மிருகங்களுடைய நடக்கை ஓர் விதமானது; சம்மனசுகளுடைய நடக்கை வேறே மாதிரி; மனுஷருடைய நடக்கை இன்னொரு வகை. மிருகங்களுடைய நடக்கை முழுதும் பூமியை நாடியிருக்கும்; தங்களிச்சைப்படி நடக்கிறதே அதுக்கு வேலை. சம்மனசுகளுடைய நடக்கை முழுதும் மோக்ஷத்துக்குரியது; சர்வேசுரனோடு ஒன்றிக்கிறதே அவர்களுக்கு அலுவல். மனுஷருடைய நடக்கையோவென்றால், மிருகங்களுடைய நடக்கைக்கும் சம்மனசுகளுடைய நடக்கைக்கும் நடுத்தரமானது. மனுஷன் புத்திக்கேற்க நடந்தால், சம்மனசுகளுக்கு ஒப்பாவான்; சரீரத்துக்கேற்க நடந்தால், மிருகங்களுக்குச் சரியாவானென்றார். இங்கே அர்ச். அகுஸ்தீன் சொன்னது அர்ச். அம்புரோசியார் சொன்னதற்கு ஒத்திருக்கும். அதென்னவென்றால், சரீர இச்சைப்படி நடக்கிறவன் சரீரந்தான்; தேவ கட்டளைப்படி நடக்கிறவன் அசரீரியென்றார். ஆகையால் சரீர இச்சையின்படி நடக்கிறவன் புத்தியுள்ள மனுஷனுக்கு அடுத்த நடக்கையாய் நடவாமல் மிருகங்களைப்போலே நடக்கிறான். நாம் ஒறுத்தலென்னும் புண்ணியத்தை அநுசரிக்க ஆசைப்படுவதற்கு இந்த ஞாயமே போதும்; ஏனென்றால் சர்வேசுரனுடைய சாயலாகவும் நித்திய காலமாய் அவரைச் சுகித்தநுபவிப்பதற்காகவும் உண்டாக்கப்பட்ட பிரபுவாகிய மனுஷன் சரீரத்துக்கும் இந்திரிய இச்சைக்கும் அடிமைப்பட்டுச் சரீரத்துக்குக் கீழ்ப்படிந்து மிருகங்களுக்குரிய துர் இச்சைப் பிரகாரம் நடந்து மிருகங்களுக்கு ஒத்தவனாகிறதைவிட அதிக அயோக்கியமான இலச்சை கெட்ட தனம் எங்கேயாகிலும் உண்டோ? எசமாட்டி கீழ்ப்படிகிறதும் அடிமை அவளை ஆளுகிறதும் புத்திக்கடாத காரியமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். அடிமைகள் குதிரையில் ஏறிப் போகிறதையும் வம்மிஷபதிகள் அடிமைபோலே கால் நடையாய் நட-






க்கிறதையும் கண்டேனென்று சலோமோன் சொல்லிக்காட்டின தாறுமாறு இதுதானே. ஒரு மிருகம் மனுஷனைப் பிடித்து இறுகக் கட்டித் தன் மனசுபோலே எங்கும் இழுத்துக்கொண்டு போகிறது சுபாவத்துக்கடாத காரியமல்லோ? இதைக் கண்டவர்கள் எல்லாரும் ஆச்சரியப்படுவார்களே. ஆகிலும் மிருகத்துக்குரிய தங்கள் ஆசாபாசங்களால் இழுபட்டு அதற்கு அடிமையாயிருக்கிறவர்கள் எந்த அந்தஸ்திலும் வெகு பேருண்டு. அவர்கள் வெகு பேராயிருக்கிறதினாலே, அவர்கள் செய்கிற இந்த நீசத்தனத்தைக் கண்டு ஒருவரும் ஆச்சரியப்படுகிறதில்லை. இப்படி ஆச்சரியப்படாமலிருக்கிறதும் பிரலாபத்துக்குரிய பெரிய பொல்லாப்பாகும். தியோஷேனென்னும் சாஸ்திரியின்பேரில் சொல்லியிருக்கிற சங்கதியாவது : அவன் ஓர் நாள் பட்டப்பகலிலே விளக்கைக் கொளுத்திக் கையிலே பிடித்துக்கொண்டு என்னத்தையோ தேடுகிறவனைப்போலே அத்தேன் பட்டணத்துத் தெருவிலே போனான். என்ன தேடுகிறாயென்று ஒருவன் அவனைக் கேட்டதற்கு மனிதனைத் தேடுகிறேனென்றான். அதற்கு அவன் சொன்னதாவது : தெரு நிறைய மனுஷர் நடக்கிறார்களே ; அவர்களைக் காணவில்லையாவென்றான். அப்போது தியோஷேன் சொன்னதாவது : நீ சொல்லுகிறது சரியல்ல ; இவர்கள் மனுஷரல்ல, மிருகங்கள் ; ஏனென்றால் மிருகத்துக்குரிய தங்கள் ஆசாபாசங்களை இவர்கள் பின்சென்று நடக்கிறதினாலே, மனுஷரைப்போலே நடக்கிறதில்லை, மிருகத்தைப்போலே நடக்கிறார்களென்றான்.

அர்ச். அகுஸ்தீன் இன்னம் இது காரியத்திலே கூத்தாடி வித்தையிலிருந்து ஓர் உவமையைச் சொல்லிக் காட்டியிருக்கிறார். இச்சத்தியத்தை நன்றாய்த் தெளிவித்துக் காட்டுவதற்கு அது உதவும். அதென்னவென்றால், சரீரம் தன்னை ஆட்கொள்ள விடுகிறவன் தலைகீழாகவும் கால் மேலாகவும் நடக்கிறவனைப்போலே சர்வேசுரனுடையவும் சம்மனசுகளுடையவும் கண்ணுக்குக் காணப்படுவானென்றார். இதைவிட இகழ்ச்சியும் புத்திகெட்டதனமும் ஏதாகிலுமுண்டோ? புத்தியைச் சரீரத்துக்குக் கீழ்ப்படுத்தித் தினந்தோறும் இப்படிக்கொத்த அயோக்கியமான நடக்கை நடக்கிறவர்கள் வெகு பேர் உண்டு. இவர்கள் இதின்பேரில் வெட்கப்படுகிறதில்லை. என் சரீரத்துக்கு அடிமைப்படுகிறதற்காகவல்ல, மேலான மகிமைக்காக நான் பிறந்திருக்கிறேனென்று சேனேக்காவென்பவன் சொன்னதினாலே, அவன் தன்பேரில் சரியான

எண்ணமுற்றிருந்தானென்று தெரியவரும். இந்த வார்த்தை சகல கிறீஸ்துவர்கள் சந்நியாசிகளுடைய இருதயத்திலும் எழுதியிருக்க வேண்டும். சுபாவ புத்தியை மாத்திரம் உடைய அஞ்ஞானியான சேனேக்காவென்பவன் இது வெட்கத்துக்குரிய காரியமென்று எண்ணியிருக்க, விசுவாச வெளிச்சத்தை அடைந்திருக்கிற கிறீஸ்துவனும் வெகு தேவ வரங்களாலும் வரப்பிரசாதங்களாலும் பூரிக்கப்பட்டிருக்கிற சந்நியாசியும் இது வெட்கத்துக்குரிய காரியமென்று நிச்சயித்துக்கொள்ள வேண்டாமோ? ஆகையால் இப்படி வெட்கப்படாதவனுக்குப் புத்தி முழுதும் அற்றுப்போயிற்றென்று சொல்லத் தகும். மனுஷனொருவன் மிருகமாக மாறித் தான் இப்படி மாறிப்போனதாக அறிந்துகொள்ளாமலும் கஸ்திப்படாமலுமிருந்தால், இதின் பேரில் எவ்வளவு ஆச்சரியப்படுவோம். இதைப் பார்க்க மேற்சொன்ன வெட்கமில்லாதவன் பேரில் அதிகமாய் ஆச்சரியப்படவேணுமென்று அர்ச். அகுஸ்தீன் திருவுளம்பற்றினார்.

காலியான் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது: நான் சிறு பிள்ளையாயிருக்கும்போது, ஒருவன் திறவுகோலைக் கையில் பிடித்துக்கொண்டு ஒரு கதவைத் திறக்க ஓடினான். ஆனால் பதஷ்டத்தினாலே திறவுகோல் பூட்டுக்குள்ளே சிக்கிக்கொண்டதினிமித்தம் அவன் கோபவெறிகொண்டு திறவுகோலைப் பல்லாலே கடித்துத் திருப்பிக் கதவைக் காலாலே உதைத்து உடைக்கப் பார்த்தான். அதின்பின் தேவதூஷணம் சொன்னான்; அவன் வாயிலிருந்து நுரை தள்ளிக் கோபத்தினாலே கண்ணிரண்டும் இரண்டு விளக்குப்போலே எரிந்து தலையிலிருந்து புறப்படப்போகிறதாகத் தோன்றினது. இதைக் கண்டு கோபத்தின் பேரில் எனக்கு வெகு அருவருப்புண்டாகி இவனைப்போலே கோபவெறி கொள்ளாதபடிக்குப் பயந்து அன்றுமுதல் ஒருகாலும் நான் கோபித்ததேயில்லையென்றார். நமது ஆசாபாசங்களுக்கு இடங்கொடாமல் புத்தியுள்ள மனுஷர்போலே நடப்பதற்கு இதுவெல்லாம் உதவியான போதகமாமே. ஊஸ் என்னும் நாட்டில் யோபென்னும் பேருடைய ஓர் மனுஷனிருந்தானென்று யோபன் ஆகமத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். எரோணிமுஸ் எழுதிவைத்ததாவது: இவர் மெய்யாகவே மனுஷனாயிருந்தார்; ஏனென்றால் இவருடைய சரீரம் இவர் புத்தியை ஆளவில்லை; இவருடைய கிரிகைகளெல்லாம் புத்தியின் அதிகாரத்துக்குட்பட்டிருந்ததென்றார். இதினா





லல்லோ உன் ஆசாபாசம் உனக்குக் கீழ்ப்பட்டிருக்கும். நீ அதை ஆளுவாயாகவென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது.

---

## ய-ம் அதிகாரம்.

———(o)———

**தன்னை ஒறுக்கிறதைவிட ஒறுக்காமலிருக்கிறது அதிக வருத்தமென்று சொல்லுவது.**

——:(o):——

ஒறுத்தல் எவ்வளவு அவசரமும் பிரயோசனமுமான புண்ணியமென்று இப்போது நன்றாய்க் கண்டு பிடித்துக்கொண்டேன் ; ஆனால் என்னை ஒறுக்கிறது வருத்தமாயிருக்கிறதினாலே, ஒறுத்தல் முயற்சி செய்ய எனக்கு மனம் வரவில்லையென்று சொல்லுவாயாக்கும். முந்த முந்த அர்ச். பசிலியார் இதற்குச் சொல்லுகிற மறுமொழியைக் கேள்: சௌக்கியத்துக்காக மிகவும் கசப்பான மருந்து குடித்துச் சரீரத்தைக் கொடூரமாய் அறுத்துச் சத்திரம் வைப்பதற்குச் சம்மதித்துக்கொள்ளுகிறோமே. ஆஸ்தி சம்பாதிப்பதற்காக மனுஷர் கடலிலும் கரையிலும் எத்தனை ஆபத்துக்குள்ளாகி என்னென்ன விக்கினங்களையும் செயித்து எவ்வளவு பிரயாசப்படுகிறார்கள் ! இது இப்படியிருக்க, நமது ஆத்தும சௌக்கியத்துக்காகவும் நித்திய ஆஸ்தி சம்பாதிப்பதற்காகவும் என்னதான் செய்தாலும் போதுமோ ? இதற்காக எந்த வருத்தத்துக்கும் பயப்படாமல் எதையும் துணிந்து செய்வது ஞாயமல்லோ ? ஆகிலும் வருத்தத்தையும் பிரயாசத்தையும் விலக்கி நடக்கிறது நமக்குச் சுபாவமாயிருப்பதினாலேயும், கஸ்தி வேதனைப்படுகிறது முழுதும் அவசரமாயிருந்தபோதிலும், எவ்வளவு சொற்பக் கஸ்திபடக்கூடுமோ, அவ்வளவுதான் படுவதற்கு நமக்கு மனசிருப்பதினாலேயும் ஒறுக்கிறதைப் பார்க்க ஒறுக்காமலிருக்கிறது அதிக வருத்தமென்று விளக்கிக் காட்டுவோம். இதினாலல்லோ கர்த்தாவே, உமது தேவகட்டளையினாலே ஒழுங்கற்ற மனுஷன் தனக்குத் தானே வேதனையாயிருக்கிறானென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆசாபாசம் புத்திக்கு அடங்காமலும் புத்தி சர்வேசுரனுக்கு அடங்காமலுமிருந்தால், மனுஷனுக்கு வெகு வருத்





தமும் மனக்கலக்கமும் உண்டாகும். உலகத்தில் நடக்கிறதை யோசித்துப் பார்த்தால், இந்தச் சத்தியம் வெளிப்படும். ஏனென்றால் ஒரு வஸ்து தனக்குச் சுபாவமான அந்தஸ்தில் இராவிட்டால், அது எவ்வளவு கலக்கமுற்றுக் கஸ்திப்படுமென்று பார். மூழி பிசகின எலும்பினாலே எவ்வளவு வேதனையுண்டாகும்; தனக்குரிய சுபாவ அந்தஸ்தில் இராத வஸ்து எவ்வளவு பலவந்தப்படுமென்று பார். இவ்வண்ணமே புத்திக்கொத்த பிரகாரம் நடப்பது மனுஷனுக்குச் சுபாவமான காரியமாகக்கொள்ள, அவன் புத்திக்கு விரோதமாய் நடந்தால், அவன் மனசு அவனை விரோதித்து அவன் மனச்சாட்சி இடைவிடாமல் அவனுக்கு விரோதமாய்க் கத்திக்கொண்டிருக்கும். இதினாலல்லோ சர்வேசுரனை விரோதிக்கிறவனுக்கு மனசமாதானம் உண்டோவென்று யோபென்னும் மகாத்துமா வசனித்தார். தன்னை ஒறுக்காதவனிடத்திலே மனசமாதானம் உண்டாகுமென்று நம்புவதற்கு அடைமானமில்லை. இதினிமித்தமாக மிருகத்தை ஆராதிக்கிறவர்களுக்கு இரவும் பகலும் அற்ப அமரிக்கையும் கிடைக்கவில்லையென்று காட்சியாகமத்தில் அர்ச். அருளப்பர் வசனித்தார். உன் சரீரமும் இந்திரிய இச்சையுந்தான் இந்த மிருகம்; நீ அது சொன்னபடி கேட்டால், ஒருகாலும் மன அமரிக்கையை அநுபவிக்க மாட்டாய்.

சரீரக் கூறுபாடு சரியாயிருந்து அதிலுள்ள பித்தம் தகுந்த அளவு பிரமாணமாயிருந்தால், நல்ல சௌக்கியமுண்டாகுமென்று வைத்தியர் சொல்லுகிறார்கள். இந்த அளவு பிரமாணம் மாறிப்போனால், சரீரத்திலுள்ள மிதமிஞ்சின பித்தத்தினாலே வேதனையும் வியாதியுமுண்டாகும். ஆனால் அந்தப் பித்தம் மட்டுத் திட்டமாயிருந்தால், சரீரத்துக்கு ஆச்சரியமான சௌக்கியமுண்டாகிச் சந்தோஷமும் பெலனும் வரும். ஆத்தும சௌக்கியத்தின்மட்டிலும் சொல்லவேண்டியது இதுவே. ஆத்துமத்துக்குப் பித்தம்போலேயிருக்கிற ஆசாபாசங்களை அடக்கி ஒழுங்குபடுத்தினால், அதுக்குச் சௌக்கியம் வரும். ஆசாபாசங்களை ஒறுத்து மட்டுப்படுத்தாதேபோனால், அது ஞான வியாதியை வருவிக்கும்; ஆனால் ஆசாபாசங்களை அறுத்து ஒழுங்குபடுத்தினபின், ஆத்துமம் முழுச் சௌக்கியத்தையும் மன அமரிக்கையையும் சந்தோஷத்தையும் சுகித்தநுபவிக்கும். இன்னமும் மனுஷன் இருதயத்திலுள்ள ஆசாபாசங்களைக் கடலில் அடிக்கும் காற்றுக்கு ஒப்பிடுகிறது வழக்கம். ஏனென்றால் காற்று கடலை அலைக்கழித்து அமரிக்கையைக் கு






றைப்பதுபோலே, நமது ஆசாபாசங்களும் ஒழுங்கற்ற பற்றுதலும் துர் இச்சையும் நமதிருதயத்தில் புசலை எழுப்பி மனஅமரிக்கையைக் குலைக்கும். சிலவிசை நமதிருதயத்தில் கோப புசல் எழும்பும் ; சிலவிசை ஆங்காரம் வீண் மகிமையாகிற காற்று பெலன்கொண்டு வீசி நம்மை வெகுதூரம் அடித்துக்கொண்டுபோகும்; சிலவிசை பொறுமை, சிலவிசை காய்மகாரமாகிற புசல் எழும்பி நமதிருதயத்தை உபாதிக்கும். இதினாலல்லோ கெட்டவர்கள் அமரிக்கையில்லாமல் அலைக்கழிக்கப்பட்ட கடலைப்போலிருக்கிறார்களென்று இசாயியாஸென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். ஆனால் காற்று அமர்ந்தவுடனே அமரிக்கையுண்டாகும். இதினிமித்தம் இயேசுநாதர் காற்றுக்கும் கடலுக்கும் கட்டளையிடவே, மிகுந்த அமரிக்கையுண்டானதென்று சுவிசேஷத்தில் சொல்லியிருக்கின்றது. ஆகையால் உன் ஆசாபாசங்களையும் ஒழுங்கற்ற பற்றுதலையும் ஒறுத்துச் சரீரத்தைக் கீழ்ப்படுத்தி அதை ஆண்டுகொண்டுவந்தால், ஆச்சரியமான மனசமாதானத்தையும் அமரிக்கையையும் சுகித்தநுபவிப்பாய் ; ஆனால் இவ்விதமாய் அதை நீ அடக்காதிருக்குமட்டும் இடைவிடாத புசலாகிற மனக்கலக்கத்துக்குள்ளாயிருப்பாய். தன்னை ஒறுத்துப் பாரமான சிலுவையைச் சுமந்துகொண்டுபோகிறவனைவிடத் தன்னை ஒறுக்காதவனிடத்தில் அதிக வருத்தமுண்டாயிருக்குமென்று இன்னம் தெளிவாய்க் காட்டுவதற்காக நாம் தினந்தோறும் அநுபவசித்தியினால் அறிந்திருக்கிற சில விசேஷங்களைப் பற்றும் பற்றாய் யோசித்துப் பார்க்கக் கடவோம். நீ கோபத்துக்கும் பொறாமைக்கும் இடங்கொடுத்து உன் சகோதரருக்குக் கஸ்தியான வார்த்தை சொல்லித் துர்மாதிரிகை காட்டியிருந்தால், அதில்பின் உன் ஆத்துமத்தில் என்ன நடக்கிறதென்று யோசித்துப் பார். அதினாலே எவ்வளவு கஸ்தி கலக்கம் சலிப்பு உன்னிடத்தில் உண்டாகும் ? உன் கோபத்தை ஒறுத்து அடக்குவதற்கு நீ படவேண்டிய வருத்தத்தைப் பார்க்க அந்தக் கோபத்துக்கு நீ இடங்கொடுத்ததினாலே வருகிற வருத்தம் அதிகமென்று உனக்குத் தோன்றவில்லையா ? அன்றியும் ஒறுத்தலென்னும் புண்ணியமும் சிரேஷ்டர் கற்பிக்கிறதெல்லாத்தையும் செய்துமுடிப்பதற்கு எப்போதும் ஆயத்தமாயிருக்கிற அமைதலென்னும் புண்ணியமும் இல்லாத சந்நியாசி எவ்வளவோ பயந்து நடுங்கிக்கொண்டிருப்பான் ? எதையாகிலும் செய்கிறது அவனுக்கு அருவருப்பாயிருந்தால், எங்கே சிரேஷ்டர் அதைச் செய்யவேணுமென்று கற்பிக்கப் போகிறாரோவென்று அஞ்சிக்கொண்டிருப்பான். சிரேஷ்டர் அதை இவனு



க்குக் கட்டளையிடவேணுமென்று நினையாதிருந்தாலும், சிலவிசை அதைக் கட்டளையிடுவாரோ என்னமோவென்று இடைவிடாமல் கலங்கிக்கொண்டிருப்பான். காலிலும் கையிலும் சூலை வியாதியுள்ளவன் தன்னைச் சுற்றியிருக்கிற வஸ்துக்கள் எங்கே காலிலே குத்திக் காயப்படுத்துமோவென்று எந்நேரமும் பயப்படுகிறது வழக்கம். இவ்வண்ணமே ஒறுத்தலென்னும் புண்ணியமில்லாத சந்நியாசி தனக்கு வருத்தமானதெல்லாத்தையும் சிரேஷ்டர் எங்கே கற்பிக்கப் போகிறாரோவென்று எந்நேரமும் பயந்துகொண்டிருப்பான். தனக்கிடுகிற வேலையெல்லாம் செய்வதற்குத் தயாராய் அமைந்திருக்கிற சந்நியாசி எப்போதும் சந்தோஷமும் மன அமரிக்கையுமாயிருந்து ஒன்றுக்கும் பயப்படமாட்டான். மகிமை பெருமையின்பேரில் பிரியமுள்ளவன் எவ்வளவு கஸ்திப்படுவானென்று பார். மற்றவர்கள் அவனை மறந்து அவனைச் சட்டைபண்ணாமல் இருக்கிறதையும் மகிமை பெருமைக்குரிய அலுவல் தனக்கு வராதிருக்கிறதையும் கண்டு எவ்வளவோ மனவருத்தப்படுவான்? அவனுடைய ஆங்காரத்துக்குப் பிரியமான அலுவல் அகப்பட்டு அதைச் செய்யுந்தருணத்தில் எங்கே அதை நன்றாய்ச் செய்யாமல் போகிறேனோ? நான் ஆசித்து அடையத்தேடுகிற மகிமை புகழ்ச்சி எனக்கு வராமல் எங்கே அவமானமும் வெட்கமும் எனக்கு வருமோவென்று எவ்வளவு மனம் கலங்குவான்! அவனுடைய ஆங்காரம் எவ்விதத்திலும் அவனை உபாதிக்கும். இங்கே ஆங்காரத்தைக் குறித்துச் சொன்னது வேறெந்தத் துர்க்குணத்தையும் குறித்துச் சொல்லலாம். உன் ஆசாபாசத்தை ஒறுப்பதற்கு நீ உழைக்காதிருக்குமட்டும் அது இடைவிடாமல் உன்னை உபாதிக்கிற கொலைபாதகனைப்போலே இருக்கும். உன் துர்க்குணத்தினாலே நீ ஆசிக்கிறது உனக்கு அகப்பட்டாலுஞ்சரி, அகப்படாதே போனாலுஞ்சரி, உன் துர்க்குணம் எப்போதும் உன்னை உபாதிக்கிற கொலைபாதகனைப்போலிருக்கும். ஏனென்றால் நீ துர்க்குணத்தினாலே அபேக்ஷிக்கிறது நிறைவேறுவதற்குமுன் உண்டாகிற தாமதம் உன்னை உபாதிக்கும். நீ அபேக்ஷித்ததை அடைந்து அதைச் செய்துமுடித்தாலும், சந்நியாசியாகிய உனக்கு இதினாலே கஸ்தியும் வருத்தமும் உண்டாகும். என்ன! நான் விரும்பினதைச் செய்துமுடித்தேனென்பது மெய்தான்; ஆனால் இது காரியத்திலே என் சுயமனதையும் சுயபிரியத்தையுமாத்திரம் தேடினதினாலே எனக்குப் பேறுபலன் ஒன்றுமில்லையென்று நினைக்கவே, உன் சந்தோஷமெல்லாம் கஸ்தியாக மாறிப்போகும்.





தன்னை ஒறுக்காமலும் தன் கடமையை நிறைவேற்றாமலும் இருக்கிறவனுடைய மனச்சாட்சியிலே எப்போதும் குடிகொண்டிருக்கிற வருத்தம் எவ்வளவென்று பார். புண்ணியத்திலும் சாங்கோபாங்கத்திலும் வர்த்திப்பதற்காக மாத்திரம் சந்நியாசத்தில் பிரவேசித்தவன் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு உழைக்காதிருந்தால், அவன் மனசில் என்ன சந்தோஷம் இருக்கக்கூடும்? அவன் உள்ளத்தில் வெகு கஸ்தியும் வருத்தமுமில்லாதிருப்பது கூடாத காரியமாமே. எந்தெந்த அந்தஸ்தில் உள்ளவர்களும் தங்கள் கடமையை நிறைவேற்றாதேபோனால், இப்படிக் கஸ்தியும் வருத்தமும் அவர்களை உபாதிக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் எப்போதும் மனச்சாட்சியாகிற புழு நம்மெல்லாரிடத்திலேயுமுண்டு. நாம் செய்யவேண்டியதைச் செய்யாமல் போனால், அது நமதிருதயத்தை அரித்துக்கொண்டேயிருக்கும். நமது கடமையைச் சரியாய் நிறைவேற்றி நம்மை நாமே ஒறுத்துப் புண்ணியத்தில் சுறுசுறுப்பாய் நடப்பதற்குப் படவேண்டிய வருத்தமெல்லாம் சேர்த்து ஒரு திராசுத் தட்டிலேயும் மேற்சொன்ன வருத்தப்படாமல் புண்ணியத்தில் அசமந்தமாய் நடப்பதினாலே வரும் வருத்தமெல்லாம் கூட்டி வேறே தட்டிலேயும் வைத்தால், ஒறுத்தலும் புண்ணிய சுறுசுறுப்பும் இல்லாதவர்களுக்கு வருகிற கஸ்தியும் வருத்தமும் அதிகமாயிருக்கிறதாகக் கண்டுகொள்ளலாமென்று அவிலாவென்னும் மகாத்துமா வசனித்தார். ஒறுத்தலும் புண்ணிய சுறுசுறுப்புமற்ற சந்நியாசி மனசு போலே பேசிப் புழங்கி வீண் விளையாட்டிலே காலம் போக்கிச் சுகத்தை நாடித் தன் சுயமனசுபோலே நடந்து வருகிறதினாலே, அவனுக்குண்டாகிற சந்தோஷத்தையும் மனத்திருத்தியையும் பார்க்கத் தன்னை ஒறுத்து உருக்கத்தோடு சர்வேசுரனுக்கு ஊழியம் பண்ணுகிறவன் ஒருசந்தி உபவாசத்திலும் செபத்தியானத்திலும் ஒறுத்தல் முயற்சியிலும் அதிக சந்தோஷத்தையும் மனத் திருத்தியையும் சுகித்தநுபவிப்பான். இது ஆச்சரியமான காரியமல்லோ? ஒறுத்தலும் புண்ணிய சுறுசுறுப்புமில்லாத சந்நியாசி வெளிப் பார்வைக்குச் சந்தோஷமாயிருப்பான்; அவன் உள்ளத்தில் கசப்பான கஸ்தி குடிகொண்டிருக்கும். ஆனால் ஒறுத்தலும் புண்ணிய சுறுசுறுப்புமுள்ள சந்நியாசி வெகு வருத்தப்பட்டாலும், இருதயத்தில் எப்போதும் பரிசுத்த ஆனந்த அக்களிப்பைச் சுகித்தநுபவிப்பான். இதினாலல்லோ சோம்பேறிகளுடைய பாதை முள் அடைந்த வேலிபோலிருக்கிறதென்று ஞானியானவர் வசனித்தார். அதாவது, இவர்கள் என்னென்ன செய்தாலும், எப்போது




ம் முள்ளின்மேல் நடக்கிறதுபோல் நடப்பார்கள். இதோ உங்கள் பாதையைச் சுற்றி முள்ளடைத்தோமென்று சர்வேசுரன் ஒசேயேயென்னும் தீர்க்கதரிசி வாயாலே திருவுளம்பற்றின வாக்கியம் இவர்களுக்கே செல்லும். இவர்கள் தங்கள் மனசுபோலே நடக்கிறதினால் உண்டாகிற சந்தோஷத்திலும் மனத்திருத்தியிலும் கஸ்தியும் கசப்பும் கலந்திருக்கவேணுமென்று சர்வேசுரன் தீர்மானித்திருக்கிறார். இதினாலேதான் புண்ணிய சுறுசுறுப்பற்றவர்கள் முள் தங்களை எங்கும் குத்தி இருதயத்தை ஊடுருவுகிறதென்று கண்டு கஸ்திப்படுகிறார்கள். ஆனால் நீதிமான்களாகிய புண்ணியவாளர் நடக்கிற பாதையிலே கால் இடறுகிறதற்கு ஒன்றுமில்லை ; அந்தப் பாதையெல்லாம் செப்பனிட்டிருக்கின்றது. மெய்யாகவே தன்னை ஒறுத்துப் புண்ணியத்தில் வர்த்திக்கப் பிரயாசப்பட்டு மெய்யான சந்நியாசி செய்யவேண்டியதெல்லாம் செய்துகொண்டுவருகிறவனிடத்தில் எவ்வளவோ மனசமாதானமும் திருத்தியும் உண்டாயிருக்கும்! இதுக்குச் சரியான சந்தோஷம் இவ்வுலோகத்தில் எங்குங் கிடையாது. தேவ ஊழியத்தில் நாம் சுறுசுறுப்போடு நடக்கும்போது, வாக்குக்கெட்டாத சந்தோஷமும் மனத் திருத்தியும் சுகித்தநுபவிக்கிறோமென்றும், தேவ ஊழியத்தில் அசதியும் அசமந்தமுமாயிருக்கும்போது, மனஞ் சோர்ந்து கஸ்திப்படுகிறோமென்றும் தினந்தோறும் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிறோமல்லோ? நாம் இனிமேல் சொல்லப்போகிறதுபோலே, சிலவிசை நம்மிடத்தில் உண்டாகும் கஸ்திக்கும் வருத்தத்துக்கும் அநந்தமுறை இதுவே காரணம். ஆகையால் சொற்ப வருத்தத்துக்குப் பின்வாங்கி வெகு வருத்தத்தை நமக்கு வருவித்துக்கொள்ளுகிறோம். இதினாலல்லோ கொஞ்சப் பனிக்குப் பயப்படுகிறவன்மேலே கனத்த பனி பெய்யுமென்று யோபென்பவர் வசனித்தார். வருத்தத்துக்குப் பயந்து ஒறுத்தலென்னும் புண்ணியத்தை நான் அநுசரிக்கவில்லையென்று சொல்லுகிறாயே. நாமோவென்றால் வருத்தம் உன்னைவிட்டு நீங்கி நீ மன சமாதானத்தை அநுபவிக்கும் பொருட்டு உன்னை நீயே ஒறுக்க வேணுமென்று சொல்லுகிறோம். இதுவுமன்றி ஒறுத்தலினாலே இன்னம் வேறே அநேக பிரயோசனமும் வருமென்கிறதினாலே, உன்னை ஒறுத்துக்கொள்ளுகிறதற்கு எவ்வளவோ முகாந்திரமுண்டு!

——(:o:)——

## ௰௪-ம் அதிகாரம்.

———0000———

ஒறுத்தல் முயற்சி இன்னதென்று சொல்லுவது.

———◆———

நமது சுயமனசை வெறுத்துவிட்டு ஆசாபாசங்களுக்கு விரோதம்பண்ணிச் சரீர சுகத்தை நாடாமலும் அது கேட்கிறது ஒன்றையும் கொடாமலுமிருக்கப் பிரயாசப்படுகிறதே நம்மை ஒறுத்துச் செயங்கொள்ளுவதற்கு நாம் செய்யவேண்டிய பிரதான ஆயத்தமாகும். இப்படி நடந்தால், கொஞ்சங் கொஞ்சமாய் நமது சுபாவ குணத்தைச் செயித்துத் துர்க்குணத்தையும் ஆசாபாசங்களையும் வேரோடு பிடுங்குவோம் ; அப்போது புண்ணியம் நமதாத்துமத்தில் இறங்கி ஸ்திரப்படும். அர்ச். தொரோத்தேயர் இது காரியத்தில் மிகவும் பிரயோசனமான ஓர் புத்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், யாதொரு ஆசாபாசம் அல்லது கெட்ட பற்றுதல் உன்னை வருத்தப்படுத்தும்போது, நீ அதற்கு இடங் கொடுத்து அது சொல்லுகிறபடி நடந்தால், அது உன் ஆத்துமத்தில் அதிகமாய் வேரூன்றிப் பெலப்பட்டு உன்னோடு அதிக கொடூரமான சண்டை போட்டு உன்னை மிகவும் வருத்தப்படுத்துமென்று நிச்சயமாய் அறிந்துகொள் ; ஆனால் துவக்கத்திலேதானே நீ அதை எதிர்த்து நின்றால், உன்னோடு யுத்தம் பண்ணுவதற்குத் தினந்தோறும் அதற்குப் பெலன் குறைந்து கடைசியாய் அதினுடைய சத்துவமெல்லாம் அற்றுப்போய் உன்னை வருத்தப்படுத்தாது.

நாம் இனிமேல் சொல்லப்போகிறதுபோலே, சோதனையைச் செயிப்பதற்கு இது வெகு உதவியான புத்தியாகும். துவக்கத்திலேதானே சோதனையைச் செயிக்கிறது மிகவும் அவசரமென்பதற்குச் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் கெட்ட வழக்கம் நம்மிடத்தில் ஸ்திரப்பட்டுக் கனமான குற்றத்தில் நம்மை விழத்தாட்டும். கோபவெறி கொண்ட முரட்டுக் குதிரைமேல் ஏறின மாவுத்தன் தன் கெட்டிக்காரத்தனத்தினாலேயும் தைரியத்தினாலேயும் அதை அடக்கித் தன் மனசுபோலே நடத்துவானல்லோ ? அப்படிப்போலே நாமும் நமது சரீரத்தை அடக்கி நடத்தவேணுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். கடிவாளத்தை எப்போதும் இறுக்கிப் பிடித்துக்கொண்டு நே

ரத்துக்கு நேரம் குதி முள்ளாலே குற்றவேண்டும். இப்படிச் செய்தால், உன் சரீரத்தை அடக்கி உன் மனசுபோலே அதை நடத்தி நீ விரும்புகிற புண்ணியத்திலெல்லாம் அதைப் பழக்குவாய். ஆனால் உன் சரீரத்தை ஒடுக்கி நடத்துவதற்கான பெலனும் சாமர்த்தியமும் உன்னிடத்தில் இல்லாவிட்டால், அது உன்னை ஆட்கொண்டு யாதொரு பாதாளத்திலே உன்னைத் தள்ளாமல் விடமாட்டாது. குதிரை தன் சுய இச்சைபோல் நடக்க விரும்பும்போது, அதை ஒரு காரியத்திலும் தன் சுய இச்சைபோல் நடக்கவிடாமல் ஒடுக்குவதே அதைத் திருத்துவதற்கான வழிபாடாகும். நமது சரீர இச்சையையும் கெட்ட பற்றுதலையும் அடக்கி ஒடுக்குவதற்கு நாமும் இப்படி நடக்க வேண்டும். அது மனசுபோலே எள்ளளவேனும் நடப்பதற்கு இடங்கொடாமல் அதை விரோதிக்க வேண்டும். அதில் ஆசாபாசமும் கெட்ட பற்றுதலும் எழும்பும்போது, எப்போதும் அதைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு விடாமலிருக்க வேண்டும்.

நமது சரீரமும் இந்திரிய இச்சையும் துர்க்குணமும் நமக்கு எல்லாத்தையும்விடப் பெரிய சத்துரு. அது புத்தி ஞாயத்துக்கும் சர்வேசுரனுக்கும் விரோதமாய் எழும்பி நம்மைக் கெடுக்க இடைவிடாமல் பிரயாசப்படுகின்றது. இதை அஸ்திவாரமான சத்தியமாக நமது மனதில் எப்போதுந் தரித்துக்கொள்ளுகிறது மிகவும் பிரயோசனமாயிருக்கும். இதினிமித்தமாகத் தன்னைத்தானே அறிந்துகொள்ளுகிறது சகல சோதனைகளையும் செயிப்பதற்கு மிகவும் உதவியான வழிபாடாகுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் அருளிச்செய்தார்கள். ஏனென்றால் தன்னை அறிந்துகொள்ளப் பிரயாசப்படுகிறவன் தன் பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் அறிந்துகொள்ளுவான்; ஒரு கெட்ட நினைவு கெட்ட ஆசை அவனிடத்தில் வந்தவுடனே தன்னை எய்த்துப் பாதாளத்திலே விழத்தாட்டத் தேடுகிற தன் சத்துருவின் சோதனை இதுவென்று கண்டுகொள்ளுவான்; கண்டுகொண்டு அதுக்குக் காதுகொடாமலும் அதை நம்பாமலும் தன் பேரில் எச்சரிக்கையாயிருப்பான். ஆனால் தன்னை அறியாமலும் தன்னை அறிவதற்குப் பிரயாசப்படாமலுமிருக்கிறவன் சோதனை வரும்போது, விசேஷமாய் அது தன் மனப் பற்றுதலுக்குப் பிரியமாயிருந்தால், அது சோதனையென்று எண்ணாமல் ஞாயமான பற்றுதலென்றும், அது இந்திரிய இச்சைக்கு அடுத்ததாயிருந்தாலும், அது தனக்கு அவசரமென்றும் எண்ணி எளிதாய்ச் சோ





தனைக்குட்படுவான். ஆகையால் உனக்கு எல்லாத்திலும் பெரிய சத்துரு எப்போதும் உன்னோடேகூட இருக்கிறதென்றும் உன் கெட்ட ஆசைகளும் உனக்கு வருகிற சோதனைகளும் உன் சரீரத்தினாலும் இந்திரிய இச்சையினாலும் உண்டாகிற தந்திர கபடமென்றும் அது உன்னைக் கெடுக்கத் தேடுகிற பிராண சத்துருவென்றும் ஸ்திரமாய் நிச்சயித்துக்கொள். இப்படி நிச்சயித்துக்கொண்டு நடந்தால், அதைச் செயித்து உன்னை ஒறுப்பது எளிதாயிருக்கும். ஏனென்றால் தன் சத்துருவை நம்புகிறவனார் ?

அர்ச். பெர்நர்துஸ் இது காரியத்தில் மிகவுஞ் சரியான ஓர் புத்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், நாம் வியாதிக்காரனை நடத்துகிறதுபோலே நம்மையும் நமது சரீரத்தையும் நடத்த வேண்டும்; நீ வியாதிஸ்தனை நடத்திக்கொண்டுவந்தால், அவர்கள் வியாதிக்குப் பொல்லாப்பான பண்டங்களை எவ்வளவு அலட்டிக் கேட்டாலும், கொடுக்கமாட்டாய்; அவர்கள் வியாதிக்கு நன்மையான வஸ்துவை வேண்டாமென்று தள்ளினாலும், கட்டாயமாய் உள்ளுக்குக் கொடுப்பாயல்லோ ? நாம் எல்லாரும் ஞான நோய் பிடித்திருக்கிறோமென்றும் நமது ஒழுங்கற்ற ஆசையும் பற்றுதலும் வியாதிஸ்தருக்குரிய ஆசையும் நம்மைக் கெடுக்கத் தேடுகிற சத்துருவின் தந்திர கபடமுமென்றும் நாம் நிச்சயித்துக்கொண்டால், நமது ஆசை பற்றுதல் எல்லாத்தையும் தள்ளிச் செயிப்பது எவ்வளவோ எளிதாயிருக்கும் ! ஆனால் என்னிடத்தில் ஞான வியாதியில்லை, சுகமேயிருக்கிறேன் ; நான் எனக்குச் சத்துருவல்ல, சிநேகிதனாயிருக்கிறேனென்று நினைப்பாயாகில், நீ வெகு ஆபத்துக்குள் அகப்பட்டிருக்கிறாய். ஏனென்றால் தின்மையைத் தின்மையென்றெண்ணாமல் நன்மையென்றெண்ணினால், அதைத் தள்ள உனக்கு மனசு வருமோ ? உன்னுள்ளத்தில் தோன்றுகிறது மெய்தான், தப்பிதமல்லவென்று எண்ணினால், அதை எப்படி விலக்கி நடப்பாய் ?

அர்ச். தொரோத்தேயர் தாம் இருந்த மடத்திலே ஞான.பிதாவாயிருக்கும்போது, நடந்த ஓர் சங்கதியை வெளிப்படுத்தியிருக்கிறார். அதென்னவென்றால், சந்நியாசிகள் எல்லாரும் தங்களுக்கு நேரிடுகிற சோதனையை அவரிடத்தில் வந்து சொல்லுவார்கள். ஓர் நாள் ஒரு சந்நியாசியார் அவரிடத்தில் வந்து போசனப்பிரியமென்கிற சோதனை என்னிடத்தில் உண்டென்று சொன்னார். ஒரு துர்க்குணம் வேறொரு



துர்க்குணத்திலே இழுத்துக்கொண்டு போகிறது வழக்கமாயிருப்பதினாலே, அவரிடத்திலிருந்த போசனப் பிரியமென்கிற துர்க்குணத்தினிமித்தம் தின்கிற பண்டங்களைக் களவாண்டுகொண்டு வருவார். இதற்குக் காரணம் என்னவென்று அர்ச்சியசிஷ்டவர் அவரிடத்தில் கேட்டதற்கு அந்தச் சந்நியாசியார் சொன்னதாவது : என்னிடத்திலுள்ள அகோரமான பசியை அமர்த்துவதற்கு மடத்திலே கொடுக்கிற சாப்பாடு பற்றவில்லையென்றார். அப்போது நீர் சிரேஷ்டரிடத்திலே போய் உமது அவசரத்தை அவருக்கு வெளிப்படுத்த வேணுமென்று அர்ச். தொரோத்தேயர் சொன்னார். ஆனால் சிரேஷ்டரிடத்தில் இது காரியத்தைப் பேசுவதற்கு அவர் வெட்கப்பட்டுப் போக மனசில்லாததினாலே, அர்ச். தொரோத்தேயர் தானே சிரேஷ்டரிடத்திலே போய் இந்தச் சந்நியாசியாருடைய அவசரத்தை அவருக்குச் சொல்லிக் காட்டினார். அப்போது சிரேஷ்டர் இது காரியத்தை உம்முடைய மனசுபோலே செய்யுமென்றுசொன்னதினாலே, அர்ச். தொரோத்தேயர் உக்கிராணக்காரனை வரவழைத்து இந்தச் சந்நியாசியார் கேட்கிறதெல்லாம், எத்தனைவிசை கேட்டாலும், கொடுக்க வேணுமென்றுசொன்னார். அப்படியே உக்கிராணக்காரன் கொடுத்து வந்தான். இந்தச் சந்நியாசியார் ஆசைப்பட்டுக் கேட்டதெல்லாம் அவன் ஏராளமாய்க் கொடுத்துக்கொண்டு வந்ததினாலே, கொஞ்ச நாள் வரைக்கும் திருடாமலிருந்தார் ; ஆனால் கொஞ்ச நாளைக்குப்பின் தன் கெட்ட வழக்கப்பிரகாரம் திருடத்துவக்கினார். அப்போது தன் குற்றத்துக்காக அழுதுகொண்டு அர்ச். தொரோத்தேயரிடத்திலே போய் அதைச் சொல்லிக் காட்டித் தனக்கு யாதோர் தெண்டனையிட வேணுமென்று கேட்டுக்கொண்டார். இந்தச் சந்நியாசியார் தன் குற்றத்தை மறைக்காமல் வெளிப்படுத்துகிறது வழக்கம். குற்றத்தைச் சீக்கிரமாய்த் திருத்திக்கொள்ளுவதற்கு அதை வெளிப்படுத்துகிறது நல்ல வழிபாடாகும். இதைக் கேட்டு அர்ச். தொரோத்தேயர் உக்கிராணக்காரன் நீர் கேட்டதெல்லாம் கொடுத்தானோ, ஏதாகிலும் இல்லையென்று சொல்லவில்லையோவென்று அவரிடத்தில் கேட்டார். அதற்கு அந்தச் சந்நியாசியார் சொன்னதாவது : நான் கேட்டதெல்லாம் சந்தோஷமாய் அவன் எனக்குக் கொடுத்துக்கொண்டு வந்தான் ; ஆனால் அடிக்கடி அவனிடத்திலே போய்க்கேட்க வெட்கப்பட்டுத் திருடினேனென்றார். இப்போது இந்தச் சோதனையை நீர் நமக்குச் சொல்லிக் காட்டினதினாலே இது நமக்குத் தெரியுமே ; உமக்கு வேண்டிய ஆகார வஸ்துக்களை நம்மிடத்தில் வந்து கே

ட்க வெட்கப்படுவீரோவென்று அர்ச். தொரோத்தேயர் அவரிடத்தில் கேட்டார். அதற்கு அவர் இல்லையென்று சொன்னார். அப்படியானால் இனிமேலாக உமக்கு வேண்டியதெல்லாம் நம்மிடத்தில் வந்து கேளும்; இனிமேல் ஒன்றும் திருடவேண்டாமென்று அர்ச். தொரோத்தேயர் சொன்னார். அப்போது அர்ச். தொரோத்தேயர் நோவாளிகளை விசாரித்துக்கொண்டு வந்ததினாலே, அவரிடத்தில் நல்ல நல்ல பதார்த்தங்களெல்லாம் இருந்தது; அதை இந்தச் சந்நியாசியாருக்குக் கொடுத்துக்கொண்டு வருவார்; அதினாலே கொஞ்சகாலம் வரைக்கும் அவர் திருடாமலிருந்தார்; ஆனால் கொஞ்சத்துக்குப்பின் தன் கெட்ட வாடிக்கைப் பிரகாரம் திரும்பியும் திருடத்துவக்கினார். அதினாலே வெட்கப்பட்டு அர்ச்சியசிஷ்டவரிடத்தில் தன் குற்றத்தை வெளிப்படுத்திப் பொறுத்தல் கேட்டுத் தனக்குத் தெண்டனையிட வேணுமென்று கெஞ்சினார். அப்போது அர்ச்சியசிஷ்டவர் அவரை நோக்கிச் சொன்னதாவது: தம்பீ, உனக்கு வேண்டியதெல்லாம் நம்மிடத்தில் கேட்க நீ வெட்கப்படவில்லையென்று சொன்னாயே; நீ கேட்டதெல்லாம் கொடுத்துக் கொண்டு வந்தோமே; இப்படியிருக்க ஏன் திருடுகிறாயென்று கேட்டார். அதற்கு அந்தச் சந்நியாசியார் சொன்னதாவது: ஏன் திருடுகிறேனென்று எனக்கே தெரியாது; என் கெட்ட வாடிக்கையினாலேதான் திருடுகிறேனென்று நினைக்கிறேன்; ஏனென்றால் எனக்கு ஒன்றும் அவசரமில்லை; நான் திருடுகிறதைச் சாப்படாமல் குதிரைக்குக் கொண்டுபோய்க் கொடுக்கிறேனென்றார். அவருடைய அறையில் போய் பார்க்கும்போது, அநேகம் தின்கிற பண்டங்களைக் கட்டிலுக்குக் கீழே ஒளித்துவைத்திருந்தார். அது கெட்டுப் புழுத்துப்போனபின், அதைக் குதிரை இலாயத்துக்குக் கொண்டுபோய்க் குதிரைக்குக் கொடுப்பார். ஆகையால் ஆசாபாசமும் கெட்ட வழக்கமும் மனுஷனை எவ்வளவு பிரலாபத்துக்குரிய அந்தஸ்துக்குட்படுத்துகிறதென்றும் நாம் ஞானவியாதிபிடித்து நமக்கு நாமே சத்துருவாயிருக்கிறோமென்று நிச்சயித்துக்கொள்ளுவதற்கு எவ்வளவு ஞாயமுண்டென்றும் மேற்சொன்ன வர்த்தமானத்தைக்கொண்டு அறிந்துகொள்ளலாமென்று அர்ச். தொரோத்தேயர் சொல்லியிருக்கிறார். தாம் செய்தது பாவமென்று இந்தச் சந்நியாசியாருக்கு நன்றாய்த் தெரியும்; அதற்காகக் கஸ்திப்பட்டும் அழுதாரே. அப்படியிருந்தாலும், அந்தக் குற்றத்தில் திரும்பித் திரும்பி விழாமல் இருக்கக் கூடவில்லையே. ஆகையால் ஆசாபாசத்துக்கும் கெட்ட வாடிக்கை வழக்கத்துக்கும் ஒருவிசை இடங்கொடுக்கிறவன் அத



ற்கு அடிமையாய்ப் போவானென்று நீஸ்கேரோனென்னும் மடாதிபதி சொன்னது ஞாயந்தானே.

———ooooooo———

## யஉ-ம் அதிகாரம்.

ஒறுத்தல் முயற்சி எப்படிச் செய்யவேணுமென்று சொல்லுவது.

நம்மை நாமே செயித்து நமது ஆசாபாசத்தையும் மனப்பற்றுதலையும் கீழ்ப்படுத்துவதற்கு ஒறுத்தல் முயற்சி பிரதான வழிபாடாயிருக்கிறதினாலே, இந்த முயற்சியைச் செய்வதற்கு என்ன செய்யவேணுமென்று கொஞ்சம் விவரித்துக் காட்டுவது நலமாயிருக்கும். இதற்காக நமக்கு மிகவும் அவசரமானது இன்னதென்று யோசித்துப் பார்த்து முந்த முந்த அதைச் செய்துகொள்ளப் பிரயாசப்படவேண்டும். இது காரியத்தில் ஏற்படுத்தவேண்டிய பொது ஒழுங்கு இதுவே. ஆகையால் உன் சிரேஷ்டராலேயாகிலும் உன் சகோதரராலேயென்கிலும் வேறெந்த வழியாகவாகிலும் தினந்தோறும் தன்னாலே நேரிடுகிற சமயங்களிலெல்லாம் ஒறுத்தல் முயற்சி செய்து ஞானப் பிரயோசனம் அடையப் பிரயாசப்படு. ஒறுத்தல் முயற்சி செய்வதற்கான இந்தச் சமயங்களை விட்டுவிடாமல் செய்துகொண்டு வரவேண்டும். உன் மன அமரிக்கைக்காகவும் புறத்தியாருடைய நன்மாதிரிகைக்காகவும் இந்த முயற்சி செய்கிறது மிகவும் அவசரமாமே. ஒறுத்தலினாலே நமக்குண்டாகும் பிரயோசனத்தைப்பற்றி அதின்பேரில் பிரியப்பட்டுச் சிரேஷ்டர் நம்மை ஒறுத்து நமக்கு அருவருப்பான காரியங்களைக் கட்டளையிட்டுத் தனியேயும் மற்றவர்களுக்கு முன்பாகவும் நமக்குக் கண்டனை தெண்டனை செய்யவேண்டுமென்று அலட்டிக் கேட்கவேண்டும். ஆனால் நீ இப்படி அலட்டிக் கேளாதேபோனாலும், தன்னாலே நேரிடுகிற சமயங்களையெல்லாம் உன் நன்மைக்காகவும் உன் புண்ணிய வர்த்திப்புக்காகவும் சர்வேசுரன் அனுப்புகிறாரென்றெண்ணிக்கொண்டு அச்சமயங்களில் பொறுமையோடும் நல்ல மனதோடும் ஒறுத்தல் முயற்சி செய்துகொள். தினந் தோறும் இப்படி அநேக சமயம் நேரிடும்; ஞானப் பிரயோசனம் அடையவேணுமென்கிற கருத்தோடு கவனம் வை






ந்தால், தன்னை ஒறுப்பதற்கு எப்போதும் போதுமான சமயம் அகப்படும். முந்த முந்த சிரேஷ்டராலே உனக்கு வருகிற சமயங்களாவது: மகா வருத்தமான காரியங்களை உனக்குக் கற்பிக்கிறாரென்றும் பாரமெல்லாம் உன் தலைமேல் விழுகிறதென்றும் மற்றவர்களுக்கு ஓர் வருத்தமும் இல்லையென்றும் உனக்குத் தோன்றும்; அன்றியும் எந்த அலுவலிலும் தன்னை ஒறுப்பதற்கான வருத்தம் எப்போதும் நேரிடும். இதற்கு நீ எப்போதும் ஆயத்தமாயிருந்து இதுவெல்லாம் நல்லமனசோடு பட்டநுபவித்து இதை உனக்குப் பிரயோசனமாக்கிக்கொள். இதிலே உனக்குள்ள வருத்தந்தான் இயேசுநாதரைக் கண்டுபாவிப்பதற்காக நீ சுமக்கவேண்டிய சிலுவை. அப்புறம் அன்னவஸ்திரம் முதலியதுகளில் உன்னை ஒறுப்பதற்குச் சமயம் கிடைக்கும். நமது ஒழுங்கில் சொல்லியிருக்கிறதுபோலே, இச்சமயங்களில் அகமகிழ்ந்து சந்தோஷப்படு. வேறோர் தடவை உனக்கு யாதொரு தெண்டனையிட்டுக் கடிந்துகொள்ளுவார்கள்; ஆனால் இது காரியத்திலே உன் பேரில் ஒரு குற்றமுமில்லையென்றும் அல்லது உன் குற்றம் அவர்கள் நினைக்கிறதுபோலே அத்தனை பெரியதல்லவென்றும் இந்தக் காரியத்தை நடந்தபடி சொல்லாமல் வேறேவிதமாய்ச் சொல்லியிருக்கிறார்களென்றும் உனக்குத் தோன்றும். ஆகிலும் பறவாயில்லை; இதினிமித்தம் சந்தோஷப்படு; போக்குச் சொல்லாதே, முறைப்படாதே, உன்னிடத்தில் குற்றமில்லையென்றும் அல்லது அது சொற்ப குற்றமென்றும் காட்டுவதற்கான ஞாயங்களைச் சொல்லாதே. அன்றியும் நம்மை ஒறுப்பதற்கான சமயம் புறத்தியாராலேயும் நமது சகோதரராலேயும் நேரிடும்போதெல்லாம், ஒறுத்தல் முயற்சிசெய்தால், நாம் வெகு ஞானப்பிரயோசனம் அடையலாம். சில சமயங்களில் அவர்கள் வேணுமென்று விரும்பாமல் நம்மை ஒறுப்பதற்கான காரியங்களைச் செய்வார்கள்; வேறே சமயங்களில் கெட்ட கருத்தில்லாமல் அசட்டைத்தனத்தினாலே நம்மை ஒறுப்பார்கள்; கடைசியாய் இன்னம் சில சமயங்களில் அவர்கள் வேணுமென்று நம்மைப் பிறக்கணித்து அசட்டைபண்ணினார்களென்று நமக்குத் தோன்றும். இது என்னமாயிருந்தாலுஞ் சரி, இந்தச் சமயம் ஒன்றையும் விடாமல் எப்போதும் ஒறுத்தல் முயற்சி செய்து பழகவேண்டும். ஆனால் வியாதி சோதனை மன வருத்தம் முதலியவைகளைச் சர்வேசுரன் நேராய் நமக்கு அனுப்புவார். இதைக் கணக்கிட்டுப் பார்த்தால், எண்ணத் தொலையாது. ஒறுத்தல் முயற்சி செய்வதற்கு இப்படிப்பட்ட சமயங்கள் வெகுவாய் நேரிடும். முந்த முந்த இ





ச்சமயங்களில் நாம் ஒறுத்தல் முயற்சி செய்து பழகவேண்டும்; ஏனென்றால் இச்சமயங்கள் க்ஷணத்துக்கு க்ஷணம் நேரிடுகிறதினாலேயும் இதை விலக்க நம்மாலே கூடாததினாலேயும் இதைப் பட்டநுபவிக்கவேண்டியிருப்பதினாலேயும் இதினாலே நமக்கு ஞானப் பிரயோசனம் உண்டாக்கிக் கொள்ளவேண்டும். இதினாலே நமக்கு ஞானப் பிரயோசனம் வருகிறதுமல்லாமல் இதை நல்ல மனதோடு ஏற்றுக்கொள்ளுகிறதினாலே வருத்தமும் நம்மைவிட்டு நீங்கும். ஏனென்றால் ஒரு காரியத்தினாலே நமக்கு வருத்தம் வரும்போது, அநந்தமுறை அந்தக் காரியமே அந்த வருத்தத்துக்குக் காரணமல்ல. அதின்பேரில் நம்மிடத்திலுள்ள அருவருப்புத்தான் அந்த வருத்தத்துக்குக் காரணமாகும். ஆகையால் அதை நல்லமனதோடு பட்டநுபவித்தால், அது எளிதாக நமக்குத் தோன்றும்.

இன்னம் வேறொரு வித ஒறுத்தல் முயற்சியுமுண்டு. அதை நாம் வேணுமென்று செய்துகொள்ளவேண்டும்; ஆனால் வேணுமென்று செய்துகொண்டாலும் இது அவசரமான முயற்சிதானே. ஆகையால் இது முதல்த்தரமான ஒறுத்தல் முயற்சியென்று சொல்லவேண்டும். இதில் சிலது மெய்யான கிறீஸ்துவர்களாய் நடந்து ஈடேறுவதற்கு அவசரமான முயற்சியாகும். இவ்வண்ணமே தேவ கற்பனையை அநுசரிப்பதற்கு விக்கினமாயிருக்கிறதெல்லாத்தையும் ஒறுத்துத் தள்ளவேண்டும். வேறுசில ஒறுத்தல் முயற்சி மெய்யான சந்நியாசியாய் நடந்து புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவதற்கு அவசரமாயிருக்கும். இப்படியே ஒழுங்கை அநுசரித்து அதில் விதித்திருக்கிறதெல்லாத்தையும் நன்றாய்ச் செய்துமுடிப்பதற்கு விக்கினமானதையெல்லாம் ஒறுத்து நீக்கவேண்டும். ஏனென்றால் நாம் ஒறுத்தல் முயற்சி செய்யாததினாலேதான் புண்ணிய வழியில் நாம் கட்டிக்கொள்ளுகிற பாவம் குற்றங் குறைகளெல்லாம் வருமென்பது நிச்சயம். ஒன்றில் நாம் புண்ணியத்தையும் சாங்கோபாங்கத்தையும் அநுசரிப்பதற்குப் படவேண்டிய வருத்தத்தைப்பட்டு அநுபவிக்க மனசில்லாததினாலே குற்றங்குறைகளைக் கட்டிக்கொள்ளுவோம், அல்லது குற்றம் செய்கிறதிலே வரும் சந்தோஷத்தை அநுபவிப்பதற்காக அந்தக் குற்றத்தில் விழுகிறது வழக்கம். இதை நன்றாய் உற்று விசாரிக்கக் கடவோம். கீழ்ப்படிதல் ஒழுங்கை அநுசரித்தல் மட்டசனம் மௌனம் அடக்க ஒடுக்கம் பொறுமை முதலிய வேறெந்தப் புண்ணியத்துக்கும் விரோதமான கு





ற்றத்தை நாம் கட்டிக்கொண்டிருந்தால், நம்மை ஒறுக்காததினாலேதான் இந்தக் குற்றத்தில் விழுந்தோமென்று அறிந்துகொள்ளுவோம். மேற்சொன்ன புண்ணியங்களை அநுசரிப்பதிலே வரும் வருத்தத்தைப் பொறுக்கமாட்டாமல் அந்தக் குற்றத்தில் விழுந்திருப்போம், அல்லது அந்தக் குற்றத்தைக் கட்டிக்கொள்ளுகிறதினாலே வரும் சந்தோஷத்தை அநுபவிப்பதற்காக அந்தக் குற்றத்தைச் செய்திருப்போம். நல்ல கிறிஸ்துவனாய் நடந்து ஈடேறுவதற்காகத் தேவ கற்பனைக்கு விரோதமானதெல்லாத்தையும் ஒறுத்து விலக்கவேண்டும். இதினாலல்லோ நம்மைப் பின்செல்ல மனதுள்ளவன் தன்னைத்தானே ஒறுக்கக் கடவானென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். தன்னை மறுதலித்து ஒறுக்காவிட்டால், நல்ல கிறீஸ்துவனாயிருக்கவும் ஈடேறவுங் கூடாது. இவ்வண்ணமே நல்ல சந்நியாசியாய் நடந்து புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையும்பொருட்டுச் சாங்கோபாங்க அந்தஸ்துக்கு விரோதமானதெல்லாத்தையும் ஒறுத்து நீக்கவேண்டும். காலமே துவக்கிச் சாயங்காலம் வரைக்கும் நீ செய்கிறதெல்லாத்தையும் சோதித்துப்பார். உன் வழக்கமான கிரிகைகளையெல்லாம் உத்தமமாய்ச் செய்துமுடிப்பதற்கு எது விக்கினமாயிருக்கிறதென்று கவனித்துப்பார். இந்த விக்கினத்தைச் செயித்து அந்தந்தக் கிரிகைகளை மகா உத்தமமாய்ச் செய்யாமல் போவதற்குக் காரணமாயிருக்கிறதெல்லாத்தையும் ஒறுத்துத் தள்ளு. இப்படி நடந்தால், தினந்தோறும் உன் கிரிகைகள் அதிக உத்தமமாகும்; நீயும் நாளுக்கு நாள் அதிக உத்தமனாவாய். இது காரியத்தில் நாம் ஸ்திரமான மனது வைத்தாலே போதும்; புண்ணியத்தில் வர்த்திப்போமென்பதற்குச் சந்தேகமில்லை.

என்னிடத்தில் மிகவும் நல்ல ஆசையுண்டு. ஆனால் புண்ணியம் செய்வதற்குச் சமயம் நேரிடும்போது, பலவீனப்பட்டுப் பல குற்றங்களில் விழுகிறேன்; புண்ணிய சாங்கோபாங்கத்தில் நான் சேரக்கூடவில்லை; என் இப்படியாகிறதென்று ஒரு சந்நியாசியார் கேட்டார். இதைக் கேட்டவர்கள் எல்லாரும் கவனக்குறைவினாலே இப்படியாகிறதென்று சொல்லி அதற்கான வழிபாடுகளையும் புத்திமதிகளையும் சொல்லிக் கொடுத்தார்கள்; ஆனால் இதுவெல்லாம் வீணாய்ப்போயிற்று. கடைசியாய் ஞானத்தில் தேர்ந்த விருத்தாப்பியரான ஓர் மகாத்துமாவிடத்திலே போய் அவரிடத்தில் தன் கஸ்தியை வெளிப்படுத்தினார். அவர் அதைக் கேட்டுக் கவனக்குறைவினாலே இப்படியாகிறதில்லை; ம





ன உறுதியில்லாததினாலே இந்தக் குற்றங்களில் விழுகிறீரென்றார். நாம் புண்ணியத்தில் வெகுவாய் வர்த்தியாமலும் நமது குற்றங் குறைகளை முழுதும் திருத்திக்கொள்ளாமலும் போவதற்கு இதுவே மெய்யான காரணமாகும். நாம் இப்போது சொன்ன சமயங்களில் உன்னை ஒறுக்கவேணுமென்று உறுதியான மனசு வை. இப்படி வைத்தால், புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவாய்.

## ௰௫-ம் அதிகாரம்.

### கடனான காரியங்களிலும் கடனில்லாத காரியங்களிலும் தன்னை ஒறுக்கவேணுமென்பதின்பேரில்.

**நாம்** இதுவரையில் சொன்னதைவிட வேறொன்றும் சொல்ல அவசரமில்லையென்றும் உத்தம சந்நியாசிகளாவதற்கு நாம் எடுத்துக்காட்டின இந்திரிய ஒறுத்தலும் போதுமென்றும் அந்த முயற்சியைச் செய்கிறதே அவசரமென்றும் தோன்றுமாக்கும். ஆகிலும் இது காரியம் நமக்கு நன்றாய்க் கைகூடி வரும்படியாகவும் இதற்கு நன்றாய் ஆயத்தம் பண்ணும்படியாகவும் கடனில்லாத காரியங்களில் இன்னொருவித ஒறுத்தல் முயற்சியை ஞானசிவிய கிரந்தகர்த்தாக்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். நல்ல கிறீஸ்துவர்கள் ஈடேற்றத்துக்கு முழுதும் அவசரமான காரியங்களைச் செய்தாலே போதுமென்று இருக்கிறதில்லை; இன்னம் வேறுவித பத்திக்கடுத்த முயற்சிகளையும் செய்வார்கள். இது கடனுக்கு மேலான கிரிகைகளென்று வேத சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். ஏனென்றால்க் கடனுள்ள நாட்களில் கிறீஸ்துவர்கள் பூசை காண்கிறதுமல்லாமல் மற்ற நாட்களிலும் காண்பார்கள்; இன்னம் வேறே பத்திக்குரிய முயற்சிகளையும் செய்து அடிக்கடி பாவசங்கீர்த்தனம் பண்ணி நன்மைவாங்குவார்கள். இவ்வண்ணமே நல்ல சந்நியாசி தன் ஒழுங்குகளை அநுசரித்து அதில் விதித்திருக்கிற ஒறுத்தல் முயற்சியை மாத்திரம் செய்கிறது பற்றாது; ஒழுங்கில் குறியாத காரியங்களிலும் சிலவிசை தன்னை அடக்கி வேறே ஒறுத்தல் முயற்சியும்





செய்யவேண்டும். தன் மனதோடு யுத்தம் பண்ணுகிறதைப்போலே புண்ணியத்தில் வர்த்திப்பதற்கும் மன சமாதானத்தை அடைவதற்கும் உதவியான காரியம் ஒன்றுமில்லையென்று அர்ச். தொரோத்தேயர் சொல்லியிருக்கிறார். பாவமும் புண்ணியமுமாயிராத காரியங்களில் நம்மை ஒறுக்கிறது எப்படியென்று காட்டுவதற்காக அவர் சொல்லுகிறதாவது: யாதொரு இடத்துக்குப் போகிறாயோ? அப்போது தலையைத் திருப்பி எதையாகிலும் பார்க்கவேணுமென்று ஆசைவந்தால், அதைப் பாராதே. பேசிக்கொண்டிருக்கிறாயோ? யாதொரு காரியம் சொல்லவேணுமென்று உனக்கு மனசுவந்து அதைச் சொன்னால், உன்னை புத்தியுள்ளவனாக மற்றவர்கள் மெச்சுக்கொள்ளுவார்களென்று உனக்குத் தோன்றுமாக்கும்; அதைச் சொல்லாதே. சமையல் வீட்டுக்குப் போய் அங்கே என்ன சமைக்கிறார்களென்று பார்க்க நினைவு வந்தால், பார்க்கப்போகாதே. யாதொரு அருமையான காரியத்தை மடத்துக்குக் கொண்டுவந்ததை நீ கண்டு யார் அதைக் கொண்டுவந்தார்களென்று அறிவதற்கு உன்னிடத்தில் ஆசை பிறந்தால், அதைக் கேளாதே. வெளி மனுஷனொருவன் வீட்டில் பிரவேசிக்கிறதைக் கண்டால், அவன் யார், எங்கேயிருந்து வருகிறான், எங்கே போகிறான், என்னத்துக்காக வந்தானென்று அறிய உனக்கு ஆசைவந்தால், உன்னை ஒறுத்து ஒன்றும் கேளாதே.

நமது சுயமனதை ஒறுத்துப் பழகுவதற்கு இந்த முயற்சி மிகவும் உதவியாயிருக்குமென்று அர்ச். தோரோத்தேயர் சொல்லியிருக்கிறார். ஏனென்றால் இந்த அற்பக் காரியங்களில் நமது மனசை மறுதலிக்கப் பழகினால், கொஞ்சத்துக்குள்ளே பெரிய காரியங்களிலும் நமது சுயமனசைத் தள்ளப் பழகுவோம். சண்டைக்குக் குறிக்கப்பட்டவர்கள் சமாதான காலத்தில் சண்டைசெய்யப் பழகுவார்கள். இது விளையாட்டுப்போலே தோன்றினபோதிலும், மெய்யான சண்டை செய்வதற்கு இதினாலே அவர்களிடத்தில் அப்பியாசம் உண்டாகும். அப்படிப்போலே பாவமில்லாத காரியங்களிலே முதலாய்ச் சந்நியாசி தன் சுயமனசை மறுதலித்து ஒறுக்கப் பழகவேண்டும். இப்படிச் செய்தால், பாவமான காரியங்களிலும் தன்னை ஒறுக்கப் பழக்கமுண்டாகும். பாவமில்லாத காரியங்களில் தன்னை ஒறுக்கப் பழகவேணுமென்று அர்ச். போனவெந்தூர் போதித்திருக்கிறார். நீ தோட்டத்தில் உலாவிக்கொண்டிருக்கும்போது, ஒரு பூவைப் பறிக்கவேணுமென்று உனக்கு நினை





வெந்தால், பறிக்காதே; ஏனென்றால் அதைப் பறிக்கிறது பாவமில்லாவிட்டாலும், தன்னை ஒறுப்பதற்காக அதைப் பறிக்காமலிருக்கிறது சர்வேசுரனுக்கு வெகு பிரியமாயிருக்கும். ஆகையால் தேவதாசன் தன் மனசுக்குள்ளே அநந்தமுறை சொல்லவேண்டியதாவது: சர்வேசுரா, உமது சினேகத்துக்காக நான் இதைப் பார்க்கிறதில்லை, இதைக் கேட்கிறதில்லை, இதைத் தின்கிறதில்லை, இதைப் பேசுகிறதில்லையென்று சொல்லவேணுமென்றார். அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ழியாவின்பேரில சொல்லியிருக்கிற வர்த்தமானமாவது: அவர் சமுசார வாழ்க்கையிலிருக்கும்போது, பட்சி வேட்டையாடுகிறதற்கு வெகு பிரியப்படுவார்; கொக்கு வேட்டையாடுகிறது அவருக்கு வழக்கம். ஆனால் அவர் விட்ட இராசாளி பட்சியைத் துரத்தி அதின்மேலே பாய்ந்து பிடிக்கப்போகிற தருணத்தில் அதைப் பாராதபடிக்குக் கண்ணைக் கவிழ்ந்துகொண்டு நாள் முழுதும் வெகு பிரயாசத்தோடு தாம் தேடின சந்தோஷத்தை ஒறுத்துத் தள்ளுவார். பாவமான காரியத்தை நீக்குவதற்காகப் பாவமில்லாத காரியத்தையும் நீக்குகிறது தேவ ஊழியருக்கு அடுத்த நடக்கையென்று அர்ச். கிரெகோரியார் வசனித்தார். வனவாசிகள் தங்களுக்குக் கீழ்ப்பட்ட சந்நியாசிகள் சகலத்திலும் தங்களை ஒறுத்து வருத்தமான காரியங்களிலே பழகும்பொருட்டுப் பாவமும் குற்றமுமாயிராத அற்பக் காரியங்களிலே அவர்கள் மனசுபோலே நடக்கவேண்டாமென்று விலக்கி அவர்களுக்கு மனசில்லாத காரியங்களைச் செய்யவேணுமென்று கற்பித்து ஒறுத்தல் முயற்சியிலே அவர்களைப் பழக்கிக்கொண்டு வருவார்கள். இவர்களுடைய மாதிரிகையைப் பின்சென்று இயேசுசபையும் நவசந்நியாசிகளைப் பற்பல அலுவல்களில் பழக்கி அவர்கள் துவக்கின வேலையை விடச்செய்து அவர்கள் செய்து முடித்த வேலையைப் பிரித்தெறியச் சொல்லித் திரும்பியும் அதைச் செய்யப்போட்டு நானாவித ஒறுத்தல் முயற்சியில் அவர்களைப் பழக்கிக்கொண்டு வருகிறதறிவோம். தங்கள் சுயமனசு சுய எண்ணத்தின்பேரில் பற்றுதல் வைக்காமல் அதை எற்கனவே வெறுத்துத் தள்ளுகிறதற்கு அவர்களிடத்தில் பழக்கம் உண்டாகும்படியாய் இயேசு சபை இதுவெல்லாம் செய்துகொண்டு வருகிறது.

இன்னம் இது காரியத்திலே நாம் செய்யவேண்டியதின்னதென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுகிறதாவது: பாவமும் புண்ணியமுமாயிராத காரியங்களில் நமது மனதை ஒறுத்து அடக்கப் பழகுகிறது





ம் பற்றுது; முழுதும் அவசரமான காரியங்களிலும் நமது மனதை ஒறுக்க வேணுமென்றார்கள். ஆனால் இது எப்படிச் செய்கிறது? தன்னை ஒறுப்பதற்காகத் தன்பேரில் கடமையான காரியத்தை விட்டுவிட வேணுமோவென்று கேட்பாயாக்கும். இல்லை, நன்மை செய்வதற்காகத் தின்மைசெய்யப் படாதென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். இப்படியானால், என்னசெய்ய வேணுமென்று கேட்பாயாக்கும். அர்ச்சியசிஷ்டவர்கள் இது காரியத்தில் ஆச்சரியமான ஓர் இரகசியம் கண்டுபிடித்திருக்கிறார்கள். அர்ச். சின்னப்பருடைய போதகத்திலிருந்து இச்சத்தியத்தை அவர்கள் எடுத்துக்காட்டிச் சொல்லுகிறதாவது: உன் மனப்பற்றுதல் நிமித்தமாகவும் இந்திரிய இச்சைநிமித்தமாகவும் ஒன்றும் செய்யாதே, ஒன்றும் நினையாதே, ஒன்றும் பேசாதேயென்று சொல்லியிருக்கிறார்கள். சாப்பிடுவதற்குமுன் சாப்படவேணுமென்று உன்னிடத்தில் கிளம்புகிற ஆசையை ஒறுத்து உன் ஆசையை நிறைவேற்றுவதற்காகவல்ல, பிழைப்பதற்காகச் சாப்படவேணுமென்று சர்வேசுரன் சித்தமாயிருக்கிறதினாலே, அவர் சித்தத்தை நிறைவேற்றுவதற்காகச் சாப்படு. பல்லாதியார் சொல்லியிருக்குமாப்போலே, இசிதோரென்னும் மடாதிபதி சாப்பாட்டறைக்குப் போகும்போது, அழுதுகொண்டு கீழ்ப்படிவதற்காக மாத்திரம் போவார். படிக்கத்துவக்குமுன் படிக்கவேணுமென்கிற ஆசையை உன்னுள்ளத்தில் ஒறுத்துப் படிக்கிறது உனக்குப் பிரியமாயிருக்கிறதினாலேயல்ல, படிக்கவேணுமென்று சர்வேசுரன் கற்பிக்கிறதினாலே படித்துக்கொள். பிரசங்கிப்பதற்காகிலும் மற்றவர்களுக்குப் படித்துக் கொடுப்பதற்கென்கிலும் போகும்போது, அதின்பேரில் உனக்குள்ள பற்றுதலை ஒறுத்துச் சிரேஷ்டர் கற்பிக்கிறதினாலேயும் அது சர்வேசுரனுடைய சித்தமாயிருக்கிறதினாலேயும் பிரசங்கித்துப் படித்துக்கொடு. மற்றச் சகல காரியங்களிலேயும் இப்படி நடந்து உன் சகல கிரிகைகளின்பேரிலுமுள்ள சுபாவபற்றுதலை ஒறுத்துத் தள்ளிச் சர்வேசுரனுக்காக மாத்திரம் அதுகளைச் செய்துகொண்டுவா. ஏனென்றால் உன் கிரிகைகள் உன்னைப்பிடித்து இழுத்துக்கொண்டுபோகிறது ஞாயமல்ல; நீயே அதுகளுக்கு எசமானாயிருந்து அதுகளையெல்லாம் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுத்து அவருக்காகமாத்திரம் அதுகளைச் செய்கிறது ஞாயமாகும். இதினாலல்லோ நீங்கள் சாப்பட்டாலும் குடித்தாலும் வேறே என்னசெய்தாலும், தேவ தோத்திரத்துக்காக எல்லாத்தையும் செய்யுங்களென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார்.





நமது சுயபிரியத்தினாலே ஒன்றும் செய்யாமல் சர்வேசுரனுக்காக மாத்திரம் எல்லாத்தையும் செய்து நமது அலுவலை நிறைவேற்றி ஒரு கிரிகையிலும் நமது சுயமனசைத் தேடாமல் தேவசித்தத்தை மாத்திரம் நாடி நாம் செய்கிற கிரிகைகள் நமக்குப் பிரியமும் நமது குணத்துக்கு ஒத்ததுமாயிருக்கிறதினாலே, அதின்பேரில் பிரியப்படாமல் தேவபிரியத்தை நிறைவேற்றுவதற்காக மாத்திரம் அதுகளைச் செய்து செய்து பழகுகிறது மிகவும் பிரயோசனமான முயற்சியென்பதற்குச் சந்தேகமில்லை. இது மகா மேலான புண்ணிய சாங்கோபாங்கத்துக்கடுத்த முயற்சியாமே. இப்படி நடக்கிறவன் தன் மனதை ஒறுக்கப் பழகிறதுமல்லாமல் சகலத்திலும் தேவசித்தத்தின்படி நடக்கவும் பழகுவான். இது மிகவும் மேலானதும் மிகவும் பிரயோசனமுமான தேவசினேக முயற்சியாமே; இது நாம் வேறோரிடத்தில் சொன்னதுபோலே, மகா உன்னத புண்ணிய சாங்கோபாங்கமாகும்.

இது காரியத்தில் நாம் இப்போது விஸ்தாரமான வழியைத் திறந்து காண்பித்தோம். விசேஷமாய்த் தன் மனதை ஒறுக்க மனசுள்ளவன் மேற்சொன்ன இரண்டு அதிகாரங்களில் நாம் எடுத்துக் காட்டினதுபோலே, படிபடியாய்க் கொஞ்சங் கொஞ்சமாய் இந்த முயற்சிசெய்து ஒறுத்தலின் மேலான அந்தஸ்தில் ஏறலாம். இதற்காக முந்தமுந்த நம்மை ஒறுக்கவேணுமென்று நாம் தேடாமல் தன்னாலே நேரிடுகிற சமயங்களில் நம்மை ஒறுத்துப் பழகவேண்டும். இதில் பழகுவதற்குக் கொஞ்ச நாள் செல்லும்; விசேஷமாய் நமக்கு நேரிடுகிற ஒறுத்தலைப் பொறுமையோடு சகிப்பதுமன்றிச் சந்தோஷத்தோடும் ஏற்றுக்கொள்ளவேணுமானால், வெகுநாள் செல்லும். இது நாம் இனிமேல் சொல்லப்போகிறதுபோலே, ஒறுத்தலில் மிகவும் உத்தமமான மூன்றாம் அந்தஸ்தாகும். இரண்டாவது, நல்ல சந்நியாசிகளாகி நமது ஒழுங்குகளைச் சரிவர அநுசரித்து நன்மாதிரிகையாய் நடப்பதற்கு விக்கினமானதெல்லாத்தையும் ஒறுத்துத் தள்ளவேண்டும்; இந்த விக்கினங்கள் எண்ணிக்கைக்குள்ளடங்காது. மூன்றாவது, பாவமில்லாத சில காரியங்களில் நம்மை ஒறுத்துப் பாவமான காரியங்களில் நமது சுயமனதை முழுதும் தள்ளப் பழகவேண்டும். இதற்காக ஒறுத்தல்முயற்சி காலமே இத்தனை சாயங்காலம் இத்தனை செய்வேனென்று பிரதிக்கினைபண்ணித் துவக்கத்திலே கொஞ்சமும் நாளுக்கு நாள் அதிகமும் செய்துகொண்டு வரவேண்டும். நமக்கு அறிமுகமான சில இயேசுச






பைச் சந்நியாசிகள் தாங்கள் செய்கிற ஒறுத்தல் முயற்சியைச் செபமாலை மணியில் எண்ணிக்கொண்டு ஒவ்வொரு நாளைக்குள்ளே செபமாலையை முழுதுமுடித்துக்கொண்டு வந்தார்களென்று அறிந்திருக்கிறோம். இதினாலே இவர்கள் புண்ணியத்தில் மிகவும் வர்த்தித்ததாகக் காணப்பட்டது. இவர்களை நாமும் கண்டுபாவிக்கக் கடவோம். நாலாவது, நாம் செய்யக் கடமையான காரியங்களை முதலாய் நமக்குப் பிரியமாயிருக்கிறதினாலே செய்யாமல் சர்வேசுரன் கற்பிக்கிறதினாலே செய்துகொண்டு வரவேண்டும். இந்த முயற்சி மிகவும் மேலான புண்ணிய சாங்கோபாங்கத்துக்கடுத்ததாயிருக்கிறதினாலே, நமது சீவியகால முழுதும் இதை நிறைவேற்றிக்கொண்டு வரலாம்.

அன்றியும் நாம் இப்போது சொல்லிக்காட்டின பிரகாரம் ஒறுத்தல் முயற்சி செய்யும்போது, இதைத் தேவ சித்தத்தோடு ஒன்றித்தல் முயற்சிபோலே செய்துகொண்டு வரலாம். இதற்காகச் சர்வேசுரன் நமதுபேரிலுள்ள சிநேகத்தினாலே நமக்கு நன்மையாக இந்த ஒறுத்தல் சமயங்களை அனுப்புகிறாரென்றும் இயேசுநாதர் நம்மைப் பார்த்து என் மகனே, நீ இதைச் செய்யவேணுமென்று அல்லது இதை இப்போது பட்டநுபவிக்கவேணுமென்று நாம் சித்தமாயிருக்கிறோமென்று சொல்லுகிறதுபோலே உருபிகரித்துக்கொண்டு எல்லாத்தையும் அவர் கையிலிருந்து பெற்றுக்கொள்ள வேண்டும். ஏனென்றால் இப்படிச் செய்கிறதினாலே, இந்த முயற்சி அதிக எளிதும் இன்பமும் ஆவதுமன்றி இது தேவ சிநேக முயற்சியாகையால் சகலமும் எளிதும் பிரியமுமாயிருக்கும். தேவ சித்தத்தை நிறைவேற்றுகிறோம்; சர்வேசுரன் நம்மிடத்தில் கேட்கிற காரியமிதுதான் என்கிற நினைவு இதுகாரியத்தில் நம்மைத் தத்தளிக்கவிடாமல் ஸ்திரமாய் உறுதிப்படுத்தும்; நமது கிரிகைகளைச் செய்வதற்கு இது மகா பிரயோசனமும் உத்தமமுமான முகாந்தரமாகும்.

அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஜியா சரித்திரத்தில் எழுதியிருக்கிற வர்த்தமானமாவது: அவர் ஒரு நாள் நவசந்நியாசிகள் மடமிருந்த சீமாங்காவென்னும் பட்டணத்துக்குப் போவதற்காக வல்லதோலிதென்னும் பட்டணத்தைவிட்டு வெகு தாமதம் சென்று புறப்பட்டார். வழியிலே வெகுபனி பெய்து வெகு குளிர்காற்று அடித்ததினாலே, இராத்திரியில் வெகுநேரத்துக்குப் பிறகு அந்த மடத்துக்கு வந்து சேர்ந்தார். அப்போது நவசந்நியாசிகள் எல்லாரும் படுத்துத் தூங்கினார்கள். வெ





குநேரம் அவர் மடத்து வெளிக்கதவைத் தட்டிக்கொண்டிருந்தார்; பனி வெகுவாய்ப் பெய்துக்கொண்டிருந்தது; வெளிக்கதவு மடத்துக்கு வெகு தூரமாயிருந்ததினாலேயும் சந்நியாசிகளுக்கு முன்தூக்கமாயிருந்ததினாலேயும் வெகுநேரம் வரைக்கும் அவர் தட்டின சத்தத்தை ஒருவரும் கேட்கவில்லை. கடைசியாய்க் கேட்டுக் கதவைத் திறந்துவிட்டார்கள். தங்கள் பிதாவை அவ்வளவு நேரம் காக்கவைத்ததினாலேயும் அவர் குளிர்பிடித்து நடுங்கிறதையுங்கண்டு நவசந்நியாசிகள் வெகு கஸ்திப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர் சிரித்துக்கொண்டு சொன்னதாவது: தம்பிமாரே, கஸ்திப்படாதேயுங்கள்; நாம் காத்துக்கொண்டிருந்த அந்த நேரமுழுதும் சர்வேசுரன் நமக்கு மகா மேலான ஞான ஆறுதலை அளித்தருளினார். ஏனென்றால் நமதுமேலே பனி பெய்யவும் குளிர்காற்றடிக்கவும் செய்தவர் அவர்தானே. அவர் செய்கிறதெல்லாம் அளவில்லாத தாற்பரியத்தோடும் சந்தோஷத்தோடும் செய்கிறதினாலே, அவர் நம்மை ஒறுத்த நிமித்தமாக நாமும் அக்களித்துச் சந்தோஷப்படவேணுமென்று நினைத்து வெகு ஞான ஆறுதலைச் சுகித்தநுபவித்தோம். சிலவிசை இராசாக்களுக்குப் பிரியமாகச் சிங்கங்களையும் எருதுகளையும் கொல்லுகிறார்களல்லோ? இதிப்படியானால், சர்வேசுரனுக்குப் பிரியப்படுவதற்காக நாம் என்னென்ன வருத்தப்பட்டாலும், அதுவெல்லாம் போதுமோவென்றார். ஆகையால் நம்மை ஒறுப்பதற்கு நேரிடுகிற சகல சமயங்களிலும் தேவ சித்தம் நம்மிடத்தில் நிறைவேறுகிறதைக் கண்டு களிகூர்ந்து ஒறுத்தல் முயற்சிசெய்து கொள்ளவேண்டும்.

## ௰௪-ம் அதிகாரம்.

*நம்மிடத்தில் ஆட்கொண்டு நம்மைக் கனமான குற்றங்களில் விழத் தாட்டுகிற பிரதான துர்க்குணம் ஆசாபாசத்தை விசேஷமாய் ஒறுத்து அடக்க வேணுமென்பதின் பேரில்.*

அரசராகமத்தின் முதல் புத்தகத்தில் சொல்லியிருக்கிறதாவது: அமலேசித்தென்பவர்களில் ஆண் பெண் பெரியோர் சிறியோர் முதற்கொண்டு எல்லாரையும் முழுதும் சங்கரித்து அவர்களுடைய ஆடு





மாடு முதலிய சகல மிருகங்களையும் கொன்றுபோட வேணுமென்று சர்வேசுரன் சமுவேலென்னும் தீர்க்கதரிசி வாயாலே சவுலென்னும் இராசாவுக்குக் கற்பித்திருந்தார். ஆயினும் வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, சவுலும் சகல ஜனங்களும் ஆகாக்கென்னும் இராசாவையும் அவன் ஆடு மாடு கொள்ளைப் பொருளில் நேர்த்தியாயிருந்ததெல்லாத்தையும் வைத்துக்கொண்டு ஒன்றுக்கும் உதவாததையெல்லாம் அழித்துப்போட்டார்கள். அநேகர் இவர்களைப்போலே நடக்கிறார்கள். அற்பக் காரியங்களில் தங்களை ஒறுப்பார்கள்; ஆனால் முக்கியமாயிருக்கிற கனமான காரியங்களில் தங்களை ஒறுக்காமல்த் தங்கள் கெட்ட வழக்கங்களில் நிலைக்கொள்ளுவார்கள். இவர்களுக்கு நாம் சொல்லுகிறதாவது: உங்களிடத்திலுள்ள தலையான துர்க்குணம் என்னவென்றும் நீங்கள் மிகவும் பற்றுதல் வைத்திருக்கிற காரியம் என்னவென்றும் விசேஷமாய் யோசித்துப் பார்த்து அதை ஒறுத்துச் சர்வேசுரனுக்குப் பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டும். ஏனென்றால் சமுவேல் என்ன செய்தார்? சவுலிடத்திலே போய்ச் சர்வேசுரன் பேராலே அவனை வெகுவாய்க் கடிந்துகொண்டு அமலேசித்து இராசாவாகிய ஆகாக்கென்பவனை அழைத்துக்கொண்டு வரச்சொன்னார். கொழுத்த ஆகாக்கென்பவன் பயத்தினாலே நடுங்கிக்கொண்டு வந்தான். கர்த்தருக்கு முன்பாகச் சமுவேலென்பவர் அவனைக் கண்டந் துண்டமாய் வெட்டிப் போட்டாரென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. நீயும் செய்யவேண்டியது இதுவே; அமலேக்கென்றுரைய இராசாவைக் கொல்லவேண்டும். அதாவது, உன்னிடத்தில் ஆட்கொண்டிருக்கிற பிரதான துர்க்குணத்தை ஒறுத்து அதைச் சர்வேசுரனுக்குப் பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டும். உன்னிடத்தில் நிறைந்திருக்கிற ஆங்காரத்தை வீண் மகிமையை கீர்த்தியின்பேரில் உன்னிடத்திலுள்ள ஆவலை பொறுமையை அடங்காத உன் முரட்டுக் குணத்தை ஒறுந்து அடக்கிச் சர்வேசுரனுக்குப் பலியாகக் கொடு.

இன்னம் சிலர் உண்டு. அவர்கள் வெளிப் பார்வைக்கு அர்ச்சியசிஷ்டவர்கள்போலேயும் அடக்க ஒடுக்கமுள்ளவர்கள்போலேயும் சகலத்திலும் நன்மாதிரிகையுள்ளவர்கள்போலேயும் காட்ட வருந்திப் பிரயாசப்படுவார்கள். முக்கியமான ஆத்தும ஒறுத்தலைக் கனவிலும் நினைக்க மாட்டார்கள். இவர்கள் தங்கள் சுயமனசு சுயஎண்ணத்தில் பிடிவாதமாய் ஊன்றி நின்று மகிமையும் பெருமையும் அடைவதற்கு மற்ற

வர்களைவிட ஆசைப்படுவார்கள். பழைய வேதத்திலிருந்த வேதபாரகருக்கும் பரிசேயருக்கும் இயேசுநாதர் சொன்னதை இவர்களுக்கும் சொல்லலாம். அதெதென்னவென்றால், வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு நிர்ப்பாக்கியம். வசியையும் கோப்பையையும் வெளிப்பக்கத்திலே கழுவிச் சுத்தம்பண்ணுகிறீர்கள் ; ஆகிலும் உள்ப்புறம் அசுத்தமும் நரகலுமாயிருக்கின்றது. குருட்டுப் பரிசேயரே, வசியையும் கோப்பையையும் முந்த முந்த உட்புறத்தில் கழுவிச் சுத்தம்பண்ணுங்கள் ; அப்போது வெளிப்பக்கமும் சுத்தமாயிருக்குமென்றார். ஆகையால் நீ வெளிப் பார்வைக்குப் பரிசுத்தனாகும் பொருட்டு முந்த முந்த உன் ஆத்துமத்திலுள்ள துர்க்குணங்களை ஒறுத்துத் தள்ளிச் சுத்தம்பண்ணு. ஏனென்றால் உன்னிடத்தில் தோன்றுகிற இந்த வெளி அடக்க ஒடுக்கம் மன சமாதானத்தினாலும் அமரிக்கையினாலும் வராவிட்டால், உன் அடக்க ஒடுக்கம் உதவாத கள்ள ஞானந்தானே. இதினாலே இரட்சகர் பரிசேயரை நோக்கிச் சொன்னதாவது : நீங்கள் வெள்ளையடித்த கல்லறைபோலிருக்கிறீர்கள் ; அது மனிதருடைய பார்வைக்கு அழகாய்த் தோன்றும் ; ஆனால் அதுக்குள்ளே செத்த பிரேதத்தின் எலும்பும் புழுத்த நாற்றமும் வீசுமென்றார். அவ்விடத்திலேதானே இயேசுநாதர் திருவுளம்பற்றினது இங்கே நாம் சொல்லுகிறதை இன்னம் நன்றாய் ஒப்பித்துக் காட்ட உதவும். அதெதென்னவென்றால், வேதபாரகரே, கள்ள ஞானிகளான பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு நிர்ப்பாக்கியம். நீங்கள் துளசியிலும் சீரகம் வெந்தயத்திலும் பத்திலொருபங்கு கோவிலுக்குக் காணிக்கைக் கொடுக்கிறீர்கள் ; ஆனால் வேதத்திலே முக்கியமாயிருக்கிற நீதியையும் இரக்கத்தையும் விசுவாசத்தையும் அசட்டைபண்ணினீர்களென்றார். இவ்வாக்கியம் நாம் இங்கே சொல்லுகிற சத்தியத்தை உத்தமமாய் ஒப்பித்துக் காட்டுமென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால், அற்பக் காரியங்களிலும் வருத்தமில்லாத சமயங்களிலும் தங்களை ஒறுக்கிறவர்கள் வெகுபேர் உண்டு. ஆனால் வருத்தமான காரியங்களிலும் தங்களைச் சுருக்கென்று குற்றுகிற சமயங்களிலும் ஒறுத்தலை இவர்கள் அநுசரிக்கமாட்டார்கள். ஆகிலும் இச்சமயங்களிலேதான் விசேஷமாய் ஒறுத்தல் முயற்சி செய்யவேண்டும். நம்மிடத்தில் ஆட்கொண்டு நம்மைப் பற்றி இழுத்துக் கனத்த ஆபத்துக்குள்ளாக்கிப் பாரிக் குற்றங்களில் நம்மை விழத்தாட்டுகிற ஆசாபாசம் துர்க்குணம் பற்றுதல் முதலிய கெட்ட வழக்கத்தை விசேஷமாய் ஒறுத்துத் தள்ளவேண்டும். மற்றதுகளைவிட அதிக ஆபத்துக்குரிய சண்






டை செய்து புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு விக்கினமாயிருக்கிற காரியம் எதாகிலும் சகலரிடத்திலும் இருக்குமென்று அநுபவசித்தியினுலே கண்டிருக்கிறேம். ஒவ்வொருவரும் இதை விசேஷமாய்க் கவனித்து இதை ஒறுத்து வேரோடு பிடுங்கும் பொருட்டுப் பிரயாசப்படவேண்டும். தனி ஆத்தும சோதனையிலும் செபத்தியானத்திலும் விசேஷமாய் இதின்பேரில் கண்ணுண்டாயிருக்கவேண்டும்; சகலரும் இதைத் திருத்திக்கொள்ளுகிறது மிகவும் அவசரமாமே.

——(:o:)——

## ௰௫-ம் அதிகாரம்.

அற்பக் காரியங்களிலும் ஒறுத்தல் முயற்சியை விடப்படாதென்றும்
இவ்வித ஒறுத்தல் சர்வேசுரனுக்கு எவ்வளவு பிரியமும்
நாம் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு எவ்வளவு
பிரயோசனமுமாய் இருக்குமென்றும்
சொல்லுவது.

கனமான காரியங்களில் கண்ணுண்டாயிருந்து அற்பக் காரியங்களை அசட்டைப் பண்ணப்படாது. அற்ப ஒறுத்தல் முயற்சியை அசட்டை பண்ணி இது சொற்பக் காரியமென்றும் புண்ணியத்திலும் சாங்கோபாங்கத்திலும் வர்த்திப்பதற்கு இது உதவியல்லவென்றும் எண்ணி இதை நிந்திக்கிறவர்களுக்கு இங்கே புத்தி சொல்ல எத்தனிக்கிறேம். இவர்களுடைய எண்ணம் மிகவும் தப்பிதமானது. கள்ள ஞானிகளான வேதபாரகரையும் பரிசேயரையும் இயேசுநாதர் கடிந்துகொண்டபோது, இந்தப் புத்தியை நமக்குப் போதித்திருக்கிறுர். ஏனென்றுல் அவர்கள் அற்பக் காரியத்தைக் கவனித்ததினுலே அவர்களைக் கண்டியாமல் பெரிய காரியங்களை விட்டுவிட்டதினுலே கண்டித்திருக்கிறுர். இதினுலல்லோ இதையும் செய்யவேண்டும், அதையும் விடப்படாதென்றுர். அற்பக் காரியங்களைக் கனமாய் எண்ணவேண்டும்; அதுகளை அசட்டை பண்ணப்படாதென்று நாம் ஏற்கனவே அநேக இடங்களில் சொல்லியிருக்கிறேம். இது மிகவும் கனமான காரியமாயிருக்கிறதினுலே, இதை அடிக்கடி சொல்லத் தகும். இல்லாவிட்டால்





அசமந்தமும் தாறுமாறும் நமது இருதயத்தில் பிரவேசிக்குமென்று பயப்படுகிறதற்கு இடமுண்டு. ஆகிலும் இவ்விடத்தில் ஒறுத்தல் முயற்சியைக் குறித்து மாத்திரம் பேசுவோம். இதற்காக அற்ப ஒறுத்தல் முயற்சி எவ்வளவு பிரயோசனமென்றும் அதை அசட்டைபண்ணுகிறது எவ்வளவு மோசமென்றும் ஆக இவ்விரண்டு சத்தியத்தையும் விளக்கிக் காட்டுவோம். அற்ப ஒறுத்தல் முயற்சியும் சர்வேசுரனுக்கு எவ்வளவு பிரியமும் நமக்கு எவ்வளவு பேறுபலனும் உள்ளதென்று அறிந்துகொள்ளுவதற்காக ஒரு காரியத்தை யோசிக்கவேண்டும். அதென்னவென்றால், சரீர தபசு செய்கிறது முக்கியமான ஒறுத்தலல்ல; தன் மனதை மறுதலித்து அடக்குகிறதே ஒறுத்தலென்று சொல்லப்படும் இயேசுநாதர் சுவிசேஷத்தில் நம்மிடத்திலே கேட்கிற மெய்யான மறுதலிப்பும் மெய்யான ஒறுத்தலும் இதுவே. கனமான காரியங்களில் நமது மனதை மறுதலிப்பதுபோலே, அற்பக் காரியங்களிலும் அதை மறுதலித்து ஒறுக்கலாம். அற்பக் காரியம் நமது குணத்துக்கு அதிக விரோதமாயிருந்தால், அதை ஒறுக்கிறது அதிக பிரயோசனமும் அதிக பேறு பலனுமாயிருக்கும். பெரிய காரியங்களிலே நமக்குண்டாகும் வருத்தத்தைப் பார்க்க அநேக முறை அற்பக் காரியங்களிலே அதிக வருத்தமுண்டாகிறதென்று தினந்தோறும் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிறோம்; ஏனென்றால் மன விரோதத்தை ஒறுக்கிறதே தபசாகும். நாம் ஒறுக்கிற காரியம் அற்பமாயிருந்தாலும் பெரிதாயிருந்தாலும் பறவாயில்லை; எந்தக் காரியத்தில் நம்மை ஒறுத்தாலும் சரி; தேவ சிநேகத்துக்காக நமது மனதோடு யுத்தம் பண்ணி அதைச் செயிக்கிறதினாலே, நமது மனதைச் சர்வேசுரனுக்குப் பலியாக ஒப்புக்கொடுக்கிறோமென்பதற்குச் சந்தேகமில்லை. நமது மனதொன்றே எல்லாத்தையும் விட நமக்குப் பிரியமாயிருக்கிறதினாலே, அதை ஒறுத்துப் பலியிடும்போது, எல்லாத்தையும் சர்வேசுரனுக்குப் பலியாக ஒப்புக்கொடுக்கிறோமென்று சொல்லலாம்.

வேதாகமத்தில் இது காரியத்திலே தாவீதென்பவரைக் குறித்துச் சொல்லியிருக்கிற வர்த்தமானத்தை அர்ச். அம்பிரோசியார் எடுத்துக் காட்டியிருக்கிறார். அதென்னவென்றால், தாவீதென்பவர் ஓர் தடவை பிலிஸ்தினருக்கு எதிர் முகமாய்த் தாணையம் இறங்கியிருக்கும்போது, அவர் படைக்குத் தண்ணீர் இல்லாதிருந்தது. அப்போது அவர் ஒ! ஒ! பெத்தலேம் பட்டணத்திலுள்ள கிணற்றுத் தண்ணீரை



யாதொருவன் கொண்டுவந்தால், எவ்வளவு நலமாயிருக்குமென்ருர். ஆனல் இந்தக் கிணறு சத்துருக்கள் பாளையத்துக்கு அப்பாலே இருந்தது. ஆகிலும் மூன்று வீரசூரர் இதைக் கேட்டு உடனே புறப்பட்டு இருமுறை பிலிஸ்தினருடைய படையைத்தாண்டி அந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தார்கள். ஆகிலும் வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே தாவீதென்பவர் அதைக் குடியாமல் கர்த்தருக்கு அதைப் பான நைவேத்தியம்பண்ணி ஒப்புக்கொடுத்தார். ஒரு குடம் தண்ணீரைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கிறது பெரிய பலியோவென்று கேட்பாயாக்கும். இதற்கு அர்ச். அம்புரோசியார் சொல்லுகிறதாவது : ஆம், இது மகா பெரிய பலிதான் ; சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமான பலி இதுவே. வேதாகமத்தில் இது வெகு காரியம்போலே சொல்லியிருக்கிறதினலே, இது பெரிய பலியென்று நாமும் நிச்சயித்துக்கொள்ளவேண்டும். ஆனல் என் இது பெரிய பலியென்று அறியவேணுமோ ? அர்ச். அம்புரோசியார் சொல்லுகிறதைக் கேள். அவர் கொடூர தாகமாயிருக்கும்போது, அதைக் குடியாததினலே தமது மனதைச் செயித்துத் தமது படைமுழுதும் தாகத்தைப் பொறுத்துக்கொள்ளவேணுமென்று நன்மாதிரிகை காண்பித்தாரென்ருர்.. இது காரியத்திலே ஒரு குடம் தண்ணீரை மாத்திரம் அவர் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கவில்லை ; தமது மனசை முழுதும் அவருக்கு ஒப்புக்கொடுத்தார். ஆகையால் அற்பக் காரியத்திலும் நம்மை ஒறுக்கும்போது, நமது மனதை முழுதும் சர்வேசுரனுக்குப் பலியாகக் கொடுக்கிறதினலே இது மிகவும் மேலான பலியென்பதற்குச் சந்தேகமில்லை; தேவ மகத்துவத்துக்கு எப்போதும் மிகவும் பிரியமான பலியிதுவே.

தாவீதென்பவருக்கு நடந்த வேருெர் சங்கதியை அர்ச். கிரெகோரியார் எடுத்துக் காட்டியிருக்கிருர். அர்ச். அம்புரோசியாரும் இந்த வர்த்தமானத்தை வெளிப்படுத்தியிருக்கிருர். அதென்னவென்ருல், அரசராகமத்தின் இரண்டாம் புத்தகத்தில் சொல்லியிருக்கிறதாவது : தாவீதென்பவர் உடன்படிக்கைப் பெட்டகத்தை வெகு ஆரபாரத்தோடு சீயோன் பட்டணத்துக்குக் கொண்டுபோகச் செய்தார். அக்காலத்திலே உடன்படிக்கைப் பெட்டகத்தை ஓர் இடத்திலிருந்து வேருெர் இடத்துக்குக் கொண்டுபோகும்போது, ஆடுகிறது வழக்கமாயிருந்ததாகத் தோன்றுகிறது. இக்காலத்திலே முதலாய்த் தேவ நற்கருணைச் சுற்றுப்பிரகாரத்தில் இஸ்பாஞீயா தேசத்துச் சனங்கள் ஆடுகிறதைக் க



ண்டு வருகிறோம். ஆகையால் பெரிய இராசாவாகிய தாவீதென்பவர் தமது மகிமையையும் மகத்துவத்தையும் பாராமல் இராசாவுக்குரிய வஸ்திரங்களை உரிந்துபோட்டுக் கூத்தாடிபோலே உடன்படிக்கைப் பெட்டகத்துக்கு முன்பாக ஆடிக்கொண்டு போனார். இதினிமித்தம் அவருடைய பெண்சாதியாகிய மிக்கோலென்பவள் கூத்தாடிபோலே ஆடிப் பாடினீரென்று அவரைப் பிறக்கணித்துச் சொன்னாள். தாவீதிராசா இப்படி ஆடினதைத் தியானித்து அர்ச். கிரெகோரியார் ஆச்சரியப்பட்டுச் சொல்லுகிறதாவது : மற்றவர்கள் இதின்பேரில் என்னசொல்லுவார்களென்று எனக்குத் தெரியாது; தாவீதிராசா சிங்கங்களைவெட்டிக் கொலியாத்தைக் கொன்று பிலிஸ்தீனரைச் சங்கரித்ததைப் பார்க்கக் கூத்தாடிபோலே உடன்படிக்கைப் பெட்டகத்துக்குமுன் ஆடினதைக் கண்டு நாம் ஆச்சரியப்படுகிறோம். மேற்சொன்ன வெற்றிக்கொள்ளும்போது, துஷ்டமிருகங்களைக் கொன்று சத்துருக்களைச் செயித்ததே அவருக்குக் கிடைத்த மகிமை; ஆனால் உடன்படிக்கைப் பெட்டகத்துக்குமுன் ஆடும்போது, தன்னைத்தானே செயித்தார். மற்றவர்களைச் செயிக்கிறதைவிடத் தன்னைச் செயிக்கிறது அதிக வருத்தமும் அதிக மகிமையுமாகுமென்றார்.

ஆகையால் அற்ப ஒறுத்தல் முயற்சிகளை வெகு கனமாய் எண்ணி அதைப் பிறக்கணியாமலிருக்கக் கடவோம். இப்படிப் பிறக்கணித்தால், இதினிமித்தம் தாவீதென்பவரைப் பிறக்கணித்து நிந்தித்துக் கோபித்துக்கொண்ட மிக்கோலென்பளைப்போலே தேவ கோப ஆக்கினையால் மலடராய்ப் போவோமென்று பயப்படுகிறதுக்கு இடமுண்டு. அற்பக் காரியத்தில் உன்னை ஒறுக்க ஐயுறவுப்பட்டுச் சொற்பக் காரியங்களை அசட்டைபண்ணி இது பிள்ளைகளுக்கும் நவசந்நியாசிகளுக்கு மாத்திரம் தகுந்தது, எனக்குத் தகாததென்று இவைகளைச் சரியாய் அநுசரித்துவர வெட்கப்பட்டால், இதினாலே உன் செபத்தியானத்திலும் பிறர் ஈடேற்றத்துக்காக நீ செய்கிற அலுவலிலும் பிரயோசனப்படாமல் மலடாகி ஞானப் பிள்ளைகளில்லாமல் வறண்டுபோவாயென்று பயப்படுகிறதற்கு இடமுண்டு. விசேஷமாய் மற்றவர்கள் அற்பக்காரியங்களில் சரியாய் நடக்கிறதைக் கண்டு நீங்கள் கொஞ்சப் புத்தியுள்ளவர்களென்று கேலிபண்ணி நிந்தித்தால், மேற்சொன்ன ஆக்கினை உங்களுக்கு வருவதற்கு அதிக இடமுண்டு. இப்படிக் கேலிபண்ணி நிந்திக்கிறது மிகவும் ஆபத்துக்குரிய காரியமானதினாலே இதின்பே

ரில் மகா எச்சரிக்கையாயிருக்க வேண்டும். மற்றவர்கள் புண்ணிய வழியை விட்டுவிடுவதற்கு இது காரணமாயிருக்கும். மிக்கோலென்பவனுக்குத் தாவீதரசன் சொன்ன மறுமொழி ஆச்சரியத்துக்குரியதாகும். அதென்னவென்றால், உன் தகப்பனுக்குப் பதிலாக என்னைத் தெரிந்துகொண்ட கர்த்தாவுக்குமுன் விளையாடுவேன். நாள்தோறும் அதிகமதிகமாய் என்னைத் தாழ்த்தி நிந்தைக்குரியவனாவேனென்றார். இது காரியத்தில் அர்ச். பெர்நர்துஸ் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது: ஓகோ! சர்வேசுரனுக்குப் பிரியமும் மிக்கோலென்பவனுக்குப் பொருந்தாததுமான இந்த விளையாட்டு எவ்வளவோ புகழ்ச்சிக்குரியது! இது மனுஷருக்கு நிந்தைக்குரியதாகவும் சம்மனசுகளுக்குப் பிரியமானதாகவும் தோன்றும். நாம் உலோகத்துக்கும் சம்மனசுகளுக்கும் மனுஷருக்கும் பார்வைக்குறியானோமென்று சொன்ன அர்ச். சின்னப்பர் இவ்வித விளையாட்டு விளையாடப் பழகியிருந்தார். நாமும் மற்றவர்கள் என்னசொல்லுவார்களென்று பயப்படாமல் இவ்வித விளையாட்டில் பழகப் பிரயாசப்படக் கடவோம். உலகம் நம்மை நிந்திக்கும்பொருட்டு விளையாடக் கடவோமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். அப்போது நாம் உலகத்துக்கும் சம்மனசுகளுக்கும் ஆச்சரியமாகவும் சர்வேசுரனுக்குப் பிரியமாகவும் இருப்போம்.

---

## ௰௬-ம் அதிகாரம்.

*அற்பக் காரியங்களில் ஒறுத்தல் முயற்சி செய்யாமல் அசட்டையாயிருக்கிறது ஆபத்துக்குரிய காரியமென்று சொல்லுவது.*

அற்ப ஒறுத்தல் முயற்சிகளைப் பிறக்கணித்து அசட்டைபண்ணுகிறது மோசத்துக்குரிய காரியமென்று நாம் இப்போது சொன்னதை யோசித்தால், எளிதாய் அறிந்துகொள்ளலாம். ஏனென்றால் நாம் ஒறுக்காமல் விட்டுவிடுகிற காரியம் எப்படிப்பட்டதென்று கவனிக்கப்படாது. தேவ சிநேகத்துக்காக அற்பக் காரியங்களிலும் நமது மனதைச் செயிக்காமல் போகிறோமே; இதை மாத்திரம் கவனிக்கவேண்டும். இன்னம் இது காரியத்தில் வேறொரு பெரிய பொல்லாப்புமுண்டு; அதை யோசித்துப் பார்க்கவேண்டும். அதென்னவென்றால், அற்





பக் காரியங்களில் ஒறுத்தல் முயற்சி செய்யாவிட்டால், சன்னம் சன்னமாய்க் கனமான காரியங்களிலும் நமது மனதுபோலே நடக்கப் பழகுவோம். இந்தப் பழக்கத்தினாலே நமது சுயமனசு ஸ்திரப்பட்டு வேறெந்தக் காரியத்திலேயும் அடங்காமற்போகும். சொற்ப ஒறுத்தல் முயற்சிகளைச் செய்யாமல் விடுகிறதினாலே வருகிற பொல்லாப்புத் துவக்கத்திலே தெரியாது; ஏனென்றால் நமது சுயமனசு துவக்கத்திலே சின்ன சிங்கக் குட்டிபோலேயிருக்கும். ஆனால் கொஞ்சத்துக்குள்ளே இந்தச் சிங்கக் குட்டி அடங்காத கொடிய சிங்கமாகும்; அப்புறம் இதை அடக்குகிறது கூடாத காரியம். சகல தின்மைகளுக்கும் பாவத்துக்கும் நரகத்துக்கும் நமது சுயமனசே காரணம். சுயமனசில்லாவிட்டால், நமக்கு நரகமே கிடையாதென்று அர்ச். பெர்னர்துஸ் வசனித்தார். ஆனால் நாம் சொன்னபடி அற்பக் காரியங்களில் நம்மை ஒறுப்பதினாலே நமது மனதைச் செயித்து அது தன் பிரியம்போலே நடவாதபடிக்கு அடக்குவோம். முந்த முந்த அற்பக் குற்றங்களில் நம்மை விழத்தாட்டிச் சொற்பச் செயங்கொண்டு நம்மைப் பலவீனப்படுத்தி அப்புறம் நமது பேரில் பெரிய செயங்கொள்ளும்; ஆகையால் அற்பக் காரியங்களிலே நம்மை ஒறுத்துச் செயிக்கப் பிரயாசப்படக் கடவோம்; இப்படி நடந்தால், கனமான காரியங்களில் பசாசு நம்மைச் செயிக்கக் கூடாமற்போகுமென்று ரிக்கார்துசென்பவர் சொல்லியிருக்கிறார். இன்னமும் அவர் தானே சொல்லுகிறதாவது: அற்பக் காரியங்களில் நம்மை ஒறுக்கத்துவக்கவேண்டும்; இதிலே நாம் அடைகிற செயத்தைக்கொண்டு பெரிய காரியங்களில் நம்மைச் செயிக்கலாமென்றார். காசியானும் இந்தப் புத்தி சொல்லியிருக்கிறார். இதை விளக்கிக் காட்டுவதற்காக அவர் சொல்லுகிறதாவது: நீ எழுதுகிற இறகை நன்றாய்ச் சீவவில்லையென்றும் கத்தி மொட்டையாய் இருக்கிறதென்றும் உனக்குக் கோபம் வரும்போது, இது எவ்வளவு சொற்பக் கோபமாயிருந்தாலும், இதை அடக்கவேண்டும். ஏனென்றால் இதிலே நீ அடைகிற செயத்தைக்கொண்டு கனமான சமயங்கள் நேரிடும்போதும் உன்னைத் தானே ஒறுத்துக்கொள்ளுவாய்; நிந்தை அவமானப்படும்போது, மனசமாதானத்தையும் பிறசிநேகத்தையும் காப்பாற்றுவதற்குப் புதிதான பெலன் உனக்குண்டாகுமென்றார்.

நாம் மன உச்சாயமாய் அற்பக் காரியங்களில் செய்கிற ஒறுத்தல் முயற்சியிலே வேறொரு பிரயோசனமுமுண்டு. அதென்னவென்றால்,





நாம் இந்த முயற்சியைச் செய்துகொண்டுவந்தால், பசாசின் சோதனை
யினுலே நமக்கு அத்தனை மோசம் வராமற்போகும். தேயோதோரே
த்தென்பவர் சொல்லுமாப்போலே, அர்ச். எவுசேபியார் இதினிமித்தம்
இடைவிடாமல் இந்த முயற்சியைச் செய்துகொண்டு வருவார். என்
இந்த முயற்சியை இவ்வளவு ஊக்கமாய்ச் செய்துகொண்டுவருகிறீரெ
ன்று இந்த அர்ச்சியசிஷ்டவரிடத்தில் கேட்டதற்கு அவர் சொன்னதா
வது : நான் பசாசுக்குச் சூது பண்ணுகிறேன் ; அது ஆங்காரம் மோ
கம் போருமை முதலிய பெரிய சோதனைகளைக் கொண்டு என் ஆத்து
மத்துக்கு மோசம் பண்ணுதபடிக்கு அற்பக் காரியங்களிலும் என்னை
ஒறுத்துக்கொண்டுவருகிறேன் ; அற்பக் காரியங்களில் நான் தோர்வை
ப்பட்டால், அதினுலே பெரிய பொல்லாப்பு வராது; இதிலே நான் செ
யங்கொண்டால், அற்பக் காரியத்திலே முதலாய்ப் பசாசு தான் செய
ங்கொள்ளக் கூடவில்லையென்று கண்டு வெட்கி நாணிப்போகுமென்று
ர். இது காரியத்தை நாம் நன்றாய்க் கவனிக்க வேண்டும்; ஏனென்றால்
இது தேவ ஊழியர் ஒப்பித்துக் காட்டின சத்தியமாமே. ஆகையால்
அற்பக் காரியங்களில் நீ உன்னை ஒறுத்துக்கொண்டு வருமட்டும் பசா
சு அற்பக் காரியத்திலே மாத்திரம் உனக்குச் சோதனை செய்து சொ
ற்ப ஒறுத்தலை மாத்திரம் விலக்கப் பிரயாசப்படும். இதிலே உனக்குச்
சிலவிசை தோர்வை வந்தாலும், இது வெகு பொல்லாப்பாயிராது. ஆ
னால் நீ இந்த முயற்சியைக் கைவிட்டு அற்பக் காரியத்திலே பசாசுக்கு
ம் சரீரத்துக்கும் விரோதமாய்ச் சண்டை போடாதிருந்தால், இவ்விர
ண்டு சத்துருவும் அதிக ஆபத்துக்குரிய கனமான சோதனையை உன
க்கு வருவிக்கும். அதுக்கு நீ இடங்கொடுத்தால், கனத்த மோசம் வந்
து விடியுமென்பது நிச்சயம்.

அர்ச். அகுஸ்தீன் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது : கிறீஸ்
துவனொருவன் ஈயினுலே தனக்கு வந்த வருத்தத்தின் நிமித்தம் கோப
மாயிருந்தான். இப்படி இருக்கும்போது, மாணிக்கேயனென்னும் ஓர்
பதிதன் அவனைப் பார்க்க வந்தான். அப்போது கிறீஸ்துவன் ஈயினுலே
தனக்கு வந்த வருத்தத்தை அவனிடத்தில் சொல்லிக் காட்டினான்.
காணக்கூடாத வஸ்துக்களைச் சர்வேசுரன் படைத்தாரென்றும் காண
க்கூடிய வஸ்துக்களைப் பசாசு படைத்ததென்றும் சொல்லுகிறது இந்
தப் பதிதருடைய தப்பறையாகும். இந்தத் தப்பறைக்கு விரோதமாய்
க் காணக்கூடியதும் காணக்கூடாததுமான சகல வஸ்துக்களையும் சர்





வேசுரன் படைத்தாரென்று பூசையில் சொல்லுகிற விசுவாச மந்திரத்திலே திருச்சபை சேர்த்து வைத்திருக்கின்றது. இதினாலே கண்ணுக்குக் காணாத அசரீரியான வஸ்துக்களையும் கண்ணுக்குக் காணக்கூடுமான கண்டிப்புள்ள வஸ்துக்களையும் சர்வேசுரன் படைத்தாரென்று அங்கீகரித்துக்கொள்ள வேண்டும். மேற்சொன்ன மாணிக்கேயன் தன் தப்பறையை அந்தக் கிறிஸ்துவனுக்கு ஒப்பித்துக் காட்ட இது நல்ல சமயமென்றெண்ணி அவனைப் பார்த்துச் சொன்னதாவது : இந்த ஈயை ஆர் படைத்ததென்று நினைக்கிறுயென்றான். ஈயினாலே தனக்கு வருத்தம் உண்டாயிருந்ததினாலே, இதைச் சர்வேசுரன் படைத்தாரென்று கிறீஸ்துவன் சொல்லத் துணியவில்லை. அப்போது மாணிக்கேயன் சொன்னதாவது : இதைச் சர்வேசுரன் படைக்காவிட்டால், ஆர் படைத்ததென்றான். அதுக்குக் கிறீஸ்துவன் இதைப் பசாசு படைத்ததென்று நினைக்கிறேனென்றான். ஈயைப் பசாசு படைத்திருந்தால், அதுக்குக் கொஞ்சம் பெரிதாயிருக்கிற தேனீயை ஆர் படைத்ததென்றான். அப்போது ஈயைச் சர்வேசுரன் படைக்கவில்லையென்று அந்தக் கிறிஸ்துவன் ஒத்துக்கொண்டதினாலே, தேனீயை அவர் படைத்தாரென்று சொல்லத் துணியவில்லை. ஈக்கும் தேனீக்கும் கொஞ்ச வித்தியாசமாத்திரம் இருப்பதினாலே, ஈயைச் சர்வேசுரன் படையாதிருந்தால், தேனீயையும் அவர் படைத்திருக்கமாட்டாரென்று தோன்றுகிறதென்றான். அதின்பின் விட்டிலை ஆர் படைத்ததென்றும் பல்லியை ஆர் படைத்ததென்றும் அடைக்கலங்குருவியை ஆர் படைத்ததென்றும் ஆடு மாடு யானையை ஆர் படைத்ததென்றும் அந்தப் பதிதன் ஒன்றுக்குப் பிறகு ஒன்றாய்க் கேட்க இதுகளைச் சர்வேசுரன் படைத்திருக்கமாட்டாரென்று கிறிஸ்துவன் சொன்னான். கடைசியாய் மனுஷனை ஆர் படைத்ததென்று பதிதன் கேட்கச் சர்வேசுரன் படைக்கவில்லையென்று கிறீஸ்துவன் சொன்னான். ஈயினால் வந்த சொற்ப வருத்தத்தை இந்தக் கிறீஸ்துவன் பொறுக்கமாட்டாததினாலே, எவ்வளவு பெரிய பாவமாகிற பாதாளத்தில் விழுந்தானென்று பாருங்கள். பட்சி வேட்டையாடுகிறவர்கள் சிறு பட்சிகளைப் பிடிப்பதற்காக ஈயை இரையாகக் கண்ணியில் வைப்பார்கள். இப்படியே பசாசு ஈயைக் கொண்டு இந்தக் கிறீஸ்துவனைப் பிடித்ததென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆகையால் இந்தப் பொல்லாப்பு உனக்கும் வராதபடிக்கு எச்சரிக்கையாயிரு. யாதொரு அற்பக் காரியத்தினாலே உனக்கு வருத்தமுண்டாகிக் கஸ்தியும் சலிப்பும் உன் மனதில் பிறந்தால், இது





பசாசின் சோதனையென்று எண்ணிக்கொள். அற்பக் காரியத்தைக் கொண்டு பசாசு அநேகரைப் பிடித்துக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கனமான பாவ தோஷத்தில் விழத்தாட்டுகிறது வழக்கம்.

---

## ௰எ-ம் அதிகாரம்.

—(o)—

இது காரியத்தில் நாம் சொல்ல வேண்டிய மூன்று
பிரதான புத்தியின்பேரில்.

—:(o):—

இவ்விஷயத்திலே மூன்று புத்தி சொல்ல வேண்டும்; இது மூன்றுவிதப் பேருக்கடுத்தது. இவர்களுக்குப் புத்தியாகவும் ஆறுதலாகவும் இதை இங்கே சொல்ல எத்தனித்திருக்கிறோம். அதாவது: சகல மனுஷருக்கும் ஒரே பிறவிக்குணமில்லை. செயிப்பதற்கு வருத்தமான குணம் சிலரிடத்திலுண்டு. ஆகையால் சகல நற்கிரிகைகளுக்கும் அருவருப்பு இவர்கள் கிழங்கிஷத்தில் இடைவிடாமல் தோன்றுகிறதினாலே, எல்லாம் கெட்டுப்போனதென்று எண்ணிக் கஸ்திப்படுவார்கள். நாம் சொல்ல வேண்டிய முதல் புத்தி இவர்களுக்குச் செல்லும். புத்திக்கு விரோதமான பற்றுதலும் அருவருப்பும் மனசில் உண்டாகிறதினாலே, இது பாவமென்றும் குற்றமென்றும் எண்ண வேண்டாம்; இந்தக் கெட்ட பற்றுதலுக்கு உட்பட்டு நடந்தால்மாத்திரம் பாவமும் குற்றமுமாகும். கற்புக்கும் விசுவாசத்துக்கும் வேறெந்தப் புண்ணியத்துக்கும் விரோதமாய் நம்மிடத்தில் வருகிற கெட்ட நினைவும் மனசில்லாத பற்றுதலும் பாவமல்ல; இதினிமித்தம் கஸ்திப்படவும் வருத்தப்படவும் வேண்டாமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இந்த நினைவு பாவமல்ல; இதுக்குச் சம்மதித்தால் மாத்திரம் பாவமாகும். இந்தச் சோதனை வருகிறதினாலே, நீ கஸ்திப்பட்டு அதுக்கு மனதிலே இடங்கொடாமல் தள்ளப் பிரயாசப்பட்டால், அதினாலே நீ அதிக பேறுபலனடைவதற்கு அது காரணமாயிருக்கும். நாமெல்லாரிடத்திலுமுள்ள சுபாவமான கெட்ட பற்றுதலினாலே நமது ஆத்துமத்தில் எவ்வளவு தாறுமாறான ஆசையும் புண்ணியத்தின்பேரில் எவ்வளவு அருவருப்பும் விரோதமும் எழும்பினாலும், அதுக்குச்





சம்மதியாதேபோனால், அதுவும் பாவமல்ல. தாறுமாறான இந்தப் பற்றுதலினாலே ஒருவன் கெட்டவனாகிறதுமில்லை, நல்லவனாகிறதுமில்லை; புண்ணிய சாங்கோபாங்கமுள்ளவனாகிறதுமில்லை, இல்லாதவனாகிறதுமில்லை. ஏனென்றால் இது சுபாவமாய்ப் பிறக்கிற காரியம்; இதை விலக்க நம்மாலே முடியாது; சென்மப் பாவதோஷமே இதுக்குக் காரணம். அர்ச். சின்னப்பரிடத்திலே முதலாய் இப்படிப்பட்ட சரீர சோதனையும் விரோதமுமுண்டாயிருந்தது. இதினாலல்லோ என் சரீரத்தில் ஓர்விதப் பற்றுதலுண்டு; அது நீதி நியாய ஒழுங்குக்கு விரோதம்பண்ணி என் அவயவங்களிலிருக்கிற பாவப் பற்றுதலுக்கு என்னைக் கீழ்ப்படுத்துகிறதென்றார். கோபித்துக்கொள்ளுங்கள்; ஆனால் பாவம் செய்யாதேயுங்களென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தின் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: நமது ஆத்துமத்தில் எவ்விதப் பற்றுதல் தன்னாலே எழும்பினாலும், இது பாவத்துக்குச் செல்லும் ஆக்கினையாகக்கொள்ள, இதை விலக்க நம்மாலே முடியாது; ஆகிலும் நமது புத்தியும் மனதும் இதுக்குச் சம்மதியாதபடிக்கு விலக்கக் கடவோம். சரீர துர்க்குணத்தினாலே பாவப்பற்றுதல் நம்மிடத்தில் கிளம்பினாலும், அதுக்குட்படாமல் மனதைக்கொண்டு தேவ கட்டளைக்குக் கீழ்ப்படிந்திருக்கக் கடவோமென்றார். அரசராகமத்தின் முதல் புத்தகத்தில் சொல்லியிருக்குமாப்போலே, உடன்படிக்கைப் பெட்டகத்தை இழுத்துக்கொண்டுபோன பசுக்கள் கன்றுக்குட்டி தங்களோடே வராததினாலே, கதறிக்கொண்டுபோனது; ஆகிலும் இப்பக்கத்திலும் அப்பக்கத்திலும் திரும்பாமல் நேராய் வழிநெடுக நடந்ததென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. நீயும் இப்படி நட; சரீரம் உனக்கு என்னென்ன விரோதம்பண்ணினாலும், புண்ணிய வழியிலே அங்குமிங்கும் திரும்பாமல் நேரே நட; இப்படி நடந்தால், உத்தமனாகலாம்.

புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவதற்காகப் பிரயாசப்படுகிற ஞானிகளிடத்திலே சரீரப் பற்றுதலும் விரோதமுமில்லையென்றும் சரீர இச்சையுள்ளவர்களிடத்திலே மாத்திரம் அது இருக்குமென்றும் எண்ணாதே; எல்லாரிடத்திலேயும் அது இருக்கலாம். ஆனால் ஞானிகள் அதுக்கு இடங் கொடுக்க மாட்டார்கள்; சரீர இச்சைப்படி நடக்கிறவர்கள் அதற்கு இடங் கொடுப்பார்கள். உயிருள்ள மீன் நீரோட்





டத்துக்கு விரோதமாய் நீஞ்சும்; செத்த மீனைத் தண்ணீர் அடித்துக்கொண்டு போகும். இவ்வண்ணமே தேவ புத்தி உன்னிடத்தில் உயிரோடிருக்கிறதோ செத்துப்போனதோவென்று அறியவேணுமோ? கேள்: உன் துர்க்குணத்துக்கு நீ விரோதமாய் நடந்தால், தேவபுத்தி உன்னிடத்தில் உயிரோடிருக்கின்றது; ஆனால் துர்க்குணஞ் சொன்னபடி நீ கேட்டு நடந்தால், தேவபுத்தி உன்னிடத்திலே செத்துப்போயிருக்கிறதென்று அறியக்கடவாய். இதினாலல்லோ ஞானி கொள்ளைக்காரன் கூக்குரலைக் கேட்க மாட்டானென்று யோபென்பவர் வசனித்தார். அதாவது சோதனையின் பலவந்தமான ஆசைக்கு ஞானி ஒருவிதத்திலும் சம்மதிக்கிறதில்லையென்று அர்ச். கிரேகோரியார் சொல்லியிருக்கிறார். ஆகையால் சோதனைக்குக் காது கொடாமலும் சம்மதியாமலும் இருக்கிறதே நீ செய்ய வேண்டிய காரியம். உன்னிடத்தில் பிறக்கிற கெட்ட பற்றுதலின் நிமித்தம் மனத் திடாரிக்கமற்றுப்போகாமல் அதைச் செயித்து அதிக பெரிய முடியைப் பெற்றுக்கொள்ளும்படிக்கு உன்னிடத்தில் தைரியமுண்டாக வேண்டும். அர்ச். அகுஸ்தீன் இயேசுநாதர் மோக்ஷத்துக்கு எழுந்தருளின திருநாளில் செய்த மூன்றாம் பிரசங்கத்திலே சொல்லுகிற புத்தி இதுவே. இயேசுநாதரோடு மோக்ஷத்தில் ஏறவேணுமென்று கிறீஸ்துவர்களுக்குப் புத்தி சொன்னபின் அவர்களுடைய ஆசாபாசத்தையும் கெட்ட பற்றுதலையும் கொண்டு மோக்ஷத்தில் அவர்கள் ஏறவேணுமென்று சொல்லியிருக்கிறார். இது எப்படியென்று அறியவேணுமோ? கேள்: ஆசாபாசத்தையும் கெட்ட பற்றுதலையும் காலுக்குக் கீழே வைத்து மிதித்து மோக்ஷத்தில் ஏறுகிறதற்கு அதை ஏணியாக்கிக்கொள்ள வேணுமென்றார். நமது ஆசாபாசத்தைக் காலுக்குக் கீழே வைத்து ஏறினால், அது நம்மை உயர்த்தும்; மோக்ஷம் வரைக்கும் ஏறுவதற்கு அது ஏணிபோலாகும்.

அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் சொல்லியிருக்குமாப்போலே, அவர் சுபாவமாய்க் கோபக்குணமுள்ளவராயிருந்தபோதிலும், தேவ ஒத்தாசையைக் கொண்டு அந்தக் குணத்தைச் செயித்து மாற்றினதினாலே, அவரை மந்தக் குணமுள்ளவரென்று சனங்கள் எண்ணியிருந்தார்கள். சோக்கிராத்தேசென்பவன்பேரிலும் சொல்லியிருக்கிறது இதுவே. மிகவும் கெட்டிக்காரனான முகக் குறிப்பாளியொருவன் அவனைக் கவனமாய் உற்றுப் பார்த்தபின், அவன் காமாதுரத்துக்கும் குடி வெறிக்கும் வேறே அநேக துர்க்குணங்களுக்கும் அடுத்த மனுஷனென்று சொ





ன்னான். சோக்கிராத்தேசென்பவனுடைய சீஷர்களும் சிநேகிதரும் இதைக்கேட்டு அவன்பேரில் கோபமாகி அவனைத் தெண்டிக்கவேணுமென்று எற்பட்டார்கள். ஆனால் சோக்கிராத்தேசென்பவன் அவர்களை நிறுத்திச் சொன்னதாவது: இவன் சொல்லுகிறது மெய்தான். நான் ஞான சாஸ்திரம் படித்துப் புண்ணியத்தை அநுசரிக்கப் பிரயாசப்படாவிட்டால், இவன் சொன்னதுபோலேதான் இருப்பேனென்றான். இந்த அஞ்ஞான சாஸ்திரி சுபாவ புத்தியின் உதவியை மாத்திரம் கொண்டு தன்னிடத்திலுள்ள கெட்ட ஆசாபாசங்களை இப்படிச் செயித்திருக்கையிலே, ஆயிரமடங்கு அதிக பெலனுள்ள தேவ இஷ்டப்பிரசாதத்தின் உதவியைக் கொண்டு கிறிஸ்துவர்களும் சந்நியாசிகளும் என்னதான் செய்யக்கூடாது?

இன்னம் வேறொருவித மனுஷர் உண்டு அவர்களிடத்தில் சுபாவமாய் நல்ல குணமிருக்கும்; வெகு சாந்தமுள்ள பிறவிக்குணத்தோடு பிறந்திருப்பார்கள். அலேக்சாந்தர் ஆலேசென்பவர் அர்ச். பொனவெந்தூர்பேரில் சொன்னதுபோலே, இவர்கள் ஆதாமுடைய பாவத்துக்கு உடந்தைப்பட்டவர்களல்லவென்று தோன்றும். இவர்களுடைய பிறவிக்குணம் மிகவும் சாதுவும் புண்ணியத்தின்பேரில் பற்றுதலுமாயிருக்கிறதினாலே, இவர்களுக்கு எல்லாம் எளிதாயிருக்கும்; ஒன்றும் வருத்தமாய்த் தோன்றாது; மற்றவர்களை உபாதிக்கிற மன அருவருப்பும் விரோதமும் இவர்கள் சரீரத்திலே கிடையாது. ஓகோ! சந்நியாசத்திலே வெகு வருத்தமுண்டென்று மனிதர் இடைவிடாமல் சொல்லுகிறதைக் கேட்டிருக்கிறோமே; அதெங்கே காணோமென்று இவர்கள் அக்களித்துச் சொல்லுவார்கள். நாம் சொல்ல வேண்டிய இரண்டாம் புத்தி இவர்களுக்குச் செல்லும்; இவர்கள் மோசம்போகாதபடிக்கு இந்தப் புத்தியை அநுசரிக்கவேண்டும். உன்னிடத்திலே பத்தி பற்றுதலும் சாந்தமும் ஒழுங்குள்ள குணமும் இருக்கிறதினாலே, மகா வருத்தமான காரியங்களும் உனக்கு வருத்தமில்லாமற்போய்ச் சோதனையே இல்லாதென்று உனக்குத் தெரியாதிருந்தால், இதினிமித்தம் நீ அங்காரப்படவேண்டியதில்லை. இது நீ சம்பாதித்த புண்ணியமல்ல; உன் பிறவிக்குணமென்றறியக் கடவாய். சாதுகுணமும் நல்ல முகக்குறியும் பிரியமான வெளி அடையாளமும் உன்னிடத்தில் இருக்கிறதினாலே, இது புண்ணியமென்றெண்ணாதே; தன்னோடு யுத்தம்பண்ணித் தன்னைச் செயிக்கிறதே மெய்யான புண்ணியமாகும். யாதொருவன் புண்





ணியத்தில் வர்த்திக்கிறானோ இல்லையோவென்று அறிவதற்கு இதுவே தப்பாத ஒழுங்கு. ஆகையால் கோபக்குணமுள்ளவன் தன் கோபத்தைச் செயித்தால், சாதுகுணமுள்ள உன்னைப்பார்க்க அதிக பேறுபலனடைவான்.

புளுத்தார்க்கென்பவன் மற்ற இராசாக்களைப்பார்க்கப் பெரிய அலெக்சாந்தரை அதிகமாய்ப் புகழ்ந்து பாராட்டியிருக்கிறான். ஏனென்றால் மற்ற இராசாக்களுக்குத் தகப்பன்மார் பெரிய இராச்சியபாரங்களை வைத்துவிட்டுப் போனார்கள். அலெக்சாந்தரோவென்றால், தன் வீரசூரத்தனத்தினாலேயும் பற்பல சண்டைகளில் பட்ட அநேக காயங்களினாலேயும் இராச்சியபாரம் சம்பாதித்துக்கொண்டான். இவ்வண்ணமே சகலத்திலும் தங்களை ஒறுத்தடக்கித் தங்கள் ஆசாபாசங்களைக் கீழ்ப்படுத்துகிறவர்கள் சாதுவும் சமாதானமுமான பிறவிக்குணமுள்ளவர்களைப் பார்க்க அதிக புகழ்ச்சிக்குரியவர்கள். ஆகையால் உன்னிடத்திலுள்ள சாது குணத்தையும் மற்றவர்களிடத்திலுள்ள வெடுவெடுப்பான கோபக் குணத்தையும் கண்டு உன்னைக் கனமாய் எண்ணி மற்றவர்களைப் பிறக்கணியாதே. உன்னிடத்தில் புண்ணியம்போலே தோன்றுகிறது மெய்யான புண்ணியமல்லவென்றும் சுத்தப் பிறவிக்குணமென்றும் அதினாலே உனக்குப் பலன் ஒன்றுமில்லையென்றும் நீ செய்கிறதை மற்றவர்கள் செய்தால், அது அவர்களுக்கு வெகு பெரிய புண்ணியமென்றும் அங்கீகரித்துக்கொண்டு இதின் நிமித்தம் உன்னைத் தாழ்த்திக்கொள். நீ உன்னைத்தானே ஒரு காரியத்திலும் செயிக்காததினாலே, புண்ணியத்திலே அற்பமாகிலும் வர்த்திக்கவில்லை; மற்றவர்கள் அநேக பாவ சோதனைகளை அடக்கிச் செயித்ததினாலே, புண்ணியத்தில் வெகுவாய் வர்த்தித்திருக்கிறார்கள். அடக்குவதற்கு வருத்தமான பிறவிக்குணமுள்ளவன் தன்பேரில் எச்சரிக்கையும் கவனமும் சுறுசுறுப்புமாயிருப்பான்; இதினாலே தினந்தோறும் புண்ணியத்திலே விர்த்தியடைவான். ஆனால் உனக்கு நல்ல குணமிருக்கிறதென்கிற நம்பிக்கையினாலே நீ இடைவிடாமல் அசமந்தமாயிருந்து புண்ணியத்தில் சுறுசுறுப்பற்றுப்போவாய்; உனக்குச் சத்துரு இல்லாததினாலே, அசமந்தமாகிச் சோம்பலாய் விழுந்து கிடப்பாய். புண்ணியஞ் செய்வதற்கு வருத்தமான குணம் உன்னிடத்திலிருந்து மற்றவர்களைவிட அதிக கனமான குற்றத்தில் நீ விழுந்திருந்தால், என்ன நினைப்பாயென்று சிலவிசை யோசிப்பது உனக்கு நலமாயிருக்கும். உன்னிடத்திலே சாதுவும் பு






ண்ணியத்துக்குச் சார்புமான குணமிருந்தபோதிலும், நீ தினந்தோறும் அநேக குற்றங்களைக் கட்டிக்கொண்டு புண்ணிய வழியிலே வெகு அசமந்தமாயிருக்கிறாயே. உன்னிடத்திலே கெட்ட பிறவிக் குணமும் ஆசாபாசமும் பெலன்கொண்டிருந்து அதுக்கு விரோதமாய் நீ எந்நேரமும் போராடவேண்டியிருந்தால், எவ்வளவு கனமான குற்றத்தில் விழுவாயென்று யோசித்துப் பார். உனக்குச் சோதனைவந்தால், அதைச் செயிக்க உன்னிடத்தில் பெலனில்லையென்று கண்டதினாலே, சர்வேசுரன் உனக்குச் சோதனையை வரவிடவில்லையென்று எண்ணிக்கொள்ளவேண்டும். ஆகையால் உனக்குச் சாதுவும் புண்ணியத்தின் பேரில் சார்புமுள்ள குணத்தைக் கொடுத்தது தேவ இரக்கமென்றும் தேவ திருவுளத்தின் விசேஷ கிருபையென்றும் நிச்சயித்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் உக்கிரமமான ஆசாபாசம் உன்னிடத்தில் இருந்தால், அதை அடக்குவதற்குப் போதுமான பெலன் உன்னிடத்தில் இல்லாமற்போகுமாக்கும். இந்தச் சத்தியங்களையெல்லாம் நீ மனசிலே நன்றாய்த் தரித்துக்கொண்டால், உன் பேரில் நீ தானே தாழ்மையான எண்ணமும் பிறர்பேரில் மேலான எண்ணமும் வைத்திருப்பாயென்பது நிச்சயம்.

இன்னம் வேறொருவகை மனுஷர் உண்டு. இவர்களிடத்தில் சோதனையும் மனவிரோதமும் பிறவாததினாலே, மன சமாதானமாயிருக்கிறோமென்றெண்ணுவார்கள். நாம் சொல்ல வேண்டிய மூன்றாம் புத்தி இவர்களுக்குச் செல்லும். இவர்கள் தங்களை ஒறுக்கிறதுமில்லை, இவர்களிடத்தில் நல்ல பிறவிக்குணமுமில்லை; இவர்கள் ஒரு காரியத்திலும் தங்களை வருத்தப்படுத்தாமல் தங்கள் இச்சைபோலே சகலத்திலும் நடக்கிறதினாலே, புண்ணியத்தின்பேரில் மற்றவர்களிடத்திலுள்ள அருவருப்பும் சோதனையும் இவர்களிடத்தில் வராது. இதினாலே நாங்கள் மனசமாதானத்தைச் சுகித்தநுபவிக்கிறோமென்று எண்ணுவார்கள். இது மெய்யான மனசமாதானமல்ல. இதினாலல்லோ இவர்கள் மனசமாதானம் மன சமாதானமென்று வெகுவாய்ப் பேசுவார்கள்; ஆனால் இவர்களிடத்தில் மன சமாதானம் கிடையாதென்று எரேமியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். என் புத்தி நியாயத்துக்கு விரோதமான ஒழுங்கு என் அவையவங்களில் இருந்துகொண்டு என்னைப் பாவத்துக்கு உட்படுத்துகிறதாகக் காண்கிறேனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். அர்ச். அகுஸ்தீன் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கி






யானம்பண்ணிச் சொல்லுகிறதாவது : புண்ணியப்படைக் கொடியைப்பின்சென்று துர்க்குணத்தோடு போராடுகிறவர்கள் மாத்திரம் தங்களிடத்தில் இவ்வித சண்டை நடக்கிறதாக உணர்ந்துகொள்ளுவார்களென்றார். இதினாலல்லோ ஒறுத்தலின்பேரில் உலகவாசிகளிடத்திலே பேசினால், இந்தப் பேச்சு இன்னதென்று அவர்களுக்குத் தெரியாது ; ஏனென்றால் அவர்கள் தங்களுக்குப் பிரியமானதை மாத்திரம் செய்து தங்கள் மனப்பற்றுதலுக்கு ஒத்திருக்கிறதை மாத்திரம் அநுசரிக்கப் பழகியிருக்கிறார்கள். எந்தக் காரியத்திலும் தங்கள் மனசுக்கு விரோதஞ்செய்கிறது எப்படியென்று அவர்களுக்குத் தெரியாததினாலே, அவர்கள் மனதில் ஞானச் சண்டையுமில்லை, விரோதமுமில்லை. ஆனால் சாங்கோபாங்கத்தையும் கிறீஸ்துவனுக்குரிய மெய்யான புண்ணியத்தையும் சம்பாதித்துத் தங்கள் கெட்ட வழக்கத்தையும் ஒழுங்கற்ற பற்றுதலையும் வேர்ப்பிடுங்காய்ப் பிடுங்கப் பிரயாசப்படுகிறவர்களிடத்திலே கிழங்கிஷம் இடைவிடாமல் சண்டைசெய்து அவர்களை விரோதித்துக்கொண்டு வரும். குருவி வலையில் அகப்பட்டிருந்தாலும், தான் அதில் அகப்பட்டிருக்கிறதாகத் தெரியமாட்டாது ; வலையைவிட்டுப் பறந்துபோக எத்தனித்தால், அப்போது தான் வலையில் அகப்பட்டிருக்கிறதாகத் தெரியும். இவ்வண்ணமே தாறுமாறான ஆசாபாசத்தை அநுசரித்து நடக்கிறவன் அந்த ஆசாபாசத்தின்பெலன் எவ்வளவென்றும் அதைச் செயிக்கிறது எவ்வளவு வருத்தமென்றும் அறிந்துகொள்ள மாட்டான். ஆனால் அந்த ஆசாபாசத்தைவிட்டு ஒழிக்கப் பிரயாசப்பட்டால், அப்போது அது எவ்வளவு விரோதம் பண்ணுகிறதென்று அறிந்துகொள்ளுவான். நாம் புண்ணியத்தை அநுசரிக்கும்போது மாத்திரம், துர்க்குணத்தினால் வரும் விரோதம் எவ்வளவென்று அறிந்துகொள்ளுவோம்.

வனவாசிகள் சரித்திரத்தில் எழுதியிருக்கிற வர்த்தமானமாவது : வனவாசியொருவர் விருத்தாப்பியமான ஓர் மகாத்துமாவிடத்தில் ஒரு நாள் கேட்டதாவது : மற்றவர்களிடத்தில் பெலத்த சோதனையும் சண்டையும் உண்டாயிருக்கின்றதே ; இதெல்லாம் என்னிடத்தில் காணோமே ; இதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். அதற்கு அந்த மகாத்துமா சொன்னதாவது : நீ எப்போதும் திறந்திருக்கிற வீடுபோலிருக்கிறாய் ; அதிலே சகலரும் எப்போதும் போகிறதும் வருகிறதுமாயிருக்கிறார்கள் ; இதெல்லாம் வீட்டுக்காரனுக்குத் தெரியாது.

இவ்வண்ணமே உன் இருதயத்தின் கதவு எப்போதும் திறந்திருக்கின்றது; நீ அதைச் சாத்துகிறதில்லை; உன்னடக்கையின்பேரில் உனக்கு அற்பக் கவனமும் கிடையாது; சொற்ப உள்ளடக்கமுமில்லாமல் திரிகிறாய். இதினாலேதான் உன்னிடத்தில் சோதனையும் வருத்தமுமில்லை. உன் இருதயத்தின் கதவைச் சாத்திக்கொண்டு கெட்ட நினைவு அதிலே பிரவேசியாதபடிக்கு நீ விலக்கினால், அது உள்ளே பிரவேசிப்பதற்காக உன்னோடு எவ்வளவு சண்டைபோடுமென்று அறிந்துகொள்ளுவாயென்றார். ஆகையால் நீழங்கிஷம் உன் மனசுக்குள்ளே சண்டையும் போராட்டமும் செய்யாதேபோனால், நீ சகலத்திலும் உன் மனதுபோலே நடந்து உன் ஆசையை விரோதித்து உன்னிடத்திலுள்ள கெட்ட ஆசர்பாசங்களை வேரோடு பிடுங்கப் பிரயாசப் படவில்லையென்று பயப்படுகிறதுக்கு இடமுண்டு.

---

# ம அ-ம் அதிகாரம்.

புண்ணியத்திலே நாம் எவ்வளவு வர்த்தித்திருந்தாலும்
ஒறுத்தல் முயற்சி செய்கிறது எப்போதும்
அவசரமென்று சொல்லுவது.

---

ஒறுத்தல் முயற்சி செய்வதற்காக நாம் எப்போதும் கத்தியைக் கையில் பிடித்திருக்க வேண்டும். ஒறுத்தல் முயற்சியிலே ஒருவன் ஏற்கனவே எவ்வளவு பழகியிருந்தாலும், வெட்டித் தள்ளுகிறதற்கு அவனிடத்தில் எப்போதும் ஏதாகிலுமிருக்கும். ஏனென்றால் வெட்டினது துளிர்க்கும்; தள்ளினது திரும்பி வரும்; அவித்தது திரும்பிப் பற்றிக்கொள்ளும்; தூங்கிக்கிடந்தது திடீரென்று விழித்து எழுந்திருக்குமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். ஆகையால் ஒருவிசை வெட்டித் தள்ளுகிறது பற்றாது; அடிக்கடி வெட்டிக்கொண்டிருக்க வேண்டும்; கூடுமானால், எப்போதும் வெட்டிக்கொண்டே இருக்கவேண்டும்; ஏனென்றால் நீ உன்னைச் சரியாய் அறிந்திருந்தால், எப்போதும் வெட்டித் தள்ளுகிறதற்கு உன்னிடத்தில் ஏதாகிலுமுண்டென்று கண்டுகொள்ளுவாயென்று மேற்சொன்ன அர்ச். பெர்நர்துஸ் வசனி

த்தார். சில பூந்தோட்டங்களின் வேலியில் செய்திருக்கிறதைப் பார்த்தால், நாம் இப்போது சொல்லுகிறதை ஒப்பிப்பதற்குத் தகுந்த உவமையாயிருக்கும். அந்த வேலியிலுள்ள மருதணியை வெகு நேத்தியாய் வெட்டியிருக்கிறதினாலே, சிங்கம் கழுகு முதலிய பல மிருகங்களின் வடிவாகத் தோன்றும். ஆனால் அந்த மருதணியில் இடைவிடாமல் துளிர்க்கிற இலைகொம்புகளை இடைவிடாமல் தோட்டக்காரன் வெட்டிக்கொண்டு வராதேபோனால், அதிலிருந்த சிங்கம் கழுகின் ரூபமெல்லாம் மாறிப்போகும்; ஏனென்றால் அதிலிருந்து இடைவிடாமல் புறப்படுகிற இலையும் கொம்பும் அந்த ரூபத்தை மாற்றி நீக்கும். இவ்வண்ணமே நீ புண்ணியத்திலே சிங்கமும் கழுகுமாயிருந்தபோதிலும், உன்னிடத்தில் வெகு ஞானப்பெலனுண்டென்றும் ஒன்றுக்கும் பயப்படத் தேவையில்லையென்றும் தோன்றினாலும், உன்னிடத்திலுள்ள ஆசாபாசத்தை ஒறுத்தலைக் கொண்டு எப்போதும் வெட்டித் தள்ளிக்கொண்டு வராதிருந்தால், கொஞ்சத்துக்குள்ளே உன் ஆத்துமம் ஒரு ரூபமில்லாத பூதம்போலாகும்; ஏனென்றால் நமதுள்ளத்திலே இருக்கிற பாவவேரானது இடைவிடாமல் பாவத்துளிர் விட்டுக்கொண்டே இருக்கும். ஆகையால் நாம் எப்போதும் நம்மை ஒறுத்துக்கொண்டேயிருக்கவேண்டும். நீ புண்ணியத்திலே எவ்வளவு வர்த்தித்திருந்தாலும், துர்க்குணத்தை முழுதும் சங்கரித்துப்போட்டேனென்று எண்ணாதே; இது பெலத்த தப்பிதம்; அதை நீ கீழ்ப்படுத்தினதேயொழியச் சங்கரிக்கவில்லையென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். உனக்கு மனசிருந்தாலுஞ் சரி, இல்லாவிட்டாலுஞ் சரி, செபுசேயனுகிற உன் சத்துரு எப்போதும் உன்னோடு குடிகொண்டிருக்கும்; நீ அதை செயிக்கலாம்; அதைச் சங்கரிக்க முடியாதென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இதினாலே அர்ச். சின்னப்பர் சொன்னதாவது: என்னிடத்தில் நன்மை ஒன்றுமில்லை; அதாவது, என் சரீரத்தில் நன்மை ஒன்றுமில்லையென்றார். அர்ச். பெர்நர்துஸ் இவ்வாக்கியத்தின்பேரில் சொல்லுகிறதாவது: பாவம் தம்மிடத்தில் குடிகொண்டிருக்கிறதென்று அர்ச். சின்னப்பர் மறுபடியும் சொல்லியிருக்கிறார். இதினாலல்லோ நான் ஆசிக்கிற நன்மையை நானே செய்கிறதில்லை; நான் ஆசியாத தின்மையைச் செய்கிறேன். நான் ஆசியாத தின்மையைச் செய்தால், நான் இதைச் செய்கிறதில்லை; என்னிடத்தில் குடிகொண்டிருக்கிற பாவம் இதைச் செய்கிறதென்றார். இதிப்படியிருக்க ஒன்றில் நீ அர்ச். சின்னப்பருக்கு மேற்பட்டவனாய் இருக்கிறாயென்று சொல்ல வேண்டும், அல்லது உன்னி



டத்தில் துர்க்குணமுண்டென்று அங்கீகரித்துக் கொள்ள வேணுமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார்.

அர்ச். எபிரேமென்பவருடைய எண்ணமும் இதுக்கு ஒத்திருக்கும். இதினாலல்லோ படைவீரர் போடுகிற சண்டை சீக்கிரம் முடியும்; ஆனால் சந்நியாசிகள் போடவேண்டிய சண்டை அவர்கள் ஆயுசு காலம் வரைக்கும் நிலைத்திருக்குமென்றார். கரடுமுரடான கல்லைப் பொளிந்து நகாசு பண்ணுகிறதைப் பார்க்க நமதாசாபாசத்தையும் துர்க்குணத்தையும் ஒறுக்கிறது அதிக வருத்தமான வேலை; ஏனென்றால் கல்லானது கற்றச்சன் வேலை செய்யாதபடிக்கு விரோதம் பண்ணுகிறதுமில்லை; வேலை செய்து நகாசு பண்ணினபின், முன்னைப்போலே திரும்பிக் கரடுமுரடாகிறதுமில்லை. ஆனால் நமதாசாபாசங்களைச் செயிக்கத் தேடினால், அது நமக்கு எவ்வளவோ விரோதம் பண்ணும்! அதைச் செயித்திருந்தாலும், இன்னம் க்ஷணத்துக்கு க்ஷணம் நமக்கு விரோதமாய் எழும்பி எந்நேரமும் புதிதான பெலத்தோடு போராடுகிறதல்லோ? ஆகையால் அதைச் செயிப்பதற்காக எப்போதும் உழைக்க வேண்டும்; ஒருகாலும் அசமந்தமாயிருக்கப்படாது. சுரமண்டலத்தில் கர்த்தருக்கு ஒரு பாட்டுப் பாடுவேனென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். எரோணிமுஸ் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: சுரமண்டலத்திலுள்ள நரம்புகளெல்லாம் ஒத்திராவிட்டால், அதிலிருந்து இன்பமான இராகம் வரவறியாது. ஒரு நரம்பு மாத்திரம் அறுந்து தளர்ந்துபோயிருந்தாலே போதும்; மற்ற நரம்புகளெல்லாம் ஒழுங்காய் நடக்கமாட்டாது. இவ்வண்ணமே நம்மிடத்தில் ஒழுங்கற்ற ஆசாபாசம் ஒன்றுமாத்திரமிருந்தால், அது நமது ஆத்துமத்திலுள்ள ஒழுங்கை முழுதுங் கலக்கிச் சர்வேசுரனுடைய காதுக்கு இன்பமான ஒரு தொனி முதலாய் அதிலிருந்து புறப்படாதபடிக்கு விக்கினம்பண்ணும். நமது ஆசாபாசங்களையெல்லாம் கீழ்ப்படுத்தினால், பத்து நரம்புள்ள சுரமண்டலத்தில் சுவாமியுடைய புகழ்ச்சியைப் பாடுவோமென்று மேற்சொன்ன அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். ஆனால் இப்படி அதுகளையெல்லாம் கீழ்ப்படுத்துகிறதற்கு இடைவிடாமல் ஒறுத்தல் முயற்சி செய்கிறது முழுதும் அவசரமாமே.

இந்த முகாந்தரத்தைப்பற்றிப் புண்ணிய சாங்கோபாங்கத்தில் வெகுவாய் வர்த்தித்திருந்தவர்களை முதலாய்ப் பூர்வீக வனவாசிகள் ச

கலவித ஒறுத்தலையும் நிந்தை அவமானங்களையும் கொண்டு இடைவி
டாமல் ஒறுத்துக்கொண்டு வந்ததுமன்றி ஒறுத்தலென்னும் புண்ணி
யத்தை முழுதும் அடைந்தவர்களை முதலாய் ஒறுக்காமல் விட்டுவிட்
டால், அவர்கள் அமைதலையும் துன்ப துரிதப்படுகிற வழக்கத்தையும்
கொஞ்சம் கொஞ்சமாய் இழந்துபோவார்களென்று சிரேஷ்டர்கள் எ
ண்ணி அவர்களையும் இடைவிடாமல் ஒறுத்துக்கொண்டு வருவார்கள்.
ஏனென்றால் நிலம் எவ்வளவு நல்லதாயிருந்தாலும், அதை உழுகாமல்
தரிசாய்ப் போட்டால், அதிலே முள்ளும் முடலும் மாத்திரம் முளைக்
குமென்பது நிச்சயம். ஆகையால் ஒருவன் எவ்வளவு புண்ணிய சாங்
கோபாங்கமுள்ளவனாயிருந்தாலும், இடைவிடாத ஒறுத்தலையும் தப
சையுங் கொண்டு தன் புண்ணிய சாங்கோபாங்கத்தைப் பயிர்ச்சி செ
ய்யாவிட்டால், அவன் ஆத்துமம் தரிசு நிலத்துக்கு ஒப்பாகும். அதி
லே கெட்ட நினைவும் மோசத்துக்குரிய தந்திர சோதனையுமாகிய முள்
ளும் முடலும் ஏகமாய் மண்டும். ஆகையால் கெட்ட பற்றுதலுள்ளவ
ர்களும் நல்ல பற்றுதலுள்ளவர்களும் புண்ணிய சாங்கோபாங்கத்தை
இன்னம் அடையாமல் அதைத் துவக்கினவர்களும் அதை முழுதும்
அடைந்தவர்களும் முன்னமே பாவஞ் செய்தவர்களும் ஒருகாலும் தே
வ இஷ்டப்பிரசாதத்தைப் போக்கடியாதவர்களும் எல்லாரும் ஒறுத்த
ல் முயற்சி செய்கிறது அவசரமாமே. சிலர் புண்ணியத்தை அடைவ
தற்கும் வேறே சிலர் அடைந்த புண்ணியத்தைக் காப்பாற்றுவதற்கும்
சகலருக்கும் ஒறுத்தல் அவசரமாகும். குதிரை எவ்வளவு நல்லதாயி
ருந்தாலும், எப்போதும் கடிவாளத்தைக் கொஞ்சம் இறுக்கிப் பிடித்து
நேரத்துக்கு நேரம் குதிமுள்ளை அறிவிக்கிறது நலமாயிருக்கும்.

நம்மைப் பின்செல்ல மனசுள்ளவன் தன்னை மறுதலித்துத் தன்
சிலுவையைத் தினந்தோறும் சுமந்துகொண்டு வரக்கடவனென்று இ
ரக்ஷகர் திருவுளம்பற்றினார். அதாவது, நமது சுயமனசை எவ்விதமா
யாகிலும் ஒறுக்காமல் ஒருநாளும் விடப்படாது. இதினாலே ஒரு நாள்
உன்னை ஒறுக்காமல் விட்டால், உனக்கு வெகு சேதம் வந்ததென்றும்
அந்த நாள் வீணாய்ப் போனதென்றும் எண்ணிக்கொள் ; அந்த நாளி
லே நீ சந்நியாசியாயிருந்தாயென்று சொல்லப்படாதென்று அர்ச். கி
ளிமாக்கருளப்பர் வசனித்தார். தீத்துசென்னும் இராயன் ஒரு நாளில்
யாதொருவனுக்கு ஒரு நன்மையும் செய்யாதிருந்தால், ஐயோ ! என்
சிநேகிதரே, இந்த நாள் வீணாய்ப் போனதேயென்று அங்கலாய்த்துச்



சொல்லுவான். அந்த நாளிலே தான் இராயனாயிருக்கவில்லையென்று எண்ணி அந்த நாளைத் தன் இராச்சியபாரத்திலிருந்து கிறுக்கிப் போடவேணுமென்று நினைப்பான். ஆனால் இராயரும் இராசாக்களும் மற்றவர்களுக்கு நன்மை செய்கிறதைவிடச் சந்நியாசிகள் தங்களை ஒறுத்துத் தங்கள் சுயமனசை மறுக்கிறது அதிக அவசரமென்பதற்குச் சந்தேகமில்லை ; ஏனென்றால் தங்கள் மனசுக்குப் பிரியமாயிராததெல்லாத்தையும் செய்கிறதும் தங்களுக்குப் பிரியமானதெல்லாத்தையும் செய்யாமலிருக்கிறதும் சந்நியாசிகளுக்குரிய நடக்கையாமே.

அர்ச். பிராஞ்சீஸ்குபோர்ஜியா இவ்விஷயத்திலும் வேறெந்த விஷயத்திலும் நமக்கு மேலான மாதிரிகை காண்பித்திருக்கிறார். யாதொரு தபசையும் ஒறுத்தலையுஞ் செய்து தமது சரீரத்தைத் தெண்டியாத அன்றைக்கு அவர் சாப்பிடுகிறதெல்லாம் கசப்பாயிருக்குமென்று சொல்லுவார் ; தாம் சாகிற அன்றைக்குத் தம்மை ஒறுத்து ஒரு தபசும் செய்யாதிருந்தால், அன்றைக்குச் சாகிறது தமக்குக் கஸ்தியாயிருக்குமென்று சொல்லுவார். இதினாலே உலக இன்பம் எனக்கு ஆக்கினையாகவும் சிலுவையாகவும் துன்பதுயரமெல்லாம் எனக்கு இன்பமாகவும் ஆகவேணுமென்று சர்வேசுரனிடத்தில் வேண்டிக்கொள்ளுவார். இதுவே ஒறுத்தலில் மகா மேலான மூன்றாம் அந்தஸ்தாகும். இந்த அந்தஸ்தில் தாம் வந்து சேருமட்டும் தம்மை யொருகாலும் அற்பமாகிலும் பேணப்படாதென்று எண்ணியிருந்தார். தமது சரீரத்தோடு சண்டை போடுவதற்கு இடைவிடாத கவனமுற்றிருப்பார் ; அதை ஒறுத்து உபாதிப்பதற்கான சமயத்தை எந்நேரமும் தேடிக் கண்டுபிடிப்பார் ; அதை வேதனைப்படுத்துவதற்கு உதவியானதெல்லாம் தமக்குப் பிரியமான சிநேகிதரென்று சொல்லுவார். கோடை காலத்திலே சுறுக்கான வெயிலில் நடந்து வருத்தமுண்டாகும்போது, வெயிலாகிற நமது சிநேகிதன் நம்மை நன்றாய்ச் சுடுகிறானென்று சொல்லுவார். கடின குளிர் காற்றையும் மழையையும் அவரிடத்திலிருந்த சூலை வியாதி நெஞ்சு வலி முதலியதுகளையும் தன் சிநேகிதரென்று சொல்லுவார். அவர்பேரில் புறணி பேசி அவரை உபாதித்தவர்களைத் தமது சிநேகிதரென்று எண்ணியிருப்பார் ; ஏனென்றால் இவர்கள் எல்லாரும் தம்மைச் செயித்து அடக்குவதற்கு உதவியாயிருந்ததினாலே, இவர்களைச் சிநேகிதரென்று சொல்லுவார். ஆனால் தம்மை ஒறுத்து உபாதிப்பதற்குத் தினந்தோறும் தன்னாலே நேரிட்ட சமயங்களில் தம்






மை ஒறுத்ததுமன்றி வேறே சமயங்களையும் தேடி எப்போதும் தம்மை ஒறுத்துக்கொண்டு வருவார். தாம் நடக்கும்போது, காலிலே நோவுண்டாகும் பொருட்டுச் சிலவிசை பரு மணலையும் சிறு கல்லையும் சப்பாத்துக்குள்ளே போட்டுக்கொள்ளுவார். குளிர் காலத்திலே கனத்த குளிரிலேயும் கோடை காலத்திலே சுறுக்கான வெயிலிலேயும் மெள்ள நடப்பார். தமது அலகிலேயுள்ள மயிரை அவர் வலுவாய்ப் பற்றி இழுத்துக்கொண்டதினாலே, அது காயப்பட்டிருக்கும். தம்மை அடித்துக்கொள்ளக் கூடாதேபோனால், தமது சரீரத்தைக் கிள்ளி வேதனை உண்டாக்கிக்கொள்ளுவார். அவர் வியாதியாய் இருக்கும்போது, வியாதியினால் வந்த வேதனையுமல்லாமல் வேறே வேதனையையும் வருவித்துக்கொள்ளுவார். இவ்வண்ணமே அவருக்குக் கொடுத்த மருந்து எவ்வளவு அருவருப்பாயிருந்தாலும், அதை இன்பமான பதார்த்தம் போலே கொஞ்சம் கொஞ்சமாய் மெள்ளச் சாப்பிடுவார். மாத்திரை எவ்வளவு கசப்பாயிருந்தாலும், அதைக் கடித்து வாயிலே வெகுநேரம் வைத்துக்கொண்டிருப்பார். இப்படி அவர் தம்மை ஒறுத்துத் தமது சரீரத்தைச் சிலுவையில் அறைந்ததினாலே, மகா மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தையும் அர்ச்சியசிஷ்டத்தனத்தையும் அடைந்தார்.

## ௰௯-ம் அதிகாரம்.

தேவ வரப்பிரசாதமும் தேவ சிநேகமும் ஒறுத்தல் முயற்சியை நமக்கு எளிதாகவும் இன்பமாகவும் ஆக்குகிறதுக்கான வழிபாடென்று சொல்லுவது.

நமக்கு மிகவும் அவசரமான ஒறுத்தல் முயற்சியை எளிதாகவும் இன்பமாகவும் பிரியமாகவும் ஆக்குவதற்கான சில வழிபாடுகளை இப்போது சொல்லிக் காட்டக் கடவோம். தேவ வரப்பிரசாதமே இதுக்கான முதல் வழிபாடு ; தேவ வரப்பிரசாதத்தைக் கொண்டு சகலமும் நமக்கு எளிதாகும். அர்ச். சின்னப்பருக்கு நடந்த ஓர் விஷயம் இதை ஒப்பிப்பதற்கு உதவும். அதென்னவென்றால், பசாசின் தூதனாகிய சரீரசோதனை அவரை இடைவிடாமல் உபாதித்துக்கொண்டு வந்தது.





இந்தச் சோதனை தம்மைவிட்டு நீங்க வேணுமென்று சர்வேசுரனை மும்முறை பிரார்த்தித்துக்கொண்டார். அதற்குச் சர்வேசுரன் சொன்ன மறுமொழியாவது: நம்முடைய வரப்பிரசாதம் உனக்குப் போதுமென்றார். இந்த வரப்பிரசாதத்தினாலே அர்ச். சின்னப்பர் உறுதிப்பட்டு என்னைப் பெலப்படுத்துகிறவரைக் கொண்டு நான் எல்லாத்தையும் செய்யக்கூடுமென்றார். வேறோரிடத்தில் அவர்தானே சொல்லுகிறதாவது: அதிலும் நானல்ல, என்னிடத்திலுள்ள தேவ வரப்பிரசாதமே எல்லாத்தையும் நிறைவேற்றுகிறதென்றார். நாம் ஒறுத்தல் முயற்சி செய்து துன்பதுரிதப்படும்போது, சர்வேசுரன் நம்மைக் கைவிட்டிருக்கிறாரென்று எண்ணப்படாது; ஒறுத்தலினாலே வருகிற பாரத்திலே பாதிக்குமேல் தாங்குகிறதற்கு அவரே உதவிசெய்வார். தேவ கற்பனை நுகத்தடியென்று சொல்லுகிறதற்குக் காரணமென்னவென்று நினைக்கிறாய். அதற்குக் காரணமேதென்றால், நுகத்தடியைத் தாங்குகிறதற்கு இரண்டுபேர் வேண்டும். தமது கற்பனையாகிற நுகத்தடியைத் தாங்குவதற்கு இயேசுநாதர் நம்மோடேகூட வருகிறார்; அவருடைய ஒத்தாசையைக் கொண்டு அதைத் தாங்க மனத்திடாரிக்கமற்றுப் போகிறவர்களார்? ஆகையால் அவர் கற்பனையை அநுசரிக்கிறது வருத்தமென்றெண்ணாதே; இதிலே எளிதான காரியத்தைத்தான் நீ செய்யவேண்டும். தமது கற்பனை நுகத்தடியென்றும் சுமையென்றும் அவர் சொல்லியிருந்தாலும், அது இன்பமான நுகத்தடியென்றும் இலேசான சுமையென்றும் சொல்லியிருக்கிறார். ஏனென்றால் நமது பலவீனத்தின் நிமித்தம் அது வருத்தமான நுகத்தடியென்றும் பாரமான சுமையென்றும் தோன்றினபோதிலும், தேவ வரப்பிரசாதம் எல்லாத்தையும் எளிதாக்கும்; கர்த்தர் தாமே நமது பாரத்தைக் குறைத்தருளுவார். இதினாலல்லோ அவர்களுடைய கழுத்தை விட்டு நுகத்தடியை இறக்கிவைக்கிறவன்போலே நாம் இருப்போமென்று ஓசேயேயென்னும் தீர்க்கதரிசி வாயாலே திருவுளம்பற்றினார். அன்றியும் இசாயியாசென்பர் வாயாலே அவர் சொல்லுகிறதாவது: எண்ணெயைப் பூசி நுகத்தடியை உளுக்கப்பண்ணுவோமென்றார். இதிலே எண்ணெய் தேவ வரப்பிரசாதமென்று அர்த்தமாகும். ஒறுத்தல் வருத்தமான நுகத்தடியாகவும் பாரமான சுமையாகவும் தோன்றும்; ஆனால் எண்ணெயாகிற தேவ வரப்பிரசாதம் இந்த நுகத்தடியை உளுக்கப்பண்ணும். அதாவது, அதின் பாரத்தைக் குறைப்பதினாலே, அது நமது கழுத்தைக் காயப்படுத்தாததுமன்றி அதின் பாரமுதலாய்த் தோன்றாது.




அர்ச். பெர்நர்துஸ் கோவில் அபிஷேகத்தின்பேரில் செய்த முதல் பிரசங்கத்திலே சொல்லுகிறதாவது: கோவிலை அபிஷேகம்பண்ணும்போது, அதிலுள்ள சிலுவையெல்லாத்தையும் அர்ச்சியசிஷ்ட எண்ணெயைக் கொண்டு பூசுகிறதுண்டு. இவ்வண்ணமே இயேசுநாதர் சந்நியாசிகளுடைய ஆத்துமத்திலே பூசுகிறார்; ஏனென்றால் தபசு ஒறுத்தலாகிற சிலுவையெல்லாத்தையும் தமது வரப்பிரசாதமாகிற திரு எண்ணெயைக் கொண்டு பூசி அவர்களுக்கு அதை இலேசாக்குகிறார். உலகவாசிகள் சந்நியாச சீவியத்திலுள்ள சிலுவையைக் காண்கிறதேயல்லாமல் அதிலே பூசியிருக்கிற தேவ வரப்பிரசாதமாகிற எண்ணெயைக் காணாததினாலே, சந்நியாச சீவியத்துக்குப் பயப்படுகிறார்கள். ஆனால் சந்நியாசிகளே, நமது சிலுவையிலே தேவ வரப்பிரசாதமாகிற எண்ணெய் பூசியிருக்கிறதென்றும் இதினாலே அந்தச் சிலுவை இலேசாயிருக்கிறதென்றும் சந்நியாசத்திலே வருத்தமும் கசப்புமாகத் தோன்றுகிறதெல்லாம் தேவ வரப்பிரசாதத்தினாலே இன்பமாயும் பிரியமாயும் இருக்கிறதென்றும் நீங்கள் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிறீர்களே யென்றார். தேவ வரப்பிரசாதத்தின் பெலன் எவ்வளவென்று நாம் அறிந்துகொள்ளுகிறதற்கு முன்னே விரத்தத்துவமாகிறது இன்னதென்றும் விரத்தத்துவத்தை யாராகிலும் அநுசரிக்கக் கூடுமோவென்றும் நாம் ஒருகாலும் கண்டுபிடிக்கக் கூடவில்லையென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆனால் தேவ வரப்பிரசாதம் எல்லாத்தையும் நமக்கு எளிதாக்கும்; அதிருந்தாலே போதும். தேவ கற்பனை பாரமானதல்லவென்று அர்ச். அருளப்பரோடு நாமும் சொல்லலாம்; ஏனென்றால் தேவ கற்பனையை அநுசரிப்பதற்குச் சர்வேசுரன் கொடுத்தருளுகிற வரப்பிரசாதம் திரளாயிருக்கிறதினாலே, அது மகா எளிதாகவும் இன்பமாகவும் தோன்றும். சர்வேசுரனை நம்புகிறவர்களுக்குப் பெலன் மாறிப்போகுமென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். அர்ச். கிரேகோரியார் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: இரண்டுவிதப் பெலனுண்டு. முந்த முந்தத் தேவ சிநேகத்துக்காகச் சகலவித ஒறுத்தலையும் பட்டநுபவிப்பதற்குப் புண்ணியவான்களிடத்திலுள்ள பெலனாகும்; இரண்டாவது, பாவிகள் உலகத்துக்காகச் சகலவித வருத்தமும் பட்டுத் தங்கள் வீண் மகிமையைக் காப்பாற்றிப் பொருள் சம்பாதித்துத் தாறுமாறான தங்கள் ஆசையை நிறைவேற்றுவதற்கு அவர்களிடத்திலுள்ள பெலனாகும். கர்த்தர்பேரில் நம்பிக்கை வைக்கிறவர்கள் பாவிகளு

டைய இந்த வீண் பெலனை மாற்றிப் புண்ணியவான்களுடைய மெய்யான பெலனை அடைந்துகொள்ளுவார்களென்றார்.

தேவ சிநேகம் ஒறுத்தல் முயற்சியை நமக்கு எளிதாக்குவதற்கான இரண்டாம் வழிபாடாகும். சகலவித வருத்தத்தையும் எளிதாக்குவதற்குச் சிநேகத்தைப்போலே வேறொன்றும் கிடையாது. இது காரியத்தில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: சிநேகிக்கிறவனுக்கு வருத்தம் ஒன்றுமில்லை; ஏனென்றால் சிநேகம் ஒரு வருத்தமும் தோன்றாதபடிக்குச் செய்யும். சிநேகமில்லாதவர்களுக்குச் சொற்பக் களைப்பும் பொறுக்கக்கூடாததாகத் தோன்றும்; எந்தக் காரியத்தையும் வருத்தமென்று எண்ணுகிறது சிநேகமுள்ளவர்களுக்கு வெட்கமாகத் தோன்றும். இதினாலல்லோ வேட்டையின் பேரில் பிரியமுள்ளவர்கள் அதினால் வரும் களைப்பெல்லாம் ஒன்றுமில்லையென்றும் பிரியமாயிருக்கிறதென்றும் எண்ணுவார்கள். தாய் தன் பிள்ளைகளை வளர்ப்பதற்குப் படுகிற வருத்தமெல்லாம் வருத்தமென்று எண்ண மாட்டாளே. இதற்குக் காரணமென்ன? சிநேகமல்லோ? சிநேகத்தினாலல்லோ பெண்சாதி நோவாயிருக்கிற புருஷன் கிட்ட இராவும் பகலும் காத்திருப்பாள்? சிநேகத்தினாலல்லோ மிருகங்கள் குட்டிகளுக்கு இரை கொடுக்க வெகு பிரயாசப்பட்டு அதுகளுக்குத் தீனி கொடுப்பதற்காகத் தாங்களே பட்டினியே கிடந்து அதுகளைக் காப்பாற்றுவதற்காக எத்தனையோ ஆபத்துக்குள்ளாகும்? சிநேகத்தினாலல்லோ யாக்கோபென்பவர் ராக்கேலென்பவளுக்காகப் பதினாலு வருஷ காலமாய் உழைத்த உழைப்பெல்லாம் அற்பமென்றும் இன்பமென்றும் எண்ணியிருந்தார்? அவர் அவளை வெகுவாய்ச் சிநேகித்ததினாலே, வெகு காலம் அவருக்குக் கொஞ்சமாகத் தோன்றினதென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. என் அன்பர் எனக்கு மீறையின் சின்னக் கட்டுப்போலே இருக்கிறாரென்று ஞானபத்தினி வசனித்தாள். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது: இதிலே தன் அன்பர் மீறையின் ஒரு கட்டுப்போலே இருக்கிறாரென்று சொல்லாமல் சின்னக் கட்டுப்போலே மாத்திரம் இருக்கிறாரென்று சொல்லியிருக்கிறாள்; ஏனென்றால் அவர்பேரில் வைத்த சிநேக மிகுதியினாலே அவருக்காக அவள் படக்கூடுமான சகல வருத்தமும் அற்பமென்று எண்ணியிருந்தாள். அன்றியும் என் அன்பர் மீறையின் சின்னக் கட்டென்று சொல்லாமல் என் அன்பர் எனக்கு மீறையின் சின்னக் கட்டென்று






சொன்னதினுலே சிநேகிக்கிறவர்களுக்கு மாத்திரம் அவர் சின்னக் கட்டென்று அர்த்தமாகும். ஆகையால் புண்ணியமாகிற கட்டுப் பெரிதாகவும் பாரமாகவும் உனக்குத் தோன்றினுல், உன்னிடத்தில் தேவ சிநேகமில்லையென்று சொல்ல வேண்டும் ; ஏனென்றுல் ஒவ்வொருவரும் சர்வேசுரன் பேரில் வைத்திருக்கிற சிநேகத்துக்குத் தக்கது புண்ணிய நடக்கை சிலருக்கு இலேசாகவும் சிலருக்குப் பாரமாகவும் தோன்றும். புண்ணியம் தன்னுலே வருத்தமான காரியமல்ல ; சொற்பச் சிநேகமுள்ளவர்களுக்கு மாத்திரம் அது வருத்தமாயிருக்கும். வெகு தேவ சிநேகம் உன்னிடத்தில் உண்டானுல், புண்ணியம் செய்கிறது உனக்கு வருத்தமாயிராததுமன்றி இன்பமாயிருக்கும் ; ஏனென்றுல் சிநேகமுள்ள இடத்திலே ஒரு வருத்தமும் கிடையாது ; இன்பமே குடிகொண்டிருக்கும். தேவ சிநேகம் என்னிடத்தில் வந்த நாள் துவக்கி உள்ளும் புறம்பும் மனுஷராலும் பசாசினுலும் சரீரத்தினுலும் வேறே எந்த விதமாயாகிலும் துன்ப துரிதப்படுகிறது எப்படியென்று எனக்குத் தெரியாமற்போயிற்றென்று ஒரு அர்ச்சியசிஷ்டவள் சொல்லுவாள் ; ஏனென்றுல் சுத்த சிநேகமுள்ளவர்களுக்கு வருத்தமும் வேதனையும் தோன்றுது. ஆகையால் தேவ சிநேகம் நம்முடைய கிரிகைகளை வெகு பேறு பலனுள்ளதாகவும் உத்தமமாகவும் ஆக்குகிறதுமன்றிச் சகல வித ஒறுத்தலையும் பொறுத்துக்கொள்ளுவதற்கான தைரியத்தையும் பெலனையும் நமக்குத் தந்து மிகவும் வருத்தமும் கசப்புமான காரியங்களை நமக்கு எளிதாகவும் இன்பமாகவும் செய்யும். தேவ கற்பனையை நிறைவேற்றுகிறது சிநேகமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். கிறிசோஸ்தொமுஸ் வியாக்கியானம் பண்ணிச் சொல்லுகிறதாவது : தேவகற்பனையெல்லாம் தேவ சிநேகத்தில் மாத்திரம் அடங்கியிருக்கிறதென்றல்ல ; ஆனுல் தேவ சிநேகம் தேவ கற்பனையெல்லாத்தையும் நாம் எளிதாய் அநுசரிக்கும்படி செய்யுமென்று இதற்கு அர்த்தமாகுமென்றுர்.

சிநேகம் சாவைப்போலே பெலனுள்ளதென்று ஞானியானவர் வசனித்த வாக்கியம் இச்சத்தியத்தை ஸ்திரப்படுத்த உதவும். அர்ச்சியசிஷ்டவர்கள் இவ்வாக்கியத்தின் பேரில் சொன்ன பல அர்த்தங்களுக்குள்ளே இரண்டு அர்த்தம் இது காரியத்தை வெகு நேர்த்தியாய் விளக்கிக் காட்டும். அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, சிநேகம் சாவைப்போலே பெலனுள்ளதென்பதற்கு அர்த்தம் என்னவென்று அ





றியவேணுமோ ? கேள் : சாவு சரீரத்திலிருந்து ஆத்துமத்தைப் பிரிக்கிறதுபோலே, தேவ சிநேகம் இப்பிரபஞ்ச நன்மைகளைவிட்டு ஆத்தும பற்றுதலைப் பிரிக்கும் ; சாவு உலக சஞ்சாரத்தைவிட்டு மனுஷனைப் பிரிக்கிறதுபோலே, தேவ சிநேகம் யாதொருவனுடைய இருதயத்தில் ஆட்கொண்டிருந்தால், உலகத்தின் பேரிலும் சரீரத்தின்பேரிலுமுள்ள பற்றுதலை அதிலிருந்து முழுதும் நீக்கிவிடும். சாவு சரீரத்தைக் கொல்லுகிறதுபோலே, தேவ சிநேகம் சரீர இச்சையின்பேரிலுள்ள பற்றுதல் எல்லாத்தையும் கொல்லும். அப்போது மனுஷன் இவ்வுலோகத்துக்கும் சரீரத்துக்கும் செத்து இயேசுநாதருடைய உயிரை மாத்திரம் அடைந்திருப்பான். ஆகையால் நான் உயிரோடிருக்கிறேன் ; ஆகிலும் உயிரோடிருக்கிறது நானல்ல; இயேசுநாதரே என்னிடத்தில் உயிரோடிருக்கிறாரென்று அர்ச். சின்னப்பரைபோலே அவனும் சொல்லலாம்.

அர்ச். அகுஸ்தீன் மேற்சொன்ன வாக்கியத்துக்கு வேறொரு அர்த்தம் சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், தேவ சிநேகம் சாவைப்போலே பெலனாயிருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை ; ஏனென்றால் சாவு வரும்போது, அதை எதிர்த்து நிற்க ஒருவராலும் முடியாது, வாகட சாஸ்திரமும் மருந்தும் ஆஸ்தியும் அதிகாரத்துவமும் ஒன்றும் அதை நிறுத்த உதவாது. இவ்வண்ணமே தேவ சிநேகம் இருதயத்தில் ஆட்கொண்டிருந்தால், அதை ஆத்துமத்தைவிட்டு நீக்க உலோகத்திலே ஒருவராலும் முடியாது, ஆஸ்தி மகிமை செல்வாக்குத் துன்பதுரிதம் முதலிய சகலமும் சிநேகத்துக்குத் தடையல்ல ; இதுவெல்லாம் .தேவ சிநேகத்தை ஆத்துமத்தில் அதிகமாய் ஸ்திரப்படுத்த உதவுமேயல்லாமல் அதை நீக்கமுடியாது. உலோகத்தை வெறுத்துச் சந்நியாசத்திலுள்ள ஒடுக்கமான நடக்கையை அநுசரித்து வருகிறவர்கள் தேவ சிநேகத்தின் ஒரு பொறியைக் கொண்டு மாத்திரம் தங்கள் கருத்துக்கு விரோதமாயிருந்த விக்கினங்கள் எல்லாத்தையும் தைரியமாய்ச் செயித்து உறமுறையார் சிநேகிதர் முதலிய சகலருடைய முகத்தாக்ஷணையையும் தள்ளிச் சந்நியாச சீவியத்துக்கு முன்பாக உலோக நன்மை எல்லாம் வீணென்றும் நிர்ப்பாக்கியமென்றும் எண்ணிச் சந்தோஷமாய் அதைத் தங்கள் காலுக்குக் கீழாக வைத்து மிதித்தோமென்று அறிந்துகொள்ளுவார்கள். ஆகையால் ஸ்திரமான தேவ சிநேகம் உன்னிடத்தில் உண்டானால், புண்ணிய சாங்கோபாங்க






மார்க்கத்தில் உனக்கு ஒரு விக்கினமும் இராது. அப்போது அர்ச். சின்னப்பரைப்போலே நீயும் சொல்லலாம். அதாவது, இயேசுநாதருடைய சிநேகத்தை விட்டு நம்மைப் பிரிப்பதார்? கஸ்தி துன்பமோ, வருத்தமோ, பசியோ, குளிரோ, ஆபத்தோ, இக்கட்டு இடையூறோ, விலங்கோ! இதுவெல்லாமல்ல. நாம் நிச்சயித்துச் சொல்லுகிறதென்னவென்றால், சாவும் சீவியமும் சம்மனசுகளும் பிராதமிகரும் பலவத்தரும் இவ்வுலோக நன்மைகளும் மறுலோக நன்மைகளும் எல்லாத்துக்கும் மேலான வானமண்டலத்திலும் எல்லாத்துக்கும் கீழான பாதாளத்திலுமுள்ள எதுவும் சிஷ்டிக்கப்பட்ட எந்த வஸ்துவும் தேவசிநேகத்தைவிட்டு நம்மைப் பிரிக்கக் கூடாதென்றார்.

———oooo———

## உ௰-ம் அதிகாரம்.

———ooo———

மோக்ஷ சம்பாவனையை அடைவோமென்கிற நம்பிக்கை ஒறுத்தல்
முயற்சியை நமக்கு எளிதாகவும் இன்பமாகவும்
ஆக்குவதற்கான வழிபாடென்று
சொல்லுவது.

——oo——

நமக்கு வரவிருக்கிற மோக்ஷசம்பாவனையின் கனத்தை யோசித்துப் பார்த்தால், ஒறுத்தல் முயற்சி நமக்கு எளிதும் இன்பமுமாகும். இந்த நம்பிக்கையின் நிமித்தம் யோபென்பவர் தாம் அநுபவித்த கோர உபாதைகளுக்குள்ளே ஆறுதலடைந்து தைரியமாய் இருந்தார். இதினாலே அவர் சொன்னதாவது: என் வார்த்தைகளை ஆர் எழுதக் கிருபை செய்வார்? இருப்பு எழுத்தாணியைக் கொண்டு அதுகளை ஒரு புத்தகத்திலும் ஈயத் தகட்டிலும் பதித்து வைக்க மனதுள்ளவர்களார்? அல்லது கல்லிலேயாகிலும் அதைக் கொத்தி வைப்பதாரென்றார், தம்முடைய வார்த்தைகள் பிதிர்வழியாருக்கு நிலைத்திருக்க வேணுமென்று அவர் இவ்வளவு உருக்கமாய் ஆசைப்படுகிறதுக்குக் காரணமென்னவென்று நினைக்கிறாய்? என்னவென்றால், அவர் கஸ்தி உபாதைப்படும்போது, மோக்ஷத்தை அடைவோமென்கிற நம்பிக்கையைக் கொண்டு தமக்கு வந்த ஆறுதலைத் தமது சந்ததியாரும் அடைய வேணுமென்று





மிருந்த ஆசைப்பட்டிருந்தார். ஆறுதல் நிறைந்த இந்த வார்த்தைகள் எதுவென்று அறியவேணுமோ? கேள்: என் இரக்ஷகர் உயிரோடிருக்கிறாரென்றும் நான் கடைசி நாளில் தூசியை விட்டு உயிரோடு எழுந்திருப்பேனென்றும் என் தோல் இன்னம் ஒருவிசை என்னை மூடி என் சரீரக் கண்களைக் கொண்டு என் சர்வேசுரனைப் பார்ப்பேனென்றும் வேறொருவருமல்லவே நானே அவரைப் பார்ப்பேனென்றும் என் கண்களைக் கொண்டே அவரைக் காண்பேனென்றும் எனக்குத் தெரியும். இந்த நம்பிக்கை என் இருதயத்துக்குள் பதிந்திருக்கிறதென்றார். வற்றாத ஊற்றிலிருந்து நீர்ப் பிரவாகம் புறப்படுகிறதுபோலே, இந்த நம்பிக்கையைக் கொண்டு நான் படுகிற கஸ்தி வருத்தங்களுக்குள்ளே இடைவிடாத ஆறுதலாகிற வெள்ளம் எனக்குண்டாகின்றது. சர்வேசுரன் அபிராமுக்குக் காக்ஷி கொடுத்து உன் சம்பாவனை திரளாயிருக்குமென்று சொல்லி அவரை ஸ்திரப்படுத்தினார். இந்த நம்பிக்கையைக் கொண்டு தானே மோயீசென்பவர் பரவோனுடைய அஸ்தி மகிமை பிரதாபம் அனைத்தையும் எனக்கு வேண்டாமென்று வெறுத்துத் தள்ளினார். இதினாலல்லோ மோயீசென்பவர் வளர்ந்தபின், பாவத்தினாலே வருகிற பாக்கியத்தைக் கொஞ்ச நாள் வரைக்கும் சுகித்தநுபவிப்பதைவிடத் தேவ பிரசைகளோடு கஸ்திப்படுகிறது தாவிலையென்றும் இயேசுநாதருடைய அவமானம் எஜிப்த்து தேசத்தின் சகல ஆஸ்திகளைவிட அதிக ஆஸ்தியென்றும் எண்ணிப் பரவோன் மகள் பிள்ளையாகமாட்டோமென்றார். மோக்ஷ சம்பாவனையை நம்பி இதையெல்லாம் வெறுத்துத் தள்ளினாரென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். இந்த நம்பிக்கையைக் கொண்டு தானே இராச தீர்க்கதரிசி தேவ கற்பனைகளையெல்லாம் இடைவிடாமல் அநுசரித்துக்கொண்டு வந்தார். இதினாலல்லோ மோக்ஷ சம்பாவனையின் நிமித்தம் எப்போதும் உமது கற்பனைகளை அநுசரிக்க வேணுமென்று தீர்மானித்திருக்கிறேனென்றார். இவ்விஷயத்தில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: இதற்காக வெகுவாய் உழைக்க வேணுமென்று சொல்லுவாயாக்கும். மெய்தான்; ஆனால் உனக்கு வரவிருக்கிற சம்பாவனையின் கனத்தை யோசித்துப் பார். ஒரு காரியம் எவ்வளவு வருத்தமாயிருந்தாலும், அதினாலே திரளான இலாபம் வருமென்று அறிந்தால், அது இலேசாகத் தோன்றும். சம்பாவனை வருமென்கிற நம்பிக்கை உழைப்பிலே வெகு ஆறுதலைத் தருமென்றார். வியாபாரிகள் குடியானவர்கள் போர்வீரர் முதலியவர்களிடத்தில் நாம் தினந்தோறும் காண்கிற காக்ஷி இதுவே. வியாபாரி புச





லுக்கும் சாவுக்கும் பயப்படுகிறதில்லை ; குடியானவர்கள் வெயிலுக்கும் வேலைக்கும் அஞ்சுகிறதில்லை ; போர்வீரர் இடைவிடாத களைப்பையும் காயத்தையும் சாவையும் கவனிக்கிறதில்லை ; ஏனென்றால் இவர்கள் எல்லாரும் இலாபத்தையும் சம்பாவனையையும்பற்றி இதையெல்லாம் இடைவிடாமல் பட்டநுபவிக்கிறார்களே. இதிப்படியிருக்க, மோக்ஷ சம்பாவனையும் மோக்ஷ தாயதியும் தனக்கு வருமென்று நம்பியிருக்கிற கிறீஸ்துவன் அதை அடைவதற்கு அவசரமான கஸ்தி துன்பங்களுக்கும் ஒறுத்தலுக்கும் பயப்படலாமோ ? மேற்சொன்னவர்கள் அழிந்துபோகிற முடியை அடைவதற்காக அத்தனை வருத்தத்துக்கும் ஆபத்துக்கும் உள்ளாகிறார்களே ; அழியாத முடியை அடைவதற்காக நாம் எவ்வளவு வருத்தப்பட்டாலும், அது போதுமோ ? ஒறுத்தலினாலே நமக்கு வரப்போகிற சம்பாவனையின் கனத்தை யோசித்துப் பார்த்தால், ஒறுத்தலிலுள்ள வருத்தமெல்லாம் அற்பமாகத் தோன்றும். இவ்வளவு சொற்ப வருத்தத்துக்காக மோக்ஷத்தைக் கொடுக்கிறது சும்மா கொடுத்தாற்போலாகும். ஒரு பொருள் கிராக்கியோ மலிவோவென்று தீர்மானிப்பதற்கு அதின் விலை இன்னதென்று அறிகிறது பற்றாது ; அந்தப் பொருள் இன்னதென்றும் என்ன பெறுமென்றும் அறிந்துகொள்ள வேண்டும். நூறு ரூபாய் கிராக்கியோவென்று நான் உன்னிடத்தில் கேட்டால், நீ என்ன சொல்லுவாய் ? சரக்கென்ன ? சரக்கு என்ன பெறுமென்று பார்த்தல்லோ, அதுக்கு நூறு ரூபாய் கிராக்கியோ மலிவோவென்று சொல்ல வேண்டும். சில சரக்கு ஒரு ரூபாய்கூடப்பெறாது ; சில சரக்குக்கு ஆயிர ரூபாய் கொடுத்து வாங்கினாலும், அது மலிவாயிருக்கும். மகா பெரிய வச்சிரக் கல்லுக்கும் விஸ்தாரமான வயலுக்கும் நூறு ரூபாய் கொடுத்து வாங்கினால், இது சும்மா வாங்கினதுபோலாகுமென்பாயல்லோ ? இவ்வண்ணமே சர்வேசுரன் உன்னிடத்தில் கேட்கிறது மெத்தவோ கொஞ்சமோவென்று அறியவேணுமோ? நீ அவரிடத்தில் வாங்குகிறது என்னவென்று யோசித்துப் பார் ; நீ அவருக்குக் கொடுக்கிறது இன்னதென்றும் அவர் உனக்குக் கொடுக்கிறது இன்னதென்றும் கவனித்துப் பார். நாம் தாமே உனக்குச் சம்பாவனையாயிருப்போமென்றார். என்ன ! சர்வேசுரன் தானே தம்மை உனக்குக் கொடுக்கிறாரே ; இது கிரையமில்லாமல் இலவசமாய் வாங்கிறதுக்கு ஒப்பாகுமல்லோ ? சர்வேசுரனைக் கைக்கொள்ளுகிறதற்கு உன் சுயமனசை மறுதலித்து உன் ஆசாபாசங்களை ஒறுக்க வேணுமென்றுமாத்திரம் கேட்கிறதினாலே, சர்வேசுரனை உனக்குச் சும்மா கொடுத்தாற்





போலாகுமே. இதினாலல்லோ தேவரீர் அவர்களைச் சும்மா இரக்ஷிப்பீரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இதைப்பார்க்க மலிவான காரியம் எங்கேயுண்டு? ஆகையால் பணமில்லாதவர்களே, நீங்கள் எல்லாரும் தீவரித்துப் போய் விலைக்கு வாங்கிச் சாப்பிடுங்கள்; பணமில்லாமலும் ஒன்றுங் கொடாமலும் பாலையும் இரசத்தையும் வாங்க வாருங்களென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வாயாலே சர்வேசுரன் திருவுளம்பற்றினார். ஓடிவாருங்கள்; மலிவான இந்தச் சமயத்தை முந்திப்போக விடாதேயுங்கள்.

அர்ச். பசிலியார் வெகு அக்கறையோடு நமக்குப் போதித்திருக்கிற போதகம் இதுவே. நீங்கள் புண்ணிய நெறியில் வர்த்திக்கும்பொருட்டு நித்திய சம்பாவனையை இடைவிடாமல் மனதில் எண்ணிக்கொள்ளுங்களென்றார். அர்ச். அந்தோனியார் தமது சந்நியாசிகள் சந்நியாசத்திலுள்ள வருத்தத்தை நிலைபெறப் பட்டனுபவிக்கும் பொருட்டு அவர்களுக்குச் சொல்லிக்கொண்டுவந்த புத்தியுமிதுவே. சில விசை தேவ உதாரத்துவத்தின் பேரிலே அவர் ஆச்சரியப்பட்டுச் சொன்னதாவது: உலோகத்திலே மனுஷர் செய்கிற வியாபாரத்திலே சரிக்குச் சரி கொடுத்து வாங்குவார்கள்; ஒருவன் வாங்கிறதுக்குச் சரியான விலை கொடுப்பான்; விற்கிறதற்கும் வாங்கிறதற்கும் விலை சரியாயிருக்கும். ஆனால் நித்திய மகிமையை வெகு மலிவாய் வாங்கிக்கொள்ளலாம்; ஏனென்றால் மனுஷருடைய ஆயுசு காலம் வழக்கமாய் எழுபது வருஷமாகும்; மகா பெலனுள்ளவர்கள் எண்பது வயசுமட்டும் போகிறதுண்டு. எண்பது வயசுக்குப்பின் வருகிறதெல்லாம் நிர்ப்பாக்கியமும் வேதனையுமல்லாமல் வேறல்லவென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. நாம் எண்பது நூறு நூற்றுக்கு மேற்பட்ட காலம் சர்வேசுரனுக்கு ஊழியம் பண்ணினாலும், அத்தனை வருஷ காலம் அவர் சம்பாவனை அளிப்பதுமல்லாமல் அந்தச்சம்பாவனை ஒருகாலும் முடியாது; சர்வேசுரன் சர்வேசுரனாயிருக்கும் மட்டும் அநாதி சதாகாலம் நித்தியமாய் மகிமையுள்ள இராச்சியபாரம் பண்ணிக்கொண்டிருப்போம். ஆகையால் என் பிள்ளைகளே, நீங்கள் சலிக்கவும் வேண்டாம்; உலோக வீண் மகிமையை அபேக்ஷித்து விரும்பவும் வேண்டாம். ஏனென்றால் நமது ஆயுசு காலத்தில் நாம் படவேண்டிய கஸ்தி துன்பங்கள் நமக்கு வரவிருக்கிற மகிமைக்கு ஒப்புமில்லை, நிகருமில்லை. கொஞ்சத்துக்குள்ளே நீங்கிப்போகிற இலேசான கஸ்தி துன்பங்கள் வாக்குக்கெட்டாத நித்திய





மகிமையை நமக்குப் பெறுவிக்குமென்பார். அர்ச். பேர்நர்துஸ் இது காரியத்திலே மிகவும் நேற்றியான ஓர் உவமையைச் சொல்லியிருக்கிறார். அதாவது, யாதொரு குடியானவன் விதைக்கிற காலம் வெகுவாயிருக்கிறதென்று முறைப்பட்டால், இவன் பைத்தியகாரனென்று சொல்லுவோமே; ஏனென்றால் எத்தனை காலம் விதைக்கிறயோ, அவ்வளவுக்குத் திரளான விளைவுண்டாகும். கிறீஸ்துவர்கள் மட்டிலும் சொல்லவேண்டியது இதுவே. நமது ஆயுசு காலத்தில் நாம் பட்டநுபவிக்கிற கஸ்தி துன்பமும் ஒறுத்தலும் வெகு காலம் நீளித்திருக்கிறதென்று எண்ணப் படாது; ஏனென்றால் நமது ஆயுசு நாளெல்லாம் விதைப்புக் காலம்; எவ்வளவு விதைத்துப் பிரயாசப்படுவோமோ, அவ்வளவு பலனை அடைந்துகொள்ளுவோம். எவ்வளவு கொஞ்சம் விதையைக் கூட்டி விதைத்தாலும் அது எப்போதும் வெகு தவசத்தை விளைவிக்குமென்றார். விதைத்த ஒரு கல நெல்லுக்கு அறுப்புக் காலத்திலே இருபது முப்பது கல நெல் அடிக்கும்போது, இன்னம் அதிக நெல் விதைத்திருந்தால், அதிகம் விளையுமேயென்று குடியானவன் ஆசைப்படுவானல்லோ?

---

## உக-ம் அதிகாரம்.

———0000———

முந்தின அதிகாரத்தில் சொன்னதைச் சில வர்த்தமானங்களைக் கொண்டு ஸ்திரப்படுத்துவது.

———000———

பூர்வீக வனவாசிகளில் ஒருவர் இடைவிடாமல் வேலை செய்து வெகு கடின தபசு பண்ணிக்கொண்டு வருவார். இதைக் கண்டு அவருக்குக் கீழ்ப்பட்ட சந்நியாசிகள் மிதமிஞ்சின இந்தத் தபசை மட்டுப்படுத்திக் கொஞ்சம் குறைக்க வேணுமென்று ஒரு நாள் அவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள். அதற்கு அவர் சொன்ன மாறுத்தாரமாவது: என் மக்களே, மோக்ஷ வாசிகள் கஸ்திப்படக்கூடுமானால், தங்களுக்கு வந்த சம்பாவனையைப் பார்த்து இன்னம் கொஞ்சம் பிரயாசப்பட்டிருந்தால், எங்கள் சம்பாவனையை எவ்வளவோ அதிகப்படுத்திக்கொள்ளலாமென்று நினைத்துத் தங்கள் ஆயுசு காலத்திலே இன்னம் அதிக

துன்ப துரிதப்படாததினுலே, வெகு கஸ்திப்படுவார்களென்பதற்குச்
சந்தேகமில்லையென்ருர். அர்ச். பொனவெந்தூருடைய எண்ணமும்
இதுக்கு ஒத்திருக்கும் : நாம் ஒன்றும் செய்யாமல் வீண் காலம் போக்
கிறபோதெல்லாம், அந்த நேரத்தில் செய்யக்கூடுமோன நற்கிரிகைகளுக்
கு வரவேண்டிய மோக்ஷ பாக்கியத்தை இழந்துபோகிருேமென்ருர்.

அர்ச். மேல்க்தில்த்தம்மாள் சரித்திரத்தில் சொல்லியிருக்கிறதும்
இதற்கு ஒத்திருக்கும். அதென்னவென்ருல், அந்தம்மாள் இயேசுநாத
ரைத் தனக்குப் பத்தாவாகத் தெரிந்துகொண்டு தன்னை முழுதும் அ
வருக்கு ஒப்புக்கொடுத்திருந்தாள். அநந்தமுறை இயேசுநாதர் அவளை
ச் சந்திக்க வந்து மனுவாக்குக்கெட்டாத மோக்ஷ பாக்கியத்தை அவ
ளுக்குத் திறந்து காண்பிப்பார். ஒரு நாள் மோக்ஷ வாசிகள் கத்திச்
சொல்லுகிற வார்த்தைகளைக் காதாலே கேட்டாள். அதென்னவென்
ருல், ஒகோ ! உலோகத்தில் இன்னம் உயிரோடிருக்கிறவர்களே, நீங்க
ள் எவ்வளவோ பாக்கியவான்கள் ! க்ஷணத்துக்கு க்ஷணம் நீங்கள் புதி
தான பேறு பலனடையலாமே யென்கிற வார்த்தைகளைக் கேட்டாள்.
மெய்யாகவே தினந்தோறும் எவ்வளவு பேறு பலனடையலாமென்று
மனிதன் அறிந்திருந்தால், பொழுதுவிடியும்போது, இந்த நாளில் நான்
சர்வேசுரனுக்கு ஏற்க நடந்து க்ஷணத்துக்கு க்ஷணம் என் பேறுபலனை
இன்னம் அதிகப்படுத்திக்கொள்ளலாமென்று நினைத்து அகமகிழ்ந்து
சந்தோஷித்துப் படுக்கையை விட்டு எழுந்திருப்பானல்லோ ? இந்த
நினைவு சகலத்தையும் சந்தோஷமாய்ப் பட்டநுபவிப்பதற்கான தைரி
யத்தையும் பெலனையும் அவனுக்குக் கொடுக்குமென்பதற்குச் சந்தேக
மில்லை.

ஞானநந்தாவனமென்னும் புத்தக்த்தை எவிராத்துசென்னும் அ
ருளப்பராகிலும் எருசலேம் பட்டணத்துக்கு அதிமேற்றிராணியாரா
கிய அர்ச். சோபிரோனென்பவரென்கிலும் எழுதித் தந்தாரென்று
சொல்லுகிருர்கள். இதெப்படியிருந்தாலுஞ் சரி, நீசேனென்னும் பட்
டணத்து இரண்டாம் திருச்சபைச் சங்கம் இப்பிரபந்தத்தை நல்லதெ
ன்று அங்கீகரித்துக்கொண்டது. இதில் எழுதியிருக்கிற ஓர் வர்த்தமா
னமாவது : ஓர் வனவாசி இருந்தார். அவருடைய குச்சுக்கும் தண்ணி
ர் இருக்கிற இடத்துக்கும் பனிரண்டு நாழிகை வழித் தூரமிருந்ததினு
லே, தண்ணீர் எடுக்கப்போகிறது அவருக்கு வெகு களைப்பாயிருந்தது.
ஒரு நாள் அவர் தண்ணீர் எடுக்கப் போகும்போது, களைப்பைப் பொ






றுக்கமாட்டாமல் நினைத்ததாவது : இவ்வளவு வருத்தப்படுகிறதற்கு என்ன அவசரம்? தண்ணீர் கிட்டப்போய் அங்கே குச்சுக் கட்டிக்கொண்டால், நல்லதென்று தீர்மானித்துக்கொண்டார். வேறொரு தடவை அவர் தண்ணீர் எடுக்கப் போகும்போது, எங்கே குச்சுக் கட்டலாம், என்னமாய்க் கட்டலாம், இதிலே எப்படி இருக்கலாமென்று நினைத்துக்கொண்டு போனார். அப்போது ஒன்று இரண்டு மூன்று நாலு என்று எண்ணுகிற சத்தத்தைத் தமக்குப் பிறகே கேட்டார். கேட்டு இந்த அத்துவானக் காட்டிலே அளக்கிறதும் எண்ணுகிறதுமுண்டோவென்று ஆச்சரியப்பட்டுத் திரும்பிப் பார்த்தார். ஒருவரையும் காணாததினாலே, தாம் முன்னே நினைத்ததை நினைத்துக்கொண்டு போனார். இன்னம் அந்தச் சத்தத்தை மறுபடியும் கேட்டதினாலே, திரும்பிப் பார்த்தாலும் ஒருவரையும் காணவில்லை. மூன்றாம் விசையும் அந்தச் சத்தம் கேட்கவே, திரும்பிப் பார்த்துப் பிரகாசமாய்த் துலங்குகிற ஓர் வாலிபனைக் கண்டார். அவன் சொன்னதாவது : கலங்காதேயும், நான் சம்மனசு; நீர் வைக்கிற ஒவ்வொரு அடிக்கும் மோக்ஷ சம்பாவனை கொடுப்பதற்காக அதை ஒவ்வொன்றாய் எண்ணுகிறேனென்று சொல்லி மறைந்துபோனார். அப்போது வனவாசி தனக்குள்ளே புகுந்து நினைத்ததாவது : இவ்வளவு நன்மையையும் இவ்வளவு நிச்சயமான இலாபத்தையும் போக்கடிக்கிறதற்காகத்தானே தண்ணீர் கிட்டக் குச்சுக் கட்டவேணுமென்று நினைத்தேன் ; என்னைப்போலே பைத்தியகாரன் உண்டோவென்றெண்ணி அதிக வருத்தப்பட்டு அதிக பேறு பலனடையும்படியாகத் தண்ணீருக்கு இன்னம் தூரத்திலே கொண்டுபோய்க் குச்சுக் கட்ட வேணுமென்று தீர்மானித்தார்.

வனவாசிகள் சரித்திரத்தில் எழுதியிருக்கிற வேறொரு வர்த்தமானமாவது : தேபாயிதென்னும் வனாந்தரத்தில் இருந்த விருத்தாப்பியரான ஒரு வனவாசியிடத்தில் வால சந்நியாசியார் ஒருவர் இருந்தார். அவர் இவரை வெகு கண்டிப்பாய் நடத்திகொண்டு வந்தார். தினந்தோறும் சாயங்காலம் கிழவனார் இவருக்கு ஓர் பிரசங்கம்பண்ணுவார். அதின்பின் இருவரும் செபம் செய்து படுக்கப்போவார்கள். சில கிறீஸ்துவர்கள் இந்த விருத்தாப்பியமான சந்நியாசியாருடைய அர்ச்சியசிஷ்டத்தனத்தை வெகுவாய்க் கேள்விப்பட்டு ஒரு நாள் அவரைப் பார்க்க வந்து வெகு நேரம் அவரோடே பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் போனபின், வழக்கம்போலே வால சந்நியாசியாருக்குப் பிரசங்கம்



பண்ணத் துவக்கினார் ; ஆனால் வெகு நேரம் பிரசங்கம் பண்ணினபின், தூங்கி விழுந்தார். அவர் இப்போ எழுந்திருப்பார், அப்போ எழுந்திருப்பார், செபம் சொல்லிப்போட்டுப் படுக்கப் போகலாமென்று வால சந்நியாசியார் காத்துக்கொண்டிருந்தார் ; ஆனால் அவர் விழிக்காததைக்கண்டு படுக்கப் போக வேணுமென்று வால சந்நியாசியாருக்குப் பொறுமையான சோதனை வந்தது. ஒரு விசையும் இரண்டு விசையும் அதைச் செயித்தார் ; இப்படி ஏழு விசை அந்தச் சோதனை திரும்பி வந்தாலும், எப்போதும் உறுதியாய் அதைத் தள்ளினார். கடைசியாய் நடுச்சாமத்துக்குப் பின், கிழவனார் விழித்தெழுந்து வால சந்நியாசியார் அந்த இடத்திலேயே இருக்கிறதைக் கண்டு ஏன் என்னை எழுப்பவில்லையென்று கேட்டார். உம்மை எழுப்பினால், வருத்தமாயிருக்குமே ; அதினாலே உம்மை எழுப்பவில்லையென்று வால சந்நியாசியார் சொன்னார். அப்போது இருவரும் காலப் பிரார்த்தனை சொன்னபின், கிழவனார் அவருக்கு ஆசீர்வாதம் கொடுத்துப் படுக்கப் போகச் சொன்னார். ஆகிலும் கிழவனார் திரும்பச் செபத்தியானம் பண்ணிக்கொண்டிருக்கும்போது, பரவசமாகி மகிமைப் பிரதாபத்தோடு துலங்குகிற ஓர் இடத்திலே பிரகாசமுள்ள ஓர் சிம்மாசனத்தையும் அதின் மேலே மகா விலையேற்ப்பெற்ற ஏழு முடியும் இருக்கிறதை கண்டார். கண்டு இந்த முடி ஆருக்கென்று அங்கே இருந்த சம்மனசுவிடத்தில் கேட்டார். அதுக்கு அந்தச் சம்மனசு சொன்னதாவது : வால சந்நியாசியாருடைய அர்ச்சியசிஷ்டத்தனத்துக்காக இந்தச் சிம்மாசனத்தைச் சர்வேசுரன் அவருக்கு வைத்திருக்கிறார் ; இந்த இராத்திரித்தானே வால சந்நியாசியார் அந்த ஏழு முடியையும் அடைந்துகொண்டாரென்றார். . விடிந்தவுடனே கிழவனார் வால சந்நியாசியாரைப் பார்த்து நான் இராத்திரி தூங்கும்போது, கிட்டக் காத்துக்கொண்டிருந்தாயே ; அப்போது நடந்ததென்னவென்று கேட்டார். அதுக்கு வால சந்நியாசியார் சொன்னதாவது : பொறுமையான நினைவு என்னிடத்தில் வந்து நீர் விழித்து எழுந்திருக்கும்மட்டும் காத்திருக்கப்படாதென்று ஏழு விசை சோதனை வந்தது ; எப்போதும் அதைச் செயித்துத் தள்ளினேனென்றார். இதினாலே அவர் ஏழு முடியை அடைந்துகொண்டாரென்று விருத்தாப்பியரான சந்நியாசியார் அறிந்துகொண்டார்.

அர்ச். பிராஞ்சீஸ்கு சபை சரித்திரத்தில் எழுதியிருக்கிறதாவது: குளிர் காலத்திலே ஓர் தடவை இந்த அர்ச்சியசிஷ்டவருடைய தம்பி



இவருக்கு எதிர்ப்பட்டான். இவ
ங்கிக்கொண்டிருக்கிறதை அவன்
ப்பி உமது வேர்வையில் ஒரு
கேலியாகக் கேட்கச் சொன்னான்
ஷ முகத்தோடே சொன்னதாவ
ரனுக்கு விற்றுப்போட்டேன் ;
கிறதென்று என் தம்பியிடத்தி
தடவை மிதமிஞ்சின வேதனையு
ந்து அவரை உபாதித்ததினாலே
மனுஷருடைய பெலத்தினாலே
து அவர் மோக்ஷத்திலிருந்து
வருத்தத்துக்காக மோக்ஷத்தி
டைவாயென்கிறதினாலே சந்தோ
கல்லெல்லாம் முத்தாகவும் வை
றப்பெற்ற வாசனைத் தைலமாக
சர்வேசுரன் உனக்குச் சேகரித்
துக்கு ஒருகாலும் நிகரல்லவென்
ர் அடைந்த ஆறுதலினாலே அவ
ற்று. அப்போது அவர் தமது
ன் மோக்ஷத்திலிருந்து தமக்கு
டு அவர்களுக்கு வெளிப்படுத்தி

உஉ-ம்

இயேசுநாதர் பட்ட பாடுகளி
நமக்கு மிகவும் எளிதா
செ

நமது இரக்ஷகரும் எச
ரிகை நாம் ஒறுத்தல் முயற்சி




இவருக்கு எதிர்ப்பட்டான். இவர் வஸ்திரமில்லாமல் குளிரினாலே நடுங்கிக்கொண்டிருக்கிறதை அவன் கண்டு அவரிடத்தில் ஓர் ஆளை அனுப்பி உமது வேர்வையில் ஒரு துளி விலைக்குக் கொடுப்பீரோவென்று கேலியாகக் கேட்கச் சொன்னான். அதுக்கு அர்ச்சியசிஷ்டவர் சந்தோஷ முகத்தோடே சொன்னதாவது : என் வேர்வையெல்லாம் சர்வேசுரனுக்கு விற்றுப்போட்டேன் ; அதுவும் வெகு கிராக்கியாய் விற்றிருக்கிறதென்று என் தம்பியிடத்தில் போய்ச் சொல்லென்றார். வேறோர் தடவை மிதமிஞ்சின வேதனையும் பொறுக்கக்கூடாத சோதனையும் வந்து அவரை உபாதித்ததினாலே, அதைச் செயித்துத் தள்ளுகிறதற்கு மனுஷருடைய பெலத்தினாலே கூடாததுபோலேயிருந்தது. அப்போது அவர் மோக்ஷத்திலிருந்து கேட்ட சத்தமாவது : நீ அநுபவிக்கிற வருத்தத்துக்காக மோக்ஷத்திலே வெகு திரவிய பொக்கிஷங்களை அடைவாயென்கிறதினாலே சந்தோஷப்படு ; பூமியெல்லாம் தங்கமாகவும் கல்லெல்லாம் முத்தாகவும் வைரமாகவும் தண்ணீரெல்லாம் விலையேறப்பெற்ற வாசனைத் தைலமாகவும் மாறினபோதிலும், இதுவெல்லாம் சர்வேசுரன் உனக்குச் சேகரித்து வைத்திருக்கிற திரளான பாக்கியத்துக்கு ஒருகாலும் நிகரல்லவென்று சத்தித்தது. இதைக் கேட்டு அவர் அடைந்த ஆறுதலினாலே அவர் பட்ட வேதனை தோன்றாமற்போயிற்று. அப்போது அவர் தமது சந்நியாசிகளை வரவழைத்துச் சர்வேசுரன் மோக்ஷத்திலிருந்து தமக்கு அனுப்பின ஆறுதலைச் சந்தோஷத்தோடு அவர்களுக்கு வெளிப்படுத்தினார்.

———00000———

## உஉ-ம் அதிகாரம்.

———0000———

இயேசுநாதர் பட்ட பாடுகளின் மாதிரிகை ஒறுத்தல் முயற்சியை நமக்கு மிகவும் எளிதாக்குவதற்கான வழிபாடென்று சொல்லுவது.

———

நமது இரக்ஷகரும் எசமானுமாகிய இயேசுநாதருடைய மாதிரிகை நாம் ஒறுத்தல் முயற்சி செய்வதற்கு மிகவும் உதவியான நாலா



ம் வழிபாடாகும். அவரைக் கண்டுபாவிப்பதற்கு நம்மைத் தூண்டிஏவும்படியாய் அவருடைய திரு மாதிரிகையை அர்ச். சின்னப்பர் எடுத்துக் காட்டிச் சொல்லுகிறதாவது : பொறுமையை ஆயுதமாகத் தரித்துக்கொண்டு நமக்குக் குறித்திருக்கிற சண்டைக்குத் தீவரித்து ஓடக்கடவோம் ; நிந்தையைப் பிறக்கணித்துச் சிலுவையின் வேதனையைப் பிரியத்தோடு கைக்கொண்டவருமாய் நமது விசுவாசத்துக்குக் காரணருமாய் விசுவாசத்தை நிறைவேற்றி முடித்தவருமாகிய இயேசுநாதரைக் கண் முன்பாக வைத்துக்கொள்ளக் கடவோம். நீங்கள் அசமந்தத்திலும் அவநம்பிக்கையிலும் விழாதபடிக்குப் பாவிகளாலே அவர் பட்ட உபாதையைத் தியானித்துப் பாருங்கள் ; ஏனென்றால் பாவத்தோடு நீங்கள் செய்த யுத்தத்திலே இன்னம் இரத்தம் சிந்தவில்லையே யென்றார். வேதாகமத்தில் சொல்லியிருக்கிற வர்த்தமானமாவது : இசராயேல் சனங்கள் மாராவென்னும் இடத்துக்கு வந்து சேர்ந்தபோது, அதிலுள்ள தண்ணீர் வெகு கசப்பாயிருந்ததினாலே, அவர்கள் அதைக் குடிக்கக் கூடாமற்போயிற்று. அப்போது மோயீசென்பவர் சர்வேசுரனைப் பிரார்த்தித்துக்கொண்டு சர்வேசுரன் காண்பித்த ஓர் வித மரத்தைத் தண்ணீரில் போடவே, அது இன்பமும் பிரியமுமான ஜலமாயிற்று. இந்த மரம் சிலுவை மரத்துக்கு அடையாளமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் ஒறுத்தல் முயற்சி கசப்பாகவும் வருத்தமாகவும் உனக்குத் தோன்றினால், இத்திரும்ரத்தை அதிலே போடு. அதாவது, இயேசுநாதருடைய சிலுவையையும் பாடுகளையும் சாட்டை அடிகளையும் முள்முடியையும் பிச்சுக் கலந்த காடியையும் நினைவுகூர்ந்து தியானித்துப் பார். அப்போது நீ படுகிற வருத்தமெல்லாம் இன்பமாகவும் பிரியமாகவும் தோன்றும்.

அர்ச். பிராஞ்சீஸ்கு சபை சரித்திரத்தில் சொல்லியிருக்கும் சங்கதியாவது : உலோகத்திலே சகலவித இன்ப சுகங்களையும் அநுபவித்திருந்த வெகு ஆஸ்திபந்தன் ஒருவன் அச்சபையில் பிரவேசிக்க வேணுமென்று வந்தான். பசாசு இதைக் கண்டு கனகோபமாகி அவனைக் கெடுப்பதற்காகத் தன் பெலனெல்லாங்கொண்டு பிரயாசப்பட ஏற்பட்டது. இதற்காக அவன் பிரவேசித்த சபையிலுள்ள அருந்தவத்தை அவன் புத்தியில் இடைவிடாமல் தோற்றுவிக்கும். அவன் முன்னே சாப்பட்ட உருசிகரமான பதார்த்தங்களையும் உடுத்தின விலை உயர்ந்த உடுப்பையும் உலோகத்திலே தனக்கிருந்த இன்ப சுகங்கள் எல்லாத்தை






யும் ஒரு பக்கத்திலேயும் சந்நியாசத்திலே தனக்குக் கொடுத்த கெடுதலான சாப்பாட்டையும் பரும்படியான உடுப்பையும் படுத்துக்கொள்ளுகிறதற்குக் கொடுத்த வைக்கோலையும் சகலவித வறுமையையும் வேறே பக்கத்திலேயும் வைத்து யோசித்து இது பொறுக்கக்கூடாத காரியமென்று விசனப்பட்டுக்கொண்டிருந்தான். பசாசு இதுகளையெல்லாம் இடைவிடாமல் அவன் கண் முன்பாக வைத்து இதை இன்னம் அதிக வருத்தமாகத் தோற்றுவித்துச் சந்நியாசத்தை விட்டுச் சமுசார வாழ்க்கைக்குத் திரும்பிப்போக வேணுமென்று அவனைச் சோதித்தது. கடைசியாய்ச் சோதனை மேலிட்டதினாலே, சந்நியாசத்தை விட்டுப் போக வேணுமென்று தீர்மானித்தான். தீர்மானித்துக்கொண்டு முனிவர் கூடுகிற அறை வழியாகப் போனான். அங்கேயிருந்த பாடுபட்ட சுரூபத்தின் முன்பாக அவன் முழங்காலிலேயிருந்து மிகுந்த உருக்கத்தோடு வேண்டிக்கொள்ளும்போது, பரவசமானான். அப்போது இயேசுநாதரும் தேவமாதாவும் அவனுக்குக் காக்ஷியாகி ஏன் சந்நியாசத்தை விட்டுப் போகிறாயென்று கேட்டார்கள். அதுக்கு அவன் நான் உலோகத்திலே எப்போதும் வெகு செல்வமாய் வளர்ந்ததினாலே, சந்நியாசத்திலுள்ள அருந்தவத்தைச் செய்ய என்னாலே கூடவில்லையென்று மிகுந்த வணக்கத்தோடே சொன்னான். அப்போது இரக்ஷகர் தமது வலது கைப்பட்டையைத் தூக்கிக்கொண்டு இரத்தம் நிறைந்திருக்கிற தமது விலாக் காயத்தை அவனுக்குக் காண்பித்துச் சொன்னதாவது : உன் கையை இங்கே வைத்து இதிலிருந்து புறப்படுகிற இரத்தத்தை எடுத்து உன் கையிலே வைத்துப் பூசிக்கொள் ; நீ படவேண்டிய வருத்தமும் செய்யவேண்டிய அருந்தவமும் உன் ஞாபகத்தில் வந்து உறுத்தும்போதெல்லாம், இந்த இரத்தத்தை நீ நினைவுகூர்ந்தால், மகா வருத்தமான பாடுகள் எல்லாம் எளிதாகவும் இன்பமாகவும் உனக்குத் தோன்றுமென்றார். பரவசம் முடிந்தபின், இந்த நவ சந்நியாசி கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டதைச் செய்துகொண்டு வருவார். பொறுமைக்கும் போசனப் பிரியத்துக்கும் அடுத்த சோதனை வரும்போதெல்லாம், இவர் இரக்ஷகருடைய பாடுகளை நினைத்ததினாலே, தபசின் கசப்பெல்லாம் இன்பமாக மாறும். சர்வேசுரன் தானே மனுஷன்பேரில் வைத்த சிநேகத்தினாலே முள் முடி தரித்துச் சிலுவையில் அறையுண்டிருக்கிறதைப் பார்க்கும்போது, மண்ணிலே உற்பத்தியாகிப் பூமியில் நெளிகிற புழுவாகிய மனுஷனுக்கு எந்தக் கஸ்தி உபாதையும் பொறுக்கக்கூடாததாகத் தோன்றலாமோ ? பரலோக பூலோகத்துக்கு எசமானு



கிய மகத்துவமுள்ள சர்வேசுரன் நமது பாவத்துக்காக அவ்வளவு பாடுபட்டிருக்கையிலே, நமது பாவத்துக்கு உத்தரிப்பாக என்ன பாடுபட்டாலும், அது போதுமோ?

சகல அர்ச்சியசிஷ்டவர்களும் எப்போதும் இதைத் தியானித்து இதற்கு ஒத்த பிரகாரம் நடந்துகொண்டுவந்தார்கள். இயேசுநாதருடைய திருமாதிரிகையைப் பார்த்து அதைக் கண்டுபாவிக்கப் பிரயாசப்பட்டால், ஒறுத்தலையும் கஸ்தி துன்பங்களையும் படுவதற்கு வெகு தைரியம் நம்மிடத்தில் உண்டாவதுமல்லாமல், இது மகா மேலான புண்ணிய சாங்கோபாங்க முயற்சியுமாகும்; இது உருக்கமான தேவ சினேக முயற்சியாயிருக்கிறதினாலே, நமது நற்கிரிகைகள் எல்லாத்துக்கும் மேலான பேறு பலன் உண்டாகும். இவ்வண்ணமே அர்ச். இஞ்ஞாசியார் துவக்கத்திலே தமது பாவத்துக்கு உத்தரிப்பாக ஒறுத்தல் முயற்சி செய்துகொண்டு வருவார். ஆனால் அதின்பின் தமது பாவத்துக்கு உத்தரிப்பாகவல்ல, இயேசுநாதரைக் கண்டு பாவிப்பதற்காக அருந்தவம் பண்ணிக்கொண்டு வருவார். இரக்ஷகர் தங்களுக்கு வழி காட்டினாரென்றும் தங்களுக்காக அவர் சிலுவையையும் பாடுகளையும் பிரியத்தோடு பட்டு இரத்தம் சிந்தினாரென்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் தியானித்து யானை சண்டை போடும்போது, இரத்தத்தைக் கண்ட மாத்திரத்தில் அதிக கோபங் கொள்ளுகிறதுபோலே, அர்ச்சியசிஷ்டவர்கள் இயேசுநாதருடைய திரு இரத்தத்தைக் கண்டமாத்திரத்தில் தங்களுக்காகத் தமது இரத்தத்தை முந்த முந்தச் சிந்தின இயேசுநாதருக்காகத் தாங்களும் தங்கள் இரத்தத்தைச் சிந்த வேணுமென்று அபேக்ஷித்து வேத சாக்ஷிகளாக வேணுமென்கிற ஆசையினாலே எரிந்துகொண்டிருப்பார்கள். வேத சாக்ஷிகளாகிற பாக்கியமடையக் கூடாதேபோனால், தங்களுக்குத் தாங்களே கொலைக்காரராகி இடைவிடாத தபசு செய்து தங்கள் சரீரத்தை வேதனைப்படுத்திப் பஞ்சேந்திரிய ஒறுத்தலையும் மன ஒறுத்தலையும் க்ஷணத்துக்கு க்ஷணம் செய்துகொண்டு வருவார்கள். பாடுபட வேணுமென்று அவர்களிடத்தில் இருந்த உருக்கமான தாகத்தை அருந்தவத்தைக் கொண்டு சற்றாகிலும் அடக்கித் தங்களால் இயன்றமட்டும் இரக்ஷகரைக் கண்டுபாவிக்கிறோமென்று எவ்வளவாகிலும் மனத்திருத்தி அடைந்திருப்பார்கள். இவர்களைப்போலே நாமும் நடக்க வேண்டும். இயேசுநாதருடைய சீவியம் நமது சரீரத்தில் தோன்றும் பொருட்டு இயேசுநாதருடைய பாடுகளை நமது சரீரத்தில் தரித்துக்





கொள்ள வேணுமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஒறுத்தலும் அருந்தவமுஞ் செய்து நமது சரீரத்தை உபாதித்து இரக்ஷகருடைய சீவியத்தையும் பாடுகளையும் அதிலே பதித்துக்கொள்ள வேண்டும். அர்ச். பெர்னர்துஸ் சொல்லுமாப்போலே, தலை முள்ளுக்களால் ஊடுருவியிருக்கும்போது, அவையவங்கள் சுகமேயிருக்கிறது ஆகாது. அவையவங்களாகிய நாம் நமது தலைவராகிய இயேசுநாதருக்கு ஒத்திருக்கும் பொருட்டு நமது சரீரத்தை உபாதித்து அதைச் சிலுவையில் அறையவேண்டும்.

இன்னம் அநேக வழிபாடுகளை இங்கே சொல்லிக் காட்டலாம் ; ஏனென்றால் அர்ச்சியசிஷ்டவர்கள் தவமுயற்சியின் பேரில் சொல்லியிருக்கிற புத்திமதிகளும் ஞாயங்களும் ஒறுத்தல் முயற்சிக்கும் செல்லும். நமக்கு வரப்போகிற மகிமைக்கும் நாம் இவ்வுலோகத்தில் படுகிற கஸ்தி துன்பங்களும் நிகரொன்றுமில்லையென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். பெர்னர்துஸ் சொல்லுகிறதாவது : நமக்கு வரப்போகிற மகிமைக்கும் நாம் படுகிற கஸ்தி துன்பங்களுக்கும் நிகரொன்றுமில்லாததுமல்லாமல் நமக்கு வரவேண்டிய ஆக்கினைக்கும் நாம் தினந்தோறும் கட்டிக்கொள்ளுகிற பாவத்துக்கும் நாம் இடைவிடாமல் சர்வேசுரனிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளுகிற உபகாரங்களுக்கும் நாம் படுகிற துன்ப துரிதங்களுக்கும் நிகரொன்றுமில்லை யென்றார். இதில் ஒவ்வொன்றையும் நன்றாய்ச் சீர்தூக்கிப் பார்த்தால், ஒறுத்தல் முயற்சியின் பேரில் நம்மிடத்தில் உருக்கமான ஆசை உண்டாவதற்குப் போதும்.

———ooooo———

## உநு-ம் அதிகாரம்.

——oooo——

ஒறுத்தலின் மூன்று அந்தஸ்தின் பேரில்.

——ooo——

இந்தப் போதகத்தின் கடைசியிலே ஒறுத்தலில் அர்ச். பெர்னர்துஸ் குறித்திருக்கிற மூன்று அந்தஸ்தைச் சுருக்கமாய் விளக்கிக் காட்டுவோம். இது நாம் படிபடியாய் ஒறுத்தலின் மேலான அந்தஸ்தில் ஏறுவதற்கு உதவும். அர்ச். இராயப்பர் முதல் நிருபத்தில் போதிக்கிறது ஒறுத்தலின் முதல் அந்தஸ்தாகும். அதென்னவென்றால், நமக்கு

மிகவும் பிரியமான சகோதரரே, நீங்கள் பரதேசிகளையும் வழிப்போக்கரையும்போலே ஆத்துமத்தோடு யுத்தம் பண்ணுகிற சரீர இச்சைகளை விலக்கி நடக்க வேணுமென்று உங்களை மன்றாடுகிறேமென்றார். நாம் எல்லாரும் இவ்வுலோகத்திலே வழிப்போக்கர் ; நமது சுயதேசமாகிய மோக்ஷத்தை நோக்கி நடக்கிறோம். இதினாலல்லோ நமக்கு இங்கே நிலைமையான பட்டணமில்லை ; இனி வரப்போகிற பட்டணத்தைத் தேடுகிறோம் ; நாம் இந்தச் சரீரத்தில் குடியிருக்குமட்டும் கர்த்தருக்குத் தூரமாயிருக்கிறோமென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். ஆகையால் தங்கள் தேசத்துக்குத் தூரமாயிருக்கிற வழிப்போக்கரைப்போலே நடக்கக் கடவோம். அர்ச். பெர்நர்துஸ் சொல்லுமாப்போலே, பாட்டைசாரி தன் பாதையிலே நேராய்ப் போவான் ; சுற்றுப் பாதையை விலக்கி நடப்பான் ; வழியிலே யாராகிலும் சண்டை போட்டால், அல்லது வேடிக்கை விநோதம் செய்தால், அதைப் பார்க்க வேணுமென்று நிற்க மாட்டான் ; நில்லாமல் எப்போதும் நடப்பான் ; ஏனென்றால் இதுவெல்லாம் தன் காரியமல்லவென்று எண்ணுவான். தன் சுய தேசத்தை நோக்கி நடந்து எப்போதும் அந்தப் பாதையிலே முன்னிடுகிறதே தன் காரியமென்று நிச்சயித்துக்கொள்ளுவான் ; வேகமாய் நடக்கும் பொருட்டு ஒரு வஸ்திரமும் கொஞ்சச் சாப்பாடும் மாத்திரம் கையோடே கொண்டுபோவான் ; வீண் பாரத்தையெல்லாம் விலக்கி நீக்குவான். பிறதேசமாகிய இவ்வுலோகத்திலே நாமும் நடக்க வேண்டிய விதமிதுவே. நாம் வழிப்போக்கரென்று எண்ணிக்கொள்ள வேண்டும் ; ஓரிடத்திலும் நிற்கப் படாது ; வழிப்பாதைக்கு முழுதும் அவசரமானதை மாத்திரம் கொண்டுபோக வேண்டும். இதினாலல்லோ வஸ்திர போசனமே போதுமென்றிருக்க வேணுமென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். விசையாய் நடக்கும் பொருட்டு வீண் பாரமெல்லாத்தையும் விட்டுத் தொலைக்க வேண்டும். இடைவிடாமல் நமது சுயதேசத்தை நாடி நடக்கக் கட்வோம் ; அதுக்குத் தூரமாயிருக்கிறேமென்று க்ஷணத்துக்கு க்ஷணம் கஸ்திப்பட்டு ஐயோ ! நான் பிறதேசத்திலே இருக்கிற காலம் ஏன் நீளித்திருக்கிறதென்று தாவீதென்னும் தீர்க்கதரிசியோடு கதறிச் சொல்லக் கடவோம். பூமியிலே நான் வழிப்போக்கனென்று எண்ணிக்கொண்டு இப்பரதேசத்திலுள்ள பொல்லாப்புக்களை அறிந்துகொண்டு அழுது பிரலாபித்துக் கர்த்தாவே, என் கண்ணீருக்குக் காது கொடுத்தருளும் ; என் முன்னோர்களைப்போலே நானும் உமக்கு முன்பாகப் பரதேசியாகவும் வழிப்போக்கனாகவும் இருக்கிறேன் ; எ





ன்னை உம்மிடத்தில் அழைத்துக்கொள்ளுமென்று தாவீதென்னும் தீர்க்கதரிசியைப்போலே முழு இருதயத்தோடு சொல்லுகிறவன் பாக்கியவானென்று அர்ச். பெர்னர்துஸ் வசனித்தார்.

ஒறுத்தலிலே இந்த முதல் படி மிகவும் மேலான புண்ணிய சாங்கோபாங்கமென்பதற்குச்சந்தேகமில்லை. நாம் இந்தப் படியில் ஏறினால், வெகுவாய்ப் புண்ணியத்தில் வர்த்தித்திருக்கிறோமென்பது தப்பாது. ஆகிலும் இதற்கு மேலான உன்னத சாங்கோபாங்கத்தின் வேறோர் படியுமுண்டு. ஏனென்றால் அர்ச். பெர்னர்துஸ் சொல்லுமாப்போலே, வழிப்போக்கன் தான் போகிற தேசத்திலுள்ள சனங்களோடு முழுதும் தங்காதேபோனாலும், நடக்கிற காரியத்தைச் சிலவிசை பார்த்துக்கொண்டு நிற்பான்; அவன் பாதையை முழுதும் விட்டு நீங்காதேபோனாலும், இப்படிப் பார்த்துக்கொண்டு நிற்க நிற்க வழிப்பயணத்திலே தாமதமுண்டாகும்; நாள்ச்சென்று தன் சுய தேசத்திலே போய்ச் சேருவான். சிலவிசை வழியிலே காண்கிற காரியத்தைப் பார்க்க வேணுமென்று மிதமிஞ்சின ஆவல் அவனிடத்தில் வெகுவாய்ப் பிறந்தால், வெகு நாள் சென்று தன் சுயதேசத்தில் போய்ச் சேருகிறதுமல்லாமல் சிலவிசை ஒருகாலும் போய்ச் சேரமாட்டான். ஆகிலும் இவ்வுலோகத்திலே வழிப்போக்கனைப்போலே இருக்கிறதைவிட அதிக பரதேசியாயிருக்கக் கூடுமோ? இவனைவிட உலோகபற்றுதலை அதிகமாய் அறுத்துத் தள்ளக் கூடுமோவென்று கேட்பாயாக்கும். இதை அறியவேணுமோ? கேள்: செத்தவனைப்போலே இருக்கிறவன் இவ்வுலோகத்துக்கு முழுதும் பரதேசியாயிருக்கிறான். ஏனென்றால் பயணம் செய்வதற்கு எப்போதும் வழிப் போக்கனுக்குச் சில சாமான் அவசரமாயிருக்கும்; சீவனத்துக்கு அவசரமானதைச் சம்பாதித்து அதைக் கொண்டுபோகவேண்டியிருப்பதினாலே, பயணத்திலே எப்போதும் கொஞ்சம் தாமதம் நேரிடும். ஆனால் செத்தவனுக்கு ஒன்றும் அவசரமில்லை; கல்லறை முதலாய் இல்லாதே போனாலும், அது அவசரமென்று அவனுக்குத் தோன்றாது. அவனைப் புகழுகிறவர்களும் நிந்திக்கிறவர்களும் அவனைக் கொண்டாடுகிறவர்களும் அவன் பேரில் புறணி பேசுகிறவர்களும் எல்லாரும் அவனுக்குச் சரிதான்; அவர்களுடைய புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் அவன் கேட்கிறதில்லை. இதுவே ஒறுத்தலின் இரண்டாம் அந்தஸ்து. முதல் அந்தஸ்தைவிட இது மகா மேலான புண்ணிய சாங்கோபாங்கமாகும். இதினாலல்லோ நீங்கள் செத்துப்போயிருக்கிறீர்கள்; உங்கள் சீவியம்

இயேசுநாதரோடு சர்வேசுரனிடத்தில் மறைந்திருக்கிறதென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஆகையால் நாம் இவ்வுலோகத்திலே வழிப்போக்கராயிருக்கிறது பற்றாது; இவ்வுலோகத்துக்குச் செத்தவர்களைப்போலே இருக்கப் பிரயாசப்பட வேண்டும். இப்படி இருப்பதற்கு என்ன செய்ய வேணுமென்று அறியவேணுமோ? செத்தவன் எப்படியிருக்கிறானென்று பார். செத்தவன் ஒன்றையும் பார்க்கிறதுமில்லை, கேட்கிறதுமில்லை, பேசுகிறதுமில்லை, ஒரு பற்றுதலும் அவனிடத்தில் எழும்பாது, அவன் ஆங்காரிக்கிறதுமில்லை, கோபிக்கிறதுமில்லை. மற்றவர்கள் என்ன செய்கிறார்களென்று பார்க்கிறதற்கு உன்னிடத்திலே கண்ணும், சிரேஷ்டர் கற்பிக்கிறதைச் செய்யாதபடிக்குப் போக்குச் சொல்லுகிறதற்கு உன்னிடத்திலே வாயும் இருந்தால், உன் குற்றத்துக்காகக் கண்டனை தெண்டனை செய்யும்போது, உன்னிடத்தில் எரிச்சல் கிளம்பினால், உன்னை நிந்தித்துத் தாழ்த்தும்போது, உன்னிடத்தில் ஆங்காரமும் கோபமும் எழும்பினால், நீ இன்னம் உலோகத்துக்குச் செத்தவனல்ல; உலோக உயிர் இன்னம் முழுதும் உன்னிடத்தில் குடிகொண்டிருக்கின்றது. ஏனென்றால் செத்தவனுக்கு எவ்வளவு நிந்தை செய்தாலும், அவனைக் காலுக்குக் கீழாக வைத்து மிதித்தாலும், அவன் ஒன்றும் நினைக்கிறதில்லை. உலோகத்துக்கு இப்படிச் செத்துப்போயிருக்கிறவன் பாக்கியவான்! இந்தச் சாவே மெய்யான உயிராகும்; ஏனென்றால் நாம் உலோகத்துக்குள்ளிருந்தாலும், இந்தப் பரிசுத்த சாவு நம்மை மாசற்றவர்களாக்கும்; இப்போதே உலோகத்தை விட்டு நம்மைப் பிரித்துப்போடுமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார்.

அர்ச். பெர்நர்துஸ் சொல்லுமாப்போலே, இது முழுதும் மேலான புண்ணிய சாங்கோபாங்க அந்தஸ்து; ஆனால் இதுக்கு மேலான வேறே ஒரு அந்தஸ்தைக் கண்டுபிடிக்கலாமோ? இதுக்கு மேலான அந்தஸ்தை எங்கே தேடலாம்? எங்கே கண்டுபிடிக்கலாம்? மோக்ஷத்தின் மூன்றாம் மண்டலம் வரைக்கும் பரவசமாய் எழும்பின அர்ச். சின்னப்பரிடத்தில் இதைக் கண்டுபிடித்தால் தான் கண்டு பிடிக்கலாம். ஏனென்றால் மேற் சொன்ன இரண்டாம அந்தஸ்துக்கு மேலான வேறொரு மூன்றாம் அந்தஸ்தைக் கண்டுபிடித்தால், அதை மோக்ஷத்தின் மூன்றாம் மணடலமென்று சொல்லலாமே. உலோகத்துக்குச் செத்துப்போய் மரண்ம் வரைக்கும் தம்மைத் தாழ்த்தின இயேசுநாதரைக் கண்டுபாவிக்கிறதைவிட மேலான புண்ணிய சாங்கோபாங்கம் இவ்வு

லோகத்தில் உண்டோ? ஆம், உண்டு. அதென்னவென்ருல், அர்ச். சின்னப்பர் சொல்லுமாப்போலே, சிலுவை மரணமுண்டு; இயேசுநாதருடைய பாடுகளைக் கொண்டாடுகிற பாஸ்குத் திருநாளிலே திருச்சபை பாடுகிறதுமிதுவே. சும்மா சாகிறதைவிடச் சிலுவையில் அறையுண்டு சாகிறது அதிக வருத்தமான காரியம். இயேசுநாதர் காலத்திலே சிலுவை மரணம் எல்லாத்திலும் அதிக அவமானத்துக்குரியதாயிருந்தது. ஆகையால் சிலுவை மரணம் ஒறுத்தலின் மூன்ரும் அந்தஸ்தாகும்; மேற்சொன்ன இரண்டாம் அந்தஸ்தைப் பார்க்க இது மகா மேலான உன்னத அந்தஸ்து. அர்ச். சின்னப்பர் மோக்ஷத்தின் மூன்ரும் மண்டலத்தில் ஏறினதுபோலே, ஒறுத்தலின் மூன்ரும் அந்தஸ்திலும் ஏறினர். இதினலல்லோ உலோகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கின்றது; நான் உலோகத்துக்குச் சிலுவையிலே அறையுண்டிருக்கிறேனென்ருர். நான் உலோகத்துக்குச் செத்துப்போயிருக்கிறேனென்று மாத்திரம் அவர் சொல்லவில்லை; உலோகத்துக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறேன்; உலோகம் எனக்குச் சிலுவையாயிருக்கின்றது; நான் உலோகத்துக்குச் சிலுவையாயிருக்கிறேனென்று சொல்லியிருக்கிருர். அதாவது, உலோகத்துக்குப் பிரியமான இன்ப சுகமும் மகிமையும் ஆஸ்தியும் மனுஷருடைய புகழ்ச்சியும் எல்லாம் எனக்கு வருத்தமாகவும் சிலுவையாகவும் தோன்றுகின்றது; இதுகளையெல்லாம் நான் அருவருத்துப் பகைத்துத் தள்ளுகிறேன். மனுஷருக்கு அருவருப்பாயிருக்கிற அவமானமும் சிலுவையும் தரித்திரமும் எனக்குப் பிரியமாயிருக்கின்றது; இதுகளை நான் முழுப் பக்ஷத்தோடு கட்டி மினவிக்கொள்ளுகிறேன்; இதுகளை என் முழு இருதயப் பற்றுதலோடு சினேகிக்கிறேனென்று சொன்னற்போலாயிற்று. ஓர் கிறீஸ்துவனுக்கு உலோக நன்மை சிலுவையாகவும் உலோகத்துக்கு அவன் சிலுவையாகவும் தோன்றினல், அப்போது அவன் உலோகத்துக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிருன். உலோகம் அவனுக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறதென்று சொல்லலாம். இந்தப் புண்ணிய சாங்கோபாங்க அந்தஸ்து முதல் அந்தஸ்தையும் இரண்டாம் அந்தஸ்தையும்விட மகா உத்தமமானதென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். ஏனென்ருல் வழிப்போக்கன் பாதையிலே நடந்தாலும், காண்கிற காரியங்களைப் பார்ப்பதற்காக வெகு நேரம் நில்லாதேபோனலும், அதுகளைப் பார்த்துக்கொண்டு கொஞ்ச நேரமாகிலும் போகுவான். இந்தப் புண்ணியத்தின் இரண்டாம் அந்தஸ்தில் வந்து சேர்ந்தவன் உலோகத்துக்





குச் செத்துப்போயிருக்கிறதினாலே, செல்வாக்கும் தரித்திரமும் மகி
மையும் அவமானமும் சுகமும் வேதனையும் எல்லாம் அவனுக்குச் சரி
தான் ; இதில் ஒன்றைவிட வேறொன்றை அவன் ஆசிக்கிறதுமில்லை,
அருவருக்கிறதுமில்லை. ஆனால் ஒறுத்தலின் மூன்றும் அந்தஸ்தில் வ
ந்து சேர்ந்தவன் இதுவெல்லாம் எனக்குச் சரிதானென்றிருக்கமாட்
டான். இவனுக்குச் செல்வமும் மகிமையும் சுகமும் சிலுவையாகவும்
வேதனையாகவும் தோன்றும் ; நிந்தை அவமானம் இவனுக்கு நேரிடும்
போது, இவன் கஸ்திப்படாமலிருக்கிறதுமல்லாமல் அகமகிழ்ந்து சந்
தோஷப்பட்டு இதுவே தனக்கு மகிமையென்று எண்ணிக்கொள்ளுவா
ன். இதினாலல்லோ நமது கர்த்தராகிய இயேசுநாதருடைய சிலுவை
யையல்லாமல் வேறே யெந்தக் காரியத்தைக் கொண்டும் மகிமை பாரா
ட்டுகிறது எனக்குத் தகாத காரியம் ; இயேசுநாதரைக் கொண்டு உ
லோகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கின்றது ; நானும் உ
லோகத்துக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறேனென்று அர்ச். சி
ன்னப்பர் அருளிச்செய்தார். அதாவது, இயேசுநாதர் பேரில் எனக்குள்
ள சினேகத்தினாலே மனுஷருக்குப் பிரியமானதெல்லாம் எனக்குக் கஸ்
தியாகவும் சிலுவையாகவும் தோன்றுகின்றது ; மனுஷருக்கு அருவருப்
பானதெல்லாம் எனக்கு இன்பமும் பிரியமுமாயிருக்கின்றது ; நான்
அநுபவிக்கிற துன்ப துரிதங்களிலே என் இருதயம் ஆறுதலால் நிறை
ந்திருக்கின்றது, சந்தோஷத்தால் பூரித்திருக்கிறேன் ; இயேசுநாதருக்
காகப் பாடுபடுகிறதே எனக்குச் சந்தோஷமும் திருத்தியுமாயிருக்கிற
தென்று சொன்னாற்போலாகும்.

ஆகையால் ஒறுத்தலின் மூன்றும் அந்தஸ்து இதுவே. இந்த அ
ந்தஸ்திலுள்ள மேன்மையினிமித்தம் இதை மோக்ஷத்திலுள்ள மூன்று
ம் மண்டலமென்று அர்ச். பெர்நர்துஸ் சொன்னது ஞாயந்தானே. இ
து ஒறுத்தலிலுள்ள மேலான புண்ணிய சாங்கோபாங்கமென்று அர்ச்
சியசிஷ்டவர்களும் ஞானசிஷியகிரந்த கர்த்தாக்களும் நிரூபித்திருக்கி
றார்கள். ஞான சாஸ்திரிகள் சொல்லுமாப்போலே, யாதொரு புண்ணி
ய முயற்சியைப் பிரியத்தோடு செய்கிறவன் அந்தப் புண்ணிய சாங்
கோபாங்கத்தை அடைந்திருக்கிறானென்று அடையாளமாகும். ஆகை
யால் ஒறுத்தலிலே மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தை நீ அடை
ந்திருக்கிறாயோ இல்லையோவென்று அறியவேணுமோ ? இதை அறிய
வேணுமானால், உன் மனதுக்குள் புகுந்து யோசித்துப்பார். உன் மன

சுபோலே நடவாதபடிக்கு விக்கினம் நேரிடும்போது, நீ கேட்கிறதை இல்லையென்று சொல்லி உன்னைத் தள்ளிவிடும்போது, மற்றவர்கள் உன்னை நிந்தித்து அவமானப்படுத்தும்போது, சந்தோஷப்படுகிறாயோ? உனக்கு மகிமை பெருமை நேரிடும்போது, கஸ்திப்படுகிறாயோவென்று சோதித்துப் பார். ஒவ்வொருவனும் இவ்விதமாய்ச் சோதித்துப் பார்த்து ஒறுத்தலின் எந்த அந்தஸ்திலே வந்து சேர்ந்திருக்கிறேனென்று தீர்மானித்துக்கொண்டு தினந்தோறும் இந்தப் புண்ணியத்திலே வர்த்திக்கப் பிரயாசப்படக் கடவான்; ஏனென்றால் புண்ணியத்தின் மேல் புண்ணியத்தில் ஏறினால் மாத்திரம் மோக்ஷ சீயோன் நகரியில் வீற்றிருக்கிற தேவர்களுக்குத் தேவனாகிய சர்வேசுரனைக் காணலாமென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இயேசுநாதர் அர்ச். பிராஞ்சீஸ்குவுக்குச் சொன்னதாவது : நீ நம்மைக் கைப்பற்ற வேணுமானால், கசப்பான காரியங்களை உனக்குத் தித்திப்பாகவும் தித்திப்பான காரியங்களை உனக்குக் கசப்பாகவும் ஆக்கிக்கொள்ள வேணுமென்றார்.

சேசாரியர் வெளிப்படுத்தின சங்கதியாவது : சீத்தோ சபை மடத்தில் ரோதோல்பென்னும் ஒரு சந்நியாசியார் இருந்தார். அவர் மகா பெரிய தேவதாசரானதினாலே, அடிக்கடி காக்ஷி காண்பார். ஓர் இராத்திரி அதிகாலைச் செபத்துக்குப் பின் அவர் கோவிலில் தியானம் பண்ணிக்கொண்டிருக்கும்போது, இயேசுநாதர் சிலுவையில் அறையுண்டிருக்கிறதாகவும் அவரைச் சுற்றி அந்தச் சபைச் சந்நியாசிகளில் பதினைந்துபேர் சிலுவையில் அறையுண்டிருக்கிறதாகவும் காக்ஷி கண்டார். இரக்ஷகருடைய திருச் சரீரத்திலிருந்து புறப்பட்ட பிரகாசத்தைக் கொண்டு இந்தச் சந்நியாசிகள் இன்னம் உயிரோடிருக்கிறவர்களென்றும் இன்னார் இன்னாரென்றும் எளிதாய் அறிந்துகொண்டார். இந்தக் காக்ஷியைக் கண்டு அவர் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கும்போது, இயேசுநாதர் நம்மைச் சுற்றிச் சிலுவையில் அறையுண்டிருக்கிறவர்கள் ஆரென்று உனக்குத் தெரியுமோவென்றார். அதுக்கு அந்தச் சந்நியாசியார் எனக்குத் தெரியும்; ஆனால் இந்தக் காக்ஷிக்கு அர்த்தம் இன்னதென்று எனக்குத் தெரியவில்லையென்றார். அப்போது கர்த்தர் சொன்னதாவது : இவர்கள் மாத்திரம் தங்கள் நடக்கையை நமது பாடுகளுக்கு ஒப்பாக்கினதினாலே, நம்மோடு கூடச் சிலுவையில் அறையுண்டிருக்கிறார்களென்றார்.

# உ-ம் போதகம்.

## அடக்க ஒடுக்கத்தின்பேரிலும் மவுனத்தின்பேரிலும்.

## க-ம் அதிகாரம்.

*அடக்க ஒடுக்கம் பிறருடைய நன்மாதிரிகைக்கும் பிரயோசனத்துக்கும் எவ்வளவு அவசரமாயிருக்கிறதென்று சொல்லுவது.*

நமது வெளி நடக்கையை நன்றாய் ஒழுங்குப்படுத்தி நமது பஞ்சேந்திரியங்களை மேரை மரியாதையோடு அடக்கி நமது பேச்சு நடக்கை சாடை சைக்கினை யெல்லாத்தையும் ஒழுங்குப்படுத்தி நம்மைப் பார்க்கிறவர்களுக்கும் நம்மோடு சஞ்சாரம் பண்ணுகிறவர்களுக்கும் நமது வெளி நடக்கை நன்மாதிரிகையாயிருக்க வேண்டும். இதுவே நாம் இப்போது சொல்லிக் காட்டப்போகிற அடக்க ஒடுக்கமாகும். அர்ச். அகுஸ்தீன் இதுக்கடுத்ததெல்லாத்தையும் சுருக்கமாய்ச் சொல்லியிருக்கிறார். அதாவது, உங்களைப் பார்க்கிறவர்களுக்குப் பொருந்தாத காரியமொன்றும் உங்கள் வெளி நடக்கையிலே இருக்கப்படாது; உங்கள் வெளி நடக்கையில் உள்ளதெல்லாம் சந்நியாச அந்தஸ்தின் பரிசுத்தத்தனத்துக்கு ஒத்திருக்க வேணுமென்றார். எந்தெந்தக் காரியத்திலே அடக்க ஒடுக்கத்தை அநுசரிக்க வேணுமென்றும் அதுக்கு விரோதமானது இன்னதென்றும் நுணுக்கமாய்ச் சொல்லுகிறதற்கு நமக்கு இங்கே கருத்தில்லை. இப்போது அர்ச். அகுஸ்தீன் சொல்லிக் காட்டின பொது ஒழுங்கே போதும்; சகல அர்ச்சியசிஷ்டவர்களும் ஞானசிவிய கிரந்தகர்த்தாக்கள் எல்லாரும் சொல்லிக் காட்டின ஒழுங்கு இதுவே. ஆகையால் உன் கிரிகைகளை யெல்லாம் நன்றாய் ஒழுங்குபடுத்தி அதினாலே ஒருவருக்கும் துர்மாதிரிகையாகாமல் சகலருக்கும் நன்மாதிரிகை உண்டாகும் பொருட்டுப் பிரயாசப்படு. தாழ்ச்சியும் கனமும் சந்நியாசத்துக்குரிய மேரை மரியாதையும் உன் வெளி நடக்கையிலெல்





லாம் விளங்கும்படி செய் ; அப்போது அடக்க ஒடுக்கத்தை அநுசரிக்கிறாயென்று சொல்லலாம். தங்கள் ஆத்தும ஈடேற்றத்துக்குமல்லாமல் பிறர் ஆத்தும ஈடேற்றத்துக்காகவும் உழைக்கிறவர்களுக்கு விசேஷமாய் அடக்க ஒடுக்கம் எவ்வளவு அவசரமென்று காட்ட மாத்திரம் நாம் இங்கே எத்தனித்திருக்கிறோம்.

மனுஷர் வெளி நடக்கையை மாத்திரம் பார்க்கிறதினாலே, அடக்க ஒடுக்கமுள்ள வெளி நடக்கையினிமித்தம் அவர்களுக்கு நன்மாதிரிகையுண்டாகும் ; அவர்கள் மனதைத் திருப்புகிறதற்கும் உதவுமென்பது நிச்சயம் ; புத்தி பிரசங்கங்களைவிட அடக்க ஒடுக்கம் அவர்கள் மனசை இளக்கித் தெளிவிக்கும். அர்ச். பிராஞ்சீஸ்கு சரித்திரத்தில் எழுதியிருக்கிற வர்த்தமானமாவது : அவர் ஓர் நாள் பிரசங்கம்பண்ணப் போவோம், வாருமென்று ஒரு சந்நியாசியாரை அழைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டார். பட்டணத்தைச் சுற்றி உலாத்தினபின், மடத்தில் பிரவேசிக்கும்போது, பிரசங்கம் பண்ணவில்லையாவென்று அவரோடு வந்த சந்நியாசியார் கேட்டார். பிரசங்கம் பண்ணி ஆயிற்றென்று அர்ச்சியசிஷ்டவர் சொன்னார். சந்நியாசிகளுக்குரிய அடக்க ஒடுக்கத்தோடு அவர்கள் பட்டணத்தின் தெருவிலே நடந்ததினாலே, அவர்களைக் கண்டவர்கள் எல்லாருக்கும் அதுவே மகா நல்ல பிரசங்கமாயிருந்தது. தாழ்ச்சியும் ஒறுத்தலுமுள்ள வெளி நடக்கை சனங்களுக்குப் பத்தியையும் உலோக நன்மைகளின் பேரில் வெறுப்பையும் வருவித்து அவர்களுடைய பாவத்துக்காக மனஸ்தாபத்தை மூட்டி அவர்கள் இருதயமும் ஆசையும் மோக்ஷ நன்மையை நாடும்படி செய்யுமென்பதற்குச் சந்தேகமில்லை. இது பேசாத பிரசங்கம் ; மகா நேத்தியும் உன்னதமுமான பிரசங்கங்களைவிட அடக்க ஒடுக்கத்தினாலே அதிக பிரயோசனமுண்டாகும்.

அடக்க ஒடுக்கம் நாமே புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு மிகவும் உதவியாயிருக்குமென்பது நிச்சயம். இதை இனிமேலாக விஸ்தாரமாய் விளக்கிக் காட்டுவோம். மனுஷரிடத்தில் ஆத்துமமும் சரீரமும் அந்நியோந்நியமாய் ஒன்றித்திருக்கிறதினாலே, ஒன்றிலே தோன்றுகிறது உடனே வேறொன்றிலும் தோன்றும். ஆத்துமப் பற்றுதல் ஒழுங்குப்பட்டிருந்தால், சரீரத்திலுள்ள வெளி நடக்கையும் ஒழுங்குபட்டிருக்கும் ; சரீரத்திலே கலக்கமும் குழப்பமும் தோன்றினால், ஆத்துமத்திலும் கலக்கமிருக்கும். கடியாரத்திலுள்ள முள் சரியாய்ப்போனால், கடி

யாரத்துக்குள்ளிருக்கிற ரோதைகளும் சரியாய் நடக்கிறதென்று தப்பாத அடையாளமாகும். அப்படியே வெளி அடக்க ஒடுக்கம் உள்ளடக்கத்துக்கும் புண்ணிய வர்த்திப்புக்கும் ஸ்திரமான அடையாளமாகும்.

நாம் துவக்கத்தில் சொன்னதுபோலே, வெளி அடக்க ஒடுக்கத்தை மனுஷர் கனமாய் எண்ணி அதினாலே அவர்களுக்கு நன்மாதிரிகை உண்டாகிறதற்குக் காரணமேதென்றால், வெளி அடக்க ஒடுக்கமுள்ளவர்களுடைய இருதயத்திலே சற்குணம் இருக்குமென்று எப்போதும் மனிதர் எண்ணிக்கொள்ளுகிறது வழக்கம். முகம் ஆத்துமத்துக்குப் பார்வைக் கண்ணாடியாகும்; கண் பேசாதிருந்தாலும், மனதில் மறைந்திருக்கிற இரகசியங்களை அது வெளிப்படுத்துமென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். இதினாலல்லோ தண்ணீரிலே பார்க்கிறவர்கள் தங்கள் முகத்தைத் தெளிவாய்க் கண்டுகொள்ளுவார்கள்; அதுபோலே புத்தியுள்ளவன் மனுஷரைப் பார்த்து அவர்கள் இருதயத்தைத் தெளிவாய் அறிந்துகொள்ளுவானென்று ஞானியானவர் வசனித்தார். அடக்க ஒடுக்கத்தைக் கொண்டு மனுஷனுடைய இருதயத்தை அறிந்துகொள்ளுகிறதைவிட முகக் கண்ணாடியைக் கொண்டு வஸ்துக்களை அதிகத் தெளிவாய் அறிந்துகொள்ளக் கூடாது. இதினிமித்தமாக முகத்தினாலே மனுஷனை அறிந்துகொள்ளலாம்; முகச் சாடையைக் கொண்டு அவன் மனசு தெரியவரும். ஒருவனுடைய உடுபாவனையும் அவன் சிரிக்கிற விதமும் நடக்கிற மாதிரியும் அவன் இன்னானென்று காட்டிவிடுமென்று சலோமோன் வசனித்தார். கெட்டவன் இன்னானென்று காட்டுவதற்காக இஸ்பிரீத்துசாந்து சொல்லுகிறதாவது: கெட்ட தேவ துரோகி வீண் மனுஷன்; அவன் துஷ்டத்தனமாய் நடப்பான்; இப்பக்கத்திலும் அப்பக்கத்திலும் கண்ணைத் திருப்புவான்; இடைவிடாமல் காலை அசைப்பான்; கைசேஷ்டை பண்ணுவானென்று திருவுளம் பற்றினார். வேத துரோகியான யூலியானைக் குறித்து அர்ச். நாசியாஞ்சு கிரெகோரியார் எழுதிவைத்திருக்கிறதாவது: யூலியானுடைய கிரிகைகளைக் கண்டும் அவன் இராச்சியபாரத்தைக் கெடுதலாய் நடத்துகிறதை அறிந்தும் அவன் எப்படிப்பட்டவனென்று வெகு பேர் அறிந்துகொண்டதேயல்லாமல் அதுக்கு முன்னே அவனுடைய நடக்கை ஒருவருக்கும் தெரியாது. நாமோவென்றால் அத்தேன் பட்டணத்தில் அவனோடு புழங்கின மாத்திரத்தில், அவன் எப்படிப்பட்டவனென்று அறிந்துகொண்டோம்; அவனிடத்தில் ஏதாகிலும் நன்மை உண்டென்று

ஒரு அடையாளமும் அப்போதேயில்லை. தலையை எப்பக்கத்திலும் அசைப்பான்; தோள்ப்பட்டையை இடைவிடாமல் உயர்த்துவான்; கண்ணை க்ஷணத்துக்கு க்ஷணம் இப்பக்கத்திலும் அப்பக்கத்திலும் திருப்புவான்; அவன் பார்வை பயங்கரத்துக்குரியது ; அவன் கால் ஒரு இடத்திலே சும்மாயிருக்க மாட்டாது; அவனிடத்தில் கோபம் வந்தால், எப்போதும் நாசித் துவாரத்தை விடைத்துக் காட்டுவான் ; மற்றவர்களைப் பிறக்கணிப்பதற்காக மூக்கைச் சுழித்துக்கொள்ளுவான் ; எந்நேரமும் கேலியும் நையாண்டியும் பண்ணிக் கெக்குக்கெக்கென்று சிரிப்பான் ; ஒரு சமயத்திலே ஒரு முகாந்தரமுமில்லாமல் யாதொன்றை ஒருவருக்குக் கொடுப்பான் ; வேறொரு சமயத்திலே ஒரு முகாந்தரமுமில்லாமல் இல்லையென்று சொல்லுவான் ; ஒழுங்கும் முகாந்தரமுமில்லாமல் பேசுவான் ; குறுக்குக் கேள்வி கேட்பான், சொல்லவேண்டிய மறுமொழியை விட்டு வேறே மறுமொழி சொல்லுவான். ஆனால் அவனுடைய வெளி நடக்கையைக் குறித்து விஸ்தாரமாய்ப் பேசவேண்டியதில்லை. அவனுடைய கிரிகைகளைக் கொண்டு அவன் இன்னானென்று இப்போது அறிந்துகொண்டோமென்பது மெய்தான் ; ஆனால் இதற்கு முன் அத்தேன் பட்டணத்திலே தானே மேற்சொன்ன வெளிச் சாடையைக் கொண்டு அவன் எப்படிப்பட்டவனென்று நாம் அறிந்துகொண்டோம். ஏனென்றால் நாம் அவனுடைய வெளி நடக்கையைப் பார்த்தவுடனே, ரோமான் இராச்சியம் மோசத்துக்குரிய பாம்பை வளர்க்கிறதென்று சொன்னதாக அப்போது நம்மோடிருந்தவர்களுக்குத் தெரியும். அப்போது நாம் இது சொன்னது மெய்தான் ; நாம் சொன்னது பொய்யாய்ப் போக வேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருந்தோம். நாம் சொன்னது நிறைவேறாமல் பொய்யாய்ப் போய் அவனாலே உலோகத்தில் இத்தனை பொல்லாப்பு வராமலிருந்தால், இது மிகவும் நலமாகுமென்பதற்குச் சந்தேகமில்லையென்றார். வெளித் தாறுமாறு உள்த் தாறுமாறுக்கு அடையாளமாயிருக்கிறதுபோலே, வெளி அடக்க ஒடுக்கம் மனதிலுள்ள சற்குணத்துக்கு அடையாளமாகும். இதினிமித்தமாகவே அடக்க ஒடுக்கத்தின் வழியாக மனுஷருக்கு நன்மாதிரிகையும் நற்புத்தியுமுண்டாகிறது வழக்கம்.

ஆகையால் சகலத்திலும் அடக்க ஒடுக்கத்தையும் சந்நியாசிகளுக்குரிய மேரை மரியாதையையும் அநுசரிக்க மற்றவர்களைவிட நமதுபேரில் கடனுண்டு ; ஏனென்றால் நாம் பிரசங்கிக்கவும் பாவசங்கீர்த்தனங்



கொடுக்கவும் படித்துக்கொடுக்கவும் வருமத்தை நீக்கிச் சமாதானம் பண்ணுவிக்கவும் சிறைச்சாலையிலும் நோவாளி சாலையிலுமுள்ளவர்களைச் சந்திக்கவும் பிற சினேகத்துக்குரிய வேறெந்த முயற்சிகளைச் செய்யவும் கடமைப்பட்டவர்களாயிருக்கிறதினாலே, அடக்க ஒடுக்கமும் தாழ்ச்சியும் ஒறுத்தலுமுள்ள நடக்கையை அநுசரிக்க நமதுபேரில் கடனுண்டென்கிறதுக்குச் சந்தேகமில்லை. இந்த நடக்கை நம்மிடத்தில் இருந்தால் மாத்திரம், மற்றவர்களுக்கு நாம் நன்மை செய்யலாம், பிறர் ஆத்தும ஈடேற்றத்துக்கு உதவியாயிருக்கலாம். இந்த அடக்க ஒடுக்கத்தைக் கொண்டு மனுஷர் நம்மிடத்தில் அர்ச்சியசிஷ்டத்தனம் உண்டென்று நம்மைக் கனமாய் எண்ணி நமதுபேரில் நம்பிக்கை வைத்து நாம் சொல்லுகிறதெல்லாம் மோக்ஷத்திலிருந்து வந்தாற்போலே எண்ணிக்கொண்டு அதைத் தங்கள் இருதயத்தில் பதனமாய்ப் பதித்துக்கொள்ளுவார்கள். சூரியூசென்பவர் எழுதிவைத்த வர்த்தமானமாவது: இரண்டாம் இன்னோசெஞ்சியுசென்னும் பாப்பானவர் கிளேர்வோ சபை மடத்தைச் சந்திக்கப் போகும்போது, அர்ச். பெர்நர்துசோடு அம்மடத்துச் சந்நியாசிகள் எல்லாரும் அவருக்கு முன்கொண்டுவந்தார்கள். அர்ச். பாப்புவும் அவரோடு கூடப் போன கர்தினால்மாரும் அவர்களுடைய அடக்க ஒடுக்கத்தைக் கண்டு சந்தோஷத்தினாலே அழுதுகொண்டு போனார்கள். அவ்வளவு ஆரபாரமான நாளிலே அர்ச். பாப்புவும் கர்தினால்மார்களும் வருகிற அந்த நூதனமான சமயத்திலே இந்தச் சந்நியாசிகள் எல்லாரும் கண்ணை ஏறெடுத்துப் பாராமல் கவிழ்ந்து பூமியைப் பார்த்துக்கொண்டு போகிறதையும், சகலரும் அவர்களைப் பார்த்தாலும், அவர்கள் ஒருவரையும் பாராமலிருக்கிறதையும் கண்டு எவ்வளவு ஆச்சரியப்பட்டார்களென்று சொல்லத் தேவையில்லை.

ஆனால் நாம் இப்போது சொல்லுகிற சந்நியாச அடக்க ஒடுக்கம் சமுசாரவாசிகளுக்கு நன்மாதிரிகையாயிருக்கிறதுமல்லாமல் நமது சகோதரருக்கும் வெகு நன்மாதிரிகையாயிருக்கும்; ஏனென்றால் ஒரு சந்நியாசி கோவிலிலே தாழ்ச்சிக்கும் வணக்கத்துக்குமுரிய உள்ளடக்கமாயிருந்து தெருவிலே நடக்கும் தருணத்தில் அடக்க ஒடுக்கத்தையும் மவுனத்தையும் காத்துத் தன்னைச் சுற்றிலும் நடக்கிறது என்னவென்று பார்ப்பதற்குக் கண்ணை எழுப்பாமலிருந்தால், உலோகவாசிகள் அவரைக்கண்டு கனமாய் எண்ணுவார்கள்; பத்தியின்பேரில் அவர்களிடத்தில் ஆசையுமுண்டாகும். இவ்வண்ணமே உள்ளடக்கமும் வெளி



அடக்கமுமுள்ள சந்நியாசிகள்
யிருப்பார்கள். தங்கள் நடக்கை
படுத்தாத சந்நியாசிகள் இவர்க
ன்பேரிலும் உள்ளடக்கம் வெ
ஆசைப்படுவார்கள்; இவர்களா
டைந்து அர்ச்சியசிஷ்டத்தனத்
ருவருடைய நன்மாதிரிகை மற்
வித்து மோக்ஷ நன்மையின்பே
ரோணிமுஸ் வசனித்தார். இதி
ஒருவர் கண்டு எல்லாரும் பத்
காலமாய் ஸ்துதிக்க வேணுமெ
க்கிறார்.

அர்ச். பெர்நர்தினென்பவ
ரியாதையுமாய் நடந்ததினாலே
டக்கம் வெளி அடக்கத்தின்பே
க்ஷியான அர்ச். லூசியானை அ
ம்புவார்களென்று அவருடைய
வர்களே நல்ல பிரசங்கிகள்;
யேசுநாதரை மெய்யாகவே க
அதாவது, இயேசுநாதர் இருத
ந்துகொண்டிருந்தது; உள்ள
பிரகாசித்து அந்தப் பிரகாசத்
யில் கூட்டிக்கொண்டு போன
றருக்கும் நமது சகோதரருக்
ன நன்மையை அவர்களுக்குப்
மிருந்த அடக்க ஒடுக்கத்தை
படக்கடவோம். இப்படிப் பிர
அதிமிக தோத்திரத்தின் பே
பிறருக்கு நன்மாதிரிகையாகி
ச் சேர்ப்பதற்கு மிகவும் உதவ
தை நாம் அநுசரிக்க வருந்தி
ற்றத்தின்பேரில் நமக்குப் ப






அடக்கமுமுள்ள சந்நியாசிகள் சகோதரருக்கு வெகு நன்மாதிரிகையாயிருப்பார்கள். தங்கள் நடக்கையையும் பேச்சையும் சரியாய் ஒழுங்குபடுத்தாத சந்நியாசிகள் இவர்களைக் காணும்போதெல்லாம், மவுனத்தின்பேரிலும் உள்ளடக்கம் வெளிஅடக்கத்தின்பேரிலும் இடைவிடாத ஆசைப்படுவார்கள்; இவர்களாலே சந்நியாச சபை பெருகி கீர்த்தி அடைந்து அர்ச்சியசிஷ்டத்தனத்தில் நிலைக்கொள்ளும்; ஏனென்றால் ஒருவருடைய நன்மாதிரிகை மற்றவர்கள் இருதயத்தில் பத்தியை வருவித்து மோக்ஷ நன்மையின்பேரில் ஆசையை மூட்டுமென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். இதினிமித்தமாக நமது நடக்கையை ஒருவர் ஒருவர் கண்டு எல்லாரும் பத்தியில் வர்த்தித்துக் கர்த்தரை நித்திய காலமாய் ஸ்துதிக்கவேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் கற்பித்திருக்கிறார்.

அர்ச். பெர்நர்தினென்பவர் மிகவும் அடக்க ஒடுக்கமும் மேரை மரியாதையுமாய் நடந்ததினாலே, அவரோடிருந்தவர்களிடத்தில் உள்ளடக்கம் வெளி அடக்கத்தின்பேரில் மிகுந்த ஆசை பிறக்கும். வேதசாக்ஷியான அர்ச். ஞாசியானை அஞ்ஞானிகள் பார்த்தவுடனே, மனந்திரும்புவார்களென்று அவருடைய சரித்திரத்தில் எழுதியிருக்கின்றது. இவர்களே நல்ல பிரசங்கிகள்; எரிந்து பிரகாசிக்கிற விளக்காயிருந்து இயேசுநாதரை மெய்பாகவே கண்டுபாவித்தவர்கள் இவர்கள் தானே. அதாவது, இயேசுநாதர் இருதயம் தேவ சிநேக அக்கினியினாலே எரிந்துகொண்டிருந்தது; உள்ளத்தில் எரிந்த இந்த அக்கினி வெளியிலே பிரகாசித்து அந்தப் பிரகாசத்தினாலே மனிதரை ஈடேற்றத்தின் வழியில் கூட்டிக்கொண்டு போனதென்று அருத்தமாகும். ஆகையால் பிறருக்கும் நமது சகோதரருக்கும் நாம் நன்மாதிரிகையாகி மேற்சொன்ன நன்மையை அவர்களுக்குப் பெறுவிக்கும் பொருட்டுச் சகலத்திலும் மிகுந்த அடக்க ஒடுக்கத்தை எப்போதும் அநுசரிக்க மகா பிரயாசப்படக்கடவோம். இப்படிப் பிரயாசப்படாவிட்டால், சர்வேசுரனுடைய அதிமிக தோத்திரத்தின் பேரில் நம்மிடத்திலே பற்றுதல் எங்கே? பிறருக்கு நன்மாதிரிகையாகி அவர்களை மோக்ஷத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு மிகவும் உதவியும் எளிதுமான இந்த அடக்க ஒடுக்கத்தை நாம் அநுசரிக்க வருந்தி உழைக்காவிட்டால், ஆத்துமாக்கள் ஈடேற்றத்தின்பேரில் நமக்குப் பற்றுதல் உண்டென்று சொல்லலாமோ?





# உ-ம் அதிகாரம்.

அடக்க ஒடுக்கம் நமது புண்ணிய சாங்கோபாங்கத்துக்கு எவ்வளவு அவசரமாயிருக்கிறதென்று சொல்லுவது.

—○*○*○*○—

**ப**ஞ்சேந்திரிய அடக்க ஒடுக்கம் நாம் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கான முக்கிய வழிபாடென்று சகல அர்ச்சியசிஷ்டவர்களும் எண்ணியிருந்தார்கள் ; ஏனென்றால் இது உள்ளடக்கத்துக்கு மிகவும் உதவியாயிருக்கும். சகல பொல்லாப்பும் நமதிருதயத்தில் பிரவேசிக்கிறதற்கு நமது பஞ்சேந்திரியங்கள் கதவாயிருப்பதினாலே, நமதிருதயத்திலே பொல்லாப்பு பிரவேசியாதபடிக்குப் பஞ்சேந்திரியங்களாகிற கதவைக் காக்க வேண்டும். மரணக்கதவு உனக்குத் திறந்திருக்கவில்லையோ, அந்தகாரக்கதவை நீ காணவில்லையோவென்று யோபென்பவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். எரோணிமுஸ் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது : இதிலே நமது பஞ்சேந்திரியங்களை மரணக்கதவென்று சொல்லியிருக்கின்றது ; ஏனென்றால் இதின் வழியாக மரணமாகிற பாவம் நமதாத்துமத்தில் பிரவேசிக்கும். இதினாலல்லோ மரணம் சன்னல் வழியாக ஏறினதென்று எரேமியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். நமது பஞ்சேந்திரியங்கள் அந்தகாரக்கதவென்று சொல்லியிருக்கின்றது ; ஏனென்றால் அந்தகாரமாகிற பாவம் அதின் வழியாய் ஆத்துமத்தில் பிரவேசிக்குமென்றார். அர்ச். கிரெகோரியார் சொல்லியிருக்கிறதும் இதுவே. பஞ்சேந்திரியத்தில் இல்லாதது ஒன்றும் புத்தியில் இருக்கமாட்டாதென்று ஞான சாஸ்திரத்தில் சொல்லியிருக்குமாப்போலே, நன்மையும் தின்மையும் பஞ்சேந்திரியத்தின் வழியாய் ஆத்துமத்தில் பிரவேசிக்குமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுகிறது வழக்கம். வீட்டின் கதவை நன்றாய்ச் சாத்திக்கொண்டிருந்தால், அதிலே மோசம் வராது; கதவைத் திறந்துபோட்டுக் காவலுக்கு ஒருவருமில்லாமல் சகலரும் அதிலேபோகவும் வரவும் இருந்தால், அதிலுள்ள பொருளுக்கு மோசம் வரும். வெகுபேர் அதிலே போகவும் வரவும் இருக்கிறதினாலே, அதிலே கலக்கமும் குளப்பமுமுண்டாகும். இவ்வண்ணமே தங்கள் கதவாகிற பஞ்சேந்திரியத்தை





நன்ருய்க் காக்கிறவர்களிடத்திலே பத்தியும் மனசமாதானத்தின் மது
ரமும் உண்டாயிருக்கும்; அதைக் காக்காதவர்களிடத்திலே மனசமா
தானமும் அமரிக்கையும் இருக்கமாட்டாது. இதினலல்லோ உன் இருத
யத்தை மகா எச்சரிக்கையோடு காத்துக்கொள்; ஏனென்றல் இது உ
யிருக்கு ஊற்ருயிருக்கிறதென்று ஞானியானவர் வசனித்தார். பஞ்சே
ந்திரியமாகிற கதவை நன்ருய்க் காத்தால், இருதயத்தைக் காத்தாற்
போலாகும். அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, இருதய பரி
சுத்தத்தனத்தைக் காப்பாற்றுவதற்காகப் பஞ்சேந்திரியங்களைக் காக்க
வேண்டும். இதினலல்லோ வீண்காரியங்களின்பேரிலும் உங்களுக்கு
அடுத்ததாயிராத அலுவலின்பேரிலும் அங்குமிங்கும் கண்ணைத் திரு
ப்பாமல் நடக்கப் பழகுங்கள்; ஏனென்றல் அங்குமிங்கும் கண்ணைத்
திருப்பினல், அது உங்கள் பரிசுத்த கிரிகைகளைக் கெடுத்துப்போடுமெ
ன்று அர்ச். தொரோத்தேயர் வசனித்தார். பஞ்சேந்திரியமாகிற கத
வை நன்ருய்க் காக்காவிட்டால், வெகு நாளாய் வெகு வருத்தப்பட்டு நீ
சம்பாதித்ததெல்லாத்தையும் எளிதாய்ப் போக்கடித்து வெங்கனய்ப்
போவாய். தேவ கிருபையினலே வெகு வருத்தப்பட்டு நீ சம்பாதித்த
புண்ணியமெல்லாத்தையும் அசட்டைத்தனத்தினலே வெகு சீக்கிர
மாய் இழந்துபோவாயென்று கிறீஸ்துநாதர் அநுசாரத்தில் சொல்லி
யிருக்கின்றது. வெகுவாய்ப் பேசாதே; ஏனென்றல் வெகு பேச்சு நல்
ல நினைவுகளையெல்லாம் உன்னிடத்திலிருந்து நீக்கித் தேவ ஏவுதலை
யெல்லாம் உன்னைவிட்டு அகற்றிவிடுமென்று அர்ச். தொரோத்தேயர்
சொல்லியிருக்கிருர். அர்ச். பெர்நர்துஸ் சொல்லுமாப்போலே, இவ்வுல
க காரியங்களின் பேரிலுள்ள கவலைவிசாரங்களை யெல்லாம் நீக்கி இ
டைவிடாமல் மவுனமும் மன அமரிக்கையுமாயிருந்தால், உன் இருதய
ம் மோக்ஷ நன்மைகளைத் தியானித்து அகத்தியமாய்ச் சர்வேசுரனிடத்
தில் எழும்பும். இன்னமும் அவர்தானே வேருரிடத்தில் சொல்லு
மாப்போலே, பூமியைப் பார்த்துக் கவிழ்ந்திருக்கிற முகம் இருதயத்தை
மோட்சத்தில் எழுப்பும். நாம் கண்ணைக் கவிழ்ந்துகொண்டு அடக்க
ஒடுக்கமாயிருக்கும்போது, நமதிருதயத்திலே உள்ளடக்கமும் பத்திப
ற்றுதலும் பிறக்கிறதென்று தினந்தோறும் அறிந்திருக்கிருேமே.

காசியான் சொல்லுமாப்போலே, புண்ணிய சாங்கோபாங்கத்தை
ச் சம்பாதித்து இருதய பரிசுத்தத்தனத்தை அடைந்து உள்ளடக்கமா
யிருக்க மனசுள்ளவன் குருடனும் செவிடனும் ஊமையுமாயிருக்க வே



ணுமென்று பூர்வீக வனவாசிகள் சொன்னது நியாயந்தானே; ஏனென்றால் பஞ்சேந்திரியமாகிற கதவெல்லாம் அடைபட்டிருந்தால், அசுத்தமாகிற பாவம் ஆத்துமத்திலே பிரவேசிக்கமாட்டாது. அதினாலே ஆத்துமம் சர்வேசுரனோடு பேசுகிறதற்கு ஆயத்தமாயிருக்கும். ஆனால் நாம் பிறரோடு இடைவிடாமல் சஞ்சரித்து நமக்குப் பிரியமாயிராத அநேக காரியங்களைப் பார்க்கவும் கேட்கவும் வேண்டியிருக்கையிலே, நாம் குருடரும் செவிடரும் ஊமைகளுமாயிருக்கக் கூடுமோவென்பாயாக்கும். இதற்கான நல்லதோர் பரிகாரத்தைச் சொல்லிக் காட்டுவோம். கேள்: பார்த்தாலும் பாராததுபோலேயும், கேட்டாலும் கேளாததுபோலேயும் இரு; நீ பார்க்கிற கேட்கிற காரியங்களின்பேரில் பற்றுதலை வைக்காதே; அந்தப் பற்றுதல் உன்னிடத்தில் எழும்பினால், ஒரு க்ஷணமும் அதற்கு இடங் கொடாமல் உடனே தள்ளிவிடு. அர்ச். எபிரேமென்பவர் இது காரியத்தில் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது: ஓர் நாள் ஒரு வனவாசி விருத்தாப்பியமான வேறொரு வனவாசியிடத்திலே போய்ச் சொன்னதாவது: உரொட்டிக்காரனுக்கு உதவியாகத் தினந்தோறும் உரொட்டிக்கிடங்குக்குப் போகவேணுமென்று சிரேஷ்டர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்; ஆனால் வெளியிலேயிருந்து வாலிபர் அங்கே வந்து வெகு கெட்ட பேச்சுப் பேசுகிறார்கள்; அதைக் கேட்கிறது எனக்கு நன்றாயில்லையென்று சொன்னார். அதுக்கு அந்தக் கிழவனார் சொன்னதாவது: பள்ளிக்கூடத்திலே சிறு பிள்ளைகளை நீ பார்க்கவில்லையா? அவர்கள் பாடம் படிக்கும்போது, எவ்வளவு கத்துகிறார்கள்; ஆகிலும் ஒவ்வொருவனும் தன் தன் பாடத்தைப் படித்து ஒப்பிக்க வேண்டியிருப்பதினாலே, புறத்தியாருடைய பாடத்தைக் கவனியாமல் தன் பாடத்தை மாத்திரம் கருத்தாய்ப் படிக்கிறானே. நீரும் இப்படி நடக்க வேண்டும். மற்றவர்கள் என்ன சொல்லுகிறார்கள், என்ன செய்கிறார்களென்று கவனிக்க வேண்டாம்; உமது வேலையை மாத்திரம் பாரும்; ஏனென்றால் இதுக்காக மாத்திரம் நீர் சர்வேசுரனுக்குக் கணக்குக் கொடுக்க வேணுமென்றார்.

அர்ச். பெர்நர்துசுடைய இருதயம் எப்போதும் சர்வேசுரனோடு முழுதும் ஒன்றித்திருந்ததினாலே, அவர் பார்த்தும் பாராமலும் கேட்டும் கேளாமலும் இருப்பார். அவருக்குப் பஞ்சேந்திரியமில்லாதது போலே தோன்றும்; அவர் நவ சந்நியாசத்தில் பிரவேசித்து ஒரு வருஷத்துக்குப் பின் அவருடைய அறையின் முகடு மரத்தினாலே செய்தி






ருந்ததோ, சாந்தினாலே கட்டியிருந்ததோவென்று அவருக்குத் தெரியாதிருந்தது. கோவிலிலே கண்ணாடிச் சன்னல் மூன்றிருந்தது; அவர் எப்போதும் ஒரே சன்னல் மாத்திரம் இருந்ததென்று நினைத்திருந்தார். ஒரு தடவை சில சந்நியாசிகளோடு ஏறக்குறைய ஒரு நாள் முழுதும் ஓர் ஏரிக்கரைக் கிட்ட நடந்துகொண்டிருந்தார்; அப்புறம் அவர்கள் அந்த ஏரியைக் குறித்துப் பேசும்பொழுது, எந்த ஏரியைக் குறித்துப் பேசுகிறீர்களென்று கேட்டார்; ஏனென்றால் அன்றைக்கு முழுதும் அந்த ஏரிக்கரைக் கிட்ட அவர் நடந்திருந்தாலும், அந்த ஏரியை அவர் காணவேயில்லை. பல்லாதியாரென்னும் மடாதிபதி இருபது வருஷமாய் ஒரு அறையில் இருந்தாலும், அந்த அறையின் முகட்டை ஒருகாலும் பார்த்ததில்லை. நாமும் இவர்களைப்போலே நடந்தால், பிறர் ஆத்தும இரக்ஷணியத்துக்காக யாரோடு சஞ்சாரம் பண்ணினாலும், குருடரும் செவிடரும் ஊமைகளுமாயிருக்கலாம். அப்போது நாம் பார்க்கிறது கேட்கிறது ஒன்றும் நமது புண்ணிய வர்த்திப்புக்கு விக்கினமாயிராது.

———oooooooo———

## ௩-ம் அதிகாரம்.

———

மேற்சொன்ன வெளி அடக்கம் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கு அவசரமில்லையென்று அதைக் கனமாய் எண்ணாதவர்கள் மோசம்போகிறார்களென்று சொல்லுவது.

———oooo———

இருதய பரிசுத்தத்தனமும் ஸ்திரமான புண்ணியமும் புண்ணிய சாங்கோபாங்கமேயல்லாமல் அடக்க ஒடுக்கமும் மவுனமும் புண்ணிய சாங்கோபாங்கமல்லவென்று இதைக் கனமாய் எண்ணாதவர்கள் எவ்வளவு மோசம் போகிறார்களென்று, நாம் மேற்சொன்னதைக் கொண்டு அறிந்து கொள்ளலாம். லிப்போமானென்பவர் இது காரியத்திலே ஞானநந்தாவனமென்னும் புத்தகத்திலிருந்து ஓர் சங்கதியை வெளிப்படுத்தியிருக்கிறார். அதென்னவென்றால், எஜிப்பத்து தேசத்து வனாந்தரத்தில் இருந்த பூர்வீக வனவாசிகளில் ஒருவர் தாம் முடைந்த சிறு கூ

டைகளை விற்பதற்காக ஒரு நாள் அலெக்சாந்திரியாவென்னும் பட்டணத்துக்குப் போயிருந்தார். அங்கே ஒரு வால வனவாசி சாராயக் கடைக்குள் நுழைகிறதை அவர் கண்டு வெகுவாய்க் கஸ்திப்பட்டு அவர் வெளியே வரமட்டும் காத்திருந்து அவரைத் தனியே அழைத்துக்கொண்டு போய்ச் சொன்னதாவது : தம்பீ, நீ வாலப் பிராயமாயிருக்கிறாயே ; நமது சத்துருவாகிய பசாசு நம்மைக் கெடுப்பதற்கு இடைவிடாமல் வலை போட்டுக்கொண்டிருக்கிறதே ; வனவாசி பட்டணத்துத் தெருவிலே போகிறது மோசமல்லவா ? இடைவிடாமல் அவன் பார்க்கிறதும் கேட்கிறதும் ஆயிரம் ஆபத்தை அவனுக்குக் கொண்டுவந்துவிடுமே ; அத்தனை கெட்ட ஆண்பிள்ளைகளும் பெண்டுகளுமுள்ள சாராயக் கடையிலே பிரவேசிக்கிறது எவ்வளவு மோசமென்று உனக்குத் தெரியாதா ? அங்கே அநேகம் கெட்ட காரியங்களைப் பார்க்காமலும் கேட்காமலும் இருக்கக்கூடாதே. ஆகையால் என் மகனே, சர்வேசுரன் பேராலே உன்னிடத்திலே கெஞ்சிக் கேட்கிறேன் ; இனிமேலாக இந்த நடக்கையை விட்டுவிடு ; தீவிரமாய் வனாந்தரத்துக்குள் ஓடி ஒதுங்கியிரு ; அங்கே தேவ கிருபையினாலே மோசமில்லாமல் இருப்பாயென்றார். அதற்கு அந்த வால வனவாசி சொன்னதாவது : போம் சுவாமீ, இது காரியத்திலே என் பேரில் நீர் கவலைப்பட வேண்டாம் ; இருதய பரிசுத்தத்தனமே புண்ணிய சாங்கோபாங்கமல்லாமல் வெளிக் காரியமெல்லாம் என்னத்துக்குதவும் ? என் இருதயம் பரிசுத்தமாயிருந்தாலே போதும் ; என்னிடத்திலே சர்வேசுரன் கேட்கிறது இதுதானென்றார். அப்போது அந்தக் கிழவனார் வானத்தை அண்ணார்ந்து பார்த்துச் சொன்னதாவது : கர்த்தாவே, நான் ஐம்பது வருஷ காலமாய் வனாந்தரத்தில் ஒதுங்கியிருந்து என்னாலே கூடினமட்டும் அடக்க ஒடுக்கமாய் நடந்துகொண்டு வருகிறேன் ; ஆகிலும் நான் இன்னம் இருதய சுத்தத்தை முழுதும் அடையவில்லை. இந்த வால சந்நியாசி துர்மாதிரிகையும் குடி வெறியுமுள்ள இடத்திலே போய்த் திரிந்தாலும், இருதய பரிசுத்தத்தனத்தை அடைந்திருக்கிறாரே ; இதினாலே உமக்குத் தோத்திரமும் புகழ்ச்சியும் உண்டாகக்கடவதென்றார். வெளிக் காரியங்களிலே புண்ணிய சாங்கோபாங்கமில்லையென்று பிதற்றுகிறவர்களுக்குச் சொல்ல வேண்டிய மறுமொழி இதுவே. இருதய பரிசுத்தத்தனமும் தேவ சிநேகம் பிற சிநேகமுமே புண்ணிய சாங்கோபாங்கமல்லாமல் வெளி அடக்கம் புண்ணிய சாங்கோபாங்கமல்லவென்பது மெய்தான் ; ஆனால் ஐம்பொறிகளை அடக்கி அடக்க ஒடுக்கத்தை அநு





சரிக்க வெகு பிரயாசப்படாவிட்டால், புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைய ஒருகாலும் கூடாதென்பது நிச்சயம்.

அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறதுமிதுவே. இதற்கு அவர் சொல்லுகிற ஞாயமேதென்ருல், வெளி அடக்கத்தைக் கொண்டு உள்ளடக்கத்தை அடையவும் காப்பாற்றவும் கூடுமேயல்லாமல் மற்றப்படியல்ல. இருதயத்தைக் காப்பதற்கு வெளியடக்கம் அவசரமாகும். இலேயும் பட்டையும் மரத்துக்கு அவசரம் ; தோலில்லாமல் பழம் இருக்கக் கூடாது; எந்தெந்த வஸ்துவையும் காப்பாற்றி சிறப்பிப்பதற்கு வேஞெரு வெளி வஸ்து எப்போதும் அவசரமென்று கண்டுவருகிறோம் இவ்வண்ணமே வெளி அடக்கமில்லாமல் இருதயத்துக்குள்ளே புண்ணியம் உண்டாகவே மாட்டாது; வெளி அடக்கம் புண்ணியத்துக்குப் பட்டைபோலேயும் தோல்போலேயும் இருக்கின்றது. இந்த வெளி அடக்கத்துக்குள்ளேதான் பத்தியும் உள்ளடக்கமும் இருதயபரிசுத்தத்தனமும் நிலேக்கொள்ளும். புண்ணியத்துக்குத் தோலும் பட்டையுமாயிருக்கிற வெளியடக்கமில்லாவிட்டால், சகல புண்ணியமும் கொஞ்சத்துக்குள்ளே கெட்டு அழிந்துபோகும். முகச்சாயலும் வெளிச்சாடையும் நன்ருயிருந்தால், சரீரத்துக்குச் சௌக்கியமும், அது கெடுதலாயிருந்தால், சௌக்கியக்குறையும் உண்டென்று உடனே சொல்லக் கூடாதென்பது மெய்தான் ; சரீரத்திலுள்ள நீர் சரிசிகராயிருந்தால், சௌக்கியமும் சரிசிகராயில்லாவிட்டால், சௌக்கியக்குறையும் உண்டாகுமென்பது நிச்சயம்தான். ஆகிலும் யாதொருவனுடைய முகச்சாயல் கெடுதலாயிருந்தால், அவனுக்குச் சௌக்கியமில்லேயாக்கும்; அவன் நிறத்தைப்பார்; எவ்வளவு மஞ்சலாயிருக்கின்றது ! அவன் கண் பஞ்சடைந்துபோயிருக்கிறதென்று சொல்லுவார்களல்லோ ? ஆத்தும சௌக்கியத்தின்பேரிலும் இப்படிச் சொல்ல வேண்டும்.

அர்ச். பசிலியார் இச்சத்தியத்தை ஓர் உவமையினுலே விளக்கிக் காட்டியிருக்கிருர். இந்த உவமையை நாமும் சொல்லிக்காட்டலாம். அர்ச்சியசிஷ்டவர்கள் வழக்கமாய்ச் சொல்லுமாப்போலே, நமது பஞ்சேந்திரியங்கள் சன்னல்போலிருக்கின்றது ; ஆத்துமம் அதின் வழியாக வெளியில் நடக்கிறதைப் பார்க்கும். அடக்க ஒடுக்கமுள்ள ஆத்துமம் மான ஸ்திரிபோலேயும் அடக்கமில்லாமல் பராக்குள்ள ஆத்துமம் பலஸ்திரிபோலேயும் இருக்கும். மானஸ்திரி சன்னலாலே பார்க்கிற





து வெகு அபூர்வமாயிருக்கும்; ஆனுல் பலஸ்திரி அடிக்கடி சன்னலுக்கும் கதவுக்கும் கிட்ட நின்றுகொண்டு வருகிறவர்கள் போகிறவர்களைப் பார்த்து ஒருவரைக் கூப்பிட்டு இன்னொருவரோடே பேசிச் சிரித்துக்கொண்டிருக்கிறது வழக்கம். அடக்க ஒடுக்கமுள்ள சந்நியாசிக்கும் ஒடுக்கமற்ற சந்நியாசிக்கும் உள்ள வித்தியாசம் இதுவேயென்று அர்ச். பசிலியார் வசனித்தார். அடக்கமுள்ளவன் பஞ்சேந்திரியங்களாகிற சன்னல் வழியாய்ப் பார்க்கமாட்டான்; அவன் உள்ளத்துக்குள்ளே இடைவிடாமல் ஒதுங்கியிருந்து இந்த உள்ளொடுக்கத்தை விட்டு வெளியே புறப்படமாட்டான். அடக்கமில்லாதவனேவென்றுல், எந்நேரமும் சன்னலுக்குக் கிட்ட நிற்கிறுப்போலே சொல்லுகிற தெல்லாத்தையும் கேட்டு இவர்களோடும் அவர்களோடும் பேசி வீண்நேரம் போக்கடிப்பான். மேற்சொன்ன உவமையிலே மானஸ்திரி சன்னல்வழியாகப் பார்க்காததினுலேயும் பலஸ்திரி சன்னல் வழியாகவும் கதவின் வழியாகவும் பார்க்கிறதினுலேயும் மாத்திரம் அவளிடத்திலே மானமுண்டென்றும் இவளிடத்திலே மானமில்லையென்றும் சொல்லப்படாதென்பது மெய்தான். ஆகிலும் அடிக்கடி சன்னல்கிட்ட நின்றுகொண்டு தெருவிலே நடக்கிறதை எந்நேரமும் பிரியமாய்ப் பார்த்து இவர்களோடும் அவர்களோடும் பேசித் திரிகிறவளிடத்திலே மேரை மரியாதையும் நற்குணமும் இல்லையென்று சொல்லலாம்; அவள் மானம் எற்கனவே அழியாதிருந்தாலும், சீக்கிரம் அழிந்துபோகிறதற்கு இதுவே போதும். இவ்வண்ணமே பஞ்சேந்திரியங்களை அடக்குகிறதே புண்ணிய சாங்கோபாங்கமல்லவென்பது மெய்தான்; ஆகிலும் விநோத பிரியமாயிருந்து வெளிப் பராக்காய்த் திரிகிறவன் ஆத்தும பரிசுத்தத்தனத்தையும் புண்ணிய சாங்கோபாங்கத்தையும் ஒருகாலும் அடையமாட்டானென்பது நிச்சயம்.

இன்னம் இதிலே வேறொரு அவசரமான சத்தியத்தையும் அறிந்துகொள்ள வேண்டும். அதென்னவென்றுல், வெளி அடக்கம் உள்ளடக்கத்தை அடைவதற்கும் காப்பாற்றுவதற்கும் உதவியாய் இருப்பதுபோலே, வெளி அடக்கத்தை அடைவதற்கு உள்ளடக்கமும் உதவியாயிருக்கும். இயேசுநாதர் எங்கேயோ, அங்கே அடக்க ஒடுக்கமும் இருக்குமென்று அர்ச். நாசியாஞ்சு கிரெகோரியார் வசனித்தார். உள்ளத்திலே ஸ்திரமான புண்ணியம் இருந்தால், வெளி நடக்கையிலே அடக்க ஒடுக்கமும் மேரை மரியாதையும் விளங்கும். மனசமாதானத்தினு





லும் தாழ்ச்சியினாலும் உண்டாகிற அடக்க ஒடுக்கமே நம்மிடத்தில் இருக்க வேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் கற்பித்திருக்கிறார். கள்ள அடக்க ஒடுக்கம் உதவாது ; அது ஒரு க்ஷணமாத்திரம் நிலைக்கொள்ளும்; *சமயா சமயத்திலே இது கள்ள அடக்கமென்று தெரியப்படும். இருதயத்திலுள்ள தாழ்ச்சி அடக்கம் ஒறுத்தல் முதலிய புண்ணியங்களினாலே உண்டாகிற ஸ்திரமான அடக்க ஒடுக்கத்தை நாம் அநுசரித்துவர வேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் கற்பித்திருக்கிறார்.

யாதொருவன் ஞான சீவியத்துக்குத் தகுந்தவனோ தகாதவனோ, யாதொருவன் புண்ணியத்தில் வர்த்திக்கிறானோ இல்லையோவென்று அறிந்துகொள்ளுவதற்கு இதுவே நிச்சயமான அடையாளம். அர்ச். அகுஸ்தீன் வெகு நேர்த்தியான ஓர் உவமையைக் கொண்டு இதைத் தெளிவித்துக் காட்டியிருக்கிறார். அதாவது, இப்போது நாம் பெரிய மனுஷரானதினாலே சிறு பிராயத்திலே நாம் செய்துவந்த விளையாட்டை இப்போது செய்கிறதில்லை ; அப்போது நமது விளையாட்டை ஆராகிலும் கலைத்தால், வெகு எரிச்சல் கொள்ளுவோம். ஆனால் இது சிறுபிள்ளை விளையாட்டாயிருக்கிறதினாலேயும், நாம் இப்போது பெரிய மனுஷராய்ப் போனதினாலேயும், இப்போது அதை விட்டுவிடுகிறது நமக்கு வருத்தமில்லை. ஞான சீவியத்திலும் இப்படிச் சொல்ல வேண்டும். கிறீஸ்துவனொருவன் சர்வேசுரனையும் மோக்ஷ நன்மைகளையும் சுகித்தநுபவித்து ஞானத்திலும் புண்ணிய சாங்கோபாங்கத்திலும் வளரத் துவக்கினவுடனே பஞ்சேந்திரியங்களினாலே வரும் பிரியமெல்லாம் சிறுபிள்ளை விளையாட்டென்றும் நான் இப்போது உத்தமனாயிருக்கிறதினாலே, எனக்கு இது தகாதென்றும் வருத்தமில்லாமல் தள்ளிவிடுவான். இதினாலல்லோ நான் சிறு பிள்ளையாயிருக்கும்போது, சிறு பிள்ளைபோலே பேசினேன், சிறு பிள்ளைபோலே யோசித்தேன், சிறு பிள்ளைபோலே நினைத்தேன்; ஆனால் நான் பெரியவனானபின், சிறு பிள்ளைக்கடுத்ததெல்லாத்தையும் தள்ளிவிட்டேனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். நீ பெரிய மனுஷனானாயோ, புண்ணியத்தில் வர்த்தித்தாயோ, அல்லது இன்னம் புண்ணியத்தில் குழந்தைப் பிள்ளையாயிருக்கிறாயோவென்று அறியவேணுமோ? குழந்தைப் பிள்ளை விளையாட்டை விட்டுவிட்டாயோவென்று பார். ஏனென்றால் குழந்தைப்பிள்ளை விளையாட்டும் பகிடி பரியாசமும் இன்னம் உனக்குப் பிரியமாயிருந்தா






ல்; பஞ்சேந்திரியங்களை எப்பக்கத்திலும் திருப்பி வீண் காரியங்களைப் பார்த்துச் சொல்லுகிறதெல்லாம் கேட்டு வாயிலே வந்ததெல்லாம் பேசிக்கொண்டு திரிந்தால், சிறு பிள்ளைக்குரிய விளையாட்டை நீ செய்துகொண்டு வருகிறதினாலே, நீ இன்னம் புண்ணியத்திலே சிறு பிள்ளைதான், புண்ணியத்தில் குறைவுள்ளவன்தான். பெரிய மனுஷன் குழந்தைகள் விளையாட்டைப் பிறக்கணித்து அதைச் செய்கிறதற்கு வெட்கப்படுகிறதுபோலே, ஞானத்தில் வளர்ந்து புண்ணிய சாங்கோபாங்கனைப் பிரயாசப்படுகிறவன் இவ்வித பகிடி பரியாசத்தின்பேரில் பிரியப்படாமல் இதைப் பிறக்கணிப்பான்.

## ச-ம் அதிகாரம்.

மவுனம் எவ்வளவு பிரயோசனமென்று சொல்லுவது.

நாக்கை அடக்கி மவுனங்காக்கிறது புண்ணியத்தில் வர்த்தித்துச் சாங்கோபாங்கத்தை அடைவதற்குத் தகுந்த வழிபாடுகளில் ஒன்றாகும். இதுகாரியத்தில் அசமந்தமாயிருந்தால், அது நாம் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு விக்கினமாயிருக்கும். அப்போஸ்தலரான அர்ச். இயாகப்பர் இவ்விரு சத்தியத்தையும் தாம் எழுதின நிருபத்தில் குறித்துக் காட்டியிருக்கிறார். அதெப்படியென்றால், யாதொருவன் பேச்சிலே குற்றம் கட்டிக்கொள்ளாவிட்டால், அவன் உத்தம புண்ணியவான். யாதொருவன் நாக்குக்குக் கடிவாளம் போடாமல் அங்குமிங்கும் தன் இருதயத்தைச் சிதறவிட்டுக்கொண்டு நான் பத்தியுள்ளவனென்று நினைத்தால், அவனுடைய பத்தி வீணும் வியர்த்தமுமாயிருக்குமென்றார். அர்ச். எரோணிமுஸ் இதின்பேரில் சொல்லுகிறதாவது: பூர்வீக வனவாசிகள் இவ்வாக்கியத்தை நன்றாய் அறிந்திருந்ததினாலே, மகா எச்சரிக்கையோடு மவுனம் காப்பார்கள். அவர்களில் அநேகர் ஏழு வருஷத்துக்குமேலே ஒருவரோடும் பேசாமலிருந்தார்களென்று நமக்குத் தெரியுமென்றார். கர்த்தூசிய சபையாரான தியோனீசியார் சொல்லுகிறதாவது: மேற்சொன்ன அர்ச். இயாகப்பருடைய வசனம் சகல





சந்நியாச சபைகளிலும் மவுனத்தின்பேரில் ஒழுங்கு ஏற்படுத்துகிறதற்கும் அதை மீறுகிறவர்களுக்குப் பிரசித்தமான தெண்டனையிடுகிறதற்கும் அஸ்திவாரமாயிற்றென்றார்.

ஆனால் மவுனம் காக்கவேணுமென்று இவ்வளவு ஸ்திரமாய்ப் போதிப்பதற்குக் காரணமென்னவென்று பார்க்கக் கடவோம். ஓர் வீண் வார்த்தை சொல்லுகிறது வெகு பெரிய பாதகமோ? அதினாலே என்ன? அந்த வார்த்தை சொல்லுகிற ஒரு க்ஷண நேரந்தானே வீணாய்ப் போகும்; அது இலேசான அற்பப் பாவந்தானே; தீர்த்தத்தைத் தொட்டு மனஸ்தாபத்தோடு நெற்றியில் வைத்துக்கொண்டால், அந்த அற்பப் பாவமும் தீர்ந்துபோகும். இது இப்படியிருக்க, இது காரியத்தின்பேரில் வேதாகமத்திலே அவ்வளவு கண்டிப்பாய்ப் பேசியிருக்கிறதென்ன? வீண் வார்த்தை சொல்லுகிற நேரம் வீணாய்ப் போகிறதுமல்லாமல் அதிலே ஏதாகிலும் வேறே பொல்லாப்பும் இருக்க வேண்டும். இது நமக்குத் தெரியாதிருந்தாலும், வீண் வார்த்தை பேசுகிறது வெகு கனமான காரியமாயிருக்க வேண்டும்; ஏனென்றால் இஸ்பிரீத்துசாந்து வேண்டியதுக்கு மேலே ஒன்றும் கூட்டிச் சொல்லுகிறதுமில்லை; கள்ளத் திராசிலே வைத்துக் கள்ள நிறை நிறுக்கிறதுமில்லை. வேதாகமத்திலுள்ள பரம இரகசியங்களை அறிந்துகொள்ளுகிறதற்கு வெகு விசேஷ வரங்களைச் சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொண்ட அர்ச்சியசிஷ்டவர்களும் வேதபாரகரும் மவுனங் காக்கிறதினாலே வரும் உச்சிதமான பிரயோசனங்களையும் மவுனங் காக்காததினாலே உண்டாகும் கனத்த பொல்லாப்புக்களையும் விஸ்தாரமாய் விளக்கிக் காட்டியிருக்கிறார்கள்.

புண்ணியஞ் செய்யத் துவக்கிறவர்கள் மவுனங் காக்க வேணுமென்றும் மவுனங்காப்பதே நன்றாய்ப் பேசுவதற்கான வழிபாடென்றும் நன்றாய்ப் பேசுகிறது மிகவும் வருத்தமாயிருப்பதினாலே இதற்கு வெகு எச்சரிக்கை அவசரமென்றும் அர்ச். பசிலியார் சொல்லியிருக்கிறார். யாதோர் கல்வி சாஸ்திரத்திலே தேர்ந்து போகவேணுமானால், அநேக வருஷம் அதைப் படிக்க வேணுமல்லோ? இதிப்படியிருக்க, நன்றாய்ப் பேசுகிற சாஸ்திரத்தை நாம் படிப்பதற்குச் சில வருஷமாகிலும் செலவழிக்கிறது ஞாயமாமே. நன்றாய்ப் பேசுகிற சாஸ்திரத்தைப் படிப்பதற்கு வெகுகாலம் வெகு ஊக்கத்தோடு பிரயாசப்படாவிட்டால், அதை ஒருகாலும் படித்தறிய மாட்டாய். ஆனா

ல் மற்றச் சாஸ்திரங்களிலே இடைவிடாமல் பழகுகிறதினாலே அதைக் கற்றுக்கொள்ளுகிறார்களே ; அப்படிப்போலே வெகுவாய்ப் பேசினால், நன்றாய்ப் பேசுகிற சாஸ்திரத்தை நானும் கற்றுக்கொள்ளலாமென்பாயாக்கும். இதற்கு அர்ச். பசிலியார் சொல்லுகிற மறுமொழியாவது : பேசாமலிருந்து மவுனங் காப்பதினாலே மாத்திரம் நன்றாய்ப் பேசுகிற சாஸ்திரத்தைக் கற்றுக்கொள்ளலாம். இதற்கு ஞாயம் ஏதென்றால், நன்றாய்ப் பேசுகிறதற்கு மகா மகாப்பட்ட எச்சரிக்கை அவசரமாயிருக்கிறதினாலேயும் நாம் இப்படி எச்சரிக்கையாயிராமல் மனசுக்கானபோது நமக்குப் பிரியமான சத்தத்தோடு ஒரு ஒழுங்குமில்லாமல் வாயிலே வந்ததெல்லாம் பேசப் பழகியிருக்கிறதினாலேயும் இந்தக் குறைகளை எல்லாம் திருத்திக்கொண்டு நன்றாய்ப் பேசுகிறதற்கு மவுனம் அவசரம். மவுனத்தினாலே இரண்டு பிரயோசனம் உண்டாகும். யாதொருவன் யாதோர் கல்விசாஸ்திரத்திலே கெட்டிக்காரனாவதற்கு அதின்பேரிலே அவனிடத்தில் முன்னே இருந்த தப்பிதமான எண்ணங்களையெல்லாம் தள்ளுகிறது அவசரமாயிருப்பதுபோலே, நாம் முன்னமே தகாதவிதமாய்ப் பேசப் பழகியிருந்தோமே, அந்தப் பழக்கத்தை மறக்கிறது முந்த முந்த முழுதும் அவசரமான காரியமாகும். இரண்டாவது, நெடுங்காலம் மவுனம் காப்பதினாலே நன்றாய்ப் பேசப் படிப்பதற்குச் சாவகாசமுண்டாகும் ; ஏனென்றால் நன்றாய்ப் பேசுகிற சாஸ்திரத்திலே மிகவும் தேர்ந்தவர்களை உற்றுப் பார்த்து அவர்களைக் கண்டுபாவித்து அவர்களுடைய பேச்சிலே விளங்குகிற எச்சரிக்கையையும் மதுரகுணத்தையும் புத்தியையும் மேரை மரியாதையையும் நாமும் அடைவதற்கு ஆன சாவகாசம் மவுனத்தினால் உண்டாகும். யாதொரு வேலை படிக்கிறவன் மேஸ்திரியைப் பார்த்து அவன் வேலைசெய்கிறதுபோலே செய்தால், தானும் அந்த வேலையைப் படித்து மேஸ்திரியாவான். இவ்வண்ணமே நன்றாய்ப் பேசித் தேர்ந்தவர்களை நாமும் பார்த்து அவர்களைப்போலே பேசப் பழகவேண்டும். அந்தப் பழைய சந்யாசியைப் பார். அவர் எவ்வளவு அடக்க ஒடுக்கத்தோடு பேசுகிறார் ; தம்மிடத்தில் வருகிறவர்கள் சொல்லுகிறதை எவ்வளவு மதுரகுணத்தோடும் அமரிக்கையோடும் கேட்டு அவர்கள் பேசவந்த காரியத்தை எவ்வளவு நன்றாய் ஒழுங்குப் படுத்துகிறாரென்று பார். அவருக்கு எவ்வளவு பலசோலி அலுவல் இருந்தாலும், அவர்கள் பேசவந்த அலுவல் ஒன்றுமாத்திரம் இருந்ததுபோலே அதுக்கான மறுமொழி சொல்லுகிறாரே ; அவர் குணம் ஒருகாலும் மாறாமல் எப்போதும் ஒரு





கண்ட சீராய் இருக்கிறதைக் காண்கிறாயே. உனக்கு அற்பவேலை உண்டானால், எல்லாரிடத்திலும் வெடுவெடென்று விரோதமாய்ப் பேசுகிறாயே. இன்னொரு சந்நியாசியாரைப் பார்: சிரேஷ்டர் அவருக்குக் கற்பிக்கிறதெல்லாத்தையும் எவ்வளவு சந்தோஷத்தோடு சீக்கிரமாய்ச் செய்துகொண்டு வருகிறார்! அதைச் செய்யாதபடிக்கு அவர் ஒருகாலும் போக்குச் சொல்லுகிறதுமில்லை; அதைச் செய்வதற்கு வேறே ஆள் இல்லையாவென்று கேட்கிறதுமில்லை. இன்னொருவரை உற்றுப்பார்: விளையாட்டு நேரத்திலும் விளையாட்டுக்கு அப்பாலேயும் ஒருவனுக்கு முன்னேயும் அவன் இல்லாத இடத்திலேயும் விளையாட்டுப்போலேயும் வினயமாகவும் ஒருவருக்கும் கஸ்தியான வார்த்தை சொல்லுகிறது இன்னதென்றே அவருக்குத் தெரியாது. யார்பேரிலே பேசினாலும், யாருக்கு முன்பாகப் பேசினாலும், எப்போதும் வணக்கத்தோடு எல்லாரையும் கனம்பண்ணிப் பேசுகிறாரே. நீயும் எப்போதும் இப்படிப் பேசக் கற்றுக்கொள். வேறொருவருடைய நடக்கையைக் கவனித்துப் பார்: யாதொருவர் அவருக்குச் சுறுக்கென்று குத்தினாப்போலே பேசினால், அவர் எவ்வளவு சாமர்த்தியத்தோடே அதை மறைத்துக் கேட்காதது போலே இருக்கிறாரென்று பார். தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, நான் காதுகேளாதவனைப்போலே யானேனென்று இவர் சொல்லலாம். இவர் தம்மைச் செயித்துத் தமக்குக் கண்டிப்பான வார்த்தை சொன்னவருடைய பிரியத்தை எப்படி அடைந்திருக்கிறாரென்று பார். இதற்கொத்த சமயங்களிலே நீயும் இப்படி நடக்கப் படித்துக்கொள். மேற்சொல்லப்பட்டவர்களைப்போலே நாமும் நமக்கு விரோதமான சமயங்களிலும் விரோதமில்லாத சமயங்களிலும் மவுனம் காப்பது மிகவும் பிரயோசனமாயிருக்கும். ஏனென்றால் முன்னே நாம் கெடுதலாய்ப் பேசின வழக்கம் மவுனத்தினாலே எடுபட்டுப் போகிறதுமல்லாமல் நாம் அறிய அவசரமில்லாததை அறியாமலிருக்கவும் நாம் அறியவேண்டியதை அறிந்துகொள்ளவும் மவுனம் காப்பதினாலே சாவகாசம் உண்டாகுமென்று அர்ச். பசிலியார் வசனித்தார்.

மவுனம் காப்பதற்கும் நேரம் உண்டு, பேசுவதற்கும் நேரம் உண்டென்று ஞானியானவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அம்புரோசியாரும் அர்ச். எரோணிமுசும் வியாக்கியானம் பண்ணிச் சொல்லுகிறதாவது: பித்தாகோரென்பவன் தன் சிஷாக்கள் துவக்கத்திலே ஐந்து வருஷம் வரைக்கும் பேசாமலிருக்க வேணுமென்றுகற்பி

ப்பான் ; ஏனென்றால் இந்த ஐந்து வருஷத்துக்குள்ளாக அவர்கள் முன்னமே படித்திருந்த தப்பறைகளை மறந்து இந்த ஐந்து வருஷம் வரைக்கும் தான் போதிந்த சத்தியங்களை மாத்திரம் அவர்கள் கேட்டுப் படித்துக்கொண்டு அதின்பின் அவர்கள் அதின்பேரில் பேசிக் கெட்டிக்காரராகலாமென்பான். ஆகையால் நாம் இனிமேலாக நன்றாய்ப் பேசும் பொருட்டு முந்த முந்த மவுனங் காக்கக் கடவோம். சிறுது காலம் வரைக்கும் மவுனங் காத்து நமது ஞானப் போதகர்கள் சொல்லுகிறதைக் கவனமாய்க் கேட்டு அவர்கள் நமக்குப் போதிக்கிறதெல்லாம் ஸ்திரமான சத்தியமென்று நிச்சயித்துக்கொள்ளக் கடவோம். இப்படி வெகுநாள் மவுனங் காத்து வெகுநாள் படித்துக்கொண்டபின், நாம் அதை மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுக்கலாம்.

ஆனால் புண்ணியத்தைத் துவக்கிறவர்களுக்கு மவுனம் அவசரமென்று மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர்கள் சொன்னதுபோலே தோன்றினாலும், சகலருக்கும் இது அவசரமென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் ஒன்றில் நீ பழைய சந்நியாசி அல்லது புதுச் சந்நியாசி. நாக்கை அடக்கிற விஷயத்திலே நீ புதுச் சந்நியாசியைப்போலே நடக்கவேணுமோ, பழைய சந்நியாசியைப்போலே நடக்கவேணுமோ? உனக்குப் பிரயோசனமானதைத் தெரிந்துகொள். நீ புதுச் சந்நியாசியாயிருந்து புதுச் சந்நியாசியைப்போல் நடக்க மனசுண்டானால், நன்றாய்ப் பேசப் படிக்கிறவரைக்கும் நீ பேசாமலிருக்க வேணுமென்று சொல்லுகிறோம். நீ பழைய சந்நியாசியாயிருந்தால், அல்லது பழைய சந்நியாசியைப்போலே நடக்க மனதாயிருந்தால், நீ மற்றவர்களுக்கு நன்மாதிரிகை காட்ட வேண்டுமே; புதுச் சந்நியாசிகள் உன்னைக் கண்டு தேர்ந்துபோக வேண்டுமே; துவக்குகிறவர்கள் உன்னைக் கண்டு நன்றாய்ப் பேசுகிற விதத்தைக் கற்றுக்கொள்ள வேண்டுமே. ஆகையால் மவுனத்தை நன்றாய் அநுசரி. நீ புதுச் சந்நியாசியைப்போலே நடவாமல் பழைய சந்நியாசியைப்போலே நடந்தால் தாவிளை ; ஏனென்றால் அப்போது மற்றவர்களுக்கு நன்மாதிரிகை காட்ட உன்பேரில் கடன் இருப்பதினாலே, மவுனத்தை அதிக சாக்கிரதையாய் அநுசரித்துக்கொண்டு வருவாய். நன்றாய்ப் பேசப் படிக்கிறதற்காக நீ வெகு காலம் புதுச் சந்நியாசியாயிருந்து வெகுகாலம் மவுனங் காத்தாயேயல்லாமல் மற்றப்படியல்ல. ஆகையால் இனிமேலாக நீ நன்றாய்ப் பேசி மற்றவர்களுக்கு மாதிரிகையாயிருக்கிறது ஞாயமல்லோ ? நீ இன்னம் புதுச் சந்நி

யாசிபோலேயிருந்து, இன்னம் நன்றாய்ப் பேசப் பழகாவிட்டால், இப்போது அதைப் படித்துக்கொள்ள வேண்டும். இப்படிப் படித்துக்கொண்டால், எப்போ பேச வேணுமென்றும் என்னமாய்ப் பேச வேணுமென்றும் அறிந்துகொள்ளுவாய்.

---

## ரு-ம் அதிகாரம்.

---

தியானயோகியாவதற்கு மவுனம் மிகவும் முக்கியமான வழிபாடென்று சொல்லுவது.

---

**நா**ம் மனுஷரோடே நன்றாய்ப் பேசப் படிப்பதற்கு மவுனம் உதவியாயிருக்கிறதுமல்லாமல் சர்வேசுரனோடு பேசித் தியான யோகிகளாகிறதற்கும் உதவியாகும். அர்ச். எப்பிரேம் சொல்லுகிறது இதுவே. இதின் நிமித்தமாக வனவாசிகள் இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்டு மவுனம் தியானயோகத்தை நம்மிடத்தில் வருவித்து அதைக் காப்பாற்றுவதற்குக் காரணமென்று அறிந்திருந்ததினாலே, எச்சரிக்கையோடு மவுனம் காத்துக்கொண்டு வந்தார்களென்றார். மவுனம் உத்தமமான காரியமென்றும் சகல நல்ல நினைவுகளுக்கும் தாயென்றும் அர்ச். தியாதோக்குசென்பவர் வசனித்தார். ஆகையால் தியான யோகியாகிச் சர்வேசுரனோடு சகசமாய்ப் பேசி நல்ல நினைவுகளை மாத்திரம் நினைத்துக்கொண்டு தேவ ஏவலை எப்போதும் உற்றுக் கேட்டு அதை அநுசரிக்க உனக்கு மனசு உண்டானால், மவுனங் காத்து உள்ளடக்கத்தை அநுசரி. ஏனென்றால் பெருஞ் சத்தம் மற்றவர்கள் சொல்லுகிறதைக் கேட்பதற்கு விக்கினமாயிருக்கிறதுபோலே, வீண் வார்த்தை சொல்லுகிறதினால் உண்டாகும் சந்தடியும் உலக கவலை காரியங்களும் தேவ ஏவலைக் காது கொடுத்துக் கேட்டு அது சொல்லுகிற புத்தியை அநுசரிப்பதற்கு விக்கினமாயிருக்கும். சர்வேசுரன் நம்மோடு பேச வேணுமானால், நாம் அவரோடு தனியே இருக்க வேணுமென்று சித்தமாயிருக்கிறார். இதினாலல்லோ மனிதனுடைய ஆத்துமத்தை வனாந்தரத்தில் அழைத்துக் கொண்டுபோய் அவன் இருதயத்தில் பேசுவோம்.



அங்கே அவனுக்கு ஞான இன்பமும் ஆறுதலுமாகிற பாலை ஊட்டு வோமென்று சர்வேசுரன் திருவுளம்பற்றினர். ஆனால் சர்வேசுரன் சரீரமில்லாமல் சுத்த அரூபியாயிருக்கிறதினாலே, சரீர ஒடுக்கத்தை அவர் கேட்கிறதில்லை, மன அடக்கத்தை மாத்திரம் அவர் கேட்கிறாரென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். ஏனென்றால் மன ஏகாந்தமில்லாவிட்டால், சரீர ஏகாந்தம் என்னத்துக்குதவுமென்று அர்ச். கிரேகோரியார் அருளிச்செய்தார். ஆகையால் நீ சர்வேசுரனோடு பேசிச் சர்வேசுரன் உன்னோடு பேசவேணுமானால், உன் இருதயத்துக்குள்ளே அவருக்கு ஏகாந்தமான இடத்தை ஆயத்தம்பண்ணி வைக்க வேணுமென்று கர்த்தர் சித்தமாயிருக்கிறார். நீ இப்படி ஆயத்தம்பண்ணி வைத்தால், நான் உலோகத்தை விட்டு வெகு தூரமாய் ஓடிப்போய் வனாந்தரத்தில் ஒதுங்கியிருக்கிறேனென்று தாவீதென்னும் தீர்க்கதரிசியோடு நீயும் சொல்லலாம். இதற்காக நீ வனவாசியாக வேண்டியதுமில்லை; பிறர் இரக்ஷணியத்திலிருந்தும் நீ இப்போதிருக்கிற இடத்தை விட்டுப் போகவேண்டியதுமில்லை. பத்தியை உன் இருதயத்தில் எப்போதும் நிலைப்பித்துச் செபஞ் செய்வதற்கு எந்நேரமும் நீ ஆயத்தமாயிருக்க வேணுமானால், மவுனத்தையும் உள்ளடக்கத்தையும் எப்போதும் அநுசரித்துக்கொண்டுவா. அர்ச். தியோதேக்குசென்பவர் சொல்லுகிறதாவது: வெந்நீருள்ள பெரிய அண்டாவை அடிக்கடி திறந்தால், சூடெல்லாம் சீக்கிரமாய்ப் பறந்துபோகும். இவ்வாறே வீண் பேச்சுப் பேசுகிறதற்கு அடிக்கடி வாய் திறந்தால், பத்தி உருக்கமெல்லாம் எளிதாய் வாய் வழியாகப் பறந்துபோகும்; இருதயம் உடனே பல வீண் காரியங்களின்பேரில் பராக்குக்கொள்ளும்; அந்தமத்தை விட்டு நல்ல நினைவு அகன்றுபோகும். இதினாலே கொஞ்ச நேரத்திலே பத்தியெல்லாம் புகையாய்ப் பறந்துபோனதாகக் கண்டு ஆச்சரியப்படுவோம். உனக்கு வெகு ஒழிந்த நேரமுண்டாகிச் செபத்தியானம் செய்வதற்கு வெகு சாவகாசம் இருக்கவேணுமானால், மவுனத்தை அநுசரி; அப்போது சர்வேசுரனோடும் உன்னோடும் பேசுகிறதற்கு மிச்சமான நேரமுண்டென்று கண்டுகொள்ளுவாய். இதினாலல்லோ நீ வீண் பேச்சை விட்டு அவசரமின்றி அங்குமிங்கும் போகாமல், உலோக கவை காரியங்களின்பேரிலுள்ள வீண் விநோத பிரியத்தைத் தள்ளிவிட்டால், நல்ல நினைவு நினைக்கப் போதுமான நேரமுண்டாயிருக்கும்; ஆனால் நீ வெகுவாய்ப் பேசிக் கண்ணுக்குத் தென்படுகிற காரியங்கள் எல்லாத்தின்பேரிலும் இடைவிடாமல் உன் இருதயத்தைச் சிதறவிட்டால், உனக்கு நேரமி





ல்லையென்றும் வழக்கமான முயற்சிகளைச் செய்கிறதற்கு முதலாய்ச் சாவகாசம் இல்லையென்றும் கண்டு ஆச்சரியப்படாதேயென்று கிறீஸ்துநாதர் அநுசாரத்தில் சொல்லியிருக்கின்றது. வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, இஸ்ராயேல் சனங்கள் வைக்கோல் கட்டுவதற்கு எஜிப்த்து தேசத்திலே எங்கும் சிதறிப்போனதினாலே, அவர்களுக்கிட்டிருந்த வேலையைச் செய்யக்கூடாமற்போயிற்று. இதினிமித்தம் பரவோனுடைய உத்தியோகஸ்தர் அவர்களை உபத்திரவப்படுத்தினார்கள்.

இன்னம் இது காரியத்திலே வேறொரு வெகு அவசரமான சத்தியத்தை அறிந்துகொள்ள வேண்டும். அதென்னவென்றால், மவுனம் காப்பது செபத்தியானம் பண்ணுவதற்கு உதவியாயிருக்கிறதுபோலே, செபத்தியானமும் சர்வேசுரனோடு பேசுகிற பேச்சும் மவுனம் காப்பதற்கு உதவியாயிருக்கும். இதினாலல்லோ தேவரீர் உமது ஊழியனாகிய என்னோடே பேசின நேரந்துவக்கி என் நாக்குப் பின்னிக்கொண்டு பேச வருத்தமாயிருக்கிறதென்று மோயீசென்பவர் கர்த்தனை நோக்கிச் சொன்னார். எரேமியாசென்பவர் சர்வேசுரனோடு பேசத்துவக்கினவுடனே நான் குழந்தைப் பிள்ளையாயிருக்கிறேன், எனக்குப் பேசத்தெரியாதென்று சர்வேசுரனை நோக்கிச் சொன்னார். இது காரியத்தில் அர்ச். கிரெகோரியார் எழுதிவைத்ததாவது : ஞானத்திலே பழகிச் சர்வேசுரனோடு வழக்கமாய்ச் சம்பாஷித்துக்கொண்டு வருகிறவர்கள் உலோக காரியங்கள் எல்லாத்துக்கும் செவிடரும் ஊமைகளுமாகி அதின்பேரில் பேசவும் பேசுகிறதைக் கேட்கவும் கூடாதவர்கள்போலே இருப்பார்கள்; ஏனென்றால் தாங்கள் சினேகிக்கிற வஸ்துவின்பேரில் மாத்திரம் அவர்கள் பேசப் பிரியப்படுகிறதேயல்லாமல் அதைவிட்டு வேறே காரியத்தின்பேரில் பேசுகிறதைக் கேட்பது அவர்களுக்குச் சலிப்பாயிருக்குமென்றார். நாமே இச்சத்தியத்தைப் பரிக்ஷையினாலே அறிந்திருக்கிறோம். செபத்தியான நேரத்தில் சர்வேசுரன் தேவ வரப்பிரசாதங்களை உன்பேரில் பொழியவிட்டால், செபத்தியான முடிந்து இன்னம் உன்னிடத்தில் உருக்கமான பத்தி நிறைந்திருக்கும்வரைக்கும் யாரோடேயாகிலும் பேச உனக்கு ஆசைவருமோ? அங்குமிங்கும் கண்ணைத் திருப்புவாயோ? விநோதபிரியம் உன்னிடத்திலுண்டாயிருக்குமோ? உன் வாயிலே பூட்டுப்போட்டுப் பூட்டியிருக்கிறதென்றும் உனக்குக் கண் காது வாயில்லாமல் போனதென்றும் உன்னைக் கண்டவர்க

ள் சொல்லுவார்களல்லோ? இதுக்குக் காரணமென்ன? நீ உள்ளத்தி
லே சர்வேசுரனோடு பேசிக்கொண்டு வெளி விநோதங்களைத் தேடாம
லிருக்கிறதினாலே இப்படியாகிறது. உள்ளத்திலே பத்திபற்றுதலில்
லாமலும் ஒன்றையும் நினையாமலும் இருக்கிறதினாலே, பேசுகிறதற்குப்
பிரியமும் வெளிப் பராக்குமுண்டாகும். கிறீஸ்துநாதர் அநுசாரத்தி
ல் சொல்லியிருக்கிறதாவது: பேசினால் நாம் குற்றங்குறைகளைக் கட்
டிக்கொள்ளாமலிருக்கிறது அபூருவமென்று அறிந்திருந்தாலும், ஒருவ
ரோடே யொருவர் நாம் அவ்வளவு சந்தோஷமாய்ப் பேசித்திரிகிறதெ
ன்ன? ஏனென்றால் பேச்சினாலே ஒருவரிடத்திலொருவர் ஆறுதலைத்
தேடித் திரிகிறோம்; ஆயிரம் நினைவு வந்து நமதிருதயத்தை அமுக்குகி
றதினாலே, அந்த வருத்தத்தைத் தணிக்க ஆசைப்படுகிறோம்; நாம் சி
னேகிக்கிற காரியங்களின்பேரில் பேசப்பிரியப்படுகிறோம், அல்லது நம
து ஆசைக்கு விரோதமென்றெண்ணுகிற காரியங்களின்பேரில் சம்பாஷி
க்க அபேக்ஷிக்கிறோம். ஒரு சந்தோஷமுமில்லாமல் உயிரோடிருக்கக் கூ
டாதென்பது மெய்தான். சர்வேசுரனோடு உள்ளத்தில் நமக்குச் சந்தோ
ஷமில்லாததினாலே, உலோகத்திலே வெளிச் சந்தோஷத்தை நாடித்
திரிகிறோமென்று சொல்லியிருக்கின்றது. மவுனங் காக்காமலிருக்கிற
தும் வீண் நேரம் போக்கடிக்கிறதும் முதலிய வெளிக் குற்றங்கள் வெ
கு இலேசாகத் தோன்றினாலும், அதைக் கட்டிக்கொள்ளுகிறவர்கள் பு
ண்ணியத்திலே வெகுவாய் வர்த்திக்கவில்லையென்று அடையாளமாகு
ம். இதினாலே சந்நியாசத்தில் இந்தக் குற்றங்களைப் பாரிக் குற்றமாக
எண்ணிக் கனமான கண்டனை தெண்டனை செய்கிறது வழக்கம். இந்
தக் குற்றங்களைக் கட்டிக்கொள்ளுகிற சந்நியாசி தன் அறைக்குள் ஒது
ங்கிச் சர்வேசுரனோடு தனி வாசம் பண்ணத் தெரியாதவனாயிருக்கிறதி
னாலே, ஞானத்தில் வளருவதற்கான ஆயத்தம் அவனிடத்தில் இல்லை
யென்றும் அவன் இன்னம் சர்வேசுரனைச் சுகித்தநுபவிக்கத் துவக்கவி
ல்லையென்றும் தெளிவாய்க் காட்டிவிடுகிறான். பெட்டியிலே பூட்டுப்
போடாதிருந்தால், அதுக்குள்ளே விலைபெற்ற சாமான் இல்லையென்று
உடனே அறிந்துகொள்ளுவோமல்லோ? இவ்வண்ணமே மேற்சொன்
ன வெளிக் குற்றங்களைக் கட்டிக்கொள்ளுகிறவர்களுடைய இருதயத்தி
ல் வெகு புண்ணியமில்லையென்று அடையாளமாகும். இதின் நிமித்த
மாகத்தான் இது கனமான குற்றமென்றெண்ணுகிறது வழக்கம்.

## சூ-ம் அதிகாரம்.

புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவதற்கு மவுனம் பெலத்த வழிபாடென்று சொல்லுவது.

மிகவும் சாஸ்திரியும் ஞானத்தில் தேர்ந்தவருமான ஓர் சந்நியாசியார் சொன்ன ஒரு விசேஷமானது மவுனம் எவ்வளவு முக்கியமான காரியமென்று காட்டும். அவர் உள்ளதுக்கு மேலே கூட்டிச்சொன்னரென்று தோன்றினபோதிலும், அது மிகவும் தெளிவான சத்தியமாமே. அதென்னவென்றால், ஓர் மடத்தையும் ஓர் சந்நியாச சபை முழுவதையும் சீர்திருத்துவதற்கு அதிலே மவுனத்தை அநுசரிக்கும்படி செய்தாலே போதுமென்றார். ஓர் மடத்திலே நன்றாய் மவுனங் காக்கட்டும்; அப்போதே அது சீர்திருந்திப்போவதற்கு நான் உத்தரவாதப்படுகிறேன். ஏனென்றால் ஒரு மடத்திலுள்ளவர்கள் எல்லாரும் நன்றாய் மவுனங் காத்தால், ஒவ்வொருவரும் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு உழைப்பார்களென்பதினாலே அந்த மடம் முழுதும் சீர்திருந்தி ஒழுங்குப்படும். ஆனால் நன்றாய் மவுனங் காக்காவிட்டால், முறைப்பாடும் கோளும் மொறுமொறுப்பும் புறணியும் பகையும் மடத்திலே உண்டாகிப் பேசப் பேச அதிகப்படும். அப்போது தாங்களே நேரத்தை வீணாய்ப் போக்கடிக்கிறதுமன்றி மற்றவர்களும் வீண் நேரம் போக்கடிப்பதற்குக் காரணமாயிருப்பார்கள். குற்றத்தின்மேல் குற்றம் வந்து சேர்ந்து சந்நியாச ஒழுக்கம் முழுதும் சீக்கிரம் கெட்டுப்போகுமென்று அர்ச். கிளிமாக்கருளப்பர் அருளிச்செய்தார். ஆகையால் மடத்திலே மவுனத்தைச் சரியாய் அநுசரியாவிட்டால், அது சந்நியாச வீடாகத் தோன்றாமல் உலோக வாசிகள் குடித்தனமாகத் தோன்றும். மெய்யாகவே மவுனங் காக்கிற மடம் தேவ அபிஷேகம் பெற்ற திருவாசமாகக் காணப்படும். அதிலே பிரவேசித்தவுடனே அர்ச்சியசிஷ்டத்தனத்தின் வாசனை வீசிச் சகலருக்கும் நன்மாதிரிகையைப் பெறுவிக்கும். அதில் விளங்குகிற உள்ளடக்கமும் மவுனமும் பார்க்கிறவர்கள் எல்லாரிடத்திலும் பத்தியை மூட்டும். இதினாலே கர்த்தர் இவ்விடத்திலேயிருக்கிறார், இது சர்வேசுரனுடைய வீடும் மோக்ஷவாசலுமல்லாமல் வேறல்லவென்று பார்க்கிறவர்கள் எல்லாரும் சொல்லுவார்கள். இங்கே மடத்தைக் குறித்து நாம் சொன்ன காரியம் ஒவ்வொருவர் பேரிலு

ம் சொல்லலாம். ஒரு சந்நியாசி மவுனத்தைச் சரியாய் அநுசரிக்கட்டும்; அப்போதே அவர் சீர்திருந்துகிறதற்கு நான் உத்தரவாதப்படுகிறேன். பகலிலே நாம் வெகுவாய்ப் பேசியிருந்தால், வெகு குற்றத்தில் விழுந்திருக்கிறோமென்று இராத்திரி ஆத்தும சோதனை நேரத்தில் கண்டுவருகிறோமல்லோ? இதினாலேதான் எங்கே வெகு பேச்சுண்டோ, அங்கே வெகு நிர்ப்பாக்கியமும் உண்டாயிருக்குமென்று ஞானியானவர் வசனித்தார். நாம் நன்றாய் மவுனங் காத்தால், ஆத்துமசோதனை பண்ணுகிறதற்கு முதலாய்ப் பொருள் இல்லையென்று தோன்றும். 'இதினாலல்லோ வாயைக் காக்கிறவன் ஆத்துமத்தைக் காக்கிறானென்று ஞானியானவர் வசனித்தார். அஞ்ஞானிகள் முதலாய் இச்சத்தியத்தை அறிந்துகொண்டார்கள். லிக்கூர்கென்பவன் லாசேதேமோனியருக்குக் கொஞ்ச ஒழுங்கு மாத்திரம் கொடுத்ததற்குக் காரணம் என்னவென்று லாசேதேமோனியனான ஓர் ஞான சாஸ்திரியிடத்தில் கேட்டதற்கு அவன் சொன்ன மறுமொழியாவது: கொஞ்சம் பேசுகிறவர்களுக்கு வெகு ஒழுங்கு கொடுக்க அவசரமில்லையென்றான். ஆகையால் ஒவ்வொருவரையும் ஒரு மடத்தையும் ஓர் சந்நியாச சபை முழுவதையும் சீர்திருத்துகிறதற்கு மவுனத்தை அநுசரித்தாலே போதும். நாம் மேற்சொன்னதுபோலே, பூர்வீக வனவாசிகள் மவுனத்தை வெகு கனமாய் எண்ணினதற்கும் சகல சந்நியாசிகள் சபைகளிலும் மவுன ஒழுங்கைப் பிரதானமாய் ஏற்படுத்தினதற்கும் காரணமிதுவே. கர்த்தூசிய சபையாராகிய தியோனிசியார் சொல்லுமாப்போலே, இந்த முகாந்தரத்தைப்பற்றி நாம் முன்னமே எடுத்துக் காட்டின நிருபத்திலே அப்போஸ்தலரான அர்ச். யாகப்பர் இன்னம் சொல்லுகிறதாவது: வாக்கினாலே குற்றங் கட்டிக்கொள்ளாதவன் உத்தம புண்ணியவான்; நாக்கை அடக்காமல் தன் இருதயத்தை அங்குமிங்கும் சிதற விட்டுக்கொண்டுவருகிறவன் நான் பத்தியுள்ளவனென்று நினைத்திருந்தால், அவன் பத்தி வீணும் வியர்த்தமுமாயிருக்குமென்றார்.

நீ புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவதற்கு உன்னிடத்தில் கேட்கிறது எவ்வளவு சொற்பக் காரியமென்றும் அதுக்கு நாம் இங்கே சொல்லிக் காட்டுகிற வழிபாடு எவ்வளவு எளிதாயிருக்கிறதென்றும் கவனமாய் யோசித்துப் பார். புண்ணியத்திலே நீ மிகவும் வர்த்தித்துச் சாங்கோபாங்கத்தை அடையவேணுமானால், மவுனத்தை அநுசரி. நீ புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைவதற்கு இதுவே போதுமெ






ன்று அப்போஸ்தலரான அர்ச். யாகப்பர் நிச்சயித்துச் சொல்லியிருக்கிறார். நீ ஞானியும் தியானயோகியும் ஆகவேணுமானால், மவுனத்தை அநுசரி; இதினாலே ஞானியாவாயென்று அர்ச்சியசிஷ்டவர்கள் வார்த்தைப்பாடு கொடுத்திருக்கிறார்கள். நீ எச்சரிக்கையாய் மவுனங் காக்காவிட்டால், ஒருகாலும் உத்தமனாகமாட்டாய், ஒருகாலும் ஞானியும் தியானயோகியும் ஆகமாட்டாயென்பது நிச்சயம். பேச்சுக்காரன் எங்கேயாகிலும் வெகு தியானயோகியாகவும் ஞானத்தில் தேர்ந்தவனாகவும் இருக்கிறதை நீ கண்டதுண்டோ? அவன் புண்ணியத்தில் வர்த்திக்கிறதை முதலாய்க் கண்டிருக்க மாட்டாய். இதினாலல்லோ வெகு பேச்சுக்காரன் புண்ணியவானாவானோவென்று யோபென்பவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். கிரெகோரியார் சொல்லுகிறதாவது: வெகுவாய்ப் பேசுகிறவன் புண்ணியத்திலே ஒருகாலும் வெகுவாய் வர்த்திக்க மாட்டானென்றார். இதை ஒப்பிப்பதற்காக வேதாகமத்திலிருந்து அநேக வாக்கியங்களை எடுத்துக் காட்டலாம். இப்படியே வெகு பேச்சுக்காரன் பூமியிலே நேராய் நடக்க மாட்டான்; அதாவது, புண்ணியத்திலே வர்த்திக்க மாட்டானென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. யாக்கோபென்பவர் ரூபேனுக்கிட்ட சாபம் இவன் பேரிலும் வரும். அதாவது, தண்ணீர் ஓடுகிறதுபோலே நீயும் ஓடினாய்; நீ விர்த்தியடைய மாட்டாயென்றார். க்ஷணத்துக்கு க்ஷணம் வீண்பேச்சிலே உன் இருதயத்தை ஓடவிடுகிறாய்; எந்நேரமும் அதை வெளியிலே போகவிடுகிறாய். நீ பிரயோசனப்படப் போகிறதில்லை; புண்ணியத்திலே வர்த்திக்க மாட்டாய்.

மூடியை வைத்து மூடாமல் திறந்திருக்கிற பாத்திரம் அசுத்தப்படுமென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுமாப்போலே, தன் வாயை மூடாதவன் மூடியை வைத்து மூடாத இந்தப் பாத்திரம்போலேயிருக்கிறான். பாத்திரத்தை மூடாவிட்டால், சகலவித அசுத்தமும் தூசியும் அதிலே மண்டியிருக்கும். இவ்வண்ணமே யாதொருவன் பேசுகிறதற்கு எப்போதும் வாய்திறந்தால், அவன் ஆத்துமத்திலே சீக்கிரமாய்ப் பாவமும் குற்றங் குறையும் நிறைந்திருக்கும். இஸ்பிரீத்துசாந்து இச்சத்தியத்தை உறுதிப்படுத்திப் பலமுறை படித்துப் படித்துச் சொல்லியிருக்கிறார். இதினாலல்லோ வெகு பேச்சுப் பேசுகிறவன் தன் ஆத்துமத்தைக் காயப்படுத்துகிறானென்றும் வெகுவாய்ப் பேசுகிறவன் பாவத்தை விலக்கக் கூடா

தென்றும் வெருவாய்ப் பேசுகிறதிலே பைத்தியமிருக்குமென்றும் சொல்லியிருக்கிறார்.

இந்தச் சத்தியத்தை ஒப்பிப்பதற்கு வேறொன்றையும் தேடவேண்டியதில்லை; இதைத் தினந்தோறும் அநுபவசித்தியினாலே நாமே அறிந்திருக்கிறோம். வெருவாய்ப் பேசுகிறதினாலே வருகிற பொல்லாப்பை அர்ச். கிரெகோரியார் நன்றாய்க் குறித்து எழுதிவைத்திருக்கிறார். அதெப்படியென்றால், துவக்கத்திலே நல்ல காரியத்தைப் பேசுவாய்; அதின்பின் வீண்வார்த்தை சொல்லுவாய்; அப்புறம் பகிடி பரியாசம் பண்ணுவாய்; அதின்பின் கொஞ்சம் கண்டிப்பான வார்த்தை சொல்லுவாய்; கடைசியாய்க் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பேச்சு அதிகப்பட்டு யாதொரு காரியத்தை உள்ளதுக்கு மேலே அதிகமாய்க் கூட்டிச் சொல்லவும் அதிகமாகக் காட்டவும் ஆசைப்பட்டு உன்னை அறியாமல் சில பொய் வாயைவிட்டுப் புறப்படும்; சிலவிசை கனமான காரியமும் பொல்லாப்பான காரியமும் உன் வாயிலிருந்து வரும். அது துவக்கத்திலே சொற்பக் காரியமாயிருந்தாலும், வரவரக் கனத்த காரியமாய் வளரும். இவ்வண்ணமே வழக்கமாய் விளையாட்டுப்போலே துவக்குகிற பேச்சு வினையமாக முடியுமென்றார்.

பெரிய ஆல்பேர்த்தென்பவர் இன்னம் அதிக கண்டிப்பாய் எழுதிவைத்திருக்கிறதாவது: மவுனங் காக்காதவனைப் பசாசு எளிதாய்ச் செயித்துக் கெடுக்குமென்றார். இச்சத்தியத்தை ஒப்பிப்பதற்காக அவர் வேதாகமத்திலிருந்து எடுத்துக் காட்டின வாக்கியமாவது: பேச்சை விலக்கக் கூடாதவன் கோட்டையில்லாமல் எப்பக்கத்திலும் திறந்திருக்கிற பட்டணத்துக்கு ஒப்பாயிருக்கிறானென்றார். இவ்வசனத்தின்பேரில் அர்ச். எரோணிமுஸ் சொல்லுகிறதாவது: கோட்டை கொத்தளமில்லாத பட்டணத்திலே சத்துருக்கள் இடைவிடாமல் ஓடிவந்து அதைக் கொள்ளையடிப்பார்களென்று பயப்படுகிறதற்கு இடமுண்டு. இவ்வண்ணமே ஆத்துமத்துக்குக் கோட்டையாகிற மவுனத்தை அநுசரியாதவன் இடைவிடாத சோதனையில் அகப்பட்டுக் கெட்டுப்போவதற்கான ஆபத்தில் இருக்கிறான். இன்னம் இது காரியத்திலே வேறோர் விசேஷ உவமை சொல்லிக் காட்டலாம். அதாவது, ஒருவன் ஒன்றும் நினையாமல் பல காரியத்தின்பேரில் பராக்காய்த் திரியும்போது, அவனைத் திடீரென்று எளிதாய்ப் பிடிக்கலாம்; ஆனால் எ





ப்போதும் எச்சரிக்கையாயிருக்கிறவனைத் திடீரென்று பிடிக்கிறது வருத்தம். இவ்வாறே மவுனங் காக்காதவன் பல வீண்காரியத்தின்பேரிலே பராக்காய்த் திரிகிறதினாலே, பசாசு அவனை எளிதாய் ஏய்த்துக் கெடுக்கும்; மவுனமும் உள்ளடக்கமுமாயிருக்கிறவனைப் பசாசு ஒருகாலும் திடீரென்று பிடிக்கக் கூடாது. ஆகையால் பசாசு இவனைக் கெடுக்கிறது வெகு வருத்தமாயிருக்கும்.

---

## எ-ம் அதிகாரம்.

உள்ளடக்கமும் வெளி அடக்கமும் மவுனமுமாயிருக்கிறது
கஸ்தியுள்ள நடக்கையாயிராமல் இன்பமும்
பிரியமுமான நடக்கையென்று
சொல்லுவது.

---

இதுவரையில் நாம் சொன்னதைக் கொண்டு ஒரு கனமான சத்தியத்தை அறிந்துகொள்ளலாம். அதென்னவென்றால், கண்ணை எப்போதும் கவிழ்ந்துகொண்டு நடந்து அவசரமில்லாத பேச்சுப் பேசாமலும் கேளாமலும் தேவ சிநேகத்துக்காகச் செவிடரும் குருடரும் ஊமைகளுமாயிருந்து அந்தரங்கமாய் நடக்கிறது கஸ்தியும் சஞ்சலமுமாயிராமல், மிகவும் இன்பமும் பிரியமுமான நடக்கையாமே. இப்படி நடக்கிறவர்கள் சர்வேசுரனோடு கூட இருந்து அவரோடு பேசிக்கொண்டுவருகிறதினாலே, சகல மனுஷரோடும் சஞ்சரிக்கிறதைப் பார்க்க ஆயிரமடங்கு அதிக இன்பத்தைச் சுகித்தநுபவிப்பார்கள். இதினாலல்லோ ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிரியம்போலே நினைக்கட்டும்; ஏனென்றால் ஒவ்வொருவனும் தன் புத்திக்கு ஒத்த பிரகாரம் நினைப்பான். எனக்கோவென்றால், உலோக சஞ்சாரம் சிறைச்சாலையாகவும் தனிவாசம் பரகதியாகவும் தோன்றுகிறதென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். நாம் தனியேயிருக்கும்போது, ஒருகாலும் தனியேயிருக்கவில்லையென்று அர்ச். பெர்நர்துஸ் அருளிச்செய்தார். அதாவது, அவர் தனிவாசம் பண்ணும்போது, எல்லாருக்கும் மேலான சர்வேசுரனோடு கூட இருந்ததினாலேயும் சர்வேசுரன் மாத்திரம் ஸ்திரமான சந்தோஷத்தை ஆத்துமத்துக்குக் கொடுக்கலாமென்பதினாலேயும் அப்





போது அவர் மனம் சந்தோஷப்பட்டு அக்களித்ததென்று அர்த்தமாகும். சர்வேசுரனோடு உள்ளத்தில் சம்பாஷித்து ஞானத்தையும் செபத்தியான மதுரத்தையும் சுகித்தநுபவியாதவர்கள் மேற்சொன்ன நடக்கை கஸ்தியும் சஞ்சலமுமுள்ள நடக்கையென்று எண்ணுவார்கள் ; ஆனால் மெய்யான சந்நியாசிக்கு அது ஆறுதலும் இன்பமும் நிறைந்த ஒழுக்கமாயிருக்கும்.

இந்தச் சத்தியம் இன்னமொரு தப்பிதத்தை அறிந்துகொள்ளுகிறதற்குதவும். அதென்னவென்றால், மனுஷர் தங்களைப்போலே மற்றவர்களையும் நினைக்கிறதினாலே, யாதொரு சந்நியாசி உள்ளடக்கமும் வெளி அடக்கமுமாயிருந்து கண்ணைக் கவிழ்ந்துகொண்டு நடந்து மற்றவர்களைப்போலே வழியில் எதிர்ப்படுகிறவர்களோடு பேசிக்கொண்டு நில்லாததைக் கண்டு அவருக்கு ஏதோ சோதனை வந்து உபாதிக்கிறதாக்கும், ஏதோ கஸ்தி அவர் மனதைப் பிடித்திருக்கிறதாக்குமென்று சிலர் தப்பிதமாய் எண்ணுவார்கள். இன்னம் சிலவிசை இதின் நிமித்தம் அவரைத் தொந்தரிக்கிறதினாலே, அவர் வெட்கப்பட்டுத் தாம் துவக்கின அடக்க ஒடுக்கத்தையும் மவுனத்தையும் விட்டுவிடுகிறதற்கு இவர்கள் அநந்தமுறை காரணமாயிருப்பார்கள். சிலருடைய பத்திக் குறைச்சலினாலேயும் பராக்கினாலேயும் மற்றவர்களுக்கு இவ்விதமாய்ப் பொல்லாப்பு வராதபடிக்கு மகா மகா எச்சரிக்கையாயிருக்க வேண்டும். உள்ளடக்கமும் மவுனமும் உனக்குப் பிரியமாயிராததினாலே, உன் சகோதரருக்கும் பிரியமில்லையென்று நினைக்கிறாயோ ? அவர்களுடைய அடக்க ஒடுக்கம் உன் அடக்கமற்ற நடக்கையை இடைவிடாமல் கண்டிக்கிறாப்போலே இருக்கிறதினாலே, அதைப் பொறுக்க உன்னாலே கூடாததாக்கும். இவ்வளவு பரிசுத்த முயற்சியை அவர் அநுசரிக்கட்டும்; உன்னைப் பார்க்க அவர் சந்தோஷமாயிருக்கிறார் ; அவர் ஞான சந்தோஷத்தையும் மன அக்களிப்பையும் சுகித்தநுபவிக்கிறார். இதினாலல்லோ தேவ ஊழியர் வெளிப் பார்வைக்குக் கஸ்தியும் உள்ளத்தில் சந்தோஷமுமாயிருக்க வேணுமென்று அர்ச். சின்னப்பர் கற்பித்திருக்கிறார். அவர் எவ்வளவு கஸ்தியாகத் தோன்றினபோதிலும், அவரிடத்தில் கஸ்தியில்லை ; அவருடைய சந்தோஷம் மனசுக்குள்ளே அடங்கியிருக்கின்றது. மன சந்தோஷமாத்திரம் ஸ்திரமான சந்தோஷமென்று கிறிஸ்துவர்களுமல்லாமல் அஞ்ஞான சாஸ்திரிகள் முதலாய்ச் சொல்லியிருக்கிறார்கள். பூமிமேலே கிடக்கிற தங்கம் உத்தமமான தங்கமல்






ல; ஆனால் பூமியின் அடியிலே பூமியின் கற்பத்துக்குள்ளே மறைந்து கிடக்கிற தங்கமே உத்தமமான தங்கம். இவ்வாறே வாக்கிலும் முகச் சாடையிலும் வெளியிலும் தோன்றுகிற சந்தோஷம் மெய்யான சந்தோஷமல்ல; இது அநந்தமுறை மனசினால் உண்டாகிறதில்லை. இருதயத்துக்குள்ளே மறைந்திருக்கிற சந்தோஷமே மெய்யான சந்தோஷம். ஆத்தும பரிசுத்தத்தனத்தை அடைந்து அழிந்துபோகிற நன்மைகள் எல்லாத்தையும் உறுதியாய்ப் பிறக்கணித்து இப்பிரபஞ்ச காரியங்கள் எல்லாத்துக்கும் மேற்பட்டவனாயிருக்கிறதே மெய்யான சந்தோஷமும் மெய்யான திருத்தியுமாகும்.

## அ-ம் அதிகாரம்.

(:o:)

### பேசும்போது நாம் எவ்வளவு எச்சரிக்கையாய் இருக்க வேணுமென்று சொல்லுவது.

கர்த்தாவே, என் வாய்க்குக் காவலும் என் உதட்டை மூடுகிறதற்குக் கதவும் போடுமென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். அம்புரோசியாரும் அர்ச். கிரெகோரியாரும் நாக்கினால் உண்டாகிற பற்பல பொல்லாப்புக்களை விலக்குவதற்காக நாம் மவுனம்காக்க வேணுமென்று போதித்துக் கடைசியிலே சொல்லுகிறதாவது: என்ன! நாங்கள் ஊமைகளாக வேணுமோவென்று கேட்பீர்களாக்கும். இல்லை, இல்லை, ஊமைகளாக வேண்டியதில்லை. பேசாமலிருக்கிறது மவுனமென்னும் புண்ணியமல்ல; வேண்டியபோது பேசி, அவசரமில்லாதபோது பேசாமலிருப்பதே மவுனமென்னும் புண்ணியம். இப்படியே சாப்படாமலிருக்கிறது மட்டசனமென்னும் புண்ணியமல்ல; அவசரமாயிருக்கும்போது அவசரமானமட்டும் சாப்பட்டு மற்றதெல்லாத்தையும் தொடாமலிருப்பதே மட்டசனமென்னும் புண்ணியம். இஸ்பிரீத்துசாந்து வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, பேசாமலிருப்பதற்கும் நேரம் உண்டு, பேசுவதற்கும் நேரம் உண்டென்றார்கள். இவ்விரண்டையும் சரியாய்ச் செய்வதற்கு விவேகம் வேணும்; ஏனென்றால் வேண்டியபோது, பேசாதிருந்தால் குற்றமாயிருக்கலாம்; அப்படியே





அவசரமில்லாதபோது, பேசினால் குற்றமாயிருக்கும். இவ்விரண்டு சத்தியத்தையும் மேற்சொன்ன வேத வாக்கியத்தில் குறித்துக்காட்டியிருக்கின்றது: கர்த்தாவே, என் வாய்க்குக் காவலையும் என் உதட்டை மூடுகிறதற்குக் கதவையும் போடுமென்று சொல்லியிருக்கின்றது. அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, என் வாய்க்குக் காவல் வையுமென்றும் கதவு போடுமென்றும் சர்வேசுரனிடத்தில் கேட்டிருக்கிறதேயல்லாமல் அதை ஒருகாலும் திறவாதபடிக்கு சுவர் வையுமென்று சொல்லவில்லை; கதவுபோட்டிருந்தாலும், அவசரத்துக்குத் தக்கது அதைத் திறக்கலாம் சாத்தலாமென்கிறதினாலே, அவசரத்துக்குத்தக்கது வாயை திறக்க வேணுமென்றும் மூட வேணுமென்றும் இதுவே மவுனமென்கிற புண்ணியமென்றும் தெளிவாய்க் காட்டியிருக்கின்றது. ஞானியானவரும் வேதாகமத்தில் இந்த மன்றாட்டைக் கேட்டிருக்கிறார். அதெப்படியென்றால், என் வாய்க்குக் காவல் வைப்பதார்? என் உதட்டினாலே நான் குற்றம் கட்டிக்கொள்ளாதபடிக்கும் என் நாக்கினாலே நான் கெட்டுப்போகாதபடிக்கும் என் உதட்டிலே ஞானமென்னும் முத்திரை போடுகிறதாரென்றார். சரியாய்ப் பேசுகிறதற்கு வெகு யோசனையும் எச்சரிக்கையும் வேண்டியிருப்பதினாலே, தம்முடைய நாக்கு தம்மைக் கெடுத்துப்போடுமென்று ஞானியானவர் பயந்து வேண்டியபோது மாத்திரம் வாய் திறந்து அதை மூடுகிறதற்கு அவசரமான விவேகத்தைச் சர்வேசுரனிடத்தில் அவர் கேட்டு மன்றாடினது ஞாயந்தானே. ஏனென்றால் பேசும்போது, ஒரே காரியத்தை அநுசரியாமல் விட்டுவிட்டாலே போதும்; பெரிய குற்றமுண்டாகலாம். தகுந்தாப்போலே விவேகமாய்ப் பேசுகிறதற்கு ஒரு எச்சரிக்கையும் விடாமல் சகல எச்சரிக்கையையும் அநுசரிப்பது அவசரம். நன்மைக்கும் தின்மைக்கும் வித்தியாசமேதென்றால், நன்மை செய்வதற்கு அவசரமான குணபாடுகள் எல்லாத்தையும் ஒரே நேரத்தில் அநுசரிக்க வேண்டும்; ஆனால் ஒரு குணபாட்டை மாத்திரம் அநுசரியாமல் விட்டுவிட்டால், அது தின்மை யாவதற்குப் போதும்.

நன்றாய்ப் பேசுகிறதற்கு அவசரமான எச்சரிக்கை இன்னதென்று அர்ச். பசிலியார் அர்ச். அம்புரோசியார் அர்ச். பெர்னர்துஸ் முதலிய பல அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். பேசும் முன்னே என்ன சொல்லவேணுமென்று நன்றாய் யோசிக்கிறது முக்கியமான முதல் எச்சரிக்கையாகும். நமது அவயவங்கள் இருக்கும் வகையை






யோசித்தால், இந்தச் சத்தியத்தை நன்றாய் அறிந்து கொள்ளலாம். ஏனென்றால் எல்லாச் சத்தத்தையும் கேட்பதற்காகக் காது எப்போதும் திறந்திருக்கின்றது ; நாக்குக்குப் பல்லும் உதடுமாகிற இரண்டு வேலி அல்லது இரண்டு சுவர் போட்டிருக்கின்றது. இதினாலே நாம் பேசுகிறதற்கு எப்போதும் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்றும் கேட்பதற்கு எப்போதும் தயாராயிருக்க வேணுமென்றும் காட்டியிருக்கின்றது. இதினாலல்லோ ஒவ்வொருவனும் கேட்கத் துரிதமாயும் பேச மெதுவாயும் இருக்க வேணுமென்று அப்போஸ்தலரான அர்ச். யாகப்பர் வசனித்தார். நாக்கின் கூறுபாடே இது காரியத்தை நமக்கு விளக்கிக் காட்டும். அதென்னவென்றால், நாக்கிலே இரண்டு இரத்தத் தாரை உண்டு; அதிலே ஒன்று சகல கிரிகைகளுக்கு ஊற்றாகிற இருதயத்திலே போய்ச் சேரும்; வேறொன்று மூளைவரைக்கும் போகும். மூளை புத்தி தங்குகிற இடமென்று ஞான சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். இதினாலே நாம் சொல்லுகிறதெல்லாம் இருதயத்திலிருந்து வரவேணுமென்றும் புத்தி அதை நடப்பிக்க வேணுமென்றும் தெளிவாய்க் காட்டியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதுமிதுவே: ஒவ்வொரு வார்த்தையும் நாக்கிலிருந்து புறப்படும் முன்னே அதை அரத்தினாலே இராவவேணுமென்றார். முந்த முந்த வார்த்தையை இருதயத்தில் பிறப்பிக்க வேண்டும் ; அப்புறம் வாயைவிட்டுப் புறப்படும் முன்னே புத்தியைக் கொண்டு அதை இராவவேண்டும். ஞானியானவர் சொன்னதுபோலே, பைத்தியக்காரனுக்கும் புத்தியுள்ளவனுக்குமுள்ள வித்தியாசமேதென்றால், பைத்தியகாரனுடைய இருதயம் வாயிலிருக்கும் ; புத்தியுள்ளவனுடைய வாய் இருதயத்திலிருக்கும். பைத்தியகாரனுடைய நாக்கு அவன் இருதயத்தை வெளியே இழுக்கிறதினாலே, அவனுடைய இருதயம் வாயிலிருக்கும்; வாயிலே வருகிறதுக்கெல்லாம் அவன் இருதயம் சம்மதித்துக் கொள்ளும்; ஆகையால் அவன் இருதயமும் நாக்கும் இரண்டும் ஒன்றுபோலிருக்கும். ஆனால் புத்தியுள்ளவனுடைய வாய் இருதயத்திலிருக்கும் ; ஏனென்றால் அவன் சொல்லுகிறதெல்லாம் இருதயத்திலிருந்து புறப்படும் ; அது புத்திஞாயத்துக்கு ஒத்திருக்கும். அவனுடைய நாக்கு இருதயத்துக்குப் பணிந்திருக்கும் ; பைத்தியகாரனுடைய இருதயம் நாக்குக்குக் கீழ்ப்படிந்திருக்கும்.

அர்ச். சிப்பிரியான் சொல்லுமாப்போலே, மட்டசனமும் மேரை மரியாதையுமுள்ளவன் முந்த முந்த வாயில் வைத்த சாப்பாட்



டை வெகுநேரம் மென்று அப்புறம் விழுங்குவான். அப்படியே புத்தியும் விவேகமுமுள்ளவன் வார்த்தையை இருதயத்தில் வைத்து வெகுநேரம் சீர்தூக்கிப் பாராமல் வாயை விட்டுப் புறப்படவிட மாட்டான். புத்தியும் யோசனையுமில்லாமல் சொன்ன வார்த்தையினாலே சண்டையும் சச்சரவுமுண்டாகிறது வழக்கம். வேறொரு அர்ச்சியசிஷ்டவர் சொன்னதுபோலே, செலவு பண்ண எவ்வளவு எச்சரிக்கையோடு மனுஷர் பணப்பையைத் திறப்பார்களோ, அவ்வளவு எச்சரிக்கையோடு நாமும் பேசுகிறதற்கு வாய் திறக்க வேண்டும். எவ்வளவு மெள்ளப் பணப்பையைத் திறப்பார்களென்று பார். யாதொருவனுக்குப் பணம் கொடுக்கவேணுமோ? எவ்வளவு கொடுக்க வேணுமென்று முந்த முந்த நன்றாய்க் கணக்கு பார்ப்பார்கள். அவ்வண்ணமே இவ்வளவு எச்சரிக்கையோடும் யோசனையோடும் பேச வாய் திறக்க வேண்டும். முந்த முந்தப் பேச வேணுமோவென்றும் அதின்பின் என்ன பேச வேணுமென்றும் யோசித்துப் பார். ஒருவன் வேறொருவனுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தைப் பார்க்க அதிகம் கொடாதிருக்கிறதுபோலே, நீயும் பேசவேண்டியதைப் பார்க்க அதிகம் பேசாதே. அர்ச்! பொனவெந்தூர் சொல்லுகிறதும் இதற்கு ஒத்திருக்கும்: பொருளாசைக்காரன் பணத்திலே பிசினியாயிருக்கிறதுபோலே, நாமும் வார்த்தையிலே பிசினியாயிருக்க வேணுமென்றார்.

அர்ச். பேர்நர்துஸ் இதைவிட அதிகமாய்ச் சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், வார்த்தை நாக்கை விட்டுப் புறப்படுமுன்னே, அதைப் புத்தியாகிற அரத்தைக் கொண்டு இரண்டு விசை இராவவேணுமென்றார். அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறதுமிதுவே. அர்ச். எபிரேமென்பவர் சொல்லிக் காட்டினபிரகாரம் ஆமோனென்னும் மடாதிபதி சொன்னதாவது: நீ பேசுமுன் என்ன சொல்ல வேணுமென்றும் என் அதைச் சொல்ல வேணுமென்றும் முந்த முந்தச் சர்வேசுரனிடத்தில் சொல்லிக் காட்டு. அதின்பின் நீ பேசவேணுமென்று சர்வேசுரன் சித்தமாயிருக்கிறதினாலே, அவர் சித்தத்தை நிறைவேற்றுகிறதற்காகப் பயமில்லாமல் பேசுவென்றார். நாம் நன்றாய்ப் பேசுகிறதற்கு அநுசரிக்கவேண்டிய பிரதான எச்சரிக்கை இதுதான். இதை மாத்திரம் நன்றாய் அநுசரித்தால், மற்றதெல்லாத்தையும் எளிதாய் அநுசரிக்கலாம்.

நாம் அநுசரிக்கவேண்டிய இரண்டாம் எச்சரிக்கையேதென்றால்,






ஏன் பேசவேணுமென்று யோசிக்கவேணும். நாம் சொல்லுகிறது நல்லதாயிருக்கிறது பற்ருது ; அதை நல்ல கருத்தோடு சொல்ல வேண்டும். சிலவிசை மனுஷர் பத்திக்குரிய பேச்சுப் பேசுவார்கள் ; ஆனுல் தங்களைப் பத்தியுள்ளவர்களென்றும் கெட்டிக்காரரென்றும் மற்றவர்கள் எண்ணும்படியாய்ப் பேசுகிறதுண்டு. இது கள்ள ஞானமும் வீண்மகிமையும் பைத்தியமுமென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார்.

மூன்ருவது, பேசுகிறவன் தான் ஆரென்றும் ஆரோடு பேசுகிறேனென்றும் ஆர் முன்பாகப் பேசுகிறேனென்றும் யோசிக்க வேணுமென்று அர்ச். பசிலியார் சொல்லியிருக்கிருர். அதின்பின் வாலிபரும் குருக்களாயிராதவர்களும் விருத்தாப்பியரோடும் குருக்களோடும் பேசுகிற விதம் இன்னதென்று காட்டுவதற்காக வெகு பிரயோசனமான பல புத்திமதி சொல்லியிருக்கிருர். இதை ஒப்பிப்பதற்காக அவர் வேதாகமத்திலிருந்து எடுத்துக் காட்டின பல வாக்கியங்களுக்குள்ளே ஞானியானவர் சொன்ன வாக்கியமாவது : குருக்களும் பெரியோரும் கூடின சங்கத்தில் வெகு பேச்சுப் பேசாதே யென்ருர். அர்ச். பெர்நர்துஸ் சொன்னதுபோலே, வாலிபர் பெரிய மனுஷருக்கு முன்பாகப் பேசாதிருக்கிறது பெரிய மனுஷருக்குச் சங்கையாகும். மவுனம் பயத்துக்கும் மரியாதைக்கும் அடையாளமாயிருக்கிறதினுலே, யாதொருவருக்கு முன் மவுனங் காக்கிறவன் அவருக்கு வெகு கீழ்ப்படிதலையும் மேரை மரியாதையையும் காட்டுகிருன். அர்ச். பொனவெந்தூர் இன்னம் இதைத் தெளிவாய் விளக்கிக் காட்டிச் சொல்லுகிறதாவது : தேவ பயம் நம்மிடத்தில் உள்ளடக்கத்தை உண்டாக்கி நம்மைச் சர்வேசுரனுக்கு உகந்தவர்களாக்குகிறதுபோலே, பெரியோருக்கு நாம் செய்யவேண்டிய சங்கை நம்மை மேரை மரியாதையுள்ளவர்களாக்கி அவர்கள் சமுகத்தில் மவுனத்தோடும் அடக்க ஒடுக்கத்தோடும் இருக்கச்செய்யுமென்ருர்.

அர்ச். அம்புரோசியார் சொல்லுமாப்போலே, எப்போது பேசவேணுமென்று யோசிக்கிறது நாலாம் எச்சரிக்கையாகும். தகுந்த நேரத்தில் பேசுகிறது புத்தியுள்ளவனுக்கடுத்த குணமாமே. இதினுலல்லோ புத்தியுள்ளவன் தகுந்த நேரம் வருமட்டும் பேச மாட்டான் ; ஆனுல் புத்தியில்லாதவனும் துருதுருத்தவனும் தகுந்த நேரத்தைப் பார்க்க மாட்டார்களென்று ஞானியானவர் வசனித்தார். தகுந்த சமயம் பார்த்துப் பேசுகிறவர்களைக் குறித்து இஸ்பிரீத்துசாந்து வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதாவது : தகுந்த நேரத்தில் சொன்ன வார்த்

தை வெள்ளிக் கட்டியின்மேலே இருக்கிற தங்கப்பழத்துக்கு ஒப்பாகுமென்றார். தகுந்த நேரத்தில் சொல்லாத வார்த்தை வீணாகும்; தகாத நேரத்தில் எவ்வளவு நல்ல காரியம் சொன்னாலும், அது அருவருப்புக்குரியதாமே. பைத்தியகாரனுடைய வாயிலிருந்து புறப்படுகிற வார்த்தை தள்ளுபடியாகும்; ஏனென்றால் அவன் தகுந்த நேரத்தில் அதைச் சொல்லுகிறதில்லையென்று ஞானியானவர் வசனித்தார். அன்றியும் மற்றவர்கள் பேசும்போது, குறுக்கே பேசப்படாது; ஏனென்றால் இது மரியாதைக்கும் தாழ்ச்சிக்கும் அடாத காரியமாமே; வேறொருவர் பேசும்போது, ஊடே பேசுகிறவன் தகுந்த நேரத்தில் பேசுகிறவனல்ல. இதினாலல்லோ பேச்சு நடுவிலே பேசத் துணியாதேயென்று ஞானியானவர் சொல்லியிருக்கிறார். ஒருவன் சொல்லுகிறதைச் சொல்லி முடிக்குமட்டும் காத்திருந்து அப்புறம் பேசு. ஞானியானவர் இன்னம் இது காரியத்தில் சொல்லுகிறதாவது: உன்னிடத்தில் சொல்லுகிறதைக் கேட்டுக்கொண்டபின் மறுமொழி சொல்லு; கேட்கிறதுக்குமுன் மறுமொழி சொல்லுகிறவன் தான் பைத்தியகாரனென்றும் இகழ்ச்சிக்குரியவனென்றும் காட்டுகிறானென்று சலோமோன் சொல்லியிருக்கிறார். இன்னின்ன காரியத்தைச் சொல்லப் போகிறார்களென்று ஒருவன் தப்பிதமாய் நினைத்துத் தகாத மறுமொழி சொல்லுவான். ஆகிலும் அவர்கள் சொல்ல நினைத்தது அதுவல்ல; ஆகையால் அவனுடைய துருதுருத்ததனத்தினாலே தன் பைத்தியத்தைக் காண்பித்தான். மறுமொழி சொல்லவேண்டிய விதத்தைக் குறித்து அர்ச். பசிலியார் இன்னொரு புத்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், யாராகிலும் யாதொருவரிடத்தில் ஒரு கேள்வி கேட்கும்போது, நீ மவுனமாயிரு; நீ மற்றவர்களோடுகூட இருக்கும் தருணத்தில் யாதொரு காரியத்தின்பேரில் அங்கேயிருக்கிறவர்கள் எல்லாருடைய எண்ணம் என்னவென்று பொதுவிலே கேட்டு உன்னைக் குறித்து விசேஷித்துக் கேளாவிட்டால், எல்லார் பேராலேயும் நீ மறுமொழி சொல்ல எற்படாதே. இப்படி எல்லாருக்கும் முதலாளியாக நீ ஏற்படுகிறது தாழ்ச்சிக்கடாத காரியம்; உன்னுடைய எண்ணம் என்னவென்று உன்னை விசேஷித்துக் கேட்கிறவரைக்கும் பேசாமலிரு; இதுவே நீ செய்ய வேண்டிய உத்தம காரியம்.

நன்றாய்ப் பேசுவதற்கு அர்ச்சியசிஷ்டவர்கள் குறித்திருக்கிற ஐந்தாம் எச்சரிக்கை யேதென்றால், பேசும்போது சாடையும் சத்தமும்

மேரை மரியாதைக்கு அடுத்ததாயிருக்க வேண்டும். நமது ஒழுங்கில் கற்பித்திருக்கிறது மிதுவே. அதென்னவென்றால், சங்கியாசிகளுக்குத் தகுந்த விதமாய்த் தாழ்ந்த சத்தத்தோடும் அடக்க ஒடுக்கத்தோடும் பேச வேணுமென்று கற்பித்திருக்கின்றது. இந்த எச்சரிக்கை மவுனத்துக்கடுத்த பிரதான ஒழுங்குகளில் ஒன்றாகும். இயேசுநாதர் மரித்த லாசரை உயிர்த்தெழுப்பப் போகும்போது, மார்த்தம்மாள் அவருக்கு முன்கொண்டுவந்தாள் ; அதின்பின் தன் சகோதரியிடத்தில் திரும்பிப்போய்ச் சுவாமி வந்திருக்கிறார், உன்னைக் கூப்பிடுகிறாரென்று மவுனமாய்த் தன் தங்கச்சியாகிய மரியம்மாளைக் கூப்பிட்டாளென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது :- சுவாமி வந்திருக்கிறார், உன்னைக் கூப்பிடுகிறாரென்று அவள் சொல்லியிருக்க, மவுனமாய்ப் பேசினாளென்று எப்படிச் சொல்லலாம்? மவுனமாய்ப் பேசுகிறது எப்படியென்று அறியவேணுமோ? கேள் : தாழ்ந்த சத்தமாய்ப் பேசுகிறதுதான் மவுனமாய்ப் பேசுகிறதென்றார். இவ்வண்ணமே சந்நியாசிகள் தங்கள் அலுவல் செய்யும்போது, ஒருவரோடொருவர் தாழ்ந்த சத்தமாய்ப் பேசினால், மடத்திலே மவுனத்தைச் சரியாய் அநுசரிக்கிறார்களென்று சொல்லுவோம்; ஆனால் எவ்வளவு அவசரமான காரியத்தையாகிலும் பெலக்கப் பேசுகிறவர்கள் மவுனத்துக்கு விரோதமான குற்றம் கட்டிக்கொள்ளுகிறார்கள். ஆகையால் மடத்திலுள்ள சகல இடங்களிலும் மவுனத்தை அநுசரித்து மடம் சந்நியாசிகள் வீடென்றும் நாம் மெய்யான சந்நியாசிகளென்றும் தோன்றும் பொருட்டுத் தாழ்ந்த சத்தமாய்ப் பேசுகிறது அவசரமாமே. சந்நியாசி பெலக்கப் பேசுகிறது பெரிய குற்றமென்று அர்ச். பொனவெந்தூர் சொல்லியிருக்கிறார். உன் கிட்ட இருக்கிறவர்கள் கேட்கும்படியாய்ப் பேசுகிறது போதும் ; தூரத்திலிருக்கிறவனுக்கு யாதொரு காரியம் சொல்லவேணுமானால், அவன் கிட்டப்போய்ச் சொல்லு; தூரத்திலிருந்து பேசுகிறதும் தலை தெறிக்கக் கத்துகிறதும் சந்நியாச ஒழுக்கத்துக்கு அடாத காரியம். இராத்திரியிலும் ஒடுக்க சமயத்திலும் ஒருத்தருக்கும் வருத்தமும் கலக்கமும் உண்டாகாதபடிக்கு வழக்கமாய்ப் பேசுகிறதைவிட இன்னம் தாழ்ந்த சத்தமாய்ப் பேச வேணுமென்று மேற்சொன்ன அர்ச். பொனவெந்தூர் அருளிச்செய்தார். கோவில் சாமானறை சாப்பாட்டறை கோவில் முதலிய வேறே சில இடங்களில் வெகு தாழ்ந்த சத்தமாய்ப் பேசவேண்டியது.



இன்னம் அர்ச். பொனவெந்துர் சொல்லுமாப்போலே, வாயைச் சுருக்கி அல்லது அகட்டிப் பேசாமலும் கண் சாடை சைக்கினை காட்டாமலும் மூக்கையும் உதட்டையும் சுழிக்காமலும் தலையையும் கையையும் ஆட்டிச் சேஷ்டைபண்ணமலும் மலர்ந்த முகத்தோடே பேச வேண்டும். அர்ச். இஞ்ஞாசியார் நமக்குக் கொடுத்தருளிய அடக்க ஒடுக்கத்துக்கடுத்த ஒழுங்குகளில் அவர் சொல்லியிருக்கிறதுமிதுவே. சோர்ந்த சத்தத்தோடு விட்டுவிட்டுப் பேசவும் படாது ; ஒய்யாரமாய்ப் பேசாமலும் பெண்டுகளுக்குரிய மெதுவான சத்தமாய்ப் பேசாமலும் ஆண்பிள்ளைகளுக்குரிய ஆண்மைபான சத்தத்தோடு பேச வேணுமென்று அர்ச். அம்புரோசியாரும் அர்ச். பெர்நர்துசும் அருளிச்செய்தார்கள். ஆகிலும் ஒய்யாரமாயும் சோர்ந்த சத்தத்தோடும் பேச வேண்டாமென்று நாம் சொன்னலும், இதினலே முரட்டுத்தனமாய்க் கண்டிப்பாய்ப் பேசவேணுமென்று நாம் சொல்லுகிறதில்லை. இதினலல்லோ முகச்சாயலிலும் சத்தத்திலும் பெண்டுகள்போலே மெதுவாய்ப் பேசப்படாதென்று நாம் சொன்னலும், முரட்டுத்தனமாய்ப் பேச வேணுமென்று நாம்சொல்லுகிறதில்லையென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். சந்நியாசி பேசுகிறவிதம் மேனா மரியாதையும் மதுரமுமாயிருக்க வேண்டும். இந்த எச்சரிக்கையை நாம் எப்போதும் அநுசரிக்கிறது அவசரமாயிருந்தாலும், யாதொருத்தருக்குக் கடிந்து புத்திசொல்லும்போது, விசேஷ எச்சரிக்கையாயிருக்க வேண்டும் ; ஏனென்றல் மதுரகுணத்தோடு புத்தி சொல்லாவிட்டால், அதினலே யாதொரு பிரயோசனமும் வர அறியாது. அர்ச். பொனவெந்துர் சொல்லுமாப்போலே, யாதொருவன் கோபத்தோடும் எரிச்சலோடும் வேறொருவனுக்குக் கடிந்து புத்தி சொன்னல், பிற சினேகத்தினலேயும் அவனுக்குப் பிரயோசனம் உண்டாக வேணுமென்கிற ஆசையினலேயும் இந்தப் புத்தி சொல்லாமல் பொருமையினலேயும் அவனைக் கஸ்திப்படுத்துவதற்காகவும் சொல்லுகிருனென்று மனுஷர் நினைக்கிறது வழக்கம். துர்க்குணத்தைக் கொண்டு புண்ணியத்தைப் போதிக்க முடியாது ; பொருமையினலே பொறுமையும் ஆங்காரத்தினலே தாழ்ச்சியும் வரவறியாது. வேறே எந்தவிதமாயும் நீ புத்தி சொல்லுகிறதைவிடப் பொறுமையோடும் தாழ்ச்சியோடும் சொன்னல், அதினலே அவனுக்கு நல்ல மனசு வந்து அதிக பிரயோசனப்படுவான். ஆகையால் நாம் செய்கிற கண்டிப்பிலும் புத்திமதியிலும் முரட்டுத்தனமும் கஸ்திக்குரிய வார்த்தைகளும் இருக்கப் படாதென்று அர்ச். அம்புரோசியார் வசனித்தார்.





இதை ஒப்பிப்பதற்காக அர்ச். சின்னப்பருடைய வாக்கியத்தை எடுத்துக் காட்டியிருக்கிறார். அதென்னவென்றால், கிழவர்களைக் கடிந்துகொள்ளாமல் உன் தகப்பனைப்போலே மெதுவாய்ப் புத்தி சொல்லு, உன் சகோதரரைப்போலே வாலிபர்களுக்கும் உன் தாயைப்போலே வயதுசென்ற பெண்டுகளுக்கும் உன் தங்கச்சியைப்போலே இளம்பெண்களுக்கும் புத்தி சொல்லென்றார்.

கெட்டிக்காரரென்றும் வாசாலகரென்றும் காட்டுவதற்காக ஒய்யாரமாய்ப் பேசுகிறது மகா கெடுதலுக்குரிய காரியம். நேற்றியான வார்த்தைகளையும் வாக்கியங்களையும் தேடி இதுகளை விசேஷமாய்ப் பிரசங்கங்களில் சொல்லுகிற பிரசங்கிகளுடைய நடக்கை மிகவும் தகாததென்பதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் சிறந்த வாக்கியங்களை அவர்கள் வெகுவாய்த் தேடுகிறதினாலே, போதிக்கவேண்டிய நற்புத்திமதிகளை விட்டுவிடுவார்கள். அவர்கள் சொல்லுகிறதிலே தேவ வார்த்தைக்குரிய பத்தி உருக்கம் இருக்க மாட்டாது ; ஆகையால் அவர்களுடைய பிரசங்கத்தினாலே வரவேண்டிய பிரயோசனம் வராமற்போகும். நல்ல தண்ணீருக்கு உருசி ஒன்றுமிருக்கப் படாது; அதுபோலே நல்ல பேச்சுக்கும் உருசி ஒன்றுமில்லாதிருக்க வேண்டும்.

கடைசியாய் நன்றாய்ப் பேசுகிறதற்கு வெகு எச்சரிக்கை அவசரமாயிருப்பதினாலே, பேசும்போது அதில் யாதொரு எச்சரிக்கையை விட்டுவிடுகிறது எளிதாயிருக்கும். ஆகையால் கப்பல் துறைமுகத்தில் ஒதுங்கியிருக்கிறதுபோலே, நாமும் மவுனத்தில் ஒதுங்கியிருப்பதே குற்றத்தில் விழாதபடிக்கு உத்தம பரிகாரமாகும். பேசுகிறதினாலே வருகிற சகல பொல்லாப்பு ஆபத்துக்களும் பேசாதிருந்தால் விலகிப்போகுமென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலல்லோ வாயையும் நாக்கையும் காக்கிறவன் தன் ஆத்துமத்துக்கு அநேகம் உபத்திரவம் வராதபடிக்குக் காப்பானென்று ஞானியானவர் வசனித்தார். எங்கெங்கேயிருந்தாலும், மவுனங் காத்தால் எப்போதும் மன அமரிக்கையாயிருக்கலாமென்று பூர்வீக வனவாசி ஒருவர் சொல்லிக்கொண்டுவருவார். மற்றவர்களோடு கொஞ்சம் மாத்திரம் பேசித் தன் மனதுக்குள் ஒதுங்கித் தன்னோடு வெகுவாய்ப் பேசுகிறதைவிட உத்தமமான காரியம் ஒன்றுமில்லையென்று அஞ்ஞான சாஸ்திரியான செனேக்காவென்பவன் முதலாய்ச் சொல்லியிருக்கிறான். இது காரியத்தில் அர்ச். அர்சேனியா



ர் சொன்னது மிகவும் பேர்போன வாக்கியமாமே. அவர் சரித்திரத்தில் சொல்லியிருக்குமாப்போலே, இவ்வாக்கியத்தை அவர் பலமுறை படித்துப்படித்துச் சொல்லிச் சில சமயங்களிலே பாடிக்கொண்டு வருவார். அதாவது, பேசினதினுலே நான் அநந்தமுறை கஸ்திப்பட்டேன் ; பேசாதிருந்ததினுலே ஒருகாலும் கஸ்திப்படவில்லையென்றுர். சோக்கிராத்தேசென்பவனும் இவ்வாக்கியத்தைச் சொல்லிக்கொண்டு வருவான். இதற்கு முகாந்தரம் என்னவென்று காட்டுவதற்காகச் செனேக்காவென்பவன் சொல்லுகிறதாவது : ஒரு சமயத்திலே சொல்லாத காரியத்தை மறு சமயத்திலே சொல்லலாம் ; ஆனுல் ஒரு விசை சொன்னதைச் சொல்லாதபடிக்கு நிறுத்த முடியாது. ஒரு விசை வாயைவிட்டுத் தப்பிப்போன வார்த்தை ஒருகாலும் திரும்பி வராதென்றுன். அர்ச். எரோணிமுஸ் சொல்லுமாப்போலே, வாயைவிட்டுப் புறப்பட்ட வார்த்தை கையைவிட்டு எறிந்த கல்லுப்போலாகும் ; அதினுலே பொல்லாப்பு வராதபடிக்கு அதை நிறுத்தவும் விக்கினம் பண்ணவுமுடியாது. ஆகையால் பேசுகிறதற்கு முன்னமே வெகு நேரம் நினைப்பது அவசரமென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார் ; ஏனென்றுல் பேசினபின், நினைப்பதற்கு நேரமில்லை. நாம் துவக்கத்திலே சொல்லிக் காட்டின முதல் எச்சரிக்கை இதுவே.

ஆகையால் நாக்குக்கு நல்ல காவல் வைப்போமென்று ஸ்திரமான பிரதிக்கினை பண்ணி என் நாக்கினுல் இடறிக் குற்றத்தில் விழாதபடிக்கு நான் நடக்கிற பாதையிலே காவல் வைக்கப் பிரதிக்கினை செய்வேனென்று தாவீதென்னும் தீர்க்கதரிசியோடு சொல்லக் கடவோம். அர்ச். அம்புரோசியார் இவ்வாக்கியத்தின்பேரில் சொல்லுகிறதாவது : நாம் நடக்கவேண்டிய பாதையுமுண்டு, விலக்கவேண்டிய பாதையுமுண்டு. நாம் தவறிக் கெட்டுப்போகாதபடிக்கு நடக்கிற பாதையிலே காவல் வைக்கவேண்டும் ; மவுனம் காத்தால், இந்தக் காவல் வைத்தாற்போலாகுமென்றுர். திருச்சபை சரித்திரத்தில் சொல்லியிருக்கிற ஓர் வர்த்தமானமாவது : அர்ச். பம்போனியார் வனாந்தரத்தில் ஒதுங்கியிருக்கையில் தமக்கு ஞானத்தில் ஒன்றும் தெரியவில்லையென்று கண்டு அந்த வனாந்தரத்திலிருந்த விருத்தாப்பியரான ஓர் வனவாசியிடத்தில் போய், எனக்கு ஞானத்தைக் கற்றுக்கொடுக்க வேணுமென்று கேட்டுக்கொண்டார். அவர் சொன்னதை அந்த விருத்தாப்பியர் வெகு பிறசினேகத்தோடு கேட்டு முந்த முந்த அவர் போதித்த முதல் போதகமா





வது : என் நாக்கினாலே இடறிக் குற்றத்தில் விழாதபடிக்கு நான் நடக்கிற பாதையிலே காவல் வைப்பேனென்று பிரதிக்கினை செய்தேனென்றார். என்றவுடனே அர்ச். பம்போனியார் அவரை நிறுத்தி வேறே போதகம் ஒன்றும் வேண்டாம் ; இந்தப் போதகத்தை நான் நன்றாய் அநுசரித்தாலே போதுமென்றார். ஆறு மாதத்துக்குப் பின் அர்ச். பம்போனியார் அந்த விருத்தாப்பியருக்கு எதிர்ப்பட்டபோது, வேறே போதகம் கேட்பதற்கு ஏன் திரும்பி வரவில்லையென்று கேட்டார். அதுக்கு அர்ச். பம்போனியார் சொன்னதாவது : சுவாமீ, நீர் சொன்ன முதல் போதகத்தை நான் இன்னும் நன்றாய் அநுசரிக்கவில்லையே யென்றார். அநேக வருஷம் கடந்தபின், அந்தப் போதகத்தை அநுசரித்தீரோவென்று யாதொருவன் கேட்டதற்கு அவர் சொன்னதாவது : அதைக் கேட்டு நாற்பத்தைந்து வருஷமாயிற்று ; அதை இன்னம் நான் சரியாய் அநுசரிக்கவில்லை யென்றார். அவர் இதை நன்றாய் அநுசரித்திருந்தாலும், தாழ்ச்சியினாலே இப்படிச் சொன்னாரென்று அறியவும் ; ஏனென்றால் பல்லாதியார் சொல்லுமாப்போலே, அவர் இந்தப் போதகத்தை நன்றாய்க் கண்டுபிடித்துச் சரியாய் அநுசரித்துக்கொண்டு வந்ததினாலே பேசுமுன்னேயாகிலும் மற்றவர்கள் கேட்டதற்கு மறுமொழி சொல்லுமுன்னேயென்கிலும் தமது இருதயத்தை எப்போதும் சர்வேசுரனிடத்திலே எழுப்பி என்ன சொல்லவேணுமென்று சர்வேசுரனிடத்தில் கேட்பார். இதினிமித்தமாக தேவ வரப்பிரசாதம் அவர்பேரில் திரளாய்ப் பொழிந்தது. ஆகையால் நான் ஒரு வார்த்தை சொன்னதினாலே ஒருகாலும் கஸ்திப்படவில்லையென்று அவர் சாகுந் தருணத்தில் சொன்னார். ஓர் அர்ச்சியசிஷ்டவள் சிலுவை உயர்த்தப்பட்ட திருநாள் துவக்கிக் கர்த்தர் பிறந்த திருநாள்வரைக்கும் ஒருகாலும் ஒரு வார்த்தையும் சொல்லாமல் மவுனங் காத்தாள். இந்த ஒறுத்தல் சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமாயிருந்ததினாலே, அவள் செத்தபின் உத்தரிக்கிற ஸ்தலத்துக்குப் போக மாட்டாளென்று சர்வேசுரன் காட்சியில் அவளுக்கு அறிவித்தார்.





# கூ-ம் அதிகாரம்.

———(o)———

## புறணியின்பேரில்.

——:(o):——

சகோதரரே, ஒருவர் ஒருவர்பேரிலே புறணி பேசாதேயுங்களென்று அப்போஸ்தலரான அர்ச். யாகப்பர் திருவுளம்பற்றினார். புறணி சொல்லுகிறவர்களைச் சர்வேசுரன் பகைக்கிறாரென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். அவர்கள் மனுஷருக்கு அருவருப்பாயிருக்கிறார்களென்று ஞானியானவர் வசனித்தார். ஒருவன் புறணிபேசுகிறதைக் கேட்கிறது மற்றவர்களுக்குப் பிரியம்போலே தோன்றினாலும், மனசுக்குள்ளே அவனை அருவருத்து விலக்கி நடப்பார்கள்; ஏனென்றால் அவன் தங்களுக்கு முன்னே புறத்தியார்பேரில் புறணிபேசுகிறதுபோலே, புறத்தியாருக்கு முன்னே தங்கள் பேரிலேயும் புறணி பேசுவானென்று நினைப்பார்கள். இது ஞாயந்தானே. புறணியின்பேரில் நமக்கு அருவருப்புண்டாகிறதற்கு இதுவே போதும்; ஏனென்றால் சர்வேசுரனுக்கும் மனுஷருக்கும் அருவருப்பாயிருக்கிறதைவிடக் கேடான காரியம் எங்கேயாகிலுமுண்டோ? ஆகிலும் இப்போது இதைவிட்டு இது எவ்வளவு மோசத்துக்குரிய கனத்த துர்க்குணமென்றும் இதினாலே சாவான பாவம் கட்டிக்கொள்ளுகிறது எவ்வளவு எளிதாயிருக்குமென்றும் சொல்லிக் காட்டுவோம். நாம் ஒருகாலும் இவ்வளவு பெரிய ஆபத்துக்குள்ளாகாதபடிக்கு இது மிகவும் உதவியாயிருக்கும். பிறருடைய கீர்த்தியை மங்கடித்துக் கெடுப்பதே புறணியினால் வரும் தோஷமாகும். கீர்த்தி உலோகத்திலுள்ள சகல ஐசுவரியங்களுக்கும் மேற்பட்டதென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலல்லோ கீர்த்தி சகல ஆஸ்திகளுக்கும் மேற்பட்டது. கீர்த்தியை அடையப் பிரயாசப்படு; ஏனென்றால் அது விலைபெற்ற ஆயிரம் ஆஸ்தியைவிட அதிக காலம் நிலைத்திருக்குமென்று ஞானியானவர் வசனித்திருக்கிறார். ஆகையால் கீர்த்தி சகல ஐசுவரியத்துக்கும் மேற்பட்டதாயிருக்கிறதினாலே, புறணியாகிற பாவம் களவைப் பார்க்கக் கனமான தோஷமென்று வேதபாரகர் தீர்மானித்தார்கள். அதின்பின் எச்சமயத்திலே புறணி சாவான பாவமென்றும் எச்சமயத்திலே அற்பப் பாவமென்றும் தீர்மானித்து புறணி தானாய்ச் சாவான பாவமென்று சொல்லியிருக்கிறார்கள். இவ்






வண்ணமே களவு தானுய்ச் சாவான பாவமானுலும், ஒரு பழம் முதலிய வெகு சொற்பப் பொருளைக் களவாண்டால், இது அற்பப் பாவமாயிருக்கும். அதுபோலே புறணியும் தன்னுலே சாவான பாவந்தான்; ஆகிலும் அது வெகு சொற்பப் புறணியாயிருந்தால், அற்பப் பாவமாயிருக்குமென்ருர்கள்.

ஆனுல் இது காரியத்திலே அவர்கள் ஒரு விவரம் சொல்லியிருக்கிருர்கள்; இதினுலே அற்பப் புறணியும் எவ்வளவு ஆபத்துக்குரியதென்றும் சொற்பமென்று நமக்குத் தோன்றுகிற புறணியையும் எவ்வளவு எச்சரிக்கையோடு விலக்கி நடக்க வேணுமென்றும் அறிந்துகொள்ளலாம். அவர்கள் சொல்லுகிறது என்னவென்ருல், அற்பப் புறணியாகத் தோன்றுகிறது அநேகம்விசை அற்பப் பொல்லாப்பல்ல. ஏனென்ருல் உலகவாசி ஒருவனைக் குறித்து அவன் பொய் சொன்ஞனென்று இது முதலிய அற்பப் பாவத்துக்கடுத்ததை அவன்பேரில் சொன்ஞல், இது சாவான பாவமில்லையென்பது மெய்தான்; ஆகிலும் ஓர் சந்நியாசிபேரில் இந்தக் காரியத்தையாகிலும் வேறே யாதொரு அற்பப் பாவத்தை யென்கிலும் அற்பக் குற்றங் குறையையாகிலும் சொன்ஞல், இது சாவான பாவமாயிருக்கலாம்; ஏனென்ருல் உலோகவாசி ஓர் சாவான பாவம் கட்டிக்கொண்டானென்று சொல்லுகிறதினுலே அவன் கீர்த்தி கெடுகிறதைவிட ஓர் சந்நியாசி அற்பப் பாவம் அல்லது அற்பக் குற்றம் கட்டிக்கொண்டாரென்று சொன்ஞல், இதினுலே இவருடைய கீர்த்தி அதிகமாய்க் கெட்டுப்போகலாமென்று வேத சாஸ்திரிகள் தீர்மானித்தார்கள். வெகு ஒழுங்காய் நடக்காத சமுசாரவாசி தபசுகாலத்திலே ஒரு சந்தி பிடிக்கிறதில்லையென்றும் இராமுழுதும் தெருவிலே ஒடித் திரிகிருனென்றும் சொன்ஞல், இவன் கீர்த்தி கெடுகிறதைவிட ஓர் சந்நியாசி பொய்யனென்று சொல்லுகிறதினுலே இவர் கீர்த்தி மனுஷருக்கு முன்பாக அதிகமாய்க் கெட்டுப்போகுமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால் சொல்லுகிற புறணியைக் கொண்டு இது சாவான பாவமோ இல்லையோவென்று திர்மானிக்கப்படாது; நாம் புறணிபேசினவர்களுக்கு அதினுலே வருகிற அவகீர்த்தி எவ்வளவென்று பார்த்து அது சாவான பாவமோ இல்லையோவென்று தீர்மானிக்க வேண்டும்; இவ்விஷயத்தில் இதுவே அஸ்திவாரமான ஒழுங்கு. ஏனென்ருல் துலுக்க சாதியானுய் அல்லது யூதசாதியானுயிருக்கிறது பாவமல்லவென்பது நிச்சயம்; ஆகிலும் ஒருவனைத்துலுக்கன் அல்லது யூதனென்று மற்றவர்கள் நினைக்கும்படி செய்தால், இது சாவான

பாவமென்று வேதபாரகர் நிரூபித்திருக்கிறார்கள். இவ்வண்ணமே ஒரு சமுசாரவாசி சாவான பாவம் செய்தானென்று சொல்லுகிறதைவிட இன்ன சந்நியாசி துடிதுடித்தவன் புத்தியில்லாதவனென்று சொன்னால், இதினாலே இந்தச் சந்நியாசியின் கீர்த்திக்கு அதிக கேடு வருமென்பது நிச்சயம். இன்ன சந்நியாசியை நான் கனமாய் எண்ணியிருந்தேன்; அவர் புத்தியும் விவேகமுமுள்ளவரென்று நினைத்திருந்தேன்; ஆனால் நீ அவர் இப்படிப்பட்டவர் அப்படிப்பட்டவரென்று சொல்லி அவரிடத்திலே நிலையுள்ள குணம் கிடையாதென்று நான் நினைக்கும்படி செய்தாய்; இதினாலே அவருடைய கீர்த்திக்கு வெகு கேடு வருவித்தாய்; நான் முன்னமே அவர்பேரில் கொண்டிருந்த மேலான எண்ணம் வெகுவாய்க் குறைந்துபோயிற்று. ஓர் சந்நியாசி தாம் போயிருந்த ஒரு மடத்திலிருந்து திரும்பிவருகிறாரென்று வைத்துக்கொள்ளுவோம். அங்கே ஏதாகிலும் அற்பத் துர்மாதிரிகைக்குரிய காரியத்தைக் கண்டிருந்தால், திரும்பி வந்தபின் முந்தமுந்த அந்தக் காரியத்தைச் சொல்லத் துவக்குவார். இன்ன சந்நியாசி வீண்மகிமைக்காரன், இன்னசந்நியாசி பிடிவாதக்காரன், இன்ன சந்நியாசி தொந்தரவுக்காரன் ஒருகாலும் சும்மா இருக்கமாட்டாரென்று இதுமுதலியதுகளைச் சொன்னால், இதுவெல்லாம் அற்பகாரியமென்று எண்ணாதே; இதினாலே சந்நியாசிகளுடைய கீர்த்திக்கு வெகு குறைச்சலுண்டாகும். ஒவ்வொருவனும் தன்னைப்போலே மற்றவர்களையும் நினைக்கட்டும். உன்பேரிலே இதுவெல்லாம் சொன்னதினாலே நீ இப்படிப்பட்டவன்தானென்று மற்றவர்கள் நினைத்திருந்தால், இது உனக்கு எவ்வளவோ கஸ்தியாயிருக்கும்! தன்னைப்போலே மற்றவர்களைச் சிநேகிக்க வேணுமென்பது பிற சிநேகத்துக்கடுத்த ஒழுங்கல்லோ? அன்றியும் நாம் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையத் தேடுகிறோமே. இதிப்படியிருக்க, நமது சகோதரர்பேரில் நாம் சொன்ன புறணியினாலே அவர்களுடைய கீர்த்திக்கு வெகுபொல்லாப்பு வந்ததோ, இது காரியத்திலே நாம் சாவான பாவத்தைக் கட்டிக்கொண்டோமோ இல்லையோவென்று கஸ்திப்பட்டுக் கலங்குகிறதற்கு இடம் வைத்துக்கொள்ளப் படாது. நமது குற்றத்தினாலே இவ்வளவு பயங்கரமான கஸ்திக்கும் கலக்கத்துக்கும் ஏன் உள்பட வேணும்? இது சாவான பாவமோ இல்லையோவென்று தீர்மானிக்கிறது அநந்தமுறைவருத்தமான காரியம். இப்படிச் சந்தேகத்தோடேயிருக்கிற சந்நியாசிக்கு இந்தச் சந்தேகம் மனசைவெகுவாய் உறுத்திக்கொண்டிருக்குமென்பதினாலே, என்னென்ன முகாந்தரத்தைப்பற்றியும் இவ்





வளவு கொடூரமான சந்தேகத்துக்குள்ளாகாதபடிக்கு எவ்வளவோ பிரயாசப்பட வேண்டும்? இது காரியத்திலே அற்பக்குற்றமும் கட்டிக்கொள்ளாமல் தன்னை ஒறுக்க வேண்டும்; இல்லாவிட்டால், பெரியபாவம் கட்டிக்கொண்டோமோ இல்லையோவென்று சந்தேகத்தின்மேல் சந்தேகமும் கலக்கத்தின்மேல் கலக்கமும் நம்மைப் பிடித்து உபாதிக்கும். விசேஷமாய்ப் புறணியின்மட்டில் இந்த எச்சரிக்கை அதிக அவசரம்; ஏனென்றால் புறணி பேசுகிறது நமக்குச் சுபாவமான காரியம்; இவ்விஷயத்தில் நமது நாக்கை அடக்குகிறது வருத்தம். புண்ணிய சாங்கோபாங்கத்தைத் தேடுகிறவர்களுக்கும் தேடாதவர்களுக்குமுள்ள வித்தியாசமேதென்றால், புண்ணிய சாங்கோபாங்கத்தைத் தேடுகிறவர்கள் அற்பக் குற்றத்தையும் கனமான குற்றமென்று எண்ணுவார்கள்; புண்ணிய சாங்கோபாங்கத்தைத் தேடாதவர்கள் கனமான குற்றத்தையும் அற்பக் குற்றமென்று நினைப்பார்கள். யாதொருவன் புண்ணியத்தில் வர்த்திக்க வேணுமென்று மனது வைத்து உழைக்கிறானோ இல்லையோவென்று அறிவதற்கு இதுவே பிரதான அடையாளமாகும்.

அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் சொல்லியிருக்குமாப்போலே, அவர் தமக்குக் கீழ்ப்பட்ட சந்நியாசிகளுடைய குற்றங்களை வெகு எச்சரிக்கையாய் மறைத்துக்கொண்டுவருவார்; ஏனென்றால் யாராகிலும் ஒரு குற்றஞ் செய்தால், அதைத் திருத்துவதற்குத் தகுந்தவர் ஒருவரிடத்தில் மாத்திரம் அதைச் சொல்லுவார்; குற்றம் செய்தவருடைய கீர்த்தியை அவர் எப்போதும் வெகு கவலையோடு காப்பாற்றிக்கொண்டு வந்ததினாலே, அதைத் திருத்துவதற்கு ஒருத்தரிடத்தில் மாத்திரம் சொல்லுகிறது போதுமானால், ஒருகாலும் இரண்டுபேரிடத்தில் சொல்லவே மாட்டார். நமது சகோதரர்பேரில் எப்படிப் பேச வேணுமென்று இதைக் கொண்டு அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால் சந்நியாசிகளுக்குப் பிரஸ்தாபமான கண்டனை தெண்டனை செய்வதற்கு அதிகாரமுள்ள அர்ச். இஞ்ஞாசியாரே சொற்பக் குற்றத்திலே முதலாய்ப் பிறருடைய கீர்த்தி கெடாதபடிக்கு இவ்வளவு எச்சரிக்கையாய் நடந்திருக்கையிலே, நாம் நமது சகோதரருடைய குற்றங்களை வெளிப்படுத்தாதபடிக்கு எவ்வளவு சாக்கிரதையாய் நடக்க வேண்டும்?

முகதாவில் இல்லாதவர்கள் பேரிலே பேசுகிறதற்கு அர்ச். பொனவெந்தூர் ஸ்தாபித்த ஒழுங்காவது: ஒருவனுக்கு முன்பாக அவன் பேரில் நீ சொல்லத் துணியாததை அவனில்லாத சமயத்தில் சொ



ல்லுகிறதற்கு வெட்கப்பட வேணுமென்றார். எந்தெந்தச் சமயத்திலும் நீ ஒருவருடைய கீர்த்தியையும் கெடுக்க மாட்டாயென்று எல்லாரும் அறிந்துகொள்ள வேண்டும். இது வெகு நேற்றியான ஒழுங்கென்பதற்குச் சந்தேகமில்லை. கனமான காரியங்களிலும் அற்பக் காரியங்களிலும் இந்த ஒழுங்கை அநுசரிக்க வேண்டியது. அற்பக் காரியங்களிலேதான் நாம் அடிக்கடி தப்பிப் போகிறோம் ; ஏனென்றால் அற்பமென்று நமக்குத் தோன்றுகிற காரியம் எப்போதும் அற்பக் காரியமல்ல. ஆகையால் இதைச் சொல்லுகிறதினாலே மோசமில்லை, மற்றவர்கள் இதைக் கவனிக்கமாட்டார்கள், இது எல்லாரும் அறிந்த காரியமென்று ஒருகாலும் நினைக்கவும் சொல்லவும்படாது ; ஏனென்றால் புண்ணிய சாங்கோபாங்கத்தில் வர்த்திக்கத் தேடுகிறவர்களுடைய வாயிலே இப்படிப்பட்ட போக்கு புறப்படவொண்ணாது. அர்ச். இஞ்ஞாசியார் தமது மாதிரிகையினாலே நமக்குப் போதித்த போதகமாவது : ஒருவன் செய்த குற்றம் எவ்வளவு பிரஸ்தாபமாயிருந்தாலும், அதைக் குறித்து ஒருகாலும் பேசமாட்டார். ஒவ்வொருவரும் இப்படி நடக்க வேணுமென்று அவர் சித்தமாயிருக்கிறார். இவ்வளவு பரிசுத்த நடக்கையை நாமும் கண்டுபாவிக்கக் கடவோம். சகலரும் நல்லவர்கள், புண்ணியவான்கள், கிரேஸ்தரென்கிற வார்த்தை மாத்திரம் நமது வாயிலிருந்து புறப்பட வேண்டும் ; நமது வாக்கினாலே ஒருவருடைய கீர்த்தியுங் குறைந்துபோக மாட்டாதென்று சகலரும் அறிந்துகொள்ளக் கடவார்கள்.

உன் சகோதரன் யாதொரு குற்றம் செய்தானென்று தற்செயலாய் உனக்குத் தெரியவந்தால், ஞானியானவர் சொன்னபிரகாரம் நீ நடக்க வேண்டும். அதாவது, பிறருக்கு விரோதமாய் நீ ஏதாகிலும் கேள்விப்பட்டால், அதை உன் மனசுக்குள்ளே புதைத்துவை ; அது உன் மூச்சை அடைக்கிக் கொல்ல மாட்டாதென்று நிச்சயித்துக்கொள்ளென்றார். நஞ்சு தின்றவர்களுக்கு வெகு மூச்சடைப்பும் கொடூரமான வயிற்று நோவுமுண்டாகும் ; நஞ்சை முழுதும் வாந்திபண்ணிவிட்டால் மாத்திரம், அந்த மூச்சடைப்பும் நோவும் தணியும். இவ்வண்ணமே பிறருடைய குற்றத்தைச் சிலர் அறிந்துகொண்ட மாத்திரத்தில், அதை வெளிப்படுத்துமட்டும் மூச்சடைபட்டுச் சாகிறவர்கள்போலேயிருப்பார்கள் ; அதை வெளிப்படுத்தினால், அவர்கள் நோவெல்லாம் தணிந்தாற்போலிருக்கும் ; இவர்களிடத்திலே பிறசிநேகமில்லையென்று இது அடையாளமாகும். இன்னம் இது காரியத்தை ஞானியா




ணவர் இரண்டு உவமையைக் கொண்டு விசேஷித்து விளக்கிக் காட்டியிருக்கிறார். அதெப்படியென்றால், பைத்தியகாரன் ஏதாகிலும் சொல்லவேணுமானால், பிரசவிக்கிற பெண்ணைப்போலிருப்பான்; பிரசவிக்கிறவளை விட்டுப் பிள்ளை வெளிப்படுகிறதுபோலே, இவன் தன் மனதிலுள்ளதை வெளிப்படுத்தாமல் போகமாட்டான். பைத்தியக்காரனுடைய இருதயத்திலுள்ள வார்த்தை மிருகத்தின் சரீரத்தில் பாய்ந்த அம்புபோலாகுமென்றார். மிருகத்தின் சரீரத்தில் அம்பு பாய்ந்துகொண்டிருந்தால், அதைச் சரீரத்திலிருந்து எடுக்குமட்டும் இடைவிடாமல் அங்குமிங்கும் ஓடி உரசிக்கொண்டு திரியும். இவ்வண்ணமே புறணிக்காரன் பிறருடைய குற்றத்தை அறிந்தமாத்திரத்தில், அதை வெளிப்படுத்துமட்டும் அது அவன் மனசை உறுத்திக்கொண்டேயிருக்கும். நாம் பைத்தியகாரர் கூட்டத்தில் சேராமல் புத்திசாலிகளாயிருக்கப் பிரயாசப்படக் கடவோம். புத்திசாலிகள் பிறருடைய எவ்வித குற்றங்களையும் தங்கள் இருதயத்தில் புதைத்துவைப்பார்கள்; அதை ஒருகாலும் வெளிப்படுத்த மாட்டார்கள்.

ஆத்தும நோயைக் குணப்படுத்துவதின்பேரில் ஆக்குவாவீவா வென்னும் சுவாமியார் எழுதித்தந்த புத்தகத்தின் பதினேழாம் அதிகாரத்தில் புறணியைக் குறித்து எழுதிவைத்திருக்கிறார். அவர் அதில் சொல்லியிருக்கிற பல உத்தமமான போதகங்களில் மிகவும் பிரயோசனமுள்ள ஓர் புத்தியாவது: யாதாமொருவன் புறணியென்னுங் குற்றத்தைக் கட்டிக்கொண்டிருந்தால், பாவசங்கீர்த்தனம் பண்ணாமல் படுக்கப் போகப்படாது. அது கனமான புறணியாயிருந்தால், அத்தோடு படுத்துக்கொள்ளுகிறது ஆபத்துக்குரிய காரியம்; ஏனென்றால் படுக்கையிலிருந்து கல்லறைக்குப் போவதுபோலே எண்ணிக்கொண்டு கிறீஸ்துவன் படுக்கப் போக வேண்டும். ஆனால் தான் சொன்ன புறணி அற்பமாயிருந்தபோதிலும், பாவசங்கீர்த்தனம் அதைத் தீர்ப்பதற்கும் இன்னொருவிசை அதைக் கட்டிக்கொள்ளாதபடிக்கும் ஆனபரிகாரமாகுமென்றார். இந்தப் புத்தியை நாம் இவ்விஷயத்தில் அநுசரிப்பதுமன்றி நாம் யாதோர் பாவத்தில் விழுந்தோமோ இல்லையோவென்று யாதொரு சந்தேகமும் மன வருத்தமும் உண்டாகிற சகல சமயங்களிலும் இதை அநுசரிக்கிறது மிகவும் பிரயோசனமாயிருக்கும். நமக்கு அதிசிரேஷ்டராயிருந்த இந்த மகாத்துமா இந்தப் புத்தியைச் சொல்லியிருக்கிறதினாலே, நாம் இதை அநுசரிப்பதற்கு இதுவே போதும்.

———






# ௰-ம் அதிகாரம்.

## புறணிக்குக் காது கொடுக்கப் படாதென்பதின் பேரில்.

பிறசினேகத்துக்கும் மரியாதைக்கும் விரோதமானதொன்றும் சொல்லாதிருப்பதுமன்றிப் புறணிப் பேச்சுக்குக் காதுகொடுக்கவும்படாது; ஏனென்றால் புறணிப் பேச்சைக் கேட்கிறது நமக்குப் பிரியமென்று காட்டினால், அதைப் பேச மற்றவர்களுக்குத் துணிவுண்டாகும். நாம் சொல்லுகிறதற்கு வெட்கப்படுகிறதைக் காதுகொடுத்துக் கேட்கிறது வெட்கத்துக்குரிய காரியமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். புறணிபேசுகிற சந்நியாசிக்கும் புறணிப் பேச்சைக் கேட்கிற சந்நியாசிக்கும் இடவேண்டிய ஆக்கினையைக் குறித்து அர்ச். பசிலியார் சொல்லுகிறதாவது: இவ்விருவரையும் மற்றவர்களை விட்டுப் பிரித்து வைக்கவேண்டும்; இவ்விருவருக்கும் சரியான தெண்டனையிட வேண்டும்; ஏனென்றால் ஒருவன் புறணிப் பேச்சைப் பிரியமாய்க் கேளாவிட்டால், வேறொருவன் அதைப் பிரியமாய்ச் சொல்லியிருக்க மாட்டான்; ஒருவன் சொல்லுகிறதை மற்றவர்கள் சந்தோஷமாய்க் கேளாவிட்டால், அதை அவன் சொல்ல மாட்டானென்றார்.

வேத சாஸ்திரிகள் புறணியைக் குறித்து ஒரு சத்தியத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அதாவது, புறணிப் பேச்சுக் காதிலே விழுந்தாலும், அது சரியல்லவென்று சொல்லித் தள்ளாதவன் சாவான பாவம் கட்டிக்கொள்ளுவானோ இல்லையோவென்று தீர்மானிப்பதற்காக மேற்சொன்ன வேத சாஸ்திரிகள் சொல்லுகிறதாவது: அநேக சமயங்களில் அது இவனுக்குச் சாவான பாவமாயிருக்கும். இவ்வண்ணமே ஒருவன் புறணி பேசுகிறதற்கு நீ காரணமாயிருந்தால், அல்லது புறணிப் பேச்சை நீ தூண்டிவிட்டால், அல்லது புறணிக்கடுத்த காரியத்தைக் குறித்து நீ யாதொரு கேள்வி கேட்டால், ஒருவன்பேரில் உனக்குக் கொஞ்சம் விரோதமாயிருந்து அவன் பேரிலே கெடுதலாய்ப் பேசுகிறதை நீ பிரியத்தோடு கேட்டால், புறணிப் பேச்சினாலே யாதொருவன் கீர்த்திக்குக் கனமான கெடுதல் வருமென்று அறிந்திருந்தும் அதை விலக்கக்கூடுமாயிருந்தும் நீ விலக்காதிருந்தால், இதுவெல்லாம் உனக்குச் சாவான பாவமாயிருக்கும். ஏனென்றால் வீட்டிலே நெருப்புப்





போட்டுக் கொளுத்துகிறவன் பாவம் கட்டிக்கொள்ளுகிறதுமல்லாமல் அதை அவிக்கப் பிரயாசப்படக் கடமையுள்ளவனாயிருந்தும் அவிப்பதற்கு ஒன்றும் செய்யாமல் இன்னொருவன் கொளுத்தின நெருப்பிலே குளிர் காய்ந்துகொண்டிருக்கிறவனும் பாவம் கட்டிக்கொள்ளுகிறானென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வண்ணமே புறணி பேசுகிறவன் சாவான பாவம் கட்டிக்கொள்ளுகிறதுமல்லாமல் புறணிப் பேச்சை விலக்கக் கூடுமாயிருந்தும் அதை விலக்கக் கடமையுள்ளவனாயிருந்தும் விலக்காதவன்கூட சாவான பாவம் கட்டிக்கொள்ளுவான்; ஏனென்றால் இச் சமயங்களில் பிறருடைய கீர்த்தியைக் காப்பாற்றுவதற்காகப் புறணிப் பேச்சை விலக்கச் சகலருக்கும் கடனுண்டு. இதைவிட்டு மலர்ந்த முகத்தோடு சரி சரியென்று சொன்னாற்போலே, நீ புறணிப் பேச்சைக் காது கொடுத்துக் கேட்டுக்கொண்டிருந்தால், அந்தப் பேச்சுப் பேசுகிறதற்கு நீ காரணமாயிருக்கிறதினாலே, அது உனக்குக் கனமான பாவமென்று அறிந்துகொள்ளக் கடவாய். வேறே சில சமயங்களில் புறணிப் பேச்சை விலக்காதிருந்தால், அது அற்பப் பாவமாயிருக்கும். இப்படியே அதிகாரிகள் பெரிய மனுஷாள் முதலிய மேன்மைப்பட்டவர்கள் புறணி பேசும்போது, அவர்கள் சொல்லுகிறதை மறுதலித்து நிறுத்துகிறது அவர்களுடைய அந்தஸ்துக்குச் சிலவிசை தகாததாயிருக்கிறதினாலே, அவர்களுக்குத் தாழ்ந்த அந்தஸ்திலுள்ளவர்கள் இதை விலக்காவிட்டால், அவர்களுக்கு அற்பப் பாவமாயிருக்கும். இந்தக் காரியத்தில் சந்நியாசிகளைக் குறித்து வேத சாஸ்திரிகள் சொல்லியிருக்கிற ஓர் விசேஷமாவது: புறணிப் பேச்சைக் கேட்கிறவன் புறணி சொல்லுகிறவன்பேரில் அதிகாரமுள்ளவனாயிருந்தால், அந்தப் பேச்சை நிறுத்திப் பிறருடைய கீர்த்தியைக் காப்பாற்ற அவன்பேரில் விசேஷ கடமை உண்டு; அவனுடைய அதிகாரம் எவ்வளவு பெரிதாயிருக்குமோ, அவ்வளவுக்கு இந்தக் கடமையும் பெரிதாயிருக்கும்:

இது காரியத்தில் வேத சாஸ்திரிகள் சொல்லுகிறது இதுவே. இதைக் கொண்டு நாம் புறணி பேசுகிற கூட்டத்தில் இருக்கும்போது, எப்படி நடக்கவேணுமென்றும் கோழைத்தனத்தினாலேயாகிலும் முகத்தாக்ஷிணியினாலேயென்கிலும் புறணிப் பேச்சை விலக்காமல் மௌனமாயிருக்கிறது எவ்வளவு பொல்லாப்பென்றும் அறிந்துகொள்ளலாம். இக்காலத்திலே மனுஷருடைய குணம் கெட்டுப்போயிருக்கிறதினாலேயும் புறணிப் பேச்சைத்தவிர வேறே பேச்சுப் பேச சமுசாரவாசிகளு





க்குத் தெரியாததுபோலேயிருக்கிறதினாலேயும் நாம் அவர்களுக்குள்ளே வெகுவாய்ப் புழங்க வேண்டியிருக்கிறதினாலேயும் எச்சரிக்கையாயிராவிட்டால், பல சமயங்களிலே பாவத்தில் விழுந்தோமோ இல்லையோவென்று சந்தேகப்பட்டுக் கலங்க இடமுண்டாகும். ஏனென்றால் நாம் யாதொரு கேள்வி கேட்டிருந்தால், அல்லது புறணிப் பேச்சுக்குப் பிரியத்தோடு காது கொடுத்தாற்போலே இருந்தால், அல்லது முகச்சாடையைக் கொண்டு அந்தப் பேச்சை அங்கீகரித்துக்கொண்டாற்போலே இருந்தால், புறணிப் பேச்சுக்குக் காரணமாயிருந்தோமோ இல்லையோவென்று பயப்படுகிறதற்கு இடமுண்டல்லோ? ஆனால் இந்தச் சந்தேகமெல்லாம் என்னிடத்தில் வராது; இது காரியத்திலே எப்படி நடக்க வேணுமென்றும் எது பாவம் எது பாவமில்லையென்று எனக்கு நன்றாய்த் தெரியுமென்றும் சொல்லுவாயாக்கும். இருக்கட்டும்; ஆனால் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைய உழைத்துத் தேடுகிற சந்நியாசிகளைக் குறித்து நாம் இங்கே பேசுகிறோம். இவர்கள் சாவான பாவம் அற்பப் பாவம் முதலிய சகல பாவத்தையும் விலக்கி நடப்பதுமன்றி எப்போதும் மேன்மேலும் உத்தம புண்ணியத்தை நாடிப் பிறருக்கு நன்மாதிரிகையும் பிரயோசனமுமானதெல்லாத்தையும் செய்யக் கடமைப்பட்டவர்களாயிருக்கிறார்கள். இதிப்படியிருக்க, இவர்கள் யாதொரு கூட்டத்தில் இருக்கும்போது, யாதொருவன் பிறர்பேரில் கெடுதலாய்ப் பேசுகிறது காதிலே விழுந்தாலும், அதை மறுத்துத் தள்ளுகிறதற்கான ஒறுத்தலென்னும் புண்ணியம் இவர்களிடத்தில் இல்லாததினாலே வெட்கப்பட்டுக் கோழைத்தனத்தினாலே அதை விலக்காமல் சும்மாயிருந்து அதுக்குச் சம்மதித்துக்கொண்டால், இவர்கள் காட்டுகிறது நன்மாதிரிகையோ? புறணிப் பேச்சுப் பேசும்போது, பேசாமல் சும்மா இருக்கிறவர்கள் அதுக்குச் சம்மதித்துக்கொள்ளுகிறார்களென்பதற்குச் சந்தேகமில்லை. தேவ ஊழியரும் சந்நியாசிகளுமாகிய நாம் சமுசாரவாசிகள்பேரில் அதிகாரத்துவமுள்ளவர்களாயிருந்தும் அச்சமயத்திலே ஒன்றும் சொல்லாமல் மவுனமாயிருக்கிறதைக் கண்டு அவர்கள் தாங்கள் சொல்லுகிற புறணிப் பேச்சை உறுதியாய்ப் பேசுவதற்கு நாம் காரணமாயிருப்போமல்லோ? சந்நியாசியாகிய நீ இதற்கு ஒன்றும் சொல்லாததினாலே, இது பொல்லாப்பல்லவென்று நினைப்பார்கள்; அல்லது இது பாவமென்று அவர்கள் அறிந்திருந்தும் உனக்கு முன்பாக இதைப் பேசத் துணிந்ததினாலே உன்னையும் நீ இருக்கிற சந்நியாச சபையையும் அவர்கள் பிறக்கணிக்கிறார்களென்பதற்கு இ





து அடையாளமல்லோ? ஏனென்றால் உன் சமுகத்தில் இந்தக் கெட்ட பேச்சைப் பேசினாலும், நீ அதை விரோதித்துப் பேசத் துணியமாட்டாயென்று அவர்கள் அறிந்திருக்கிறதினாலே, இப்படிப் பேசுவார்கள்.

அர்ச். அகுஸ்தீன் புறணியாகிற இந்தத் தொற்றுவியாதியை விலக்குவதற்காகத் தமது சாப்பாட்டறையில் இலத்தீன் கவியாக எழுதிவைத்ததாவது : முகதாவில் இல்லாதவர்களுடைய நடக்கையை வாக்கினாலே கடித்துக் கெடுக்க விரும்புகிறவன் இந்த அறையில் பிரவேசிக்கப்படாதென்று அறிந்துகொள்ளக் கடவானென்று எழுதிவைத்தார். அவருக்குச் சினேகிதரான சில மேற்றிராணிமார்கள் அவரோடு சாப்பட்டுக்கொண்டிருக்கும்போது, பிறருடைய நடக்கையைக் குறித்துக் கெடுதலாய்ப் பேசத் துவக்கினார்கள் ; உடனே அவர் அவர்களைக் கடிந்துகொண்டு சொன்னதாவது : நீங்கள் இந்தப் பேச்சை விடாதிருந்தால், இந்தக் கவிகளைக் கிறுக்கிப் போடுவோம், அல்லது மேசையை விட்டு எழுந்திருப்போமென்றார். இதுவே உறுதியும் தைரியமுமான நடக்கை. புறணிக்காரர்மட்டிலே நாமும் இப்படி நடந்து அவர்கள் இந்தப் பேச்சை விடாதிருந்தால், அப்பாலே போவோமென்று சொல்லிக் காட்ட வேண்டும். அர்ச். எரோணிமுஸ் சொல்லுகிறதும் இதுவே. ஒருவன் வேறொருவன்பேரிலே கெடுதலாய்ப் பேசுகிறதை நீ கேட்டால், பாம்பைக் கண்டு ஓடுகிறதுபோலே, ஓடிப்போவென்றார். அப்போது அவனுக்கு எவ்வளவோ வெட்கமுண்டாகும் ? நீ அவனைவிட்டு ஓடிப்போகிறதைக் கண்டு புறணிக்காரன் வெட்கப்பட்டு இன்னொரு தடவை புறணி பேசாதபடிக்கு உடனே நீ அவனை விட்டுப் போகவேணுமென்று மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர் வசனித்தார். இதுவே நாம் நடக்கவேண்டிய நடக்கை. ஆகையால் புறணி பேசுகிற கூட்டத்தில் நாம் இருக்கும்போது, அந்தப் பேச்சைவிட வேணுமென்று கேட்டுக்கொள்ள வேண்டும்; அதை விடாதிருந்தால், உடனே அப்பாலே போக வேண்டும்.

ஆனால் மகிமைப்பட்ட யாதொரு பெரிய மனுஷாள் புறணி பேசும்போது, நாம் அவர்களை விட்டுப்போகிறது மரியாதையல்லவென்பது மெய்தான் ; ஆகிலும் இச்சமயத்தில் நாம் அநுசரிக்க வேண்டிய வேறோர் வழிபாடுண்டு. அதாவது, இப்படிப்பட்ட பெரிய மனுஷர் சொல்லுகிற புறணியை நாம் அங்கீகரித்துக்கொள்ளுகிறதில்லையென்றும் அ

தின் பேரில் பிரியப்படுகிறதில்லையென்றும் காட்டுவதற்காக முகத்தைச் சுண்டிக்கொண்டிருக்க வேண்டும். இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் தானே இந்தப் புத்தியை நமக்குப் போதித்திருக்கிறார். அதாவது, கச்சான் காற்று மழையைக் கலைக்கும், கண்டிப்பான முகம் புறணியைக் கலைக்கும். கெட்ட நாக்குப் பேசுகிறதைக் கேளாதபடிக்கு உன் காதிலே முள் வைத்து அடைத்துக்கொள்ளென்றார். உன் கண்டிப்பான முகச்சாடையும் முகம் சோம்புதலும் உன் முகத்தில் விளங்குகிற கலக்கமும் மாற்றமுமாகிற இந்த முள்களைக் கொண்டு புறணிப் பேச்சைக் கேளாதபடிக்கு உன் காதை அடைத்துக்கொள்ள வேண்டும்; இந்த முள் புறணி பேசுகிறவனைக் குத்திப் பிறருடைய கிரிகையின்பேரில் கெடுதலாய்ப் பேசுகிறது கெட்டதென்று அவனுக்கு அறிவித்துக் காட்டும். இதினிமித்தமாகத்தான் புறணிப் பேச்சைக் கேளாதபடிக்குப் பஞ்சு முதலிய மெதுவான வஸ்துக்களைக் காதிலே வைத்து அடைக்க வேணுமென்று இஸ்பிரீத்துசாந்து சொல்லாமல் முள்ளை வைத்து அடைத்து அந்த முள் புறணிக்காரனுடைய இருதயத்தைக் குத்தி அவன் குற்றத்தைத் திருத்த வேணுமென்று கற்பித்தார். இன்னம் இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் சொல்லுகிறதாவது: முகத்தில் விளங்குகிற கண்டிப்பினாலே குற்றம் செய்தவனுடைய மனம் திருந்துமென்றார். அர்ச். இஞ்ஞாசியார் இந்தப் புத்தியைப் பலமுறை அநுசரித்துக்கொண்டு வந்தார். யாதொரு சந்நியாசியார் தமது சமுகத்திலே இது காரியத்திலே அற்பமாகிலும் தகாத வார்த்தை சொன்னால், உடனே தமது முகச்சாயலை மாற்றிக் கொஞ்சம் கண்டிப்பான முகத்தைக் காட்டுவார். இந்த முகச்சாயலானது அந்தப் பேச்சு குற்றமென்று காட்டி அதைத் திருத்துகிறதற்கு மிகவும் உதவியாயிருந்தது. வெகு சொற்பப் புறணிப் பேச்சிலும் மற்றவர்கள் அற்பக் குற்றமுதலாய் இல்லையென்று எண்ணுகிற சமயத்திலும் முதலாய் இப்படி நடந்துகொண்டு வருவார்; ஏனென்றால் தாமே இந்த காரியத்தில் எச்சரிக்கையாயிருப்பதும் போதாமல் மற்றவர்கள் எல்லாரும் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்று அவர் ஆசைப்பட்டதினாலே, இப்படி நடந்துகொண்டுவருவார்.

இன்னம் புறணிப் பேச்சுக்கு நடுவே வேறே பேச்சைக் கொண்டுவந்துவிட்டு அதை மாற்றுகிறது மிகவும் நல்ல வழிபாடாகும். இதற்கு ஆன சமயம் வரட்டுமென்று காத்திருக்கிறது அவசரமல்ல; ஆன







சமயத்தைத் தேடாமல் திடீரென்று புறணிப் பேச்சை மாற்றுகிறதே நல்லது. ஏனென்றால் இதினாலே புறணி பேசுகிறவனும் கூட இருக்கிற மற்றவர்களும் அந்தப் பேச்சு நல்லதல்லவென்றும் முகத்தாக்ஷிணையினாலே நீ புறணிக்காரனை வெளியரங்கமாய்க் கடிந்துகொண்டு எல்லாருக்கு முன்பாக அவனுக்கு வெட்கம் வராதபடிக்கு இப்படிப் பேச்சை மாற்றினாயென்றும் எளிதாய் அறிந்துகொள்ளுவார்கள். புறணிப் பேச்சை மாற்றுகிறதற்கு ஆன சமயம் வரட்டுமென்றும் அந்தப் பேச்சு முடியட்டுமென்றும் காத்திருந்தால், உன் கருத்து இன்னதென்று மற்றவர்களுக்குத் தெரியவுமாட்டாது; புறணிக்கான பரிகாரம் ஒன்றும் செய்யவுமாட்டாய். மாடு ஒருவனைப் பாய்வதற்காக அவனைத் துரத்தும்போது, அதுக்கு முன்னே ஒரு வேஷ்டியை எறிவார்கள்; அப்போது மாடு துரத்தாமல் நின்றுபோகும். இவ்வண்ணமே யாதொருவன் புறத்தியார்பேரில் புறணி பேசும்போது, அவனுக்கு முன்பாக ஒரு வேஷ்டியை எறிய வேண்டும்; அதாவது, வேறே பேச்சைக் கொண்டுவந்துவிட வேண்டும்; இப்படிச் செய்தால், அவன் புறணிப் பேச்சை விட்டுவிடுவான். மேற்சொன்ன மாட்டுக்குமுன்னே வேஷ்டியை விட்டு எறிகிறவன் துரத்தப்பட்டவனுடைய உயிரைக் காப்பாற்றுகிறதினாலே, துரத்தப்பட்டவன் அவன் பேரில் நன்றியறிந்திருக்கிறது ஞாயமல்லோ? இவ்வண்ணமே பேச்சை மாற்றிப் புறணியை நிறுத்துகிறவன் பிறருடைய மகிமையையும் கீர்த்தியையும் காப்பாற்றுகிறதினாலே, இவர்கள் அவனுக்கு நன்றியறிந்திருக்கக் கடமையுண்டு.

———00000———

## ௰௧-ம் அதிகாரம்.

———00000———

### எவ்விதப் பொய்யையும் விலக்கி நடக்க வேணுமென்பதின் பேரில்.

———0000———

எல்லாத்தையும்விட மெய்·எப்போதும் உனக்கு முன்பாக நடக்க வேணுமென்று ஞானியானவர் வசனித்தார். இந்தப் புத்தியை யாவரும் தன்னாலே அறிந்திருக்கிறதினாலே, சந்நியாசிகளுக்கு இதின் பேரில் புத்தி சொல்லுகிறது அவசரமில்லையென்று தோன்றும். சமுசாரவாசிகள் முதலாய்ப் பொய் சொல்லுகிறது வெகு வெட்கத்துக்குரிய





துர்க்குணமென்று அறிந்திருக்கிறதினலே, யாதொருவன் பொய் சொ
ல்லுகிறனென்று சொல்லுகிறது அவனுக்கு மகா மகாப்பட்ட அவமா
னமும் அவகீர்த்தியுமென்று எண்ணுவார்கள். இது இப்படியிருக்க, இ
ப்படிப்பட்ட துர்க்குணத்தினலே சமுசாரவாசிகளுடைய கீர்த்தி கு
றைந்துபோகிறதைப் பார்க்க சந்நியாசிகளுடைய கீர்த்தி இந்தத் துர்க்
குணத்தினலே சந்நியாசத்தில் அதிகமாய்க் குறைந்துபோருமென்று
சொல்லவேணுமோ? ஆகையால் பொய் சந்நியாசிகளுக்கு எவ்வளவு
வெட்கத்துக்குரிய அயோக்கியமான காரியமென்று அறிந்துகொள்ள
லாம். தன் குற்றத்துக்குப் போக்குச் சொல்லவும் அதை மறைக்கவும்
வேறே எந்த முகாந்தரத்தைப் பற்றியும் சந்நியாசி ஒருகாலும் இந்தக்
குற்றத்தில் விழப்படாது. தான் செய்த குற்றத்தை மற்றவர்கள் அ
றிந்து தன்னைக் கெடுதலாய் நினையாதபடிக்குப் பொய் சொல்லுகிறவ
னிடத்திலே ஒறுத்தலும் தாழ்ச்சியுமில்லையென்று தெளிவாய்த் தோ
ன்றும். உன்னை ஒறுப்பதற்கும் தாழ்த்துவதற்கும் ஆன சமயங்களை
நீ தேடவேண்டியிருக்கையிலே, தன்னலே வருகிற சமயத்தையும் வி
லக்கி அதை விலக்குவதற்காகப் பொய் சொல்லி பாவமும் கட்டிக்கொ
ள்ளுகிருயே. நீ தேடவேண்டிய சாங்கோபாங்கத்துக்கு இது எவ்வள
வோ தூரமான நடக்கை! உலகத்தை முழுதும் ஈடேற்றுவதற்காக
முதலாய் ஒரு பொய்யும் சொல்லப் படாதென்று வேத சாஸ்திரிகளும்
அர்ச்சியசிஷ்டவர்களும் சொல்லியிருக்கிருர்கள். நீயோவென்றல், யா
தொரு சொற்பக் குற்றம் செய்தாயென்று வெளிப்பட்டு அதினலே
கொஞ்சம் வெட்கப்படாதபடிக்குப் பொய் சொல்லுகிருயே; இது எவ்
வளவு அடாத பைத்தியமென்று பார். சர்வேசுரன் பகைக்கிற ஏழு
காரியங்களில் பொய் இரண்டாம் காரியமென்று ஞானியானவர் சொல்
லியிருக்கிருர்.

வேருர்விதப் பொய்யுண்டு. அதென்னவென்றல், யாதொரு
காரியத்தை வெளிப்படுத்தும்போது, இல்லாததை அத்தோடு சேர்த்
துக் கட்டிச் சொல்லுகிறதாகும். இதை வேணுமென்று மனம் பொரு
ந்திச் சொல்லுகிறதில்லையென்பது மெய்தான்; ஆகிலும் மெய் பிரிக்க
ப்படாத காரியமாயிருக்கிறதினலே, அதை அதிகமாயும் குறைச்சலா
யும் சொல்லப் படாது; ஆகையால் உள்ளதுக்கு மேலே ஏதாகிலும்
கூட்டிச் சொன்னல், அது பொய்யென்பது நிச்சயம். ஆகிலும் இந்தக்
குற்றத்திலே மனுஷர் அநந்தமுறை விழுகிறது வழக்கம்; ஏனென்

றால் தாங்கள் சொல்லுகிறதை அதிகப்படுத்தி சிறப்பிக்க ஆசைப்படுகிறது மனிதருக்குச்சுபாவமாகக்கொள்ள, அதைக் கூட்டிச் சொல்லுகிறதற்கு எளிதாய் உடன்படுவார்கள். இது காரியத்திலே எவ்வளவு எச்சரிக்கையாயிருந்தாலும், அதுவெல்லாம் பற்றாதென்று சொல்ல வேண்டும்.

அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறதாவது: அதிகமாய்க் கூட்டிச் சொல்லுகிறது சந்நியாசியுடைய அடக்க ஒடுக்கத்துக்கும் மேரை மரியாதைக்கும் தகாததாயிருக்கிறதினாலே, அதை விலக்கி நடக்க வேண்டும். உன் மேரை மரியாதையினாலேயும் நிசத்தினாலேயும் நீ சொல்லுகிறதை மற்றவர்கள் நம்ப வேண்டும்; கூட்டிச்சொல்லுகிறதினாலே உன் பேச்சை ஒருவரும் நம்பாமல் போவதுமன்றி உன்னைத் தப்பிலியென்று எண்ணுவார்கள். ஏனென்றால் இப்படிப் பேசப் பழக்கமுள்ளவர்கள் உள்ளதைக் கூட்டிச் சொல்லுகிறதுமல்லாமல் ஒருவரும் நம்பக் கூடாததையும் சொல்லுவார்கள். இதினாலே இவர்கள் பொய் சொல்லுகிறார்களென்று மற்றவர்கள் எளிதாய் அறிந்துகொள்ளுவார்கள்; ஆகையால் உள்ளதைக் கூட்டிச் சொல்ல வழக்கமுள்ளவர்களை ஒருவரும் நம்ப மாட்டார்கள். அர்ச். இஞ்ஞாசியார் மேன்மை உரியில் பேசுகிறது வெகு அபூர்வமாயிருக்குமென்று சொல்லுகிறார்கள்; ஏனென்றால் இப்படிப் பேசுகிறதினாலே, சிலவிசை வேண்டியதுக்கு மேலே அதிகம் சொல்லுகிறது எளிதாயிருக்குமென்றும் ஒன்றையும் ஒருவிதத்திலும் கூட்டிச்சொல்லாமல் எதார்த்தமாய்ப் பேச வேணுமென்றும் அவர் தாற்பரியமாயிருந்தார். உள்ளதை அதிகரித்துச் சொல்லாதபடிக்கு அவர் வெகு எச்சரிக்கையாயிருந்ததினாலே, தமக்கு நன்றாய்த் தெரிந்ததை முதலாய் ஒருகாலும் நிச்சயித்துச் சொல்ல மாட்டார்.

இந்த வழக்கம் மிகவும் நல்லதாயிருப்பதினாலே, அநேக அர்ச்சியசிஷ்டவர்கள் இதை நமக்குப் போதித்திருக்கிறார்கள். பிடிவாதமாய் ஒன்றையும் ஒருகாலும் நிச்சயித்துச் சொல்லாதே, மறுத்துஞ் சொல்லாதே; நீ சொல்லுகிறதிலே எப்போதும் கொஞ்சம் சந்தேகம் கலந்திருக்க வேணுமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இது இப்படியென்று நினைக்கிறேன்; அது இப்படியிராவிட்டால், வெகு ஆச்சரியந்தான்; இதை இப்படிக் கேள்விப்பட்டதாக எனக்குத் தோன்றுகிறதென்று சொல்லு. தகுந்த விமரிசையோடு நீ இப்படிப் பேசிக்கொண்டுவந்தால், இது தாழ்ச்சியும் அடக்கமும் மேரை மரியா






ளையுமுள்ள பேச்சாகும்; இதுவே சந்நியாசிகளுக்கும் கிறீஸ்துவர்
களுக்கும் யோக்கியமான பேச்சு. இப்படிப் பேசுகிறவர்கள் தங்க
ளை நம்பாமலும் தங்கள்பேரில் கனமான எண்ணம் கொள்ளாமலு
ம் இருக்கிறார்களென்பதற்கு இது அடையாளமாகும். அர்ச்சியசிஷ்
டவர்கள் தாழ்ச்சியாயிருந்து தங்களை ஒருகாலும் நம்பாததினாலே,
மேற்சொன்னபடி பேசுகிறது அவர்களுக்கு வழக்கம். ஓர் பெரிய அ
ர்ச்சியசிஷ்டவரிடத்தில் இப்போது மணியென்னவென்று கேட்டா
ல், எட்டு மணி ஒன்பது மணியென்று சொல்லாமல் ஏறக்குறைய
எட்டு மணி ஏறக்குறைய ஒன்பது மணியென்று சொல்லுவார். என்
இப்படிச் சொல்லுகிறீரென்று கேட்டதற்கு அவர் சொன்னதாவது:
மணி அடித்திருந்தாலுஞ் சரி, அடியாதிருந்தாலுஞ் சரி; இப்படிச்
சொல்லுகிறதினாலே, நாம் சொல்லுகிறது பொய்யல்லவென்று நிச்
சயமாயிருக்கும்; இதினாலே இப்படிச் சொல்லுகிறோமென்றார். அன்
றியும் ஒருகாலும் ஒன்றையும் நிச்சயித்துச் சொல்லாமல் எப்போது
ம் கொஞ்சம் சந்தேகத்தோடு பேசுகிறது சந்நியாசிகளுக்குரிய விவேக
த்துக்கும் அடக்க ஒடுக்கத்துக்கும் அடுத்த காரியமாமே; ஏனென்றா
ல் ஒரு காரியம் எப்படி நடந்திருந்தாலும், அதின்பேரில் சந்தேகமாய்
ப் பேசினால், அது பொய்யல்லவென்று நிச்சயமாகும். ஆனால் ஒரு கா
ரியத்தை முழுதும் நிச்சயித்து அதுக்கு நான் உத்தரவாதப்படுகிறே
னென்று சொன்னபின், அது பொய்யாய்ப்போனால், பொய் சொல்லி
அதை அவ்வளவு ஸ்திரப்படுத்தினதினாலே நீ வெட்கப்படுகிறதுமன்
றி நீ சொன்னதைக் கேட்டவனுக்கு இது துர்மாதிரிகையாகவுமிருக்கு
ம். நாம் நிச்சயமென்று எண்ணுகிற காரியங்களை முதலாய்ச் சந்தேக
மாய்ச் சொல்ல வேண்டும்; முழுதும் நிச்சயமாயிராமல் கொஞ்சம் ச
ந்தேகமான காரியத்தை முழுதும் நிச்சயித்துச் சொல்லுகிறது எப்
போதும் பொய்யாயிருக்கும்; ஏனென்றால் அறியாத காரியத்தை நிச்
சயிக்கிறது பொய்யல்லோ? இப்படிப் பேசுகிறவர்கள் பொய் சொல்
லுகிறதற்கான ஆபத்தில் இருக்கிறதினாலே, இவர்கள் ஏறக்குறைய
பொய் சொன்னார்களென்று சொல்லலாம்.

அர்ச். பொனவெந்தூர் இது காரியத்திலே இன்னம் வேறொரு பு
த்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், உன் வார்த்தை மெய்
யாகவும் கபடற்றதாகவும் இருக்க வேணுமென்றார். நீ எப்போதும் மெ
ய் சொல்லுகிறதுமல்லாமல் இரண்டு அருத்தப்படப் பேசாமல் எப்

போதும் எதார்த்தமாய்ப் பேச வேண்டும்; ஏனென்றால் இரண்டு அருத்தப்படப் பேசுகிறது சந்நியாசிகளுக்குரிய கபடற்ற பரிசுத்தத்தனத்துக்கு மிகவும் விரோதமாயிருக்கும். இப்படிப் பேசுகிறது பொய்யென்று அர்ச். அகுஸ்தீன் சொல்லியிருக்கிறார். இதினாலல்லோ சகலவித மறைவுள்ள பேச்சும் ஈரருத்தமும் பொய்யென்றார். சிலருக்குப் பொய் சொல்லவுமனசில்லை, மெய் சொல்லவுமனசில்லை; இதினாலே தாங்கள் ஒரு காரியம் சொல்லும்போது, மற்றவர்கள் அது வேறொரு காரியமென்று கண்டுபிடிக்கும் பொருட்டு இரண்டு அருத்தப்படச் சுற்றிச் சுற்றிப் பேசுவார்கள். யாதோர் கனமான காரியத்திலே அவசரமான இரகசியத்தை மறைப்பதற்காக இரண்டு அருத்தப்படப் பேசலாமென்பது மெய்தான்; ஆனால் வழக்கமான பேச்சிலே இப்படி ஒருகாலும் பேசப் படாது. இது மறைவுள்ள தப்பிலித்தனத்துக்கு அடையாளமாயிருக்கிறதினாலே, சந்நியாசிகளுக்குரிய கபடற்ற பரிசுத்தத்தனத்துக்கு விரோதமும் கிறீஸ்துவர்களுக்கும் சமுசாரவாசிகளுக்கு முதலாய்த் தகாததுமான பேச்சாகும்; ஏனென்றால் மனுஷர் ஒருவர் ஒருவரோடு சஞ்சாரம்பண்ணிப் புழங்குவதற்குப் பொய் அடாத காரியமாயிருக்கிறதுபோலே, மேற்சொன்ன பேச்சும் அடாத காரியந்தான். மனுஷர் இப்படிப் பேச ஏற்பட்டால், ஒருவர் ஒருவரை நம்பக்கூடாமற்போகும். இப்படிப் பேசுகிற குற்றம் யாதொருவனிடத்திலே உண்டானால், மற்றக் காரியங்களிலே அவன் எவ்வளவு கிரேஸ்தனாயிருந்தாலும், அவன் பேச்சை ஒருவரும் நம்பாமல் மோசம் பண்ணுவானோ இல்லையோவென்று எச்சரிக்கையாய் அவனோடு புழங்குவார்கள். இதினாலல்லோ மறைத்துச்சூட்சமாய்ப் பேசுகிறவன் பகைக்குரியவனென்று ஞானியானவர் வசனித்தார்; ஏனென்றால் எல்லாரும் இவனைத் தப்பிலியென்று எண்ணுவார்கள். ஆகையால் சந்தேகத்துக்குரிய பேச்செல்லாம் எச்சரிக்கையோடு விலக்கி நட. இன்னான் பொய் சொல்லுகிறதில்லையென்பது மெய்தான்; ஆனால் மெய் சொல்லவும் அவனுக்குத் தெரியாதென்று சிலரைக் குறித்துச் சொல்லுகிறார்களே; இப்படி உன்னைக் குறித்தும் சொல்லாதபடிக்குத் தெளிவாய்ப் பேசிக்கொண்டுவா.

——0000——





# ௰௨-ம் அதிகாரம்.

———oooo———

## பகிடி பரியாசமெல்லாம் விலக்கி நடக்க வேணுமென்பதின் பேரில்.

——ooo——

சிறு பிள்ளையைப்போலே இடைவிடாமல் பகிடி பண்ணாதே; ஏனென்றால் புண்ணிய சாங்கோபாங்கத்தை நாடுகிறவன் சிறு பிள்ளை போலே பரியாசம் பண்ணத் தகாதென்று அர்ச். பசிலியார் வசனித்தார். அன்றியும் பகிடி பரியாசமும் விளையாட்டும் தேவ ஊழியத்துக் கடுத்த காரியங்களிலே கிறிஸ்துவனை அசதியும் அசமந்தமுமுள்ளவனாக்கிப் பத்தியையும் உள்ளடக்கத்தையும் நீக்கும். விசேஷமாய்ச் சூட்சமும் யுத்தி புத்தியுமான பரியாசத்தை விலக்கி நடக்க வேண்டும்; ஏனென்றால் இது விகட கவிக்காரன் வேலையே அல்லாமல் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையத் தேடுகிறவனுக்கு இதைப் பார்க்க அயோக்கியமான பேச்சு ஒன்றுமில்லை.

அர்ச். பெர்நர்துஸ் இது காரியத்தில் வெகு கண்டிப்பான புத்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், சமுசாரவாசிகள் பகிடி பரியாசம் பண்ணினால், அது பகிடி பரியாசமென்பது மெய்தான்; ஆனால் குருவின் வாயில் புறப்படுகிற பரியாசம் தேவதூஷணமாகும். உன் வாயைத் தேவ வாக்குக்கு அபிஷேகம் பண்ணியிருக்கிறாய்; அந்த வாயைக் கொண்டு இப்படிப்பட்ட பேச்சும் பேசுகிறது தோஷமாகும்; அதிலே பழகுகிறது தேவ துரோகமாகுமென்றார். தேவ பணிவிடைக்காக அபிஷேகம் பண்ணியிருக்கிற வஸ்துக்களை உலோக காரியங்களில் புழங்குகிறது தேவ துரோகமல்லோ? மலக்கியாசென்னும் தீர்க்கதரிசி வாயாலே சர்வேசுரன் திருவுளம்பற்றினதாவது: குருவின் உதடு தேவ சாஸ்திரத்தைக் காத்துக்கொண்டிருக்கும்; அவர் வாயிலிருந்து தேவ கற்பனை இன்னதென்று மனிதர் அறிந்துகொள்ளுவார்களென்றார். இதுவே குருவின் வாயிலிருந்து புறப்பட வேண்டியது; பகிடி பரியாசமும் கதையும் அவர் வாயிலிருந்து புறப்பட ஒண்ணாதென்று மேற்சொன்ன அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இன்னம் இந்த அர்ச்சியசிஷ்டவர் தானே சொல்லுகிறதாவது: பகிடி பரியாசம் ஒன்





றும் சந்நியாசி வாயிலிருந்து ஒருகாலும் புறப்படாமல் இருக்கிறதும்
பற்ருது ; ஒருகாலும் அது அவர் காதுக்குள்ளே பிரவேசிக்கவும் படா
தென்ருர். யாதொருவன் நமக்கு முன்னே கேலி பரியாசம் பண்ணினு
ல், புறணி வார்த்தை பேசுகிறபோது நாம் நடக்கிறதுபோலே, நடந்து
கொள்ள வேண்டும். வேறே பேச்சைக் கொண்டு வந்துவிட்டு அந்தக்
கேலிப் பேச்சை மாற்றப் பிரயாசப்படவேண்டும் ; முகத்தைச் சுழித்
துக்கொண்டு இந்தப் பேச்சை நாம் அங்கீகரித்துக்கொள்ளுகிறதில்லை
யென்று காட்டவேண்டும் ; கேலி பண்ணுகிறதைக் கேட்கிறதே பொ
ல்லாப்பென்றிருக்கையிலே, கேலி பண்ணுகிறது எவ்வளவு பெரிய
பொல்லாப்பாகும் ! கேலி பண்ணுகிறதைக் கேட்டுச் சந்தோஷப்பட்டு
ச் சிரிக்கிறது வெட்கத்துக்குரிய காரியம் ; கேலி பண்ணி மற்றவர்களு
க்குச் சிரிப்பு மூட்டுகிறது அதிலுமதிக வெட்கத்துக்குரிய காரியமென்
ருர்.

இது காரியத்தில் அலேக்சாந்திரியாவென்னும் பட்டணத்துக்
கிளேமேந்தென்பவர் சொன்ன விசேஷம் அர்ச். பசிலியார் அர்ச். பெர்
நர்துஸ் அர்ச். பொனவெந்தூர் முதலிய அர்ச்சியசிஷ்டவர்கள் போதி
த்த போதகத்துக்கு ஒத்திருக்கும். அதாவது, வார்த்தைக்கெல்லாம்
புத்தியும் நடக்கையும் ஊற்ருகக்கொள்ள, வீணும் வியர்த்தமுமான வா
ர்த்தை சொல்லுகிறவர்களிடத்திலே அற்பப் புத்தியும் ஒழுங்கற்ற கு
ணபேதகமும் இருக்கிறதென்பது நிச்சயம். இதினலல்லோ இருதயத்
தில் நிறைந்திருக்கிறதைக் கொண்டு வாய் பேசுமென்று சுவிசேஷத்தி
ல் சொல்லியிருக்கின்றது. மணி ஒட்டையோ இல்லையோவென்றும்
பானை நிறை பானையோ வெறும் பானையோவென்றும் சத்தத்திஞலே
அறிந்துகொள்ளலாம். பகிடி பரியாசம் பண்ணுகிறவர்களுடைய புத்
தியும் இருதயமும் ஒட்டையாய் ஒன்றுமில்லாமலிருக்கிறதென்று அ
டையாளமாகும். உங்கள் வாயிலிருந்து கெட்ட பேச்சுப் புறப்பட வே
ண்டாமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இவ்வாக்கியத்தி
ன்பேரில் அர்ச். கிறிசோஸ்தொமுஸ் சொல்லுகிறதாவது : ஒருவனு
டைய வார்த்தையும் கிரிகையும் எப்படியோ அவன் இருதயமும் அப்
படித்தான் இருக்குமென்ருர். வேத சாட்சியான அர்ச். இஞ்ஞாசியார்
வேதத்துக்காக உபாதைப்படுந் தருணத்தில் இயேசுவே என்னும் திரு
நாமத்தை அடிக்கடி சொல்லுவார். ஏன் இப்படிச் சொல்லுகிறீரென்
று கேட்டதற்கு அது என் இருதயத்தில் பதிந்திருக்கின்றது ; நான்

அதைச் சொல்லாமல் இருக்கக் கூடாதென்றார். அவர் செத்தபின், அவர் இருதயத்தைத் திறந்து பார்க்கும்போது, இயேசுவென்னும் திருநாமம் அதிலே தங்க எழுத்தாலே இருபக்கத்திலேயும் எழுதியிருக்கிறதைக் கண்டார்கள். பகிடி பரிபாசம் பண்ணுகிறவர்கள் இருதயத்திலே இயேசுவென்னும் நாமம் பதியாமல் அவர்கள் வாயிலிருந்து இடைவிடாமல் புறப்படுகிற உலக பேரும் உலோக வைத்தியமுமாத்திரம் பதிந்திருக்கும். இதினாலே கேலிப் பேச்சுப் பேசி மற்றவர்களுக்குச் சிரிப்பு மூட்டுகிறவர்கள் ஞானத்தில் தேர்ந்தவர்களுமல்ல, சந்நியாசிகளுமல்ல. அவிலாவென்னும் மகாத்துமாவுடைய எண்ணமிதுவே. கேலிப் பேச்சு ஒன்றுக்கும் உதவாதென்று அர்ச். சின்னப்பர் சொன்ன வாக்கியத்தின் பேரில் அவிலாவென்பவர் சொன்னதாவது: கேலிப் பேச்சு சந்நியாசியுடைய அடக்க ஒடுக்கத்துக்கும் கிறிஸ்துவனுடைய மேரை மரியாதைக்கும் உதவாதென்றார். அவர் ஒருகாலும் பரியாசமான ஒரு வார்த்தையும் சொல்லவில்லையென்று அவர் சரித்திரத்தில் எழுதியிருக்கின்றது. மெத்தபிராஸ்தென்பவர் சொல்லுமாப்போலே, அர்ச். கிறிசொஸ்தொமூஸ் ஒருகாலும் கேலிப்பேச்சுப் பேசினதுமில்லை, தமக்கு முன்பாக யாராகிலும் அந்தப் பேச்சுப் பேசுகிறதற்கு ஒருகாலும் இடங்கொடுத்ததுமில்லை. பூர்வீக தபோதனர்கள் இதின் பேரில் வெகு அருவருப்பாயிருந்ததினாலே, இப்படிப்பட்ட பேச்சுப் பேசின சந்நியாசியை மற்றவர்களைவிட்டு ஒருவாரம் வரைக்கும் பிரித்து வைக்க வேணுமென்று அர்ச். பசிலியார் கற்பித்தார். இந்தத் தெண்டனை ஓர்வித சாபம்போலிருந்தது; இந்தக் குற்றத்தில் விழுந்தவர்கள் மற்றொருவரையும் கெடுத்துப் போடாதபடிக்கும் அவர்களுக்கு வெட்கம் உண்டாகும்படிக்கும் சந்நியாசிபோலே பேசாதவன் சந்நியாசிகளோடு சஞ்சாரம் பண்ணுகிறதற்குத் தகுந்தவனல்லவென்று 'அவர்களுக்குக் காட்டவும் மேற்சொன்ன தெண்டனை இடுகிறது வழக்கம்.

கிலுனியென்னும் மடத்துக்குச் சிரேஷ்டரான அர்ச். யூகென்பவர் சரித்திரத்தில் எழுதியிருக்கும் வர்த்தமானமாவது: அவருடைய சந்நியாசிகளில் ஒருவரான தூரான்தென்பவர் துலூசென்னும் பட்டணத்துக்கு அதிமேற்றிராணியாரானார். இவர் கேலி பரியாசம் பண்ணிக்கொண்டுவருவார். இதைக் கண்டு அர்ச். யூகென்பவர் அடிக்கடி இவரைக் கண்டித்து இந்தக் குற்றத்தைத் திருத்திக்கொள்ளாவிட்டால், நீர் உத்தரிக்கிற ஸ்தலத்திலே வெகு கண்டிப்பான வேதனைப் படுவீரெ





ன்று சொல்லுவார். கொஞ்ச காலத்துக்குப்பின், இந்த அதிமேற்றிராணியார் செத்துப்போய் வாய் மெத்தவும் வீங்கி ஏக புண்ணாயிருக்கிற பிரகாரம் சேகேனென்னும் ஓர் பரிசுத்த சந்நியாசியாருக்குக் காட்சி கொடுத்து நான் பகிடி பரியாசத்தைத் திருத்திக்கொள்ளாததினாலே, உத்தரிக்கிற ஸ்தலத்திலே வெகு கொடூர வேதனைப்படுகிறேன்; அர்ச். யூகென்பவரை எனக்காக வேண்டிக்கொள்ளச் சொல்ல வேணுமென்று கண்ணீர் சிந்திக்கொண்டு கெஞ்சி மன்றாடினார். சேகேனென்பவர் இந்தக் காட்சியை அர்ச். யூகென்பவருக்குச் சொல்லவே, அவர் இந்தக் குற்றத்துக்குப் பரிகாரமாக ஏழு சந்நியாசிகள் ஏழு நாள் வரைக்கும் மவுனங் காக்க வேணுமென்று கற்பித்தார். அவர்களில் ஒருவர் மவுனத்தை மீறினதினாலே, அந்த அதிமேற்றிராணியார் மறுபடியும் சேகேனென்பவருக்குக் காட்சியாகி அந்தச் சந்நியாசியாருடைய கீழ்ப்படியாமையினாலே நான் இன்னம் உத்தரிக்கிறஸ்தலத்தைவிட்டு விடுதலையாகவில்லையென்று முறைப்பட்டார். சேகேனென்பவர் இதை அர்ச். யூகென்பவருக்கு வெளிப்படுத்தவே, அந்தச்சந்நியாசியார் கீழ்ப்படியாமல் இருந்தது மெய்யென்று அறிந்து இன்னம் ஒரு சந்நியாசியார் ஏழு நாள் வரைக்கும் மவுனம் காக்கவேணுமென்று கற்பித்தார். அதின்பின் அந்த அதிமேற்றிராணியார் மேற்றிராண உடுப்பு அணிந்துகொண்டு வாயில் இருந்த புண்ணெல்லாம் சொஸ்தமாகி மலர்ந்த முகத்தோடு மூன்றும்விசை சேகேனென்பவருக்குக் காட்சி கொடுத்து அர்ச். யூகென்பவருக்கும் அவருடைய சந்நியாசிகளுக்கும் தன் பேராலே நன்றியறிந்த தோத்திரம் பண்ண வேணுமென்று சொல்லி உடனே மறைந்துபோனார்.

ஆனால் ஒருகாலும் மற்றவர்களுக்குக் கஸ்தி வருவிக்கிற கேலி பரியாசம் பண்ணாதபடிக்கு மகா எச்சரிக்கையாயிருக்க வேணும். பிறருடைய தகாத குணத்தின்பேரிலேயாகிலும் அவர்களுடைய அற்பப்புத்தியின்பேரிலேயென்கிலும் வேறெந்தக் குற்றங் குறைகளைப் பற்றியாகிலும் கேலி பண்ணிச் சூக்ஷமான வார்த்தை சொன்னால், அதினாலே அவர்களுக்கு அவமானமும் கஸ்தியும் உண்டாகுமென்பதற்குச் சந்தேகமில்லை. இப்படிப் புறத்தியாருக்குக் கஸ்தி வருவிக்கிற பரியாசம் வீண் பரியாசத்தைப்பார்க்க மிகவுங் கெட்டது. எவ்வளவு நவ்வுஞ் சவ்வுமாய் எவ்வளவு சூக்ஷமாய்ப் புறத்தியார்பேரில் கேலி பண்ணுவாயோ, அவ்வளவுக்கு இந்தக் கேலி அதிக குற்றமாகும்; ஏனென்றால்



அப்போது இதைக் கேட்கிறவர்கள் மனதிலே இது வெகு ஆழமாய்த் தரித்து வெகுநாள் நிலைக்கொள்ளும். சமுசாரவாசிகளுக்குள்ளே முதலாய் சூக்ஷக்காரரென்று பேர்கொண்டவர்கள் ஒருவருக்கும் கஸ்தியும் அவமானமும் வருவியாமல் பரியாசம் பண்ணினால், மற்றவர்கள் அவர்களைக் கண்டு சந்தோஷப்பட்டு அவர்களோடு சேர்ந்து ஒருவருக்கும் கஸ்தி வருவியாமல் அவர்கள் சிரிப்பு மூட்டுகிறதினாலே, அவர்களைப் புகழ்ந்துகொள்ளுவார்கள். ஆனால் தங்கள் பேச்சினாலே மற்றவர்களைக் குற்றி கஸ்திப்படுத்துகிறவர்களைச் சகலரும் பகைப்பதுமன்றிச் சிலர் அவர்களுக்குக் கஸ்தியான வார்த்தை சொல்லி நிந்திப்பார்கள். ஆனால் இப்பிரபந்தத்தின் முதல் பங்கிலே சகோதர சினேகத்துக்கு விரோதமான குற்றங்களைக் குறித்து நாம் பேசும்போது, இது காரியத்தையும் சொல்லியிருக்கிறதினாலே, இவ்விடத்திலே இதின்பேரில் விஸ்தாரமாய்ப் பேச வேண்டியதில்லை.

——ooo——

## ௰௩-ம் அதிகாரம்.

——ooo——

சர்வேசுரன்பேரிலே நமது பேச்சு புழக்கமெல்லாம் இருக்க வேணுமென்றும் அதுக்கடுத்த சில வழிபாடுகள் ஏதென்றும் சொல்லுவது.

——oo——

**தீ**காத பேச்சொன்றும் உன் வாயிலிருந்து புறப்பட வேண்டாம்; நீ பேசுகிறதைக் கேட்கிறவர்களிடத்தில் பத்தியுண்டாவதற்குத் தகுந்த பேச்சு மாத்திரம் உன் வாயில் புறப்பட வேணுமென்று அர்ச் சின்னப்பர் அருளிச்செய்தார். இந்தப் புத்தி விசேஷமாய் நமக்குச் செல்லும்; நமது ஆத்துமத்தை ஈடேற்றுகிறதுமல்லாமல் பிறர் ஈடேற்றத்துக்காகவும் உழைக்க நமதுபேரில் கடன் இருக்கிறதினாலே, மற்றவர்களைவிட நாம் இந்தப் புத்தியை அநுசரிக்கிறது அவசரம். பத்திக்கடுத்த பேச்சைவிடப் பிறருக்கு நன்மாதிரிகையும் பிரயோசனமுமுள்ள காரியம் வேறொன்றுமில்லையென்று சொல்லலாம்; ஏனென்றால் ஞானப் பேச்சினாலே நமக்கு வரும் பிரயோசனமுமல்லாமல் ஞானப் பேச்சு மாத்திரம் பேசிக்கொண்டுவருகிற சந்நியாசியைச் சமுசாரவாசிகள்





கனமாயெண்ணி சர்வேசுரன்பேரில் மாத்திரம் இவர் பேசுகிறதினாலே, சர்வேசுரனாலே நிறைந்திருக்கிறாரென்று நினைத்து இவரை விசேஷமாய்ச் சங்கிப்பார்கள்; இதினாலே அவர்களுடைய ஈடேற்றத்துக்காக இவர் செய்கிற அலுவல் அதிக பிரயோசனப்படும். அர்ச். சவேரியார் செய்த பிரசங்கத்தைவிட அவருடைய பேச்சினாலே மனுஷருக்கு அதிக ஞான நன்மை வந்ததென்று அவருடைய சரித்திரத்தில் எழுதியிருக்கிறதறிவோம்; புறத்தியாருடைய நன்மைக்காக இயேசு சபையிலே நாம் செய்ய வேண்டிய வழிபாடுகளைக் குறித்து அர்ச். இஞ்ஞாசியார் நமது ஏற்பாட்டாகமத்தில் பேசும்போது, பத்தியுள்ள பேச்சு இதுக்குப் பிரதான வழிபாடென்று குறித்து இயேசு சபையிலுள்ள சகலரும் இந்த வழிபாட்டை அநுசரிக்கப் பிரயாசப்பட வேணுமென்று சொல்லியிருக்கிறார்.

இது காரியத்திலே நாம் நன்றாய்ப் பிரயோசனப்படும்பொருட்டு நமக்குள்ளே நாமே ஞானப் பேச்சுப் பேசிப் பழகுகிறது மிகவும் உதவியாயிருக்கும். சந்நியாசிகள் ஞானப் பேச்சுப் பேசுகிற விதத்தை நன்றாய்க் கற்றுக்கொண்டு சமுசாரவாசிகளோடு ஊடாடுஞ் சமயத்தில் அவர்களோடு பத்தியுள்ள பேச்சுப் பேசும்பொருட்டுச் சந்நியாசிகளை ஒருவர் ஒருவரோடு தேவ காரியங்களைப் பேச வேணுமென்று அர்ச். பிராஞ்சீஸ்கு கற்பித்தார். இப்படி அவருடைய சந்நியாசிகள் ஒரு தடவை ஞானப் பேச்சுப் பேசிக்கொண்டிருக்கும்போது, இயேசுநாதர் சிறுபிள்ளை வடிவாய் அவர்களுக்கு நடுவே காட்சியாகி அவர்களை ஆசீர்வதித்து அவர்களுடைய பேச்சு தமக்கு எவ்வளவு பிரியமென்று காட்டியருளினார். இந்தப் பரிசுத்த வாடிக்கைக்கு ஒத்த வழக்கம் இயேசு சபையிலுமுண்டு. நவ சந்நியாசிகள் அநந்தமுறை ஒன்றாகக் கூடி ஒருவரோடொருவர் ஞானப் பேச்சுப் பேசுவார்கள்; நவ சந்நியாசம் முடிந்தபிறகும் நாம் இந்தப் பேச்சிலே தேர்ந்துபோகும்படியாக அடிக்கடி கூடி ஞானப்போதகம் பண்ணுகிற வாடிக்கை நமக்குள்ளுண்டு. அன்றியும் நாம் வழக்கமாய்ப் பேசும்போது, ஞானப் பேச்சுப் பேச வேணுமென்று நமக்கு விசேஷமாய்க் கற்பித்திருக்கின்றது.

அர்ச். பெர்நர்துஸ் இந்த வழக்கத்தை அநுசரியாத சில சந்நியாசிகளை வெகுவாய்க் கடிந்துகொண்டிருக்கிறார். அதெப்படியென்றால், திருச்சபை முதல் யுகங்களிலே சந்நியாசிகள் அநுசரித்ததை அவர் எடுத்துக் காட்டிச் சொன்னதாவது: அர்ச். அந்தோனியார் காலத்தில்






விளங்கின வனவாசிகளுக்கும் நமக்கும் எவ்வளவோ வித்தியாசம்! அவர்கள் கூடிப் பேசும்போது, மோக்ஷ நன்மையின் பேரிலே மாத்திரம் பேசுவார்கள். ஆத்தும போசனத்தை அவர்கள் வெகு ஆவலோடு சாப்பட்டதினாலே, சரீர போசனத்தை மறந்துபோய் அநேக நாள் ஆகாரங்கொள்ளாமல் இருப்பார்கள். நம்மிடத்திலுள்ள மேலான வஸ்துவாகிய ஆத்துமத்துக்கு முந்த முந்தச் சாப்பாடு கொடுப்பதே கிரமம். ஆனால் நாம் கூடிப் பேசும்போது, அர்ச். சின்னப்பர் சொல்லுமாப்போலே, கர்த்தருடைய இராப்போசனத்தை சாப்பட நினையாமற்போகிறோம். மோக்ஷ அப்பத்தைத் தர வேணுமென்று கேட்கிறவனுமில்லை; அதைக் கொடுக்கிறவனுமில்லை; வேதாகமத்தின் பேரில் ஒரு வார்த்தை சொல்லுகிறதையும் காணோம்; ஆத்தும ஈடேற்றத்தின் பேரில் ஒரு வார்த்தை காதிலே விழுகிறதுமில்லை; பகிடி பரியாசமும் சிரிப்பும் வீண் வார்த்தையும் மாத்திரம் காதிலே விழுகிறதென்றார். இப்படி வீண் வார்த்தை பேசுகிறது தயவு தாக்ஷணியமென்றும் விமரிசையென்றும் பிற சினேகமென்றும் ஞானப் பேச்சு உருசியற்ற பேச்சென்றும் அவமரியாதையென்றும் முரட்டுத்தனமென்றும் சர்வேசுரன் பேரில் பேசுகிறவர்கள் முரடரென்றும் மனுஷர் அபத்தமாயெண்ணி அவர்கள் பேச்சுப் புழக்கத்தை விலக்கி நடக்கிறதைக் கண்டு கஸ்திப்படுகிறோம். ஆகிலும் இப்படிப்பட்ட பொய்யான பிற சினேகம் மெய்யான பிற சினேகத்தைக் கெடுத்து இந்தப் பொய் விமரிசை மெய் விமரிசையை அழிக்கும்; ஏனென்றால் சரீரத்தைச் சினேகித்து ஆத்துமத்தை அசட்டைபண்ணுகிறது சினேகமோ? சகலத்தையும் சரீரத்துக்குக் கொடுத்து ஆத்துமத்துக்கு ஒன்றும் கொடாமலிருக்கிறது விமரிசையோவென்று மேற்சொன்ன அர்ச். பெர்நர்துஸ் அருளிச்செய்தார். சரீரத்துக்குத் திருத்தியாய்ச் சாப்பட்டு ஆத்துமத்தைப் பட்டினியாய்ப் போட்டுக் கொல்லுகிறது சினேகமுமல்ல, விமரிசையுமல்ல; இது நிஷ்டூரமும் புத்திக்குறைவுமாகும். இயேசுநாதர் ஒருதடவை ஓர் பெரிய தேவ தாசருக்குக் காட்சி கொடுத்து நமது ஊழியர்பேரில் ஆறு காரியத்தைக் குறித்து முறைப்படுகிறோம்; அதில் இரண்டாங் காரியமென்னவென்றால், அவர்கள் பேச்சிலே வீண் காரியங்களைப் பேசுகிறதேயல்லாமல் நமதுபேரில் பேசுகிறதில்லையென்று வெகு கோபத்தோடு சொன்னதாகத் தோலேரென்பவர் வெளிப்படுத்தியிருக்கிறார். இது காரியத்திலே கர்த்தர் நமது பேரிலே இப்படி முறைப்பட்டுக் கடிந்து கொள்ளாதபடிக்குப் பிரயாசப்படக் கடவோம்.





நாம் எப்போதும் ஞானப் பேச்சுப் பேசுவதற்கான வேறொரு வழிபாட்டை அர்ச். பேர்நர்துசும் அர்ச். பொனவெந்தூரும் போதித்திருக்கிறார்கள். அதென்னவென்றால், நாம் புறத்தியாரோடு சஞ்சரிக்கப் போகும்போது, அவர்களோடு பேசுவதற்கான யாதொரு ஞானப்பொருளை ஆயத்தம் பண்ணிக்கொண்டு போக வேண்டும்; மற்றவர்கள் வீண் காரியங்களைப் பேசும்போது, அந்தப் பேச்சை உபாயமாய்த் தடுத்து மாற்றுகிறதற்காக வேறே நல்ல பேச்சை ஆயத்தம் பண்ணிக்கொண்டு போக வேண்டும். நமது ஒழுங்கிலும் சொல்லியிருக்கிற புத்தியிதுவே. சமுசாரவாசிகள் வீணான உலக பேச்சை ஊடே கொண்டுவந்து விடுகிறதற்காகச் சிலவிசை பிரயாசப்படுகிறார்களே; சந்நியாசிகளாகிய நாம் பத்திக்கடுத்த பேச்சை மூட்டப் பிரயாசப்படுகிறது பெரிய காரியமோ? வீண் பேச்சை உபாயமாய்த் தடுத்துப் பிரயோசனமுள்ள ஞானப் பேச்சைக் கொண்டுவந்துவிடுகிறவர்கள் மாத்திரம் புத்தியும் விமரிசையுமுள்ளவர்களென்று காட்டுகிறார்கள்.

சர்வேசுரனை மிகவுஞ் சிநேகித்து மோக்ஷ நன்மையின்பேரில் வெகு பற்றுதல் வைத்திருக்கிறது ஞானப் பேச்சுப் பேசுவதற்கு உதவியான மூன்றும் வழிபாடாகும். சர்வேசுரனை வெகுவாய்ச் சிநேகிக்கிறவன் அவர்பேரில் பேசவும் பேசுகிறதைக் கேட்கவும் ஒருகாலும் சலிக்க மாட்டான்; ஏனென்றால் தான் சிநேகிக்கிறதைக் குறித்துப் பேசுகிறது ஒருவருக்கும் சலிப்பாயிராமல் எப்போதும் இன்பமும் பிரியமுமாயிருக்கும். வியாபாரி வியாபாரத்தின் பேரிலும் தன்னலுவலின் பேரிலும் எப்போதும் எவ்விடத்திலும் எவ்வளவு பிரியமாய்ப் பேசுகிறானென்று பார். விற்பனை வியாபாரம் சந்தை கடையென்று அவன் காதிலே விழும்போதெல்லாம் எவ்வளவு சந்தோஷப்படுவான்! இதினாலல்லோ கலப்பையைப் பிடித்து வேலைப்போலே நீண்ட தார்க்கோலைக் கொண்டு மாட்டை ஓட்டுகிறவன் உழவின்பேரில் பேசுவான்; மாட்டைக் குறித்தும் எருதைக் குறித்தும் பேசுவானொழிய மற்றப்படியல்ல. அவன் நினைவெல்லாம் வயலிலும் படைச்சாலிலும் மாத்திரம் இருக்குமென்று ஞானியானவர் வசனித்தார். ஒவ்வொருவனும் தன் தொழிலின்பேரில் பிரியமாய்ப் பேசுகிறது வழக்கம். புண்ணிய சாங்கோபாங்கத்தை நாடுகிறது நமது தொழிலல்லோ? இதற்காகவே நாம் உலகத்தை விட்டு வந்தோம்; ஆகையால் நாம் சர்வேசுரனைச் சிநேகித்தால், நாம் கைக்கொண்ட தொழிலின்பேரில் பிரியமாயிருந்தால், மோ






க்ஷ நன்மைகளின் பேரில் பேசுகிறதே நமக்கு வெகு பிரியமாயிருக்கும்; பேசுகிறதற்கு வேறே பொருள் அவசரமாயிராது. சர்வேசுரன்பேரில் யாதொருவர் பிரியமாய்ப் பேசிக்கொண்டுவந்தால், இது மிகவும் நல்ல அடையாளமாகும்; இந்தப் பிரியம் இல்லாவிட்டால், இது மிகவும் கெட்ட அடையாளமாமே. இதினாலல்லோ இவர்கள் உலக பற்றுதலுள்ளவர்கள்; ஆகையால் உலகத்தின்பேரில் பேசுகிறார்களென்று அர்ச். அருளப்பர் வசனித்தார். சம்மனசுகளுடைய போசனத்தைக் கொண்டு உமது பிரசைகளைப் போஷிப்பித்தீர்; அவர்கள் வேலை செய்யாதிருந்தாலும், சகல மதுரமும் அடங்கியதும் சகல உருசியுள்ளதுமாகிய அப்பத்தை ஆயத்தம்பண்ணி அவர்களுக்கு அனுப்பினீரென்று ஞானியாளவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். அகுஸ்தீன் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: வனாந்தரத்திலே சர்வேசுரன் இஸ்ராயேல் சனங்களுக்குச் சாப்பாடாகக் கொடுத்த மன்னாவென்னும்போசனத்திலே ஒவ்வொருவருக்கும் பிரியமான உருசியெல்லாம் இருந்தாலும், நல்லவர்கள் மாத்திரம் அந்த உருசியை சுகித்தநுபவித்தார்கள். கெட்டவர்கள் அதிலே உருசி கண்டுபிடிக்கவில்லை; கண்டுபிடித்திருந்தால், கறி தர வேணுமென்று ஆசித்துக் கேட்டிருக்கமாட்டார்கள். இதினால்லோ சாப்படுகிறதற்குக் கறி நமக்குக் கொடுப்பதார்? எஜிப்த்து தேசத்திலே இலவசமாய் மீன் சாப்பட்டோமே; நாம் அங்கே சாப்பட்ட பூசனிப் பழமும் வெள்ளரிப் பழமும் வெங்காயமும் வெள்ளைப்பூண்டும் நமது நினைவில் ஓடிவருகின்றதே; இப்போது இந்த மன்னாவென்னும் போசனத்தை மாத்திரம் எந்நேரமும் பார்த்து நமது மனம் சோர்ந்து வாடுகின்றதென்றார்கள். இந்தச் சனங்கள் மன்னாவென்னும் போசனத்தினாலே சகல உருசியும் கண்டுபிடிக்காததுமன்றி அது இவர்களுக்கு உருசியற்றதாயும் அருவருப்புள்ளதாயுமிருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலேதான் கறி வேணுமென்று கேட்டார்கள்; எஜிப்த்து தேசத்து உரொட்டித் துண்டை ஆசித்து நாடினார்கள். நல்லவர்களோவென்றால், மன்னாவென்னும் போசனத்தின் பேரில் வெகு பிரியமாயிருந்து தாங்கள் ஆசித்த சகல உருசியும் அதிலே கண்டுபிடித்ததினாலே, வேறொன்றையும் ஆசிக்கவுமில்லை; இது அது இல்லையென்று கஸ்திப்படவுமில்லை. நல்ல சந்நியாசிகளுக்கும் அசமந்தரும் புண்ணிய சுறுசுறுப்பற்றவர்களுமான சந்நியாசிகளுக்குமுள்ள வித்தியாசமிதுவே. சர்வேசுரன்பேரிலும் மோக்ஷ நன்மையின்பேரிலும் பேசுகிறது நல்ல சந்நியாசிகளுக்கு மகா பிரியமாயிருக்கும்; ஞா

ணப் பேச்சாகிற இந்த மன்னுவிலே அவர்கள் சகல உருசியும் கண்டுபிடிப்பார்கள் ; சர்வேசுரன் அவர்களுக்கு எல்லாத்திலும் எல்லாமுமாயிருப்பார் ; சர்வேசுரனிடத்திலே எல்லாத்தையும் கண்டுபிடிப்பார்கள். புண்ணிய சுறுசுறுப்பற்ற சந்நியாசிகள் மோக்ஷ மன்னுவாகிற பத்திக்கடுத்த பேச்சிலே ஒரு உருசியும் கண்டுபிடிக்க மாட்டார்கள்; அதை அருவருத்து வெறுப்பார்கள் ; பத்திக்கடுத்த பேச்சைவிட்டு வீண் கதையை வெகு பிரியமாய்க் கேட்பார்கள் ; இது கெட்ட அடையாளமாமே. சர்வேசுரனுக்கடுத்த பேச்சு மாத்திரம் பேசுகிற நாக்கு பாக்கியமுள்ளதென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். வீண் பேச்சு உன் காதிலே விழுந்தால், அதைக் கவனியாதே ; வேதாகமத்தின்பேரிலும் உன் ஆத்தும ஈடேற்றத்தின்பேரிலும் பேசுகிறதைக் கவனித்துக் கேள். உலக காரியங்களின்பேரில் பேசுகிறதெல்லாம் உனக்குக் கசப்பாகவும் பத்திக்கடுத்த பேச்சு உனக்கு இன்பம் நிறைந்த மதுரமாகவும் இருக்கக் கடவதென்று அர்ச். பசிலியார் அருளிச்செய்தார். மெய்யான தேவ தாசன் உலக வீண் பேச்சைச் சகிக்க மாட்டான் ; சர்வேசுரன்பேரில் பேசுகிறதே அவனுக்குப் பிரியமல்லாமல் மற்றப்படியல்ல. ஆகையால் மெய்யான தேவ பற்றுதலுள்ளவன் வியாதியும் துன்ப துரிதமும் படுந்தருணத்தில் மனிதர் பேச்சிலும் விளையாட்டிலும் ஆறுதலைத் தேட மாட்டான் ; இதின்பேரில் அவனுக்குப் பற்றுதல் இல்லாததினுலே, இதைக் கொண்டு அவனுக்கு அதிக வருத்தமுண்டாகுமல்லாமல் ஆறுதல் வராது. அவன் சினேகித்து ஆசிக்கிற சர்வேசுரன்பேரில் பேசுகிறதும் பேசுகிறதைக் கேட்கிறது மாத்திரமே அவனுக்கு ஆறுதலும் சந்தோஷமுமாயிருக்கும். சீயேனென்னும் பட்டணத்தில் பிறந்த அர்ச். கத்திரீனம்மாள் சர்வேசுரன்பேரில் பேசுகிறதற்கும் பேசுகிறதைக் கேட்பதற்கும் ஒருகாலுஞ் சலியாமல் அதின்பேரிலே மாத்திரம் பிரியப்படுவாள் ; அவளுடைய சரீர சௌக்கியத்தையும் பெலனையும் காப்பாற்றி வியாதியிலும் கஸ்தி துன்பங்களிலும் அவளுக்கு ஆறுதலை வருவிப்பதற்குப் பத்திக்கடுத்த பேச்சு நல்ல வழிபாடாயிருக்கும். வேறே அநேக அர்ச்சியசிஷ்டவர்கள் சரித்திரத்திலும் எழுதியிருக்கிறது இதுவே.

—⊂*⊃*⊂*⊃—





## ௰௪-ம் அதிகாரம்.

பிறரோடு நாம் எப்போதும் சர்வேசுரன்பேரில் மாத்திரம் பேசுகிறது முக்கியமான காரியமென்று காட்டுவதற்கான வேறொரு ஞாயஞ் சொல்லுவது.

பிறருடைய நன்மாதிரிகைக்காகவும் பிரயோசனத்துக்காகவும் சர்வேசுரன்பேரில் பேசுகிறது அவசரமாயிருப்பதுமல்லாமல், நமது புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் இப்படிப் பேசுகிறது அவசரமாமே. ஏனென்றால் தேவ சிநேகத்தை இருதயத்தில் மூட்டுகிறது ஞானப் பேச்சுக்குரிய குணமாகும். எம்மாவூசென்னும் ஊருக்குப் போன இரண்டு சீஷர்கள் இயேசுநாதருடைய திருமரணத்தைக் குறித்துப் பேசிக்கொண்டு போனதினாலே, நமதிருதயம் நமக்குள்ளே எரிந்துகொண்டிருந்ததேயென்று சொன்னார்களல்லோ? மிகவும் உருக்கமான பிரசங்கத்தைக் கேட்கிறதைவிட நாம் பேசுகிற ஞானப் பேச்சினாலே அதிக பத்தி பற்றுதல் நம்மிடத்தில் கிளம்புகிறதென்று சிலவிசை அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிறோம். அர்ச். தோமாசு சரித்திரத்தில் சொல்லியிருக்குமாப்போலே, ஆத்தும ஈடேற்றத்துக்குப் பிரயோசனமான ஞானக் காரியங்களின்பேரில் மாத்திரம் அவர் எப்போதும் எல்லாரோடும் பேசுவார்; இதினாலே அவர் மனிதரோடு பேசினபின், எளிதாய்ச் செபத்தியானஞ் செய்து வேத சாஸ்திரத்துக்கடுத்த மேலான பரம இரகசியங்களின்பேரில் வருத்தமில்லாமல் தியானிப்பார். ஏனென்றால் சர்வேசுரன்பேரிலே மாத்திரம் அவர் பேசப் பழகியிருந்ததினாலே, ஞானத் தியானத்தில் அவருக்குப் பராக்கு மூட்டுவதற்கான நினைவு ஒன்றும் வராதிருந்தது. அர்ச். சவேரியார் சரித்திரத்தில் சொல்லியிருக்கிற வெகு ஆச்சரியமான வர்த்தமானமாவது: அவர் மனுஷரோடு இடைவிடாமல் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு வந்தாலும், இடைவிடாத தியான யோகமும் பண்ணிக்கொண்டு வருவார். ஏனென்றால் அவர் அநேக காரியங்களை விசாரித்துப் பலசோலி அலுவலை நிறைவேற்றி எறக்குறைய எப்போதும் கடலிலும் பூமியிலும் பயணம் செய்து இடைவிடாமல் ஆயிரங் களைப்புக்கும் ஆபத்துக்குமுள்ளாகியிருந்தா





லும், சகலருக்கும் மிகுந்த தயவு தாக்ஷணியம் காண்பித்து வெகு மேரை மரியாதையாய் நடந்துகொண்டுவந்தாலும், மனசுக்குள்ளே எப்போதும் உள்ளடக்கமாயிருந்து தேவ சந்நிதானத்திலே எப்போதும் நடந்துகொண்டுவருவார். பிறரோடு பேசிப் புழங்கி சகல கவைகாரியங்களையும் செய்து முடித்த அந்த க்ஷணமே உருக்கமான செபத்தியானத்தில் அமிழ்ந்தி மோக்ஷ பத்தாவோடு சகசமாய்ச் சம்பாஷிப்பார். அவர் செய்துகொண்டுவந்த பலசோலி அலுவலுக்குள்ளே சர்வேசுரன்பேரில் இடைவிடாத கவனமுற்றிருந்ததினாலே, செபத்தியானம் செய்கிறது அவருக்கு வெகு எளிதாயிருந்தது. நாம் சர்வேசுரன்பேரில் இடைவிடாத கவனமுற்றிராமலும் நமது பேச்சிலே சர்வேசுரனைக் குறித்துப் பேசாமலும் வீண் காரியங்களைப் பேசிக்கொண்டுவந்தால், அதின்பின் செபமும் தியானமும் செய்கிறது நமக்கு வெகு வருத்தமாயிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால் நாம் பிறரோடு புழங்குந் தருணத்தில் தேவ பற்றுதலைக்கொண்டிருந்தால், அது அவர்களுக்கு நன்மாதிரிகையும் நமக்குப் பிரயோசனமுமாயிருக்கும்; அதுபோலே நாம் புறத்தியாரோடு சஞ்சரிக்கும்போது, உலக பற்றுதலைக்கொண்டிருந்தால், அது மனுஷருக்குத் துர்மாதிரிகையும் நமக்கு மோசமுமாயிருக்குமென்று அர்ச். இஞ்ஞாசியார் அருளிச்செய்தார். வீண் வார்த்தை மனதைக் கெடுக்கும்; நாம் பிரியத்தோடு கேட்கிறதை எளிதாய்ச் செய்துகொண்டு வருவோமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார்.

சில சமயங்களில் சமுசாரவாசிகளோடு நாம் பேசும்போது, அவர்கள் பேச்சுக்கு ஏற்றாற்போலே கொஞ்சம் பேச வேணுமென்பது மெய்தான்; ஆனால் அதின்பின் அவர்கள் நம்மோடு பத்திக்குரிய பேச்சுக்கு ஒத்துவரும்படி செய்ய வேண்டும். பேச்சிலே அவர்கள் தங்கள் மனசுபோலே நம்மை இழுத்துக்கொண்டுபோக விடப்படாது; அவர்கள் மனசுக்கான பேச்சைத் துவக்கி முடிக்கவொட்டாமல் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பத்திக்கடுத்த பேச்சை இடையிலே கொண்டுவந்துவிட்டு அவர்களை நமது நற்கருத்துக்கு ஒத்தாப்போலே பேசச் செய்ய வேண்டும். இதற்காக வெகு எச்சரிக்கையும் கவலையும் பட அவசரமில்லை, தகுந்த சமயம் வரட்டுமென்று காத்திருக்கவும் தேவையில்லை; ஏனென்றால் தகுந்த சமயம் வருமட்டும் காத்திருந்தால், சிலவிசை அந்தச் சமயம் ஒருகாலும் வராமல் துவக்கமுதல் கடைசிபரியந்தம் வெ





கு வீண்பேச்சுப் பேசிச் சர்வேசுரன்பேரில் ஒரு வார்த்தையும் சொல்லாமற் போவாயாக்கும். நாம் மெய்யான சந்நியாசிகளென்றும் நமது அந்தஸ்துக்குத் தகுந்தாற்போலே பேசுகிறோமென்றும் உலகத்துக்கடுத்த பேச்சுப் பேசி வீண்நேரம் போக்காமல் சர்வேசுரனுக்கும் ஈடேற்றத்துக்கும் அடுத்த காரியங்களைப் பேசி இவ்வுலோகத்திலே சஞ்சரிக்கிறோமென்றும் சகலரும் அறிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும். ஞானப்பேச்சைக் கேட்க மனசில்லாதவர்கள் நம்மிடத்தில் வரவும் வேண்டியதில்லை ; நாம் அவர்களோடு பேசவும் வேண்டியதில்லை. அர்ச். இஞ்ஞாசியாரைப் பார்க்க வந்தவர்கள் வீண்வார்த்தை மாத்திரம் பேசி வீண்நேரம் போக்கடித்தால், அவர் இரண்டு மூன்றுவிசை அவர்களோடு மலர்ந்த முகமாய்ப் பேசுவார். அதின்பின் அவர்கள் இன்னம் வந்து வீண்பேச்சுப் பேசினால், மரணம் தீர்வை நரகத்தின்பேரில் அவர் உடனே பேசத் துவக்குவார் ; ஏனென்றால் இந்தப் பேச்சு அவர்களுக்குப் பிரியமாயிராவிட்டால், நம்மிடத்தில் திரும்பி வரமாட்டார்கள் ; இந்தப் பேச்சு அவர்களுக்குப் பிரியமாயிருந்தால், இதினாலே அவர்கள் ஆத்தும ஈடேற்றத்துக்கு ஏதாகிலும் பிரயோசனமுண்டாகுமென்பார்.

அர்ச். சின்னப்பர் எல்லாருக்கும் எல்லாமுமானதுபோலே நாமும் எல்லாரையும் இரட்சிப்பதற்காக எல்லாருடைய குணத்துக்குங் கூடினமாத்திரம் ஒத்தாற்போலே நடக்கப் பிரயாசப்பட வேணுமென்று அர்ச். அகுஸ்தின் அருளிச்செய்தார். இதினாலே கஸ்திப்படுகிறவர்களோடு அர்ச். சின்னப்பருங் கஸ்திப்படுவார் ; ஏனென்றால் ஒருவன் கஸ்திப்படும்போது, நாமும் அவனோடு கஸ்திப்படுகிறதை அவன் கண்டால், அவனுக்கு ஆறுதல் உண்டாகும். சந்தோஷிக்கிறவர்களோடு அர்ச். சின்னப்பருஞ் சந்தோஷித்துப் பலவீனரோடு தாமும் பலவீனராகக் காட்டுவார். ஆகிலும் பிறருக்கு ஆறுதலை வருவித்து அவர்களுடைய நிர்ப்பாக்கியத்தை நீக்குவதற்கு அவசரமானமட்டும் மாத்திரம் நாம் அவர்களுக்கு ஒத்தாற்போலே நடப்பதேயல்லாமல் அவர்கள் விழுந்த குற்றத்தில் நாமும் விழப்படாதென்று நமக்குப் புத்தி சொல்லியிருக்கிறார். இச்சத்தியத்தை விளக்கிக் காட்டுவதற்காக வெகு நேர்த்தியான ஓர் உவமையை அவர் சொல்லியிருக்கிறார். அதாவது, விழுந்தவனைத் தூக்குவதற்காக வேறொருவன் குனிந்து எப்படிக் கைகொடுக்கிறானென்று பார் ; விழுந்தவனோடு தானும் விழுவானோ? இல்லை ;





காலே அகட்டி அந்தப் பெலமாய் ஊன்றிக்கொண்டு தான் விழாதப
டிக்கு எச்சரிக்கையாய்க் கைகொடுப்பான்; விழுந்தவனைத் தூக்குகிற
தற்குப் போதுமானமட்டுங் கொஞ்சமாத்திரம் குனிந்து கைகொடுப்
பான். சமுசாரவாசிகள்மட்டில் நாமும் நடக்க வேண்டிய விதம் இது
வே. அவர்கள் பக்கமாய்க் கொஞ்சமாத்திரங் குனிய வேண்டும்; அவ
ர்களைச் சர்வேசுரனுக்கு உகந்தவர்கள் ஆக்கப் போதுமானமட்டு மாத்
திரம் அவர்கள் குணத்துக்கு ஒத்தபடி நடக்க வேண்டும்; ஆகிலும் இ
ப்படி நடக்கும்போது, அவர்கள் நம்மைத் தங்கள் பாரிசமாய் இழுத்து
க்கொள்ளாமல் நமது நற்கருத்து நிறைவேறும் பொருட்டு நாமே வி
ழாதபடிக்கு ஸ்திரமாய் நிற்க வேண்டும். இது காரியத்தில் நாம் நன்று
ய் அறிந்துகொள்ள வேண்டிய சத்தியமாவது: நாம் பத்திக்கடுத்த கா
ரியங்களையல்லாமல் வேறொன்றையும் பேசுகிறதில்லையென்று நம்மோ
டு புழங்குகிறவர்கள் எல்லோரும் நன்றாய் அறிந்துகொள்ள வேண்டு
ம். இதைப்போலே அவர்களுக்கு நன்மாதிரிகையான காரியம் ஒன்று
ம் இல்லை; ஏனென்றால் சிலர் நல்ல பேச்சைக் கேட்பதற்குத் துவக்
கத்திலே பிரியப்படாதிருந்தாலும், அதின்பின் ஈடேற்றத்துக்கு அடுத்
ததொன்றே பிரதான காரியமென்று அவர்கள் அறிந்துகொண்டு நல்
லபேச்சைப் பிரியமாய்க் கேட்டு நம்மையுங் கனமாய் எண்ணுவார்க
ள். அவர்கள் பேசுகிற உலகபேச்சுக்கு நாமும் ஒத்திருந்து அவர்களை
ப்போலே நாமும் அதின்பேரில் பிரியப்படுகிறோமென்று அவர்கள் க
ண்டால், மற்ற உலோகவாசிகளோடு அவர்கள் சினேகமாயிருக்கிறது
போலே நம்மோடுஞ் சினேகமாயிருப்பார்களாக்கும்; ஆனால் நம்மை
கனமாயெண்ணமாட்டார்கள்; இதினாலே அவர்கள்பேரில் நமக்கிருந்
த அதிகாரமும் இல்லாமல்போய் அவர்கள் ஆத்துமத்துக்கு ஒரு ந
ன்மையும் நம்மாலே வர அறியாது. ஆகையால் இது காரியத்தில் இ
யேசு சபையின் கீர்த்தியை எப்போதும் அதிகரிப்பிக்கப் பிரயாசப்பட்
டுப் பூர்வீக காலத்தில் நமது சபையில் இருந்த சுவாமிமார்களுடைய
நடக்கையை நாமும் கண்டுபாவிக்கக் கடவோம். சமுசாரவாசிகள் யா
ராகிலும் அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியாவைப் பார்க்கவந்து வீணும்
வியர்த்தமுமான பேச்சுப் பேசினால், அவர்கள் பேச்சை அற்பமாகிலு
ம் அவர் கவனியாமல் தமது இருதயத்தைச் சர்வேசுரனிடத்தில் எ
ழுப்பி மனசில் சர்வேசுரனோடு பேசிக்கொண்டிருப்பார். சில இயே
சுசபைச் சுவாமிமார்கள் இதைக் கண்டு கஸ்திப்பட்டு மற்றவர்கள் சொ
ன்னதுக்கான மறுமொழி முதலாய் நீர் சொல்லவில்லையேயென்று அ






வரைக் கடிந்துகொண்டால், வீண்நேரம் போக்குகிறதைவிட மற்றவர்கள் என்னைப் பைத்தியகாரனென்றும் மரியாதையற்றவனென்றும் எண்ணுகிறது தாவிலேயென்பார். சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்காத ஒவ்வொரு க்ஷணமும் சர்வேசுரனுக்காகச் செலவழியாத ஒவ்வொரு நிமிஷமும் வீணாய்ப்போனதென்று அவர் எண்ணியிருந்தார். மாக்கேது சென்னும் மடாதிபதியின்பேரில் காசியான் சொல்லுகிறது இதற்கு ஒத்திருக்கும். அதென்னவென்றால், ஞானப்பேச்சும் புத்திபிரசங்கமும் சொல்லுகிற சமயத்திலே நான் ஒருகாலும் தூங்காமல் இருக்கவும் வீண்காரியம் பேசத்துவக்கின உடனே தூங்கவும் கிருபைசெய்ய வேணுமென்று இவர் சர்வேசுரனிடத்தில் மன்றாடி இந்த வரம் அடைந்திருந்தார்.

கடைசியாய் அர்ச். பெர்நர்துஸ் சகல சந்நியாசிகளுக்கும் பொதுவிலே சொன்ன ஓர் புத்தியை நாமுஞ் சொல்லிக் காட்டி இந்தப் போதகத்தை முடிக்கக் கடவோம். அதென்னவென்றால், சகலத்திலும் சந்நியாசிகள் நடக்கிற நடக்கையைக் காண்கிறவர்கள் எல்லாருக்கும் நன்மாதிரிகை உண்டாக வேண்டும்; சந்நியாசிகளைக் கண்டபின்னாகிலும் அவர்கள் பேச்சைக் கேட்டபின்னென்கிலும் இவர்கள் மெய்யான சந்நியாசிகளென்று ஒருவரும் சந்தேகப்படாமல் நிச்சயித்துக்கொள்ள வேணுமென்றார். அர்ச். சின்னப்பர் தீத்தூசென்பவருக்குச் சொன்ன புத்தியும் இதுவே: அதாவது, நீ சொல்லுகிற புத்தி போதகத்திலும் உன் நடக்கையிலும் மேரை மரியாதையிலும் நற்கிரிகைக்கு உன்னை மாதிரிகையாகக் காட்ட வேண்டும்; நமது விரோதிகள் நமதுபேரில் பொல்லாப்புச் சொல்லுகிறதற்கு இடமில்லாமல் வெட்கப்படும் பொருட்டு உன் பேச்சிலே குற்றங் குறையில்லாமல் செவ்வையாய் நடக்க வேணுமென்றார். இந்தப் புத்தியை அநுசரிக்கக் கடவோம். சகலத்திலும் நமது நடக்கை நன்மாதிரிகைக்குரியதாயிருக்க வேண்டும்; நமது சிநேகிதர் அதிலே குற்றங் குறை ஒன்றுங் காணாமல் இருப்பதுமன்றி நமது சத்துருக்களும் விரோதிகளும் நமது நடக்கையிலே ஒரு குறையும் இல்லையென்றும் நம்மைத் தூற்றுகிறதற்குப் பிடிமானமில்லையென்றும் கண்டு வெட்கப்பட வேண்டும்.

ஓர் அஞ்ஞான சாஸ்திரியை நோக்கி ஒருவன் உன்பேரிலே கெடுதலாய்ப் பேசுகிறானென்று சொன்னதற்கு அவன் சொன்ன மறுமொ





ழியாவது: பேசட்டும், அவன் பேச்சை ஒருவரும் நம்பாதபடிக்கு நான் வெகு நேர்த்தியாய் நடந்துகொள்ளுவேனென்றான். நாமும் இப்படி நடக்க வேண்டும்; நமது வாக்கிலுங் கிரிகையிலும் ஒரு குற்றமுங் குறையும் இருக்கப்படாது; அன்றியும் நமதுபேரில் கெடுதலாய்ப் பேசுகிறவர்களை ஒருவரும் நம்பாதபடிக்கு நமது சீவியத்திலும் நடக்கையிலும் குற்றத்தின் நிழல் முதலாய் இருக்கப் படாது. வாய் பேசாமல் கிரிகைகளைக் கொண்டு பேசுகிறதே புறணிப் பேச்சை அடக்குவதற்கான உத்தம மறுமொழியாகும்.

இரண்டாம் போதகம் முற்றிற்று.







# ௯-ம் போதகம்.

## தாழ்ச்சியின் பேரில்.

## க-ம் அதிகாரம்.

*தாழ்ச்சியின் மேன்மையின்பேரிலும் அது நமக்கு எவ்வளவு அவசரமென்பதின் பேரிலும்.*

**நா**ம் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவராயிருக்கிறோமென்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள் ; மன அமரிக்கையைக் கண்டுபிடிப்பீர்களென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். இது காரியத்திலே அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது : பூமியிலே இரட்சகர் சஞ்சரித்த ஆயுசு காலமெல்லாம் நன்னடக்கைக்கு இடைவிடாத போதகமாயிருந்தது ; ஆனால் விசேஷமாய்த் தமது தாழ்ச்சியை நாம் கண்டுபாவிக்க வேணுமென்று போதித்தருளினாரென்றார். இந்தப் புண்ணியத்தின் மேன்மையையும் இது நமக்கு எவ்வளவு அவசரமாயிருக்கிறதென்பதையும் நன்றாய்க் கண்டுபிடிப்பதற்காகத் தேவசுதன் தமது வாக்கினாலும் விசேஷமாய்த் தமது கிரிகையினாலும் இந்தப் புண்ணியத்தை நமக்குக் கற்றுக் கொடுப்பதற்காக மோக்ஷத்திலிருந்து பூமியில் இறங்கி வந்தாரென்றும் அவருடைய ஆயுசுகாலமெல்லாம் தாழ்ச்சிக்கு மாதிரிகையாயிருந்ததென்றும் உற்றுப்பார்த்தாலே போதும். இச்சத்தியத்தை ஒப்பிப்பதற்காக அர்ச். பசிலியார் இயேசுநாதருடைய சீவிய காலத்தைப் பரிசோதித்து அவர் பிறந்த நேரமுதல் சாகிறவரைக்கும் அவர் ஆயுசுகாலத்தில் உள்ள பிரதான சமயாசமயங்களை உற்றுப்பார்த்து அவருடைய கிரிகைகளிலெல்லாம் விசேஷமாய் இந்தப் புண்ணியத்தை நமக்குப் போதித்திருக்கிறாரென்று விளக்கிக் காட்டியிருக்கிறார். ஏழையான தாயிடத்தில் மாட்டுக்கொட்டிலிலே மாட்டுத் தொட்டியி





லே பிறந்து கந்தைத் துணிகளைப் போர்த்திக்கொள்ளச் சித்தமானார். பாவிபோலே விருத்தசேதனப் படவும் பலவீனன்போலே எஜிப்த்து தேசத்துக்கு ஓடிப்போகவும் பாவிகளுக்குள் ஒருவனைப்போலே ஞானஸ்நானம் பெறவுஞ் சித்தமானார். அதின்பின் மனுஷர் அவரைக் கனம்பண்ணி அவரை இராசாவாக ஏற்படுத்தத் தேடும்போது, அவர் ஒளிந்துகொண்டார் ; அவருக்கு நிந்தையவமானஞ் செய்யத் தேடும்போது, பிரஸ்தாபமாய் எதிர்கொண்டு வந்தார். மனுஷர் அவரைப் புகழ்ந்துகொள்ளும்போதும் ஆவேஷமேறினவர்கள் வாயாலே பசாசு அவருக்குப் புகழ்ச்சி பாராட்டும்போதும் பேச வேண்டாமென்று கற்பித்தார். அவரை நிந்தையவமானப்படுத்தும்போது, ஒரு வார்த்தையுஞ் சொல்லாமலிருந்தார். அவர் சாவதற்குமுன், தாழ்ச்சியை நமக்கு விசேஷித்துப் போதிப்பதற்காகத் தமது சீஷர்களுடைய காலுக்குக் கீழே தம்மைத் தாழ்த்தி அதைக் கழுவி எல்லாத்லதப் பார்க்கிலும் அவமானத்துக்குரிய சிலுவை மரணம் அடைந்து சிலுவையாகிற பிரசங்கத்தொட்டியிலிருந்து தாழ்ச்சியென்னும் புண்ணியத்தின் பேரில் கடைசிப் பிரசங்கம் பண்ணினார். இதினிமித்தமாக அவர் முந்த முந்தத்தமது மாதிரிகையினாலும் அதின்பின் தமது வாக்கினாலும் போதிப்பதற்காகத் தம்மை ஒன்றுமில்லாதவனாக்கினாரென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். ஆனால் ஆண்டவரே, அளவிறந்த மகத்துவமுள்ள தேவரீர் உம்மைத் தானே ஏன் இவ்வளவு தாழ்த்தினீர் ? பூமியிலே ஒருவரும் தன்னை உயர்த்தாதபடிக்கு நாம் நம்மை அளவிறந்த விதமாய்த் தாழ்த்தினோமென்கிறார். எக்காலத்திலும் வீண் மகிமையைத் தேடித் திரிகிற பைத்தியம் மனுஷனிடத்தில் உண்டாயிருந்தது மெய்தான். ஆனால் நித்திய மகத்துவராகிய சர்வேசுரன் தம்மைத் தாழ்த்தி ஒன்றுமில்லாதவராய்ப் போனதைக் கண்டபின், நிலத்தில் உதிக்கிற புழுவாகிய மனுஷன் ஆங்காரங் கொள்ளுகிறது பொறுக்கக்கூடாத வெட்கக்கேடல்லோவென்று மேற்சொன்ன அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். பிதாவுக்குச் சரிசமான தேவசுதன் அடிமை வேஷங்கொண்டு தாழ்மையும் நிந்தையும் பட்டிருக்கையிலே, தூசியும் சாம்பலுமாகிய நான் மகிமையையுஞ் சங்கையையும் ஆசிக்கலாமோ ?

நாமே தாழ்ச்சிக்கு உபாத்தியாயரென்றும் நம்மிடத்தில் மாத்திரம் இந்தப் புண்ணியத்தைக் கற்றுக்கொள்ள வேணுமென்றும் உலக இரக்ஷகர் சொன்னது ஞாயந்தானே ; ஏனென்றால் சொக்கிறுத்தேஸ்

பிளாத்தோ அரிஸ்தோத்தேலெஸ் முதலிய ஞான சாஸ்திரிகளுக்கு இந்தப் புண்ணியத்தைக் கற்றுக் கொடுக்கத் தெரியாமல்போயிற்று. மனத்திடாரிக்கம் ஒறுத்தல் நீதி முதலிய புண்ணியங்களை அவர்கள் அநுசரித்து வந்தாலும், தாழ்ச்சி யென்னும் புண்ணியத்தை அநுசரிக்க மாட்டாமல் கீர்த்தி மகிமையை விசேஷமாய்த் தேடித் திரிந்தார்கள். தியோஷேன் என்பவனும் வேறு சில சாஸ்திரிகளும் மனுஷருடைய மேலான எண்ணத்தை வெளிப் பார்வைக்கு நிந்தித்துக்கொண்டுவந்ததினாலே, உலோகத்தையும் தங்களையும் பிறக்கணித்தார்களென்று வெளிப் பார்வைக்குத் தோன்றினது மெய்தான் ; ஆனால் இது காரியத்திலே மற்றவர்கள் மகிமையைத் தேடுகிறதுபோலே, இவர்கள் தேடாமல் வேறே விதமாய்த் தேடிவந்தார்களென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்விஷயத்தை மனுஷர் அவர்களுக்குச் சொல்லி இடித்துக் காட்டியிருக்கிறார்கள். இவ்வண்ணமே தியோஷேனும் வேறு சில சாஸ்திரிகளும் விருந்துக்கு வர வேணுமென்று பிலாத்தோ என்பவன் கேட்டுக்கொண்டு தன் வீட்டிலே விலையேறப்பெற்ற இரத்தினக்கம்பளிகளை விரித்துச் சிங்காரித்தான். தியோஷேனென்பவன் தன்பேரில் சேறுஞ் சகதியும் பூசிக்கொண்டு அசுத்தமாய் அந்த வீட்டில் பிரவேசித்து ஒரு இரத்தினக்கம்பளியை இழுத்துப்போட்டுக் காலுக்குக் கீழே வைத்து மிதித்தான். என்ன செய்கிறாயென்று பிலாத்தோ கேட்டதற்கு பிலாத்தோவுடைய ஆங்காரத்தைக் காலுக்குக் கீழே வைத்து மிதிக்கிறேனென்றான். அதற்குப் பிலாத்தோ சொன்னதாவது : ஆமா, நீ வேறொரு வித ஆங்காரத்தைக் கொண்டு என் ஆங்காரத்தை மிதிக்கிறாயென்றான். தன்னைத் தானே மெய்யாகவே நிந்திக்கிறது கிறீஸ்துவர்களுக்குரிய தாழ்ச்சியாகும். அஞ்ஞான சாஸ்திரிகள் தாழ்ச்சி யென்கிற புண்ணியம் இன்னதென்று சுத்தமாய் அறியாமலிருந்ததுமன்றி அதின் பேர் முதலாய் அவர்களுக்குத் தெரியாமல்போனது. இது கிறீஸ்துவர்களுக்கு மாத்திரம் உரிய புண்ணியம் ; இயேசுநாதருக்கு முன்னே இந்தப் புண்ணியத்தை ஒருவரும் போதித்ததில்லை. இதினாலல்லோ அவர் மலையில் செய்த ஆச்சரியமான பிரசங்கத்தின் துவக்கத்தில் மனத் தரித்திரமுள்ளவர்கள் பாக்கியவான்களென்று திருவுளம்பற்றினார். அர்ச். அகுஸ்தீனும் அர்ச். எரோணிமுசும் அர்ச். கிரெகோரியாரும் வேறே அநேக அர்ச்சியசிஷ்டவர்களும் சொல்லுமாப்போலே, இவ்வாக்கியத்தில் மனத் தரித்திரமுள்ளவர்களென்பதற்குத் தாழ்ச்சியுள்ளவர்களென்று அர்த்தமாகும். ஆகையால் இரட்சகர் முந்த முந்தத் தாழ்ச்சி

யென்னும் புண்ணியத்தைப் போதித்ததுமன்றி அதை எப்போதும் போதித்து முடித்தார் ; அவருடைய சீவியகால முழுதும் வேறொன்றையும் நமக்குப் போதிக்கவில்லை ; இந்தப் புண்ணியதை விசேஷமாய் அவரிடத்தில் நாம் கற்றுக்கொள்ள வேணுமென்று திருவுளமாயிருக்கிறார். அர்ச். அகுஸ்தீன் சொல்லுமாப்போலே, பரலோகத்தையும் பூலோகத்தையும் படைக்கவும் காணப்படும் வஸ்துக்கள் காணப்படாத வஸ்துக்கள் எல்லாத்தையுமுண்டாக்கவும் புதுமை செய்யவும் செத்தவர்களை உயிர்ப்பிக்கவும் நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்களென்று அவர் சொல்லாமல் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவராயிருக்கிறேமென்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்களென்றார். ஏனென்றால் காற்றும் ஆங்காரமும் நிறைந்த மேன்மையைவிட ஸ்திரமான தாழ்ச்சி வெகுபெலனும் மோசமற்றதுமாயிருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை. புதுமை செய்கிறதை விட தாழ்ச்சியாயிருந்து பயத்தோடு சர்வேசுரனுக்கு ஊழியம் பண்ணுகிறது தாவிளை. புதுமை செய்கிறதை விட தாழ்ச்சியாயிருப்பது மோசமில்லாத பாதை ; புதுமை செய்கிறது மிகவும் வருத்தமும் ஆபத்துமுள்ள பாதையாகும்.

தாழ்ச்சியென்கிற புண்ணியம் நமக்கு எவ்வளவு அவசரமாயிருக்கிறதென்று கொஞ்சம் விசேஷித்து விளக்கிக் காட்டக் கடவோம். இது நமக்கு முழுதும் அவசரமான புண்ணியமாயிருக்கிறதினாலே, இதையல்லாமல் ஞான சீவியத்தில் ஒரு அடி முதலாய் வைக்கலாமென்று நம்பப் படாது. நாம் எந்தெந்த புண்ணியம் செய்கிறதற்கு முன்னேயும் தாழ்ச்சி அவசரம், எந்தெந்தப் புண்ணியத்தைச் செய்யும்போதும் தாழ்ச்சி அவசரம், எந்தெந்தப் புண்ணியத்தைச் செய்தபிறகும் தாழ்ச்சி அவசரம் ; ஏனென்றால் நமது புண்ணியத்திலே ஆங்காரங் கலந்திருந்தால், அது நமது புண்ணிய பேறுகளெல்லாத்தையும் நமது கையிலிருந்து பறித்துக்கொள்ளுமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். நம்மிடத்தில் ஆங்காரமிருந்தால், நாம் புண்ணியக் கிரிகைகளைச் செய்கிறது வீணாயிருக்கும். கெட்ட கிரிகை மற்றத் துர்க்குணத்துக்கு விஷயமாயிருக்கும் ; நற்கிரிகை ஆங்காரத்துக்கு விஷயமாகும். ஆகையால் ஆங்காரத்துக்கும் வீண்மகிமைக்கும் நாம் வெகுவாய்ப் பயப்பட வேணுமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். நாம் நற்கிரிகை செய்யும்போது, ஆங்காரத்தை வெகு எச்சரிக்கையோடு விலக்க வேண்டும். புகழ்ச்சியின்பேரில் ஆசைப்பட்டால், நாம் செய்த நற்கிரிகையினால் வ



றும் பலனெல்லாம் இழந்துபோவோம்; மற்றத் துர்க்குணங்களையெல்லாம் எளிதாய் அறிந்துகொள்ளலாம்; அதுகள் எப்போதும் பாவத்தோடு சேர்ந்திருக்கும்; ஆகையால நமக்கு மனதுண்டானல், அதுகளை விலக்குகிறது எளிதாயிருக்கும். ஆனல் ஆங்காரம் வழக்கமாய் நற்கிரிகைகளோடு கலந்திருந்து அதுகளைக் கெடுப்பதற்கு இடைவிடாமல் கண்ணி வைக்கும். கிறிஸ்துவனொருவன் இவ்வுலோகமாகிற சமுத்திரத்திலே சுகமே யாத்திரை செய்து அவன் போய்ச்சேர வேணுமென்று எப்போதும் அசித்திருந்த மோக்ஷத்தை நாடி நடக்கிறனென்று வைத்துக்கொள்ளுவோம். திடீரென்று ஆங்காரமாகிற காற்றும் மனிதருக்குப் பிரியப்பட வேணுமென்கிற ஆசையும் தன் புண்ணியக் கிரிகைகளை நினைத்து வீண் சந்தோஷமும் அவனிடத்திலெழும்பினல், யாத்திரையின் நடுவிலே அவன் நிர்ப்பாக்கியமாய்க் கடலில் அமிழ்ந்திப் போவான். தாழ்ச்சியில்லாமல் வெகு புண்ணியக் கிரிகைகளைச் செய்கிறவன் காற்றிலே தூசியைத் தூற்றுகிறவனுக்கு ஒப்பாயிருக்கிறன்; அவன் புண்ணியமெல்லாம் காற்ரேடே காற்ருய்ப் போகுமென்று அர்ச். கிரெகோரியாரும் அர்ச். பெர்நர்துசும் வசனித்தார்கள்.

——00000——

## உ-ம் அதிகாரம்.

——0000——

### தாழ்ச்சி சகல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரமென்பதின் பேரில்.

——000——

**தா**ழ்ச்சி அர்ச்சியசிஷ்டத்தனத்துக்கு அஸ்திவாரமென்று அர்ச். சிப்பிரியான் வசனித்தார். தாழ்ச்சி கிறீஸ்துவர்களுக்கு முதல் புண்ணியமென்று அர்ச். எரோணிமுஸ் அருளிச்செய்தார். தாழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமும் ஆதாரமுமென்று அர்ச். பெர்நர்துஸ் சொல்லியிருக்கிறர். தாழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமென்று இந்த மூன்று அர்ச்சியசிஷ்டவர்களும் ஒத்துக்கொண்டார்கள். தாழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் எசமாட்டியுந் தாயுமென்றுஞ் சகல புண்ணியத்துக்கும் வேரும் ஊற்றுமென்றும் அர்ச். கிரெகோரி





யார் அருளிச்செய்தார். தாழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் வேரென்று சொல்லுகிறது சரியான உவமையாகும். இது தாழ்ச்சியின் குணகுணங்களை நன்றாய் விளக்கிக் காட்ட உதவும். ஏனென்றால் அர்ச். கிரேகோரியார் சொல்லுமாப்போலே, பூவுக்குள்ள அழகும் பளபளப்பும் வேரினாலே உண்டாகும்; பூவைப் பறித்தால், கொஞ்சத்துக்குள்ளே வாடிப்போகும். இவ்வண்ணமே எந்தப் புண்ணியத்தையும் தாழ்ச்சியாகிற வேரைவிட்டுப் பறித்தால், அதிசீக்கிரமாய் வாடி கொஞ்சத்துக்குள்ளே கெட்டுப்போகும். அன்றியும் வேர் பூமிக்குள்ளே பதிந்திருக்கும்; மனுஷர் எப்போதும் அதின்மேலே நடப்பார்கள்; வழக்கமாய் அதுக்கு அழகும் வாசனையுமில்லை; இப்படியிருந்தாலும், அது மரத்தின் உயிரைக் காப்பாற்றி வளரச்செய்யும். இவ்வண்ணமே தாழ்ச்சியுள்ளவன் பூமிக்குள்ளே மறைந்தாற்போலே, மனுஷருடைய கண்ணுக்கு மறைந்திருக்கவும் எல்லாருடைய காலுக்கும் கீழாக மிதிபட்டு நிந்தைப்படவும் ஆசைப்படுவான்; அவன் மகிமையை விலக்கி அவமானத்தைத் தேடுவான்; ஆகிலும் அவனிடத்திலுள்ள தாழ்ச்சி சகல புண்ணியங்களையுங் காப்பாற்றி நாளுக்குநாள் வளரச்செய்யும். கடைசியாய் மரம் வளர்ந்து வெகுநாள் நிலைத்திருந்து வெகு பழம் பழுக்கும்பொருட்டு அது நன்றாய் வேரூன்றி இருக்கவேண்டும். வேர் பூமிக்குள்ளே எவ்வளவு ஆழமாயிறங்குமோ, அவ்வளவு காலம் நீளித்திருந்து அவ்வளவு பழம் பழுக்கும். இதினாலல்லோ மரம் கீழே வேர்விட்டு மேலே பழம் பழுக்குமென்று இசாயாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். இவ்வண்ணமே மற்றப் புண்ணியங்கள் இருதயத்தில் நிலைத்திருந்து வளர்ந்து பழம் பழுக்கும்பொருட்டுத் தாழ்ச்சி அதில் நன்றாய் வேரூன்றியிருப்பது அவசரம். தாழ்ச்சி இருதயத்திலே எவ்வளவு ஆழமாய் வேரூன்றியிருக்குமோ, அவ்வளவுக்குப் புண்ணியங்களும் அதில் வளர்ந்து எந்நேரமும் ஸ்திரப்படும். ஆகையால் சகல அர்ச்சியசிஷ்டவர்களும் போதித்திருக்கிறதுபோலே, தாழ்ச்சி சகல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரமும் ஊற்றும் வேருமாயிருக்கிறதென்பது சத்தியம். ஆங்காரம் சகல பாவத்துக்கும் துவக்கமென்று ஞானியானவர் வசனித்தார்.

ஆனால் விசுவாசம் சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமென்பது நிச்சயமாகக்கொள்ள, தாழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமென்று எப்படிச் சொல்லலாமென்று கேட்பாயாக்கும். இதினாலல்லோ போட்டிருக்கிற அஸ்திவாரமாகிய இயேசுநாதரை அல்லாமல்



வேறெந்த அஸ்திவாரத்தையும் ஒருவரும் போடப்படாதென்று அர்ச்.
சின்னப்பர் அருளிச்செய்தார். இதற்கு அர்ச். தோமாஸ் சொல்லும்
மறுமொழியாவது : வீட்டுக்கு நன்றாய் அஸ்திவாரம் போடுவதற்கு இ
ரண்டு காரியம் அவசரம். முந்த முந்தப் பூமியை வெட்ட வேண்டும் ;
அதுக்குள்ளிருக்கிற மணல் களிமண் முதலிய இலேசான வஸ்துக்களை
யெல்லாம் வெளியே வாரிப்போட வேண்டும் ; அஸ்திவாரம் போடுவ
தற்குக் கெட்டியான தரை காணுமட்டும் எப்போதும் வெட்டிப் பறிக்
க வேண்டும். இரண்டாவது, பூமியை நன்றாய் வெட்டி இலேசான ம
ணல் முதலிய வஸ்துக்களை வெளியே எடுத்துக் கொட்டினபின், முத
ல் கல் வைக்க வேண்டும் ; அதின்மேல் வேறே கல் வைத்துக் கட்டி
அஸ்திவாரம் போட வேண்டும். தாழ்ச்சியினாலும் விசுவாசத்தினாலும்
ஞான அரமனைக்கு அஸ்திவாரம் போடுகிற விதம் இதுவே. தாழ்ச்சியி
னாலே பூமியை வெட்ட வேண்டும் ; அஸ்திவாரம் பறிக்கிறது தாழ்ச்சி
தானே ; மனுஷனுடைய பலவீனமாகிற இலேசான மணல் எல்லாத்
தையும் மனுஷன் இருதயத்திலிருந்து வெளியே வெட்டித்தள்ளுகிறது
தாழ்ச்சியாகும். ஏனென்றால் உன் பலத்தை நம்பி புண்ணியத்துக்கு
அஸ்திவாரம் போடவொண்ணாது ; உன் சொந்த பலம் காற்றில் பறக்
கிற மணலுக்கு ஒப்பாகும். ஆகையால் உன் பேரில் நம்பிக்கையாகிற
இந்த மணலைத் தள்ளி உன் பேரில் நம்பாமையாகிற கெட்டித் தரை
யின்மேலே அஸ்திவாரம் போட வேண்டும் ; உன் பேரில் தாழ்மையா
ன எண்ணங் கொண்டு உன் பலத்தை நம்பாமலிருந்தால், இதுவே ச
கல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரம் போடுவதற்கான கெட்டித் த
ரையாகும் ; இதின்மேல் அஸ்திவாரக் கல்லாகிய இயேசுநாதரை வை
த்து ஞான மாளிகை கட்டலாம் ; அதாவது, இயேசுநாதர் பேரிலுள்ள
விசுவாசமாகிற அஸ்திவாரக் கல்லைத் தாழ்ச்சியாகிற கெட்டித் தரை
மேல் வைத்துக் கட்ட வேண்டும். ஆகையால் விசுவாசமாகிற அஸ்தி
வாரக் கல்லைப் போடுவதற்குத் தாழ்ச்சியைக் கொண்டு முந்த முந்த
அஸ்திவாரம் பறிக்க வேண்டியிருப்பதினாலே, தாழ்ச்சி ஞான மாளிகை
யாகிற சகல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரமென்பது ஞாயந்தானே.
தாழ்ச்சியால் பூமியை வெட்ட வேண்டும் ; அதாவது, மனுஷன் முந்த
முந்த தன் நீசத்தனத்தையும் ஒன்றுமில்லாமையையும் பற்றும் பற்றா
ய் யோசித்து நன்றாய் அறிந்துகொள்ள வேண்டும் ; இப்படி அஸ்தி
வாரம் வெட்டினபின், அதிலிருக்கிற இலேசான மணல் முதலிய வஸ்
துக்களை யெல்லாம் வெளியே எடுத்துத் தள்ள வேண்டும் ; அதாவது,





மனுஷன் தன் பேரிலுள்ள நம்பிக்கையையெல்லாந் தள்ளித் தன் பேரில் நம்பாமையாகிற கெட்டித் தரையைக் கண்டுபிடிக்க வேண்டும்; இதின்பேரில் இயேசுநாதராகிற அஸ்திவாரக் கல்லைப் போட்டு ஞான மாளிகையாகிற புண்ணிய சாங்கோபாங்கத்தைக் கட்டலாம். இதின் மேல் கட்டுகிற ஞான மாளிகை அசைய மாட்டாது; இதின் அஸ்திவாரம் ஸ்திரமாயிருக்கிறதினாலே, எந்தப் புசலும் எவ்வளவு பிரவாகமான வெள்ளமும் இதை ஒருகாலும் விழத்தாட்ட அறியாது. ஆனால் தாழ்ச்சியில்லாமல் கட்டுகிற ஞான மாளிகை காற்றிலே பறக்கிற மணல் மேலே கட்டியிருக்கிறதினாலே, கொஞ்சத்துக்குள்ளே அது முழுதும் இடிந்து விழும்.

தாழ்ச்சியின்பேரில் ஊன்றியிராத புண்ணியமெல்லாம் புண்ணியமென்று தோன்றினாலும், அது மெய்யான புண்ணியமல்ல. பூர்வீக ரோமானரிடத்திலும் அஞ்ஞான சாஸ்திரிகளிடத்திலும் இருந்த புண்ணியம் மெய்யான புண்ணியமல்ல; ஏனென்றால் சகல புண்ணியங்களுக்கும் உயிர் கொடுக்கிற தேவ சிநேகம் அவர்களிடத்தில் இல்லாததுமன்றி தாழ்ச்சியாகிற அஸ்திவாரமும் அவர்கள் புண்ணியத்துக்குக் கிடையாது. அவர்கள் அநுசரித்துவந்த நீதி ஒறுத்தல் முதலிய புண்ணியங்களில் புகழ்ச்சியையும் கீர்த்தியையும் மாத்திரந் தேடினார்கள். இதினாலே அது மெய்யான புண்ணியமாயிராமல் ஒட்டைப் புண்ணியமாகவும் புண்ணியத்தின் வீண் தோற்றமாகவுமாத்திரம் இருந்தது. அது புண்ணியத்தின் அடையாளமாய் மாத்திரம் இருந்ததினாலே, சர்வேசுரன் அவர்களுக்கு மெய்யான பாக்கியத்தைக்கொடாமல் அழிந்துபோகிற வீண் நன்மையாகிய இவ்வுலோக பாக்கியத்தை மாத்திரம் அந்தப் புண்ணியத்துக்குச் சம்பாவனையாகக் கொடுத்தாரென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆகையால் மெய்யான புண்ணியங்களைக் கொண்டு உன் ஆத்துமத்தில் ஞான மாளிகை கட்ட வேணுமானால், முந்த முந்தத் தாழ்ச்சியாகிற ஸ்திரமான அஸ்திவாரத்தை அதில் போடப் பிரயாசப்படு. இது காரியத்தில் அர்ச். அகுஸ்தின் சொல்லுகிறதாவது: பெரிய காரியம் செய்ய நீ தேடினால், முந்த முந்தச் சின்னக் காரியம் செய்; மிகவும் உயர்ந்த மாளிகை கட்ட உனக்கு ஆசையுண்டானால், முந்த முந்தத் தாழ்ச்சியாகிற தாழ்ந்த அஸ்திவாரம் போட மறவாதே. நீ கட்டத் தேடுகிற மாளிகையின் கனத்துக்குத் தக்கது அஸ்திவாரம் பறிக்க வேண்டும்; எவ்வளவு உயர்ந்த மாளிகை கட்ட வேணு

மோ, அவ்வளவு தாழ்ந்த அஸ்திவாரம் போட வேணுமென்றார். மாளிகையின் உயரத்துக்குத் தகுந்தாப்போலே அஸ்திவாரத்தில் ஆழம் இருக்கவேண்டும். ஆகையால் உன்னிடத்தில் எவ்வளவு ஆழ்ந்த தாழ்ச்சியாகிற அஸ்திவாரம் இருக்குமோ, அவ்வளவு உயர்ந்த புண்ணிய சாங்கோபாங்கமாகிற மாளிகையைக் கட்டலாம். அர்ச். தோமாசு சொல்லுமாப்போலே, மகிமைப்பட விரும்பி நிந்தை அவமானத்தை விலக்கி அதைப் பட்டநுபவிக்கிறதற்குக் கஸ்திப்படுகிறவன் என்னென்ன நற்கிரிகைகளைச் செய்தாலும், அதுக்குத் தாழ்ச்சியாகிற அஸ்திவாரம் இல்லாததினாலே, இவனுக்கும் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் வெகுதூரமாயிருக்கும்.

## ௩-ம் அதிகாரம்.

ஒவ்வொரு பிரதான புண்ணியத்தையும் பரிசோதித்து அதுக்குத் தாழ்ச்சியென்கிற புண்ணியம் எப்படி அஸ்திவாரமாயிருக்கிறதென்று விசேஷித்து விளக்கிக் காட்டுவது.

**தா**ழ்ச்சி சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமாயிருக்கிறதென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொன்ன சத்தியத்தை நாம் தெளிவாய்க் கண்டுபிடித்து அது நமக்கு எவ்வளவு அவசரமென்று அறிந்துகொள்ளுவதற்காக ஒவ்வொரு பிரதான புண்ணியத்தையும் இப்போது சுருக்கமாய்ப் பரிசோதித்துப் பார்க்கக் கடவோம். முந்த முந்த விசுவாசத்துக்குத் தாழ்ச்சி அவசரம். குழந்தைகள் விசுவாச முயற்சி செய்யாமல் ஞானஸ்நானம் பெறும்போது, விசுவாசமாகிற வரத்தை சும்மா அடைந்துகொள்ளுகிறதினாலே, இவர்களுடைய விசுவாசத்தைக் குறித்து நாம் இங்கே பேசாமல் புத்திவிவரம் அறிந்தவர்கள் விசுவாச வரம் அடைவதற்குத் தாழ்ச்சி அவசரமென்று சொல்லுகிறோம். இதினாலல்லோ இயேசுநாதருக்குக் கீழ்ப்படியும்படியாய் விசுவாசம் புத்தியை அடிமைப்படுத்துமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். விசுவா

சத்தை அடைவதற்கு மனுஷனுடைய புத்தி தாழ்ந்து கீழ்ப்படிய வேண்டும். விசுவாச வரம் அடைவதற்கு ஆங்காரம் விக்கினமாயிருக்கின்றது. இதினாலல்லோ சர்வேசுரனிடத்திலிருந்து மாத்திரம் வருகிற மகிமையைத் தேடாமல் ஒருவரொருவரிடத்தில் மகிமையைத் தேடித் திரிகிற நீங்கள் எப்படி விசுவசிக்கக் கூடுமென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். விசுவாச வரம் அடைவதற்குத் தாழ்ச்சி அவசரமாயிருக்கிறதுமன்றி அதைக் காப்பாற்றுவதற்கும் அவசரமாகும். இதினாலல்லோ ஆங்காரம் சகல பதிதமார்க்கத்துக்கும் காரணமென்று சகல அர்ச்சியசிஷ்டவர்களும் நிரூபித்தார்கள்; ஏனென்றால் மனுஷன் தன்னையும் தன் புத்தியையும் வெகு கனமாய் எண்ணித் திருச்சபையின் எண்ணத்துக்குத் தன் புத்தியைக் கீட்படுத்தாத ஆங்காரத்தினாலே பதிதமார்க்கமெல்லாம் முளைக்கும். அர்ச். சின்னப்பர் சொல்லுகிறதும் இதுவே: அதாவது, கடைசிக் காலத்திலே கஸ்திக்குரிய சமயம் நேரிடும்; தங்களைச் சிநேகிக்கிறவர்களும் பொருளாசைக்காரரும் ஆங்காரிகளும்அகந்தை உள்ளவர்களும் எழும்புவார்களென்று அறிந்துகொள்ளென்றார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: சகல பதித மார்க்கங்களுக்கும் தப்பறைக்கும் ஆங்காரமும் அகந்தையும் விசேஷ காரணமென்று அர்ச். சின்னப்பர் சொல்லியிருக்கிறாரென்றார். நம்பிக்கையாகிற புண்ணியமும் தாழ்ச்சியாகிற அஸ்திவாரத்தில் ஊன்றியிருக்கின்றது; ஏனென்றால் தாழ்ச்சியுள்ளவன் தன் நிர்ப்பாக்கியத்தையும் பலவீனத்தையும் அறிந்துகொள்ளுவான்; தன்னாலே ஒன்றும் ஆகாதென்று நிச்சயித்துக்கொண்டு வெகு ஆவலோடு சர்வேசுரனை நாடி அவர்பேரில் தன் நம்பிக்கையெல்லாம் வைப்பான். தேவ சிநேகம் தாழ்ச்சியினாலே வெகுவாய் ஓங்கிவளரும்; ஏனென்றால் தாழ்ச்சியுள்ளவன் தன்னிடத்தில் உள்ளதெல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறதென்றும் தான் அதற்கு அபாத்திரவானென்றும் கண்டு தன் நல்லுபகாரியாகிய சர்வேசுரனைச்சிநேகிக்க வருந்துவான். இதினாலல்லோ தேவரீர் மனுஷனைக் கனம்பண்ணி உமது பற்றுதலை அவன்பேரில் வைப்பதற்கு அவன் ஆரென்றுயோபென்பவர் சர்வேசுரனை நோக்கிச் சொன்னார். என்ன! ஆண்டவரே, நான் எப்போதும் உமக்குப் பொருந்தாதவனாயிருக்கிறேன்; தேவரீர் எப்போதும் என்பேரில் பட்சமாயிருக்கிறீர்! நான் எப்போதும் உமக்குப் பொருந்தாத குற்றங்களைச் செய்துகொண்டு வருகிறேன்; தேவரீர் எப்போதும் உமது வரப்பிரசாதங்களால் என்னை நிரப்புகிறீர்! அர்ச்சியசிஷ்ட

வர்கள் தேவசிநேக அக்கினியைத் தங்கள் இருதயத்தில் மூட்டுவதற்காக விசேஷமாய் மேற்சொன்ன யோசனைசெய்துகொண்டு வருவார்கள். தங்களுடைய நீசத்தனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் அவர்கள் எவ்வளவு யோசிப்பார்களோ, அவ்வளவுக்குத் தங்கள் நீசத்தனத்தை ஏறெடுத்துப் பார்த்தருளின சர்வேசுரனைச்சிநேகிக்க வருந்துவார்கள். இதினிமித்தமாகக் கர்த்தர் தமது அடிமையின் நீசத்தனத்தைப் பார்த்ததினாலே என் ஆத்துமம் அவரைத் தோத்திரிக்கிறதென்று தேவமாதா திருவுளம்பற்றினாள், பிறசிநேகத்துக்குத் தாழ்ச்சி எவ்வளவு அவசரமென்று எளிதாய் அறிந்துகொள்ளலாம். பிறருடைய குற்றங்குறைகளைக் கண்டு அவர்களைக் கனமாயெண்ணாததினாலே, பிறசிநேகம் நம்மிடத்தில் குறைந்துபோகிறது வழக்கம். ஆனால் தாழ்ச்சியுள்ளவன் இப்படி நடக்க மாட்டான்; அவன் தன் குற்றத்தைக் கவனித்துப் பார்க்கிறதேயல்லாமல் பிறர் குற்றத்தை ஒருகாலும் பார்க்க மாட்டான்; பிறரிடத்தில் நன்மையையும் புண்ணியத்தையுமாத்திரம் அவன் காண்பான்; மற்றவர்களெல்லாரும் புண்ணிய சாங்கோபாங்கரென்றும தான் மாத்திரம் குற்றங் குறையுள்ளவனென்றும் கெட்டவனென்றும் நிச்சயித்துக்கொண்டு தன் சகோதரரோடு கூடியிருக்கத் தான் அபாத்திரவானென்று எண்ணி அவர்களைக் கனம்பண்ணிச் சங்கித்து அவர்கள்பேரில் சிநேகத்தினாலே நிறைந்திருப்பான். இதுவுமன்றிச் தாழ்ச்சியுள்ளவன் சகலரையும் தனக்கு மேலாக நடத்தி அவர்களைக் கனம்பண்ணித்தன்னைச் சட்டைபண்ணாமல் மற்றவர்களுக்கு மேலான அலுவலையுந் தனக்குத் தாழ்ந்த வேலையையுங் கொடுக்கிறதினாலே கஸ்திப்பட மாட்டான். காய்மகாரத்துக்கு ஆங்காரம் தாயாயிருக்கிறதினாலே, தாழ்ச்சியுள்ளவர்களிடத்திலே காய்மகாரமே இருக்க மாட்டாது. தாழ்ச்சி எங்கே குடிகொண்டிருக்குமோ, அங்கே காய்மகாரமும் தர்க்கமும் சண்டை சச்சரவும் பிறசிநேகத்தைக் குறைப்பதற்கு ஏதுவான எந்தக் குற்றங் குறையும் அண்டவே மாட்டாது.

கிறீஸ்துவனுக்கு வெகு அவசரமான பொறுமையென்னும் புண்ணியம் தாழ்ச்சியிலிருந்து பிறக்கும்; ஏனென்றால் தாழ்ச்சியுள்ளவன் தன் பாவங்களையும் குற்றங்களையும் அறிந்துகொண்டு சகல ஆக்கினைக்கும் தான் பாத்திரவானென்று நிச்சயித்துக்கொள்ளுவான். ஆகையால் என்ன அவமானந் தனக்கு நேரிட்டாலும், தன் குற்றங்களுக்காகத் தனக்கு வர வேண்டிய ஆக்கினை இதிலும் அதிகமாயிருக்கிறதென்று நி





ச்சயித்துக்கொண்டு முறைப்படாமலிருக்கிறதுமன்றி நான் கர்த்தருக்
கேராத பாவங் கட்டிக்கொண்டதினாலே, அவருடைய கோபாக்கினை
யை நல்ல மனதோடு சகித்துக்கொள்ளுவேனென்று மிக்கையாசென்
னுங் திர்க்கதரிசியோடு சொல்லுவான். ஆங்காரி எல்லாத்தின் பேரிலு
ம் முறைப்பட்டு முகாந்தரமில்லாமல் தனக்கு அநியாயஞ் செய்கிறார்
களென்றும் தன்னைத் தகுந்தவிதமாய் நடத்தவில்லையென்றும் எண்
ணிக்கொள்ளுவான். தாழ்ச்சியுள்ளவனுக்கு என்ன அநியாயஞ் செ
ய்தாலும், அவன் அதைக் கவனிக்கிறதுமில்லை, அதை அநியாயமென்
று சுத்தமாய் நினைக்கிறதுமில்லை. மற்றவர்கள் தனக்கு என்னென்ன
பொல்லாப்புச் செய்தாலும், அது அநியாயமென்று அவன் எண்ணாய
லிருப்பதுங் தவிர அவர்கள் எப்போதும் தனக்குத் தயவு செய்கிறார்க
ளென்று நிச்சயித்துக்கொள்ளுவான்; யாரார் அவனை எப்படி நடத்
தினாலும், அவர்கள் எப்போதும் தன்னை நடத்த வேண்டியதுக்கு மே
லாய் நடத்துகிறார்களென்று எண்ணி எப்போதும் சந்தோஷப்படுவா
ன். கடைசியாய்த் தாழ்ச்சி பொறுமையை யடைவதற்கான நல்ல ஆ
யத்தமாகும். இதினாலல்லோ தேவ ஊழியத்தைத் துவக்குகிறவர்கள்
வெகு கஸ்தி துன்பத்தையும் வருத்தத்தையும் படுவதற்கு ஆயத்தம் ப
ண்ண வேணுமென்றும் பொறுமையை ஆயுதமாகத் தரித்துக்கொள்ள
வேணுமென்றும் ஞானியானவர் சொன்னபின், தாழ்ச்சியை இதற்கான
வழிபாடென்று குறித்திருக்கிறார். ஆகையால் உன் இருதயத்தைத் தா
ழ்த்திப் பொறுமையாயிரு ; உனக்கு வருகிறதெல்லாத்தையும் ஏற்றுக்
கொண்டு வேதனையைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளென்றார்.
ஆனால் வேதனையை அவனைவிட்டு விலக்குவதற்கு அல்லது அவன் அ
தைத் தைரியமாய்ச் சகித்துக் கொள்ளுவதற்கு என்ன வழிபாட்டை
அவனுக்குச் சொல்லிக் காட்டியிருக்கிறார் ? தாழ்ச்சியோடு பொறுமை
யாயிருவென்றார் : அதாவது, தாழ்ச்சியாயிருந்தால், பொறுமையாயிரு
ப்பாயென்று அர்த்தமாகும்.

சந்நியாசிகளுக்கு விசேஷமாய் அவசரமானதும் சகலரும் ஆசித்
துத் தேடுகிறதுமாகிய மனசமாதானம் தாழ்ச்சியிலிருந்து பிறக்கும்.
இயேசுநாதர் தாமே இந்தச் சத்தியத்தை நமக்குப் போதித்திருக்கிறார் :
இதினாலல்லோ நாம் சாது குணமும் மனத்தாழ்ச்சியுமாயிருக்கிறோமெ
ன்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; மன சமாதானத்தைக் கண்
டுபிடிப்பீர்களென்றார். தாழ்ச்சியாய் இரு ; உன்னோடும் உன் சகோத



ரரோடும் சமாதானமாயிருப்பாய். ஆங்காரிகளுக்குள் எப்போதும் சச்சரவு உண்டென்று ஞானியானவர் வசனித்தார் ; ஆனால் ஆங்காரிகளுக்குள்ளே எவ்வளவு சச்சரவு இருக்குமோ, அவ்வளவு தாழ்ச்சியுள்ளவர்களை விட்டு அது அகன்றுபோகும். தாழ்ச்சியுள்ளவர்களுக்குள்ளே ஒரே சச்சரவு மாத்திரம் இருக்கும். அதென்னவென்றால், ஒவ்வொருவரும் தன்னைத் தாழ்த்தி மற்றவர்களுக்குக் கீழ்ப்படிந்திருக்க வேணுமென்று எப்போதும் சச்சரவு பண்ணுவார்கள். வனத்துத் தவசியாகிய அர்ச். சின்னப்பருக்கும் அர்ச். அந்தோனியாருக்கும் நடந்த தர்க்கம் இதுவே. அவர்களுக்குக் காக்கை கொண்டுவந்திருந்த அப்பத்தை உடைத்துப் பிரிக்க வேண்டியிருந்தது. அர்ச். அந்தோனியார் விருந்தாடியாயிருந்ததினாலே, அவர் அந்த அப்பத்தை உடைக்க வேணுமென்று அர்ச். சின்னப்பர் கேட்டுக்கொண்டார் ; ஆனால் அர்ச். சின்னப்பர் வனவாசத்தில் முதிர்ந்தவராயிருந்ததினாலே, அவர் அதை உடைக்க வேணுமென்று அர்ச். அந்தோனியார் சொன்னார். இவ்விருவரும் தன்னைத் தாழ்த்தி வேறொருவரைக் கனம் பண்ணுவதற்கான ஞாயத்தைச் சொல்லிக் காட்டினார்கள். இவ்விதமாய்த் தர்க்கம் பண்ணுகிறது நல்லதுதான். இவ்வித தர்க்கம் மெய்யான தாழ்ச்சியிலிருந்து பிறக்கிறதினாலே, இது மன சமாதானத்தையும் சகோதர சினேகத்தையும் கலக்கிக் கெடுக்காமலிருக்கிறதுமல்லாமல் அதை ஸ்திரப்படுத்திக் காப்பாற்றுமென்பதற்குச் சந்தேகமில்லை.

இப்போது சந்நியாசிகளுக்குரியதும் அவர்களுக்கு அவசரமானதும் அவர்கள் வார்த்தைப்பாடு கொடுக்கிறதுமான தரித்திரம் விரத்தத்துவம் கீழ்ப்படிதலாகிற மூன்று புண்ணியத்தையும் யோசித்துப் பார்க்கக் கடவோம். தரித்திரம் தாழ்ச்சியோடு விடாத பந்தனமாக ஒன்றித்திருப்பதினாலே, இவ்விரண்டு புண்ணியமும் கூடப் பிறந்த இரண்டு சகோதரிகளென்று சொல்லலாம் ; இதினாலே எட்டுப் பாக்கியங்களில் முதல் பாக்கியமாக இயேசுநாதர் ஏற்படுத்தின மனத் தரித்திரமும் தாழ்ச்சியும் ஒன்றுதானென்று சில அர்ச்சியசிஷ்டவர்கள் அருளிச் செய்தார்கள் ; இயேசுநாதர் முதல் பாக்கியமாக ஏற்படுத்தின இந்த மனத் தரித்திரம் சந்நியாசிகள் வார்த்தைப்பாடு கொடுக்கிற தரித்திரமென்னும் புண்ணியமென்று வேறே சில அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இது எப்படி இருந்தாலுஞ் சரி, தரித்திரத்தோடு எப்போதும் தாழ்ச்சி சேர்ந்திருக்க வேண்டும் ; ஏனென்றால் பரும்படியா





ண் நீச உடுப்பு அதை உடுத்தியிருக்கிறவனிடத்திலே ஆங்காரத்தை எழுப்பி அவன் மற்றவர்களை நிந்திப்பதற்கு அநந்த முறை காரணமாயிருக்கும்; இதினிமித்தமாக அர்ச். அகுஸ்தீன் நீச உடுப்பை விலக்கித் தமது சந்நியாசிகள் தகுந்த உடுப்பைத் தரித்திருக்க வேணுமென்று கற்பித்திருக்கிறார். நாம் ஒன்றுலொன்று குறைவில்லாமல் சுகத்தை அநுபவியாதபடிக்கும், நமக்கு என்னென்ன கொடுத்தாலும், எவ்வளவு, கெட்ட காரியங்களைத் தந்தாலும், நாம் தரித்திரரென்றும் தரித்திர அந்தஸ்திலிருக்கிறோமென்றும் எண்ணிக்கொண்டு அதெல்லாத்தையும் சந்தோஷமாய்ப் பட்டநுபவிக்கிறதற்குந் தாழ்ச்சி அவசரமாமே. விரத்தத்துவத்தைக் காப்பாற்றுவதற்குத் தாழ்ச்சி அவசரமென்று சந்தேகப்பட இடமில்லை. தபசிலும் வனவாசத்திலும் தேர்ந்துபோயிருந்த வெகுபேர் தாழ்ச்சிக் குறைவினாலே வெட்கத்துக்குரிய காம பாவத்தில் விழுந்து கெட்டார்களென்று வனவாசிகள் சரித்திரத்தில் எழுதியிருக்கிறதறிவோம்; ஏனென்றால் அவர்கள் தாழ்ச்சிக் குறைவினாலேயும் தங்கள் பேரில் வைத்த நம்பிக்கையினாலேயும் கெட்டுக் காம பாவத்தில் விழுந்துபோனார்கள்; ஆங்காரிகளுக்குச் சர்வேசுரன் வழக்கமாயிடுகிற ஆக்கினை இதுவே. கடைசியாய்த் தாழ்ச்சி பரிசுத்த விரத்தத்துவத்துக்கு வெகு சிங்காரமான ஆபரணமாயிருப்பதினாலே, தேவ மாதாவிடத்திலே தாழ்ச்சி இல்லாதிருந்தால், அவளுடைய கன்னிமை சர்வேசுரனுக்குப் பிரியப்படாதென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். கீழ்ப்படிதலென்னும் புண்ணியம் நம்மிடத்தில் விசேஷமாய் விளங்க வேணுமென்று அர்ச். இஞ்ஞாசியார் சித்தமாயிருக்கிறார். தாழ்ச்சியில்லாதவன் ஒருகாலும் வெகு கீழ்ப்படிதலுள்ளவனாய் இருக்கமாட்டானென்பதும் மெய்யான தாழ்ச்சியுள்ளவனிடத்திலே கீழ்ப்படிதல் குறைவில்லாமல் இருக்குமென்பதும் நிச்சயம். தாழ்ச்சியுள்ளவனுக்கு என்னத்தையுங் கற்பிக்கலாம்; என்னத்தைக் கற்பித்தாலும், அதுக்கு விரோதமான நினைவு அவனிடத்தில் கிளம்பாது; தன் சிரேஷ்டருடைய எண்ணத்தோடு அவன் எப்போதும் ஒன்றித்திருப்பான்; தன் கிரிகைகளையும் நடக்கையையும் சிரேஷ்டருக்குக் கீழ்ப்படுத்துகிறதுமன்றி தன் மனதையும் புத்தியையும் அவருக்குக் கீழ்ப்படுத்துவான்; கடைசியாய் அவன் மனசிலே விரோதமும் அருவருப்பும் ஒருகாலும் எழும்பாது. தாழ்ச்சியில்லாதவன் அப்படிச் செய்வானென்று சொல்ல முடியாது.

ஞான சீவியத்துக்கும் சந்நியாச சீவியத்துக்கும் அஸ்திவாரமான



செபத்தியானத்தை யோசித்துப் பார்த்தால், தாழ்ச்சியில்லாமல் அது ஒன்றுக்கும் உதவாதென்பது நிச்சயம்; ஆனால் தாழ்ச்சியுள்ள செபம் வானமண்டலத்தை ஊடுருவித்தேவசமுகத்தில் போய்ச்சேரும். இதினாலல்லோ தன்னைத் தாழ்த்துகிறவனுடைய செபம் மேகங்களை ஊடுருவும்; அது சர்வேசுரனிடத்தில் போய்ச் சேருமட்டும் அவன் ஆறுதலடைய மாட்டான்; உந்த சர்வேசுரன் அதைக் கிருபாகடாக்ஷத்தோடு பார்க்குமட்டும் அது அவரைவிட்டு நீங்காதென்று ஞானியானவர் வசனித்தார். தாழ்ச்சியுள்ள அர்ச். யூதித்தம்மாள் தன் அறைக்குள் ஒதுங்கி மயிரொட்டியாணம் தரித்துக்கொண்டு சாம்பலைத் தலையில் தூவிக்கொண்டு தீர்க்கதெண்டமாய்த் தரையில் விழுந்து கர்த்தரை நோக்கி அபயசத்தமிட்டுச் சொன்னதாவது: தாழ்ச்சியும் சாந்தகுணமுமுள்ளவர்களுடைய செபம் தேவரீருக்கு எப்போதும் பிரியமாயிருந்ததேயென்றாள். சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவர்களுடைய செபத்தைக் கிருபாகடாக்ஷமாய் நோக்கி அவர்கள் மன்றாட்டைப் பிறக்கணிக்கவில்லையென்று இராச தீர்க்கதரிசி வசனித்தார். அன்றியும் தாழ்ச்சியுள்ளவன் வெட்கத்தோடு தள்ளப்பட மாட்டானென்றார். அவன் கேட்கிறதை அடைவானென்பதற்குச் சந்தேகமில்லை. பாவியாகிய புப்லிக்கானுடைய செபம் சர்வேசுரனுக்கு எவ்வளவு பிரியமாயிருந்ததென்று பார்: அவன் தாழ்ச்சியினாலே மோக்ஷத்தை எறெடுத்துப் பார்க்கவும் பீடத்தை அண்டிப் போகவும் துணியாமல் கோவிலிலே ஒரு மூலையில் நின்றுகொண்டு நெஞ்சிலே பிழைதட்டிக்கொண்டு தாழ்ச்சியோடு சொன்னதாவது: சர்வேசுரா, பாவியாகிய என்பேரிலே இரக்கமாயிருமென்றான். இவன் நீதிமானாகித் தன் வீட்டுக்குத் திரும்பிப் போனானென்று நிச்சயித்துச் சொல்லுகிறேனென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். ஆங்காரியான பரிசேயனோவென்றால், சாபத்துக்குள்ளாகிக் கோவிலை விட்டு அப்புறம் போனான். கடைசியாய் வேறே சகல புண்ணியங்களையும் இவ்விதமாய்ப் பரிசோதித்து அதுவெல்லாம் தாழ்ச்சியிலிருந்து பிறக்கிறதென்று விளக்கிக் காட்டலாம். ஆகையால் தாழ்ச்சியாயிரு; சகல புண்ணியங்களையும் அடைந்து சீக்கிரமாய்ப் புண்ணியசாங்கோபாங்கத்தில்வந்து சேருகிறதற்கு இதுவே சுருக்கமான வழியாகும்.

# ௪-ம் அதிகாரம்.

பிறருடைய ஆத்தும இரட்சணியத்துக்காக உழைக்கிறவர்களுக்குத் தாழ்ச்சியென்னும் புண்ணியம் விசேஷமாய் அவசரமென்று சொல்லுவது.

நீ எவ்வளவு பெரிய மனுஷனாயிருப்பாயோ, அவ்வளவு சகலத்திலும் உன்னைத்தானே தாழ்த்த வேண்டும்; அப்போது தேவ கிருபை அடைவாயென்று ஞானியானவர் வசனித்தார். ஆத்துமாக்களுடைய ஈடேற்றத்துக்காக நாம் ஏற்றுக்கொண்ட அலுவல் மிகவும் மேலான உத்தியோகமென்பதற்குச் சந்தேகமில்லை; இதினாலே சர்வேசுரன் நம்மை மிகவும் உயர்ந்த அந்தஸ்தில் அழைத்திருக்கிறாரென்று மெய்யாகவே சொல்லலாம். சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் தேவ திரவிய அநுமானங்களை நிறைவேற்றித் தமது திருச்சரீரத்தையும் இரத்தத்தையும் மனுஷருக்குப் பகிர்ந்து கொடுப்பதற்காக இயேசுநாதர் அப்போஸ்தலரை ஏற்படுத்தினாரல்லோ? இந்த அலுவலையே நமக்கும் கொடுத்திருக்கிறார்; இதினாலே சமாதான அலுவலை அவர் நமக்குத் தந்தருளினாரென்று அர்ச். சின்னப்பரோடு நாமும் சொல்லலாம். சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் தேவ திரவிய அநுமானங்களை மனுஷருக்கு நிறைவேற்றுகிறதினாலே, ஈடேற்றமாகிற வரம் அவர்களுக்கு வரும். ஆகையினாலே இதைச் சமாதான அலுவலென்று அர்ச். சின்னப்பர் சொல்லியிருக்கிறார். இதினாலல்லோ சமாதான வார்த்தையைச் சர்வேசுரன் நமது வாயில் வைத்திருக்கிறார்; ஆகையால் நாம் இயேசுநாதருடைய ஸ்தானாபதிகளைப் போலேயும் சர்வேசுரன் நமது வாயாலே பேசுகிறதுபோலேயும் பேசுகிறோமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். சர்வேசுரன் நமக்குக் கொடுத்த இந்த நாக்கைக் கொண்டு நாம் மனுஷருடைய ஆத்துமத்தில் பேசி அவர்கள் இருதயத்தைத் திருப்ப வேணுமென்று சித்தமாயிருக்கிறார். ஆகையால் மற்றவர்களைவிடத் தாழ்ச்சி நமக்கு அவசரம்; இதை இரண்டு ஞாயத்தைக் கொண்டு ஒப்பித்துக் காட்டலாம். முந்த முந்த நமது அழைத்தலும் அலுவலும் வெகுமேன்மைப்பட்டதாயிருக்கிறதினாலே, ஆங்காரமும் வீண்மகிமையு



மாகிற சோதனை நமக்கு வெகுவாய் உண்டாகும். மிகவும் உயர்ந்தமலை மேலே அகோரமான காற்றடிப்பது வழக்கம். நமது அலுவல் நிமித்தமாக சகலரும் நம்மைச் சங்கித்து மகிமைப்படுத்துவார்கள்; நாம் அர்ச்சியசிஷ்டவர்களென்றும் புது அப்போஸ்தலரென்றும் நம்மை அண்டிவருகிறவர்களை அர்ச்சிக்கிறவர்களென்றும் எண்ணுவார்கள். இவ்வளவு மேலான மாளிகை இடிந்து கீழே விழாதபடிக்குத் தாழ்ச்சியாகிற ஆழ்ந்த அஸ்திவாரம் போட வேண்டும்; இவ்வளவு கனத்த பாரத்தினாலே நசுங்கிக் கெடாதபடிக்கு எவ்வளவோ புண்ணியமும் எவ்வளவோ ஸ்திரமான சாங்கோபாங்கமும் அவசரம்! சகலராலும் சங்கைப்படுகிறவனுடைய இருதயம் ஆங்காரங் கொள்ளாமலிருக்கிறது அருமையல்லோ? மகா உயர்ந்த கோபுரத்தில் ஏறினவனுக்கு மயக்கம் வராமலிருக்கிறது மகா அபூர்வமாயிருக்கும். இப்படி மயங்கிக் கெட்டவர்கள் எத்தனையோ பேர்! தாழ்ச்சிக் குறைவினாலே தாங்களிருந்த உயர்ந்த அந்தஸ்திலிருந்து தாழவிழுந்து தள்ளுண்டுபோனவர்கள் வெகுபேர். பருந்தைப்போலே புண்ணியத்தில் உயரப் பறந்து ஆங்காரத்தினாலே நரக இராசாளிக்கு இரையாய்ப் போனவர்கள் எத்தனையோ பேரைக் கண்டிருக்கிறோம்! அர்ச். பக்கோமியாருடையவும் அர்ச். பாலேமோனுடையவும் சரித்திரத்தில் சொல்லியிருக்கிற வனவாசி நெருப்புத் தணல்மேலே சூடுபடாமல் நடந்து வெகு புதுமைகளைச் செய்தானென்பதற்குச் சந்தேகமில்லை; ஆனால் இதினாலே அவன் ஆங்காரங்கொண்டு மற்றவர்களைப் பிறக்கணித்துத் தன்னை மற்றவர்களுக்கு மேலாக எண்ணித்தன்னைக் குறித்துச் சொன்னதாவது: சூடுபடாமல் நெருப்பில் நடக்கிறவனே அர்ச்சியசிஷ்டவன்; உங்களுக்குள்ளே யார் இப்படி நடப்பானென்றான். அர்ச். பாலேமோன் இவனுடைய வீண் மகிமையைக் கண்டு இவனை வெகுவாய்க் கடிந்துகொண்டாலும், இவனுக்குப் புத்திவராமல் கொஞ்ச நாளைக்குள்ளே இவன் தாறுமாறாய் நடந்து அவலமாய்ச் செத்தான். இதற்கொத்த வர்த்தமானங்களைச் சத்திய வேதசரித்திரத்தில் எங்கும் காணலாம்.

ஆகையால் தாழ்ச்சியாகிற அஸ்திவாரம் நமக்கு விசேஷ அவசரமாயிருக்கின்றது; ஏனென்றால் நம்மிடத்தில் தாழ்ச்சியில்லாவிட்டால், ஆங்காரத்தில் விழுவதற்கான கனத்த ஆபத்து நேரிடும்; அதுவும் எல்லாத்தை விடப் பெரிய ஆங்காரமாகிய ஞான ஆங்காரத்தில் விழுந்து கெட்டுப்போவோம். இந்தச் சத்தியத்தை அர்ச். பொனவெந்தூர்






நன்றாய் விளக்கிக் காட்டியிருக்கிறார். அதெப்படியென்றால், இரண்டு வித ஆங்காரமுண்டு: இப்பிரபஞ்ச நன்மைகளினாலே உண்டாகிற ஆங்காரம் சரீரத்துக்கடுத்த ஆங்காரமாகும்; ஞான நன்மைகளினாலே பிறக்கிற ஆங்காரம் ஞான ஆங்காரமென்று சொல்லப்படும். சரீர ஆங்காரத்தைவிட ஞான ஆங்காரம் அதிக தோஷ துரோகத்துக்குரியது. இதற்கு அர்ச். பொனவெந்தூர் சொல்லிக் காட்டின ஞாயம் தெளிவாயிருக்கும். அதென்னவென்றால், ஆங்காரி வேறொருவனுக்கு மனசில்லாதிருந்தாலும், அவனுடைய நன்மையைப் பறித்துக்கொள்ளுகிறதினாலே, ஆங்காரி கள்ளனென்பது நிச்சயம். சர்வேசுரன் தமக்குச் சொந்தமான மகிமையை ஒருவருக்கும் கொடாமல் பத்திரமாய் வைத்திருந்தாலும், ஆங்காரி அதைத் திருடிக்கொள்ளுவான். இதினாலல்லோ நமது மகிமையை வேறே எவனுக்கும் கொடுக்கமாட்டோமென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வாயாலே சர்வேசுரன் திருவுளம்பற்றினார். ஆனால் ஆங்காரி தன்னால் இயன்றமட்டும் சர்வேசுரனுடைய மகிமையைத் திருடி அதைத் தனக்குச் சொந்தம்போலே பாவிப்பான். இவ்வண்ணமே தன் சரீரப் பலத்தையும் தன் மேலான அந்தஸ்தையும் தன் கெட்டிக்காரத்தனத்தையும் புத்தியையும் சாஸ்திரத்தையும் இதற்கொத்த மற்றக் குணகுணங்களையும்பற்றி தன் பேரில் ஆங்காரங்கொள்ளுகிறவன் களவு செய்கிறானென்பதற்குச் சந்தேகமில்லை; ஏனென்றால் இதுவெல்லாம் சர்வேசுரனுக்குச் சொந்தமாயிருந்தாலும், இதைத் தனக்குச் சொந்தம்போலெண்ணி ஆங்காரிக்கிறது களவாகும். ஆனால் மேற்சொன்ன நன்மைகளெல்லாம் அற்ப விலையுள்ள வியர்த்தமான நன்மைகளாகக்கொள்ள, இவன் கட்டிக்கொள்ளுகிற தோஷமும் அற்பத் தோஷந்தான். ஆனால் சர்வேசுரன் யாதொருவனுக்கு அளித்தருளிய ஞான நன்மைகளையும் அவன் வழியாகப் பிறர் ஆத்துமத்துக்குச் சர்வேசுரன் செய்தருளுகிற நன்மையையும்பற்றி அவன் ஆங்காரப்பட்டால், அவன் மகா குற்றவாளி; சர்வேசுரனுக்குச் சொந்தமான மகிமையைத் திருடுகிறவன் இவன்தான்; சர்வேசுரன் தமது இரத்தத்தையும் உயிரையும் விலையாகக் கொடுத்து வாங்கின விலையேறப்பெற்ற ஞானப் பொக்கிஷங்களை இவன் திருடிக்கொள்ளுகிறதினாலே, இவன் பேர்போன கள்ளன். அர்ச். பிராஞ்சீஸ்கு இந்த ஞான ஆங்காரத்தில் விழுவோமென்று பயந்து அடிக்கடி சர்வேசுரனை நோக்கிச் சொன்னதாவது: ஆண்டவரே, உமது வரங்களை எனக்கு அளித்தருளினால், நீரே அதைக் காத்துக்கொள்ள வேண்டும்; ஏனென்றால் என்னை நான் நம்புகிறதி

ல்லை; நான் பேர்போன கள்ளன்; சிலவிசை அதுகளைத் திருடிக்கொள்ளுவேனோ என்னமோ தெரியாதென்பார். நாமும் இப்படிப் பயத்தோடே நடக்கக் கடவோம். இந்தப் பெரிய அர்ச்சியசிஷ்டவரிடத்திலுள்ள ஆழ்ந்த தாழ்ச்சி நம்மிடத்தில் இல்லாததினாலே, இது காரியத்தில் இவரைப் பார்க்க நாம் அதிகமாய்ப் பயந்து வெகு ஆபத்துக்குரிய இந்த ஞான ஆங்காரத்தில் விழாதபடிக்கு எச்சரிக்கையாய் நடக்கக்கடவோம். சர்வேசுரன் தமது திரவியப் பொக்கிஷங்களை நமது கையில் வைத்திருக்கிறார்; அதுகளை அடவாக நம்மிடத்தில் கொடுத்திருக்கிறார்; அதுகளை நாம் களவாங்கவும் படாது; அதுகளில் ஒன்றையும் நமக்குச் சொந்தம்போலே பாவியாமல் அவருக்குச் சொந்தமானதெல்லாத்தையும் சுமுத்திரையாய் அவருக்கே செலுத்திவிடக் கடவோம்.

இயேசுநாதர் மோக்ஷத்துக்கு எழுந்தருளின அன்றைக்குத் தமது சிஷர்களுக்குக் காட்சிகொடுத்து முந்த முந்த அவர்களுடைய விசுவாசக்குறைவையும் கல்நெஞ்சத்தனத்தையும்பற்றி அவர்களைக் கடிந்துகொண்டு அதின்பின் உலகத்தின் எத்திசையிலும் போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கச் சொல்லிக் கற்பித்துப் புதுமைசெய்யும் வரத்தைக் கொடுத்தருளினாரே. முந்த முந்த அவர்களைக் கடிந்துகொண்டு அதின்பின் புதுமைசெய்யும் வரத்தை அவர்களுக்குக் கொடுத்தருளினதினாலே, இதிலே யாதோர் பரம இரகசியம் அடங்கியிருக்கவேண்டும். அதென்னவென்றால், மேலான ஞான உத்தியோகத்தில் ஏற்பட மனசுள்ளவன் முந்த முந்தத் தன் பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் நன்றாய் ஆராய்ந்து அறிந்துகொண்டு தன்னைத் தாழ்த்திப் பணிந்துகொள்ள வேண்டும். இப்படிப்பட்ட ஸ்திரமான தாழ்ச்சி அவனிடத்தில் இருந்தால், அவன் புதுமைசெய்தாலும், மோக்ஷமண்டலம் வரைக்கும் பறந்து எழும்பினாலும், தன் நீசத்தனமும் ஒன்றுமில்லாமையுமாத்திரம் தனக்குச் சொந்தமென்றும் மற்றதெல்லாம் சர்வேசுரனுக்குரியதென்றும் ஸ்திரமாய் நிச்சயித்துக்கொள்ளுவான். இது காரியத்தில் தேயோதோரேத்தென்பவர் சொல்லுமாப்போலே, சர்வேசுரன் மோயீசென்பவரைத் தமது பிரசைகளுக்குத் தலைவராக ஏற்படுத்துமுன் அவருடைய கையை நெஞ்சிலே வைக்கச் சொல்லிக் கற்பித்தார். அதின்பின் அந்தக் கையை நெஞ்சை விட்டு எடுக்கும்போது, அதிலே குஷ்டரோகம் எங்கும் ஏகமாய்ப் பிடித்திருந்தது. இனிமேலாகச் செவப்புக்கடல் தண்ணீரைப் புதுமையாக இரண்டாய்ப் பிரித்து வெகு புது





மைகளைச் செய்யக் குறித்திருந்த அந்தக் கை முந்த முந்தக் குஷ்டரோகம் பிடித்து அவலட்சணப்பட வேணுமென்று சர்வேசுரன் சித்தமானார். இதினாலே பிறருக்கு வெகு ஆத்தும நன்மையைப் பெறுவிக்கக் குறிக்கப்பட்டவன் முந்த முந்தத் தன் பாவங்களையும் நீசத்தனத்தையும் நன்றாயோசித்து அறிந்துகொண்டு தன்னைத்தானே தாழ்த்தித் தாழ்மையான எண்ணத்தில் ஸ்திரப்பட்டிருப்பது அவசரமென்று காட்டியருளினார்.

இரண்டாம் ஞாயமாவது: ஆத்தும இரட்சணியத்துக்காக நாம்படும் பிரயாசம் அதிக பிரயோசனமாகும் பொருட்டுத் தாழ்ச்சி நமக்கு அதிக அவசரமாயிருக்கின்றது. ஆகையால் நாம் புண்ணிய சாங்கோபாங்கத்தில் வர்த்திப்பதற்கும் ஆங்காரத்தினாலும் வீண் மகிமையினாலும் கெட்டுப்போகாதபடிக்கும் தாழ்ச்சி அவசரமாயிருக்கிறதுமல்லாமல் புறத்தியார் மனசை எளிதாய்த் திருப்பி அவர்களைப் புண்ணியத்தில் வர்த்திக்கப்பண்ணுவதற்கும் தாழ்ச்சி அவசரமாமே. பிறர் ஈடேற்றத்துக்காக நாம் செய்ய வேண்டிய வழிபாடுகளில் தாழ்ச்சி பிரதான வழிபாடென்று சொல்ல வேண்டும். இதற்காக நம்மையும் நமது பெலத்தையும் சாமர்த்தியத்தையும் புத்திக் கூர்மையையும் சுத்தமாய் நம்பாமல் சர்வேசுரன்பேரில் மாத்திரம் நமது நம்பிக்கையெல்லாம் வைக்க வேண்டும். இதினாலல்லோ உன் முழு இருதயத்தோடு சர்வேசுரன்பேரில் நம்பிக்கை வை; உன் புத்திக் கூர்மையை நம்பாதேயென்று ஞானியானவர் வசனித்தார். இதற்கு ஞாயம் என்னவென்று இனிமேல் விஸ்தாரமாய்ச் சொல்லிக் காட்டுவோம். நம்மை நம்பாமல் சர்வேசுரன்பேரில் மாத்திரம் நமது நம்பிக்கையெல்லாம் வைத்தால், இது காரியத்தை அவர் கையில் ஒப்படைத்து அவர்பேரிலே இதைச் சுமத்தினாற்போலாகும்; இதினாலே இதை அவர் தமது காரியம்போலே முக்கியமாய் விசாரித்துக் கொள்ளுவார். கர்த்தாவே, ஆத்துமாக்களைத் திருப்புகிறது உமது வேலை; எங்கள் வேலையல்ல; இதுகாரியத்தில் நாங்கள் ஒன்றும் செய்யக் கூடாததினாலே, தேவரீரே இந்த வேலையைச் செய்ய வேண்டும். நமது அலுவலைச் சர்வேசுரன் ஆசீர்வதிக்க வேணுமானால், நாம் அவரை நோக்கி இப்படிச் சொல்ல வேண்டும்; ஆனால் நமது புத்தியில் தோன்றுகிற வழிபாடுகளின்பேரில் நாம் நம்பிக்கை வைத்தால், அப்போது இந்த அலுவலில் ஒரு பங்கை நமக்கு எடுத்துக்கொண்டு அப்பகரித்துக்கொள்ளுகிறோமென்று சொல்ல வேண்டும். இ






தில் நாம் அபகரிக்கிறதைச் சர்வேசுரனிடத்தில் திருடிக்கொண்டாற்போலாகும். திராசுத் தட்டில் ஒன்று உயர்ந்தால், வேறொன்று தாழும். இவ்வண்ணமே இன்ன காரியம் நம்மால் ஆகுமென்று நாம் எண்ணும்போது, அதைச் சர்வேசுரனிடத்திலிருந்து எடுத்துக்கொண்டு அதினாலே சர்வேசுரனுக்கு வரவேண்டிய மகிமையையும் தோத்திரத்தையும் திருடிக்கொள்ளுகிறோமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆத்தும இரட்சணிய அலுவலிலே வெகு அற்பப் பிரயோசனமாத்திரம் உண்டாகிறதற்கு அநந்தமுறை இதுவே காரணமாயிருக்கும்.

அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் சொல்லியிருக்கிற வர்த்தமானமாவது: அவர் ரோமாபுரியில் இருக்கும்போது, அவருக்கு இத்தாலியபாஷை நன்றாய்த் தெரியாதிருந்தாலும், கொச்சைப் பேச்சுப் பேசிக் கிறிஸ்துவர்களுக்கு அவர் சொன்ன அற்ப சொற்பப் புத்தி பிரசங்கத்தினாலே அவர்களுக்கு வெகு நன்மை உண்டாயிற்று. இதினாலே அவருடைய புத்தி பிரசங்கம் முடிந்தவுடனே, கிறீஸ்துவர்களுடைய இருதயம் துக்க மனஸ்தாபத்தால் ஊடுருவி வெகுபேர் குருக்கள் காலிலே போய் விழுந்து பெருமூச்செறிந்து அழுதுகொண்டு மனஸ்தாப மிகுதியினாலே ஒரு வார்த்தையும் சொல்லக் கூடாமலிருப்பார்கள். அர்ச். இஞ்ஞாசியார் மனுஷர் புத்திக்கடுத்த வார்த்தைகளைக் கொண்டு ஆத்துமாக்களைத் திருப்ப வேணுமென்று தேடாமல் சர்வேசுரனுடைய புத்தியையும் வல்லபத்தையுங் கொண்டு பிறர் மனதைத் திருப்பத் தேடினதினாலே, இத்தனைபேர் மனந்திரும்பினார்கள். அவர் தம்மை நம்பாமல் சர்வேசுரன்பேரில் தமது நம்பிக்கையெல்லாம் வைத்ததினாலே, அவர் சொன்ன வார்த்தைகளுக்குச் சர்வேசுரன் வெகு பெலனைக் கொடுத்தருளினார். இதினாலே அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் ஒரு அம்புபோலே புறத்தியாருடைய இருதயத்தைக் குத்தித் திறந்தது. ஆனால் நமது புத்தி சாமர்த்தியத்தைக் கனமாயெண்ணி நம்மிடத்திலுள்ள சாஸ்திரம் நாம் சொல்லிக் காட்டுகிற ஞாயம் நாம் செய்கிற நேர்த்தியான பிரசங்கம் புத்திபோதகம் முதலிய வழிபாடுகளினாலே புறத்தியாரை இரட்சிக்கலாமென்று நம்பி நம்மை நாமே கனமாயெண்ணி வீண் சந்தோஷப்படுகிறதினாலே, புறத்தியார் ஆத்துமத்துக்கு நம்மாலே வெகு பிரயோசனமில்லாமல் போகிறதென்று எண்ண வேண்டியது. இப்படித் தங்கள்பேரில் நம்பிக்கை வைக்கிறவர்களைக் குறித்துச் சர்வேசுரன் சொல்லுகிறதாவது: நீங்கள் புறத்தியாருக்குத் தகுந்த





வெகு நேற்றியான• புத்திமதி சொன்னோமென்றெண்ணிச் சந்தோஷப்பட்டு எல்லாம் கைகூடி வந்ததென்று எண்ணும்போது, ஒன்றும் கைகூடி வராதபடிக்கு நாமே செய்வோம். ஓசேயேயென்னும் தீர்க்கதரிசி சொன்ன வாக்கியம் உங்களிடத்தில் நிறைவேறினதென்று சகலரும் அறிந்துகொள்ளுவார்கள். அதாவது: கர்த்தாவே, அவர்களுக்குக் கொடும். அவர்களுக்கு ஆக்கினையாக என்ன கொடுப்பீர்? அவர்கள் உதரத்திலே பிள்ளையில்லாமலும் அவர்கள் கொங்கையிலே பாலில்லாமலும் வற்றப் பண்ணுமென்றார். நீ தாழ்ச்சியில்லாதவனாயிருந்தால், மற்றவர்கள் உன்னை ஞானப் பிதாவென்றும் தகப்பனென்றும் கூப்பிடுகிறது வீணும் வியர்த்தமுமாயிருக்கும்; ஏனென்றால் உனக்கு ஞானப் பிள்ளைகள் இல்லாமலும் ஞானப்பால் இல்லாமலும் வறடனாய்ப் போவாய்; நீ பிறருக்குப் புத்திமதியாகிற ஞானப்பால் ஊட்டினபோதிலும், அதினாலே ஒரு ஞானப் பிரயோசனமும் வரவறியாது. சர்வேசுரனுக்கு மாத்திரம் சொந்தமான நன்மையை அங்காரத்தினாலே தனதென்றெண்ணி அதை அபகரித்துக்கொள்ளுகிறவனுக்கு வரும் ஆக்கினையிதுவே. ஆகிலும் நாம பிரசங்கிக்க வேண்டிய பொருளைப் பற்றும் பற்றுய் ஆராய்ந்து ஆபத்தம் பண்ண வேண்டாமென்று நாம் இங்கே சொல்லுகிறதில்லை; அதை ஆபத்தம் பண்ண வேண்டியதுதான்; ஆனால் இது பற்றாது; நமது பிரசங்கம் மனிதர் ஆத்துமத்தில் தரித்து அவர்களுக்குப் பிரயோசனமாகும்படியாய்க் கண்ணீர் சிந்தி வெகு அக்கறையோடு தேவ உதவியை இரந்து மன்றாட வேண்டும். தலையை உடைத்துக்கொண்டு பிரசங்கத்தை ஆபத்தம்பண்ணினபின், நமக்குள் நாமே சொல்ல வேண்டியதாவது: நாங்கள் வீணான ஊழியர்; நாங்கள் செய்ய வேண்டியதை மாத்திரம் செய்தோமென்று சொல்ல வேண்டும். மெய்யாகவே உன்னாலே என்ன ஆகும்? குண்டுபோடாமல் சுட்ட சிறு துபாக்கிபோலே உன் வார்த்தையைக் கொண்டு கொஞ்சம் சத்தம் செய்யலாம்; ஆனால் இருதயத்தைக் குத்தித்திறக்கிறது, கர்த்தாவே, உம்முடைய அலுவல். இதினாலல்லோ இராசாவின் இருதயம் கர்த்தருடைய கையிலிருக்கின்றது; அவர் பிரியம்போலே அதை எப்பக்கத்திலும் சாய்ப்பாரென்று ஞானியானவர் வசனித்தார். மனுஷர் இருதயத்தை இளக்கித் திருப்புகிறது, சர்வேசுரா, உம்மாலே மாத்திரம் ஆகும் கருமம்; எங்களாலே இது காரியம் அநுகூலப்படக் கூடுமோ? மனதைத்திருப்புகிறது சுபாவத்துக்கு மேலான அலுவல்; இதைச் செய்து முடிப்பதற்கு நாங்கள் என்னென்ன புத்தி போதகம் பண்ணினாலும், என்






னென்ன வழிபாடுகளைச் செய்தாலும், உமது வரப்பிரசாதமில்லாவிட்டால், இதுவெல்லாம் என்னத்துக்குதவும்? நமது பிரயாசத்தினாலே பிறர் ஆத்துமத்துக்கு யாதொரு நன்மை உண்டாகிறதென்றும் நமது அலுவல் அநுகூலப்படுகிறதென்றும் தோன்றும்போது, நமது பேரில் நாமே வீண் சந்தோஷப்பட்டு இது காரியம் நம்மாலே ஆனதென்று எண்ணுகிறதற்கு ஏதாகிலுமுகாந்தரமுண்டோ? இல்லையே. இதினாலல்லோ வெட்டுகிறவன் கையிலிருக்கிற கோடாலி தன் பேரில் மகிமை பாராட்டுமோ? இரம்பக்காரன் கையிலிருக்கிற இரம்பம் தன்னை மேன்மையாக எண்ணுமோ? கையாலெடுத்து அடிக்கிற குச்சியும் மரக்கோலும் தன் பேரில் மகிமை பாராட்டுமோவென்று ஞானியானவர் வசனித்தார். பிறர் மனசைத் திருப்புவதற்கு நாம் ஒரு மரக்கோல் போலிருக்கிறோம். சர்வேசுரன் நம்மை அசைத்து நமது வழியாக ஆத்துமாக்களைத் திருப்பாவிட்டால், நம்மாலே ஒன்றுமாகாது. ஆகையால் ஒரு காரியத்திலும் நம்மைக் கனமாயெண்ணப் படாது; யாதொரு காரியம் அநுகூலப்பட்டால், அது சர்வேசுரனாலே மாத்திரம் கைகூடிவந்ததென்று நிச்சயித்துக்கொள்ள வேண்டும்.

நமது பலத்தின்பேரிலும் மனுஷர் உதவியின்பேரிலும் நாம் சுத்தமாய் நம்பிக்கை வைக்காமல் சகலமும் சர்வேசுரனாலே ஆகிறதென்று நிச்சயித்துக்கொண்டு அதினால் வரும் மகிமையெல்லாத்தையும் அவருக்கே ஒப்படைக்க வேணுமென்று அவர் சித்தமாயிருக்கிறதினாலே, சுவிசேஷத்தைப் பிரசங்கித்து உலோகத்தைத் திருப்புகிறதற்குச் சாஸ்திரிகளையும் வாசாலகரையும் சர்வேசுரன் தெரிந்துகொள்ளாமல் அறிவீனரும் முரடருமான செம்படவரை அப்போஸ்தலராகவும் பிரசங்கிகளாகவும் தெரிந்துகொண்டார். இதினாலல்லோ புத்திசாலிகளுடைய ஆங்காரத்தைத் தாழ்த்துகிறதற்காக உலகத்தில் பைத்தியகாரரைச் சர்வேசுரன் தெரிந்துகொண்டார்; உலகத்தில் பெரிதான காரியங்களை நிர்மூலப்படுத்துவதற்காகப் பலவீனமுள்ள காரியங்களையும் மனுஷர் கண்ணுக்கு ஒன்றுமில்லாததாகத் தோன்றினதையும் சர்வேசுரன் தெரிந்துகொண்டாரென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஏன் இப்படித் தெரிந்துகொண்டாரென்று அறிய வேணுமோ? அர்ச். சின்னப்பர்தானே சொல்லுகிறதைக் கேள்: ஒருவரும் தன் பேரில் மகிமை பாராட்டாமல் கர்த்தர் பேரில் மாத்திரம் பெருமை பாராட்டுகிறதற்காக இப்படித் தெரிந்துகொண்டாரென்றார். வ






ல்லபமுள்ள இராசாக்கள் சுவிசேஷத்தைப் போதித்துப் படையைக்
கொண்டு சுவிசேஷபோதனையை உலகமெங்கும் நட்டுப் பிரபலியப்
படுத்தினால், இவர்களுடைய வல்லபத்தினாலும் பராக்கிரமத்தினாலும்
உலகத்தைத் திருப்பினார்களென்று மனிதர் சொல்லுவார்களாக்கும்.
அஞ்ஞான சாஸ்திரிகளோடு தர்க்கம் பண்ணி அவர்களைத் திருப்புவ
தற்காக ஆழ்ந்த சாஸ்திரிகளையும் அருமையான வாசாலகரையும் தெரிந்
துகொண்டால், இது அவர்களுடைய போதகத்தின் திறமையினாலே
அநுகூலப்பட்டதென்று மனிதர் எண்ணுவார்கள். இதினாலே இயேசு
நாதருடைய மகிமை குறைந்துபோகும். இதினிமித்தமாகத்தான் சர்
வேசுரன் மேற்சொன்ன இராசாக்களையும் சாஸ்திரிகளையும் ஆத்தும இ
ரட்சணியமாகிற அலுவலுக்குத் தெரிந்துகொள்ளவில்லை. இயேசுநாத
ருடைய சிலுவையினால் வரும் பேறு பலனை மனிதர் குறைவாய் எண்
ணுதபடிக்கு மனுஷருடைய புத்தியையும் வாசாலகத்தையுங் கொண்டு
சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வேணுமென்று சர்வேசுரனுக்குச் சித்தமி
ல்லையென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். அர்ச். அகுஸ்தீன்
சொல்லுகிறதாவது: நமது கர்த்தராகிய இயேசுநாதர் ஆங்காரிகளு
டைய சிலாக்கியத்தைத் தாழ்த்துவதற்காக வாசாலகனைக் கொண்டு
இராயர்களைத் திருப்பாமல் ஓர் செம்படவனைக் கொண்டு திருப்பினார்.
அர்ச். சிப்பிரியான் பேர்போன வாசாலகராயிருந்தார்; அர்ச். இராய
ப்பர் செம்படவர்தான்; இந்தச்செம்படவரைக் கொண்டு வாசாலகரை
யும் இராயர்களையும் சர்வேசுரன் சத்திய வேதத்துக்குட்படுத்தினாரெ
ன்றார்.

மேலான அலுவலை நிறைவேற்றுகிறதற்குப் பலவீனமுள்ள ஆயுத
ங்களைச் சர்வேசுரன் தெரிந்துகொண்டாரென்று வேதாகமத்தில் எங்கு
ம் பல வர்த்தமானங்களைக் காணலாம். நாம் ஒரு காரியத்திலும் ஒருகா
லும் நம்மைத்தானே மகிமைபாராட்டாமல் சகலத்திலும் தேவஸ்தோத்
திரத்தைப் பிரபலியப் படுத்த வேணுமென்கிற சத்தியத்தை நமது ம
னதில் பதிப்பிப்பதற்காக இப்படிச் செய்தருளினார். பலவீனமுள்ள
யூதித்தம்மாள் நூற்று நாற்பதினாயிரம் போர்வீரருள்ள படையின்மே
ல் கொண்ட பேர்போன செயம் இந்தச் சத்தியத்தை ஒப்பித்துக்காட்
டும். கொஞ்ச வயசுள்ள தாவீதென்பவர் கவணை மாத்திரம் ஆயுதமாக
அணிந்துகொண்டு கொலியாத்தென்னும் இராக்ஷதனை ஒரே கல்லைக்
கொண்டு கீழே விழத்தாட்டிப் பிலிஸ்தினர்பேரில் அவர் கொண்டசெ






யமும் இந்தச் சத்தியத்தை நமக்குப் போதிக்கின்றது. இதினாலல்லோ இஸராயேல் சனங்களை விசாரிக்கிற சர்வேசுரன் ஒருவர் உண்டென்று பூமியெல்லாம் அறிந்துகொள்ளவும் கத்தியினாலும் ஈட்டியினாலும் கர்த்தர் சண்டையில் செயங்கொடாமல் செயம் அவராலேமாத்திரம் வருகிறதென்று இங்கே கூடின சங்கமெல்லாம் அறிந்துகொள்ளவும் வேணுமென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. ஜேதேயோனுக்குக்கர்த்தர் திருவுளம்பற்றின தும் இதுவே; அதென்னவென்றால், நூற்றிமுப்பதினாயிரம் மாதியானித்தருக்கு விரோதமாய் முப்பத்திரண்டாயிரம் போர்வீரரை ஜேதேயோன் சேர்த்திருந்தார். அப்போது கர்த்தர் அவரை நோக்கிச் சொன்னதாவது: மாதியானித்தரை நாம் உன் கையில் ஒப்புக்கொடுக்க மாட்டோம்; ஏனென்றால் உன்னிடத்தில் வெகு சனங்கள் இருக்கிறார்களென்றார். இங்கே சர்வேசுரன் சொன்னதைக் கேட்டு அச்சரியப்படாததார்? உன்னிடத்தில் வெகு பேர் இருக்கிறதினாலே, நீ செயங்கொள்ளக் கூடாதென்கிறாரே. இது சரியோ? உங்கள் சத்துருக்கள் வெகு பேர், நீங்கள் கொஞ்சம் பேர்; ஆனதினாலே நீங்கள் செயங்கொள்ளக் கூடாதென்று சொன்னால், சரியாயிருக்குமென்பாயாக்கும். இல்லை, இல்லை, நீ சொல்லுகிறது சரியல்ல; நீ சொல்லுகிறது மனுஷர் வழக்கமாய்ப் பேசுகிறதுபோலேயிருக்கும்; சர்வேசுரன் இப்படிப் பேசுகிறதில்லை. உன்னிடத்தில் வெகு போர்வீரர் இருக்கிறதினாலே, நீ செயங்கொள்ள மாட்டாயென்றார். ஆனால் வெகு பேர் இருந்தால், ஏன் செயங்கொள்ளக் கூடாதென்பாயாக்கும். இதற்குச் சர்வேசுரன் சொல்லுகிறதைக் கேள்: இஸராயேல் சனங்கள் இந்தச் செயத்தினாலே தங்களை மகிமைபாராட்டித் தங்களாலே இந்தச் செயம் வந்ததென்று எண்ணாமல் தங்கள் பெலத்தினாலே ஈடேறினோமென்று சொல்லாதபடிக்கு வெகு போர்வீரர் இருக்கப் படாதென்றார். ஆகையால் மூந்நூறு போர்வீரரை மாத்திரம் வைத்துக்கொண்டு இவர்களைக் கொண்டு மாத்திரம் சத்துருக்களோடு சண்டை செய்யவேணுமென்று சர்வேசுரன் ஜேதேயோனுக்குக் கற்பித்தார். இந்த மூந்நூறு பேரும் கத்திமுதலாய்க் கையில் எடுக்காமல் பேர்போன செயத்தை அவர்களுக்குக் கொடுத்தருளினார். அவர்கள் ஒரு கையில் பிடித்திருந்த எக்காளச் சத்தத்தையும் பானை உடைக்கிற சத்தத்தையும் வேறொரு கையில் பிடித்திருந்த தீவட்டி வெளிச்சத்தையுங் கொண்டு சர்வேசுரன் சத்துருக்கள் படையில் வெகு பயங்கரத்தை மூட்டினதினாலே. சத்துருக்கள் பயந்து தங்களில் ஒருவரொருவரை விழுந்தாட்டி ஒருவ

ரொருவரைக் கொன்று சர்வசங்காரப்பட்டார்கள். இதிப்படியிருக்க,
எங்கள் பலத்திஞலே செயங்கொண்டோமென்று இஸராயேல் சனங்க
ள் சொல்லக் கூடாது ; தேவ பலத்திஞலே செயங்கொண்டோமென்
று சொல்ல வேண்டும். இதுவே சர்வேசுரன் அடையத் தேடின மகி
மை. இவ்வுலோக க்வை காரியங்களிலே நாம் படும் பிரயாசத்துக்குத் த
க்கது அலுவல் கைகூடி வருமென்றிருந்தாலும், இதிலே முதலாய்
வருகிற அநுகூலம் நம்மாலே வராமல் சர்வேசுரஞலே மாத்திரம்
வருகிறதென்று நாம் நிச்சயித்துக்கொள்ள வேணுமென்று சர்வேசுரன்
சித்தமாயிருக்கிறுர். மரத்தை நடுகிறவஞலேயும் தண்ணீர் இறைக்
கிறவஞலேயும் ஆகிறது ஒன்றுமில்லை ; மரம் வளர்ந்து பழம் பழுக்கிற
து சர்வேசுரஞலே மாத்திரம் ஆகிற காரியமல்லோ ? இதிப்படியிருக்க,
தேவ வரப்பிரசாதம் மனிதர் மனந்திரும்புதல், அவர்கள் ஞானத்தி
லும் புண்ணியத்திலும் வர்த்தித்தல் முதலிய ஞான நன்மைகளிலே
மனுஷருடைய பெலன் ஒன்றுக்குமுதவாது; அவர்களுடைய பிரயாசத்
திஞலே ஒன்றும் ஆகாதென்றிருக்கையிலே, இது காரியத்தில் ஏதாகி
லும் மனிதராலே அநுகூலப்படுமென்று கஞவிலே முதலாய் நினைக்
கவுங் கருதவுங் கூடுமோ? இதிஞலல்லோ நடுகிறவனும் தண்ணீர் இ
றைக்கிறவனும் ஒன்றுமில்லை ; வளரச்செய்கிறவர் சர்வேசுரன்தானெ
ன்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றிஞர். நாம் புத்தி பிரசங்கங்களை
யும் தேவ திரவிய அநுமானங்களையுங் கொண்டு பிறர் ஆத்துமமாகிற
மரத்தை நட்டுப் பயிர் செய்வோம் ; ஆஞல் அது புண்ணியத்தில் வள
ர்ந்து பலன் கொடுக்கும்படி செய்கிறவர் சர்வேசுரனல்லாமல் நாம
ல்ல ; மனிதருடைய இருதயத்தில் தேவ பயத்தையும் நடுக்கத்தையும்
எழுப்ப வல்லவர் அவர் மாத்திரம் ; மனுஷர் தங்கள் பாவத்தை அரு
வருத்துத் தங்கள் கெட்ட நடக்கையை விட்டுவிடச் செய்யக்கூடுமா
னவர் சர்வேசுரனெருவரே. நாம் சுவிசேஷமாகிற எக்காளத்தைக்
கொண்டு கொஞ்சஞ் சத்தமாத்திரம் செய்யக் கூடுமேயல்லாமல் நம்
மாலே வேறென்ன ஆகும் ? ஆகிலும் நாம் இந்த எக்காளச் சத்தம் ஊ
தும்போது, ஒறுத்தலைக் கொண்டு நமது சரீரத்தை உடைத்து நமது
புண்ணிய பிரகாசத்தை மனுஷர். கண்ணிலே உதிக்கச் செய்தால், இ
திஞலே ஆத்துமாக்களுக்கு ஏதாகிலும் பிரயோசனம் உண்டாகலாம்;
இதைக் கொண்டு சர்வேசுரன் நமக்குச் செயம் கொடுப்பது வழக்கம்.

நாம் இப்போது சொன்னதைக் கொண்டு இரண்டு சத்தியத்தை

எப்படுத்தக் கடவோம்; ஆத்துமாக்களை இரட்சிக்கிற அலுவலிலே இது நமக்கு மிகுந்த ஆறுதலைத் தந்து நாம் புண்ணியத்தில் வர்த்தித்துப் பிறரையும் புண்ணியத்தில் வளர்ப்பிப்பதற்கு மிகவும் ஒத்தாசையாயிருக்கும். முதல் சத்தியமாவது: நாம் முன்னமே சொன்னதுபோலே, நம்மைச் சுத்தமாய் நம்பாமல் சர்வேசுரன்பேரில் நமது நம்பிக்கையெல்லாம் வைத்து நமது அலுவல் கைகூடிவந்தால், அது நம்மாலேயானதென்று எண்ணாமல் சர்வேசுரனாலே மாத்திரம் அநுகூலப்பட்டதென்று நிச்சயித்துக் கொள்ள வேண்டும். நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் பிரயோசனமாயிருக்க வேணுமானால், நம்மை மேலாக எண்ணாமல் நாம் ஒன்றுக்கும் உதவாதவர்களென்று நிச்சயித்துக்கொள்ள வேணுமென்று அர்ச். கிறிசோஸ்தொமுஸ் வசனித்தார். ஆத்துமாக்களுக்கு நன்மை செய்ய வேணுமானால், அர்ச். இராயப்பர் கற்பித்ததை அநுசரிக்க வேணுமென்று அர்ச். அம்புரோசியார் சொல்லியிருக்கிறார். அதாவது, யாதொருவன் பேசினால், சர்வேசுரனுடைய வாக்குக்கு அவன் ஆயுதமாயிருக்கிறது போலே பேச வேண்டும். அவன் ஏதாகிலும் செய்தால், சர்வேசுரன் கொடுத்தருளிய அதிகாரத்தைக் கொண்டு செய்கிறதுபோலே செய்ய வேண்டும்; இதினாலே இயேசுநாதர் வழியாகச் சகலத்திலும் சர்வேசுரனுக்குத் தோத்திரம் உண்டாகும்; அவருக்குச் சதாகாலமும் மகிமையும் இராச்சியபாரமும் உண்டாகுமென்றார். ஆகையால் ஏதாகிலும் நம்மாலே ஆகுமென்று எண்ணாமலும் எதினிமித்தமாகவும் நமது பேரில வீண் சந்தோஷப்படாமலும் அநுகூலமெல்லாம் சர்வேசுரனாலே மாத்திரம் ஆகிறதென்று சத்தியமாய் நிச்சயித்துக் கொள்ளக் கடவோம்.

நாம் இதுவரையில் சொன்னதைக் கொண்டு ஸ்தாபிக்க வேண்டிய இரண்டாம் சத்தியமாவது: நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையுங் கண்டு மனத்திடாரிக்கமற்றுப்போகப் படாது. இதுவும் நமக்கு அவசரமான சத்தியமாமே; ஏனென்றால் ஆத்துமாக்களைத் திருப்பிப் பாவத்தின் அடிமைத்தனத்திலும் அந்தகாரமாகிற பதித மார்க்கத்திலும் அஞ்ஞானத்திலுமிருந்து மனிதரை விடுதலையாக்குகிற மேலான அலுவலையும் உந்நதமான உத்தியோகத்தையும் ஒரு பக்கத்திலும் தன் பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் வேறொரு பக்கத்திலும் உற்றுப்பார்க்கிறவன் இவ்வளவு மேலான அலுவலைச் செய்ய நான் கடைப் பட்டவனேவென்று அவநம்பிக்கைப் படாமற்போவானோ?






இதைக் கண்டு இது என்னாலாகுங் கருமமல்ல; மற்றவர்களைவிட என் மனதைத் திருப்புகிறதே அதிக அவசரம்; என் பலவீனம் எனக்கு நன்றாய்த் தெரியும்; சகலரையும் விட நான் தாழ்ந்தவனும் கடைப்படாதவனுமாயிருக்கிறேனென்று யாவரும் சொல்லுகிறதற்கு ஞாயமுண்டல்லோ? இல்லை, இல்லை, இந்த ஞாயம் சரியல்ல; நீ மகா பலவீனனும் நிர்ப்பாக்கியனுமென்று நீயே அறிந்திருக்கிறதினாலேதான், சர்வேசுரன் உன்னை இந்த அலுவலுக்கு நியமித்திருக்கிறார். இஸ்ராயேல் சனங்களை எஜிப்த்து தேசத்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாக்குகிற ஆச்சரியமான அலுவலை நிறைவேற்ற மோயீசென்பவர் தன்னாலே கூடாதென்று எண்ணியிருந்தார். இதினாலே நீ இந்த அலுவல் செய்ய வேணுமென்று சர்வேசுரன் அவருக்குச் சொல்லும்போது, அவர் சர்வேசுரனை நோக்கிச் சொன்னதாவது: பரவோனிடத்தில் போய் இஸ்ராயேல் சனங்களை எஜிப்த்து தேசத்திலிருந்து விடுதலையாக்குவதற்கு நானார்? கர்த்தாவே, நீர் அனுப்ப வேண்டியவரை அனுப்ப வேணுமென்று மன்றாடுகிறேன்; பேசுகிறது எனக்கு வருத்தமென்றார். சர்வேசுரன் கேட்கிறது இதுதான். இந்தக் காரியம் செய்யத் தன்னாலே கூடாதென்று மோயீசென்பவர் நன்றாய் அறிந்திருந்ததினாலேதான், அவரைச் சர்வேசுரன் இந்த அலுவலில் நியமித்து அவரைப் பார்த்துச் சொன்னதாவது: உன் வாயாலே நாம் பேசுவோம்; நீ சொல்ல வேண்டியதைச் சொல்லிக்கொடுப்போம்; பரவோனிடத்தில் போவென்றார். எரேமியாசென்னுந் தீர்க்கதரிசிக்கு நடந்த காரியமுமிதுவே. சர்வேசுரன் தமது தேவதிருவுளத்தைச் சனங்களுக்கு அறிவிப்பதற்காக அவரை அனுப்பினார். ஆனால் இந்தத் தீர்க்கதரிசி இது தன்னாலே ஆகக்கூடாத காரியமென்றெண்ணி: ஆ! கர்த்தாவே, எனக்குப் பேசத் தெரியாது; நான் சிறு பிள்ளையென்றார். இதினாலேதான் சர்வேசுரன் உன்னை இந்த அலுவலுக்கு நியமித்திருக்கிறார். உன்னிடத்தில் வெகு புத்தி சாமர்த்தியம் இருந்தால், செய்கிற காரியத்திலே எதாகிலும் உன் சாமர்த்தியத்தினாலே ஆனதென்றெண்ணிச் சர்வேசுரனுக்கு மாத்திரம் செலுத்த வேண்டிய மகிமையை நீ களவாண்டுகொள்ளுவாயென்பதினாலே, உன்னை இந்த அலுவலில் நியமித்திருக்க மாட்டாராக்கும். தாழ்ச்சியுள்ளவர்களையும் தங்களாலே ஒன்றும் ஆகாதென்று நிச்சயித்திருக்கிறவர்களையும் சர்வேசுரன் தேடுகிறார்; இவர்களைக் கொண்டு மாத்திரம் அவர் மேலான காரியங்களைச் செய்து முடிப்பது வழக்கம்.






சுவிசேஷத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, இயேசுநாதருடைய சீஷர்கள் பிரசங்கிக்கப் போய்த் திரும்பி வந்தபின், அவர்கள் மனிதருக்குச் செய்த நன்மையையும் புதுமையையும் இரட்சகர் கண்டு இஸ்பிரீத்துசாந்துவிடத்தில் சந்தோஷித்துச் சொன்னதாவது: பரலோகத்துக்கும் பூலோகத்துக்கும் அதிபதியாகிய பிதாவே, தேவரீர் இந்தக் காரியங்களைப் புத்திமான்களுக்கும் விவேகிகளுக்கும் மறைத்து வைத்து இந்த அற்பமனுஷருக்கு வெளிப்படுத்தினீர்; பிதாவே, தேவரீருக்கு இப்படித் தாற்பரியமானதினாலே, உமக்கு நன்றியறிந்ததோத்திரம் பண்ணுகிறேனென்றார். தாழ்ச்சியுள்ளவர்கள் பாக்கியவான்கள்! தங்களாலே ஒன்றுங் கூடாதென்றும் ஒன்றும் அநுகூலப்படாதென்றும் நிச்சயித்துக்கொள்ளுகிறவர்கள் பாக்கியவான்கள்! இவர்களைத்தான் சர்வேசுரன் உயர்த்துவார்; இவர்களைக் கொண்டுதான் ஆச்சரியமான காரியங்களைச் செய்வார்; வெகு பேருடைய மனதைத் திருப்பி வெகு பேரைப் புண்ணிய சாங்கோபாங்கத்தில் நடத்தி மேலான கருமங்களைச் செய்து முடிப்பதற்கு இவர்களை அற்புதமாகத் தெரிந்துகொள்ளுவார். ஆகையால் ஒருவரும் தைரியமற்றுப் போக வேண்டாம். ஆனாலல்லோ சிறுமந்தையாகிய குடிகளே, பயப்படாதேயுங்கள்; ஏனென்றால் உங்களுக்குத் தேவ இராச்சியத்தைக் கொடுக்க வேணுமென்று உங்கள் பிதாவுக்குத் தாற்பரியமாயிற்றென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். இயேசுசபையே, நீ இப்போது பலவீனமாயிருக்கிறாய்; உன்னிடத்தில் வெகு சந்நியாசிகள் இன்னம் சேரவில்லை; ஆகிலும் இதினாலே நீ அவநம்பிக்கைப்பட வேண்டாம்; ஏனென்றால் மனுஷருடைய ஆத்துமத்தின்பேரிலும் இருதயத்தின்பேரிலும் உனக்கு அதிகாரங் கொடுக்க மோக்ஷ பிதாவுக்குத் தாற்பரியமாயிற்று. நமது பிதாவாகிய அர்ச். இஞ்ஞாசியார் ரோமாபுரிக்குப் போகும்போது, இயேசுநாதர் அவருக்குக் காட்சி கொடுத்து ரோமாபுரியில் உனக்குச் சனுவாயிருப்போமென்று வாக்குத்தத்தம் பண்ணினார். ஆச்சரியமான இந்தக் காட்சியினிமித்தம் நமது சபை இயேசுசபை யென்று பேர் தரித்துக்கொண்டது. அர்ச். இஞ்ஞாசியாருடைய சபையிலுமல்லாமல் இயேசுநாதருடைய சபையிலும் நாம் இருக்கிறோமென்றும் இயேசுநாதர் நமது பிதாவுக்கு வாக்குத்தத்தம் பண்ணின ஆதரவு நமக்குண்டென்றும் இந்தப் பேர் தெளிவாய்க் காட்டுகின்றது. ஆகையால் நமக்குத் தலைவரும் நம்மை நடத்துகிறவரும் இயேசுநாதராகக் கொள்ளச் சர்வேசுரன் நமக்குக் கொடுத்தருளிய ஆத்தும இரட்சணியமாகிற மேலான இந்த அலு





வலிலே நாம் களைத்துப் போகவும் படாது, தைரியமற்றுப்போகவும் படாது.

## ரு-ம் அதிகாரம்.

நமது பேரில் நாமே தாழ்மையான எண்ணங் கொண்டிருக்கிறது தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தென்று சொல்லுவது.

அர்ச். லவுரேஞ்சு யூஸ்தினியான் சொன்னதுபோலே, தாழ்ச்சியாகிற வரத்தைச் சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொண்டவர்களல்லாமல் வேறொருவருக்கும் தாழ்ச்சி இன்னதென்று தெரியவுமாட்டாது; அதை அறிந்துகொள்ளுகிறதும் மகா அருமையாயிருக்கும்; மெய்யான தாழ்ச்சி இன்னதென்று அறிந்துகொள்ளுகிறதிலே மனுஷன் மோசம் போகிறதுபோலே வேறெந்தக் காரியத்திலும் மோசம் போகிறதில்லை. நான் பாவி, நிர்ப்பாக்கியவானென்று நீ சொல்லுகிறதினாலே, இது தாழ்ச்சியென்று நினைக்கிறாயாக்கும். இது தாழ்ச்சியானால், தாழ்ச்சியைவிட எளிதான காரியம் உலகத்தில் எங்கும் கிடையாதென்று சொல்ல வேண்டும்; நாமெல்லாரும் இப்படிப் பேசுகிறது வழக்கமாயிருக்கிறதினாலே, நாமெல்லாரும் தாழ்ச்சியுள்ளவர்களென்று சொல்ல வேண்டும். ஆனால் பேச்சுக்காக மாத்திரம் நாம் இப்படி சொல்லுகிறோமொழிய நாம் பாவியென்றும் நிர்ப்பாக்கியவானென்றும் மெய்யாகவே மனசில் நிச்சயித்துக்கொள்ளுகிறதில்லை. பரும்படியான உடுப்பு உடுத்திக்கொள்ளுகிறதும் தாழ்மையான நீச அலுவலைச் செய்கிறதும் தாழ்ச்சியென்று எண்ணுகிறாயோ? பரிச்சேதமில்லை; இதிலே வெகு ஆங்காரம் ஒளிந்திருக்கலாம். புண்ணியத்திலே தான் மற்றவர்களுக்கு மேற்பட்டவனென்றும் நல்லவனென்றும் மற்றவர்களைவிடத் தாழ்ச்சியுள்ளவனென்றும் காட்டுவதற்காக இந்த வேலைகளைச் செய்கிறதுண்டு. இப்படியானால், இது மிஞ்சின சூட்சமுள்ள ஆங்காரமேயல்லாமல் வேறொன்றுமில்லை. நாம் இனிமேல் சொல்லப்போகிறது போலே தாழ்ச்சிக்கடுத்த வெளிக் கிரிகைகளைத் தகுந்தபடி செய்தால், மெய்யான தாழ்ச்சியை அ






டைவதற்கு அது வெகு உதவியாயிருக்குமென்பது மெய்தான்; ஆகிலும் இந்த வெளிக்கிரிகைகள் தாழ்ச்சியல்ல. தாழ்ச்சியின் நிழலையும் தோற்றத்தையும் கொண்டிருக்கிறவர்கள் வெகுபேர்; மெய்யான தாழ்ச்சியுள்ளவர்கள் கொஞ்சம் பேரென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். தலைகுனிந்து கண்கவிழ்ந்து நடக்கிறதும் தாழ்ச்சியான சத்தமாய்ப் பேசுகிறதும் நேரத்துக்கு நேரம் பெருமூச்செறிந்து நான் பாவி நிர்ப்பாக்கியவானென்று அடிக்கடி சொல்லுகிறதும் எளிதான காரியந்தான்; ஆனால் இப்படிப்பட்டவர்களுக்கு அற்பமாகிலும் குற்றுகிற வார்த்தை சொன்னால், இவர்கள் மெய்யான தாழ்ச்சிக்கு எவ்வளவு தூரமாயிருக்கிறார்களென்று அறிந்துகொள்ளலாம். ஆகையால் வாக்கினாலும் கள்ள நடக்கையினாலும் தாழ்ச்சி வேஷம் போட வேண்டாம். ஒருவன் மெய்யாகவே தாழ்ச்சியுள்ளவனென்று காட்டுகிறது பொறுமையாகும்; தாழ்ச்சிக்கு உறை கல் பொறுமையென்பதற்குச் சந்தேகமில்லை.

தாழ்ச்சி இன்னதென்று விசேஷித்து விளக்கிக் காட்டுவதற்காக அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது: மனுஷன் தன்னைத்தானே சரியாய் அறிந்துகொண்டு தான் நீசனென்று மெய்யாகவே நிச்சயித்துக் கொள்ளுகிறதுதான் தாழ்ச்சியென்னும் புண்ணியமென்றார். ஆகையால் பேச்சும் வெளிச் சாடையும் தாழ்ச்சியல்ல; தாழ்ச்சி மனப்பற்றுதலில் மறைந்திருக்கும்; தனது நீசத்தனத்தையும் ஒன்றுமில்லாமையையும் ஆழ்ந்து விசாரித்து அறிந்துகொண்டு தன்பேரில் தாழ்மையான எண்ணங் கொண்டு மற்றவர்களாலே நிந்தைப்பட ஆசிப்பதே தாழ்ச்சியாகும்.

தாழ்ச்சியின் பேரில் வெகுவாய் எழுதி வைத்த அர்ச்சியசிஷ்டவர்கள் தாழ்ச்சியிலே அநேகம் அந்தஸ்துண்டென்று சொல்லியிருக்கிறார்கள். அர்ச். ஆசீர்வாதேந்திரரும் அவருக்குப்பின் அர்ச். தோமாசும் வேறே அநேக அர்ச்சியசிஷ்டவர்களும் தாழ்ச்சியிலே பனிரண்டு அந்தஸ்துண்டென்று சொல்லியிருக்கிறார்கள். அர்ச். அஞ்சேல்மூ ஏழு அந்தஸ்து குறித்திருக்கிறார். அர்ச். பொனவெந்தூர் இதெல்லாத்தையும் மூன்று அந்தஸ்தாக* சுருக்கி வைத்திருக்கிறார். அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறது சுருக்கமாயிருக்கிறதினாலேயும், இதை ஞாபகத்தில் எளிதாய் வைத்துக்கொண்டு அநுசரிக்கலாமென்பதினாலேயும், இவர் சொல்லுகிற பிரகாரம் தாழ்ச்சியிலே மூன்று அந்தஸ்து

ண்டென்று நாமும் அங்கீகரித்துக்கொள்ளக் கடவோம். நமது பேரில் நாமே தாழ்மையான எண்ணங்கொண்டிருக்கிறது தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தாகும்; தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிறது தன் பேரில் தாழ்மையான எண்ணங் கொள்ளுவதற்கு ஏக வழிபாடாமே. மேற்கண்ட பிரகாரம் அர்ச். பெர்நர்துஸ் சொன்னது இவ்விரண்டையுமாத்திரம் குறித்திருக்கிறதினாலே, அவர் தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தை மாத்திரம் சொல்லிக் காட்டியிருக்கிறார். மனிதன் தன் பேரில் தாழ்மையான எண்ணங் கொண்டிருக்கிறது தாழ்ச்சியென்னும் புண்ணியமாகும்; தன்னைச் சரியாய் அறிந்துகொள்ளுகிறது இதற்கான ஏக வழிபாடு. இதினாலே தன்னை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தென்று சிலர் சொன்னது ஞாயமென்பதற்குச் சந்தேகமில்லை; ஆனால் அர்ச். பொனவெந்தூர் சொல்லுமாப்போலே, தாழ்ச்சியில் மூன்று அந்தஸ்து மாத்திரம் உண்டென்று நாம் அங்கீகரித்துக்கொள்ளுகிறதினாலே, தன் பேரில் தாழ்மையான எண்ணங்கொண்டிருக்கிறது தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தென்றும் தன்னை அறிந்துகொள்ளுகிறது இந்த முதல் அந்தஸ்தில் வந்து சேருவதற்கான வழிபாடென்றும் சொல்லுகிறோம். ஆகிலும் இதுவெல்லாம் ஒன்றுதான்; தன்னை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சிக்கு அஸ்திவாரமும் ஊற்றுமென்று எல்லாரும் அங்கீகரித்துக்கொள்ளுகிறோம்; ஏனென்றால் ஒருவனை அறியாமல் அவன் எப்படிப்பட்டவனென்று தீர்மானிக்கக் கூடுமோ? இது கூடாத காரியம்; முந்த முந்த அவனை நன்றாய் அறிந்துகொள்ள வேண்டும்; அதின்பின் அவன் எப்படிப்பட்டவனென்று தீர்மானித்துக்கொள்ளலாம். ஆகையால் எல்லாத்துக்குமுன்னே உன்னை நீயே ஆழ்ந்து அறிந்துகொள்ளுகிறது அவசரமாமே; அதின்பின் நீ எப்படிப்பட்டவனென்று நீயே தீர்மானித்துக்கொள். உன்னை நீயே அறிந்துகொண்ட மாத்திரத்தில் தாழ்ச்சியுள்ளவனாவாய்; ஏனென்றால் நீ மிகவும் நீச வஸ்துவென்று அறிந்துகொள்ளுவாய். சர்வேசுரன் எல்லாத்தையும்விட மெய்யைச் சினேகிக்கிறதினாலே, தாழ்ச்சியை விசேஷமாய்ச் சினேகிக்கிறாரென்று சில அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஏனென்றால் தாழ்ச்சியும் மெய்யும் இரண்டும் ஒன்றுதான். ஆங்காரமும் அகந்தையும் பொய்யல்லாமல் வேறொன்றுமில்லை; ஏனென்றால் ஆங்காரி தன்பேரில் கொண்டிருக்கிற மேலான எண்ணம் பொய்யான எண்ணந்தான்; மற்றவர்கள் தன்னை மேலாக எண்ண வேணுமென்று அவன் படுகிற ஆசையும் தப்பிதமான ஆசைதான். ஆகை





யால் நீ தாழ்ச்சியான மெய்ப் பாதையில் நடக்க வேணுமானால், நீ எப்படிப்பட்டவனென்று பார்த்து அப்படிப்பட்டவனென்று எண்ணிக்கொள். இங்கே நாம் சொல்லுகிறது வருத்தமான காரியமல்ல; நீ எப்படிப்பட்டவனோ அப்படிப்பட்டவனென்று எண்ணாமல் உன்பேரில் வேறே எண்ணங் கொள்ளுகிறதற்கு முகாந்தரமென்ன ? உன் பேரில் சரியான எண்ணங்கொள்ளாமல் வேறே எண்ணங்கொள்ளுகிறது மிகவும் ஆபத்துக்குரிய வஞ்சகமல்லோ ?

———00000———

## ௯-ம் அதிகாரம்.

———•◆•———

தன்னை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சிக்கு அஸ்திவாரமும் ஊற்றும் தாழ்ச்சியை அடைவதற்கு ஏக வழி பாடுமென்று சொல்லுவது.

———00000———

**நாம்** ஆரென்று இப்போது ஆழ்ந்து யோசித்து நமது நிர்ப்பாக்கியத்தையும் பலவீனத்தையும் ஆழமாய்த் தோண்டிப் பார்க்கக் கடவோம்; இப்படிப் பார்த்தால் தாழ்ச்சியாகிற புதையலைக் கண்டுபிடிப்போம். பணத்தைப் போக்கடித்தவன் சேற்றிலும் அசுந்தத்திலும் அதைக் கண்டுபிடிப்பானென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். உன் நிர்ப்பாக்கியமாகிற குப்பைக் குழியிலேயும் உன் பாவமாகிற அசுத்தத்துக்குள்ளேயும் தாழ்ச்சியாகிய விலைபெற்ற மாணிக்கத்தைக் கண்டுபிடிப்பாய். இது காரியத்தை ஒழுங்கோடு யோசிக்கும்படியாய்ச் சுபாவ வகையிலே மனுஷன் ஆரென்று முந்த முந்த விசாரிக்கக் கடவோம். நமது நிர்ப்பாக்கியத்தை ஆழமாய் வெட்டித் தோண்டிப் பார்ப்பதற்கு இது முந்தின மண் வெட்டிக் கொட்டாகும். நீ என்னமாயிருந்தாயென்றும் என்னமாயிருக்கிறாயென்றும் என்னமாய்ப் போவாயென்றும் இம்மூன்று சத்தியமும் எப்போதும் உன் நினைவில் இருக்கட்டும். என்னமாயிருந்தாய் ? அசுத்தமான விதையாயிருந்தாய். என்னமாயிருக்கிறாய் ? அசுத்தமுள்ள பாத்திரமாயிருக்கிறாய். என்னமாய்ப் போவாய் ? புழுக்களுக்கு இரையாய்ப் போவாயென்று அர்ச். பெர்நார்துஸ் வசனித்தார். இது காரியத்தை நன்றாய் யோசித்து ஆழ்ந்து தியா





னிப்பதற்கு வெகு இடமுண்டு. இதினிமித்தமாக இன்னொசெஞ்சி புஸ் என்னும் பாப்பானவர் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது: ஓ! ஓ! மனுஷ சுபாவம் எவ்வளவு நிர்ப்பாக்கியமும் வெட்கமுமுள்ள காரியம்! புல்லையும் பூண்டுகளையும் பார்: அதிலிருந்து இலை பூ பழம் முதலியது பிறக்கின்றது; மனுஷனுடைய சரீரத்திலிருந்து அசுத்தம் மாத்திரம் புறப்படும். மரத்திலும் பூண்டுகளிலுமிருந்து எண்ணெய் இரசம் வாசனைத் தைலமுண்டாகிச் சுகந்த வாசனை வீசும்; மனுஷனுடைய சரீரமோவென்றால் அசுத்தமும் நாற்றமும் நிறைந்த பாத்திரமாயிருக்கின்றது. மரம் எப்படியோ பழமும் அப்படித்தான் இருக்குமென்றார்; கெட்ட மரம் நல்ல பழம் பழுக்காதென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுமாப்போலே, மனிதனுடைய சரீரம் வெண் பனியாலே மூடின குப்பை மேட்டுக்கு ஒப்பாகும். அது வெளிப் பார்வைக்கு அழகாகவும் பளபளப்பாகவுந் தோன்றும்; ஆனால் அதுக்குள்ளே அசுத்தமும் நாற்றமுமாத்திரம் இருக்கும். மனிதர் சரீரத்திலிருந்து புறப்படுகிற அசுத்தத்தையெல்லாம் யோசித்துப் பார்த்தால், அது அசுத்தமான குப்பைக் குழியும் அருவருப்பான சாலகமுமேயல்லாமல் வேறல்லவென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இதினிமித்தமாக யோபென்பவர் சொன்னதாவது: புழுத்த நாற்றத்தை நோக்கி நீ என் தகப்பனென்றும் புழுக்களை நோக்கி நீ என் தாய் சகோதரி யென்றும் சொன்னேனென்றார். மனிதன் புழுவும் புழுத்த நாற்றமும் நிறைந்த சாக்கல்லாமல் வேறென்ன? இது இப்படியிருக்க, நாம் ஆங்காரிப்பதற்கு எதாகிலும் காரணம் உண்டோ? இதினாலல்லோ தூசியும் சாம்பலும் ஆங்காரிக்கிறதென்னவென்று ஞானியானவர் வசனித்தார். நாம் இப்போது சொன்னதெல்லாம் நாம் ஆங்காரிப்பதற்குக் காரணமாயிருக்கக் கூடுமோ? இல்லையே. நம்மை நாமே தாழ்த்தி நிந்திப்பதற்கு இது முகாந்தரமேயல்லாமல் வேறல்ல. மனிதனுடைய பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் நினைத்துப்பார்த்தால், அது தாழ்ச்சியை நன்றாய்க் காப்பாற்றுமென்று அர்ச். கிரெகோரியார் சொல்லியிருக்கிறார். நமது நிர்ப்பாக்கியமாகிய குப்பைக் குழியிலே தாழ்ச்சியாகிய மரம் நன்றாய் வளரும்.

ஆனால் இன்னம் ஒரு மண்வெட்டிக் கொட்டுப்போட்டு நமது நீசத்தனத்தை இன்னம் கொஞ்சமதிகமாய்த் தோண்டிப் பார்க்கக் கடவோம். சர்வேசுரன் உன்னைப் படைக்குமுன்னே என்னமாயிருந்தா

நாமும் இவ்வுலோகத்தை விட்டு நீங்கி ஒன்றுமில்லாமையாய்ப்போவோம். இதினாலல்லோ சகல சாதி சனங்களும் சர்வேசுரனுக்கு முன்பாக இல்லாததுபோலேயும் ஒன்றுமில்லாமைபோலேயும் இருக்கிறார்களென்று இசாயியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். நாம் ஒன்றுமில்லாமையென்று நாமே தினந்தோறும் சொல்லுகிறது மெய்தான். ஆனால் நாம் இதை நாக்கினாலே சொல்லுகிறதேயல்லாமல் நாம் சொல்லுகிறது மெய்யான சத்தியமென்று மனசிலே நிச்சயித்துக்கொள்ளுகிறோமோ இல்லையோ தெரியாது. நான் தேவரீருக்கு முன்பாக ஒன்றுமில்லாமைபோலே இருக்கிறேனென்று தாவீதென்னுந் தீர்க்கதரிசி சர்வேசுரனை நோக்கிச் சொன்னார். இவர் இது காரியத்தைச் சத்தியமென்று முழுதும் நிச்சயித்துச் சொன்னதுபோலே, நாமும் இதை முழுதும் நிச்சயித்து உணர்ந்துகொண்டால், எவ்வளவோ பாக்கியவான்களாவோம்! மெய்யாகவே, மெய்யாகவே நான் ஒன்றுமில்லை; என்னிடத்தில் உள்ளது ஒன்றும் எனக்குச் சொந்தமல்ல; கர்த்தாவே, தேவரீர்தான் இதெல்லாத்தையும் எனக்குக் கொடுத்தருளினீர். உம்மிடத்தில் இதை நான் வாங்கிக்கொண்டிருக்கிறேன்; இது என்னிடத்தில் உண்டாவதற்கு நான் ஒன்றுஞ் செய்யவில்லை; தேவரீரே இதெல்லாத்தையும் என்னிடத்தில் உண்டாக்கினீர்; தேவரீரே இதைக் காப்பாற்றுகிறீர்; தேவரீரே நான் அசைவதற்கான பெலனைக் கொடுத்தருளுகிறீர். இப்படியிருக்க இதின் பேரில் நான் மகிமைப் பாராட்டுகிறதற்குக் காரணமென்ன? என் உயிரும் மூச்சும் கிரிகையும் எல்லாம் உமது கையிலிருந்து வருகின்றது; நான் என்னாலே ஒன்றுமில்லாமையாயிருக்கிறதினாலே, என்னாலே சுத்தமாய் ஒன்றுஞ் செய்ய முடியாது. ஆகையால் எதின் பேரில் நான் ஆங்காரப்படலாம்? ஒருவேளை என்னுடைய ஒன்றுமில்லாமையைப்பற்றி நான் ஆங்காரப்படலாமாக்கும். தூசியும் சாம்பலும் எதின்பேரில் ஆங்காரப்படலாமென்று ஞானியோடு முன்னமே சொல்லிக் காட்டினோமல்லோ? இப்போது தூசியையும் சாம்பலையும் பார்க்க சொற்பமான ஒன்றுமில்லாமையாகிய மனிதன் எதின்பேரில் ஆங்காரப்படலாமென்று கேட்கிறோம். ஒன்றுமில்லாமையாகிய மனுஷன் ஆங்காரித்து நான் இதென்று அதென்று நினைக்கிறதற்கு முகாந்தரமென்ன? சமயமென்ன? இதற்கு ஒரு முகாந்தரமும் இல்லையென்பது நிச்சயம்.

———ooooo———





இதினாலே வெட்கி நாணி உன்னாலே கூடினமாத்திரம் உன்னைத் தாழ்
த்திக்கொள் ; ஏனென்றால் நீ எவ்வளவு அழமாய் உன்னைத் தாழ்த்திக்
கொண்டாலும், ஏக நன்மையாகிய சர்வேசுரனுக்குப் பொருந்தாத பா
வத்தை நீ கட்டிக்கொண்டதினாலே, உனக்கு வரவேண்டிய நிந்தைக்கு
இதுவெல்லாம் பற்றாது. இந்தச் சத்தியம் அளவிறந்த பாதாளம் ; அழ
மறியக்கூடாத கிடுகிடு பாதாளம் ; ஏனென்றால் சர்வேசுரனுடைய ந
ன்மைத்தனம் எவ்வளவென்றும் சர்வேசுரனுக்கு விரோதமாகிற பாவ
ம் எவ்வளவு கனத்த தோஷமென்றும் அதுக்கு இடவேண்டிய ஆக்கி
னை எவ்வளவென்றும் நாம் மோக்ஷத்திலே சர்வேசுரனை முகமுகமாய்
த் தரிசிக்கும் வரைக்கும் நன்றாய் அறிந்துகொள்ளக் கூடாது.

இச்சத்தியத்தை நாம் ஆழ்ந்து தியானித்து நமது பாவதோஷத்
தையும் நிர்ப்பாக்கியத்தையும் பற்றும் பற்றாய்ச் சீர்தூக்கிப் பார்த்தால்,
எவ்வளவோ தாழ்ச்சியுள்ளவர்களாவோம்! நாம் எவ்வளவு நீசரென்
றெண்ணிச் சகலவித நிந்தை அவமானங்களையும் எவ்வளவு சந்தோஷ
த்தோடு பட்டநுபவிப்போம் ! சர்வேசுரனுக்குப் பாவ துரோகம் பண்
ணினவன் அவருடைய இஷ்டப்பிரசாதத்தை அடைந்தபின் அவருக்
காக என்னதான் பட்டநுபவித்தாலும், அதுவெல்லாம் போதுமோ ?
சர்வேசுரனைக் கைவிட்டு தன் ஆசாபாசத்துக்கு ஏற்றபடி நடந்து தன்
சிஷ்டகரும் எசமானுமாகிய சர்வேசுரனுக்கு மனநோகப்பண்ணி அ
ழிந்தொழியும் அற்ப இன்பத்தை நாடித் திரிந்து இதற்காக நித்திய ஆ
க்கினைக்குப் பாத்திரமானவன் சர்வேசுரனுடைய அளவிறந்த மகத்து
வத்துக்கு விரோதமாய்க் கட்டிக்கொண்ட பாவத்துக்குப் பரிகாரமாக
எந்தெந்த நிந்தை அவமானத்தையும் இகழ்ச்சியையும் சந்தோஷமாய்ப்
பட்டநுபவிக்க வேண்டாமோ ? இதினாலல்லோ தாவீதரசன் சர்வேசு
ரனை நோக்கி தேவரீர் எனக்கு ஆக்கினையிட்டு என்னைத் தாழ்த்துகிற
தற்குமுன் பாவஞ் செய்தேன் ; இதினாலே உமது திருக் கற்பனைக்குக்
கீழ்ப்பட்டிருக்கிறேனென்றார். நான் பாவஞ்செய்ததினாலே, வாய் பே
சாமலிருக்கிறேன் ; முறைப்படுகிறதற்கு எனக்கு நாக்கில்லை ; என் பா
வத்தினாலே எனக்கு வர வேண்டியதுக்குமுன் நான் பட்டநுபவிக்கிற
தெல்லாம் ஒன்றுமில்லை. கர்த்தாவே, எனக்கு இட வேண்டிய ஆக்கினை
யெல்லாம் தேவரீர் இடவில்லை ; நான் இவ்வுலோகத்தில் அநுபவிக்கக்
கூடுமான நிந்தை அவமானம் கஸ்தி துன்பமெல்லாங் கூடி ஒரே பாவ
த்துக்கு வர வேண்டிய ஆக்கினைக்கு முன்பாக ஒன்றுமில்லை. சர்வேசு





ரனை நிந்தித்த பாவி நிந்தனைப்படுகிறதும் தன் சமானைச்சட்டைபண்ணாதிருந்த துரோகியை ஒருவரும் சட்டைபண்ணாதிருக்கிறதும் தன் சிஷ்டகரை மனம் பொருந்தி அகந்தையாய் நிந்தித்தவனை அவன் மனசுபோலே ஒருகாலும் ஒன்றும் செய்ய விடாமலிருக்கிறதும் ஞாயமல்லோ?

ஆனால் இன்னம் இது காரியத்தை ஆழ்ந்து யோசிப்பதற்கு இடமுண்டு. சர்வேசுரன் தமது இரக்கத்தினாலே நமது பாவத்தைப் பொறுத்துக்கொண்டாரென்று நம்பலாமென்றாலும், அது முழுதும் நிச்சயமல்ல. இதினாலல்லோ மனிதன் சினேகத்துக்கோ பகைக்கோ பாத்திரமாயிருக்கிறானென்று அவனுக்குத் தெரியாதென்று ஞானியானவர் வசனித்தார். என்னிடத்தில் பாவமுண்டென்று எனக்குத் தோன்றவில்லை; ஆனால் இதினாலே நான் நீதிமானாகவில்லையென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். என்னமோ நான் நீதிமானாயிராவிட்டால், சந்நியாசியாகி ஆத்துமாக்களைத் திருப்பினதினாலே என்னத்துக்குதவும்? நான் மனுஷருடையவும் சம்மனசுகளுடையவும் பாஷை பேசினாலும், என்னிடத்தில் தேவ சினேகமில்லாவிட்டால், ஊதுகிற எக்காளமும் கொட்டுகிற கைத்தாளமும் போலானேன்; நான் தீர்க்கதரிசன வரம் அடைந்து சகல சாஸ்திரங்களையும் சகல பரம இரகசியங்களையும் அறிந்திருந்தாலும், மலையை இருந்த இடத்தைவிட்டுப் பெயர்த்து வைப்பதற்கான விசுவாசம் என்னிடத்திலிருந்தாலும், என்னிடத்தில் சினேகமில்லாவிட்டால், நான் ஒன்றுமில்லை; என் ஆஸ்தியெல்லாம் தரித்திரருக்குப் போசனமாகத் தந்து என் சரீரத்தைச் சுட்டெரிக்கக் கொடுத்துவிட்டாலும், என்னிடத்தில் தேவ சினேகமில்லாவிட்டால், இதுவெல்லாம் ஒன்றுக்குமுதவாதென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஆகையால் உன்னிடத்தில் தேவ சினேகமும் தேவ இஷ்டப்பிரசாதமுமில்லாவிட்டால், ஐயோ! உனக்கு நிர்ப்பாக்கியம்; ஏனென்றால் உன்னிடத்தில் தேவ இஷ்டப்பிரசாதமில்லாதேபோனால், நீ ஒன்றுமில்லை; ஒன்றுமில்லாமையைவிடத் தாழ்ந்தவனாயிருக்கிறாய். நாம் தேவ இஷ்டப்பிரசாதத்தோடு இருக்கிறோமோ இல்லையோவென்று அறியாதிருக்கிறது எப்போதும் தாழ்ச்சியாயிருந்து நமது பேரில் தாழ்மையான எண்ணங் கொண்டிருப்பதற்கான வழிபாடாகும். நாம் பாவஞ் செய்தது நிச்சயம்; சர்வேசுரன் அதைப் பொறுத்துக்கொண்டாரோ இல்லையோவென்று நமக்கு நிச்சயமாய்த் தெரியாது. இதிப்படியிருக்கத்





தலையை உயர்த்தி நடக்கத் துணிகிறவனார்? இவ்வளவு கொடூரமான சந்தேகமிருக்கையிலே, வெட்கத்தினாலே கூசிப்பூமியின் கர்ப்பம் வரைக்கும் தன்னைத் தாழ்த்தாதவனார்? அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, தாழ்ச்சியாகிற வரப்பிரசாதம் நம்மிடத்தில் நிச்சயமாய் நிலைக்கொள்ளும் பொருட்டு நம்மிடத்தில் தேவ இஷ்டப்பிரசாதம் உண்டோ இல்லையோவென்று நாம் சந்தேகப்படச் சர்வேசுரன் சித்தமானார். மெய்யாகவே இது காரியத்தில் நம்மிடத்திலுள்ள பயமும் சந்தேகமும் எவ்வளவு கஸ்திக்குரியதாயிருந்தாலும், இது தேவ இரக்கமும் நன்மைத்தனமும் நிறைந்த கிருபைதானே. தாழ்ச்சியை அடைவதற்கும் அதைக் காப்பாற்றுவதற்கும், மற்றவர்கள் எவ்வளவு பாவஞ் செய்தாலும், அவர்களை நிந்தியாமலிருப்பதற்கும் இந்தப் பயம் மிகவும் உதவியாயிருக்கும். ஓகோ! சர்வேசுரன் அவர்களுடைய பாவத்தைப் பொறுத்துக்கொண்டாராக்கும்; நமது பாவத்தைப் பொறுத்துக்கொண்டாரோ இல்லையோவென்று நமக்குத் தெரியாது. இந்த நினைவு நாமொருகாலும் அசமந்தமாயிராமல் மேன்மேலும் புண்ணிய வழியிலே நடப்பதற்கும் எப்பொழுதும் தேவ பயத்திலும் தாழ்ச்சியிலும் நிலைக்கொள்ளுவதற்கும் எவ்வளவு பெலத்த முகாந்தரமாயிருக்கும்! இதினிமித்தமாக எப்போதும் பயத்தோடு நடக்கிறவன் பாக்கியவானென்று ஞானி வாயாலே இஸ்பிரீத்துசாந்து திருவுளம்பற்றினார். நமது பாவம் பொறுக்கப்பட்டதென்று பயமில்லாமலிருக்கவொண்ணாதென்று ஞானி வாயாலே வேறோரிடத்தில் திருவுளம்பற்றினார். ஆகையால் நாம் நம்மைத்தானே நிந்தித்துத் தாழ்ச்சியில் நிலைக்கொள்ளுவதற்கு நமது பாவத்தை எப்போதும் கண்ணுக்கு முன்பாக வைத்திருக்கிறது மிகவும் பிரயோசனமாயிருக்கும்; நமது பாவத்தை எப்போதும் ஆழ்ந்து யோசித்துப் பார்ப்பதற்கு எப்போதும் முகாந்தரமுண்டு.

அன்றியும் சென்மப் பாவத்தினாலே நமக்கு நேரிட்டிருக்கிற பொல்லாப்புக்களையும் சேதபாதங்களையும் பற்றும் பற்ற யோசித்துப் பாவத்தினாலே நமது சுபாவம் எவ்வளவு கெட்டுப்போயிருக்கிறதென்று அளவிட்டுப் பார்த்தால், நம்மை நாமே தாழ்த்தி நிந்திப்பதற்கு எவ்வளவோ முகாந்தரமுண்டு! ஏனென்றால் மேலே எறிந்த கல் தன் பாரத்தினாலே கீழே விழுகிறதுபோலே, நாமும் சென்மப் பாவத்தின் தோஷத்தினாலே நமது சரீரத்துக்கும் வீண் மகிமைக்கும் நமது வீண் பிரயோசனத்துக்கும் அடுத்ததெல்லாத்தையும் நாடித் திரிகிறோமே.






இப்பிரபஞ்ச நன்மைகளின் பேரில் வெகு ஆவலுள்ள பற்றுதலாயிருக்கிறோம் ; மோக்ஷ நன்மைகளின் பேரில் நம்மிடத்தில் ஓர் பற்றுதலுமில்லை, இருந்தாலும சொர்பப் பற்றுதல் மாத்திரம் உண்டு. நம்மிடத்தில் கீழ்ப்படிய வேண்டியது ஆளுகின்றது; ஆளவேண்டியது கீழ்ப்படிகின்றது. நாம் வெகு நிர்ப்பாக்கியராயிருக்கிறதினாலே, மோக்ஷ இராச்சியத்துக்காகப் பிறந்திருந்தாலும், மிருகங்களுக்குரிய ஆசாபாசமும் பூமியை மாத்திரம் நாடுகிற நீசப் பற்றுதலும் நம்மிடத்தில் குடிகொண்டிருக்கின்றது. இதினாலல்லோ மனுஷனுடைய இருதயம் கெட்டுத் தாறுமாறுப்போனது ; ஆர் அதை அறிந்துகொள்ளக் கூடுமென்று எரேமியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். எசேக்கியேலென்பவர் காட்சியில் கண்ட சுவர் இதுவே. அதை எவ்வளவு வெட்டிப் பறித்தாலும் எப்போதும் அதிலிருந்து அருவருப்புக்குரிய நரகல் புறப்பட்டுக்கொண்டிருந்தது. ஆனால் நமது குற்றங் குறைகளே நமக்குச் சொந்தமான காரியம் ; அதை உற்று விசாரித்தால், நாம் கூசி வெட்கப்படுவதற்கு எவ்வளவோ இடமுண்டு ! நமது நாக்கை அடக்குவதற்கும் நமது இருதயத்தைக் காப்பதற்கும் எவ்வளவு அசட்டைத்தனமாயிருக்கிறோம்! நமது நற்கருத்தில் எவ்வளவு நிலைக்கொள்ளாமல் போகிறோம் ! இன்ப சுகங்களையும் சுய பிரயோசனத்தையும் எவ்வளவு நாடித் திரிகிறோம் ! நமக்குப் பிரியமாயிருக்கிறதை எவ்வளவு ஆவலோடு செய்துகொண்டு வருகிறோம் ! சுய சினேகத்தால் நிறைந்துபோயிருக்கிறோம் ; நமது சுய மனசிலும் சுபாவ பற்றுதலிலும் எவ்வளவு பிடிவாதமாய் நிலைக்கொண்டிருக்கிறோம் ! நமது ஆசாபாசம் எவ்வளவு பெலன் கொண்டிருக்கின்றது! கெட்ட வாடிக்கை நம்மிடத்தில் எவ்வளவு வேரூன்றி ஸ்திரப்பட்டிருக்கின்றது ! நமது கெட்ட சுபாவத்துக்குப் பிரியமானதெல்லாத்தையும் எவ்வளவு எளிதாய்ச் செய்துகொண்டுவருகிறோம் ! காற்று அடித்துக்கொண்டு போகிற ஓர் இலைக்கு விரோதமாய் உமது வல்லபத்தைக் காண்பிக்கிறீரென்று யோபென்பவர் சர்வேசுரனை நோக்கிச் சொன்னார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். கிரெகோரியார் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது : மனுஷனை ஓர் இலைக்கு ஒப்பிட்டிருக்கிறது ஞாயந்தானே; ஏனென்றால் அற்பக் காற்றும் இலையை அசைப்பதுபோலே, மனுஷனும் சோதனையாகிற அற்பக் காற்றினால் எளிதாய் அலைக்கழிக்கப்படுவான். சிலவிசை கோபமாகிற காற்று அவனை அடித்துக்கொண்டு போகும் ; சிலவிசை வீண் சந்தோஷமாகிற காற்றுக்கு இடங் கொடுப்பான்; சிலவிசை பொருளாசை மகிமைப் பி

ரியம் அவனை உபாதிக்கும்; சிலவிசை இன்ப சுகமாகிற காற்று அவனை அடித்துக்கொண்டு போகும்; சிலவிசை ஆங்காரமாகிற காற்றினால் மேலே எழும்புவான்; சிலவிசை பயம் அவனைக் கலக்கி அவநம்பிக்கைப்படுத்தும். இதினாலல்லோ நாமெல்லாரும் இலையைப்போலே வாடி விழுந்தோம்; நமது தோஷ துரோகம் காற்றுப்போலே நம்மை அடித்துக்கொண்டு போகிறதென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். சோதனையாகிற சொற்பக் காற்று நம்மை விழுத்தாட்டி அடித்துக்கொண்டு போகின்றது; புண்ணியத்திலும் நற்பிரதிக்கினையிலும் நம்மிடத்தில் அற்ப உறுதியுமில்லை. ஆகையால் நம்மை நாமே தாழ்த்தி நாணி வெட்கப்படுகிறதற்கு இது கனத்த முகாந்தரமல்லோ? நமது பாவம் குற்றங் குறைகளினிமித்தம் நம்மை நாமே தாழ்த்துகிறதுமல்லாமல் நமது நற்கிரிகைகளையும் பரிசோதித்து அதிலே எவ்வளவு குற்றமுங் குறையும் கலந்திருக்கிறதென்று கவனித்துப் பார்த்தால், நம்மை நாமே தாழ்த்திக்கொள்ளுகிறதற்குப் போதுமான முகாந்தரமுண்டு. இதினாலல்லோ நாமெல்லாரும் அசுத்தமுள்ளவர்களானோம்; நமது நற்கிரிகைகளெல்லாம் கெட்ட இரத்தக்கறை பிடித்த துணிபோலிருக்கிறதென்று இசாயியாசென்னுந் தீர்க்கதரிசி அருளிச்செய்தார். ஆனால் இது காரியத்தை நாம் வேறோரிடத்தில் ஏற்கனவே வெளிப்படுத்தியிருக்கிறதினாலே, இதின் பேரிலே இவ்விடத்தில் விஸ்தாரமாய்ப் பேசுகிறது அவசரமல்ல.

---

## அ-ம் அதிகாரம்.

---

தைரியமும் நம்பிக்கையுமற்றுப்போகாமல் நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற முயற்சி எப்படிச் செய்ய வேணுமென்று சொல்லுவது.

---

நமது நிர்ப்பாக்கியம் வெகுவாயிருக்கிறதினாலேயும் நம்மை நாமே தாழ்த்துகிறதற்கான முகாந்தரம் அநேகம் இருக்கிறதினாலேயும் நாமே இதுவெல்லாம் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிறதினாலேயும் நமது குற்றங் குறைகளைப் பார்த்து அவநம்பிக்கையில் விழாதபடிக்கு நமக்குப் புத்தி சொல்லுகிறது அவசரமென்று தோன்றும்.

இது நிச்சயமான சத்தியமாயிருக்கிறதினாலே, நமது பலவீனத்தை ஆழ்ந்து அறிந்துகொள்ளப் பிரயாசப்படும்போது, நமது நிர்ப்பாக்கியத்தின் கனத்தைக் கண்டு தைரியமற்றுப்போய் அவநம்பிக்கைப் படாதபடிக்கு நமது பலவீனத்தை யோசித்துப் பார்த்தபின், அத்தோடே நில்லாமல் நமது நம்பிக்கையெல்லாம் சர்வேசுரன் பேரிலே வைப்பதற்காக அவருடைய நன்மைத்தனத்தை யோசித்துப் பார்க்க வேணுமென்று ஞானசீவிய கிரந்தகர்த்தாக்கள் போதித்திருக்கிறார்கள். இவ்வண்ணமே நாம் பாவத்துக்காகப் படுகிற மனஸ்தாபத்தின் மிகுதியினாலே அவநம்பிக்கையில் விழாதபடிக்குச் சிலவிசை பாவத்தின் கனத்தை உற்று விசாரியாமல் சர்வேசுரனுடைய இரக்கத்தை யோசித்துப் பார்த்துப் பொறுத்தல் அடைவோமென்கிற நம்பிக்கையை நம்மிடத்தில் வருவித்துக்கொள்ள வேண்டும். இதினாலல்லோ இந்த அந்தஸ்திலிருக்கிறவன் மிதமிஞ்சின கஸ்திப்பட வொண்ணாதென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார். இவ்வண்ணமே நாம் தைரியத்தையும் நம்பிக்கையையும் போக்கடியாதபடிக்கு நமது நிர்ப்பாக்கியத்தையும் பலவீனத்தையுமாத்திரம் தியானித்துப் பார்த்தால் போதுமென்றிருக்கப் படாது; நமது நிர்ப்பாக்கியத்தை ஆழ்ந்து நன்றாய் உற்று விசாரித்து நமது பேரில் நம்பிக்கை வைப்பதற்கு ஒரு முகாந்தரமும் இல்லையென்றும் நமது பெலத்தை ஒருகாலும் நம்பக்கூடாதென்றும் நிச்சயமாய் அறிந்துகொண்டபின், உடனே சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை யோசித்துப் பார்க்க வேணும். இப்படிச் செய்தால், மனத்திடாரிக்கமற்றுப்போகாததுமன்றித் தைரியமும் நம்மிடத்திலுண்டாகும்; ஏனென்றால் நமது நிர்ப்பாக்கியத்தை நாம் யோசித்துப் பார்க்கும்போது, நமக்கு அவநம்பிக்கை உண்டானாலும், சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை உற்று விசாரித்தால், அதினாலே நமக்குத் தைரியமுண்டாகும். உன் பலவீனத்தையும் உன் பேரிலே நம்பிக்கை வைப்பதற்கு ஒரு முகாந்தரமுமில்லையென்கிற சத்தியத்தையும் நீ அறிந்துகொண்டால், அதினாலே உனக்கு எவ்வளவு அவநம்பிக்கை யுண்டாகுமோ, அவ்வளவு சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தைத் தியானித்து அவர் பேரில் உன் நம்பிக்கையெல்லாம் வைக்கும்போது, தைரியம் உன்னிடத்தில் பிறக்கும்.

அர்ச்சியசிஷ்டவர்கள் இது காரியத்தில் மிகவும் கனத்தவோர் புத்தி சொல்லியிருக்கிறார்கள். அதென்னவென்றால், நாம் இப்போது

சொன்னதுபோலே, நமது நிர்ப்பாக்கியத்தையும் பலவீனத்தையும் உற்றுப் பார்த்தாலே போதுமென்றிராமல் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தையும் உதாரத்துவத்தையும் யோசித்துப் பார்த்து அவர் பேரில் நமது நம்பிக்கையெல்லாம் வைக்க வேணுமென்று போதித்திருக்கிறார்கள்; ஆனால் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை யோசித்துப் பார்ப்பதும் போதுமென்றிராமல் உடனே நமது பலவீனத்தை மறுபடியும் யோசித்துப் பார்க்க வேண்டும். ஏனென்றால் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தையும் உதாரத்துவத்தையும் தியானித்துக்கொண்டிருந்து நமது நிர்ப்பாக்கியத்தை மறந்துபோனால், ஆங்காரத்திலும் அகந்தையிலும் விழுந்து நம்மை நாமே நம்பி எச்சரிக்கையில்லாமல் துணிகரமாய் நடந்து கெட்டுப்போவோமென்று பயப்படுகிறதற்கு இடமுண்டு அநேகர் பயங்கரமான விதமாய்க் கெட்டுப்போனதற்கு அநந்தமுறை இதுவே காரணமாயிருந்தது. ஞானத்தில் தேர்ந்திருந்தவர்கள் எத்தனையோ பெயர் செபத்தினாலும் தியானயோகத்தினாலும் மோக்ஷமண்டலம் வரைக்கும் ஏறினவர்கள்போலே தோன்றினாலும், தங்கள் பேரிலுள்ள மிஞ்சின நம்பிக்கையினாலே தாழ தள்ளுண்டுபோனார்கள்! எத்தனையோ பெரிய அர்ச்சியசிஷ்டவர்கள் தாங்கள் பாவிகளென்கிற சத்தியத்தை மறந்துபோய்ச் சர்வேசுரன் தங்களுக்கு அளித்தருளின வரங்களை நம்பியிருந்ததினாலே, பாவத்தில் விழுந்து கெட்டார்கள்! இந்த நம்பிக்கையினாலே எங்களுக்கு ஒரு மோசமும் வராதென்று எண்ணியிருந்தார்கள்; இதுவே அவர்கள் நிர்ப்பாக்கியமாய்க் கெட்டுப்போகிறதற்குக் காரணமாயிற்று. சர்வேசுரன் தாவீதரசனுக்கு வெகு உபகாரங்களையும் வரங்களையும் அளிக்கும்போது, அவர் தமது பேரில் நம்பிக்கைகொண்டு என் செல்வ காலத்தில் நான் ஒருகாலும் அசையப்போகிறதில்லையென்றார்; தமது பேரில் அவர் கொண்டிருந்த இந்த நம்பிக்கைக்கு ஆக்கினையாக அவர் காம பாவத்திலும் கொலைபாதகத்திலும் விழுந்தாரென்று அர்ச். பசிலியார் சொல்லியிருக்கிறார். தாவீதென்னும் தீர்க்கதரிசியே, ஒருகாலும் நான் அசையமாட்டேனென்று சொல்லுகிறீர். நல்லது, சற்றே பொறும்; சர்வேசுரன் உம்மைத் தாங்கிக்கொண்டிருக்கிற கையை எடுத்துக்கொண்டு அவருடைய ஒத்தாசையை உம்மைவிட்டு நீக்குவார்; அப்போது என்ன நடக்குமென்று பார்ப்பீர். அப்போது சர்வேசுரா, என்னைவிட்டு உமது திருமுகத்தைத் திருப்பிக்கொண்டீர், நான் உடனே கலக்கத்துக்குள்ளானேனென்று சொல்லுவீர். சர்வேசுரன் உமது பலவீனத்தோடு உம்மை விட்டுவிடுவார்; நீர் ஆயி





ரம் தோஷ துரோகத்தைக் கட்டிக்கொள்ளுவீர்; அவர் உமக்கு வரப்பிரசாதங்களை அளிக்கும்போது, நீர் கண்டுபிடியாத உமது நீசத்தனத்தையும் பலவீனத்தையும் அப்போது கண்டுபிடிப்பீர். அர்ச். இராயப்பர் தமதுபேரில் வீண் நம்பிக்கை வைத்திருந்ததினாலே, பாவத்தில் விழுந்தாரென்று அர்ச். பசிலியார் சொல்லியிருக்கிறார். அதெப்படியென்றால், அர்ச். இராயப்பர் இயேசுநாதரை நோக்கித் தேவரீர் மற்றவர்களுக்கெல்லாம் இடறலாயிருந்தபோதிலும், எனக்கு ஒருகாலும் இடறலாயிருக்கமாட்டீர்; உம்மோடு சாக வேண்டியிருந்தாலும், உம்மை மறுதலிக்க மாட்டேனென்று துணிகரமாய்ச் சொன்னார். அவருடைய துணிகரத்தைத் தெண்டித்து அவரைத் தாழ்த்தி அவருடைய பலவீனத்தை அவருக்குக் காட்டுவதற்காக அவர் பாவத்தில் விழும்படி சர்வேசுரன் விட்டுவிட்டார்: ஆகையால் நமது ஆயுசுகால முழுதும் நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் ஒருகாலும் மறவாமலும் நமக்கு மோசமில்லையென்று எண்ணாமலும் நாம் யாரென்று யோசித்து நம்மை ஒருகாலும் நம்பாமலும் நமக்குள்ளிருக்கிற சத்துரு நம்மை எங்கே காட்டிக் கொடுத்து மோசம் பண்ணுமோவென்று எப்போதும் பயந்துகொண்டிருக்க வேண்டும்.

ஆகிலும் நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் யோசித்துப் பார்த்தாலே போதுமென்றிராமல் அதின்பின் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தையும் தியானித்துப் பார்க்க வேண்டும்; இதிலேயும் நில்லாமல் திரும்பவும் நமது நிர்ப்பாக்கியத்தை யோசிக்க வேண்டும். இந்த முயற்சி யக்கோபென்பவர் காட்சியில் கண்ட ஏணிபோலிருக்க வேண்டும். அது பூமியில் நட்டுப் பரலோகத்திலே சாத்தியிருக்கவே, அதிலே சம்மனசுகள் ஏறுகிறதும் இறங்குகிறதுமாயிருந்தார்களே. அப்படிப்போலே நீயும் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை யோசித்துப் பார்த்து அவர் பேரில் நம்பிக்கைகொண்டு மோக்ஷம் வரைக்கும் ஏறு; ஆனால் ஆங்காரத்திலும் அகந்தையிலும் விழாதபடிக்கு அங்கே நில்லாமல் உடனே உன் நிர்ப்பாக்கியத்தையும் நீசத்தனத்தையும் ஆராய்ந்து பார்த்து கீழே இறங்கு; இன்னம் நீ அவநம்பிக்கையில் விழாதபடிக்கு இங்கேயும் நில்லாமல் திரும்பிச் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தைத் தியானித்து உடனே மேலே ஏறி உன் நம்பிக்கையெல்லாம் அவர் பேரில் வை; கடைசியாய் இந்த ஏணியில் இடைவிடாமல் ஏறுகிறதும் இறங்குகிறதுமே உனக்கு அலுவலாயிருக்க வேண்டும்.

சியேனென்னும் பட்டணத்தில் பிறந்த அர்ச். கத்தரீனம்மாள் பசாசின் சோதனைலயச்செயிப்பதற்காக நான் இப்படி நடந்தேனென்று சொல்லியிருக்கிறுள். அவளுக்கு அவநம்பிக்கை உண்டாக்குவதற்காக அவளுடைய சீவிய காலமெல்லாம் வீண் புண்ணிய வேஷமேயல்லாமல் வேறென்றுமில்லையென்று அவளுக்குப் பசாசு சோதனை வருவிக்கும்போது, அவள் சர்வேசுரனுடைய இரக்கத்தை யோசித்துப் பார்த்துச் சொன்னதாவது : என் சீவிய காலமெல்லாம் இருளடர்ந்த அந்தகாரமென்று என் இரட்சகருக்கு முன்பாக அங்கீகரித்துக்கொள்ளுகிறேன் ; ஆனல் சிலுவையில் அறையுண்ட இயேசுவின் திருக்காயத்துக்குள் மறைந்துகொள்ளுவேன் ; அவருடைய திரு இரத்தத்தில் முழுகி என் பாவக் கறைகளைக் கழுவிச் சுத்தமாக்கி இரட்சகரிடத்தில் அகமகிழ்ந்து சந்தோஷிப்பேன் ; கர்த்தாவே, தேவரீர் என்னைக் கழுவுவீர், நான் பனிக்கட்டியைவிடத் தூய வெண்மையாவேனென்பாள். நீ புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைந்திருக்கிறுய், உன் குற்றங்களுக்காக அழுது கஸ்திப்பட அவசரமில்லையென்று பசாசு அவளுக்கு ஆங்காரமான சோதனை வருவிக்கப் பிரயாசப்பட்டால், அவள் தன்னை வெகுவாய்த் தாழ்த்தித் தன்னைப் பார்த்துச் சொன்னதாவது : ஐயோ ! நிர்ப்பாக்கியமான பாவி நானே ; ஸ்நாபக அருளப்பர் ஒருகாலும் பாவஞ் செய்யவில்லை ; அவர் தாய் வயிற்றிலே அர்ச்சிக்கப்பட்டிருந்தாலும், கடோமான அருந்தவம் செய்துகொண்டு வந்தாரே ! நான் வெகு பாவங்களைக் கட்டிக்கொண்டிருந்தாலும், அதுகளை ஒருநாளும் அறிந்துகொள்ளவுமில்லை, அதுகளுக்கு ஆளவிதமாய்க் கஸ்திப்பட்டு இன்னம் அழுகவுமில்லையேயென்பாள். அப்போது பசாசு ஒரு பக்கத்திலே அவளிடத்தில் வெகு தாழ்ச்சியும் வேறோர் பக்கத்திலே வெகு தேவ நம்பிக்கையும் இருக்கிறதைக் கண்டு கோப வெறிகொண்டு அவளைப் பார்த்துச் சொன்னதாவது : உனக்கும் சாபம், உனக்கு இந்தப் புத்தியைச் சொல்லிக்கொடுத்தவர்களுக்கும் சாபம் ; உனக்கு எப்படிச் சோதனை வருவிக்கிறதென்று எனக்குத் தெரியாது ; அவநம்பிக்கையை உனக்கு வருவிப்பதற்காக நான் உன்னைத் தாழ்த்தினல், நீ சர்வேசுரனுடைய இரக்கத்தை யோசித்து மேலே ஏறுகிறுய் ; உனக்கு வீண் மகிமையை வருவிப்பதற்காக நான் உன்னை உயர்த்தினல், நீ தாழ்ச்சியினலே நரக பாதாளம் வரைக்கும் உன்னைத் தாழ்த்தி நரகத்திலே முதலாய் என்னை உபாதிக்கிறுயென்றது. என்றபின் தான் அவளுக்குச் செய்த சோதனையினலே தனக்கு எப்போதும் வெட்கம் வருகிறதென்று கண்டு அவளை

ச் சும்மா விட்டு ஓடிப்போனது. நாமும் நடக்கவேண்டிய விதமிதுவே. ஒரு பக்கத்திலே நம்மை ஒருகாலும் நம்பாமல் வெகுவாய்ப் பயந்து நடுங்க வேண்டும்; வேறொரு பக்கத்திலே சர்வேசுரன் பேரில் மிகுந்த நம்பிக்கையும் சந்தோஷமுமாயிருக்க வேண்டும்; நம்மை ஒருகாலும் நம்பாமல் சர்வேசுரனை முழுதும் நம்பவேண்டும். சர்வேசுரன் தமக்குகந்த ஊழியருக்குத் தினந்தோறும் போதிக்கிற இரண்டு போதகமும் இதுவேயென்று ஓர் மகாத்துமா சொல்லியிருக்கிறார். தன் பாவங்களையும் குற்றங்களையும் சோதித்துப் பார்க்கிறதும் அதுகளை வெகு இரக்கத்தோடு பொறுத்துக்கொள்ளுகிற சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை உற்றுப் பார்க்கிறதுமே நமக்கு வேலையாயிருக்க வேண்டும்.

———oooo———

## கூ-ம் அதிகாரம்.

———ooooo———

நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற முயற்சியினாலே நமக்கு
வரும் பிரயோசனத்தின் பேரில்.

———oooo———

நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற முயற்சியை நாம் மேன்மேலும் செய்துகொண்டுவரும் பொருட்டு இந்த முயற்சியினால் வரும் உச்சிதமான சில பிரயோசனங்களை இங்கே சொல்லிக் காட்டுவோம். நம்மை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சிக்கு அஸ்திவாரமும் ஊற்றுமாயிருக்கிறதென்றும் தாழ்ச்சியை அடைவதற்கும் காப்பாற்றுவதற்கும் அது அவசரமான வழிபாடென்றும் எற்கனவே சொல்லியிருக்கிறோமே. மெய்யான தாழ்ச்சியை அடைகிறது எப்படியென்று ஓர் பூர்வீக வனவாசியிடத்தில் கேட்டதற்கு அவர் சொன்னதாவது: தன் குற்றங்களை யோசித்துப் பார்த்து மற்றவர்களுடைய குற்றங்களைப் பாராமலிருக்க வேணுமென்றார். தன்னை அறிந்துகொள்ளுகிறதே மெய்யான தாழ்ச்சியை அடைவதற்கான வழிபாடு; தன்னை நோண்டிப் பார்த்தால், தனக்குள்ளே தாழ்ச்சியைக் கண்டுபிடிக்கலாம். தாழ்ச்சியை அடைகிறது நமக்கு முழுதும் அவசரமாயிருப்பதினாலே, நம்மை நாமே உள்ளும் புறம்பும் சரியாய் ஆராய்ந்து பார்த்து நமது நீசத்தனத்தையு

ம் நிர்ப்பாக்கியத்தையும் அறிந்துகொள்ள இடைவிடாமல் பிரயாசப்படவேண்டும்.

அன்றியும் சகல சாஸ்திரங்களையும் ஆழ்ந்து படித்தறிகிறதைவிடத் தன்னை அறிந்துகொள்ளுகிறது சர்வேசுரனை அறிந்துகொள்ளுகிறதற்கு நிச்சயமான வழிபாடென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இதுக்கு அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிற முகாந்தரமேதென்றால், தன்னை அறிந்துகொள்ளுகிற சாஸ்திரம் வேறெந்தச் சாஸ்திரத்துக்கும் மேற்பட்டதாயிருக்கிறதினாலே, அதைக் கொண்டு மிகவும் எளிதாய்ச் சர்வேசுரனை அறிந்துகொள்ளுவோம். உலக இரட்சகர் பிறவிக் குருடன் கண்ணிலே சேற்றைப் பூசித் தன்னைத் தானே பார்க்கிறதற்கு அவனுடைய சரீரக் கண்ணையும் சர்வேசுரனை அறிந்து ஆராதிக்கிறதற்கு அவனுடைய ஆத்துமக் கண்ணையும் திறந்தாரே. இதைக் கொண்டு நாம் இப்போது சொல்லுகிற சத்தியத்தை நமக்குப் போதித்தருளினாரென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். அதெப்படியென்றால், நாம் சர்வேசுரனையும் நம்மையும் அறியாத பிறவிக் குருடராயிருக்கிறதினாலே, கர்த்தர் நாம் உற்பத்தியான மண்ணை நமது கண்ணில் பூசி அதைத் திறந்துவிடுவார். இதினாலே முந்த முந்த நம்மை நாமே அறிந்துகொண்டு அதின்பின் நமது கண்ணுக்குப் பார்வை தந்த சர்வேசுரனை உயிருள்ள விசுவாசத்தோடு ஆராதிப்போமென்று மேற்சொன்ன அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். விபூதித்திருநாள் அன்றைக்குத் திருச்சபை நமது நெற்றியில் சாம்பலைப் பூசி: மனுஷனே, நீ தூசியாயிருக்கிறாய், தூசியாய்ப் போவாயென்று சொல்லுகிறதல்லோ? இந்தச் சடங்கைக் கொண்டு திருச்சபை நமக்குப் போதிக்கிற போதகமும் இதுவே. ஏனென்றால் இந்தச் சடங்கினாலே நாம் தூசியாயிருக்கிறோமென்கிற சத்தியத்தை திருச்சபை நமது கண்ணுக்கு முன்பாக வைத்துக் காட்டி நம்மை யாரென்று நாமே அறிந்துகொள்ளும்படி செய்கின்றது. இந்த அறிவினாலே நாம் சர்வேசுரனை அறிந்துகொண்டு அவருக்குப் பொருந்தாத பாவஞ் செய்ததினாலே, மனஸ்தாபப்பட்டு நமது பாவத்துக்காகத் தபசு பண்ணுகிறதற்கு இது உதவியாயிருக்கும். ஆகையால் தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிறது சர்வேசுரனை அறிந்துகொள்ளுவதற்கான வழிபாடாகும். மனுஷன் தான் உற்பத்தியான மண்ணையும் தனது நீசத்தனத்தையும் எவ்வளவு யோசித்துப் பார்ப்பானோ, அவ்வளவு சர்வேசுரனுடைய பெருமையையும் மேன்





மையையும் அறிந்துகொள்ளுவான். இதினுலல்லோ ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டு வஸ்துவைக் கிட்டத்தில் வைத்தால், அதுகளிலுள்ள வித்தியாசம் தெளிவாய்த் தோன்றும். வெள்ளையான வஸ்துவைக் கருப்பான வஸ்துவின் கிட்டத்தில் வைந்தால், வெண்மை வெகு தெளிவாய்த் துலங்கும். இப்படியே மனுஷனெல்லாத்திலும் தாழ்ந்த வஸ்து; சர்வேசுரன் எல்லாத்துக்கும் உயர்ந்தவர்; இவ்விருவரும் முழுதும் விரோதமானவர்கள். ஆகையால் மனுஷன் தன்னை எவ்வளவு அறிந்துகொண்டு தன்னுலே தான் ஒன்றுமில்லாமையும் நிர்ப்பாக்கியமும் பாவமுமென்று எவ்வளவு நிச்சயமாய் அறிந்துகொள்ளுவானே, அவ்வளவுக்கு நீசமும் தாழ்மையுமான தன்னைச் சினேகிக்கிற சர்வேசுரனுடைய நன்மைத்தனமும் இரக்கமும் எவ்வளவென்று கண்டுகொள்ளுவான்.

அன்றியும் இவ்வளவு நிர்ப்பாக்கியமான வஸ்துவாகிய தன்பேரிலே சர்வேசுரன் அத்தனை உபகாரங்களைப் பொழிகிறதினுலே, மனுஷன் அவருக்கு இடைவிடாமல் நன்றியறிந்த தோத்திரம் பண்ணி மனுஷர் ஒருவரொருவரைச் சகித்துக்கொள்ள வெகு வருந்தப்பட்டாலும், சர்வேசுரன் அவர்களைச் சகித்துக்கொள்ளுகிறதுமல்லாமல் மனுமக்களோடிருக்கிறது தமக்கு இன்பமென்று சொன்னதைத் தியானித்து ஆச்சரியப்பட்டு மேன்மேலும் அவன் இருதயம் தேவ சினேக அக்கினி சுவாலைப் பற்றி எரிவதற்கு இது தகுந்த வழிபாடாகும். கர்த்தாவே, தேவரீர் மனுஷர் பேரில் அவ்வளவு பிரியம் வைத்து அவர்களோடு தேவரீர் அவ்வளவு ஏகபந்தனமாய் ஒன்றிக்கிறதற்குக் காரணமென்ன? இதினிமித்தமாகவே சர்வேசுரனை மேன்மேலும் நன்ருய் அறிந்துகொண்டு அவரை அதிகமதிகமாய்ச் சினேகிப்பதற்காக அர்ச்சியசிஷ்டவர்கள் தங்களை அறிந்துகொள்ளப் பிரயாசப்பட்டார்கள். இதற்காக அர்ச். அகுஸ்தீன் சர்வேசுரனை நோக்கி வழக்கமாய்ச் சொல்லிக்கொண்டுவந்ததாவது: ஒருகாலும் மாருதவராயிருக்கிற சர்வேசுரா, நான் என்னை அறிந்துகொள்ளவும் நான் உம்மை அறிந்துகொள்ளவுங் கிருபை செய்தருளுமென்பார். அர்ச். பிராஞ்சீஸ்கு: சர்வேசுரா, தேவரீர் ஆர்? நான் ஆரென்று இரவும் பகலும் இடைவிடாமல் சொல்லிக்கொண்டுவருவார். இந்த முயற்சியைக் கொண்டு அநேக அர்ச்சியசிஷ்டவர்கள் சர்வேசுரனை மேலான விதமாய் அறிந்துகொண்டார்கள். ஆகையால் நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற அறிவு சர்வேசுரனை அறிந்துகொள்ளுகிற





தற்கு நிச்சயமான வழிபாடாகும்; ஏனென்றால் உன்னை அறிந்துகொண்டு எவ்வளவு தாழ்வாயோ, அவ்வளவு சர்வேசுரனை அறிந்துகொண்டு உயருவாய்; சர்வேசுரனை எவ்வளவு அறிந்துகொள்ளுவாயோ, அவ்வளவு உன்னையும் அறிந்துகொள்ளுவாய். ஏனென்றால் அப்போது மோக்ஷ பிரகாசம் நமது இருதய அந்தகாரத்துக்குள் உதித்து மனுஷருடைய கண்ணுக்கு உத்தமமான புண்ணியமென்று தோன்றுகிற நற்கிரிகைகளிலே முதலாய் நாம் வெகு குற்றங் குறைகளைக் கண்டுபிடித்து வெட்கிக் கூசும்படி செய்யும். சூரியன் கதிர் ஓர் அறையில் பிரவேசிக்கும்போது, முன்னே காணாத ஆயிரம் தூசியையும் அணுக்களையும் கண்டுபிடிப்போமல்லவோ? இவ்வண்ணமே தேவ வரப்பிரசாதத்தின் கதிர் நமதிருதயத்தில் படவே, நாம் நம்மிடத்திலுள்ள அற்பக் குறைகளை முதலாய்க் கண்டுபிடித்து மற்றவர்களுக்கு உத்தமமான புண்ணியமென்று தோன்றுகிற நமது நற்கிரிகைகளிலே ஆயிரங் குற்றங்குறைகளைக் கண்டுபிடிப்போமென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார்.

அர்ச்சியசிஷ்டவர்கள் தங்களை வெகு தாழ்மையாக எண்ணி வெகு தாழ்ச்சியுள்ளவர்களாயிருந்ததற்குக் காரணம் இதுவே. அவர்கள் அர்ச்சியசிஷ்டத்தனத்தில் வளர வளரத் தாழ்ச்சியிலும் தங்களைப் பிறக்கணிக்கிறதிலும் அதிகமதிகமாய் வளர்ந்துகொண்டு வந்தார்கள். சர்வேசுரன் அவர்களுக்கு எவ்வளவு ஞான வெளிச்சம் தந்து தம்மை அவர்கள் கண்ணுக்கு எவ்வளவு காட்டுவாரோ, அவ்வளவுக்கு அவர்கள் தாங்கள் ஒன்றுமில்லாமையும் பாவமுமாயிருக்கிறோமென்று தெளிவாய் அறிந்துகொள்ளுவார்கள். அவர்கள் தங்களை அறிந்துகொண்டு தங்களிடத்தில் குற்றங் குறைகளை எவ்வளவு கண்டுபிடிப்பார்களோ, அவ்வளவுக்குத் தாங்கள் இன்னம் கண்டுபிடியாத குற்றம் வெகுவாயிருக்கிறதென்றும் தாங்கள் அதிலே ஓர் அற்பப் பங்கை மாத்திரம் கண்டுபிடித்தோமென்றும் நிச்சயித்துக்கொள்ளுவார்கள். கடைசியாய் அவர்கள் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை எவ்வளவு கண்டுபிடித்திருந்தாலும், இன்னம் அதைச் சரியாய் தாங்கள் கண்டுபிடிக்கவில்லையென்று நிச்சயித்துக்கொள்ளுவார்கள். அதுபோலே தங்கள் நிர்ப்பாக்கியத்தையும் நீசத்தனத்தையும் அவர்கள் எவ்வளவு பரிசோதித்துப் பார்த்திருந்தாலும், இன்னம் அதிக நிர்ப்பாக்கியம் தங்களிடத்தில் உண்டென்று எண்ணிக்கொள்ளுவார்கள். ஏனென்றால் நாம் சர்வேசுரனை எவ்வளவு அறிந்திருந்தாலும், அவரைச் சரியாய் அறிந்துகொள்ள ஒரு

காலும் நம்மாலே முடியாது; எப்போதும் அவனை மேன்மேலும் அறிந்துகொள்ளவும் ஆச்சரியப்படவும் இடமுண்டு. அப்படியே நாமும் நம்மை எவ்வளவு அறிந்துகொண்டு எவ்வளவு நிந்தித்தாலும், இன்னம் அதிகமாய் நம்மை நாமே நிந்திப்பதற்கு எப்போதும் இடமுண்டு; நமது நிர்ப்பாக்கியத்தை ஒருகாலும் சரியாய் அறிந்துகொள்ள நம்மாலே முடியாது. இங்கே நாம் உள்ளதுக்குக் கூட்டிச் சொல்லுகிறோமென்று எண்ணவேண்டாம்; இது மறுக்கப்படாத சத்தியமாகும்; ஏனென்றால் மனுஷன் ஒன்றுமில்லாமையையும் பாவத்தையும்போலே தன்னைத் தாழ்த்த வேண்டும்; ஆனால் இப்படி மனுஷன் தன்னைத் தாழ்த்த ஒருகாலும் முடியாதென்பது நிச்சயம்.

ஒரு அர்ச்சியசிஷ்டவள் தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிற வரம் தர வேணுமென்று சர்வேசுரனை வேண்டிக்கொண்டு அந்த வரத்தை அடைந்தாள். தன் நிர்ப்பாக்கியத்தையும் அவலட்சணத்தையுங் கண்டு அவள் பட்ட அருவருப்பினாலே அதைப் பார்க்க முடியாமல்: ஆண்டவரே, என் நிர்ப்பாக்கியத்தையும் அவலட்சணத்தையும் கொஞ்சமாகிலும் என் கண்ணைவிட்டு மறைக்க வேண்டும்; இல்லாவிட்டால், நான் அவநம்பிக்கையில் விழுவேனென்று வேண்டிக்கொண்டாள். அவிலாவென்னும் மகாத்துமா வெளிப்படுத்தினாற்போலே, தமக்கு அறிமுகமான ஒரு புண்ணியவதி தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிற வரம் தந்தருள வேணுமென்று சர்வேசுரனை அடிக்கடி வேண்டிக்கொண்டுவந்தாள். ஒருநாள் சர்வேசுரன் அவளுடைய கண்ணைத் திறந்து அவளுடைய நிர்ப்பாக்கியத்தை அவள் கண்ணுக்குக் காட்டியருளினார். அவள் அதைக் கண்டு பட்ட அருவருப்பின் மிகுதியினாலே கதறிச் சொன்னதாவது: ஆண்டவரே, உமது கிருபையினாலே இந்தப் பார்வையை என்னைவிட்டு நீக்கியருளும்; இவ்வளவு அருவருப்புக்குரிய பூதத்தைப் பார்க்க என்னாலே முடியாதென்றாள்.

கடைசியாய் நாம் முன்னமே சொன்னாற்போலே, தேவ தாசர் தங்கள்பேரில் கொண்டிருந்த பரிசுத்த பகையும் அருவருப்பும் இதினால் உண்டாகும். ஏனென்றால் அவர்கள் தங்கள் பாவத்தை யோசித்துத் தாங்கள் சர்வேசுரனுக்குச் சத்துருவும் அவருக்கு விரோதிகளுமென்று எண்ணிச் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை எவ்வளவு அறிந்து அதைச் சிநேகிப்பார்களோ, அவ்வளவு தங்கள்பேரில் அருவருப்புக்கொ





ள்ளுவார்கள். இதினாலல்லோ யோபென்பவர் சர்வேசுரனை நோக்கித் தேவரீர் எனக்கு விரோதியானீர் ; எனக்கு நானே பொறுக்கக்கூடாத சுமைபோலானேனென்றார். சகல பொல்லாப்புக்கும் ஊற்றாகிற கெட்ட சரீரப் பற்றுதல் தங்களிடத்தில் இருக்கிறதென்றும் சகல பாவமும் அதிலிருந்து பிறக்கிறதென்றும் தேவ தாசர் அறிந்துகொண்டு தங்களுக்கு விரோதமாய் எழும்பித் தங்களை உபாதிப்பார்கள். கொஞ்சத்தில் அழிந்தொழிகிற இன்பத்துக்காக அளவில்லாத நன்மையாகிய சர்வேசுரனை நாம் விட்டு அகன்றுபோகிறதற்கும் நம்மை நரகத்துக்கு ஆளாக்கி நித்திய மகிமையை இழந்துபோகிறதற்கும் காரணமாயிருந்து நமக்கு அத்தனை பொல்லாப்புகளைச் செய்து இன்னம் இடைவிடாமல் நமக்குப் பொல்லாப்புச் செய்யக் காத்திருக்கிறவனை நாம் அருவருத்துப் பகைக்கிறது ஞாயமல்லோ? உன் நன்மைக்கும் ஈடேற்றத்துக்கும் விரோதியான இந்தப் பிராண சத்துரு நீதானே.

---

## ௰-ம் அதிகாரம்.

நம்மை அறிந்துகொள்ளுகிறதினாலே நாம் மனத்திடாரிக்க
மற்றுப்போகாததும்ன்றிப் புதிதான பெலன்
நமக்குண்டாகுமென்று சொல்லுவது.

---

நம்மை அறிந்துகொள்ளுகிறதினாலே, இன்னம் வேறொரு பிரயோசனமுமுண்டு. அதென்னவென்றால், இதினாலே நாம் மனத்திடாரிக்கமற்றுப் போகாததுமன்றி ஸ்திரப்பட்டு உறுதிப்படுவோம். இதற்கு முகாந்தரமேதென்றால், தன்னை அறிந்துகொள்ளுகிறவன் தன்னாலே ஒன்றும் ஆகாதென்று தப்பாமல் நிச்சயித்துக்கொண்டு தன்னை அற்பமாகிலும் நம்பாமல் சர்வேசுரன் பேரில் தன் நம்பிக்கையெல்லாம் வைப்பான் ; இந்த நம்பிக்கையினாலே சகலத்தையும் செய்து முடிப்பதற்குத் திராணியுள்ளவனாவான். மகா அருமையான பெரிய காரியங்களைத் துவக்கி முடிக்கிறது தங்கள் பலவீனத்தை அறிந்துகொள்ளுகிறவர்களுக்கே உரிய அலுவல் ; ஏனென்றால் தங்களாலே ஒன்றும் ஆகக்கூடாதென்றும் சர்வேசுரனாலே மாத்திரம் சகலமும் ஆகுமென்



றும் இவர்கள் நிச்சயித்திருக்கிறதினலே, இவர்கள் எடுத்த அலுவலைச்
சர்வேசுரன் தமது அலுவலென்றெண்ணி இவர்கள் வழியாக அதிசயங்
களைச் செய்தருளுவார். இதினலல்லோ சர்வேசுரன் தமது தோத்திர
த்துக்காக ஆயத்தம்பண்ணி வைத்த இரக்கத்துக்குரிய பாத்திரங்களி
ல் தமது தோத்திரமாகிற ஆஸ்தியைக் காண்பித்தருளுவாரென்று அர்
ச். சின்னப்பர் வசனித்தார். தமது தோத்திரத்தை அதிகமாய்த் துல
ங்கப்பண்ணுவதற்காக அவர் மகா பலவீனமுள்ள பாத்திரங்களில் த
மது வல்லபமும் பெலமுமாகிற பொக்கிஷத்தை வைத்தருளுகிறது வ
ழக்கம். ஆகையால் அர்ச். சின்னப்பர் தம்மை உபாதித்துக்கொண்டி
ருந்த சோதனைகளைத் தம்மை விட்டு நீக்க வேணுமென்று பிரார்த்தித்
துக்கொண்டபோது, கர்த்தர் அவருக்குத் திருவுளம்பற்றினதாவது :
நமது வரப்பிரசாதம் உனக்குப் போதும்; ஏனென்றுல் நமது பெலன்
பலவீனத்தினலே விளங்குமென்றூர். மகா ஆபத்துக்குரிய வியாதியைச்
சொஸ்தப்படுத்துகிற வைத்தியன் மிகுந்த மகிமை அடைவான்; அது
போலே நம்மிடத்தில் எவ்வளவு பலவீனமுண்டோ, அவ்வளவுக்கு நம்
மைப் பெலப்படுத்துகிற சர்வேசுரனுக்குத் தோத்திரம் உண்டாகும்.
மேற்சொன்ன வாக்கியத்துக்கு அர்ச். அகுஸ்தீனும் அர்ச். அம்புரோசி
யாரும் சொன்ன அர்த்தமிதுவே ; இதினலேதான் தங்கள் பலவீன
த்தை நன்றுய் அறிந்துகொண்டு தங்களை நம்பாமல் தங்கள் நம்பிக்
கையெல்லாம் சர்வேசுரன் பேரில் வைக்கிறவர்களுக்குச் சர்வேசுரன்
பெலத்த ஒத்தாசை செய்தருளுவார் ; தங்களைக் கனமாயெண்ணித் த
ங்கள் சாமர்த்தியத்தை நம்புகிறவர்களைக் கைவிடுவார். அர்ச். பசிலி
யார் சொல்லுமாப்போலே, பெரிய திருநாட்களிலே நம்மிடத்தில் பத்
தியும் உருக்கமும் உண்டாகுமென்று நாம் நம்பியிருந்தாலும், அதுக்
காக நாம் செய்கிற ஆயத்தத்தின்பேரில் நாம் நம்பிக்கை வைக்கிறதின
லே, வழக்கமான பத்தி பற்றுதல் முதலாய் இந்தத் திருநாட்களில் நம்
மிடத்திலே பிறக்கவில்லையென்று சிலவிசை கண்டிருக்கிறோம். தேவ
பத்தி பற்றுதல் சர்வேசுரன் இரக்கத்தினலே நமக்கு இலவசமாய்க்
கொடுக்கிற வரமென்றும் நமது பிரயாசத்தினலேயும் பேறு பலன்களி
னலேயும் அதை அடையக்கூடாதென்றும் நமக்குக் காட்டுவதற்காக
நாம் நினையாத சமயத்திலே சிலவிசை சர்வேசுரன் மோக்ஷ இன்பத்
தையும் மன ஆறுதலையும் நமக்கு அளித்தருளுகிறது வழக்கம். ஆகை
யால் நமது நிர்ப்பாக்கியத்தை அறிந்துகொள்ளுகிறதினலே, நம்மிடத்
தில் தைரியமற்றுப்போகாததுமன்றி அது அதிகரிக்கும் ; ஏனென்று

ல் அது நமது பேரிலுள்ள நம்பிக்கையை நீக்கி நமது நம்பிக்கையெல்லாத்தையும் சர்வேசுரனிடத்தில் வைக்கப்பண்ணும். இதினாலல்லோ நான் பலவீனனாயிருக்கும்போது, பெலனுள்ளவனாயிருக்கிறேனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். அர்ச். அகுஸ்தினும் அர்ச். அம்புரோசியாரும் இவ்வாக்கியத்தை விளக்கிக் காட்டிச் சொல்லுகிறதாவது: என் பலவீனத்தையும் ஒன்றுமில்லாமையையும் அறிந்துகொண்டு என்னை நான் தாழ்த்தும்போது, உயர்ந்துபோவேன்; என்னிடத்தில் எவ்வளவு பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் கண்டுபிடிப்பேனோ, அவ்வளவுக்குச் சர்வேசுரன் பேரில் என் நம்பிக்கையெல்லாம் வைத்துப் பெலப்படுவேனென்று இதற்கு அர்த்தமாகுமென்றார்கள்.

நாம் புண்ணியத்தில் வர்த்திக்கக் கூடுமோவென்றும் நமது கெட்ட ஆசாபாசங்களை அடக்கிப் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையக்கூடுமோவென்றும் சிரேஷ்டர் சிலவிசை நமக்குக் கொடுத்திருக்கிற அலுவலைத் தகுந்த விதமாய்ச் செய்து முடிக்க நம்மாலே ஆகுமோவென்றும் எப்போவாகிலும் நம்மிடத்தில் உண்டாகிற சந்தேகமும் அவநம்பிக்கையும் தாழ்ச்சியினாலே வருகிறதென்று நினையாதே. பாவசங்கீர்த்தனங் கொடுக்க என்னாலே ஏலாது; தூர தேசத்தில் போய் வேதம் போதிக்கவும் இதற்கொத்த வேறே எந்த அலுவல் செய்யவும் என்னாலே முடியாதென்று சொல்லுகிறது தாழ்ச்சிபோலே தோன்றும். ஆகிலும் அநந்தமுறை இந்தப் பேச்சு ஆங்காரத்தினாலே உண்டாகிறதென்றறிவோம்; ஏனென்றால் இந்த அலுவலெல்லாம் நமது பெலத்தினாலே ஆகலாமென்று நாம் நினைக்கிறதினாலே இப்படிப் பேசுகிறது வழக்கம். இது ஆங்காரத்துக்கு அடையாளம். நம்மாலே ஒன்றும் ஆகாதென்று நிச்சயித்துக்கொண்டு நமது கண்களைச் சர்வேசுரனிடத்தில் திருப்பினால், நமக்கு வேண்டிய தைரியமும் பெலனும் உடனே வருகிறதென்று கண்டுகொள்ளுவோம். இதினாலல்லோ கர்த்தர் எனக்குப் பிரகாசமும் ஈடேற்றமுமாயிருக்கிறார்; நான் ஆருக்குப் பயப்படுவேன்? கர்த்தர் என் சீவியத்தைக் காப்பாற்றுகிறார்; நான் ஆருக்கு அஞ்சுவேன்? ஓர் படை வந்து என்னைச் சூழ்ந்துகொண்டாலும், எனக்குப் பயமில்லை; சண்டை முன்மறத்திலே முதலாய் நான் சர்வேசுரனை நம்புவேன். மரண அந்தகாரத்துக்குள்ளே நான் நடந்தாலும், ஆண்டவரே, தேவரீர் என்னோடே கூட இருக்கிறதினாலே, நான் ஒன்றுக்கும் அஞ்சமாட்டேனென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்



வாக்கியங்களிலே இராச தீர்க்கதரிசி ஒரே கருத்தை எவ்வளவு நானாவித வாக்கியங்களைக் கொண்டு வெளிப்படுத்தியிருக்கிறாரென்று ஆச்சரியப்பட இடமுண்டு. தேவ சங்கீதங்களிலெல்லாம் தேவ நம்பிக்கையாகிற பற்றுதலை எங்கும் வருணித்திருக்கிறதென்று கண்டிருக்கிறோம்; இதினாலே இராச தீர்க்கதரிசி சர்வேசுரன் பேரில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தாரென்றும் நாமும் எவ்வளவு நம்பிக்கை வைக்கவேணுமென்றும் தெளிவாய்க் காட்டியிருக்கின்றது. இன்னமும் தேவ ஒத்தாசையைக் கொண்டு சுவரேறிக் குதிப்பேனென்று மேற்சொன்ன தீர்க்கதரிசி வசனித்தார். அதாவது, தேவ ஒத்தாசையைக் கொண்டு சகல விக்கினங்களையும் எதிர்த்துச்செயிப்பேனென்று இதற்கு அர்த்தமாகும். இன்னமும் அவர் தானே சொல்லுகிறதாவது: 'விட்டிலைப் போலிருக்கிற மனுஷரைக் கொண்டு இராக்ஷதரைச் செயங்கொள்ளுகிறவர் சர்வேசுரன் தானே; சிங்கங்களையும் புலிகளையும் சர்வேசுரன் பேராலே நசுக்குவேன்; என் கையைச் சண்டைக்குப் பழக்குகிறவரும் வெங்கல வில்லை முறிப்பதற்கு எனக்குப் பெலன் தருகிறவரும் அவர் தானே யென்றார். அவருடைய ஒத்தாசையையும் வரப்பிரசாதத்தையுங் கொண்டு நாம் பராக்கிரமசாலிகளாவோமென்று முழு நம்பிக்கையோடு நிச்சயித்துக்கொள்ளலாம்.

———oooooooo———

## ௰௧-ம் அதிகாரம்.

———◇◇◇———

### தன்னை அறிந்துகொள்ளுகிறதினாலே வரும் வேறே சில பிரயோசனங்களின் பேரில்.

———oooo———

நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் கண்டு நம்மைத் தாழ்த்துகிறதே சர்வேசுரன் நமக்குத் தமது வரங்களை அளித்துத் தேவ வரப்பிரசாதங்களை ஏராளமாய் நமதுபேரில் பொழிவதற்கு நாம் செய்யக்கூடுமான பிரதான வழிபாடுகளில் ஒன்றாகும். இதினாலே அர்ச். சின்னப்பர் சொல்லுகிறதாவது: இயேசுநாதருடைய பெலன் என்னிடத்தில் நிலைக்கொள்ளும் பொருட்டு என் பலவீனத்தின் பேரில் சந்தோஷமாய் மகிமை பாராட்டுவேனென்றார். இன்னமும் என் பலவீ





னத்தின் பேரில் நான் பிரியப்படுகிறேனென்றார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். அம்புரோசியார் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: கிறீஸ்துவன் மகிமை பாராட்ட வேணுமானால், தாழ்ச்சியைக் கொண்டு மாத்திரம் மகிமை பாராட்ட வேண்டும்; இதினாலே அவன் சர்வேசுரன் சமுகத்தில் பெரியவனாவானென்றார். உமது காணியாட்சி நிலத்தின் பேரில் இன்பமான மழையை ஏராளமாய்ப் பொழிந்தருளினீர்; அது பலவீனப்பட்டிருந்தது; அதைப் பெலப்படுத்தினீரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். அகுஸ்தீன் இவ்வாக்கியத்தை வியாக்கியானித்துச் சொல்லுகிறதாவது: சர்வேசுரன் ஆத்துமமாகிற தமது காணியாட்சி நிலத்தில் வரப்பிரசாதமாகிற ஏராளமான மழையை எப்போது பொழிவாரென்றெண்ணுகிறாய்? அது பலவீனப்பட்டிருக்கும்போதுதான் பொழிவார். அதாவது, மனுஷன் தன் பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் நன்றாய் அறிந்துகொள்ளும்போது, சர்வேசுரன் அவனைப் பலப்படுத்தித் தமது கிருபாகடாக்ஷத்தாலும் வரங்களாலும் அவனை நிறப்புவார். தரித்திரனொருவன் தன் நிர்ப்பாக்கியத்தையும் காயத்தையும் மற்றவர்களுக்கு எவ்வளவு திறந்து காட்டுவானோ, அவ்வளவுக்கு மற்றவர்கள் அவன் பேரில் இரங்கி அவனுக்குச் சகாயம் பண்ணுவார்கள். இவ்வண்ணமே கிறீஸ்துவன் தன் நீசத்தனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் நன்றாய் அறிந்துகொண்டு சர்வேசுரனுக்கு முன்பாகத் தன்னை எவ்வளவு தாழ்த்தி நிந்திப்பானோ, அவ்வளவுக்குச் சர்வேசுரன் அவன் பேரில் இரக்கமாகித்தமது வரப்பிரசாதங்களின் வற்றாத திரவியப் பொக்கிஷங்களை அவன் பேரில் ஏராளமாய்ப் பொழிந்தருளுவார். இதினாலல்லோ களைத்துப்போனவனுக்குத் திடாரிக்கங் கொடுப்பவரும் ஒன்றுஞ் செய்யக்கூடாதவர்களுக்குப் பெலன் கொடுப்பவரும் அவர்தானே யென்று இசாயியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார்.

இந்த முயற்சியினாலே நாம் அடையக்கூடுமான சகல பிரயோசனங்களையும் சுருக்கமாய்ச் சொல்லிக் காட்டுகிறதற்காக நம்மை நாமே அறிந்துகொள்ளுகிறது எல்லாத்துக்கும் பொதுவான பரிகாரமென்று நிச்சயித்துச் சொல்லுகிறோம். நாம் செய்துவருகிற ஞான சம்பாஷணையில் இந்த அந்தத் தாறுமாறு என்னத்தினாலே வருகிறது? அதை நீக்குகிறதற்கான பரிகாரம் என்னவென்று கேட்கிற பல கேள்விகளுக்கு எப்போதும் நாம் சொல்லக்கூடுமான மறுமொழியாவது: தன்னை



அறிந்துகொள்ளாததினாலேதான் இந்தத் தாறுமாறெல்லாம் உண்டாகின்றது ; தன்னை அறிந்துகொள்ளுகிறதே இந்தத் தாறுமாறை நீக்குவதற்கு நல்ல பரிகாரமென்று சொல்லலாம். இப்படியே நமது சகோதரர் பேரில் நம்மிடத்தில் எழும்புகிற நியாயமற்ற கெட்ட எண்ணம் எதினாலே உண்டாகிறதென்று கேட்டால், தன்னை அறிந்துகொள்ளாததினாலே அது உண்டாகிறதென்று சொல்லுவோம் ; ஏனென்றால் நீ உன்னைத்தானே நன்றாய் அறிந்துகொள்ள அக்கறையோடு பிரயாசப்பட்டுக்கொண்டு வந்தால், உன் நிர்ப்பாக்கியத்தை நீயே யோசித்து அதற்காக அழுகிறதற்குப் போதுமான வேலையுண்டு ; மற்றவர்களுடைய குற்றங் குறைகளை எடுத்துப் பார்ப்பதற்கு முதலாய் உனக்கு நேரம் இராது. உன் சகோதரரோடு கண்டிப்பாய்ப் பேசி அவர்களுக்குக் குத்துகிற வார்த்தை சொல்லுகிறாயே. இதற்குக் காரணமென்னவென்று கேட்டால், உன்னை நீயே அறிந்துகொள்ளாமலிருப்பது இதற்குக் காரணமென்று சொல்லுவோம் ; ஏனென்றால் நீ உன்னைச் சரியாய் அறிந்துகொண்டு நீ சகலருக்கும் தாழ்ந்தவனென்றும் மற்றவர்கள் உனக்கு மேற்பட்டவர்களென்றும் நிச்சயித்திருந்தால், அவர்களை இப்படிப் பேச உனக்குத் துணிவு வராது. இந்த அந்தக் காரியத்தை மற்றவர்கள் எனக்கு ஏன் கொடுக்கவில்லை ? ஏன் இப்படி என்னை நடத்துகிறார்களென்கிற முறைப்பாடும் தகாத போக்கும் உன் மனசில் பிறந்தால்; இதற்குக் காரணமென்ன ? நாம் மேற்சொன்னதே இதற்குக் காரணமென்பது நிச்சயம். இந்த அந்தச் சோதனை வந்து உன்னை உபாதிக்கும்போது, உன் மனம் கலங்கி மிதமிஞ்சி மனஞ் சோர்ந்து வாடுகிறாயே; அடிக்கடி நீ ஒரே குற்றத்தில் விழுகிறதைக் கண்டு அவநம்பிக்கைப்படுகிறாயே; இதுவெல்லாம் எதினாலே வருகிறதென்று நினைக்கிறாய் ? உன்னை நீயே அறிந்துகொள்ளாததினாலே வருகிறதென்று சொல்லுகிறோம் ; ஏனென்றால் நீ தாழ்ச்சியுள்ளவனாயிருந்து உன் இருதயம் எவ்வளவு கெட்டுப்போயிருக்கிறதென்று நன்றாய் அறிந்திருந்தால், இதற்காக நீ மனங்கலங்கவுமாட்டாய்; மனத் திடாரிக்கமற்றுப் போகவுமாட்டாய். மனத் திடாரிக்கமற்றுப்போகாததுமன்றி இன்னம் இதைவிட அதிக சோதனை உனக்கு வராததினாலேயும் அதிக கனமான குற்றத்திலே நீ விழாததினாலேயும் ஆச்சரியப்படுவாய் ; கனமான தாறுமாறுகளில் நீ விழுந்து கெட்டுப்போகாதபடிக்குத் தமது கையாலே உன்னைத் தாங்கிக்கொண்டிருக்கிற சர்வேசுரனை இடைவிடாமல் புகழ்ந்து பாராட்டுவாய். அவர் ஒரு நிமிஷம் உன்னைத் தாங்காமல் வி





ட்டுவிட்டால், நீ சகல தாறுமாறிலும் விழுந்து கெட்டுப்போவாயென்பது மறுக்கப்படாத சத்தியமல்லோ? சகல துர்க்குணங்களாகிற அசுத்தம் நிறைந்த சாலகமாகிய உன் இருதயத்திலிருந்து துர்க்குணமல்லாமல் வேறே என்ன புறப்படும்? கஷ்டம் நிறைந்த குப்பைக் குழியாகிய உன் ஆத்துமத்திலிருந்து துர்க்கந்த நாற்றமல்லாமல் வேறே ஏதாகிலும் வெளிப்படக்கூடுமோ? சாபிக்கப்பட்ட மரமாகிய உன் இருதயத்தில் சாபிக்கப்பட்ட பழமல்லாமல் வேறே பழம் பழுக்குமோ? இதினாலல்லோ நாம் தூசியாயிருக்கிறதைச் சர்வேசுரன் நினைவுகூர்ந்தாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். அஞ்சேல்மூ சொல்லுகிறதாவது: தூசியைக் காற்று அடித்துக்கொண்டுபோனால், இதினிமித்தம் ஆச்சரியப்படுகிறதற்கு இடமுண்டோவென்றார். ஆகையால் உன் சகோதரர் பேரில் பிறசிநேகமும் சாந்தகுணமும் கீழ்ப்படிதலும் பொறுமையும் சகலத்திலும் ஒறுத்தலுமுள்ளவனாயிருப்பதற்கான வழிபாடேதென்றால், உன்னை நீ அறிந்துகொள்ளுகிறதே இதற்கான வழிபாடாகும்; உன்னிடத்திலுள்ள சகல ஞான நோய்க்கும் இதுவே தகுந்த ஔஷதமென்று அறிந்துகொள்ளக்கடவாய்.

அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியா சரித்திரத்தில் சொல்லியிருக்கிற வர்த்தமானமாவது: அவர் ஒரு நாள் பயணஞ் செய்யும்போது, முன்னமே அவருக்குச் சிநேகமாயிருந்த ஓர் வம்மிஷபதி அவருக்கு எதிர்ப்பட்டான். அவர் முன்னமே அநுபவித்த சுக சௌக்கியம் ஒன்றுமில்லாமல் மகா நிர்ப்பாக்கியமான அந்தஸ்திலிருக்கிறதை அவன் கண்டு வெகுவாய் அங்கலாய்த்துக்கொஞ்சமாகிலும் உமது சரீர சௌக்கியத்தை விசாரித்துக்கொள்ள வேணுமென்று சொன்னான். அதுக்கு அந்த அர்ச்சியசிஷ்டவர் மலர்ந்த முகத்தோடு அவனை நோக்கிச் சொன்னதாவது: நம்மைப் பற்றி நீர் கஸ்திப்பட வேண்டியதில்லை; நீர் நினைக்கிறதுபோலே, நாம் ஒன்றுமில்லாத நிர்ப்பாக்கியமான பரதேசியல்ல; ஏனென்றால் நாம் ஓரிடத்தில் போய்ச் சேருமுன்னே, ஒரு காரியக்காரனை அங்கே அனுப்புகிறதுண்டு; அவன் சகலத்தையும் நமக்குக் குறைவில்லாமல் ஆயத்தம்பண்ணிவைப்பானென்றார். அப்போது இந்தக் காரியக்காரன் ஆரென்று அந்தத் துரைமகன் கேட்டான். அதற்கு அர்ச்சியசிஷ்டவர் சொன்னதாவது: நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற அறிவும் நமது பாவத்தின் நிமித்தம் நரக ஆக்கினைக்குப் பாத்திரமானே

மென்கிற நினைவுந்தான் இந்தக் காரியக்காரன்; நாம் எந்த இடத்தில் போய்ச் சேர்ந்தாலும், தங்குகிறதற்கு எவ்வளவு அவந்தரையான இடம் அகப்பட்டாலும், மேற்சொன்ன நினைவைக் கொண்டு நாமிருக்க வேண்டிய அந்தஸ்துக்கு எப்போதும் மேலாயிருக்கிறோமென்று நிச்சயித்துக்கொள்ளுகிறோமென்றார்.

அர்ச். தொமினீக்கு சபை சரித்திரத்தில் எழுதியிருக்கும் ஓர் வர்த்தமானமாவது: உத்தம தேவ தாசரான ஓர் சந்நியாசியார் அர்ச். தொமினீக்கு சபையிலுட்பட்ட அர்ச். மர்கரீத்தம்மாளோடு ஒரு நாள் பேசிக்கொண்டிருக்கும்போது, அவர் சொன்னதாவது: பூர்வீக வனவாசிகள் சர்வேசுரன் கண்ணுக்குப் பிரியமுள்ளவர்களாகிச்சகல வித தேவ பிரசாதங்களும் தங்களுக்கு வரும்படியாய் அவர்கள் நடந்த பாதையை எனக்குக் காட்ட வேணுமென்று அநந்த முறை சர்வேசுரனைப் பிரார்த்தித்துக்கொண்டு வந்தேன்; ஓர் நாள் இராத்திரி நான் நித்திரை போகும்போது, தங்க எழுத்து எழுதியிருந்த ஓர் புத்தகம் எனக்கு முன்னே இருக்கிறதாகக் காட்சியில் கண்டேன்; எழுந்திருந்து வாசியென்கிற ஒரு சத்தத்தைக் கேட்டு விழித்து உடனே எழுந்திருந்து வாசிக்கும்போது, அதிலே எழுதியிருந்த தேவ திரு வாக்கியமாவது: சர்வேசுரனைச் சிநேகிக்கிறதும் தங்களைத் தாங்களே நிந்திக்கிறதும் வேறொருவரையும் நிந்தியாமலும் அவர்கள் பேரில் கெடுதலான எண்ணங்கொள்ளாமலும் இருக்கிறதுமே பூர்வீக வனவாசிகளுடைய புண்ணிய சாங்கோபாங்கமென்று எழுதியிருந்தது; இதை வாசித்த உடனே காட்சி மறைந்து போனதென்றார்.

———o▢ooo▢o———

## ௰௨-ம் அதிகாரம்.

——ooo——

நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற முயற்சியைச் செய்து
பழகுகிறது எவ்வளவு கனமான காரியமென்று
சொல்லுவது.

——ooo——

நம்மை நாமே அறிந்துகொள்ளுகிற முயற்சியைச் செய்து பழகுகிறது எவ்வளவு கனமான காரியமென்று நாம் இதுவரையில் சொன்

ன்னைக் கொண்டு அறிந்துகொள்ளலாம். கற்றுக்கொள்ளுகிறதற்கு மகா வருத்தமான சாஸ்திரம் எதுவென்று பூர்வீக கிரேஸ்தேசத்தில் விளங்கின எழு ஞானிகளுக்குள்ளே ஒருவனான தாலேசென்பவனிடத்தில் கேட்டதற்குத் தன்னைத்தானே அறிந்துகொள்ளுகிறது சகலத்திலும் வருத்தமான சாஸ்திரமாகும்; ஏனென்றால் இந்தச் சாஸ்திரத்தை நாம் கற்றறியாதபடிக்குச் சுயசினேகம் இடைவிடாமல் விக்கினம் பண்ணுமென்றான். இதினிமித்தமாக உன்னை நீயே அறிந்துகொள்ளென்கிற பேர்போன சுலோபம் பூர்வீக சாஸ்திரிகளுக்குள் வழங்கி வந்தது. இன்னம் வேறோர் ஞான சாஸ்திரி ஞானத்தைச் சுருக்கமாய்க் கற்றுக்கொடுப்பதற்காக உன்னோடு குடியிருவென்கிற வாக்கியத்தை வழக்கமாய்ச் சொல்லிக்கொண்டு வருவான். ஆனால் அஞ்ஞான சாஸ்திரிகள் இது காரியத்தில் போதித்த போதகத்தை விட்டுக் கிறீஸ்துவ சாஸ்திரிகள் சொன்ன புத்தியை எடுத்துக் காட்டக் கடவோம். இது காரியத்தில் இவர்கள் சொன்ன புத்தி மிகவு மேலானதென்பதற்குச் சந்தேகமில்லை. மனுஷர் கற்றறிந்த சகல கல்வி கலைக்கியானங்களைவிடத் தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிறது மேலான கல்வியென்றும் பிரயோசனமுள்ள கலைக்கியானமென்றும் அர்ச். அகுஸ்தீனும் அர்ச். பெர்நர்துசும் திர்மானித்தார்கள். அர்ச். அகுஸ்தீன் சொல்லுகிறதாவது: வானம் பூமியின் குண குணங்களை விளக்கிக் காட்டி வான மண்டலங்கள் அசைந்தாடுகிற விதத்தையும் கிரகங்களின் ஓட்டத்தையும் அதின் வல்லபத்தையும் கற்றுக்கொடுக்கிற சாஸ்திரத்தை மனிதர் வெகு கனமாய் எண்ணுகிறார்கள்; ஆனால் தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிற அறிவு இதுக்கு மேலான சாஸ்திரம், இதைவிடப் பிரயோசனமான அறிவு. அர்ச். சின்னப்பர் சொல்லுமாப்போலே, மற்றச் சாஸ்திரமெல்லாம் நம்மை ஆங்காரிகளாக்கிக் கெடுக்கும்; ஆனால் நம்மை அறிந்துகொள்ளுகிற சாஸ்திரம் நம்மைத் தாழ்த்தி நம்மை நல்லவர்களாக்குமென்றார். இதினிமித்தமாக நாம் செபத்தியான நேரத்தில் இந்த முயற்சி செய்துகொண்டுவர வேணுமென்று ஞானசீவிய கிரந்தகர்த்தாக்கள் ஸ்திரமாய்ப் போதித்திருக்கிறார்கள். அன்றியும் தங்கள் குற்றங் குறைகளை உற்றுப்பார்க்கிறது தங்களுக்குப் பொருந்தாத காரியமாயிருக்கிறதினாலே, அதை மேலெழுந்த வாரியாய்ப் பார்த்தபின் தங்களுக்கு இன்பமாகத் தோன்றுகிற யாதொரு பத்திக்கடுத்த தியானத்திலே வெகு நேரம் செலவழிக்கிறவர்கள் மோசம் போகிறார்களென்று அவர்களைக் கடிந்துகொள்ளுகிறார்கள். தங்களுக்குத் தாங்களே பொரு



ந்தாதவர்களாயிருக்கிறதைக் கண்டு வெட்கப்பட்டு அவலட்சணமான பெண் முகக் கண்ணாடியிலே தன்னை ஒருகாலும் பாராதிருப்பதுபோலே இவர்களும் அவலட்சணமான தங்கள் குற்றங் குறைகளை உற்றுப் பாராமலிருப்பார்கள். இதினிமித்தம் சர்வேசுரன் பேராலே அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது : மனுஷனே, நீ யாரென்று உற்றி விசாரித்தால், நமக்குப் பிரியப்படுவாய், உனக்கு நீ தானே அருவருப்புள்ளவனாவாய் ; ஆனால் நீ உன்னை உற்று விசாரியாததினாலே, நீ உன் பேரில் பிரியப்பட்டு நமக்குப் பிரியமில்லாதவனாய்ப் போகிறாய். ஆனால் நமக்கும் உனக்கும் நீ பிரியப்படாத காலம் வரும் ; நீ பாவஞ் செய்ததினாலே, அப்போது நமக்குப் பிரியப்படாமற் போவாய் ; உனக்கு நீ தானே நித்திய கேட்டை வருவித்துக்கொண்டதினாலே, உன்பேரிலும் பிரியப்படாமற் போவாயென்றார்.

அர்ச். கிரெகோரியார் இவ்விஷயத்தில் சொல்லுகிறதாவது : சிலர் உண்டு; இவர்கள் சர்வேசுரனுக்கு ஊழியம் பண்ணத் துவக்கிச் சில புண்ணியக் கிரிகைகளைச் செய்தமாத்திரத்திலே, நாங்கள் அர்ச்சியசிஷ்டவர்களாய்ப் போனோமென்றெண்ணுகிறார்கள். இவர்கள் தாங்கள் செய்கிற நன்மையை உற்றுப்பார்த்துந் தாங்கள் இதுக்குமுன் கட்டிக்கொண்ட பாவத்தை முழுதும் மறந்துபோகிறார்கள் ; தாங்கள் இப்போது கட்டிக்கொள்ளுகிற பாவத்தை முதலாய்ச் சிலவிசை இவர்கள் பார்க்கிறதில்லை. ஆனால் மெய்யான புண்ணியவான்கள் நடக்கிற விதம் இதற்கு முழுதும் விரோதமாயிருக்கும் ; ஏனென்றால் அவர்கள் புண்ணியமும் நற்கிரிகைகளும் நிலறந்திருந்தாலும், தங்களிடத்தில் கெடுதலாயிருக்கிறதை மாத்திரம் உற்றுப்பார்த்துத்தங்கள் குற்றங் குறைகளின்பேரில் இடைவிடாமல் கண்ணுண்டாயிருப்பார்கள். இவ்விருவகைப்பட்டவர்களும் நடக்கிற வித்தியாசத்துக்குத் தக்கது இவர்களுடைய நடக்கையும் வித்தியாசமாயிருக்கும் ; ஏனென்றால் தங்கள் குறைகளைக் கண்டு தங்களைத் தாழ்த்துகிறவர்கள் தங்களிடத்திலுள்ள புண்ணியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுவார்கள் ; தங்களிடத்திலுள்ள புண்ணியத்தைப் பார்க்கிறவர்கள் தங்களைக் கனமாயெண்ணித் தங்கள் ஆங்காரத்தினாலே அதை இழந்துபோய் கெட்டுப்போவார்கள். ஆகையால் தாழ்ச்சியுள்ளவர்கள் தங்களிடத்திலுள்ள குற்றங் குறைகளை யோசிப்பதினாலே பிரயோசனப்படுவார்கள் ; ஆங்காரிகள் தங்களிடத்திலுள்ள நன்மையை யோசிப்பதினாலே அதைத் தங்களுக்குத் தின






மையாக்கிக்கொள்ளுவார்கள். சாப்பாட்டிலே நடக்கிற விசேஷம் நாம் இங்கே சொல்லுகிறதற்கு அத்தாட்சியாயிருக்கும். சாப்பாடு எவ்வளவு நல்லதாயிருந்தாலும், அதை மிதமிஞ்சித் தின்றால், பொல்லாப்பாகும்; சில நஞ்சு எவ்வளவு கெடுதலாயிருந்தாலும், அதைத் தகுந்த விதமாய்ப் புடம் போட்டுத் தகுந்த சமயத்தில் சாப்பட்டால், அது நல்ல ஔஷதமாகும். இவ்விஷயத்தில் அர்ச். கிரெகோரியார் சொல்லுகிறதாவது: பசாசு உன் நற்கிரிகைகளை உன் நினைவில் வருவித்து உன்னிடத்தில் வீண் மகிமையை எழுப்பத் தேடும்போது, உன் பாவத்தை நினைவுகூர்ந்து இந்தச் சோதனையைச் செயிக்க வேண்டும். அர்ச். சின்னப்பர் தாம் கண்ட மேலான காட்சிகளினாலேயும் சர்வேசுரன் தம்மைக் கொண்டு செய்வித்த ஆச்சரியங்களினாலேயும் தம்மிடத்தில் ஆங்காரம் எழும்பாதபடிக்கு ஐயோ! நான் பாவி, தேவதூஷணஞ் சொன்னேனே; இயேசுநாதருடைய சீஷாக்களை அலைக்கழித்து உபாதித்தேனென்று நினைத்துக்கொள்ளுவார்; நான் சர்வேசுரனுடைய திருச்சபைக்குக் கலாபம் பண்ணினதினாலே, அப்போஸ்தலனென்கிற பேர் அடைவதற்கு நான் பாத்திரவானல்லவென்றார். தான் முன் செய்த பாவங்களை ஞாபகத்தில் வருவித்துக்கொள்ளுகிறதே ஆங்காரமும் வீண் மகிமையுமாகிற சோதனையைத் தள்ளுகிறதற்கான பரிகாரமாகும்.

மனுமகனே, நான் சொல்லுகிறதைக் கேளென்று கபிரியேல் சம்மனசானவர் தனியேல் தீர்க்கதரிசியை நோக்கிச் சொன்னார். அர்ச். எரோணிமுஸ் இவ்வாக்கியத்தின் பேரில் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: தனியேல், எசேக்கியேல் முதலிய பூர்வீக தீர்க்கதரிசிகள் கண்ட மேலான காட்சிகளினாலே சம்மனசுகளாய்ப் போனதாகத் தோன்றினது. ஆகையால் அவர்கள் தங்கள் அந்தஸ்தை மறந்து சம்மனசுகளாய்ப் போனோமென்றெண்ணி ஆங்காரங்கொள்ளாதபடிக்கு அவர்களைப் பார்த்து மனுமக்களே யென்று சொல்லிச் சர்வேசுரன் பேராலே அவர்களுடைய பலவீனத்தையும் ஈங்கிஷ மனுஷத்தனத்தையும் சம்மனசானவர் அவர்கள் கண்ணுக்கு முன்பாக வைப்பார். இதினாலே நாங்கள் மற்றவர்களைப்போலே பலவீனமும் நிர்ப்பாக்கியமுமுள்ள மனுஷரென்று அந்தத் தீர்க்கதரிசிகள் யோசித்துத் தங்களை உள்ளபடி அறிந்துகொண்டு தாழ்த்திக்கொண்டு வருவார்கள். சத்திய வேத சரித்திரத்தில் இதற்கொத்த வர்த்தமானங்களை வெகுவாய்க் காணலாம். அநேக அர்ச்சியசிஷ்டவர்களும் பேர்போன வம்மிஷபதிகளும் அ





னேக முடி பொறுத்த இராசாக்களும் இராயர்களும் அர்ச். பாப்புக்களு
ம் வீண் மகிமையாகிற சோதனையைச் செயிப்பதற்காகத் தாங்கள் நீச
மனுஷரொன்று இடைவிடாமல் நினைத்துக்கொண்டு வந்ததுமன்றி நீங்
கள் மனிதர்தான், இதை மறவாதேயுங்களென்று நேரத்துக்கு நேரம்
அவர்களுக்கு நினைப்பூட்டுவதற்காகத் தங்களோடு யாதாமொருவனை
எப்போதும் வைத்திருப்பார்கள்.

அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியா சமுசார வாழ்க்கையிலிருக்கும்
போது, ஓர் மகாத்துமா அவருக்குச் சொன்னதாவது : தேவ ஊழிய
த்திலே நீர் வர்த்திக்க வேணுமானால், உம்மை நீர்தானே நிந்தித்து உ
மது பேரில் வெட்கிக் கூசுவதற்கான யாதொரு காரியத்தின் பேரில்
தினந்தோறும் யோசனை பண்ணாமல் ஒருநாளும் விடப்படாதென்றார்.
இந்த அர்ச்சியசிஷ்டவர் இந்தப் புத்தியை வெகு ஆவலோடு அநுசரித்
துக்கொண்டு வந்ததினாலே மனோதியானம் பண்ணினபின், தம்மை அ
றிந்து நிந்தித்துத் தாம் கேட்டது வாசித்தது பார்த்தது எல்லாத்தை
யும் தமக்கு அவமானமாக்கிக்கொள்ளுவதற்காகத் தினந்தோறும் இர
ண்டுமணி நேரம் செலவழியாமற் போகமாட்டார். இதுவுமன்றி வே
றொரு பத்தி முயற்சியுஞ் செய்துகொண்டுவருவார். அதென்னவென்
றால், காலமே எழுந்திருந்த உடனே தாம் மண்ணும் தூசியுமாயிருக்கி
றோம், மண்ணும் தூசியுமாய்ப் போவோமென்கிற சத்தியம் அன்றை
க்கு முழுதும் தமது மனசிலே பதிந்திருக்கும் பொருட்டு முந்த முந்
த முழங்காலிலிருந்து மும்முறை பூமியை முத்தி செய்வார். இதற்
கொத்த பத்தி முயற்சிகளைக் கொண்டு அவர் அடைந்த பலன் எவ்வ
ளவென்று அவரிடத்தில் விளங்கின தாழ்ச்சியையும் அர்ச்சியசிஷ்டத்த
னத்தையுங் கொண்டு வெளிப்படும். இந்தப் புத்தியை நாமும் அநுச
ரிக்கக் கடவோம். நம்மை நாமே நிந்திப்பதற்குரிய யாதோர் காரியத்
தின் பேரில் தினந்தோறும் தியான நேரத்தில் கொஞ்சமாகிலும் யோ
சியாமலிருக்கப் படாது ; நமது பேரில் தாழ்மையான எண்ணம் நமதா
த்துமத்திலே ஸ்திரமாய்ப் பதிந்து நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்
கியத்தையும் இடைவிடாமல் நினைத்து நமது பேரிலே முழு வெட்கமு
ம் கூச்சமும் நமது இருதயத்தில் எழும்பும் வரைக்கும் இந்த முயற்சி
யை விடாமல் செய்துகொண்டுவர வேண்டும். இந்த முயற்சி செய்கி
றது நமக்கு மிகவும் அவசரம் ; ஏனென்றால் மற்றவர்கள் நம்மைக் கன
மாயெண்ண வேணுமென்கிற ஆங்காரம் நம்மிடத்தில் சுபாவமாய் நி




றைந்திருக்கும்; ஆகையால் நமது பலவீனத்தை உற்று விசாரித்து இடைவிடாமல் நம்மை நாமே தாழ்த்திக்கொள்ளாவிட்டால், தண்ணீரில் எப்போதும் அமுக்கிக்கொண்டிராத நெட்டித்தட்டை க்ஷணத்துக்கு க்ஷணம் தண்ணீர்மேலே எழும்புகிறதுபோலே, நாமும் எப்போதும் ஆங்காரத்தினால் எழும்பிக் கெட்டுப்போவோமென்பது தப்பாது. ஆகையால் நமது பேரில் நாம் சுபாவமாய்க் கொண்டிருக்கிற மேலான எண்ணத்தினாலே நமது மனசில் இடைவிடாமல் உயர்ந்து எழும்புகிற ஆங்காரத்தை எப்போதும் அடக்கிக்கொண்டிருக்க வேண்டும். மயில் அவலட்சணமான தன் காலைப் பார்ப்பதுபோலே, நாமும் நமது பலவீனத்தையும் குற்றங் குறைகளையும் யோசித்துப் பார்த்து ஆங்காரத்தினாலே நம்மிடத்தில் உண்டாகிற வீண் மகிமையை அடக்க வேண்டும். திராக்ஷத் தோட்டத்தில் நட்டிருந்த அத்திமரத்தின் உவமையை யோசித்துப் பார்க்கக் கடவோம். அது மூன்று வருஷமாய்ப் பழம் பழுக்காததினாலே, தோட்டத்தெசமான் அதை வெட்டி எறிய வேணுமென்று சொன்னான். அதற்குத் தோட்டக்காரன் சொன்னதாவது: ஐயா, இன்னம் ஒரு வருஷம் இந்த மரம் நிற்கட்டும்; தூரைச் சுற்றி வெட்டிக்கொடுத்து எருப் போடுவேன்; அதின்பின் அது பழம் பழுத்தால் நல்லது; பழுக்காவிட்டால், அதை வெட்டி எறியலாமென்றான். நீயும் செய்ய வேண்டிய காரியமிதுவே. உன் ஆத்துமமாகிற பலனற்ற மலட்டு மரத்தைச் சுற்றிக் கொத்திக்கொடுத்து உன் பாவமும் நிர்ப்பாக்கியமுமாகிற எருப் போடு; இப்படிச் செய்தால், தாழ்ச்சியும் புண்ணியமுமாகிற பழம் அதில் பழுக்கும்.

ஆனால் இந்த முயற்சியை நாம் அதிக உறுதியாய்ச் செய்யும்படியாகவும் வீண் பயத்தினிமித்தம் இந்த முயற்சியைக் கைவிடாதபடிக்கும் இங்கே இரண்டு விசேஷத்தைச் சொல்லுகிறது நலமாயிருக்கும். முந்த முந்த இது புண்ணியத்தைத் துவக்குகிறவர்களுக்கு மாத்திரம் அடுத்த முயற்சியென்றெண்ணப் படாது; அர்ச்சியசிஷ்டவர்களும் அப்போஸ்தலரும் முதலாய் இந்த முயற்சி செய்துகொண்டுவந்தார்கள்; ஆகையால் இது புண்ணியத்திலே வெகுவாய்க் கதித்தவர்களுக்கு முதலாய் அடுத்த முயற்சியாகும். இரண்டாவது, இது கஸ்திக்கும் துயரத்துக்குமுரிய முயற்சியென்றும் இதினாலே கலக்கமும் குழப்பமும் மனதில் உண்டாகுமென்றும் நினைக்கவுங் கருதவும் படாது. இந்த முயற்சியைக் கொண்டு நம்மிடத்தில் எவ்வளவு பலவீனத்தையும் குற்றங்






குறைகளையும் நாம் கண்டுபிடித்தாலும், சகலரும் நம்மை நிந்தித்து அ
ருவருப்பதற்கு ஆளாயிருக்கிறோமென்று நாம் அறிந்துகொண்டாலும்,
இதினாலே மனசமாதானமும் ஞான மதுரமும் நம்மிடத்தில் பிறக்கு
ம்; ஏனென்றால் மெய்யான தாழ்ச்சியினாலே இந்த அறிவு பிறந்தால்,
அதினால் உண்டாகிற வருத்தம் மதுரமாயிருக்கும்; அது மதுரமாயி
ருக்கிறதினாலே, அந்த வருத்தம் நம்மிடத்தில் உண்டாக வேணுமென்
று ஆசைப்படுவோம். நமது குற்றங் குறைகளையும் நிர்ப்பாக்கியத்தை
யுங் கண்டு சிலவிசை நம்மிடத்தில் எழும்புகிற மனத்துயரமும் கலக்
கமும் பசாசின் சோதனையாகும். இது நாம் மிகவும் தாழ்ச்சியுள்ளவ
ர்களென்று நம்பும்படி செய்து தேவ இரக்கத்தின் பேரில் நம்மிடத்தி
ல் அவநம்பிக்கையை மூட்டித் தேவ ஊழியத்திலே நமக்குக் கோழை
த்தனத்தை உண்டாக்குவதற்காகப் பசாசு செய்கிற கபடமென்று அ
றிந்துகொள்ளக் கடவாய். நமது பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தை
யும் மாத்திரம் யோசித்துப் பார்த்தால், கஸ்தியினாலே மனஞ் சோர்ந்
து வாடி அவநம்பிக்கைப்பட இடமுண்டென்பதற்குச் சந்தேகமில்லை;
ஆனால் இதை யோசித்தபின், சர்வேசுரனுடைய அளவிறந்த நன்மைத்
தனத்தையும் இரக்கத்தையும் நமது பேரில் அவரிடத்திலுள்ள சினே
கத்தையும் நமக்காக அவர் பட்ட பாடுகளையும் சாவதானமாய்த் தியா
னித்து அவர் பேரில் நமது நம்பிக்கையெல்லாம் வைக்க வேண்டும்.
இப்படி நடந்தால், நம்மை நாமே யோசிக்கும்போது மனத் திடாரிக்
கமற்றுப்போக இடமிருந்தாலும், சர்வேசுரனை யோசிக்கும்போது தை
ரியமுண்டாகும். அழுகிறதற்கும் பயப்படுகிறதற்கும் மாத்திரம் நம்
மிடத்திலே இடமுண்டு; சர்வேசுரனிடத்திலே சந்தோஷத்துக்கும்
நம்பிக்கைக்கும் மாத்திரம் இடமுண்டு. நமது பலவீனத்தின் கனத்
தையும் நமது பாவத் திரளையும்பற்றி அவர் நம்மைக் கைவிடுவாரென்
று பயப்படக் காரணமில்லை; அவருடைய நன்மைத்தனத்தையும் இர
க்கத்தின் கனத்தையும் யோசித்துப் பார்த்தால், நமது நிர்ப்பாக்கிய
மும் பாவமும் எவ்வளவாயிருந்தாலும், தேவ கிருபை எல்லாத்துக்கு
ம் மேற்பட்டதாகத் தோன்றும். ஆகையால் இவ்விரு சத்தியத்தையும்
ஆழ்ந்து அளவிட்டுப் பார்த்தால், பலவீனமுள்ள நாணல்த்தட்டையி
ன் மேலே பாரம் ஏற்றக்கூடாததுபோலே நமது பேரிலே நாம் சுத்த
மாய் நம்பிக்கை வைக்கப் படாதென்றும் சர்வேசுரன் பேரில் மாத்திர
ம் நமது நம்பிக்கையெல்லாம் வைக்க வேணுமென்றும் அறிந்துகொள்
ளுவோம். இதினாலல்லோ கர்த்தாவே, எங்கள் நற்கிரியையின் பேரி





ல் நம்பிக்கை கொண்டு உமது சந்நிதானத்தில் நாங்கள் தீர்க்கதண்டம் பண்ணி வேண்டிக்கொள்ளாமல் உமது அளவிறந்த இரக்கத்தின் பேரில் நம்பிக்கை வைத்து உம்மைப் பிரார்த்திக்கிறோமென்று தனியேலென்னும் தீர்க்கதரிசி வசனித்தார்.

## ௰௩-ம் அதிகாரம்.

———(:o:)———

### தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்து இன்னதென்று சொல்லுவது.

நிந்தைப்பட வேணுமென்று ஆசைப்படுகிறது தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தாகும். பேரெடுக்க விரும்பாமல் நிந்தைப்பட ஆசைப்படுவென்று அர்ச். பொனவெந்தூர் அருளிச்செய்தார். நாம் தாழ்ச்சியின் முதல் அந்தஸ்திலே மிகவும் ஸ்திரமாய் உறுதிப்பட்டிருந்தால், இரண்டாம் அந்தஸ்தில் வந்து சேருகிறதற்கு வெகு தூரம் நடக்க வேண்டியதில்லை. நம்மை நாமே மனதில் மெய்யாகவே நிந்தித்தால், மற்றவர்கள் நம்மை நிந்திக்கிறதைக் கண்டு கஸ்திப்படாமல் சந்தோஷப்படுவோமென்பதற்குச் சந்தேகமில்லை. மேற்சொன்ன அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறதாவது: இதற்கு அத்தாட்சி வேணுமோ? கேள்: நாம் நினைக்கிறதுபோலே மற்றவர்களும் நினைத்தால், நாம் சுபாவமாய்ச் சந்தோஷப்படுவோமல்லோ? இதிப்படியிருக்க, மற்றவர்கள் நம்மை நிந்திக்கும்போது நாம் சந்தோஷப்படாவிட்டால், இதற்குக் காரணமென்ன? நம்மை நாமே மெய்யாகவே நிந்தியாமல் நமது பேரில் மேலான எண்ணங்கொண்டிருக்கிறதினாலே, நாம் நிந்தைப்படும்போது சந்தோஷியாமற் போகிறோமென்றார். நான் பாவஞ்செய்தேன்; மெய்யாகவே தோஷ துரோகங் கட்டிக்கொண்டேன்; எனக்கு வர வேண்டிய ஆக்கினையை இன்னம் நான் பட்டநுபவிக்கவில்லையென்று யோபென்பவர் வசனித்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். கிரெகோரியார் வியாக்கியானம் பண்ணிச் சொல்லுகிறதாவது: அநேகர் வாயினாலே இப்படிச் சொல்லுவார்கள், தங்கள்பேரில் நிந்தையாய்ப் பேசுவா

ர்கள் ; ஆனால் மற்றவர்கள் அவர்கள் பேரில் இப்படி நிந்தையாய்ப் பேசினால், இதைப் பொறுக்க மாட்டார்கள். இதற்குக் காரணமேதென்றால், இவர்கள் வாயினாலே தங்கள் பேரில் நிந்தையாய்ப் பேசுகிறதுபோலே, மனசிலே தங்கள் பேரில் நிந்தையாய் நினைக்கிறதில்லை; இதினாலே இவர்களுடைய தாழ்ச்சி கள்ள வெளித் தாழ்ச்சியேயல்லாமல் மெய்யான உள்த் தாழ்ச்சியல்ல. மற்றவர்கள் தங்களைத் தாழ்ச்சியுள்ளவர்களென்று எண்ணவும் தாழ்ச்சியுள்ளவர்களாக வெளிப் பார்வைக்குத் தோன்றவும் இவர்கள் ஆசைப்படுகிறதேயல்லாமல் மெய்யான தாழ்ச்சி இவர்களிடத்தில் கிடையாது ; ஏனென்றால் இவர்களிடத்தில் மெய்யான தாழ்ச்சி உண்டானால், இவர்களுக்குச் செய்கிற கண்டனை தெண்டனையினிமித்தம் வெகு கோபங்கொள்ளவுமாட்டார்கள் ; தங்கள் குற்றத்துக்குப் போக்குச் சொல்லித் தங்களைக் குற்றமற்றவர்களென்று காட்டுவதற்கு அத்தனை பிரயாசப்படவுமாட்டார்கள், அத்தனை மனக் கலக்கங்கொள்ளவுமாட்டார்கள்.

காசியான் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது : ஓர் வனவாசி சேராப்பியோனென்னும் மடாதிபதியைப் பார்க்க வந்தார். அவருடைய உடுபாவனையிலும் முகச்சாயலிலும் பேச்சிலும் வெகு தாழ்ச்சியையும் தமது பேரில் வெகு நிந்தையையும் காட்டினார். நான் பெரும் பாவி, மூச்சு விடுகிறதற்குப் பாத்திரவானல்ல, பூமி என்னைத் தாங்குகிறதற்கு நான் அபாத்திரவானென்று அநந்தமுறை சொல்லிக்கொண்டிருந்தார். கீழேயல்லாமல் வேறோரிடத்திலும் உட்கார மாட்டோமென்றார்; மற்றவர்கள் தமக்குக் கால் கழுவவும் சம்மதிக்கவில்லை. சாப்பட்ட பின், சேராப்பியோனென்னும் மடாதிபதி ஞான சீவியத்துக்கடுத்த சில பேச்சுப் பேசிக்கொண்டிருக்கும்போது, அந்தச் சந்நியாசியாருக்கு ஒரு புத்தி சொல்ல மனதாகி அவரைப் பார்த்து மிகுந்த பட்சத்தோடும் சாது குணத்தோடும் சொன்னதாவது : நீர் வாலப் பிராயமும் பெலமுமுள்ளவராயிருக்கிறதினாலே, அறைக்கறை அங்குமிங்கும் போகாமல் ஒரு அறைக்குள்ளே ஒதுங்கியிருந்து மற்ற வனவாசிகளைப்போலே கைவேலை செய்து பிழைக்கிறது தாவிளையென்றார். இதைக் கேட்டு அந்த வனவாசி வெகு கோபமாகி அவருடைய முகம் செவந்துபோயிற்று. அப்போது அர்ச். சேராப்பியோன் சொன்னதாவது : என் மகனே, கொஞ்ச நேரத்துக்கு முன்னே உன் பேரில் மிகவும் தாழ்மையாய்ப் பேசி வெகு தாழ்ச்சி காட்டினாயே ; இப்போது பிற சினேகத்தோடும்






மதுர குணத்தோடேயும் உனக்குச் சொன்ன புத்தியைப் பொறுக்கமாட்டாமல் கோபங்கொள்ளுகிறுயே! நீதிமான் தன்பேரில் முந்த முந்தக் குற்றஞ் சாட்டிக்கொள்ளுவானென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, உன்னைப் புண்ணியவானென்று நாங்கள் எண்ணும்படியாய் உன்பேரில் தாழ்மையான பேச்சுப் பேசினுயோ? உன்னை நீயே நிந்தித்துக்கொள்ளுகிறதினுலே, புகழ்ச்சி அடையவேணுமென்று விரும்பினுயேர் வென்றுர். இது காரியத்தில் அர்ச். கிரேகோரியார் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது: ஐயோ! நாம் எவ்வளவு நிர்ப்பாக்கியராயிருக்கிறோம்! நமது கள்ள ஞானத்தினுலேயும் வஞ்சகத்தினுலேயும் மனுஷருடைய மேலான எண்ணத்தை மாத்திரம் தேடித் திரிகிறோம்; நம்மிடத்தில் தாழ்ச்சியென்று தோன்றுகிறது மிகவும் பெலத்த ஆங்காரமாயிருக்கும்; மனுஷர் நம்மைக் கனமாயெண்ணிப் புகழுவதற்காக அநந்தமுறை அவர்களுக்கு முன்னே நம்மைத் தாழ்த்துகிறோம். இதினுலேதான் நீ உன்பேரில் கெடுதலாய்ப் பேசினுலும், மற்றவர்கள் உன்னைக்கெடுதலாயெண்ணினுல், கஸ்திப்படுகிறுய். நீ உன்பேரில் தாழ்மையாய்ப் பேசும்போது, மனசிலும் மெய்யாகவே உன்னைத் தாழ்மையாய் எண்ணியிருந்தால், மற்றவர்கள் உன்னைத் தாழ்மையாய் நினைக்கிறதைக் கண்டு சந்தோஷப்படுவாயே; அப்போது நீ கஸ்திப்பட்டால், உன்னை நீயே தாழ்த்திக்கொள்ளுகிறதினுலே, மற்றவர்களுடைய மேலான எண்ணத்தை அடையவேணுமென்று கருத்துகொண்டிருந்தாயென்பதற்கு உன் கஸ்தியே அடையாளமென்றுர். சிலர் வெளிப் பார்வைக்குத் தங்களைத் தாழ்த்திக்காட்டுவார்கள்; அவர்கள் மனதில் வஞ்சகமும் ஆங்காரமும் நிறைந்திருக்குமென்று ஞானியானவர் வசனித்தார். ஏனென்றுல் தாழ்மையையும் இகழ்ச்சியையுங் கொண்டு புகழ்ச்சியையும் மேலான எண்ணத்தையும் தேடித் திரிகிறதை விடப் பெலத்த வஞ்சகமும் கபடமும் எங்கேயாகிலுமுண்டோ? தாழ்ச்சியுள்ளவர்களென்று தோன்ற ஆசைப்படுகிறதை விட அகந்தையான ஆங்காரம் எங்கேயுண்டு? இதினுலே அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது: தாழ்ச்சியைக் கொண்டு தாழ்ச்சியுள்ளவனென்கிற புகழ்ச்சியை அடைய விரும்புகிறது புண்ணியமல்ல; இது புண்ணியத்தை நிர்மூலம் பண்ணுவதற்கு ஒப்பாகும்; ஏனென்றுல் நீ கெட்டவனென்கிறதைக் கொண்டுதானே நல்லவனென்று தோன்ற ஆசைப்படுகிறதை விட அயோக்கியமான காரியம் ஒன்றுமில்லையென்றுர். மெய்யாகவே நீ உன்பேரில் சொல்லிக்கொள்ளுகிற பொல்லாப்பைக் கொண்டு நல்லவனென்று பேர்பட ஆசைப்படுகிறது





அயோக்கியமல்லோ ? இப்படிப்பட்டவர்களைக் குறித்து அர்ச். அம்புரோசியார் சொல்லுகிறதாவது : அநேகரிடத்தில் தாழ்ச்சியென்னும் புண்ணியமில்லாவிட்டாலும், தாழ்ச்சியின் வேஷம் போடுகிறார்கள் ; வெளியிலே அவர்கள் தாழ்ச்சி காண்பிக்கும்போதே, உள்ளத்தில் அதை நிர்மூலம் பண்ணுகிறார்களென்றார்.

மகிமைப் பிரியமும் மேலான எண்ணத்தை அடைய வேணுமென்கிற ஆவலும் நம்மிடத்தில் வெகு பெலன் கொண்டிருக்கிறதினாலே, நமது ஆங்காரத்தைத் திருத்திப்படுத்துவதற்காக ஆயிரம் உபாய தந்திரங்களைச் செய்து நேரேயாகிலும் உபாயமாயென்கிலும் எவ்விதத்திலும் நமக்கு மகிமை வருவித்துக்கொள்ள எப்போதும் சுபாவமாய்ப் பிரயாசப்படுகிறோமென்பது நிச்சயம். அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, ஆங்காரிகள் யாதொரு காரியத்தை நன்றாய்ச் செய்து முடித்தோமென்று நினைக்கும்போது, தாங்கள் செய்த அலுவலிலேயுள்ள குற்றங் குறையைச் சொல்லிக் காட்ட வேணுமென்று மற்றவர்களிடத்திலே கேட்கிறது வழக்கம். நீ வெகு நேர்த்தியாய் செய்து முடித்தாய் ; அதிலே குறையொன்றுமில்லையென்று மற்றவர்கள் சொல்லுகிறதற்காக இப்படிக் கேட்பார்கள். தங்கள் குற்றத்தை மற்றவர்கள் தங்களுக்கு அறிவிக்க வேணுமென்று கேட்டுக்கொள்ளுகிறது தாழ்ச்சியென்று அவர்களுக்குத் தோன்றும் ; ஆனால் இது தாழ்ச்சியல்ல, ஆங்காரம், புகழ்ச்சியைத் தங்களுக்கு வருவித்துக்கொள்ளுவதற்காக அவர்கள் இப்படிக் கேட்டுக்கொள்ளுகிறதேயல்லாமல் மற்றப்படியல்ல. வேறு சிலர் தாங்கள் செய்ததை இகழ்ந்துகொண்டு அதின் பேரில் தங்களுக்குச் சந்தோஷமில்லையென்று காட்டுவார்கள். என்னத்துக்காக? அவர்கள் செய்ததை மற்றவர்கள் அங்கீகரித்துக்கொண்டு நீ செய்ததைப் பார்க்க நேர்த்தியாய் ஒருவராலேயும் செய்ய முடியாது, என் இதின் பேரிலே நீ சந்தோஷப்படவில்லையென்று சொல்லுகிறதைக் கேட்டு அகமகிழ்வதற்காக இப்படிப் பேசுவார்கள். பேர்போன ஓர் சந்நியாசியார் இவ்வகைப்பட்ட தாழ்ச்சியைத் துறட்டித் தாழ்ச்சியென்று சொல்லுவார் ; ஏனென்றால் நமக்கு எட்டாததைத் துறட்டியைக் கொண்டு இழுத்துக்கொள்ளுகிறதுபோலே, இவ்வகைத் துறட்டித் தாழ்ச்சியைக் கொண்டு நமக்கு வராத புகழ்ச்சியை வருவித்துக்கொள்ளப் பிரயாசப்படுகிறது வழக்கம். பிரசங்கியொருவர் நான் இன்றைக்கு ஆச்சரியமான பிரசங்கம் பண்ணியிருக்கிறேன் ; வானத்தையும் மலையையும் வைத்





து உருட்டிப்போட்டேனென்று நினைத்துக்கொண்டு பிரசங்கத்தொட்
டியை விட்டு இறங்கிவருவார்; அப்புறம் நான் செய்த பிரசங்கத்திலே
யுள்ள குற்றங் குறைகளைப் பிற சிநேகத்தினாலே எனக்குச் சொல்லிக்
காட்ட வேணுமென்று கேட்பார். அப்பா, இந்தப் பாசாங்கெல்லாம்
என்னத்துக்கு? உன் பிரசங்கத்திலே ஒரு குற்றமுமில்லையென்று
உனக்குத் தெரியுமே; என் இப்படிக் கேட்க வேணும்? அதிலே ஒ
ரு குற்றமுமில்லையென்று உன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறதற்காகத்தா
னே இப்படிக் கேட்கிறாய்; நீ தேடுகிறது புகழ்ச்சிதான். ஆனால் நற்க
ருத்துள்ள யாதாமொருவர் இந்தப் பிரசங்கத்திலே நீ செய்த அற்ப
சொற்ப குற்றத்தை உனக்குச் சொல்லிக் காட்டினால், அப்போது நீ
சந்தோஷப்படாமல் கோபங் கொண்டு அது குற்றமல்லவென்று காட்
டப் பிரயாசப்படுவாய். இப்படி உன் குற்றத்தைச் சொல்லிக் காட்டி
னவன் புத்தியில்லாதவனென்றும் வெறு நேற்றியான காரியத்தைக் கு
ற்றமென்று அவன் சொல்லுகிறதினாலே, காரியத்தை அறிந்துகொள்ள
அவனிடத்திலே சாமர்த்தியமில்லையென்றும் எண்ணிக்கொள்ளுவாய்.
ஆகையால் என் பிரசங்கத்திலேயுள்ள குற்றத்தைச் சொல்லிக் காட்டு
ங்களென்று நீ கேட்டது ஆங்காரத்தினாலேயும் வீண் மகிமையினாலேயு
ம் கேட்டதேயல்லாமல் மற்றப்படியல்ல. இந்தக் கள்ளத் தாழ்ச்சியைக்
கொண்டு மனுஷருடைய புகழ்ச்சியையும் மகிமையையும் தேடினாயென்
பதற்குச் சந்தேகமில்லை. நாம் செய்த குற்றத்தை மறைக்கக் கூடாதிரு
ந்தால், நாம் அதைச் செய்தது மெய்தானென்று சில விசை அங்கீகரித்
துக்கொள்ளுவோம். அந்தக் குற்றத்தைக் கட்டிக்கொண்டதினாலே நா
ம் இழந்துபோன மேலான எண்ணத்தை அடைவதற்காக அதை அங்
கீகரித்துக்கொண்டால், இதுவும் ஆங்காரந்தான். சிலவிசை நாம் செ
ய்த குற்றத்தை வெகுவாய்க் கூட்டிப் பெருக்கிச் சொல்லுகிறதுண்டு;
என்னத்துக்காக? அந்தக் குற்றம் நாம் சொல்லுகிறதுபோலே, அவ்வ
ளவாயிருக்கக் கூடாதென்று மற்றவர்கள் கண்டு நாம் செய்யாத குற்
றத்தை நமது பேரில் சாட்டிக்கொள்ளுகிறோமென்றும் தாழ்ச்சி மிகு
தியினாலே இப்படிப் பேசுகிறோமென்றும் மற்றவர்கள் நினைப்பதற்காக
இப்படிக்கூட்டிச் சொல்லுகிறதுண்டு. ஆகையால் நமதுபேரில் இல்லா
த குற்றத்தைக் கூட்டிச்சொல்லுகிறதினாலே உள்ள குற்றத்தையும் உ
பாயமாய் மறைக்கப் பிரயாசப்படுகிறோம். கடைசியாய் நமது ஆங்கா
ரத்தை ஒளித்துத் தாழ்ச்சியாகிற திரைக்குள்ளே அதை மறைப்பதற்கா
க நாம் செய்கிற உபாய தந்திரம் இத்தனையென்று சொல்லக் கூடாது.





அர்ச். பெர்நர்துஸ் சொல்லுமாப்போலே, இஃதைக் கொண்டு தாழ்ச்சி எவ்வளவு மேலான உத்தம புண்ணியமென்றும் ஆங்காரம் எவ்வளவு வெட்கத்துக்கும் இகழ்ச்சிக்குமுரிய துர்க்குணமென்றும் அறிந்துகொள்ளலாம். ஆங்காரந்தானே தனக்கு இகழ்ச்சி வராதபடிக்குத் தாழ்ச்சியாகிற ஆடையைக் கொண்டு தன்னை மூடிக்கொள்ளுகிறதினாலே, தாழ்ச்சி மிகவும் மகிமையான காரியமென்பதற்குச் சந்தேகமில்லையென்று மேற்சொன்ன அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். ஆங்காரம் தன்னை வெளியிலே காட்டத் துணியாமல் தாழ்ச்சியாகிற திரைக்குள்ளே எப்போதும் மறைந்துகொண்டிருப்பதினாலே, அது மிகவும் வெட்கத்துக்குரிய துர்க்குணமென்று சொல்ல வேண்டும். ஏனென்றால் மேலான எண்ணத்தையும் புகழ்ச்சியையும் நீ அடையத் தேடுகிறாயென்று மற்றவர்கள் அறிந்துகொண்டால், இது மகா நீசத்தனமென்று நீ நினைக்கிறதினாலேதான் இதற்கு வெட்கப்படுகிறாய்; இதினாலேதானே உன் ஆங்காரத்தைக் கள்ளத் தாழ்ச்சியைக் கொண்டு மறைக்கப் பிரயாசப்படுகிறாய். ஆனால் புகழ்ச்சியைத் தேடித் திரிகிறாயென்று மற்றவர்கள் நினைக்கிறது வெட்கத்துக்குரிய காரியமென்றிருக்கையிலே, புகழ்ச்சியைத் தேடித் திரிய ஏன் நீ வெட்கப்படவில்லை? நீ புகழ்ச்சியை நாடுகிறாயென்று மற்றவர்கள் நினைத்தாலும், இது பொல்லாப்பல்லவே; புகழ்ச்சியை நாடுகிறதுதானே பொல்லாப்பு. நீ புகழ்ச்சியைத் தேடுகிறாயென்று மற்றவர்கள் அறிந்துகொள்ளுகிறதினாலே நீ வெட்கப்பட்டாலும், உன்னிடத்திலுள்ள அற்பக் குறை எல்லாத்தையும் கண் திறந்து பார்த்துக்கொண்டிருக்கிற சர்வேசுரன் இதை அறிந்திருக்கிறதினாலே நீ வெட்கப்படாதிருக்கிறதென்ன?

நாம் இன்னம் தாழ்ச்சியின் முதல் அந்தஸ்தில் ஸ்திரப்படாததினாலேதான் இதுவெல்லாம் வரும். இதினாலேதான் தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்துக்கு வெகு தூரமாயிருக்கிறோம். இது காரியத்தில் துவக்கத்திலே செய்யவேண்டியதை முந்த முந்தச்செய்து முடிக்கவேண்டும். இதற்காக நமது நிர்ப்பாக்கியத்தையும் ஒன்றுமில்லாமையையும் நன்றாய் ஆழ்ந்து யோசித்து அறிந்துகொள்ள வேண்டும். இந்த அறிவினாலே நமது பேரில் தாழ்மையான எண்ணம் பிறக்கும்; இதுவே தாழ்ச்சியின் முதல் அந்தஸ்து. இதின்பின் தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில் ஏறலாம். ஆகையால் தாழ்ச்சியை அடைவதற்கு உன்னை நீயே சிந்தித்துக்கொண்டு உன்பேரில் உண்மையாகவே கெடுதலாய்ப்




பேசுகிறதும் பற்றாது; உன்பேரில் நீ கெடுதலாய் நினைக்கிறதுபோலே மற்றவர்களும் உன்னைக் கெடுதலாய் நினைக்க வேணுமென்றும் நீ உன்பேரில் சொல்லிக்கொள்ளுகிற நிந்தையை மற்றவர்களும் உனக்குச் சொல்லி வேணுமென்றும் கபடில்லாமல் மெய்யாகவே நீ ஆசைப்படவேண்டும். அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லுமாப்போலே, தன்னைத் தானே நிந்தித்துத் தன் பேரில் இகழ்ச்சிப் பேச்சுப் பேசுகிறது தாழ்ச்சியல்ல; ஏனென்றால் தன்னிடத்திலுள்ள சகலத்தையும் பொறுமையோடு சகித்துக்கொள்ளாதவனார் ஆனால் மற்றவர்கள் தனக்குச் செய்கிற நிந்தை அவமானத்தையும் தன்னைப் படுத்திவைக்கிற பாட்டையும் சந்தோஷமாய்ப் பட்டநுபவிக்கிறதே மெய்யானதாழ்ச்சியாகும். தன் பேரிலே கெடுதலாய்ப் பேசுகிறதும் நான் ஆங்காரி, சோம்பேறி, பொருமைக்காரன், அசமந்தமுள்ளவன், துடிதுடித்தவனென்று சொல்லுகிறதும் நல்லதுதான்; ஆனால் மற்றவர்கள் உன்னைப்பார்த்து இப்படிச் சொல்லுகிறது இதிலுமதிக நல்லது. மற்றவர்கள் உன்னை இப்படி நினைக்க வேணுமென்று நீ மெய்யாகவே ஆசைப்பட்டு அவர்கள் இப்படி உன்பேரில் பேசுந்தருணத்தில் நீ மெய்யாகவே சந்தோஷப்பட்டால், இதுவே மெய்யான தாழ்ச்சியாகும்.

——(o)——

## ௰௪-ம் அதிகாரம்.

——o——

தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில் ஏறுவதற்கான
சில படிகளைச் சொல்லிக் காட்டுவது.

——ooo——

**தா**ழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில் வந்து சேருகிறது மிகவும் வருத்தமாயிருப்பதினாலே, அதிலே ஏறுவதற்கான நாலு படியை இங்கே குறித்துக் காட்டுவோம். இதினாலே கொஞ்சங் கொஞ்சமாய்ப் படிபடியாய் ஏறித் தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்திலுள்ள மேற்படியில் எளிதாய் வந்து சேரலாம். ஆகையால் மகிமையையும் மனிதருடைய மேலான எண்ணத்வதயும் சுத்தமாய்த் தேடாமல் எச்சரிக்கையோடு அதை விலக்கி நடக்கிறது தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில்





ஏறுவதற்கான முதல் படியாகும். எண்ணிக்கைக்குள்ளடங்காத அர்ச்சியசிஷ்டவர்கள் இது காரியத்திலே வெகு நேற்றியான மாதிரிகை காட்டியிருக்கிறார்கள். இவர்கள் மகிமையையும் மேலான எண்ணத்தையும் தேடாமலிருந்ததுமன்றிச் சங்கையையும் உயர்ந்த பட்டத்தையும் கீர்த்தி மகிமைக்கடுத்த சகலத்தையும் மோசத்துக்குரிய ஆபத்தென்றெண்ணி விலக்கி நடந்தார்கள். இயேசுநாதர் தாமே முந்த முந்த இவ்விதமாய் நடந்து காட்டினார். அவர் ஐந்தப்பத்தைக் கொண்டு ஐயாயிரம் பேருக்குத் திருத்தியாய்ப் போசனங் கொடுத்தபின், சனங்கள் தம்மைப் பிடித்து இராசாவாக ஏற்படுத்த வருகிறார்களென்றறிந்து மலைமேல் ஒதுங்கி மறைந்துகொண்டார். அவர் எவ்வளவு உயர்ந்த பட்டத்தில் இருந்தாலும், ஒரு மோசமும் அவருக்கு வருமென்று பயப்படத் தேவையில்லை; ஆகிலும் மகிமையை விலக்கி நடக்க வேணுமென்று தமது மாதிரிகையைக் கொண்டு நமக்குக் காட்டுவதற்காக இப்படிச் செய்தார். இதினாலேதான் அவர் மறுரூபமாகி மூன்று சீஷாக்களுக்கு சௌந்தரியவடிவாய்த் தம்மைக் காட்டினபின், நாம் உயிர்த்தெழுந்திருக்குமட்டும் இதை ஒருவருக்கும் சொல்லாதேயுங்களென்று கற்பித்தார். குருடருக்குப் பார்வை தந்து எண்ணிக்கைக்குள்ளடங்காத புதுமைகளை அவர் செய்யும்போது, சொஸ்தப்பட்டவர்கள் அதை ஒருவருக்கும் சொல்ல வேண்டாமென்று கற்பிப்பார். மனுஷருடைய மேலான எண்ணத்தினாலேயும் புகழ்ச்சியினாலேயும் நாம் சிலாக்கியப்பட்டுக் கெட்டுப்போகாதபடிக்கு அதை விலக்கி நடக்க வேணுமென்று தமது மாதிரிகையினாலே நமக்கு இப்படிப் போதிக்கச் சித்தமானார்.

அர்ச். பிராஞ்சிஸ்கு சபை சரித்திரத்தில் எழுதியிருக்கிற சங்கதியாவது: அச்சபைக்கு அதிசிரேஷ்டராயிருந்த எலியாசென்பவர் திருச்சபைக்குச் சத்துருவாகிய இரண்டாம் பிரேதேரிக்கென்னும் இராயனுக்குச் சனுவாயிருந்ததினாலே, சாபத்துக்குட்பட்டிருந்தார். அச்சபையைச் சேர்ந்த ஜீல்லசென்னும் ஓர் பரிசுத்த சந்நியாசியார் இதை அறிந்த மாத்திரத்தில் கீழே விழுந்து தன் பெலன்கொண்ட மட்டும் பூமியை அமுக்கிக் கொண்டு பூமியோடு ஒட்டிப்போனதுபோலே வெகு நேரம் கிடந்தார். ஏன் இப்படிச் செய்கிறீரென்று கேட்டதற்கு அவர் சொன்னதாவது: எலியாசென்பவர் மேலான மகிமைப் பட்டத்தில் உயர்ந்திருந்ததினாலே கெட்டுப்போனாரே; இதினிமித்தமாக என்னாலே கூடினமட்டும் பூமிக்குள்ளே ஆழமாய் என்னைத் தாழ்த்தப்






பிரயாசப்படுகிறேனென்றார். அந்தேயென்பவன் பேரில் புலவர் சொல்லியிருக்கிற கதையை ஜெர்சோன் எடுத்துக் காட்டி இது காரியத்தைத் தெளிவித்திருக்கிறார். அதாவது, அந்தேயென்னும் இராக்ஷதன் பூமாதேவியின் மகனும்; அவன் எற்குலேசென்பவனோடு மல்லுக்கட்டும்போது, எற்குலேசென்பவன் மூன்றுவிசை அவனைப் பூமியில் விழத்தாட்டினாலும்; ஆனால் அந்தேயென்பவன் பூமியைத் தொடும்போதெல்லாம், அதிக பெலன் கொண்டு எழுந்திருப்பானும்; எற்குலேசென்பவன் இதைக் கண்டு அவனைக் கீழே விழத்தாட்டாமல் உயரத் தூக்கிக்கொண்டு இரு கையையும் அவன் கழுத்திலே வைத்து கழுத்தை நெறித்துக் கொன்றுபோட்டானும். பசாசு நம்மோடு யுத்தம் பண்ணும்போது, நமக்குச் செய்கிறதுமிதுவே. மனுஷருடைய மேலான எண்ணத்தையும் மகிமையையும் கொண்டு நம்மை மேலே உயர்த்தி எளிதாய் நம்மைச் செயித்துக் கெடுக்கப் பிரயாசப்படும். இதினாலே மெய்யான தாழ்ச்சியுள்ளவன் தன் நீசத்தனத்தை இடைவிடாமல் நினைத்துத் தன்னைத் தாழ்த்தி எல்லாத்தையும்விட மகிமை பெருமைக்குப் பயந்து நடப்பான்.

நிந்தை அவமானத்தைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளுகிறது இரண்டாம் படியென்று அர்ச். அஞ்சேல்மூ வசனித்தார். அதாவது, உனக்கு நிந்தை அவமானமும் வெட்கத்துக்குரிய இலச்சைக்கேடும் நேரிட்டால், அதைச் சாது குணமாய்ச் சகித்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் நிந்தை அவமானங்களை நீ ஆசைப்பட்டு ஆவலோடு தேட வேணுமென்றும், அது உனக்கு வரும்போது, சந்தோஷப்பட்டு அகமகிழ வேணுமென்றும் நாம் இப்போது உன்னிடத்தில் கேட்கிறதில்லை; இது உனக்கு இன்னம் வருத்தமான காரியம்; இது உனக்கு எட்டாத உயர்ந்த புண்ணிய சாங்கோபாங்கம். சமயம் வரும்போது, உனக்கு நேரிடுகிற நிந்தை அவமானத்தையெல்லாம் பொறுமையோடு சகித்துக்கொள்ள வேணுமென்று மாத்திரம் இப்போது சொல்லுகிறோம். இதினாலல்லோ உனக்கு நேரிடுகிறதெல்லாத்தையும் நல்ல மனதோடு ஏற்றுக்கொள்; அது எவ்வளவு வருத்தமாயிருந்தாலும், அதைச் சகித்துக்கொண்டு உன்னைத் தாழ்த்திப் பொறுமையாயிருவென்று ஞானியானவர் வசனித்தார். தாழ்ச்சியை அடைவதற்கும் காப்பாற்றுவதற்கும் இதுவே தகுந்த வழிபாடு; ஏனென்றால் மகிமையும் மனுஷருடைய மேலான எண்ணமும் நம்மை ஆங்காரத்திலும் வீண் சி

லாக்கியத்திலும் தள்ளும்; அதுபோலே, நமக்கு நிந்தையான காரியமெல்லாம் நாம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்கும் தாழ்ச்சியிலே பெலப்பட்டு வர்த்திப்பதற்கும் உதவியாயிருக்கும். அர்ச். லவுரேஞ்சு யூஸ்தீனியான் மழை காலத்தில் வெகு தண்ணீரோடிக் கோடை காலத்தில் வற்றிப்போகிற வாரிக்குத் தாழ்ச்சியை ஒப்பிட்டிருக்கிறார். தாழ்ச்சி செல்வ காலத்தில் குறைந்துபோய்த் துன்ப காலத்தில் வர்த்திக்கிறது வழக்கம்.

நாம் இங்கே சொல்லுகிறதை அநுசரிப்பதற்குத் தினந்தோறும் போதுமான சமயம் நேரிடும்; அச்சமயங்களைப் பிரயோசனப்படுத்திக்கொள்ளுகிறதற்கு மனது வைத்தாலே போதும். இதினாலே கிறீஸ்துநாதர் அநுசாரத்தில் சொல்லியிருக்கிறதாவது: மற்றவர்களுக்குப் பிரியமானதெல்லாம அவர்களுக்கு நன்றாய்க் கைகூடிவரும், உனக்கு ஒன்றும் வாய்க்காது; மற்றவர்களுடைய வார்த்தையை எல்லாரும் ஆச்சரியத்தோடு கேட்டுக்கொள்ளுவார்கள், நீ சொல்லுகிறது ஒன்றுக்கும் உதவாதென்று தள்ளிப்போடுவார்கள்; மற்றவர்கள் கேட்கிறதையெல்லாம் கொடுப்பார்கள், நீ கேட்கிறதை இல்லையென்று சொல்லுவார்கள்; மற்றவர்களைச்சங்கிப்பார்கள், உன்னை அற்பமாகிலும் சட்டைபண்ணமாட்டார்கள்; சகல கவை காரியங்களையும் மற்றவர்களை விசாரிக்கச் சொல்லுவார்கள், நீ ஒன்றுக்கும் உதவாதவனென்றெண்ணுவார்கள். இதுவெல்லாம் சுபாவத்துக்கு வருத்தமான காரியந்தான்; ஒரு வார்த்தையுஞ் சொல்லாமல் நீ இதைச் சகித்துக்கொண்டால், இது அற்பப் புண்ணியமல்லவென்று சொல்லியிருக்கின்றது. ஒவ்வொருவனும் தனக்குட்புகுந்து தினந்தோறும் தாழ்ச்சி முயற்சி செய்கிறதற்கு நேரிடுகிற பற்பல சமயங்களை யோசித்துப் பார்த்து அத்தருணத்தில் எப்படி நடக்கிறேனென்று பரிசோதிக்கக் கடவான். யாதாமொருவர் அதிகாரத்தோடு மேட்டிமையாய் உன்னை ஏதாகிலுஞ் செய்யச் சொன்னால், உன் மனதில் எழும்புகிற நினைவென்ன? உனக்குச் சொல்லுகிற புத்தியையும் செய்கிற கண்டிப்பையும் நீ பட்டநுபவிக்கிற விதமென்ன? சிரேஷ்டர் உன்னை நம்பாமல் ஒதுக்கி வைக்கிறதாக உனக்குத் தோன்றினால், உன் மனதில் கிளம்புகிற நினைவென்ன? அர்ச். தொரோத்தேயர் இவ்விஷயத்தில் சொல்லுகிறதாவது: தினந்தோறும் உனக்கு நேரிடுகிற தாழ்ச்சி சமயங்களில் எது நேரிட்டாலும், அது உன் ஆங்காரத்தைச் சொஸ்தப்படுத்துவதற்கான ஔஷதமென்றெண்ணி






அதைச் சகித்துக்கொள் ; உனக்கு நிந்தை அவமானம் பண்ணுகிறவன் உன் ஆத்தும வைத்தியனாயிருக்கிறதினாலே, அவனுக்காக வேண்டிக்கொள் ; நீ இப்படி நடவாதிருந்தால், உன்னிடத்தில் தாழ்ச்சி இல்லையென்று நிச்சயித்துக்கொள்ளென்றார்.

மனுஷர் நமக்குக் காண்பிக்கிற மேலான எணணத்தையும் செய்கிற புகழ்ச்சியையும்பற்றிச் சந்தோஷப்படாதிருப்பது நாம் ஏறவேண்டிய மூன்றாம் படியாகும் ; மேற்சொன்ன படியைவிட இது வருத்தமானது. ஏனென்றால் மற்றவர்கள் நம்மைப் புகழாதிருக்கும்போது, நாம் புகழ்ச்சியைத் தேடாதிருக்கிறது எளிதாயிருக்கும் ; ஆனால் அவர்கள் நம்மைப் புகழும்போது, மனசிலே சந்தோஷப்படாதிருக்கிறது வருத்தமான காரியமென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். பிரகாசத்தோடு துலங்குகிற சூரியனையும் சந்திர பிரகாசத்தையுங் கண்டு மனசுக்குள்ளே நான் சந்தோஷித்தால், என் தோஷ துரோகம் எவ்வளவு பெரிதாயிருக்குமென்று யோபென்பவர் வசனித்த வாக்கியத்தின் பேரில் அர்ச். கிரெகோரியார் வியாக்கியானம்பண்ணி இச்சத்தியத்தை உத்தமமாய்ப் போதித்திருக்கிறார். அதெப்படியென்றால், நாம் அடைந்த மகிமை கீர்த்தியினிமித்தம் சந்தோஷப்படுகிறது சந்திர சூரிய பிரகாசத்தைப் பிரியத்தோடு பார்க்கிறதற்கு ஒப்பாகும். யோபென்பவர் மனுஷருடைய மேலான எண்ணத்தையும் புகழ்ச்சியையும்பற்றி அற்பச் சந்தோஷமும் படவில்லையென்று மேற்சொன்ன வாக்கியத்தைக்கொண்டு காட்டியிருக்கிறார். ஆங்காரிகளுக்கும் தாழ்ச்சியுள்ளவர்களுக்குமுள்ள வித்தியாசமேதென்றால், ஆங்காரிகள் தங்களைப் புகழ்ந்துகொள்ளுகிறதைக் கேட்டு அகமகிழ்ந்து சந்தோஷப்படுவார்கள் ; அவர்களுக்குப் பொய்யான புகழ்ச்சி வந்தாலும், அதினிமித்தம் அக்களிப்பார்கள் ; ஏனென்றால் தாங்கள் சர்வேசுரனுக்கு முன்பாக எப்படி இருக்கிறோமென்று பாராமல், மனிதர் தங்களை எப்படி நினைக்கிறார்களென்று மாத்திரம் கவனிப்பார்கள். இதினாலே தாங்கள் ஆசிக்கிறதுபோலே மனுஷர் தங்களைக் கனமாய் எண்ணினால், நாங்கள் விரும்பினதை அடைந்தோமென்று சந்தோஷப்பட்டுச் சிலாக்கியங்கொள்ளுவார்கள். ஆனால் மெய்யான மனத்தாழ்ச்சியுள்ளவன் யாதாமொருவர் தன்னைக் கனமாயெண்ணிப் புகழ்ந்துகொள்ளுகிறதைக் கண்ட மாத்திரத்தில் தன் ஆத்துமத்துக்குள் புகுந்து தன்னைத் தாழ்த்தி வெட்கப்படுவான். இதினாலல்லோ என்னை உயர்த்தினபோது, என்னை நானே தாழ்த்திக்





கொண்டு மனக்கலக்கப்பட்டேனென்று இராச தீர்க்கதரிசி வசனித்தார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். கிரெகோரியார் சொல்லுகிறதாவது: இவர் இப்படி மனங் கலங்குகிறதற்கு முகாந்தரமுண்டு; ஏனென்றால் மற்றவர்கள் புகழ்ந்துகொள்ளுகிற காரியம் பொய்யாயிருந்தால், சர்வேசுரன் அந்தப் புகழ்ச்சிக்காக அவனை வெகு கண்டிப்பாய்த் தெண்டிப்பாரென்று நடுங்குகிறதற்கு இடமுண்டு; அவனைப் புகழ்ந்துகொள்ளுகிற காரியம் மெய்யாயிருந்தால், அதினால் வரவேண்டிய சம்பாவனையை இந்தப் புகழ்ச்சியினிமித்தம் போக்கடிப்போமென்று பயப்படுகிறதற்கு இடமுண்டென்றார். உன் ஆயுசு காலத்திலே வெகுபாக்கியங்களைப் பெற்றுக்கொண்டாய்; உன் நற்கிரிகைகளுக்குச் சம்பாவனை அடைந்தாயென்று சொல்லுகிற நாள் வரும்.

ஆகையால் ஆங்காரிகள் அதிக ஆங்காரப்பட்டு சிலாக்கியங் கொள்ளுகிறதற்குப் புகழ்ச்சி காரணமாயிருக்கும்; தாழ்ச்சியுள்ளவர்கள் தங்களை அதிகமாய்த் தாழ்த்திக்கொள்ளுகிறதற்கு அந்தப் புகழ்ச்சியே காரணமாயிருக்கும். ஞானியானவர் நமக்குச் சொல்லியிருக்கிற புத்தியிதுவேயென்று அர்ச். கிரெகோரியார் வசனித்தார். அதாவது, வெள்ளியை உலையிலேயும் தங்கத்தைச் சூளையிலேயும் போட்டுச் சோதிக்கிறதுபோலே, மனுஷன் புகழுகிறவனுடைய வாயைக்கொண்டு சோதிக்கப்படுவானென்று ஞானியானவர் வசனித்தார். சுய தங்கமும் வெள்ளியும் நெருப்பினாலே நகாசுப்பட்டுப் பளபளப்பாகும்; உதவாத வெள்ளியுந் தங்கமும் நெருப்பிலே நீறிச் சாம்பலாய்ப் போகும். புகழ்ச்சியினாலே மனுஷனுக்கு நடக்கிற காரியமுமிதுவே. ஒருவர் உனக்குச் சொல்லுகிற புகழ்ச்சியைக் கேட்டு நீ ஆங்காரங் கொண்டால், வாயாகிற இந்த உலைச்சூட்டை நீ பொறுக்கமாட்டாததினாலே, நீ சுயதங்கமுமல்ல, வெள்ளியுமல்ல; ஆனால் உன்னை மற்றவர்கள் புகழும்போது, நீ உன்னைத் தாழ்த்திக்கொண்டால், புகழ்ச்சியாகிற நெருப்பு உன்னைச் சுட்டுக் கெடுக்காமல் உன்னை நகாசுப்படுத்திப் பளபளப்பாக்குகிறதினாலே, நீயே பத்தரைமாற்றுப் பசும்பொன். ஆகையால் நீ தாழ்ச்சியில் வர்த்திக்கிறாயோ இல்லையோவென்று அறிந்துகொள்ளுகிறதற்கு இஸ்பிரீத்துசாந்து சொல்லிக் காட்டின இந்த அடையாளத்தைக் கொண்டு உன்னைச் சோதித்துப் பார்; உன்னை ஒருவன் புகழும்போது, கஸ்திப்படுகிறாயோ சந்தோஷப்படுகிறாயோவென்று பார்; இதைக் கொண்டு உன்னிடத்தில் மெய்யான தாழ்ச்சி உண்டோ கள்ளத் தாழ்ச்சி உண்டோ

வென்று அறிந்துகொள்ளுவாய்.

அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியா சரித்திரத்தில் எழுதியிருக்கிறது போலே, மற்றவர்கள் அவரை அர்ச்சியசிஷ்டவரென்று கனம் பண்ணுகிறதை அவர் கண்டால், எல்லாத்தையும்விட அதிக கஸ்திப்படுவார். ஏன் இது காரியத்திலே இவ்வளவு வருத்தப்படுகிறீரென்று ஓர் நாள் அவரிடத்தில் கேட்டதற்கு அவர் சொன்ன மாறுத்தரமாவது: அவர்கள் நம்மை நினைக்கிறதற்கும் நாம் இருக்கிறதற்கும் முழுதும் வித்தியாசமாயிருக்கிறதினாலே, சர்வேசுரனுக்கு நாம் வெகு கண்டிப்பான கணக்குக் கொடுக்க வேணுமென்று பயந்து கஸ்திப்படுகிறேனென்றார். இது நாம் முன்னமே எடுத்துக் காட்டின அர்ச். கிரெகோரியாருடைய வசனத்துக்கு முழுதும் ஒத்திருக்கும். ஆகையால் நம்மை நாமே சரியாய் அறிந்துகொண்டு நமது பேரில் தாழ்மையான எண்ணத்தில் உறுதியாய் ஸ்திரப்பட்டிருந்தால், மனிதருடைய புகழ்ச்சியும் மெய்ச்சுக்கொள்ளுதலுமாகிற காற்று நம்மைப் பூமியை விட்டு எழுப்பி நமது நிர்ப்பாக்கியத்தை நாம் மறந்துபோகப் பண்ண மாட்டாது. நமக்குப் புகழ்ச்சி வரும்போது, இது பொய்யான புகழ்ச்சியென்றும் மற்றவர்கள் சொல்லுகிற குணங்கள் நம்மிடத்தில் இல்லையென்றும் மனுஷர் நம்மைக் கனமாயெண்ணுகிறதுபோலே நாம் இருக்கவில்லையென்றும் நிச்சயித்துக்கொண்டு நம்மை நாமே தாழ்த்தி வெட்கி நாணக் கடவோம்.

---

## ௰௬-ம் அதிகாரம்.

நிந்தைப்பட வேணுமென்று ஆசித்து நிந்தை வரும்போது
சந்தோஷப்படுகிறது நாலாம் படியென்று
சொல்லுவது.

—:(o):—

மனிதராலே நிந்தைப்பட வேணுமென்று ஆசித்து நிந்தை அவமானங்களின் பேரில் பிரியப்படுகிறது தாழ்ச்சியின் சாங்கோபாங்கத்தில் வந்து சேருவதற்கான நாலாம் படியாகும். அர்ச். பெர்நர்துஸ்





சொல்லுமாப்போலே, மெய்யான தாழ்ச்சியுள்ளவன் மற்றவர்கள் தன்னைத் தாழ்ச்சியுள்ளவனென்று எண்ணாமல் தாழ்மை நிந்தைக்குரியவனென்று எண்ண வேணுமென்று ஆசைப்பட்டுத் தனக்கு வந்த தாழ்மையினிமித்தம் சந்தோஷிப்பான். தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்திலுள்ள மேலான சாங்கோபாங்கமிதுவே. மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர் சொல்லுமாப்போலே, வெட்டிவேர் வெகு சிறிதாயிருந்தாலும், மிகவும் வாசனையாயிருக்கிறதினாலே, இஸ்பிரீத்துசாந்து இதைத் தாழ்ச்சிக்கு அடையாளமென்று சொல்லியிருக்கிறார். இதினாலல்லோ என் வெட்டிவேர் வாசனை வீசினதென்று தேவகானத்தில் சொல்லியிருக்கின்றது. ஏனென்றால் உன்னை நீயே மனதில் நிந்திக்கிறதுமல்லாமல் மற்றவர்களும் உன்னை நிந்திக்க வேணுமென்று ஆசைப்பட்டால், அப்போது உன் தாழ்ச்சி வெட்டிவேர் போலிருக்கும்; அதின் வாசனை எங்கும் வீசி எல்லாரையும் சந்தோஷப்படுத்தும்.

அர்ச். பெர்நர்துஸ் சொல்லுமாப்போலே, இரண்டுவித தாழ்ச்சியுண்டு. ஒன்று புத்தியிலிருக்கும்; இதினாலே மனுஷன் தன் நிர்ப்பாக்கியத்தையும் நீசத்தனத்தையும் சோதித்துப் பார்த்து அதை உள்ளபடி அறிந்துகொண்டு தன்னைத் தனக்குள் மெய்யாகவே பிறக்கணித்துத் தான் எவ்வித நிந்தைக்கும் பாத்திரவானென்று நிச்சயித்துக்கொள்ளுவான்: வேறொரு தாழ்ச்சி மனசிலே இருக்கும்; இதினாலேதான் சகலராலும் நிந்தையும் அவமானமும் படவேணுமென்று ஆசிப்பான். புத்தியிலுள்ள முதல் வகைத் தாழ்ச்சி இயேசுநாதரிடத்தில் இருக்கக்கூடாது; ஏனென்றால் தாம் சர்வேசுரனுக்குச் சரிசமானமாயிருக்கிறோமென்று அவர் மெய்யாகவே அறிந்திருந்ததினாலே, தம்மை நிந்திக்கவும் தாம் நிந்தைக்குரியவரென்று எண்ணிக்கொள்ளவும் அவராலே முடியாது; ஆனால் மனசிலும் இருதயத்திலுமுள்ள இரண்டாம் வகைத் தாழ்ச்சி அவரிடத்தில் இருந்தது. இதினாலல்லோ அடிமையின் வேஷங்கொண்டு தம்மை ஒன்றுமில்லாமையாக்கிக்கொண்டாரென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இன்னமும் மனிதர் பேரில் வைத்த சினேகத்தினாலே, தம்மைத் தாழ்த்தித் தாம் தாழ்மைக்குரியவரென்று அவர்களுக்குக் காணப்படச் சித்தமானார். இதினாலே நாம் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவரென்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்களென்றார். ஆனால் நாம் இவ்விருவகைத் தாழ்ச்சியையும் கொண்டிருக்க வேண்டும்; ஏனென்றால் நம்மிடத்திலே இரண்டாம் வகைத் தாழ்






ச்சியில்லாமல் முதல் வகைத் தாழ்ச்சி மாத்திரம் இருந்தால், இது பொய்யான கள்ளத் தாழ்ச்சிதானே. நம்மிடத்தில் உள்ளதை விட்டு மனிதர் வேறே விதமாய் நம்மை நினைக்க வேணுமென்று ஆசைப்படுகிறதைவிட அதிக அநியாயமும் பொய்யும் வேறே எங்கேயாகிலுமுண்டோ ? ஆகையால் மெய்யாகவே தாழ்ச்சியாயிருந்து தனக்குள்ளே தன்னைத் தாழ்த்தி நிந்திக்கிறவன் மற்றவர்களும் தன்னைத் தாழ்த்தி நிந்திக்க வேணுமென்று ஆசைப்பட வேண்டும்.

நமது திவ்விய இரட்சகர் தமது மாதிரிகையினாலே நமக்குப் போதித்த போதகமிதுவே. நமது பேரில் வைத்த சினேகத்தினாலே நிந்தை அவமானங்களை எவ்வளவு பிரியத்தோடும் ஆவலோடும் அநுபவித்தாரென்று பார். பரலோக பூலோகத்துக்கு ஏகாதி கர்த்தராகிய அவர் மனுஷனாகி அடிமை வேஷங்கொண்டு தம்மை அளவிறந்த விதமாய்த் தாழ்த்திக்கொண்டார்; பாவி வேஷங்கொண்டு பாவத்துக்கு அடிமைப்பட்ட சரீரத்தின் அடையாளமாகத் தோன்றினார். பாவம் சர்வேசுரனுக்கு ஒவ்வாத காரியமாயிருக்கிறதினாலே, அவர் அதைக் கைக்கொள்ளவில்லை; ஆனால் பாவியின் அடையாளத்தையும் சாடையையும் கைக்கொண்டார். இதினாலே பாவியைப்போலே விருத்தசேதனப்பட்டுப் பாவியைப்போலே பாவிகளுக்கும் புப்ளிக்கானருக்கும் நடுவே தீட்சை பெற்றுப் பரபாசென்னும் கொலைபாதகனோடு ஒரே வரிசையாக நிறுத்தப்பட்டு அவனைப்பார்க்கக் கெட்டவனென்றும் உயிரோடிருக்கப் பாத்திரமல்லவென்றும் அநீதத் தீர்வைக்குட்பட்டார். கடைசியாய் நமது பேரில் வைத்த சினேகத்தினிமித்தம் சகலவித நிந்தை அவமானங்களையும் பட வேணுமென்று மிகவும் ஆசைப்பட்டு நிருவாணமாய்ச் சகல மனுஷராலும் நிந்தைப்படுகிற நேரம் எப்போ வருமென்று காத்துக்கொண்டிருந்தார். இதினாலல்லோ நாம் இரத்த ஞானஸ்நானம் பெற வேண்டியது; அதைப் பெறுமட்டும் அதைப் பெற வேணுமென்கிற ஆசையினாலே எவ்வளவு வருத்தப்படுகிறோம்! உங்களோடு கூட இந்தப் பாஸ்கா போசனம் பண்ண வேணுமென்று உருக்கமான ஆசைப்பட்டுக்கொண்டிருந்தோமென்றார். ஆகையால் தாம் சகலவித நிந்தை அவமானமும் பட்டநுபவிக்கிற நேரம் எப்போ வருமென்று காத்துக்கொண்டிருந்தார். ஓர் அடிமையைப்போலே கன்னத்தில் அறைபட்டார்; தேவ தூஷணனைப்போலே அவருடைய முகத்திலே துப்பினார்கள்; பைத்தியகாரனைப்போலே அவருக்கு வெள்ளை உடுப்பும் பரியாச



ராசாவைப்போலே ஊதா உடுப்பும் உடுத்தினார்கள்; பெருங் கள்ளனைப்போலே கொடூரமாய் அவரைச் சாட்டையால் அடித்தார்கள்; இரண்டு கள்ளருக்கு நடுவே மகா அவமானத்துக்கும் வெட்கத்துக்குமுரிய விதமாய்ச் சிலுவையில் அறையுண்டு மரணமடைந்தார். நம்து ஆத்தும இரட்சகர் வெகு ஆவலோடு அபேட்சித்து அநுபவித்த் நிந்தை அவமானங்கள் இதுவே. இதினாலல்லோ என் இருதயம் அவமானத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் அபேட்சித்துக் காத்துக்கொண்டிருந்ததென்று தாவீதென்னுந் தீர்க்கதரிசி வாயாலே திருவுளம்பற்றினார். நிந்தை அவமானங்களை அவர் மிகுந்த ஆவலோடு அபேட்சித்திருந்ததினாலே, அது தமக்கு எல்லாத்திலும் பிரியமான காரியம்போலே அது வருமட்டும் எப்போ வருமென்று ஆசையோடு காத்துக்கொண்டிருந்தார். இதினாலல்லோ நமது பேரில் வைத்த சினேகத்தினாலே சகலவித நிந்தை அவமானமும் தூஷணமும்பட வேணுமென்று அவரிடத்திலே பொறுக்கக்கூடாத ஆசையாகிற பசியுந் தாகமும் உண்டாயிருந்ததென்று காட்டுகிறதற்காக அவர் நிந்தையால் திருத்திப்படுவாரொன்று எரேமியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். சகலவித சங்கைக்குமுரிய தேவசுதன் நமது பேரில் வைத்த சினேகத்தினாலே நிந்தை அவமானங்களை இவ்வளவு ஆவலோடு ஆசித்து இவ்வளவு சந்தோஷத்தோடு அநுபவித்திருக்கையிலே, அவருடைய சினேகத்துக்காக நீசரும் பாவிகளுமாகிய நாம் மற்றவர்கள் நம்மை நீசரென்றும் பாவிகளென்றும் எண்ணவும் நமக்கு வரவேண்டிய நிந்தை அவமானங்களைச் சந்தோஷமாய் அநுபவித்துக்கொள்ளவும் ஆசைப்படுகிறது பெரிய காரியமோ? அர்ச். சின்னப்பர் நடந்த நடக்கை இதுவே. இதினாலல்லோ இயேசுநாதருக்காக நான் படுகிற நிந்தை நெருக்கிடை துன்ப துரிதங்களுக்குள்ளே அகமகிழ்ந்து சந்தோஷிக்கிறேனென்றார். இன்னமும் அவர் சிறைச்சாலையில் இருக்கும்போது, இயேசுநாதருக்காக இந்த நிந்தைப் படுகிறோமென்று அவர் அநுபவித்த சந்தோஷத்தை மனசுக்குள்ளடக்கக்கூடாமல் நீங்களும் இந்தச் சந்தோஷத்துக்குப் பங்காளிகளாகிறது ஞாயமென்று பிலிப்பியருக்கு எழுதியனுப்பினார். உலக இரட்சகர் நிந்தை அவமானமாகிற இந்தப் பாலை அப்போஸ்தலருக்கு ஊட்டி வளர்த்ததினாலே, யூதர் அவர்களைப் பிடித்துக் கழிகளால் அடித்தபின், இயேசுநாதருடைய திருநாமத்துக்காக நாங்கள் நிந்தைப்படப் பாத்திரமானோமேயென்று அகமகிழ்ந்து அக்களித்துக்கொண்டு போனார்கள். அநேக வேதசாட்சிகள் இந்த மாதிரிகையைக் கண்டுபாவித்தார்கள்.





வேதசாட்சியான அர்ச். இஞ்ஞாசியாரை உரோம்புரியில் மிருகங்க
ளுக்கு இரையாகப் போடுவதற்குக் கூட்டிக்கொண்டு போகும்போது,
அவரைக் கூட்டிக்கொண்டு போகிறவர்கள் அவருக்குச் சகலவித நிந்
தை அவமானங்களையும் படுத்தினார்கள். இதைக் கண்டு அவர் சந்தோ
ஷித்து நான் இப்போது இயேசுநாதருக்குச் சீஷனாகத் துவக்குகிறே
னென்றார். கடைசியாய் நாம் இந்த மாதிரிகைகளைக் கண்டுபாவிக்க
வேணுமென்று நமது பிதாவாகிய அர்ச். இஞ்ஞாசியார் வெகு கண்டிப்
பான விதமாய் விசேஷித்து நமக்குப் போதித்திருக்கிறார். அதெப்படி
யென்றால், இயேசு சபையில் புதிதாய் பிரவேசிக்கிறவர்களும் முன்ன
மே பிரவேசித்திருக்கிறவர்களும் உலோகவாசிகள் பிரியப்பட்டுத் தே
டுகிற காரியங்கள் எல்லாத்தையும் அருவருத்துத் தள்ளி இயேசுநாதர்
பிரியப்பட்டு அநுபவித்ததெல்லாத்தையும் ஆவலோடு தேடி அநுபவி
க்கிறது ஞான சீவியத்துக்கு எவ்வளவு அவசரமும் பிரயோசனமுமெ
ன்று சர்வேசுரனுக்கு முன்பாகச் சாக்கிரதையாய் யோசித்துப் பார்க்
க வேண்டும். ஏனென்றால் உலோகவாசிகள் உலோக போதகத்தை
அநுசரிக்கிறதினாலே, உலோக மகிமையையும் பெருமையையும் கீர்த்
தியையும் ஆவலோடு தேடுவார்கள். அப்படியே உலோகத்தை வெறு
த்து இயேசுநாதரை மெய்யாகவே கண்டுபாவிக்கிறவர்கள் உலோக
போதகத்துக்கு விரோதமானதெல்லாத்தையும் ஆவலோடு அபேட்சி
த்து இயேசுநாதர் பேரிலுள்ள சிநேகத்தினாலே அவருடைய ஆடை
யைப் பிரியத்தோடு தரித்துக்கொள்ள வேண்டும். ஆகையால் எவ்வ
ளவாகிலும் இயேசுநாதருக்கு ஒத்தவர்களாகும் பொருட்டுத் தங்களுக்
குச் சகலவித இகழ்ச்சியும் நிந்தையும் பொய்ச் சாட்சியும் அவமானமு
ம் வரவேணுமென்று எப்போதும் ஆசைப்பட்டுக்கொண்டிருக்க வே
ண்டும்; ஆகிலும் இதினாலே தங்களுக்கும் புறத்தியாருக்கும் பாவம்
வராதபடிக்கும் தங்கள் குற்றத்தினாலே பாவத்துக்குத் தாங்கள் கார
ணமாயிராதபடிக்கும் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்றார். தாழ்ச்
சியின் பேரில் சொல்லக்கூடுமானதெல்லாம் இந்த ஒழுங்கில் அடங்கி
யிருக்கின்றது. உலோகவாசிகளுக்கு மகா இன்பமாயிருக்கிற கீர்த்தி
மகிமையை அருவருத்துத் தள்ளுகிறதே உலோகத்தை மெய்யாகவே
வெறுத்துவிட்டவர்களுக்கடுத்த நடக்கை. உலோகவாசிகள் மகிமை
யையும் புகழ்ச்சியையும் ஆசிக்கிறதுபோலே, நிந்தையையும் அவமான
த்தையும் ஆசிக்கிறவர்களே மெய்யான சந்நியாசிகள்; இவர்களே உ
லோகத்துக்குச் செத்துப்போனவர்களென்று சொல்ல வேண்டும். இ

யேசுநாதர் பட்ட நிந்தை அவமானங்களைத் தாங்களும் பட்டு இகழ்ச்சியையும் பிறக்கணிப்பையும் தேடி இயேசுநாதருக்காகச் சந்தோஷமாய் அதை அநுபவித்து அவருடைய ஆடையைத் தரித்துக்கொள்ளுகிறவர்களே மெய்யான இயேசு சபையாரென்றும் இயேசுநாதருடைய மெய்யான துணைவர்களென்றும் சொல்ல வேண்டும். ஆண்டவரே, சகலரும் உம்மைக் கெட்டவனென்று நினைத்திருந்தார்களே; உம்மைக் குற்றவாளியைப்போலே இரண்டு கள்ளருக்கு நடுவே ஸ்தாபித்தார்களே. இது இப்படியிருக்க, மனுஷர் என்னை நல்லவனென்று எண்ணுவதற்கு இடங் கொடாதேயும்; ஏனென்றால் எசமானைப் பார்க்க ஊழியனை மேலாயெண்ணுகிறதும், குருவைப் பார்க்கச் சிஷனைக் கனம்பண்ணுகிறதும் நியாயமல்ல. ஆனால் மனுஷர் உம்மை உபாதித்து நிந்தித்திருக்க, மனிதர் என்னையும் உபாதித்து நிந்திக்கக் கிருபை செய்தருளும்; அப்போதுதான் நான் எல்லாத்திலும் உம்மை மெய்யாகவே கண்டுபாவித்து உமக்கு மெய்யான சிஷனாகவும் துணைவனாகவும் இருப்பேன். இயேசுநாதர் மனிதருக்காக அவ்வளவு நிந்தை அவமானப்பட்டதினாலே, கிறீஸ்துவர்கள் அதை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கையிலே, அவர்கள் சங்கை மகிமைப்பட வேணுமென்று ஆசிக்கிறது அயோக்கியமான புத்திக்கேடென்று அர்ச். சவேரியார் எண்ணியிருந்தார்.

---

## ௰௬-ம் அதிகாரம்.

—(o)—

புண்ணிய முயற்சியைப் பிரியத்தோடு செய்கிறது தாழ்ச்சி முதலிய சகல புண்ணியத்துக்கும் அடுத்த சாங்கோபாங்கமென்றும் புண்ணிய முயற்சியை நிலைபெறச் செய்கிறது எவ்வளவு அவசரமென்றுஞ் சொல்லுவது.

—o—

புண்ணிய முயற்சியைப் பிரியத்தோடு செய்கிறது புண்ணிய சாங்கோபாங்கமென்று ஞான சாஸ்திரிகள் எல்லாரும் நிரூபித்தார்கள். இதினாலே யாதொரு புண்ணியக் கிரிகையைத் துரிதமாயும் எளிதாயும் பிரியமாயும் செய்கிறவர்கள் அந்தப் புண்ணியத்தில் அப்பியாசப்பட்

டிருக்கிறார்களென்று அடையாளமாகுமென்றார்கள். யாதொரு கல்வி
சாஸ்திரத்தில் அப்பியாசப்பட்டுத் தேர்ந்திருக்கிறவன் அந்தக் கல்வி
சாஸ்திரத்தை ஆச்சரியமான துரிதத்தோடு எளிதாய்ச் செய்துகொ
ண்டுவருவான். தேவாத்தியத்திலே உத்தமமாய்த் தேர்ந்து வெகு நே
ற்றியாய்க் கின்னாரங் கொட்டுகிறவன் அதைக் கொட்டுகிறதெப்படி
யென்று யோசித்து ஆபத்தம்பண்ண அவசரமில்லை ; அது அவனுக்கு
வெகு எளிதாயிருப்பதினாலே, வேறே காரியத்தை நினைத்துக்கொண்டு
முதலாய் வெகு நேற்றியாய்க் கின்னாரங் கொட்டுவான். புண்ணியத்
திலே அப்பியாசப்பட்டவர்களும் இப்படி நடப்பார்கள்; வருத்தமில்
லாமல் புண்ணிய முயற்சியைச் செய்வார்கள். ஆகையால் தாழ்ச்சியி
லே நீ அப்பியாசப்பட்டிருக்கிறாயோவென்று அறியவேணுமோ ? இ
ந்த அறிய வேணுமானால், மூந்த மூந்தத் தாழ்மையான கிரிகைகளைத்
துரிதமாயும் எளிதாயும் செய்கிறாயோவென்று பார் ; ஏனென்றால் தா
ழ்மையான காரியங்களைச் செய்கிறதற்குச் சமயம் வரும்போது, அதை
ச் செய்ய வருத்தமும் அருவருப்பும் உன் மனதில் பிறந்தால், தாழ்ச்சி
யென்னும் புண்ணியத்திலே நீ இன்னம் முழுதும் அப்பியாசப்படவி
ல்லையென்று அடையாளமாகும். தாழ்மை அவமானங்களை அநுபவிக்
கிறதற்கு யோசனையும் ஆபத்தமும் உனக்கு அவசரமாயிருந்தால், இ
ந்தப் புண்ணியத்தின் சாங்கோபாங்கத்தை அடைவதற்கு இந்த யோ
சனையும் ஆயத்தமும் மெய்யாகவே நல்ல வழிபாடுதான் ; ஆகிலும் நீ
இன்னம் இந்தப் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையவில்லையென்
று இது அடையாளமாகும். யாதொருவன் கின்னாரங் கொட்டுவதற்
குமுன் ஒரு விரலை எங்கே வைக்க வேணும், வேறொரு விரலை எங்கே
வைக்க வேணும், எந்த நரம்பைத் தொட வேணுமென்று நினைத்தால்,
இது கின்னாரம் நன்றாய்க் கொட்டுகிறதற்கு நல்ல வழிபாடுதான்; ஆ
னால் அதைக் கொட்டுகிறதற்கு இவனிடத்திலே இன்னம் அப்பியாச
ம் உண்டாகவில்லையென்று இதினாலே வெளிப்படும் ; ஏனென்றால் அ
ந்த அப்பியாசப்பட்டவன் இப்படி யோசியாமல் நன்றாய்க் கொட்டு
வான். ஆகையால் அரிஸ்தோத்லேசென்னும் சாஸ்திரி சொல்லுமாப்
போலே, யாதொரு கல்வியை உத்தமமாய்க் கற்றறிந்தவனுக்கு அதை
ச் செய்கிறது மகா எளிதாயிருப்பதினாலே, அதைச் செய்கிறது எப்ப
டியென்று யோசியாமல் செய்து முடிப்பான். யாதொருவன் ஒரு கா
ரியத்தை யோசித்துச்செய்யும்போது, அதிலே அவனுக்கு அப்பியாசம்
உண்டோ இல்லையோவென்று தெரியாது ; ஒன்றும் நினையாமல் யா






தொரு காரியத்தை நன்றாய்ச் செய்தால் மாத்திரம், அதிலே அவனுக்கு அப்பியாசம் உண்டென்று தெரியவரும் ; ஏனென்றால் நாம் நினையாத காரியம் திடீரென்று நேரிட்டால், நம்மிடத்திலுள்ள அப்பியாசம்போலே நாம் அப்போது நடப்போமென்பது நிச்சயம்.

யாதொருவன் ஒரு புண்ணியத்தைச் சாங்கோபாங்கமாய் அடைந்து அதிலே அப்பியாசப்பட்டிருக்கிறானோ இல்லையோவென்று அறிவதற்கு புலுத்தார்க்கென்னும் சாஸ்திரி பனிரண்டு அடையாளம் குறித்து வைத்திருக்கிறான். அதில் ஒரு அடையாளம் கனவாகும் : கனவிலே முதலாய் நல்ல நினைவும் புண்ணியத்துக்கடுத்த பற்றுதலுமாத்திரம் உருபிகரத்திலே தோன்றினால், அல்லது தகாத நினைவு கனவிலே வந்தாலும், தூங்கும்போது முதலாய் நீ அதினிமித்தம் கஸ்திப்பட்டு விழித்திருக்கிறவனைப்போலே, அதைத் தள்ளப் பிரயாசப்பட்டால், அப்போது புண்ணியம் உன் ஆத்துமத்திலே ஆழமாய் வேரூன்றியிருக்கிறதென்று அடையாளமாகும் ; ஏனென்றால் அச்சமயத்தில் உன் மனசுமல்லாமல் உருபிகரமும் உள்ளிந்திரியமும் நீதி ஞாயத்துக்குக் கீழ்ப்பட்டிருக்கிறதென்று இதினாலே தெரியவரும். யாதோர் வேலை செய்வதற்கு மாட்டை நன்றாய் அப்பியாசப்படுத்தியிருந்தால், அதை ஓட்டுகிறவன் மூக்குக் கயிற்றைப் பிடியாதிருந்தாலும், தூங்கினாலும், அது தன்னாலே அந்த வேலையைச் செய்துகொண்டிருக்கும். இவ்வண்ணமே யாதோர் புண்ணியந்தை உத்தமமாய் அடைந்து உள்ளிந்திரியங்களை நீதி ஞாயத்துக்கு நன்றாய்க் கீழ்ப்படுத்தியிருந்தால், தூக்கத்தினாலே உன் புத்தி சோர்ந்து கிடந்தாலும், உன் உள்ளிந்திரியம் எப்போதும் அதுக்குக் கீழ்ப்பட்டிருக்கும். அர்ச். அகுஸ்தீன் போதித்திருக்கிற போதகம் இதுவே. இதினாலல்லோ கர்த்தாவே, உமது கற்பனைகளின் பேரில் நாங்கள் வைத்திருக்கிற கவனம் எங்கள் இருதயத்தில் ஆழமாய்ப் பதிந்திருக்கிறதினாலே, கனவிலே முதலாய்ச் சோதனையைச் செயிக்கிறோமென்றார். சிலரிடத்திலே தேவகற்பனையின் பேரில் அணைகடந்த பற்றுதலும் புண்ணியத்தின் பேரில் மட்டில்லாத ஆவலும் துர்க்குணத்தின் பேரில் சொல்லக்கூடாத அருவருப்பும் உண்டாயிருந்து அவர்கள் விழித்திருக்கும்போது, சோதனையைச் செயிக்க உத்தமமாய்ப் பழகியிருக்கிறதினாலே, தூங்கும்போது முதலாய்ச் சோதனையைச் செயித்துத் தள்ளுவார்கள். அர்ச். சவேரியார் ஓர் இராத்திரி தூங்கும்போது, கனவிலே வந்த கற்புக்கு விரோதமான ஓர் நினைவைத்

தள்ளுகிறதற்காக அவர் பட்ட கண்டிப்பான பிரயாசத்தினாலே வாயிலிருந்து திரளான இரத்தம் கக்கினாரென்று அவர் சரித்திரத்தில் எழுதியிருக்கிறதறிவோம். நாம் விழித்திருந்தாலும், தூங்கினாலும், சர்வேசுரனோடு எப்போதும் சீவிக்கக் கடவோமென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினார். சிலர் சொல்லுமாப்போலே, இதிலே நாம் விழித்திருந்தாலும், தூங்கினாலுமென்பதற்கு நாம் உயிரோடிருந்தாலும் செத்தாலுமென்று அர்த்தமாகும்; ஆனால் வேறு சிலர் சொல்லுமாப்போலே, தேவ ஊழியத்திலே வெகு உருக்கமாய் நடக்கிறவர்கள் விழித்திருக்கும்போதும் நித்திரை செய்யும்போதும் எப்போதும் இயேசுநாதரை விட்டுப் பிரியாமல் ஞான சீவியம் சீவிக்க வேணுமென்று இதற்கு அர்த்தமாகுமென்றார்கள்.

யாதோர் புண்ணியக் கிரிகையை நாம் பிரியத்தோடும் சந்தோஷத்தோடும் செய்தால், நாம் அந்தப் புண்ணியத்தை உத்தமமாய் அடைந்திருக்கிறோமென்று இது அடையாளமாகும்; இதுவே முக்கியமான மூன்றும் அடையாளம்; இதுவே புண்ணிய சாங்கோபாங்கம். ஆகையால் நீ தாழ்ச்சியின் சாங்கோபாங்கத்தை அடைந்திருக்கிறாயோ இல்லையோவென்று அறியவேணுமோ? முந்தின அதிகாரத்தில் நாம் எடுத்துக் காட்டின ஒழுங்கை சோதித்துப் பார். உலோக வாசிகள் தங்களுக்கு மகிமையும் புகழ்ச்சியும் வரும்போது, அகமகிழ்ந்து சந்தோஷப்படுகிறாப்போலே, உனக்கு இகழ்ச்சியும் அவமானமும் வரும்போது, அகமகிழ்ந்து சந்தோஷப்படுகிறாயோவென்று பார். இன்னமும் இது காரியத்திலே அறியவேண்டியதாவது: இப்படி நீ சந்தோஷப்படாவிட்டால், இந்தப் புண்ணியத்திலே நீ சாங்கோபாங்கத்தை அடையாததுமன்றி அதிலே நிலைத்திருக்கவுமாட்டாய்; ஏனென்றால் பிரியத்தோடும் சந்தோஷத்தோடும் செய்யாத காரியத்தை நிலைபெறச் செய்துகொண்டுவருகிறது கூடாத காரியமாகும். இதினாலேதான் நாம் சந்தோஷத்தோடு செய்யாத காரியம் நிலைத்திருக்கமாட்டாதென்கிற போதகத்தை மறுக்கப்படாத சத்தியமாகப் பூர்வீக வனவாசிகள் நிரூபித்தார்களென்று அர்ச். தொரோத்தேயர் சொல்லியிருக்கிறார். நீ கொஞ்சகாலம் வரைக்கும் மௌனங் காத்து வெகு உள்ளடக்கமாய் நடந்துவருவாயாக்கும்; ஆனால் இந்தப் பழக்கம் உன் இருதயத்தில் ஆழமாய்ப் பதிந்து இதிலே முழுதும் அப்பியாசப்பட்டு இது உனக்குச் சுபாவமான நடக்கைபோலாகி இதிலே நீ சந்தோஷமும் பிரியமும் படாவிட்





டால், இந்தப் புண்ணியத்திலே நிலைபெறுமல் போவாயென்று பயப்படுகிறதற்கு இடமுண்டு; ஏனென்றால் நாம் கட்டாயமாய்ச் செய்கிற காரியம் ஒன்றும் நிலைநிற்க மாட்டாது. ஆகையால் புண்ணியம் நமது இருதயத்துக்குள்ளே ஆழமாய் இறங்கி ஸ்திரமாய் வேரூன்றி அது நமக்குச் சுபாவமான காரியம்போலேயும் நமது சுபாவப் பற்றுதலுக்கு ஒத்ததுபோலேயும் அந்தப் புண்ணியக் கிரிகைகளைப் பிரியத்தோடும் சந்தோஷத்தோடும் செய்துகொண்டு வருகிற வரைக்கும் அந்தப் புண்ணிய முயற்சியிலே பழகுகிறது மிகவும் முக்கியமான காரியம். இப்படிப் பழகினால், அந்தப் புண்ணியத்திலே நாம் நிலைக்கொள்ளுகிறது ஏறக்குறைய நிச்சயமென்று சொல்லலாம். கர்த்தருடைய கற்பனையில் முழு மனசு அல்லது முழுப் பிரியம் வைக்கிறவன் பாக்கியவான்; அவன் நீரோட்டத்தின் அருகாண்மையில் நட்டிருக்கிற விருக்ஷம்போலே தகுந்த காலத்தில் புண்ணியமும் நீதியுமாகிற கனி கொடுப்பானென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது.

---

## ௰௭-ம் அதிகாரம்.

### தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில் நாம் வந்து சேருகிறதற்கான சாங்கோபாங்கம் இன்னதென்று விசேஷித்து விளக்கிக் காட்டுவது.

——(0)——

இது காரியத்தில் நாம் மேற்சொன்ன புத்தியைத் தவிர இன்னம் ஒரு புத்தியை அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், ஆங்காரிகள் உலோக மகிமையை மிகவுங் கனமாய் எண்ணியிருக்கிறதினாலே, அதை அடைவதற்காகத் தங்கள் பேரில் அநேகம் பொய்யான புகழ்ச்சிகளைச் சொல்லுவார்கள்; நாங்கள் வம்சபதிகள், ஆஸ்திபந்தர், கெட்டிக்காரரென்று தங்களைப் பாராட்டுவார்கள். அப்படியே உத்தம தாழ்ச்சியுள்ளவர்கள் நிந்தை அவமானத்தின் பேரில் தங்களிடத்திலுள்ள அணைகடந்த ஆவலினாலே சில சமயங்களில் தங்களுக்கு அவமானத்தை வருவித்துக்கொள்ளுவதற்காகத் தங்களிடத்தில் இல்லாத குற்றங் குறைகளை உண்டென்று மற்றவர்கள் நினைப்பதற்கான வழிபாடெல்லாம் செய்துகொள்ளுவார்கள். இப்படியே வ

னவாசியான சிமேயோனென்பவருடைய அர்ச்சியசிஷ்டத்தனத்தின் கீர்த்தியை அந்த நாட்டை ஆளும் அதிபதி கேள்விப்பட்டு அவரைப் பார்க்கப் போக வேணுமென்று கருத்துக்கொண்டான். சிமேயோனென்பவர் இதை அறிந்து தமது அறையின் கதவில் உட்கார்ந்துகொண்டு உரொட்டியையும் பால்க்கட்டியையும் எடுத்துப் பைத்தியகாரன் முகச்சாடையாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். அந்த அதிகாரி அவரைக் கண்டு நிந்தித்துக்கொண்டு போனான். அவரோவென்றால் தாம் ஆசித்துத் தேடின நிந்தை தமக்குக் கிடைத்ததினாலே, வெகு சந்தோஷப்பட்டார். இதற்கொத்த வேறே அநேக வர்த்தமானங்களுமுண்டு. இப்படியே அர்ச். பிராஞ்சீஸ்கு மனிதர் தம்மைக் கனம்பண்ணி மகிமைப்படுத்த எத்தனித்திருக்கிறார்களென்றறிந்து காலாலே சேற்றை மிதித்துக்கொண்டிருந்தார். யூனிப்பேரென்பவர் மனுஷர் தம்மைத் தாழ்மையாய் எண்ணும்படியாகச்சிறுபிள்ளைகளோடு ஊஞ்சலாடிக்கொண்டிருந்தார்.

சகல நன்மையின் பொக்கிஷமாகிய இயேசுநாதரை உலகம் நிந்தித்ததென்றும் மெய்யான பிரகாசமாகிய தேவ சுதனைக் குருட்டாட்டத்தினாலே உலகம் அறிந்துகொள்ளாமலும் சங்கை செய்யாமலும் போனதென்றும் இந்தப் பெரிய அர்ச்சியசிஷ்டவர்கள் மேற்சொன்ன சமயங்களில் யோசித்து உலகத்தின் பேரில் வெகு அருவருப்புக் கொண்டு, உலோகம் மதிக்கிறதெல்லாத்தையும் அவர்கள் வெகுவாய் நிந்தித்து உலோகம் நிந்திக்கிறதெல்லாத்தையும் அவர்கள் வெகுவாய் மதித்துக் கொண்டு வந்தார்கள். இதினாலே உலோக மகிமையை வெகு எச்சரிக்கையாய் விலக்கி இயேசுநாதருக்காக அவரோடு நிந்தைப்படுகிறது இயேசுநாதர் தங்கள் பேரில் வைத்த அளவிறந்த சிநேகத்துக்கு அடையாளமென்று எண்ணியிருந்தார்கள். இதினிமித்தமாக உலோக நிந்தை அவமானங்களின் பேரில் அவர்கள் கன பிரியங்கொண்டு அதைத் தங்களுக்கு வருவித்துக்கொள்ளுவதற்காக நானாவிதப் பிரயாசப்பட்டுக் கொண்டு வந்தார்கள். இது காரியத்தில் அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லுகிறதாவது: இவ்விஷயத்தில் அர்ச்சியசிஷ்டவர்கள் செய்தது இஸ்பிரீத்துசாந்துவின் ஏவலினாலே செய்துகொண்டு வந்தார்கள்; ஆகையால் இவர்கள் பேரில் நாம் ஆச்சரியப்பட வேண்டியதேயல்லாமல் விசேஷ தேவ ஏவுதலில்லாமல் இவர்களைக் கண்டு பாவிக்கத் துணியப்படாதென்பது மெய்தான்; ஆனால் இவர்களுடைய பரிசுத்த பைத்தி





யத்தை நாம் கண்டுபாவியாதேபோனாலும், தங்களைத் தாழ்த்துகிறதற்கு அவர்களிடத்தில் உண்டாயிருந்த அணைகடந்த பற்றுதலையும் மனுஷராலே நிந்தனைப்படுகிறதற்கு அவர்களிடத்தில் விளங்கின உருக்கமான ஆவலையும் நாம் கண்டுபாவிக்கப் பிரயாசப்பட வேணுமென்றார்.

அர்ச். தியாதோக்கென்பவர் இன்னம் இது காரியத்தில் சொல்லுகிறதாவது : இரண்டுவித தாழ்ச்சியுண்டு. அதின் முதலாவது, புண்ணியத்தில் நடுத்தரமானவர்களுடைய தாழ்ச்சியாகும். இவர்கள் தாழ்ச்சியில் கொஞ்சம் வர்த்தித்திருந்தாலும், ஆங்காரமான சோதனை இவர்களுக்கு வருகிறதினாலே, இவர்கள் அத்தோடு யுத்தம்பண்ணித் தேவ கிருபையினாலே தங்களைத் தாழ்த்தி ஆங்காரத்தைச் செயிக்கப் பிரயாசப்படுவார்கள். இரண்டாம் வகைத் தாழ்ச்சி புண்ணியசாங்கோபாங்கருடைய தாழ்ச்சியாகும். இவுர்களுக்குச் சர்வேசுரன் ஏராளமான ஞான வெளிச்சத்தைக் கொடுத்திருக்கிறதினாலே, இவர்கள் தங்களை நன்றாய் அறிந்துகொண்டு இவர்களிடத்தில் ஆங்காரத்துக்கும் வீண் சிலாக்கியத்துக்கும் அடுத்த ஒரு சோதனையும் வரக்கூடாதென்று தோன்றும். இந்த அந்தஸ்தில் உள்ளவர்களுக்குத் தாழ்ச்சி சுபாவ குணம் போலே இருக்கும். ஆகையால் இவர்கள் எவ்வளவு நற்கிரிகைகளைச் செய்தாலும், எப்போதும் தங்கள் பேரில் தாழ்மையான எண்ணங்கொண்டு சகலரையும்விடத் தாங்கள் தாழ்ந்தவர்களென்று எப்போதும் எண்ணியிருப்பார்கள். இவ்வகைத் தாழ்ச்சியுள்ளவர்களுக்கும் முதல் வகை நடுத்தரமான தாழ்ச்சியுள்ளவர்களுக்குமுள்ள வித்தியாசமேதென்றால், நடுத்தரமான தாழ்ச்சியுள்ளவர்கள் தங்கள் பேரில் இன்னம் முழுச் செயங்கொள்ளவில்லை; இன்னம் அவர்களிடத்தில் ஆங்காரமாகிற சோதனை வந்து அவர்களை வருத்தப்படுத்துகிறது வழக்கம் ; அவர்களுக்கு வருகிற தாழ்மை அவமானங்களை அவர்கள் பொறுமையோடு சகித்துக்கொண்டாலும், அதுகளை இன்னம் சந்தோஷமாய் அநுபவிக்கிறதில்லை ; ஏனென்றால் அவர்களுடைய ஆசாபாசம் முழுதும் தோர்வைப்படாததினாலே, அது இன்னம் எப்போதும் அவர்கள் உள்ளத்திலே சண்டை செய்துகொண்டிருக்கும். ஆனால் சாங்கோபாங்கருடைய தாழ்ச்சியிலே வருத்தமில்லாதிருக்கிறதுமல்லாமல் சந்தோஷம் நிறைந்திருக்கும் ; ஏனென்றால் அவர்களுடைய ஆசாபாசம் முழுதும் தோர்வைப்பட்டு அடங்கியிருந்து ஒரு விரோதமும் செய்வதற்கு இடமில்லாததினாலே, அவர்கள் சர்வேசுரன் சமுகத்தில் தங்களைப் பிரிய






த்தோடு தாழ்த்தித் தங்களுக்கு வருகிற நிந்தை அவமானங்களில் மதுர
த்தைக் கண்டுபிடிப்பார்கள். ஆகையால் மேற்சொன்ன அர்ச்சியசிஷ்
டவர்கள் சொல்லுமாப்போலே, முதல் வகைத் தாழ்ச்சியுள்ளவர்கள்
தங்களுக்குக் காரியம் கைகூடிவரும்போதும் கைகூடிவராதபோதும்
இவ்வுலோகத்தில் நேரிடுகிற பற்பல விஷயங்களிலும் எளிதாய் மனக்
கலக்கத்துக்கு இடங் கொடுப்பார்கள். இரண்டாம் வகைத் தாழ்ச்சியு
ள்ளவர்கள் துன்பத்தில் மனத் திடாரிக்கம் அற்றுப்போகாமலும் இன்
பத்தில் ஆங்காரியாமலும் எப்போதும் ஒருகண்ட சீராயிருந்து இவ்வு
லோகத்தில் சம்பவிக்கிற சகல வர்த்தமானங்களுக்கும் மேற்பட்டவர்
களைப்போலே, உத்தம மனசமாதானத்தையும் உத்தம அமரிக்கை
யையும் சுகித்தநுபவிப்பார்கள். நிந்தைப்பட வேணுமென்று ஆசைப்ப
டுகிறவனுக்குக் கஸ்தி வருத்தம் ஒன்றுமில்லை; ஏனென்றால் கஸ்தியை
வருவிக்கக்கூடுமான நிந்தைதானே அவனுக்குச் சந்தோஷத்தை வருவி
க்கக்கொள்ள, அவனுக்குக் கஸ்தியை வருவிக்கக்கூடுமான காரியம் இந்
த உலகத்திலே என்ன உண்டு? மனுஷர் மனங் கலங்குகிறதற்கு ஏது
வான காரியமே அவனுக்கு மன அமரிக்கையை வருவிக்கக்கொள்ள, அ
வனுடைய மன அமரிக்கையை நீக்க யாராலே முடியும்? அர்ச். கிறி
சோஸ்தொமுஸ் சொல்லுமாப்போலே, இந்த அந்தஸ்திலிருக்கிறவன்
இவ்வுலோகத்தைத் தானே தனக்குப் பரகதியாக்கிக்கொண்டான்; ஏ
னென்றால் சகல புசலையும் விட்டகன்று துறைமுகத்தில் இருக்கிறது
போலே இவனுடைய ஆத்துமம் அமரிக்கையாயிருக்கிறதினாலே, இவ
ன் பாக்கியவான்; எப்போதும் மன சமாதானத்தைச் சுகித்தநுபவிப்
பான்.

தாழ்ச்சியின் இந்த மேலான அந்தஸ்தில் வந்து சேருவதற்கு நா
ம் பிரயாசப்பட வேண்டும். ஏனென்றால் அர்ச். அகுஸ்தீன் சொல்லு
மாப்போலே, நமக்கு மாத்திரம் மனசுண்டானால், தேவ கிருபையினா
லே அர்ச்சியசிஷ்டவர்களையுமல்லாமல் அர்ச்சியசிஷ்டவர்களுக்கு அர்
ச்சியசிஷ்டவராகிய சர்வேசுரனையும் கண்டுபாவிக்க நம்மாலே கூடும்.
இதினாலல்லோ நாம் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவனென்று
நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்களென்றார். நாம் அவர் அடியைப் பின்
செல்லுவதற்காக, நமக்கு மாதிரிகை காண்பித்து நமக்காகப் பாடு பட்
டாரென்று அர்ச். இராயப்பர் வசனித்தார். அர்ச். எரோணிமுஸ் சொ
ல்லுமாப்போலே, உலக இரட்சகர் சுவிசேஷத்தில் கண்டிருக்கிற வா

லிபனை நோக்கி நீ உத்தமனாக மனசிருந்தாலென்று சொன்னதினாலே, உத்தமராகிறது நம்மாலாகும் கருமமென்று தெளிவாய்க் காட்டியருளினார்; ஏனென்றால் என் பலவீனத்தினிமித்தம் புண்ணிய சாங்கோபாங்கத்தை அடைய என்னாலே முடியாதென்று நீ போக்குச் சொன்னால், உன்னைவிட உன் உள்ளத்தை அறிந்திருக்கிற இயேசுநாதர் உனக்கு மனசுண்டானால், உத்தமனாகலாமென்று சொல்லுவாரோ? ஆகிலும் உனக்கு மனசுண்டானால், நீ புண்ணிய சாங்கோபாங்கத்தை அடையலாமென்று அவரே சொல்லியிருக்கிறார்; ஏனென்றால் நமக்கு உதவி செய்ய அவர் எப்போதும் தயாராயிருக்கிறார்; நமக்கு மனசுண்டானால், அவருடைய ஒத்தாசையைக் கொண்டு எல்லாம் நம்மாலே கூடும். மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர் சொல்லுமாப்போலே, பூமியிலே நட்டு வானத்தில் சாத்தியிருந்த ஓர் ஏணியை யாக்கோபென்பவர் காட்சியில் கண்டார்; அதிலே சம்மனசுகள் ஏறுகிறதும் இறங்குகிறதுமாயிருந்தார்கள்; அதில் ஏறுகிறவர்களுக்குத் தைரியத்தை மூட்டிக் கைகொடுத்துத் தூக்குவதற்காகச் சர்வேசுரன் அந்த ஏணியின் நுனியிலே உட்கார்ந்திருந்தார். ஆகையால் நீயும் இந்த ஏணியில் ஏறு; நாம் மேற்சொன்ன படிபடியாய்த் தாழ்ச்சியின் மேலான அந்தஸ்தில் ஏறுவதற்குப் பிரயாசப்படு; நீ நுனிவரைக்கும் ஏறுவதற்குச் சர்வேசுரன் உனக்குக் கைகொடுப்பார். வழிப்போக்கன் மிகவும் உயர்ந்த மேட்டைத் தூரத்திலிருந்து பார்த்தால், அதிலே ஏறக்கூடாதென்று நினைப்பான்; ஆனால் கிட்டத்தில் வந்து அதிலே ஏறுகிறதற்கு எல்லாரும் நடக்கிற பாதை உண்டென்று கண்டால், தானும் அதின்மேலே ஏறலாமென்று அறிந்துகொள்ளுவான்.

———o0ooo———

## ௰௮-ம் அதிகாரம்.

தாழ்ச்சியின் இரண்டாம் அந்தஸ்தில் வந்து சேருவதற்கான சில வழிபாடுகளின்பேரிலும் விசேஷமாய் இயேசுநாதருடைய மாதிரிகையின் பேரிலும்.

ஓர் புண்ணியத்தை அடைவதற்கு இரண்டு வழிபாடுண்டென்று சொல்லுகிறது வழக்கம். முந்தின வழிபாடு புத்திக்கடுத்தது; இரண்டாம் வழிபாடு புண்ணியக் கிரிகைக்கடுத்தது. முந்தமுந்த முந்தி

ன வழிபாட்டைக் குறித்துப் பேசக் கடவோம். இயேசுநாதருடைய
மாதிரிகையை உற்றுத் தியானிக்கிறது நாம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்
கு உதவியான பிரதான வழிபாடாகும். உலக இரட்சகருடைய ஆயுசு
காலமெல்லாம் அவர் பிறந்த நாள்த் துவக்கிச் சாகிறபரியந்தம் தாழ்ச்
சிக்கு உத்தமமான மாதிரிகையாயிருந்தது ; ஆனால் அவர் நமக்குக் கா
ண்பித்த தாழ்ச்சியின் சகல மாதிரிகைகளுக்குள்ளே அவர் பாடுபடுவ
தற்கு முந்தின நாள் அப்போஸ்தலருக்குக் கால் கழுவினாரே ; இதை
அர்ச். அகுஸ்தீன் விசேஷமாய் உற்று விசாரித்துச் சொல்லுகிறதாவ
து : அவர் தமது ஆயுசுகாலமெல்லாம் மனுஷரெல்லாருக்கும் தாழ்ந்த
வராகவும் மனுஷருக்கு அவமானமாகவும் நீசச் சனங்களுக்கு நிந்தை
யாகவும் தோன்றித் தாழ்ச்சியின் மாதிரிகையை நமக்குக் காண்பித்தா
ர். இதுவும் போதாமல் தாம் இவ்வுலோகத்திலிருந்து தமது பிதாவி
னிடத்தில் போகவேண்டிய காலம் வந்ததென்றறிந்து உலகத்திலிருந்
த மனுஷரைச் சிநேகித்திருந்தாலும், கடைசிபரியந்தம் அவர்களைச் சி
னேகித்து அதற்கு ஒரு அடையாளம் காண்பிக்கச் சித்தமானார். இதி
னாலே இராப்போசன முடிந்தபின், அவர் மேசையிலிருந்து எழுந்து
தமது வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டு ஒரு துண்டைத் தமது இடை
யில் கட்டிக்கொண்டு ஒரு தட்டில் தண்ணீர் வார்த்துத் தமது சீஷா
க்களுக்குக் கால் கழுவி இடையில் கட்டியிருந்த துண்டைக் கொண்டு
அதைத் துடைக்கத் துவக்கினாரென்று சுவிசேஷத்தில் சொல்லியிருக்
கின்றது. ஓ! ஆச்சரியமான தாழ்ச்சியே! ஓ! அந்த பரம இரகசிய
மே! அப்போஸ்தலர் அப்போது இந்தப் பரம இரகசியத்தைக் கண்டு
பிடிக்கவில்லை. இதினாலே அர்ச். இராயப்பர் இயேசுநாதரை நோக்கிச்
சுவாமி, தேவரீரோ என் காலைக் கழுவுகிறதென்றார். அப்போது உல
க இரட்சகர் அவரைப் பார்த்து நாம் செய்கிறது இப்போது உனக்குத்
தெரியாது, பின்னாலே அறிந்துகொள்ளுவாயென்றார். அதின்பின் தா
ம் இருந்த இடத்திற்குப் போய் இந்தப் பரம இரகசியத்தை அவர்களுக்
குத் தெளிவித்துக் காட்டுவதற்காகச் சொன்னதாவது : நீங்கள் நம்
மை எசமானென்றும் ஆண்டவனென்றும் கூப்பிடுகிறீர்களே; இது சரி
தான் ; ஏனென்றால் நாம் உங்களுக்கு எசமான்தான். ஆகையால் உங்
களுக்கு ஆண்டவரும் எசமானுமாகிய நாம் உங்கள் காலைக் கழுவியிரு
க்க, நீங்கள் ஒருவரொருவருடைய காலைக் கழுவ வேண்டும் ; ஏனென்
றால் நாம் செய்ததுபோலே, நீங்களும் செய்ய உங்களுக்கு மாதிரிகை
காட்டினோமென்றார். அவர் தம்மைத் தாழ்த்தினதுபோலே, நாமும்

நம்மைத் தாழ்த்த வேணுமென்று 'இந்தப் பரம இரகசியத்தைக் கொண்டு நமக்குக் கற்றுக் கொடுக்கச் சித்தமானார். தாழ்ச்சி மிகவும் மேலான புண்ணியம், இது மகா வருத்தமுள்ள முயற்சியென்பதற்குச் சந்தேகமில்லை; ஏனென்றால் இயேசுநாதர் இந்தப் புண்ணியத்தில் காண்பித்த அத்தனை மாதிரிகைகளும் இன்னம் கொஞ்சத்துக்குள்ளே காட்டப்போகிற அத்தனை மாதிரிகைகளும் போதாதென்று நமது பலவீனத்தையும் நம்மிடத்தில் ஆட்கொண்டிருக்கிற ஆங்காரத்தின் அகந்தையையும் நன்றாய் அறிந்திருந்ததினாலே, அதுக்கான ஔஷதம் கொடுப்பதற்காக வெகு தாழ்ச்சி முயற்சிகளைச் செய்து தாழ்ச்சியை நமது இருதயத்தில் ஸ்திரமாய்ப் பதிப்பிப்பதற்காகத் தமது ஆயுசு காலத்தின் கடைசியிலே மரண சாதனமாக இந்தப் புண்ணியத்தின் மாதிரிகையைக் காட்டியருளினார்.

நாம் சாது குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவராயிருக்கிறோமென்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்களென்று இரட்சகர் திருவுளம்பற்றினார். அர்ச். அகுஸ்தீன் இவ்வாக்கியத்தின் பேரில் வியாக்கியானம் பண்ணிப் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது: ஓ! ஆச்சரியமான போதகமே! ஆங்காரமாகிற நஞ்சு நிறைந்த பாத்திரத்தில் மரணத்தைச் சாப்பட்ட மனுஷர்களுக்கு எசமானும் ஆண்டவருமாகிய இயேசுவே, நாங்கள் உம்மிடத்தில் என்னத்தைக் கற்றுக்கொள்ள வேணுமென்று சித்தமாயிருக்கிறீர்? நாம் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவராயிருக்கிறோமென்று நீங்கள் நம்மிடத்தில் கற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறோமென்கிறார். என்ன! ஆண்டவரே, தேவ ஞான சாஸ்திரத்தின் திரவியப் பொக்கிஷமெல்லாம் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றதே; நீர் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவராயிருக்கிறீரென்று உம்மிடத்தில் நாங்கள் கற்றுக்கொள்ளுகிறதுதானா இந்தச் சாஸ்திரம்? சின்னவர்களாகிறது அவ்வளவு பெரிய சாஸ்திரமோ? அளவிறந்த மேன்மையுள்ள தேவரீர் இந்தச் சாஸ்திரத்தை எங்களுக்குக் கற்றுக்கொடுக்காவிட்டால், வேறொருவரும் இதைக் கற்றுக்கொடுக்க முடியாதா? ஆம், முடியாது. தன்னைத் தாழ்த்திச் சின்னவனாகிறது மிகவும் வருத்தமான பெரிய சாஸ்திரமாயிருக்கிறதினாலே, சர்வேசுரன் தானே இதுக்கு மாதிரிகை காட்டாவிட்டால், மனுஷன் ஒருகாலும் இதைக் கற்றுத்தேரக்கூடாது. 'மேன்மை மகிமைப் பிரியம் மனுஷன் இருதயத்தில் ஆழமாய் வேரூன்றியிருக்கிறதுபோலே, வேறொன்றும் வேரூன்றியிரு





க்கிறதில்லை. ஆகையால் நம்மைத் தாழ்ச்சியுள்ளவர்களாக்குவதற்குச் சர்வேசுரனே மாதிரிகை காட்ட வேண்டியிருந்தது; ஆங்காரமாகிற நமது வியாதியைச் சொஸ்தப்படுத்துவதற்குச் சர்வேசுரனுடைய மாதிரிகையொன்றே தகுந்த ஔஷதமாகும். அவர் நமது பேரில் வைத்த சிநேகத்தினாலே மனுஷனாக அவதரித்து ஒன்றுமில்லாமையாகித் தாழ்ச்சியாகிற இந்த மாதிரிகையைக் கொண்டு நமக்குக் கொடுத்த ஔஷதம் நமது ஆங்காரத்தைக் குணப்படுத்தாவிட்டால், வேறே எந்த ஔஷதம் அதைக் குணப்படுத்துமென்று எனக்குத் தெரியாதென்றார். தாழ்ந்து நிந்தைப்படுகிற சர்வேசுரனைப் பார்க்கிற பார்வை மேன்மை மகிமைப்படுவதற்கு வெட்கத்தையும் நிந்தைப்படுவதற்கு ஆசையையும் நம்மிடத்தில் எழுப்பப் போதாதிருந்தால், வேறே எது இதை எழுப்பக்கூடுமென்று எனக்குத் தெரியாது. ஆகையால் கெரியென்னும் மடாதிபதி இயேசுநாதருடைய இவ்வளவு ஆழ்ந்த தாழ்ச்சியைக் கண்டு ஆச்சரியப்பட்டு அதைக் கண்டுபாவிப்பதற்குத் தமது இருதயத்தில் கட்டாயம் உண்டானாற்போலே பேரொலியிட்டுச் சர்வேசுரனை நோக்கிச் சொன்னதாவது: ஆண்டவரே, என் ஆங்காரத்தைச் செயித்தீர், செயித்தீர்; இதோ எனக்கு விலங்கு மாட்டும்; என்னை உமக்கு அடிமையாக்கிக்கொள்ளுமென்றார்.

இது காரியத்தில் அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறது வெகு அச்சரியமாயிருக்கும். அதென்னவென்றால், நித்திய பாக்கியத்தை அடையக்கூடுமான இரண்டு வகை வஸ்துக்கள் சர்வேசுரனுக்கு ஒத்தவர்களாக வேணுமென்று ஆசைப்பட்டுக் கெட்டுப்போனதைத் தேவசுதன் யோசித்துப்பார்த்தார். சர்வேசுரன் சம்மனசுகளை உண்டாக்கினார். உடனே லூசிப்பேர் அவருக்குச் சரியாக வேணுமென்று கருத்துக்கொண்டது. இதினாலே நான் மோக்ஷத்தில் ஏறுவேன்; நக்ஷத்திரங்களுக்கு மேலாய் என் சிம்மாசனத்தை ஸ்தாபிப்பேன்; உடன்படிக்கை மலையின்மேலே வடக்குத் திசையில் என் ஆசனத்தை ஏற்படுத்துவேன்; மேகங்களுக்கு மேலாய் எழும்பி உன்னத சர்வேசுரனுக்கு ஒத்தவனாவேனென்றது. அன்றியும் வேறே அநேக சம்மனசுகளையும் தன் கட்சியில் சேர்த்துக்கொண்டது; ஆனால் சர்வேசுரன் நீங்கள் நரக பாதாளத்துக்குக் கீழாய்த் தள்ளுண்டுபோவீர்களென்று சாபம் போட்டு அவர்கள் எல்லாரையும நரகத்திலே தள்ளினார். முன்னே அதுகள் பிரகாசமுள்ள சம்மனசுகளாயிருந்தாலும், இப்போது அந்தகார அரூபிகளாய்ப் போனது. அதின்பின் சர்வேசுரன் மனுஷனைப் படைத்தார்.






ஆனல் 'நரக சர்ப்பமாகிய பசாசு அவனுக்கு விஷத்தை ஊட்டிச் சொன்னதாவது: நீங்கள் நன்மையும் தின்மையும் அறிந்து தேவர்களைப் போலே இருப்பீர்களென்றது. மனுஷன் சர்வேசுரனாக வேணுமென்று ஆவல் கொண்டு சர்வேசுரனுடைய கற்பனையை மீறினன்; சர்வேசுரனுக்கு ஒத்தவனாக வேணுமென்று ஆசித்ததினாலே, பசாசுக்கு ஒத்தவனானன். குஷ்டரோகியான நாகாமானென்பவன் எலிசேயூசென்னுந் தீர்க்கதரிசிக்குக் கொடுத்த பணத்தை அவர் வேண்டாமென்று சொன்னபின், அவருடைய ஊழியன் அதை வாங்குகிறதற்காக நாகாமான் பிறகே ஓடினன். தீர்க்கதரிசி இதைக் கண்டு அந்த ஊழியனைப் பார்த்துச் சொன்னதாவது: நாகாமானுடைய ஆஸ்திக்கு நீ பங்காளியாக ஆசைப்பட்டாய்; நீயும் உன் சந்ததியாரும் அவனுடைய குஷ்டரோகத்துக்கும் பங்காளிகளாவீர்களென்றார். சர்வேசுரன் மனுஷருக்கு இட்ட தீர்ப்பும் இதற்கொத்ததாகும். ஓ! மனுஷனே, பசாசின் ஆஸ்தியாகிய ஆங்காரத்துக்கு நீ பங்காளியாக வேணுமென்று ஆசைப்பட்டாய்; இதினாலே அதுக்கிட்ட தண்டனைக்கும் நீ பங்காளியாவாய். ஆகையால் மனுஷன் சர்வேசுரனுக்கு ஒத்தவனாக வேணுமென்று விரும்பினதினாலே, அவனும் பசாசைப்போலே கெட்டுப் பசாசுக்கு ஒத்தவனானன். இதிப்படியிருக்கத் தேவசுதன் என்ன செய்தாரென்று பார். அவர் தமக்குள்ளே சொன்னதாவது: நமது பிதா நமது மகிமையை ஒருவருக்கும் கொடுக்க மாட்டார்; தாம் உண்டாக்கின மேலான வஸ்துக்களையெல்லாம் நமக்காகக் கெடுக்கிறாரே. சம்மனசுகள் நம்மைப்போலேயாக வேணுமென்று விரும்பினதினாலே கெட்டுப்போனார்கள்; மனுஷனும் இதற்காகத்தானே கெட்டுப்போனன்; சகலரும் நம்மைப்போலேயாக வேணுமென்று ஆசிக்கிறார்கள். நல்லது, நாம் மகா தாழ்மையான உருபமெடுத்துக்கொண்டு மனுஷருக்கு நம்மைக் காட்டுவோம்; நம்மைப்போலாக வேணுமென்று ஆசைப்பட்டுத் தேடுகிறவர்கள் எல்லாரும் ஈடேற்றம் அடைவார்களென்றார். சர்வேசுரனுக்கொத்தவர்களாக வேணுமென்று நம்மிடத்திலுள்ள ஆவலை நிறைவேற்றுகிறதற்காகச் சர்வேசுரன் மோக்ஷத்திலிருந்து இறங்கி மனுஷனானரே. ஓ! இது அளவில்லாத இரக்கத்தின் மிகுதியல்லோ? இனிமேலாக நாம் சர்வேசுரனுக்கொத்தவர்களாகலாமென்கிற நம்பிக்கை ஆங்காரமாயிராமல் பரிசுத்த தாழ்ச்சியாயிருக்கும்.

ஓர் சிறு குழந்தை பிறந்ததென்று இசாயியாசென்னுந் தீர்க்கதரிசி வசனித்தார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். பெர்நர்துஸ் வியாக்

கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: இந்தச் சிறு பிள்ளைபோலேயாகப் பிரயாசப்படக் கடவோம்; உன்னத சர்வேசுரன் சிறு குழந்தையான பரம இரகசியம் நமக்கு வீணாய்ப் போகாதபடிக்கு அவர் சாந்த குணமும் மனத்தாழ்ச்சியுமுள்ளவரென்று அவரிடத்தில் கற்றுக்கொள்ளக் கடவோம்; ஏனென்றால் நீங்கள் இந்தச் சிறு குழந்தைபோலேயாகாவிட்டால், மோட்ச இராச்சியத்தில் பிரவேசிக்க மாட்டீர்களென்றார்.

## ௰௯-ம் அதிகாரம்.

நாம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்குத் தகுந்த சில முகாந்தரங்களின் பேரில்.

**நா**ம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்குத் தகுந்த அநேக ஞாயங்களை இந்தப் போதகத்தின் துவக்கத்திலே எடுத்துக் காட்டியிருக்கிறோம், தாழ்ச்சி சகல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரமும் வேருமென்றும் சகல புண்ணியங்களையும் அடைவதற்கும் அதுகளைக் காப்பாற்றுவதற்கும் இது ஆனவழிபாடென்றும் நாம் தாழ்ச்சியை மாத்திரம் அடைந்தால், சகல புண்ணியங்களையும் அடைவோமென்றும் இன்னம் இதற்கொத்த பல ஞாயங்களையும் சொல்லிக் காட்டினோமே. ஆனால் வேதத்துக்கடுத்த முகாந்தரங்களைக் கொண்டு மாத்திரம் நாம் இந்தப் புண்ணியத்தை ஸ்தாபித்திருக்கிறோமென்று ஒருவரும் எண்ணாதபடிக்கு நமது பலவீனத்துக்குத் தகுந்த சில தெளிவான சுபாவ ஞாயங்களையும் இங்கே எடுத்துக் காட்டுவது நலமாயிருக்கும். வேதத்துக்கடுத்த முகாந்தரங்களையுமல்லாமல் புத்திக்கடுத்த ஞாயங்களையும் யோசித்துப் பார்த்து நாம் இந்தச் சத்தியத்தை அறிந்துகொண்டால், உலோக மகிமை பெருமையைப் பிறக்கணித்துத் தாழ்ச்சியின் பாதையிலே நடப்பதற்கு நமக்கு மிகுந்த ஆவலுண்டாகும்; இது மிகவும் வருத்தமான காரியமாயிருப்பதினாலே, இதை விளக்கிக் காட்டுவதற்கு நம்மாலானமட்டும் பிரயாசப்பட்டு எவ்வித ஞாயங்களையும் கொண்டுவந்து சொல்லிக் காட்டுவோம்.

நாம் வெகு கவலையோடும் பிரயாசத்தோடும் தேடித்திரிகிற மேலான எண்ணமும் மகிமையும் என்னவென்று முந்தமுந்தக் கவனமா






ப் விசாரித்துப் பார்க்கக் கடவோம். அது எப்படிப்பட்டதென்று நாம் சரியாய் அறிந்துகொண்டு அதைப் பிறக்கணித்துத் தள்ளுவதற்கு நம்மிடத்தில் தைரியம் உண்டாகும்பொருட்டு அது எப்படிப்பட்டதென்று எவ்விதத்திலும் உற்றுப்பார்க்கக் கடவோம். நாம் பல காரியங்களைக் கனமாயெண்ணுகிறது வழக்கம்; ஆனால் அது எப்போதும் மெய்யாகவே கனமான காரியமல்ல; நமது அற்பப் புத்திக்கு அது கனமாகத் தோன்றுகிறதேயல்லாமல் மற்றப்படியல்லவென்று செனேக்காவென்னும் சாஸ்திரி வசனித்தான். இதை ஒரு உவமையினாலே விளக்கிக் காட்டுவதற்காக அவன் சொல்லுகிறதாவது: எறும்பு எதையாகிலும் தூக்கிச் சுமந்துகொண்டு போகும்போது, அந்தச் சுமை அதுக்கு மெய்யாகவே மிகவும் பாரமாய்த்தான் தோன்றும்; ஆகிலும் அது நமக்கு மிகவும் இலேசாயிருக்குமென்றான். மனுஷருடைய மேலான எண்ணத்தின் பேரிலும் மகிமையின் பேரிலும் நாம் நினைக்க வேண்டியது இதுவே. மற்றவர்கள் உன் பேரில் வைத்திருக்கிற மேலான எண்ணத்தினாலே, நீ நல்லவனாகவும் அவர்கள் உன் பேரில் கொண்டிருக்கிற கெட்ட எண்ணத்தினாலே நீ கெட்டவனாகவும் போவாயோ? இல்லை, இல்லை. அர்ச். அகுஸ்தீன் சொல்லுமாப்போலே, வியாதியுள்ள ஆத்துமம் புகழ்ச்சியினாலே சௌக்கியப்படுகிறதுமில்லை, சௌக்கியமுள்ள ஆத்துமம் புறணிப் பேச்சினாலே வியாதியாய்ப்போகிறதுமில்லை. அகுஸ்தின் பேரிலே நீ என்னென்ன நினைக்க வேணுமோ, அதெல்லாம் நினைத்துக்கொள்; நாம் சர்வேசுரனுக்கு முன்பாகக் குற்றவாளியாயிராவிட்டால், அதுவே நமக்குப் போதும். சர்வேசுரன் கண்ணுக்கு முன்பாக நாம் குற்றமில்லாமலிருக்கிறதே கனமான காரியம்; மற்றதெல்லாம் வீணும் வியர்த்தமுமாகும்; அதினாலே ஆவதுமில்லை, போவதுமில்லை. கிறீஸ்துநாதர் அநுசாரத்திலே சொல்லியிருக்குமாப்போலே, புகழ்ச்சியினாலே மனுஷனுடைய பேறு பலன் எவ்வளவாகிலும் அதிகரிக்குமோ? ஒவ்வொருவனும் சர்வேசுரனுடைய கண்ணுக்கு முன்பாக எப்படியிருக்கிறானோ அப்படிப்பட்டவனேயல்லாமல் மற்றப்படியல்ல. இதினாலல்லோ தன்னைக் கனமாயெண்ணுகிறவன் அதினாலே கன்பபட்டவனல்ல; சர்வேசுரன் ஆரைக் கனமாயெண்ணுகிறாரோ அவன் மாத்திரம் கனம்பொருந்தியவனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார்.

இவ்விஷயத்தில் அர்ச். அகுஸ்தீன் ஒரு உவமை சொல்லியிருக்கிறார். அதாவது, ஆங்காரம் மெய்யான பெருமையல்ல; அது வீக்கமா

கும்; வீங்கியிருக்கிறது வெளிப்பார்வைக்குப் பெரிதாகத் தோன்றும்; உள்ளுக்குள்ளே புழுத்திருக்குமென்றார். இவ்வண்ணமே மனுஷருடைய புகழ்ச்சியினிமித்தம் ஆங்காரிக்கிறவர்கள் பெரிய மனுஷாள்போலே தோன்றுவார்கள்; ஆனால் அவர்கள் மெய்யாகவே பெரியமனுஷாளல்ல. புகழ்ச்சியினாலே அவர்களிடத்தில் உண்டாகிற ஆங்காரம் மெய்யானபெருமையுல்ல; அது மோசத்துக்குரிய வீக்கமென்பதற்குச் சந்தேகமில்லை. மேற்சொன்ன அர்ச். அகுஸ்தீன் சொல்லுமாப்போலே, சில வியாதிக்காரருண்டு. அவர்கள் கொழுத்துப்போய் வெகுபுஷ்டியாய் இருக்கிறதாகத் தோன்றும்; ஆனால் இது நல்ல கொழுப்பல்ல; இவர்கள் வீங்கி மகோதர வியாதி பிடித்திருக்கிறார்களென்று சொல்லவேண்டும். மனிதருடைய மேலான எண்ணத்தினாலும் புகழ்ச்சியினாலும் நமக்குண்டாகிறதுமிதுவே. அதினாலே நாம் வீங்கிப்போய் இருக்கலாம்; ஆனால் அது நம்மைப் பெரிய மனுஷராக்க முடியாது. இதுவெல்லாம் மெய்யான சத்தியமாயிருக்கையிலே, ஓணானைப்போலே வாய்திறந்து மகிமையாகிற வீண் காற்றைக் குடிக்க நாம் வருந்துகிறதென்ன? நாம் வியாதியாயிருந்தாலும், சௌக்கியமுள்ளவர்களாக வெளிப் பார்வைக்குத் தோன்றுகிறதைவிடச் சௌக்கியமாயிருந்தாலும், வியாதிக்காரராகத் தோன்றுகிறது தாவிளையல்லோ? இவ்வண்ணமே நாம் கெட்டவர்களாயிருந்தாலும், மனுஷர் நம்மை நல்லவர்களென்று எண்ணுகிறதைவிட நாம் நல்லவர்களாயிருந்தாலும், அவர்கள் நம்மைக் கெட்டவர்களென்று எண்ணுகிறது தாவிளை. நீ புண்ணியவானாயிராவிட்டால், மற்றவர்கள் உன்னைப் புண்ணியவானென்று நினைத்தாலும், அதினாலே உனக்கு என்ன பிரயோசனம். அவள் கிரிகைகள் அவளைப் பிரஸ்தாபமான இடத்தில் புகழக்கடவதென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். எரோணிமுஸ் சொல்லுகிறதாவது: நீ சர்வேசுரனுக்கு முன்பாகத் தீர்வைக்குப் போய் நிற்கும்போது, மனுஷருடைய வீண் புகழ்ச்சியினாலே உனக்கு மகிமை உண்டாகாமல் உன் நற்கிரிகையினாலே மாத்திரம் உனக்குப் புகழ்ச்சி உண்டாகும்; இதுவே உன்னை மெய்ச்சிக்கொள்ளுமென்றார்.

அர்ச். கிரெகோரியார் எழுதிவைத்த வர்த்தமானமாவது: இக்கோனியா தேசத்திலுள்ள ஓர் மடத்திலே ஒரு சந்நியாசியார் இருந்தார். அவர் பெரிய அர்ச்சியசிஷ்டவரென்று பேர்கொண்டிருந்தார்; விசேஷமாய் அவரிடத்திலுள்ள ஒறுத்தலும் ஒருசந்தி உபவாசமும் ஆச்சரி

யத்துக்குரியதென்று சகலரும் எண்ணியிருந்தார்கள். அவர் சாகக் கிடக்கும்போது, சகல சந்நியாசிகளையும் தம்மிடத்தில் வரவழைத்தார். அவர்கள் இதைக் கேட்டுத் தாங்கள் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கான யாதொரு உச்சிதமான புத்திமதி சொல்லுவாரென்று நம்பிச் சந்தோஷமாய் அவரிடத்தில் போனார்கள். ஆனால் அந்தச் சந்நியாசிக்கு மனசிலே வெகு வேதனை உண்டாகிப் பயந்து நடுங்கிக்கொண்டு கட்டாயத்தினாலே அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது : என் ஆயுசுகாலமெல்லாம் வஞ்சகமும் கள்ள ஞானமுமேயல்லாமல் வேறொன்றுமில்லை ; நான் கடின ஒருசந்தி உபவாசம் பிடிக்கிறேனென்று நீங்கள் எண்ணியிருந்தாலும், உங்களுக்குத் தெரியாமல் இரகசியமாய்ச் சாப்பட்டுக்கொண்டு வந்தேன் ; இந்த வஞ்சகத்துக்கு ஆக்கினையாக ஓர் பயங்கரமான பெரிய நாகம் வாலாலே என் காலிலே சுற்றிக்கொண்டிருக்கின்றது இதோ! பாருங்கள் : என் ஆத்துமத்தைப் பிடுங்கி நரகத்திலே கொண்டுபோவதற்காக என் வாய்க்குள்ளே அதின் தலையை வைக்கிறதென்று சொல்லிச் செத்தான். மற்றவர்கள் இதைக் கண்டு வெகு ஆச்சரியப்பட்டார்கள். இந்த நிர்ப்பாக்கியனை மற்றவர்கள் அர்ச்சியசிஷ்டவனென்று எண்ணியிருந்ததினாலே, இவனுக்கு என்ன பிரயோசனம்?

அர்ச். அத்தனாசியார் மனிதருடைய புகழ்ச்சியையும் மேலான எண்ணத்தையும் தேடித் திரிகிறவர்களை வண்ணாத்திப்பூச்சியைப் பிடிக்க ஓடித் திரிகிற பிள்ளைகளுக்கு ஒப்பிட்டிருக்கிறார். இவர்கள் சிலந்திப்பூச்சிக்கு ஒப்பாயிருக்கிறார்களென்று வேறு சிலர் சொல்லியிருக்கிறார்கள் ; சிலந்திப்பூச்சிபோலே ஒட்டடை நெய்தார்களென்று இசாயியாஸ் சொன்ன வாக்கியம் இவர்களுக்கே செல்லும். இந்தப் பூச்சி ஈயைப் பிடிப்பதற்காகத் தன் குடலிலேயுள்ளதெல்லாத்தையும் நுனைநுனையாய்த் தள்ளி ஒட்டடை நெய்யும். இப்படியே ஆங்காரிகள் மனுஷருடைய சொற்ப எண்ணத்தை அடைவதற்காக இடைவிடாமல் உழைத்துக் களைத்துப்போவார்கள். அர்ச். சவேரியார் சரித்திரத்தில் எழுதியிருக்கிறதாவது : மனுஷருடைய மேலான எண்ணமும் புகழ்ச்சியும் வெகு பொல்லாப்பை வருவித்து வெகு நன்மைக்கு விக்கினமாயிருக்கிறதினாலே, இந்த அர்ச்சியசிஷ்டவர் இதின் பேரில் வெகு அருவருப்புக்கொண்டிருந்தார். இந்தச் சத்தியம் அவர் இருதயத்திலே ஸ்திரமாய்ப் பதிந்திருந்ததினாலே, சிலவிசை அவர் பெருமூச்செறிந்து பேரொலியிட்டுச் சொன்னதாவது : ஓ! மனுஷருடைய மேலான எ






ண்ணமே, நீ எவ்வளவு பொல்லாப்புச் செய்தாய், எவ்வளவு பொல்லாப்புச் செய்கிறாய், இன்னம் எவ்வளவு பொல்லாப்புச் செய்வாயென்றார்.

———— ooooo ————

## உ௰-ம் அதிகாரம்.

*நாம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்குதவியான சில சுபாவ ஞாயங்களின் பேரில்.*

———— oooo ————

**ந**மதுபேரில் மிரமிஞ்சின எண்ணம் வைக்காமல் மட்டுள்ள எண்ணம் வைக்க வேணுமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். கிறிசோஸ்தொமுஸ் வியாக்கியானம்பண்ணிச் சொல்லுகிறதாவது: ஆங்காரி கெட்டவனும் பாவியுமாயிருப்பதுமல்லாமல் பைத்தியகாரனும் மூடனுமாயிருக்கிறானென்றார். அன்றியும் பைத்தியகாரன் பைத்தியப் பேச்சுப் பேசுவானென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி சொன்ன வாக்கியத்தை அவர் எடுத்துக் காட்டிச் சொல்லுகிறதாவது: ஒருவன் பேசுகிற பைத்தியப் பேச்சைக் கொண்டு அவன் பைத்தியகாரனென்று அறிந்துகொள்ளலாமல்லோ? அப்படியே ஆங்காரி பிதற்றிச் சொல்லுகிற பைத்தியப்பேச்சுகளை எடுத்துக் காட்டுவோம், கேள்: சகலருக்கும் முந்தின ஆங்காரியாகிய லூசிபேர் சொன்னதாவது: மோக்ஷத்திலே ஏறுவேன்; நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிம்மாசனத்தை ஏற்படுத்துவேன்; ஏற்பாட்டு மலையின்மேலே வடதிசையில் என் ஆசனத்தை ஸ்தாபிப்பேன்; மேகங்களுக்கெல்லாம் மேலாக எழும்பி உந்நத சர்வேசுரனுக்கு ஒத்தவனாவேனென்று பிதற்றிச் சொன்னது. இதைப் பார்க்க வீண் பிதற்றுப் பிதற்றக் கூடுமோ? இன்னமும் உலகத்தையெல்லாம் கீழ்ப்படுத்தினேனென்று வேறொரு ஆங்காரி சொல்லுகிற அகந்தைப் பேச்சைக் கேள்: குருவியைக் கூட்டிலே பிடிக்கிறதுபோலே, என் கையாலே சகல மனுஷரையும் பிடித்தேன்; கோழி இட்ட முட்டையை எடுக்கிறதுபோலே, உலகத்திலுள்ள சகல சாதி சனங்களையும் நானே பிடித்தேன்; ஒருவரும் இறக்கையை அசைக்கவும் கத்துகிறதற்கு வாய் திறக்கவும் துணியவில்லையென்றான். இதைப் பார்க்க வீண் பிதற்று எங்கேயாகிலும் உண்டோவென்றார். அதின்பின் இதற்கொத்த வேறே அநேக ஆங்காரமான பேச்சுக்களை அவர் எடுத்துக் காட்டியிருக்கிறார். அதிலே உள்



ள பைத்தியத்தினிமித்தமாக இந்த ஆங்காரிகள் பேசுகிற பேச்சு மெய்யாகவே முழுதும் புத்தியைப் போக்கடித்தவர்களுடைய பேச்சோ இல்லையோவென்று சந்தேகப்படுகிறதற்கு இடமுண்டு. பைத்தியகாரர் செய்கிற பைத்தியக் கோட்டாலையையும் அவர்கள் பிதற்றுகிற பிதற்றுதலையும் மனுஷர் கண்டு சிலவிசை சிரிக்கிறதுண்டு. அப்படியே ஆங்காரிகள் சொல்லுகிற வீண் மகிமைக்கடுத்த பேச்சினாலேயும் அவர்கள் செய்கிற மேட்டிமையான சேஷ்டையினாலேயும் அவர்கள் காட்டுகிற கள்ளமுகச் சாடையினாலேயும் அவர்களுடைய ஒய்யாரமான நடையினாலேயும் சகலத்திலும் மேன்மைப்படவேணுமென்று அவர்களிடத்திலுள்ள அணைகடந்த ஆவலினாலேயும் தங்கள் பேரிலும் தங்களுக்கடுத்த சகல காரியங்களின்பேரிலும் அவர்கள் கொண்டிருக்கிற மேலான எண்ணத்தினாலேயும் அநந்தமுறை மனுஷருக்குச் சிரிப்புண்டாகும். பைத்தியகாரருடைய பைத்தியத்தைப் பார்க்க ஆங்காரிகளுடைய பைத்தியம் அதிக கெட்டதும் அதிக வெட்கத்துக்குரியதுமென்று அர்ச். கிறிசோஸ்தொமுஸ் வசனித்தார்; ஏனென்றால் ஆங்காரிகளுடைய பைத்தியத்திலே பாவமுண்டு, பைத்தியகாரருடைய பைத்தியத்திலே பாவமில்லை. இதினாலே இவ்விரண்டு பைத்தியத்துக்கும் வெகு வித்தியாசமுண்டு. இதினிமித்தமாகப் பைத்தியகாரரைக் கண்டு இரக்கப்படுவோம்; ஆங்காரிகளைக் கண்டு நகைத்துப் பரியாசம் பண்ணுகிறது வழக்கம்.

ஆகையால் ஆங்காரிகள் பைத்தியகாரரென்பது மெய்; பைத்தியகாரன்மட்டில் நாம் வழக்கமாய் நடப்பதுபோலே, ஆங்காரிகள் மட்டிலும் நடப்போமென்பதும் மெய். ஏனென்றால் பைத்தியகாரன் எவ்வளவு பிதற்றினாலும், அவன் பேச்சை மறுத்துப் பேசாமல் அவன் சொல்லுகிறதெல்லாத்தையும் ஒத்துக்கொள்ளுகிறது வழக்கம். இவ்வண்ணமே வீண் மகிமையும் ஆங்காரமுமுள்ளவனைப் பைத்தியகாரனென்றெண்ணி மனிதர் அவன் பேச்சை மறுத்துப் பேசமாட்டார்கள். ஆங்காரமாகிற இந்த வியாதியும் பைத்தியமும் இப்போது மனுஷருக்குள்ளே வெகுவாய் வழங்கி வருகிறதினாலே, இல்லாத காரியத்தையும் நம்பாத காரியத்தையும் சொல்லிப் பசப்பர்தேபோனால், அவர்களோடே பேசுகிறது வருத்தமாயிருக்கும். ஏனென்றால் மற்றவர்கள் தங்களைக் கனமாயெண்ணித் தாங்கள் செய்கிறதெல்லாத்தையும் ஒத்துக்கொள்ளுகிறதைக் கண்டு அவர்கள் சந்தோஷப்படுகிறதினாலே, அவர்களைப் புகழ்





ந்துகொள்ளுகிறதே அவர்களுடைய சனுவை அடைவதற்குத் தப்பாத வழிபாடாகும். சலமோனென்பவர் உலகத்தில் கண்ட வீண் வியர்த்தங்களில் இது ஒன்றுமே. இதினாலல்லோ கெட்டவர்களைப் புதைத்திருக்கிறதைக் கண்டேன்; இவர்கள் உயிரோடிருக்கும்போது, மேன்மையான அந்தஸ்திலிருந்து நற்கிரிகை செய்தவர்கள்போலே பட்டணத்தில் புகழ்ச்சி அடைந்திருந்தார்கள்; இது வியர்த்தமும் பைத்தியமுமென்றார். ஏனென்றால் ஒருவனிடத்தில் இல்லாத சற்குணத்தைப்பற்றி அவனைப் புகழ்ந்துகொள்ளுகிறதையும் அநந்தமுறை அவனிடத்திலுள்ள கெடுதலினிமித்தம் அவனை மெய்ச்சிக்கொள்ளுகிறதையும்விட அடாத பைத்தியம் எங்கேயாகிலுமுண்டோ? இப்படி உன்னைக் கண்முன்பாகப் புகழ்ந்துகொண்டாலும், நீ இல்லாதவிடத்திலே உள்ளதை மற்றவர்களுக்குச் சொல்லிவிடுவார்கள்; ஆனால் உனக்குப் பிரியப்படுவதற்காக உன் முகதாவிலே பொய் சொல்லி உன்னைப் பசப்ப அஞ்சமாட்டார்கள், அல்லது உன்னிடத்தில் புகழ்ச்சிக்குரியது ஒன்றுமில்லையென்று அறிந்திருந்தாலும், பொய் சொல்லாமல் உன்னைப் புகழுவதற்காக சுற்றிச் சுற்றிப் பேசுவார்கள். இதினாலே உன்னைப் பைத்தியகாரனைப்போலே நடத்துகிறார்கள். உன்னிடத்திலே ஆங்காரமாகிற பைத்தியம் ஆட்கொண்டிருக்கிறதென்றும், நீ பிரசங்கமாகிலும் வேறெந்தப் பிரஸ்தாபமான கிரிகையென்கிலும் செய்தபின், அது வெகு நேற்றிபாயிருந்ததென்றும் சகலரும் வெகு சந்தோஷப்பட்டுக்கொண்டார்களென்றும் உன்னிடத்தில் சொன்னால், இது உனக்கு மகா நேற்றியான விருந்துபோலே பிரியமாயிருக்குமென்று மற்றவர்கள் அறிந்திருக்கிறதினாலே மாத்திரம் உன்னைப் புகழ்ந்துகொள்ளுவார்கள். ஆகிலும் உனக்குப் பிரியப்படுவதற்காகவும் உன் சனுவை அடைவதற்காகவுமாத்திரம் அவர்கள் இப்படி உன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறதேயல்லாமல் மற்றப்படியல்ல. ஆனால் இது உன்னை அதிக பைத்தியகாரனாக்குகிறதற்கு உதவும்; ஏனென்றால் அவர்கள் பொய்யாக உனக்குச் சொல்லுகிற புகழ்ச்சியினிமித்தம் நீ செய்தது நன்றாயிருந்ததென்று நீ தப்பிதமாயெண்ணி நீ செய்த குற்றத்திலே திரும்பியும் விழுவதற்கு அந்தப் பொய்ப் புகழ்ச்சி காரணமாயிருக்கும். இக்காலத்திலே மனுஷர் தாங்கள் நினைக்கிறதை உள்ளபடி சொல்லுகிறதில்லை; ஏனென்றால் மெய் சொல்லுகிறது மனுஷருக்குப் பொருந்ாது; மெய் சொல்லுகிறவர்கள் மனுஷருக்குச் சத்துராதிகளாய்ப் போவார்கள். ஆங்காரிகளிடத்திலுள்ள குற்றங் குறைகளைத் திருத்துவதற்காக அவர்களுக்குப் பிறசினைக



த்தோடு யாதொரு புத்தி சொன்னால், அவர்கள் பைத்தியகாரனைப்போலே வெறிகொண்டு தங்கள் ஆங்காரத்தைக் குணப்படுத்தத் தங்களுக்கு மருந்துகொடுக்கிறவர்களுடைய முகத்திலே காறித் துப்புவார்கள். ஆகையால் வீணிலே சண்டையும் பகையும் மூட்டிக்கொள்ள ஒருவருக்கும் மனசில்லாததினாலே, ஒருவனுக்குப் பொருந்தாத காரியத்தை ஏன் சொல்லுகிறோமென்றெண்ணிச் சொல்லாதிருப்பார்கள். ஆங்காரிக்கு முன்பாக மற்றவர்கள் மறைத்துப் பேசுகிறதினாலேயும் அவன் தன் பேரிலே மேலான எண்ணங்கொண்டிருக்கிறதினாலேயும் அவர்கள் சொல்லுகிற பொய்ப் புகழ்ச்சியெல்லாத்தையும் மெய்யென்று நினைத்துக்கொள்ளுவான். ஆகையால் மனுஷர் சொல்லுகிற புகழ்ச்சியெல்லாம் வஞ்சகமும் வீண் பசப்புதலும் பொய்யுமென்று நாம் அறிந்திருக்கக்கொள்ள, மனுஷருடைய புகழ்ச்சியை நம்புகிறது எவ்வளவு பைத்தியமென்று அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால் இந்தப் புகழ்ச்சியெல்லாம் மரியாதைக்காகச் சொல்லுகிற பொய்யென்று யாவரும் அறிந்த காரியமாமே.

இன்னம் இது காரியத்தில் ஓர் சத்தியத்தை விசாரித்துப் பார்க்க வேண்டும். அதென்னவென்றால், ஆங்காரிகளைச் சர்வேசுரனும் மனுஷரும் பகைப்பார்களென்று அர்ச். கிறிசோஸ்தொமுஸ் சொல்லியிருக்கிறார். சர்வேசுரன் இவர்களைப் பகைக்கிறது சத்தியமான காரியம். இதினாலல்லோ ஆங்காரி கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கிறானென்று ஞானியானவர் வசனித்தார். ஆங்காரமான பார்வை சர்வேசுரனுக்கு அருவருப்பான ஏழு காரியங்களில் முந்தினதென்று மேற்சொன்ன ஞானியானவர் வசனித்தார். ஆங்காரிகளை மனுஷரும் பகைப்பார்களென்பது நிச்சயம். இதினாலல்லோ ஆங்காரம் சர்வேசுரனுக்கும் மனுஷருக்கும் பகைக்குரிய காரியம்; ஆங்காரிகளுடைய இருதயம் புழுத்த குடலிலிருந்து புறப்படுகிற ஆவிபோலிருக்குமென்று மேற்சொன்ன ஞானியானவர் அருளிச்செய்தார். ஒருவரும் இவர்களை அண்டிப்போகவும் கூடாது, ஒருவரும் இவர்களோடு நிலைத்திருக்கவும் முடியாது. மற்றவர்கள் இவர்களுக்குப் பிரியமான காரியத்தைச் செய்யாமல் இவர்கள் அபேட்சிக்கிறதற்கு விரோதமான காரியங்களைச் செய்கிறதினாலே, இவர்களுடைய ஆங்காரத்துக்கான தண்டனை செய்கிறார்களென்பது நிச்சயம். இவர்கள் தங்களைச் சகலரும் மதித்துச் சங்கைசெய்ய வேணுமென்று ஆசைப்பட்டாலும், சகலரும் இவர்களைப் பைத்தியகாரரென்று





எண்ணுவார்கள்; தங்களைச் சகலரும் சிநேகித்துத் தேட வேணுமென்று இவர்கள் அபேட்சித்தாலும், சகலரும் இவர்களைப் பகைத்து விலகி நடப்பார்கள். இவர்களுக்கு மேற்பட்டவர்கள் இவர்கள் தங்களுக்குச் சரியாய் வந்து சேரத் தேடுகிறதினாலே, இவர்களைப் பகைப்பார்கள்; இவர்களுக்குச் சமானஸ்தர் தங்களுக்கு மேற்பட இவர்கள் விரும்புகிறதினாலே, இவர்களை விலகி நடப்பார்கள்; இவர்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள் இல்லாத சங்கையெல்லாம் தங்களுக்குச் செய்ய வேணுமென்று இவர்கள் சொல்லுகிறதினாலே, இவர்களை வெறுப்பார்கள். இவர்களுடைய ஊழியர் முதலாய் இவர்களைப் பகைத்து இவர்கள் பொறுக்கக் கூடாத சத்துருவென்று சொல்லுவார்கள். கடைசியாய் யாரிடத்திலே ஆங்காரமுண்டோ அவனை எல்லாரும் பகைத்து நிந்திப்பது வழக்கம்; தாழ்ச்சியுள்ளவனைச் சகலரும் கனம்பண்ணிச் சிநேகிப்பார்கள். குழந்தைப் பிள்ளைகளிடத்திலுள்ள கபடற்றதனத்தையும் மாசற்றதனத்தையும் கண்டு எல்லாரும் அதுகளைச் சிநேகிப்பதுபோலே, தாழ்ச்சியுள்ளவர்களிடத்திலுள்ள மாசற்றதனத்தையும் கபடில்லாததனத்தையும் கண்டு யாவரும் அவர்களைச் சிநேகிப்பார்கள்; ஏனென்றால் அவர்களிடத்தில் விளங்குகிற சாந்த குணத்தையும் கபடின்மையையும் அடக்க ஒடுக்கத்தையும்பற்றி அவர்களெல்லாருக்கும் பிரியப்படுவார்கள். அவர்களுடைய சற்குணம் ஊசிக்காந்தம்போலே எல்லாருடைய பிரியத்தையும் அவர்களுக்கு வருவிக்கும்; அவர்களுடைய தாழ்ச்சியைக் கண்டு சகலரும் அவர்களைச் சிநேகிப்பார்கள்.

மனுஷருடைய மேலான எண்ணத்தையும் புகழ்ச்சியையும் தேடுகிறது பைத்தியமென்று ஒப்பிப்பதற்காக அர்ச். பேர்நர்துஸ் வெகு நேர்த்தியான ஒரு ஞாயத்தைச் சொல்லியிருக்கிறார். அதாவது, தேவசுதன் தம்மைத் தாழ்த்தி ஒன்றுமில்லாமையாகி நிந்தை அவமானப்படச் சித்தமானாரோ; இது ஒன்றில் பைத்தியமென்று சொல்ல வேண்டும், அல்லது நாம் உலக மகிமையின் பேரில் வைத்திருக்கிற ஆசை பைத்தியமென்று சொல்ல வேண்டும். தேவசுதனுடைய நடக்கையைப் பைத்தியமென்று மனுஷர் எண்ணினது மெய்தான். இதினாலல்லோ யூதருக்கு இடறலாகவும் அஞ்ஞானிகளுக்குப் பைத்தியமாகவும் தோன்றிச் சிலுவையில் அறையுண்ட இயேசுநாதரை நாம் போதிக்கிறோம்; ஆனால் அழைத்தல் வரம் அடைந்த யூதருக்கும் அஞ்ஞானிகளுக்கும் அவர் தேவ வல்லமையாகவும் தேவ ஞானமாகவும் இருக்கிறார். ஆகையால்






தேவ ஞானமாகிய தேவசுதன் தம்மைத் தாழ்த்தினது பைத்தியமல்லவென்பது மறுக்கப்படாத சத்தியம். இதிப்படியிருக்க, ஆங்காரமும் வீண் மகிமையும் பைத்தியமென்பது நிச்சயமல்லோ? உலக மகிமையையும் கீர்த்தியையும் நாம் வெகு வெகு கனமாய் எண்ணுகிறதினாலே, நாம் மெய்யாகவே பைத்தியகாரரென்று காட்டுகிறோம்.

——0000——

## உக-ம் அதிகாரம்.

புண்ணியத்தையும் தாழ்ச்சியையும் அநுசரிக்கிறது மநுஷருடைய மேலான எண்ணத்தை அடைவதற்கு நிச்சயமான வழிபாடென்று சொல்லுவது.

இது காரியத்தை நாம் எவ்வளவு விளக்கிக் காட்டியிருந்தாலும், மனுஷருடைய மேலான எண்ணமாகிற வீண் காற்றை நீ சிநேகித்து அற்பப் புகையாகிற புகழ்ச்சியை இன்னம் கனமாயெண்ணுவாயாக்கும். இதினாலே மனுஷர் நம்மைக் கனமாயெண்ணுகிறது வெகு நேற்றியான காரியமென்றும் பிறருடைய நன்மாதிரிகைக்கும் வேறநேக நன்மைக்கும் மனுஷருடைய மேலான எண்ணம் உதவியாயிருக்குமென்றும் உன் கீர்த்தியை நன்றாய் விசாரித்துக்கொள்ளென்று ஞானியானவர் தானே போதித்திருக்கிறாரென்றும் சொல்லுவாயாக்கும். நல்லது, ஆகட்டும்; நீ உன் கீர்த்தியைக் காப்பாற்றி மனுஷருடைய மேலான எண்ணத்தை அடையப் பிரயாசப்படலாம்; ஆனால் இதற்காக நீ செய்கிற வழிபாட்டைக் கொண்டு இது கைகூடிவருமென்று நினைத்தால், மோசம் போகிறாயென்று உனக்குச் சொல்லுகிறோம்; இல்லை, ஆங்காரத்தினாலே நீ ஒருகாலும் மகிமை அடையமாட்டாய். இதினாலல்லோ மனிதர் நம்மைக் கனமாயெண்ணுவதற்குப் புண்ணியமும் தாழ்ச்சியுமே தப்பாத வழிபாடாகுமென்று அர்ச். கிறிசோஸ்தொமுஸ் வசனித்தார். நல்ல சந்நியாசியாகப் பிரயாசப்படு; நீ நடக்கிற நடக்கையிலும் சகல சமயங்களிலும் மெய்யான தாழ்ச்சியுள்ளவனாக நடந்து; இப்படி நடந்தால், சகலரும் உன்னைக் கனமாய் எண்ணுவார்கள்; ஏனென்றால் உலகத்தை மெய்யாகவே வெறுத்துவிட்ட சந்நியாசிக்குரிய மகிமை யி





துவே. சமுசாரவர்சிகள் விலை உயர்ந்த உடுப்பணிந்து ஆரபாரம் பண்ணுகிறதுபோலே, பரும்படியான வஸ்திரந் தரித்துக்கொண்டு தாழ்ந்த அலுவல் செய்கிறது சந்நியாசிக்குத் தகுந்த ஒழுக்கம். மனுஷருடைய மேலான எண்ணத்தின் பேரில் பற்றுதல் வைத்து அதைத் தேடித்திரிகிறது சந்நியாசிக்கு அடாத அயோக்கியமான நடக்கை. சந்நியாசி சந்நியாசத்தை விட்டுச் சமுசாரவாழ்க்கையில் ஏற்பட்டால், இவன் வீடு கட்டத் துவக்கினான், அதை முடிக்கக் கடைப்படாமற் போனானென்று இவனை எல்லாரும் கேலிபண்ணுவார்களல்லோ? இவ்வண்ணமே சந்நியாசி மனுஷருடைய மேலான எண்ணத்தையும் புகழ்ச்சியையும் நாடித் திரிவது வெட்கத்துக்குரிய காரியம்; ஏனென்றால் இவன் சந்நியாசத்தில் பிரவேசிக்கும்போது, மகிமை பெருமையெல்லாம் வெறுத்துவிட்டிருக்க, அதை இப்போது நாடித் தேடுகிறது சமுசார வாழ்க்கையில் திரும்பிப் போவதற்கு ஒப்பாகும்.

புண்ணிய சாங்கோபாங்கத்தைத் தேடுகிறவன் மனுஷர் தன்னைக் கனமாய் எண்ண வேணுமென்று ஆசைப்படுகிறது எவ்வளவு வெட்கத்துக்குரிய காரியமென்று தெளிவாய் அறிந்துகொள்ள வேணுமோ? கேள்: இந்த ஆசை உன்னிடத்தில் உண்டென்று மற்றவர்கள் அறிந்துகொள்ளட்டும்; அவர்கள் இதை அறிந்துகொண்டதினாலே; உனக்கு எவ்வளவு வெட்கம் வருமென்று பார்த்துக்கொள்ளுவாய். சுவிசேஷத்திலே இதற்கொத்த ஓர் கேற்றியான வர்த்தமானமுண்டு. அதென்னவென்றால், ஒரு தடவை அப்போஸ்தலர் இயேசுநாதருக்குக் கொஞ்சம் தூரமாயிருந்ததினாலேயும் தாங்கள் பேசுகிறது அவருக்குக் கேட்கமாட்டாதென்று அவர்கள் நினைத்திருந்ததினாலேயும் நமக்குள்ளே யார் பெரியவனென்று வாக்குவாதம் பண்ணிக்கொண்டார்கள். அவர்கள் தங்குகிற தாவளத்துக்கு வந்து சேர்ந்தபின், பாதையிலே என்ன பேச்சுப் பேசினீர்களென்று இயேசுநாதர் அவர்களிடத்தில் கேட்டார். ஆனால் அவர்கள் தங்களுடைய ஆங்காரமும் வீண் மகிமையும் இயேசுநாதருக்குத் தெரியப்பட்டதென்று கண்டு வெட்கப்பட்டு ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்தார்கள்; ஏனென்றால் நமக்குள்ளே யார் பெரியவனென்று வாக்குவாதம் பண்ணிக்கொண்டார்களென்று சுவிசேஷத்தில் சொல்லியிருக்கின்றது. அப்போது இயேசுநாதர் திருவுளம்பற்றினதாவது: உலகத்திலே மற்றவர்களை ஆளுகிறவர்களைப் பெரியவர்களென்றும் மேற்பட்டவர்களென்றும் மனிதர் எண்ணுவார்கள்; ஆனா

ல் உங்களுக்குள்ளே இப்படியல்ல ; உங்களுக்குள்ளே பெரியவனாயிருக்கிறவன் சின்னவனாக வேண்டும் ; மற்றவர்களுக்கு மேற்பட்டவன் ஊழியனாக வேண்டும். முந்தினவன் எல்லாருக்கும் கடைசியும் எல்லாருக்கும் ஊழியனுமாக வேணுமென்றார். சர்வேசுரனுடைய வீடாகிற சந்நியாசத்திலே தன்னைத் தாழ்த்திச் சின்னவனாகிறது பெரியவனாகிறதற்குச் சரியாகும் ; எல்லாருக்கும் கீழாகத் தன்னைத் தாழ்த்துகிறது எல்லாருக்கும் மேலாக உயருகிறதற்கு ஒப்பாகும்; சந்நியாசத்திலுள்ள மெய்யான மகிமையிதுவே. ஏனென்றால் நீ தேடுகிற மகிமை மெய்யான மகிமையல்ல ; அது வெட்கத்துக்குரிய வீண் புகை. அதினாலே நீ உலக மகிமையை அடையாமல் அவமானத்தையும் அடைவாய்; ஏனென்றால் உன்னை ஆங்காரியென்றெண்ணுவார்கள் ; உன் பேரில் கொண்டிருக்கக் கூடுமான மிகுந்த தாழ்மையான எண்ணமிதுவே. நீ மகிமை பெருமையைத் தேடுகிறாயென்றும் மகிமைக்கடுத்த அற்பக் காரியங்களையும் கனமாயெண்ணுகிறாயென்றும் மகிமைக்கடுத்த காரியத்திலே உனக்கு எளிதாய்க் கஸ்தி வருகிறதென்று மற்றவர்கள் நினைப்பதற்கு இடமுண்டானால், இதினாலே உன் கீர்த்திக்கு வெகு சேதமுண்டாகும்.

அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லுமாப்போலே, வீண் மகிமை ஆங்காரிகளுக்கு அநேகமுறை வெட்கத்துக்கும் கூச்சத்துக்கும் காரணமாயிருந்தது; ஏனென்றால் அவர்கள் செய்கிற காரியத்தைக் கொண்டுதானே அவர்களுடைய ஆங்காரம் வெளிப்பட்டதினாலே, அவர்களுக்கு அவமானம் நேரிட்டது. தங்களுக்குச் சங்கை மகிமையை வருவிப்பதற்காக அவர்கள் சொல்லுகிறது செய்கிறதெல்லாம் அவர்களுடைய ஆங்காரத்தை வெளியாக்குகிறதற்கு உதவுகிறதென்று அவர்கள் நினைக்கிறதில்லை; இதினாலே அவர்கள் மகிமையை அடைவதற்காகச் செய்கிற வழிபாட்டைக் கொண்டுதானே நிந்தையை அடைவார்கள். இது காரியத்தில் அர்ச். பொனவெந்தூர் சொல்லுகிறதாவது: ஆங்காரம் மனக் குருட்டாட்டமாகும் ; அது நம்மிடத்தில் இல்லையென்று நினைக்கும் போதுதான், அது வெகுவாய் இருக்கும். இதினாலே சிலவிசை ஆங்காரி தனக்கு மகிமை வருவிப்பதற்காக ஒன்றும் நினையாமல் வெகு காரியங்களைச் சொல்லுவான், செய்வான் ; ஆனால் அவன்தானே இது காரியத்தில் கொஞ்சம் யோசனை செய்திருந்தால், இதையெல்லாம் சொல்லியிருக்கவுமாட்டான், செய்திருக்கவுமாட்டான். யாதோர் சமயத்தி





லே ஆங்காரி மற்றவர்கள் தன்னைச் சட்டைபண்ணவில்லையென்றும் தன்னைவிட மற்றவர்களைக் கனம்பண்ணினார்களென்றும் மனம் நொந்து இதினாலே தனக்குப் பொல்லாப்புச் செய்தார்களென்றும் தன் மகிமை கெட்டுப் போயிற்றென்றும் இதின்பேரில் தான் முறைப்பாடு சொன்னால், தனக்கு மகிமை வருமென்றும் எண்ணி இது காரியத்தில் தன் மனசிலுள்ளதெல்லாத்தையும் வெளிப்படுத்துவான். ஆகிலும் இதினிமித்தம் அவனைத் தாழ்வாயெண்ணுவார்கள் ; ஏனென்றால் அவன் ஆங்காரியென்றும் மகிமையைத் தேடித் திரிகிறவனென்றும் எண்ணுவார்கள்; சங்கிபாசத்திலே மிகவும் பகைக்குரிய காரியமிதுவே. போன காரியத்தைத் திரும்பி தூண்டிவிடாமல் சிரேஷ்டர் சித்தம்போலே செய்ததைச் செய்யட்டுமென்று விட்டுவிட்டால், சகலரும் இவனைக் கனமாய் எண்ணிச் சிநேகிப்பார்கள்.

ஆகையால் புண்ணியத்தையும் சாங்கோபாங்கத்தையும் கவனியாமல் உலக புத்தியையும் உலக மகிமையையுமாத்திரம் யோசித்துப் பார்த்தால், புண்ணியத்தையும் தாழ்ச்சியையும் அநுசரிப்பதே மற்றவர்கள் நம்மைச் சிநேகித்துக் கனம்பண்ணுவதற்கு மிகவும் தகுந்த வழிபாடாகும். ஸ்பார்த்துதேசத்தில் விளங்கின மகா புத்தியுள்ள இராசாக்களில் ஒருவனாகிய அஜெஸ்லாசென்பவனிடத்தில் சோக்கிராத்தேசென்பவன் மனுஷருடைய மேலான எண்ணத்தை அடைவதற்கு என்னசெய்யவேணுமென்று கேட்டான். அதுக்கு அவன் சொன்னதாவது : உன்னை மற்றவர்கள் எப்படிப்பட்டவனென்று நினைக்க மனசாயிருக்கிறாயோ, அப்படிப்பட்டவனாவதற்குப் பிரயாசப்படுவென்றான். வேறொரு சமயத்தில் வேறொருவன் இந்தக் கேள்வியைத்தானே கேட்டதற்கு அவன் சொன்னதாவது : நீ நல்லதை மாத்திரம் பேசி மகிமைப்பட்டதை மாத்திரஞ்செய்தால், மற்றவர்கள் உன்னைக் கனமாயெண்ணுவார்களென்றான். வேறொரு அஞ்ஞான சாஸ்திரியுடைய சிநேகிதன் எங்கும் அவன்பேரில் புகழ்ச்சியாய்ப் பேசுவான். ஒருநாள் அவன் அந்த சாஸ்திரியைப் பார்த்துச் சொன்னதாவது : உன் புண்ணியத்தையும் மேன்மையும் நான் எங்கும் புகழ்ந்து பாராட்டுகிறேனே ; இதினாலே நீ எனக்கு நன்றியறிந்திருக்க வேணுமென்றான். அதுக்கு அந்தச் சாஸ்திரி சொன்ன மாறுத்தரமாவது : நீ என்பேரில் சொல்லுகிற புகழ்ச்சி பொய்யாகாதபடிக்கு நான் மெய்யாகவே புண்ணிய வழியில் நடக்கிறதினாலே, நீயும் எனக்கு நன்றியறிந்திருக்க வேணுமென்றான்.





ஆகிலும் மனுஷருடைய புகழ்ச்சியை அடைவதற்காகப் புண்ணியம் செய்ய வேணுமென்று நாம் இங்கே சொல்லுகிறதில்லை ; ஏனென்றால் இதுக்காகப் புண்ணியஞ் செய்தால், அந்தப் புண்ணியம் ஒன்றுக்கும் உதவாமல் கெட்டுப்போகும். நீ மெய்யாகவே தாழ்ச்சியுள்ளவனாகப் பிரயாசப்பட்டால், நீ மகிமையை விரும்பாதிருந்தாலும், உனக்கு நிச்சயமாய் மகிமை வருமென்றும் மகிமையை எவ்வளவு விலக்கி நிந்தைப்பட ஆசிப்பாயோ அவ்வளவு மற்றவர்கள் உன்னைக் கனம்பண்ணுவார்களென்றும் சொல்லுகிறோமேயொழிய மற்றப்படியல்ல. ஏனென்றால் மகிமை நமது சரீரத்தின் நிழல்போலே யிருக்கும் ; அந்த நிழலைவிட்டு ஓடினால், அது உன்னைத் துடர்ந்துவரும்; நீ அதைப் பிடிக்க ஓடினால், உனக்கு எட்டாமல் ஓடிப்போகும். இதினாலே அர்ச். எரோணிமுஸ் அர்ச். பவுலம்மாளைக் குறித்துச் சொன்னதாவது : அவள் மகிமையை விலக்கி நடந்ததினாலே, மகிமை அடைந்தாள்; நிழல் மனுஷனைத் துடர்ந்துவருகிறதுபோலே, மகிமை புண்ணியவானைத் துடர்ந்துவரும் ; மகிமையைத் தேடுகிறவனை அது விலக்கித் தள்ளி அதைத் தேடாதவனிடத்திலே வந்து சேருமென்றார்.

இயேசுநாதர் தாமே இந்தப் புத்தியைச் சுவிசேஷத்தில் நமக்குப் போதித்திருக்கிறார். அதெப்படியென்றால், பரிசேயர் கூடுகிற கூட்டங்களில் தங்களுக்கு முதலிடம் வேணுமென்று தேடித்திரிகிறதைக் கண்டு அவர்களை நோக்கிச் சொன்னதாவது : யாராகிலும் கலியாண விருந்துக்கு உன்னை அழைத்தால், முதலிடத்திலே போய் உட்காராதே ; ஏனென்றால் உனக்கு மேற்பட்டவன் யாராகிலும் வந்தால், உன்னையும் அவனையும் வரவழைத்தவன் உள்ளே பிரவேசித்து உன்னைப் பார்த்து அப்பாலே போ, இவன் உன்னிடத்தில் இருக்கட்டுமென்று சொல்லுவான் ; அப்போது நீ வெட்கப்பட்டுக்கொண்டு கடைசியிடத்துக்குப் போகவேண்டியதாய் வரும். ஆனால் உன்னை விருந்துக்கு வரவழைத்தால், போய்க் கடைசியிடத்தில் உட்காரு ; அப்போது உன்னை விருந்துக்கு வரவழைத்தவன் வந்து உன்னைப் பார்த்து என் சினேகிதனே, மேலான இடத்துக்குப் போவென்பான் ; அப்போது விருந்திலிருக்கிற சகலருக்கு முன்பாக உனக்கு மகிமை வருமென்றார். இஸ்பிரீத்துசாந்து ஞானிவாயாலே நமக்குப் போதித்திருக்கிற போதகமுமிதுவே. அதென்னவென்றால், இராசாவுக்கு முன்பாக மகிமை பாராட்டாதே, பெரிய மனுஷாளோடு கூட இராதே ; ஏனென்றால்



இராசாவுக்கு முன்பாக அவ
க்கு வாவென்று உன்னைப் பா
டைசியாய்த் தன்னை உயர்த்
தாழ்த்துகிறவன் உயர்த்தப்
ம்பற்றினார். ஆகையால் தா
த் தன்னைத் தாழ்த்துகிறவன்
க மகிமைப்பட்டவனாவான்.
ன்மைப்பட ஆசிக்கிறவன் ச
வான். இது காரியத்தில் அர்
லுகிறதாவது : ஓ! பரிசுத்த
எவ்வளவு வித்தியாசம் ! சகே
த்திலிருந்து தாழ தள்ளிவிட்
தாரம் பண்ணுவதற்காக அவ
ய்தது. ஆங்காரம் ஆதாமைப்
டது ; தாழ்ச்சி நல்ல கள்ளனு
ங்காரம் மனுஷருடைய பாஷை
பல பாஷைக்காரரை ஒன்று
தோனேசோவென்னும் இராச
ச்சி சூசையென்பவரை எ
கோபென்பவருடைய புத்திர
ரம் பரவோனைக் கெடுத்தது ;
த்தினதென்றார்.

உஉ-ம்

மனசமாதானத்தை
வழிபாடென்றும்
அடையக்கூட

நாம் சாந்த குணமும்
த்தில் கற்றுக்கொள்ளுங்கள் ;
பிடிப்பீர்களென்று இயேசுநா





இராசாவுக்கு முன்பாக அவமானப்படுகிறதைவிட மேலான இடத்துக்கு வாவென்று உன்னைப் பார்த்துச் சொல்லுகிறது நலமென்றார். கடைசியாய்த் தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப் படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவானென்று உலக இரட்சகர் திருவுளம்பற்றினார். ஆகையால் தாழ்ச்சியாயிருந்து மற்றவர்களுக்குக் கீழாகத் தன்னைத் தாழ்த்துகிறவன் சர்வேசுரனுக்கும் மனுஷருக்கும் முன்பாக மகிமைப்பட்டவனாவான். ஆங்காரியாயிருந்து எல்லாத்திலும் மேன்மைப்பட ஆசிக்கிறவன் சகலராலும் நிந்தையும் அவமானமும் படுவான். இது காரியத்தில் அர்ச். அகுஸ்தீன் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது : ஓ! பரிசுத்த தாழ்ச்சியே, உனக்கும் ஆங்காரத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்! சகோதரரே, ஆங்காரம் லூசிபேரை மோக்ஷத்திலிருந்து தாழ தள்ளிவிட்டது ; தாழ்ச்சி தேவசுதன் மனுஷ அவதாரம் பண்ணுவதற்காக அவரை மோக்ஷத்திலிருந்து இறங்கிவரச்செய்தது. ஆங்காரம் ஆதாமைப் பூலோக பரகதியிலிருந்து துரத்திவிட்டது ; தாழ்ச்சி நல்ல கள்ளனுக்கு மோக்ஷபாக்கியங் கொடுத்தது. ஆங்காரம் மனுஷருடைய பாஷையைக் கலக்கிக் குழப்பினது ; தாழ்ச்சி பல பாஷைக்காரரை ஒன்றாகக் கூட்டினது. ஆங்காரம் நாபுக்கோதோனோசோரென்னும் இராசாவை மிருகமாக்கித் தாழ்த்தினது ; தாழ்ச்சி சூசையென்பவரை எஜிப்த்து தேசத்தாரெல்லாருக்கும் யாக்கோபென்பவருடைய புத்திரருக்கும் மேலாக உயர்த்தினது. ஆங்காரம் பரவோனைக் கெடுத்தது ; தாழ்ச்சி மோயீசனைக் காப்பாற்றி உயர்த்தினதென்றார்.

## உஉ-ம் அதிகாரம்.

மனசமாதானத்தை அடைவதற்குத் தாழ்ச்சி தகுந்த
வழிபாடென்றும் தாழ்ச்சியில்லாமல் அதை
அடையக்கூடாதென்றும் சொல்லுவது.

நாம் சாந்த குணமும் மனத் தாழ்ச்சியுமுள்ளவரென்று நம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள் ; அப்போது மனசமாதானத்தைக் கண்டுபிடிப்பீர்களென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். மனசமாதானம்






ஆத்தும நன்மைகளில் ஒன்றென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றி
யிருக்கிறார். அது மிகவும் ஆசிக்கத்தக்கதும் விலையேறப்பெற்றதுமா
ன நன்மையாகக்கொள்ள, அதை யடைவதற்காக உலோகத்தின் மே
லான எண்ணத்தைப் பிறக்கணித்துத் தாழ்ச்சியுள்ளவர்களாக் வருந்
தக்கடவோம்; மனசமாதானத்தை அடைவதற்குத் தாழ்ச்சியே ஏகவ
ழிபாடென்று மேற்சொன்ன வார்த்தைகளைக் கொண்டு இரட்சகர் வெ
ளிப்படுத்தியிருக்கிறார். ஆனால் ஒரு காரியத்துக்கு விரோதமான காரி
யத்தைச் சொல்லிக் காட்டினால், அது விளங்குமென்பதினாலே ஆங்கா
ரிகளுடைய இருதயத்தில் உண்டாகிற கலக்கமும் குழப்பமும் எவ்வ
ளவென்று பார்க்கக் கடவோம்; இதினாலே தாழ்ச்சியுள்ளவர்கள் சுகித்
தநுபவிக்கும் சமாதானமும் அமரிக்கையும் எவ்வளவென்று தெரியவ
ரும். கெட்டவர்களிடத்தில் மனசமாதானமே இல்லையென்று வேதாக
மத்தில் எவ்விடத்திலும் சொல்லியிருக்கிறதறிவோம். கெட்டவர்களு
க்குச் சமாதானமே கிடையாதென்று இசாயியாசென்னும் தீர்க்கத
ரிசி வசனித்தார். சமாதானம், சமாதானமென்று அவர்கள் சொன்
னாலும், அவர்களுக்குச் சமாதானமே கிடையாதென்று எரேமியாசெ
ன்னும் தீர்க்கதரிசி வசனித்தார். அவர்களுடைய பாதையில் துக்கமு
ம் நிர்ப்பாக்கியமுமேயல்லாமல் சமாதானம் இன்னதென்று அவர்களுக்
குத் தெரியாதென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அவ
ர்களுடைய மனச்சாட்சி அவர்களுக்கு விரோதமாய் இடைவிடாமல்
யுத்தம்பண்ணும்; அவர்களிடத்தில் ஏதாகிலும் அற்ப சமாதானம் உ
ண்டாயிருந்தாலும், அதுவும் கசப்பான கஸ்தி நிறைந்திருக்கும். ஆனா
ல் விசேஷமாய் ஆங்காரிகளிடத்தில் இடைவிடாத மனக்கலக்கமுண்
டாயிருக்கும். இதற்கு முகாந்தரம் இன்னதென்று அர்ச். அகுஸ்தீன்
சொல்லுகிறதைக் கேள்: காய்மகாரமில்லாமல் ஆங்காரம் இருக்கவேமா
ட்டாது ; ஆங்காரத்தினாலேயும் காய்மகாரத்தினாலேயும் மாத்திரம் ப
சாசு பசாசாய் இருக்கிறதென்றார். ஆகையால் இவ்விரு துர்க்குணமும்
பசாசைப் பசாசாக்கியிருக்க, அது மனுஷனிடத்தில் என்னசெய்யுமெ
ன்று அறிந்துகொள்ளுகிறது எளிதே. ஆங்காரத்தையும் அதைவிட்டு
ப் பிரியாத துணையாகிய காய்மகாரத்தையுங் கொண்டிருக்கிற மனுஷ
ன் சகலரும் தன்னைக் கனம்பண்ண வேணுமென்று தேடினாலும், அது
கைகூடி வராமல் தன்னைவிட மற்றவர்களைக் கனம்பண்ணுகிறார்களெ
ன்று கண்டு அவனுடைய இருதயம் பித்தைப் பார்க்கக் கசப்பான து
க்கசாகரத்தில் அமிழ்ந்தி இடைவிடாமல் கலக்கமுற்றிருக்குமென்பத

ற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் மற்றவர்கள் தன்னைப் பிறக்கணித்து வேறொருவனைத் தனக்கு மேலாய் எண்ணுகிறார்களென்று ஆங்காரி கண்டு பொறுக்கக் கூடாத கலக்கமும் கஸ்தியும் படுவான்.

ஆங்காரத்தின் துர்க்குணத்தைக் காட்டுவதற்காக ஆமானென்பவனைக் குறித்து வேதாகமத்தில் சொல்லியிருக்கிற ஆச்சரியமான வர்த்தமானத்தைக் கேள்: இந்த ஆமானென்பவன் அசுவேருசென்னும் இராசாவுக்கு வெகுசனுவாளியாயிருந்தான். இராசா அவனை ஆஸ்திபந்தனுக்கித் தன் இராச்சியத்திலுள்ள சகல வம்மிஷபதிகளுக்கும் மேலாய் உயர்த்தினன். ஆகையால் சகலரும் இவனைக் கனம்பண்ணிக்கொண்டு வந்தார்கள்; இவனுக்கு ஒன்றிலொன்று குறை இல்லையென்று தோன்றினது. ஆகிலும் இராசா அரமனை வாசலைக் காத்துக்கொண்டிருந்த ஒருவன் இவன் வரும்போது எழுந்திருந்து இவனைக் கும்பிடாததினலே, இவன் வெகுவாய் மனங்கலங்கிக் கஸ்திப்பட்டு ஒருநாள் தன் சினேகிதருக்கும் பெண்சாதிக்கும் இது காரியத்தை வெளிப்படுத்தினன். அதெப்படியென்றால், தன் ஆஸ்தியின் திரட்சியையும் தனக்குக் கிடைத்த மேன்மை பெருமையையும் இராசா தினந்தோறும் தனக்குப் பண்ணுகிற சனுவையும் எடுத்துக் காட்டி அவன் சொன்னதாவது: ஆகிலும் யூதனான மர்தொக்கேயென்பவன் இராசா அரமனை வாசலில் உட்கார்ந்திருக்கிறதை நான் காண்கிற வரைக்கும் இதுவெல்லாம் ஒன்றுமில்லையென்று எண்ணுகிறேனென்றான். அவனிடத்திலே எவ்வளவு கலக்கமும் குழப்பமும் உண்டாயிருந்ததென்று இந்த வார்த்தைகளைக் கொண்டு தெரியவரும்! ஆங்காரத்தினலே மனுஷனுடைய இருதயத்தில் எழும்புகிற புசல் எப்படிப்பட்டதென்று இதினலே அறிந்துகொள்ளலாம். ஆகையால் கெட்டவர்கள் அமரிக்கைப்படாமல் அலைக்கழிக்கப்படுகிற கடலுக்கு ஒப்பாயிருக்கிறார்களென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். கடைசியாய் ஆமானென்பவன் மர்தொக்கேயென்பவன் பேரில் கொண்ட குரோதத்தினலே அவனைப் பழிவாங்கிறதும் போதாமல் யூத சனங்களெல்லாரையும் பழிவாங்க வேணுமென்று தீர்மானித்து அவர்களெல்லாரையும் சங்கரிப்பதற்காக அசுவேருசென்னும் இராசாவிடத்தில் தீர்ப்புப் பெற்றுக்கொண்டான். இந்தக் கொலைபாதகத்துக்குக் குறித்த நாள் வருமட்டும் காத்திராமல் மர்தொக்கேயென்பவனைத் தூக்கிலே போடுவதற்கு ஓர் கழுமரத்தை நட்டு அவனைத் தூக்குவதற்கு இராசாவிடத்தில் உத்தரவு கேட்க வந்தான.

ஆனால் தேவதிருவுளம் அவனுடைய கருத்தையெல்லாம் நிர்மூலமாக்கி அவனை வெட்கப்படுத்தி மர்தொக்கேயென்பவன் பேரில் அவன் வாங்க நினைத்திருந்த பழியை அவன்பேரிலேதானே கொண்டுவந்துவிட்டது. அதெப்படியென்றால், அன்றிராத்திரி இராசா நித்திரை செய்யக்கூடாதிருந்ததினாலே, தன் இராச்சியத்தில் நடந்த பிரதான வர்த்தமானங்கள் எழுதியிருந்த புத்தகத்தைக் கொண்டுவரச் சொல்லி, அதை வாசிக்கச் சொன்னான். அப்படியே வாசித்துக்கொண்டு வருகையில், இராசாவுக்கு விரோதமாய் அண்ணகர் செய்திருந்த சதிமானத்தை மர்தொக்கேயென்பவன் இராசாவுக்கு வெளிப்படுத்தினானென்று எழுதியிருந்தது. அதற்காக மர்தொக்கேயென்பவனுக்கு என்ன வெகுமதி கொடுத்தார்களென்று இராசா கேட்டார்; ஒன்றுங் கொடுக்கவில்லையென்று சொன்னார்கள். அப்போது ஆமானென்பவன் அறைக்குள் பிரவேசித்தான். அது யாரென்று இராசா கேட்டார்; ஆமானென்று சொன்னார்கள். உடனே அவனை உள்ளே வரச்சொல்லி இராசா அவனிடத்தில் கேட்டதாவது: இராசா யாதொருவனைக் கனம்பண்ண வேணுமானால், அவனுக்கு என்ன செய்ய வேணுமென்று கேட்டார். தன்னைவிட வேறொருவனையும் இராசா கனம்பண்ண மாட்டாரென்று ஆமான் நினைத்துக்கொண்டு சொன்னதாவது: இராசா யாதொருவனைக் கனம்பண்ண வேணுமென்று தாற்பரியப்பட்டால், அவனுக்கு இராச உடை உடுத்தி இராசா ஏறுகிற குதிரைமேலே அவனை ஏற்றி அவன் தலையிலே கிரீடத்தை வைத்து இந்த இராச்சியத்திலேயுள்ள மேலான உத்தியோகஸ்தரிலொருவன் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு இராசா கனம்பண்ண விரும்புகிறவனுக்கு இந்த மகிமை கிடைக்குமென்று ஊர்வலம் சுற்றித் தெருவிலெங்குங் கட்டியங்கூற வேணுமென்றான். அப்போது இராசா உடனே நீ போய் இராச வஸ்திரத்தை எடுத்து அரமனை வாசலிலே இருக்கிற மர்தொக்கேயென்பவனுக்கு உடுத்தி அவனைக் குதிரைமேலேற்றி கிரீடம் தரித்து நீ கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு கட்டியம் கூறி ஊர்வலம் வா; இதொன்றையும் விடாமல் எல்லாத்தையும் சரியாய்ச் செய்ய வேணுமென்றான். ஐயோ! இதைக் கேட்டவுடனே, ஆங்காரத்தினாலே உப்பிப்போயிருந்த ஆமானுடைய இருதயம் இரண்டாய் வெடித்தாற்போலானது. ஆங்காரிக்கு இதைவிடப் பயங்கரமான அவமானம் எங்கேயாகிலுமுண்டோ? ஆகிலும் ஆமானென்பவன் இதையெல்லாம் சரியாய்ச் செய்து முடிக்கவேண்டியதாயிற்று. அவன் மர்தொக்கேயென்பவனைத் தூக்குவதற்கு நட்டிருந்த கழு

மரத்திலே அவன்தானே கொஞ்ச நாளைக்குப்பின் தூக்குண்டு மாண்டான். வீண்மகிமையைத் தேடுகிறதினாலே வரும் பிரயோசனம் இதுவே. ஆமானென்பவன் அவ்வளவு மனக்கலக்கமும் மர்தொக்கேயென்பவன்பேரில் அத்தனை கோப வெறியும் பகையும் கொண்டதற்குக் காரணமென்னவென்று யோசித்துப் பார்: இவன் போகும்போது, மர்தொக்கேயென்பவன் இவனைக் கும்பிடாததே இதற்குக் காரணமாகும். அங்காரியுடைய அமரிக்கையைக் குலைத்து இடைவிடாமல் கஸ்திபாகிற புழு அவன் இருதயத்தைக் குடைந்துகொண்டிருப்பதற்கு வெகு சொற்பக் காரியமே காரணமாயிருக்கும். சமுசாரவாசிகளிடத்திலும் விசேஷமாய் மேலான அந்தஸ்திலிருக்கிறவர்களிடத்திலும் நடக்கிற காரியம் இதுவே. அவர்களுடைய அங்காரத்துக்கு விரோதமான காரியம் எள்ளளவாகிலும் சம்பவித்தால், அவர்களுக்குப் பிராணன் போகிறப்போலேயிருக்கும்; அவர்களைக் கத்தியாலே வெட்டினாலும், அது அவர்களுக்கு அத்தனை வேதனையாகத் தோன்றாது. ஒருவன் எவ்வளவு மேன்மையையும் சலுவையும் அடைந்திருந்தாலும், எப்போதும் அவனுக்கு யாதொரு அற்ப அவமானமாகிலும் வரலாமென்று அவன் அறிந்திருக்கிறதினாலே, அவனுடைய மனம் இடைவிடாமல் கசப்பான துக்கசாகரத்தில் அமிழ்ந்தி எந்நேரமும் கலக்கமுற்றிருக்கும். அங்காரமுள்ள சந்நியாசிக்கும் நடக்கிற காரியம் இதுவே; ஏனென்றால் தன்னைவிட மற்றவர்களைக் கனமாய் எண்ணுகிறார்களென்றும் இன்னார் இன்னாருக்கு இந்த அலுவலைக் கொடுத்தார்களென்றும் தன்னை நினைக்கவில்லையென்றும் இவன் அறிந்து சமுசாரவாசிகள் தங்களுக்கு நேரிட்ட மகிமைக் குறைச்சல் நிமித்தமாகப் படுகிற வருத்தத்தைவிட இவன் அதிக எரிச்சல் கொண்டு கலக்கமுற்றிருப்பான். எத்தனையோ சந்நியாசிகள் ஆங்காரத்தினாலே சந்நியாசத்தை விட்டுப் போகிறதற்கு ஏதுவான ஆபத்தில் இருந்தார்கள்! எத்தனையோ சந்நியாசிகள் தங்களை ஒருவரும் மதிக்கவில்லையென்றும் சந்நியாசத்திலே மகிமை பெற்றிருக்கத் தங்களாலே கூடாதென்றும் எண்ணி சந்நியாசத்தை விட்டுப்போனார்கள்! எத்தனையோ சந்நியாசிகள் ஈடேறாமல் கெட்டுப்போனதற்கு ஆங்காரம் காரணமாயிருந்தது! ஏனென்றால் தாழ்ச்சி புண்ணிய சாங்கோபாங்கத்துக்கு அவசரமாயிருக்கிறதுமல்லாமல் ஆத்தும ஈடேற்றத்துக்கும் அந்தமுறை அவசரமாயிருக்கும். இதினாலல்லோ நீங்கள் இந்தச் சிறுபிள்ளைகளைப்போலே சிறுபிள்ளையாகாவிட்டால், மோட்ச இராச்சியத்தில் பிரவேசிக்க மாட்டீர்களென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். ஓ! உ

லோகத்தின் மேலான எண்ணமே, நீ எத்தனை பொல்லாப்புச் செய்தாய், எத்தனை பொல்லாப்புச் செய்கிறாய், எத்தனை பொல்லாப்புச் செய்வாயென்று அர்ச். சவேரியார் அடிக்கடி சொல்லிக்கொண்டுவருவார்.

இதுவரையில் நாம் சொன்னதெல்லாம் யோசிக்குமளவில், நாமே அநந்தமுறை அநுபவசித்தியினால் அறிந்திருக்கிற வேறொரு சத்தியத்தை ஒப்பிப்பதற்கு இது உதவும். அதென்னவென்றால்; சிலவிசை பித்தநீர் சிரோகாதிபந்தம் பரவுகிறதினாலே, மனதைக் கஸ்தி பிடித்து உபாதிப்பது மெய்தான்; ஆகிலும் அநந்தமுறை நமது மனதிலே கஸ்தி உண்டாவதற்குப் பித்தமும் வேறே எந்தச் சரீர வியாதியும் காரணமாயிராமல் ஆங்காரமாகிற மன வியாதியே அதற்குக் காரணமென்றறிந்திருக்கிறோம். உன்னிடத்தில் சிலவிசை கஸ்தியுண்டாகும்; இதற்குக் காரணம் என்னவென்று நினைக்கிறாய்; மற்றவர்கள் உன்னைச் சட்டைபண்ணாமலும் உன்னைக் கனம்பண்ணாமலும் இருக்கிறதினாலே, இந்தக் கஸ்தி உன்னிடத்தில் உண்டாகும். இன்னொரு சமயத்தில் நீ கஸ்தியாயிருப்பதற்குக் காரணமென்ன? யாதொரு காரியத்திலே உனக்கு மகிமை வருமென்று நம்பியிருந்தாய்; நீ நம்பினபிரகாரம் அது வாய்க்கவில்லை; உனக்கு அவமானமும் வெட்கமும் வந்துவிழுந்தது; இதினாலேதான் நீ கஸ்திப்பட்டுக் கலங்குகிறாய். நீ செய்த அந்தப் பிரசங்கத்திலே அந்த அலுவலிலே நீ ஆசித்தபிரகாரம் உனக்குப் புகழ்ச்சியும் மகிமையும் வராமல் உன் கீர்த்தி கெட்டு உலைந்துபோனது; இதுவே நீ கஸ்திப்படுகிறதற்குக் காரணம். உனக்குக் கீர்த்தி வருவதற்கு ஏதுவான யாதொரு காரியத்தைச் செய்கிறதாயிருக்கும்போது, அது நன்றாய்க் கைகூடிவருமோ இல்லையோவென்று சந்தேகப்பட்டு ஆங்காரத்தினாலே முகம் சோம்பிக் கலக்கமுற்றிருக்கிறதினாலே, உன் கஸ்திக்கு ஆங்காரமே காரணம். கடைசியாய் ஆங்காரியிடத்தில் வருகிற கஸ்தி கலக்கத்துக்கெல்லாம் ஆங்காரமே காரணமல்லாமல் வேறல்ல. ஆனால் மனத்தாழ்ச்சியுள்ளவனுக்கு இந்த வருத்தமெல்லாமில்லை; அவன் உலக மகிமையைத் தேடாமல் எல்லாத்திலும் கடைசி யிடமே எனக்குப் போதுமென்றிருக்கிறதினாலே, அவன் ஒரு மனக்கலக்கமுமில்லாமல் ஆழ்ந்த சமாதானத்தை சுகித்தநுபவிப்பான்; இந்தச் சமாதானத்தைக் குலைக்க ஒருவராலும் முடியாது. ஆகையால் ஞானத்தையும் புண்ணிய சாங்கோபாங்கத்தையும் நாம் விரும்பாமல் நமது பிரயோசனத்தையும் மனசமாதான இன்பத்தையும் மாத்திரம் தேடினபோதிலு

ம், இதுவே நாம் தாழ்ச்சியுள்ளவர்களாவதற்குப் போதுமான முகாந்தரமாகும். உத்தம மன அமரிக்கையோடு உயிர் வாழ்கிறதே மெய்யான சீவியமாமே; இடைவிடாத மனக்கலக்கமுற்றிருப்பது க்ஷணத்துக்கு க்ஷணம் சாகிறதற்கொப்பாகும்.

இது காரியத்திலே அர்ச். அகுஸ்தீன் தமக்கு நடந்த ஒரு வர்த்தமானத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். இதினாலே அவரிடத்திலே இருந்த நிர்ப்பாக்கியமும் குருட்டாட்டமும் இவ்வளவென்று சர்வேசுரன் அவருக்குக் காட்டியருளினார். இந்த வர்த்தமானத்தைக் குறித்து அவர் சொல்லுகிறதாவது: நான் இராயன்பேரில் ஒரு புகழ்ச்சிப் பிரசங்கம் செய்யவேண்டியிருந்தது. அதிலே வெகு பொய்ப் புகழ்ச்சிகளைச் சேர்த்துச் சொல்லவேணுமென்று எண்ணியிருந்தேன்; ஆனால் மற்றொருடைய பைத்தியமும் மகிமைப் பிரியமும் வெகுவாய் இருக்கிறதினாலே, நான் சொல்லவேணுமென்று எத்தனித்திருந்த அந்தப் புகழ்ச்சியெல்லாம் பொய்யென்று அவர்கள் அறிந்திருந்தாலும், இன்னம் அதுவும் பற்றுமென்று அதின்பேரில் பிரியப்பட்டிருக்கமாட்டார்கள். இதினாலே ஒரு நாள்த்தடவையிலே நான் சொல்லப்போகிற இந்தப் புகழ்ச்சிப் பிரசங்கத்தினாலே எனக்கு மகிமை வருமோ இல்லையோ வென்கிற சந்தேகம் என் மனதைப் பிடித்து உபாதித்ததினாலே, நெருப்புப் பறக்க எனக்குக் கனத்த சுரம் அடித்ததுபோலே வேதனைப்பட்டுக்கொண்டிருந்தேன். இப்படி இருக்குங் காலத்தில் நான் ஓர்தடவை மிலாமென்னும் பட்டணத்துத் தெருவிலே போகும்போது, பிச்சைக்காரன் ஒருவன் எனக்கு எதிர்ப்பட்டான். அவன் கொஞ்சம் குடித்துச் சந்தோஷமாயிருக்கிறதை நான் கண்டு பெருமூச்செறிந்து என்னோடிருந்த சிநேகிதனை நோக்கிச் சொன்னதாவது: நம்முடைய பைத்தியத்தை என்னென்று சொல்லுவேன்? நம்முடைய அலுவலிலே நாம் படுகிற கஸ்தியும் கலக்கமும் நிர்ப்பாக்கியமும் பாரமான சுமைபோலே நம்மை இடைவிடாமல் அமுக்கிக்கொண்டிருக்கின்றது. நம்மிடத்திலுள்ள மகிமைப் பிரியத்தினாலே இந்தச் சுமை க்ஷணத்துக்கு க்ஷணம் அதிகப்படுகின்றது. இவ்வளவு வருத்தமெல்லாம் பட்டு இதினாலே நாம் அடையத் தேடுகிறதென்ன? மனஅமரிக்கையும் சந்தோஷமுந்தானே இந்தப் பிச்சைக்காரன் அந்தச் சந்தோஷத்தை அடைந்து அநுபவிக்கிறான்; நாமோவென்றால் அந்தச் சந்தோஷத்தை ஒருகாலும் அடையமாட்டோமாக்கும். இவன் பிச்சைப் பணத்தைக் கொண்டு அடைந்த இந்தச்





சொற்ப சந்தோஷத்தை நாம் எவ்வளவு பிரயாசப்பட்டுத் தேடினாலும் அடையமாட்டோமாக்கும். இந்தப் பிச்சைக்காரனுக்குக் குடியினாலே வந்த அந்தச் சந்தோஷம் மெய்யான சந்தோஷமல்லவென்பது மெய் தான்; ஆனால் நம்முடைய சாஸ்திரத்தைக் கொண்டு நாம் தேடுகிற சந்தோஷம் இதைவிடப் பொய்யான சந்தோஷந்தானே. எப்படியிருந்தாலுஞ் சரி; இந்தப் பிச்சைக்காரன் சந்தோஷமாயிருந்தான், நான் கஸ்தியாயிருந்தேன்; அவன் வெகு மன அமரிக்கையாயிருந்தான், நான் மனக்கலக்கப்பட்டுப்பிராணன் போகிறதுபோலே யிருந்தேன். யாதொருவன் என்னைப் பார்த்து உனக்குச் சந்தோஷம் வேணுமோ கஸ்தி வேணுமோவென்று கேட்டிருந்தால், சந்தோஷம் வேணுமென்று சொல்லியிருப்பேனென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகிலும் நீ அந்தப் பிச்சைக்காரனைப்போலே இருக்கவேணுமோ, நீ இருக்கிறதுபோலே இருக்கவேணுமோவென்று என்னிடத்தில் கேட்டிருந்தால், நான் இருந்த அந்தஸ்திலே ஆயிரம் கவலை விசாரம் வந்து என் இருதயத்தைக் கிழித்தாலும் நான் இருக்கிறதுபோலேதான் இருக்கவேணுமென்று சொல்லியிருப்பேன். ஆனால் இப்படிச் சொல்லுகிறதற்குக் காரணம் ஒன்றுமில்லை; ஏனென்றால் இந்தப் பிச்சைக்காரனுடைய அந்தஸ்துக்கு என் அந்தஸ்து மேற்பட்டதென்று எண்ணுவதற்குக் காரணமென்ன? அவனைவிட நான் சாஸ்திரியாய் இருந்தது காரணமோ? இல்லை, இல்லை; ஏனென்றால் என் சாஸ்திரத்தினாலே எனக்கு ஒரு சந்தோஷமும் வரவில்லையே; என் சாஸ்திரத்தைக் கொண்டு மற்றவர்களுக்குப் புத்திவருவிக்கவேணுமென்று தேடாமல், அவர்களுக்குப் பிரியப்படவேணுமென்று மாத்திரம் தேடித் திரிந்தேனே. ஆகையால் என்னைவிட இந்தப் பிச்சைக்காரன் பாக்கியவானென்பதற்குச் சந்தேகமில்லை; ஏனென்றால் அவனிடத்திலே சந்தோஷமிருந்தது, என்னிடத்திலே ஆயிரம் கவலை விசாரம் வந்து என்னை உபாதித்துக்கொண்டிருந்தது. அன்றியும் குடித்துச் சந்தோஷப்படுவதற்கு அவன் செய்த வழிபாட்டிலே பாவமில்லை; நான் பொய் சொல்லிக் கீர்த்தி அடையப் பிரயாசப்பட்டதினாலே, என்னிடத்திலே பாவமுண்டாயிருந்ததென்றார்.

———oooo———





# உங-ம் அதிகாரம்.

———(:o:)———

தாழ்ச்சி முயற்சி செய்கிறது இந்தப் புண்ணியத்தை அடைவதற்கான விசேஷ வழிபாடென்று சொல்லுவது.

———ooo———

**தா**ழ்ச்சியென்னும் புண்ணியத்தை அடைவதற்கான பற்பல ஞாயங்களையும் முகாந்தரங்களையும் இதுவரையில் எடுத்துக் காட்டினோமே; இதுவே இந்தப் புண்ணியத்தை நாம் அடைவதற்கு முதல் வழிபாடாகும். ஆனால் நம்முடைய ஆதித்தாய் ஆதித்தகப்பன் சர்வேசுரனைப்போலாகவேணுமென்று கொண்டிருந்த அகந்தைக்குரிய நம்பிக்கை நமது இருதயத்தில் ஆங்காரமாகிற விதையை ஆழமாய் விதைத்திருக்கிறதினாலே, அந்த ஆங்காரத்தை அழிப்பதற்கு ஞாயமாத்திரம் பற்றாது. நாம் இது காரியத்திலே சுபாவமாய்ப் பயந்தாரிகளைப்போலே இருக்கிறோம். நீங்கள் பயப்பட ஒரு காரணமுமில்லையென்று பயந்தாரிகளுக்கு எத்தனை ஞாயங்களைச் சொல்லிக் காட்டினாலும், அவர்கள் சொல்லுகிறதாவது: நீங்கள் சொல்லுகிறதெல்லாம் மெய்தான்; பயப்படக் காரணமில்லையென்று எங்களுக்குத் தெரியும்; ஆகிலும் எங்கள் பயம் எங்களைவிட்டு நீங்க வழிகாணோமென்பார்கள். இப்படியே சிலர் சொல்லுகிறதாவது: உலக மகிமையின்பேரிலும் மேலான எண்ணத்தின்பேரிலும் நீங்கள் சொல்லுகிறதெல்லாம் மெய்தான்; இதை ஒத்துக்கொள்ளுகிறோம்; உலக மகிமை காற்றும் புகையுமென்று நன்றாய் அறிந்திருக்கிறோம்; ஆகிலும் அதைச் சட்டைபண்ணாமல் பிறக்கணித்துத் தள்ள எங்களாலே முடியவில்லை; என்னமோ உலக மகிமை எங்களை மயக்கி இழுத்துக்கொண்டுபோய் எங்கள் மனதைக் கலக்குகிறதென்பார்கள். பயந்தாரியின் பயத்தைத் தீர்ப்பதற்குச் சொல்லுகிற ஞாயமெல்லாம் பற்றாதேபோனால், அவன் பயப்படுகிற வஸ்துவுக்குக் கிட்டப்போய் அதைத் தொடவும் இராத்திரியிலே இருட்டான இடங்களில் அவனைப் போகவும் சொல்லுகிறது வழக்கம். அவன் அப்படிச் செய்தால், தன்னிடத்திலுள்ள பயம் வீண்காரியமென்றும் அதற்கு முகாந்தரம் ஒன்றுமில்லையென்றும் பரிட்சை பார்த்து அறிந்துகொள்ளு






வான். இவ்வண்ணமே உலக மகிமையின்பேரில் ஒருவனுக்குள்ள பற்றுதலை முழுதும் நீக்கி அவனைச் சரியான புத்திக்குக் கொண்டுவரவேணுமானால், அவனுக்கு ஸ்திரமான ஞாயங்களை எடுத்துக்காட்டி உலக மகிமை ஒன்றுமில்லையென்று ஒப்பிக்கிறது பற்றாது; அவனைத் தாழ்ச்சி முயற்சி செய்யப் போடவேண்டும். இந்தப் புண்ணியத்தை அடைவதற்கு தாழ்ச்சி முயற்சியைச் செய்கிறதே தகுந்த வழிபாடென்று அர்ச்சியசிஷ்டவர்கள் தீர்மானித்தார்கள்.

பழக்கத்தினாலேயும் அப்பியாசத்தினாலேயும் கல்வி சாஸ்திரங்களை நாம் கற்றுக்கொள்ளுகிறதுபோலே, புண்ணியங்களையும் அப்பியாசத்தினாலேதான் அடைய வேணுமென்று அர்ச். பசிலியார் வசனித்தார். நல்ல வேலைக்காரனும் கெட்டிக்கார உபாத்தியனும் சிறந்த வாசாலகனும் புத்திச் சூட்சமுள்ள ஞானசாஸ்திரியுமாவதற்கு அந்தந்த தொழிலுக்கடுத்த கிரிகைகளைப் பலமுறை செய்து செய்து பழகவேண்டும்; அப்பியாசத்தினாலே மாத்திரம் இது கைகூடிவரும். இவ்வண்ணமே தாழ்ச்சியையும் வேறெந்தப் புண்ணியத்தையும் அடைவதற்கு அந்தந்தப் புண்ணியத்துக்குரிய முயற்சிகளைச் செய்ய வேண்டும்; விடாத அப்பியாசத்தினாலே மாத்திரம் எந்தப் புண்ணியத்தையும் அடையலாம். துர்க்குணத்தையும் ஆசாபாசங்களையும் அடக்கி அதுகளை ஒழுங்குப்படுத்துகிறதற்குப் புத்தி ஞாயமும் சுவிசேஷ போதகமும் மாத்திரமே போதுமென்று யாதொருவன் சொன்னால், அது தப்பறையாகும். யாதாமொருவன் வீடு கட்டுவதற்குச் செய்ய வேண்டியதைத் தன் ஆயுசுகாலமெல்லாம் படித்தறிந்தாலும், இந்த வேலையை ஒருகாலும் செய்து பழகாவிட்டால், இவனைக் கொத்தனென்று சொல்லலாமோவென்று அர்ச். பசிலியார் வசனித்தார். யாதொருவன் ஒரு கல்விக்கடுத்த ஒழுங்குகளையும் பிரமாணங்களையும் எந்நேரமும் படித்தறிந்திருந்தாலும், அந்தக் கல்வியை ஒருகாலும் செய்து பழகாவிட்டால், இவன் ஒருகாலும் கல்விமானாக மாட்டானென்பது நிச்சயமாமே. அப்படியே தாழ்ச்சியையும் வேறெந்தப் புண்ணியத்தையும் செய்து செய்து பழகாவிட்டால், அதை ஒருகாலும் அடையக் கூடாதென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலல்லோ தேவ கற்பனைக்குக் காது கொடுக்கிறவர்கள் சர்வேசுரன் சமுகத்தில் நீதிமான்களாக மாட்டார்கள்; ஆனால் தேவ கற்பனையைச் செய்து முடிக்கிறவர்கள் நீதிமான்களாவார்களென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். நற்புத்திமதிகளின்படி நடக்கா





விட்டால், அதுக்குக் காது கொடுப்பது வீணாயிருக்கும்; இது காரியத்திலே அறிவைவிட அப்பியாசம் நல்லது. எவ்விதப் புண்ணியமும் நன்மையும் சர்வேசுரன் கையிலிருந்து நமக்கு வரவேணுமேயல்லாமல் நம்மாலே ஒன்றும் ஆகாதென்பது மெய்தான்; ஆனால் சர்வேசுரனையல்லாமல் நம்மாலே ஒன்றும் ஆகாதிருந்தாலும், நாம் இதற்காக நம்மால் இயன்றமட்டும் உழைத்துப் பிரயாசப்பட வேணுமென்று சர்வேசுரன் சித்தமாயிருக்கிறாரென்பது நிச்சயம்.

உங்கள் எசமானும் ஆண்டவருமாகிய நாம் உங்களுக்குக் கால் கழுவியிருக்க நீங்களும் ஒருவர் ஒருவருக்குக் கால் கழுவ வேணுமென்று இரட்சகர் திருவுளம்பற்றினார். இவ்வாக்கியத்தை அர்ச். அகுஸ்தீன் வியாக்கியானித்துச் சொல்லுகிறதாவது: இயேசுநாதர் தாமே அப்போஸ்தலருக்குக் கால் கழுவி நாம் தாழ்ச்சி முயற்சி செய்ய வேணுமென்று இதினாலே நமக்குப் போதித்தருளினார். அர்ச். இராயப்பரே, கர்த்தர் உமது காலைக் கழுவ வேண்டாமென்று நீர் சொன்னபோது, இந்தப் புத்தியை நீர் கண்டுபிடிக்கவில்லை; இதினாலே இந்தப் புத்தி உமக்குப் பிறகு தெரியவருமென்று கர்த்தர் வாக்குத்தத்தம் பண்ணி நாம் செய்ததுபோலே நீங்களும் செய்யும்பொருட்டு உங்களுக்கு மாதிரிகை காட்டினோமென்று திருவுளம்பற்றினார். என் சகோதரரே, உந்நத சர்வேசுரனே நமக்குத் தாழ்ச்சியின் மாதிரிகை காட்டியிருக்க, நாம் இதைக் கண்டுபாவிக்கக் கடவோம்; உந்நத சர்வேசுரன் செய்து காட்டின இந்தத் தாழ்ச்சி முயற்சியை நீச வஸ்துக்களாகிய நாமும் செய்யக்கடவோமென்றார். சகலத்துக்கும் ஏகாதி கர்த்தரும் சர்வ வல்லபமுள்ளவருமான இயேசுநாதர் தம்மைத் தாழ்த்தியிருக்கத் தேவசுதன் தானே தமது சிஷாக்களுக்குக் கால் கழுவியிருக்கத் தமது திருத் தாயாரும் அர்ச். சூசையப்பரும் அவருக்கிட்ட கட்டளையெல்லாம் செய்து அவர்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கச் சகலவித நிசிதமான தாழ்ந்த வேலையெல்லாம் செய்திருக்க நாமும் தாழ்ச்சிக்கடுத்த வெளிக் கிரிகைகளெல்லாம் செய்து பழகக் கடவோம். இப்படிச் செய்தால், தாழ்ச்சியென்னும் புண்ணியத்தை அடைவோமென்பதற்குச் சந்தேகமில்லை.

அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதுமிதுவே. அதென்னவென்றால், பொறுமை மனசமாதானத்துக்கும் படிப்பு சாஸ்திரத்துக்கும் வழியாயிருப்பதுபோலே, தாழ்மை தாழ்ச்சிக்கு வழியாகும். ஆகையால் நீ தாழ்ச்சியை அடைய வேணுமானால், தாழ்மையின் பாதையிலே ந





டவென்றார். தாழ்மையைப் பொறுத்துக்கொள்ள ஒன்றுமே கூடாவிட்டால், தாழ்ச்சியை அடையவும் ஒன்றுமே கூடாது மெய்யான மனத்தாழ்ச்சியை அடைவதற்குத் தாழ்மையான வெளி முயற்சி என் அவசரமாயிருக்கிறதென்று அர்ச். அகுஸ்தின் ஒரு உசிதமான ஞாயத்தைச் சொல்லிக் காட்டியிருக்கிறார். அதென்னவென்றால், நீ சகோதரனுடைய காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து கிடக்கும்போது, உன் இருதயத்தில் தாழ்ச்சியான எண்ணம் பிறக்கும், அல்லது அந்த எண்ணம் முன்னமே உன் ஆத்துமத்திலே இருந்தால், அது ஸ்திரப்படுமென்றார். மனுஷனுடைய உள்க்கிரிகையும் வெளிக் கிரிகையும் ஏகபந்தனமாய் ஒன்றாகச் சேர்ந்து ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் இருக்கிறதினாலே, சரீரம் தாழ்ந்தால் இருதயத்திலும் தாழ்ச்சியான எண்ணம் கிளம்பும். உன் சகோதரனுக்கு ஊழியஞ்செய்து அவன் காலை முத்திசெய்து பரும்படியான உடுப்பணிந்துகொண்டு தாழ்ந்த வேலையை நீ செய்யும்போது, என்னமோ ஆத்துமத்திலே தாழ்ச்சி பிறக்கிறதாக அறிந்துகொள்ளுவாய், அல்லது தாழ்ச்சி ஏற்கனவே இருதயத்தில் இருந்தால், இந்தத் தாழ்ச்சி முயற்சியினாலே அது பெலப்பட்டு ஓங்கி வளருகிறதாக உணர்ந்துகொள்ளுவாய். சரீரத்திலே உடுத்தியிருக்கிற பரும்படியான உடையைக் கொண்டு ஆத்துமத்திலே தாழ்ச்சி எப்படி பிறக்குமென்று நீ கேட்டால், இதற்கு அர்ச். தொரொத்தேயர் சொல்லும் மறுமொழியாவது: சரீரத்திலுள்ள சௌக்கியமும் வியாதியும் ஆத்துமத்தையும் பிடிக்கிறது நிச்சயமல்லோ? சரீரம் சுகமேயிருக்கும்போது, ஆத்துமம் சந்தோஷிக்கிறதாகவும், சரீரத்திலே அசௌக்கியம் உண்டானால், ஆத்துமம் கஸ்திப்படுகிறதாகவும், சரீரம் திருத்தியாய்ச் சாப்பட்டபின், ஆத்துமம் பூரிக்கிறதாகவும், சரீரம் பசித்து வாடும்போது, ஆத்துமமும் சோர்ந்து வாடுகிறதாகவும் கண்டிருக்கிறோமே. யாதாமொருவன் சிங்காரமாய்ச் சோடித்த குதிரைமேலேயாகிலும் சிம்மாசனத்தின்மேலே யென்கிலும் ஏறியிருக்கும்போது, அவன் மனதில் ஓடுகிற எண்ணம் வேறே; ஒன்றுக்கும் உதவாத தட்டுவாணிக் குதிரைமேல் அவன் ஏறியிருக்கும்போதாகிலும் தாழத் தரையிலே படுத்திருக்கும்போதென்கிலும் அவனிடத்தில் உண்டாகிற நினைவு வேறே. அவன் ஆடை ஆபரணங்கள் பூண்டிருக்கும்போது, அவன் நினைக்கிற நினைவு வேறே; பீற்றல் துணி கட்டியிருக்கும்போது, அவனிடத்தில் உண்டாகும் எண்ணம் வேறேயென்றார்.

அர்ச். பசிலியார் சொல்லுகிறதுமிதுவே. அதென்னவென்றால்,

சமுசாரவாசிகள் விலையுயர்ந்த உடுப்பணிந்திருந்தால், அதினாலே ஆங்காரமும் சிலாக்கியமுமான எண்ணம் அவர்கள் மனதில் உதிக்கும். அவ்வண்ணமே தேவதாசரும் சந்நியாசிகளும் பரும்படியான உடுப்புப் போட்டுக்கொண்டிருந்தால், இதினாலே அவர்கள் மெய்யாகவே நிந்தைக்குரியவர்களானாற்போலே தாழ்ச்சியும் தங்கள்பேரில் தாழ்மையான நினைவும் அவர்களிடத்தில் பிறக்கும். மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர் சொல்லுமாப்போலே, சமுசாரவாசிகள் தங்களை உயர்த்திக் கனப்படுத்துவதற்காக விலையுயர்ந்த நேர்த்தியான அடை ஆபரணங்களைப் பூண்டுகொள்ளுகிறதுபோலே, தேவ ஊழியரும் மெய்யான மனத்தாழ்ச்சியுள்ளவர்களும் மனுஷருடைய கண்ணுக்குத் தங்களை நீசராக்கி மெய்யான தாழ்ச்சியைத் தங்கள் இருதயத்தில் பெலப்படுத்துவதற்காக வெகு தாற்பரியமாய்ப்பரும்படியான உடுப்பை அணிந்துகொள்ளுவார்கள். அர்ச். சவேரியார் சரித்திரத்தில் சொல்லியிருக்கும் சங்கதியாவது: அவர் நல்ல உடை உடுத்தினால், ஆங்காரமும் சிலாக்கியமுமான எண்ணம் தம்மிடத்தில் எழும்புமென்று பயந்து தாழ்ச்சியைக் காப்பாற்றுவதற்காக எப்போதும் உதவாத உடுப்பு உடுத்தியிருப்பாரென்று சொல்லியிருக்கின்றது.

மனத் தாழ்ச்சியையும் வேறெந்தப் புண்ணியத்தையும் அடைவதற்கு அந்தந்தப் புண்ணிய முயற்சி வெகு ஒத்தாசையாயிருக்குமென்று ஒப்பிப்பதற்கு வேறொரு முகாந்தரமேதென்றால், புண்ணியத்தை அடைய வேணுமென்கிற வெறும் ஆசையைவிட அந்தப் புண்ணிய முயற்சியானது மனதிலே பட்டு உறுத்தும் ; அப்பாலேயுள்ள பொருளைவிட முகதாவில் இருக்கிற பொருளும், நாம் கேள்விப்பட்ட காரியத்தைவிடக் கண்ணாலே பார்க்கிற காரியமும் நம்மை அதிகமாய்த் தூண்டுமல்லோ? ஆகையால் ஒரு காரியத்தை நாம் செய்யும்போது, அது நமக்கு முகதாவில் இருக்கிறதினாலே, நமது மனதை வெகு கெட்டியாய்த் தூண்டி எழுப்பும்; யாதொரு காரியத்தின் பேரில் நம்மிடத்தில் ஆசை மாத்திரம் இருந்தால், அது நம்மை அவ்வளவு தூண்டி எழுப்ப உதவாது. இவ்வண்ணமே நீ பாடுபட வேணுமென்று எவ்வளவு ஆசைப்பட்டுக்கொண்டிருந்தாலும், அதினாலே உன் இருதயத்திலே பொறுமையென்கிற புண்ணியம் வெகுவாய் ஸ்திரப்பட அறியாது; ஆனால் ஒரே நிந்தை அவமானத்தை நீ நல்ல மனதோடு பட்டநுபவித்தால், அதினாலே பொறுமையென்கிற புண்ணியம் உன்னிடத்தில் அதிகமாய்

உறுதிப்படும். தாழ்ச்சியென்னும் புண்ணிய முயற்சி செய்ய வேணுமென்று வெகுநாள் ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறதைவிட ஒரே நாள் யாதொரு தாழ்ந்த வேலையைச் செய்தால், அல்லது கிழிந்த பழந் துணியை உடுத்தியிருந்தால், இதினாலே தாழ்ச்சி அதிக பெலப்பட்டு ஓங்கும். நாம் வழக்கமாய்ச் செய்துகொண்டுவருகிற தாழ்ச்சி முயற்சிகளில் தினந்தோறும் நாம் அநுபவசித்தியினாலே அறிந்திருக்கிற சத்தியமிதுவே. தாழ்ச்சி முயற்சி செய்ய வேணுமென்று நாம் எவ்வளவு உருக்கத்தோடு ஆசைப்பட்டுக்கொண்டுவந்தாலும், அதை முதல்விசை செய்யும்போது, எப்போதும் அது மனதை உறுத்தும்; ஆனால் இரண்டாம்விசை மூன்றாம்விசை அதைச் செய்தால், ஏறக்குறைய வருத்தமில்லாமற்போகும். இதினாலேதான் பூர்வீக காலத்தில் பல அர்ச்சியசிஷ்டவர்கள் செய்துகொண்டுவந்த வெளியரங்கமான தாழ்ச்சி முயற்சிகளை இயேசு சபையிலும் ஏற்படுத்தியிருக்கின்றது. இந்தத் தாழ்ச்சி முயற்சிகள் ஒருவித ஒளஷதம்போல் இருக்கும்; இந்த ஒளஷதத்தை ஒருவிசை சாப்பட்டால், முன்னே வருத்தமாகத் தோன்றினதெல்லாம் எளிதாகும். அன்றியும் நாம் மனதிலே செய்கிற புண்ணிய முயற்சியோடு வெளி முயற்சியும் சேர்ந்திருந்தால், அது மகா உத்தமமும் வெகு பலாபலனுமுள்ள புண்ணியக் கிரிகையென்று சகல வேத சாஸ்திரிகளும் நிரூபித்தார்கள். ஆகையால் இது காரியத்தை எவ்விதமாய் யோசித்துப் பார்த்தாலுஞ் சரி; தாழ்மையான வெளிக் கிரிகை தாழ்ச்சியென்னும் புண்ணியத்தை அடைவதற்கு எப்போதும் வெகு ஒத்தாசையாயிருக்குமென்பது நிச்சயம்.

அன்றியும் யாதொரு புண்ணியத்தை அடைவதற்கு உதவுகிற வழிபாடுகளே அதைக் காப்பாற்றுவதற்கும் அதிகரிப்பதற்கும் உதவுமென்பதினாலே, தாழ்மையான வெளிக் கிரிகையானது தாழ்ச்சியை அடைவதற்குமல்லாமல் அதைக் காப்பாற்றி அதிகரிப்பதற்கும் அவசரமாமே. ஆகையால் ஒறுத்தலின் பேரில் பேசும்போது, நாம் சொன்னதுபோலே, தாழ்ச்சி முயற்சி புண்ணியத்தைத் துவக்குகிறவர்களுக்கும் அல்லாமல் புண்ணியத்தில் வெகுவாய் வர்த்தித்தவர்களுக்கும் பொதுப்படச் சகலருக்கும் மிகவும் அவசரமென்பது நிச்சயம். இதினாலே அர்ச். இஞ்ஞாசியார் நமது ஏற்பாட்டாகமத்தில் இது காரியத்தை வெகு அக்கறையோடு நமக்குக் கற்பித்திருக்கிறார். ஓரிடத்தில் அவர் சொல்லுகிறதாவது: பிறசினேகத்துக்கும் தாழ்ச்சிக்குமடுத்த அலுவலைத்





தன்னால் இயன்றமட்டும் முழு மனப் பற்றுதலோடு செய்துகொண்டு வருகிறது மிகவும் முக்கியமான காரியமென்றார். வேறோரிடத்தில் அவர் சொல்லுகிறதாவது: சோதனை வருமுன்னே அதை விலக்கிச் சோதனைக்கு விரோதமான காரியங்களைச் செய்து அத்தோடு யுத்தம் பண்ணவேண்டும். இப்படியே யாதொருவன் ஆங்காரத்துக்குச் சார்புள்ளவனாயிருந்தால், அவனைத் தாழ்த்துவதற்கு உதவியான நீச அலுவல்களை அவனுக்குக் கொடுக்க வேணுமென்றார். வேறோரிடத்தில் அவர் தானே சொல்லுகிறதாவது: தாழ்ந்த நீச அலுவல்களைச் செய்ய வேணுமென்று சிரேஷ்டர் கற்பித்தால், தனக்கு அருவருப்பான அலுவல்களை அதிக உச்சாயத்தோடு செய்து முடிக்க வேணுமென்றார். ஆகையால் தாழ்ச்சியும் தாழ்மையுமாகிய இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று கைகொடுத்துத் தாங்க வேண்டும்; தன்னைத் தானே பிறக்கணித்து மற்றவர்கள் தன்னை நிந்திக்க வேணுமென்று ஆசைப்படுகிறது மனத்தாழ்ச்சியாகும்; இந்த மனத்தாழ்ச்சியினாலே வெளித் தாழ்ச்சி நம்மிடத்தில் பிறக்க வேண்டும். அதாவது, நாம் மனசிலே நம்மை நிந்திக்கிறது போலே, வெளிக் கிரிகையிலேயும் அந்த நிந்தையைக் காட்ட வேண்டும். ஆகையால் மெய்யான தாழ்ச்சியுள்ளவன் தன்னைத் தானே பிறக்கணித்துத் தான் மகிமை அடைவதற்கு அபாத்திரவானென்று எண்ணிக்கொள்ளுவானல்லோ? அப்படியே அவனுடைய வெளிக் கிரிகைகளெல்லாம் இந்தத் தாழ்மையான எண்ணத்துக்கு ஒத்திருக்க வேண்டும்; மனதிலிருக்கிற தாழ்ச்சிக்கு வெளிக் கிரிகை அத்தாட்சியாயிருக்க வேண்டும். இயேசுநாதர் சொன்னதுபோலே, எப்போதும் எல்லாத்திலும் கடைசி இடத்தைத் தெரிந்துகொள்; ஏழைகளோடும் நீசரோடும் சஞ்சரிப்பது அயோக்கியமென்றெண்ணாதே; மிகவும் தாழ்ந்த அலுவல்களைச் செய்துகொண்டு வா; மனத்தாழ்ச்சியினால் உண்டாகிற இந்தத் தாழ்ந்த வெளிக் கிரிகையானது தாழ்ச்சியை அதிகரிப்பதற்கு உதவுமென்று கண்டுகொள்ளுவாய்.






# உச-ம் அதிகாரம்.

—ooo—

## மேற்சொன்ன சத்தியத்தை ஸ்திரப்படுத்துவதற்கான சில வர்த்தமானங்களைச் சொல்லிக் காட்டுவது.

———•◇•———

இஞேனி இராயப்பர் சொல்லுகிற சங்கதியாவது: கர்த்தூசிய சபை சந்நியாசியார் ஒருவர் மகா பரிசுத்தமாய் நடந்து மேலான விரத்தத்துவ வரம் அடைந்திருந்ததினாலே, மோக கனாவின் நிழல் முதலாய் தேவ கிருபையினாலே அவரை விட்டு நீங்கியிருந்தது. அவருக்குக் கடைசி வியாதி வந்து சாகுந் தருணத்தில் அம்மடத்திலிருந்த சந்நியாசிகள் எல்லாரும் அவரைச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். அப்போது நீர் எதினாலே சர்வேசுரனுக்கு வெகு பிரியமுள்ளவரானீரென்று சொல்லவேணுமென்று மடத்துச் சிரேஷ்டர் அவருக்குக் கற்பித்தார். அப்போது அந்த மகாத்துமா சொன்னதாவது: சுவாமீ, தேவரீர் கற்பிக்கிறதைச் சொல்லுகிறது எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கின்றது; என் சிரேஷ்டராகிய தேவரீர் இதைக் கற்பியாதிருந்தால், நான் ஒருகாலும் சொல்ல மாட்டேன். சிறுபிராயந் துவக்கிக் கடூரமான பசாசின் சோதனை வந்து என்னை உபாதித்துக்கொண்டிருந்தது; ஆனால் இதினாலே எனக்கு எவ்வளவு மனவருத்தம் உண்டானதோ அவ்வளவு ஆறுதலை இயேசுநாதரும் தேவமாதாவும் எனக்குச் செய்துகொண்டுவந்தார்கள். ஓர்நாள்த் தடவையிலே வழக்கத்துக்கு அதிகமான சோதனை வந்து என்னை உபாதிக்கையில், தேவமாதா பிரசன்னமாய் எனக்குக் காட்சியானாள். அவளைக் கண்டவுடனே பசாசும் தந்திரமும் எல்லாம் என்னை விட்டு ஓடி ஒழிந்துபோனது. தேவமாதா என்னைத் தேற்றி புண்ணியத்திலே நிலைநிற்பதற்கான திடாரிக்கத்தைத் தந்து சொன்னதாவது: நீ தர்ம வழியிலே ஸ்திரப்படுவதற்கு எளிதான வழிபாட்டை உனக்குச் சொல்லிக் காட்டி நமது திருக்குமாரனுடைய அளவிறந்த திரவியப் பொக்கிஷங்களில் ஏதாகிலும் உனக்குத் தெரிவிப்பதற்காக மூன்று தாழ்ச்சி முயற்சியை உனக்குக் கற்றுக் கொடுக்கத் தாற்பரியமாயிருக்கிறோம்; நீ அதைப் பிரமாணிக்கமாய் அநுசரித்துவந்தால், அதி






ஞலே சர்வேசுரனுக்கு நீ பிரியப்பட்டுச் சத்துருவின் சோதனையை அ
கற்றிச் செயசீலனுவாய். ஆகையால் சாப்பாட்டிலும் உடுபாவனையிலு
ம் அலுவலிலும் ஆக இம்மூன்று காரியத்திலும் எப்போதும் உன்னை
நீயே தாழ்த்திக்கொண்டு வர வேண்டும்; இதற்காகப் போசன வகை
யிலே எப்போதும் உருசியற்ற பதார்த்தங்களையும் உடுபாவனையிலே ப
ரும்படியான கெட்ட உடுப்பையும் மிகவும் தாழ்மைக்குரிய நீச அலுவ
லையும் நீ எப்போதும் ஆசித்துத் தேட வேணுமென்று சொல்லி மறை
ந்துபோனுள். அவள் திருவாய் மலர்ந்து அருளிச்செய்த இந்த வார்த்
தைகள் என் இருதயத்தில் ஆழமாய்ப் பதிந்துபோனதினுலே, அவள்
போதித்த இந்தப் புத்தியை அதின்பின் எப்போதும் அநுசரித்துக்
கொண்டுவந்தேன்; இதினுலே நான் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு
வெகு பலாபலனுண்டானதென்றூர்.

காசியான் எழுதிவைத்ததாவது: விருத்தாப்பியரான பினுப்
பென்னும் மகாத்துமா தாம் ஆண்டுகொண்டு வந்த மடத்தில் தமக்கு
வந்த மகிமை பெருமையை விலக்குவதற்காகத் தமக்கு நிந்தையும் அவ
மானமும் வரக்கூடுமான யாதோரிடத்துக்குப் போக வேணுமென்று
தீர்மானித்தார். இதற்காக இரகசியமாய் மடத்தை விட்டுப் புறப்பட்டு
வெகு தூரமாயிருந்த அர்ச். பக்கோமியார் மடத்திலே ஒழுங்கும் புண்
ணிய சுறுசுறுப்பும் விளங்குகிறதென்றறிந்து தம்மை இன்னுரென்றறி
யாமலும் சட்டைபண்ணுமலும் நவ சந்நியாசியைப்போலே, தம்மை நி
ந்திப்பார்களென்றெண்ணி சமுசாரவாசியைப்போலே உடுப்பு உடுத்தி
க்கொண்டு அங்கே போனூர். அங்கே போய்ச் சகல சந்நியாசிகளுடை
ய காலிலே சாஷ்டாங்கமாய் விழுந்து தம்மைச் சந்நியாசத்திலே சேர்த்
துக்கொள்ளவேணுமென்று கெஞ்சி மன்றாடிக் கதவுகிட்ட அநேகநாள்
காத்திருந்தார். அந்தச் சந்நியாசிகள் வேணுமென்று அவரை நிந்தித்து
நீ உலக சுகபோகங்களை அநுபவித்துச் சலித்துப்போய்க் கிழப்பிராய
த்திலே சர்வேசுரனுக்கு ஊழியஞ்செய்யவந்தாயோ? அதுவும் சர்வேசுர
னுக்கு ஊழியஞ்செய்யவா வந்தாய்? குடிக்கக் கஞ்சியில்லாமல் வயிறுபி
ழைக்க வந்திருக்கிறுயென்று அவரைப் பிறக்கணித்தார்கள். ஆகிலும் க
டைசியாய் அவரைச் சந்நியாசத்தில் சேர்த்துக்கொண்டு அம்மடத்தின்
தோட்டக்காரனுக்குக் கீழ்ப்படிந்து அவன் இட்ட வேலைசெய்யச் சொ
ல்லிப் போட்டார்கள். அப்படியே அவர் அந்த அலுவலெல்லாம் வெ
கு தாழ்ச்சியோடு சரியாய்ச் செய்துகொண்டு வந்ததுமல்லாமல் மற்ற





வர்கள் செய்வதற்கு அருவருப்பும் வருத்தமுமான வேலைகளை யெல்லா
ம் செய்ய எப்போதும் பிரயாசப்படுவார். பகலிலே செய்த வேலையும்
பற்றாமல் இராத்திரி இரகசியமாய் எழுந்திருந்து மற்றவர்களை அறி
யாமல் தம்மாலே கூடுமான வேலையெல்லாம் செய்துமுடிப்பார். யார்
இந்த வேலை செய்துமுடித்ததென்று அந்தச் சந்நியாசிகளுக்குத் தெரி
யாததினாலே, காலமே இதைக் கண்டு வெகு ஆச்சரியப்படுவார்கள். அ
வரோவென்றால் தாம் வெகு ஆவலோடு அபேட்சித்த பிரகாரம் தமக்
கு வேலையும் அவமானமும் வாய்த்ததென்று வெகு சந்தோஷப்பட்டு
மூன்று வருஷம் இந்த அந்தஸ்தில் இருந்தார். ஆகிலும் அவருடைய சந்
நியாசிகள் தங்கள் பிதாக் காணமற்போனதினாலே வெகு கஸ்திப்பட்டுப்
பற்பல இடங்களில் அவரைத் தேடினார்கள். மூன்று வருஷத்துக்குப்
பின், அவரைக் கண்டுபிடிப்பதற்கு அடைமானமில்லையென்று அவர்க
ள் அவநம்பிக்கைப் பட்டுக்கொண்டிருக்கையில், அவருடைய சந்நியா
சிகளில் ஒருவர் அர்ச். பக்கோமியார் மடத்துக்கு வந்தார். அங்கே இ
வரைக் கண்டுபிடிக்கலாமென்று கனவிலே முதலாய் அவர் நினைத்ததி
ல்லை; ஆகிலும் அவர் தோட்டத்திலே எருப்போட்டுக்கொண்டிருக்கை
யில், அவரை இன்னாரென்று கண்டுபிடித்து அவர் பாதத்தில் விழுந்
தார். அங்கே யிருந்தவர்கள் எல்லாரும் இதைக் கண்டு வெகு ஆச்சரி
யப்பட்டார்கள்; ஆனால் அவர் இன்னாரென்று அறிந்த மாத்திரத்திலே
அவர்களுடைய ஆச்சரியம் அதிகப்பட்டது; ஏனென்றால் அவருடை
ய கீர்த்தியை முன்னமே அவர்கள் அறிந்திருந்ததினாலே, இந்த மூன்
று வருஷமாய்த் தாங்கள் அவருக்குச் செய்த அவமானத்துக்காக அவ
ரிடத்தில் பொறுத்தல் கேட்டார்கள். ஆனால் அந்த மகாத்துமா ஐ
யோ! பசாசின் காய்மகாரத்தினாலே இது காரியம் தெரியப்பட்டதே;
மறைவான இந்தச் சீவியத்திலே எனக்குக் கிடைத்த தாழ்மையாகிற
பொக்கிஷத்தை போக்கடித்தேனேயென்று அழுதுகொண்டு தமது ம
டத்துக்குத் திரும்பிப்போனார். அவருடைய சந்நியாசிகளெல்லாரும் அ
வரைக் கண்டு நிகரற்ற சந்தோஷப்பட்டு அவர் இனிமேல் ஓடிப்போ
காதபடிக்குக் காவல் வைக்கவேணுமென்று எண்ணினார்கள். ஆனால்
அவர்கள் வைத்த காவலெல்லாம் வீணாய்ப் போயிற்று; ஏனென்றால்
எவராலும் அறியப்படாமல் நிந்தாட்சேபப்படவேணுமென்று அவர்
ஆவலோடு அபேட்சித்துத் தாம் முன்னமே மறைவுள்ள தாழ்ந்த சீவி
பத்தில் மூன்று வருஷமளவாகச் சுகித்தநுபவித்த ஞான மதுரத்தை
இன்னம் அநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டு இரகசியமாய் மடத்






தைவிட்டுப் புறப்பட்டு பலஸ்தின் தேசத்துக்குப் போன ஒரு கப்பலில் ஏறித்தப்பித்துப்போனார். ஆனால் தாழ்ச்சியுள்ளவர்களை உயர்த்துகிற சர்வேசுரன் அவர் காசியான் மடத்தில் சேர்ந்தவுடனே பரிசுத்த ஸ்தலங்களைச் சந்திக்கப்போன அவருடைய சில சந்நியாசிகள் அவரைக் கண்டுகொள்ளும்படி செய்தார். ஆகையால் அவர் நிந்தையைத் தேடித்திரிந்ததினாலே அவருக்கு அதிக மகிமையும் சங்கையும் வந்தது.

வனவாசிகள் சரித்திரத்தில் எழுதியிருக்கும் வரலாறாவது: வெகு காலமாய் இடைவிடாத செபமும் தபமும் செய்துகொண்டுவந்த வனவாசி யொருவர் நான் புண்ணிய சாங்கோபாங்கத்தின் உயர்ந்த சிகரத்தில் ஏறினேனென்றெண்ணி நான் இன்னம் உத்தமனாவதற்கு ஏதாகிலும் குறைவுண்டோ, அதை எனக்குத் தெரிவித்தருளவேணுமென்று ஓர் நாள் சர்வேசுரனிடத்தில் பிரார்த்தித்துக்கொண்டார். சர்வேசுரன் அவரைத் தாழ்த்தச் சித்தமாயிருந்ததினாலே, அடுத்தாப்போலே பன்றிகளை மேய்த்துக்கொண்டிருந்த ஒருவனிடத்திலே போய் அவன் சொல்லுகிறபடி செய்யென்று ஓர் சத்தம் கேட்டது. உடனே அவர் எழுந்திருந்து அவனிடத்திலே போய் அவனைக் கும்பிட்டு நான் சர்வேசுரனுக்குப் பிரியப்படும்பொருட்டுச் செய்ய வேண்டியதின்னதென்று எனக்குச் சொல்லும் ஐயாவென்று அவனைக் கெஞ்சி மன்றாடினார். அவருக்கு என்னசொல்லவேணுமென்று அவன் ஏற்கனவே தேவகாட்சியால் அறிந்திருந்ததினாலே, நான் உனக்குச் சொல்லப்போகிறதைச் செய்வாயோவென்று கேட்டான். ஆம், செய்வேனென்று அவர் சொன்னார். அப்போ இந்தக் கோலை எடுத்துக்கொண்டு பன்றிகளை மேய்க்கப் போவென்றான். அந்த மகாத்துமா சர்வேசுரனுக்குப் பணிபுரிந்து அவருக்கு அதிக பிரியப்பட்டு அதிக உத்தமராகவேணுமென்று ஆசித்திருந்ததினாலே; உடனே அவன் சொன்னபடி செய்தார். அத்தேசத்திலெங்கும் அவருடைய அர்ச்சியசிஷ்டத்தனத்தின் கீர்த்தி வெகுவாய்ப் பரம்பியிருந்ததினாலே, அவரை அறிந்தவர்கள் அவர் பன்றிகளை மேய்க்கிறதைக் கண்டு ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டதாவது: ஓகோ! இந்தக் கிழவனைப் பாரோ; இவன்பேரில் எத்தனை அதிசயங்களைக் கேள்விப்பட்டோம்; இவன் இப்போது பைத்தியம் பிடித்துப்போனான்; பன்றிகளை மேய்க்கிறானே; இவன் இடைவிடாமல் பிடித்த ஒருசந்தி உபவாசத்தினாலேயும் செய்த அருந்தவத்தினாலேயும் இவனுக்கு மூளைவரண்டுபோய்ப் புத்தி மாறாட்டமாய்ப் போனதென்று





சொல்லுவார்கள். அந்த மகாத்துமா இதையெல்லாம் கேட்டுப் பொறுமையோடிருந்து சிலநாள் வரைக்கும் அந்த நீச அலுவலைச் செய்துகொண்டு வந்தார். சர்வேசுரன் அவருடைய தாழ்ச்சியைக் கண்டு அந்த நிந்தை அவமானங்களையெல்லாம் அவர் நல்லமனதோடு சகித்துக்கொள்ளுகிறதைப் பார்த்து முன்னையைப்போலே வனாந்தரத்துக்குப் போகவேணுமென்றுஅவருக்குக் கற்பித்தார்.

ஞானநந்தாவனமென்னும் புஸ்தகத்தில் சொல்லியிருக்கிற சங்கதியாவது : பரிசுத்த மேற்றிராணியாரொருவர் சகலரும் தம்மைச் சங்கித்து மகிமைப்படுத்துகிறதைக் கண்டு ஒருவரும் அறியாத தூரதேசத்திலுள்ள எருசலேம் பட்டணத்துக்குப் போனார். அங்கே ஒன்றுக்கும் உதவாத உடுப்பை உடுத்திக்கொண்டு கொத்தர்களுக்குக் கைவேலை செய்துகொண்டு வந்தார். ஆகிலும் இந்த வேலையை விசாரித்துக்கொண்டுவந்த எபிரோமென்னும் மேஸ்திரி சற்குணசாலியாயிருந்ததினாலே, வேலையாட்கள் நித்திரை போகும்போது, இரண்டு மூன்றுவிசை அவர்களைப் போய்ப் பார்ப்பான். தரையிலே படுத்திருந்த இந்த அர்ச்சியசிஷ்டவருடைய தலைக்கு நேரே பூமி துவக்கி வானமட்டும் ஓர் அக்கினித் தூண் எழும்புகிறதைக் கண்டு மிகவும் நிர்ப்பாக்கியமான அந்தஸ்திலும் வேலையிலுமிருக்கிற இவனிடத்திலே இந்தப் புதுமை எப்படி நடக்கிறதென்று யோசித்து வெகு ஆச்சரியப்பட்டான். இது காரியத்தை விசாரிக்க வேணுமென்று நினைத்து அவரை வரவழைத்து நீர் ஆரென்று கேட்டான். அதற்கு அந்த அர்ச்சியசிஷ்டவர் நாம் ஏழைப் பரதேசி, கூலி வேலை செய்து பிழைக்கிறவனென்றார். ஆகிலும் எபிரோமென்பவன் தேவ திருவுளத்தால் ஏவப்பட்டு நீர் ஆரென்று எனக்கு உண்மை சொல்ல வேணுமென்று வெகுவாய் அலட்டிக் கேட்டான். இதைக் கண்டு அந்த மகாத்துமா சொன்னதாவது : நான் உமக்குச் சொல்லப்போகிறதை என் ஆயுசுகாலமட்டும் வேறொருவருக்கும் சொல்ல மாட்டேனென்றும் என் பேர் இன்னதென்று நீர் கேட்க மாட்டேனென்றும் எனக்கு வார்த்தைப்பாடு கொடுத்தால், உள்ள காரியத்தை உமக்குச் சொல்லுவேனென்றார். எபிரோமென்பவன் அதற்குச் சம்மதித்து வாக்குக் கொடுத்தான். அப்போது அந்த அர்ச்சியசிஷ்டவர் நான் மேற்றிராணியார் ; உலக மகிமையையும் மேன்மையையும் விலக்குவதற்காக என் மேற்றிராசனத்தை விட்டு இரகசியமாய் இங்கே வந்தேனென்றார்.





அர்ச். கிளிமாக்கருளப்பர் வெளிப்படுத்தின சங்கதியாவது: அலேக்சாந்திரியாவென்னும் பட்டணத்திலுள்ள வம்மிஷபதி யொருவன் ஓர் சந்நியாச மடத்திலே சேர வேணுமென்று கேட்டுக்கொண்டான். அவனுடைய முகச்சாயலையும் மற்ற வெளி அடையாளங்களையும் அந்த மடத்துச் சிரேஷ்டர் கண்டு இவன் சிலாக்கியக்காரனுய் இருக்கவேண்டும், ஆங்காரம் நிறைந்தவனாய் இருக்கிறதாகத் தோன்றுகிறதென்று நினைத்து இவனைத் தாழ்த்த வேணுமென்று தீர்மானித்து இயேசுநாதருக்குப் பணி புரிய உனக்கு மனசுண்டானுல், கீழ்ப்படிதலை அநுசரிக்க வேணுமென்று சொன்னுர். சுவாமீ, இது எனக்கு இரட்டைச் சந்தோஷம்; கொல்லன் இரும்பை வளைத்து நீட்டுகிறதுபோலே, நீரும் என்னைக்கொண்டு என்னென்ன செய்யவேணுமோ அதுவெல்லாம் செய்துகொள்ளும்; இதோ என்னை உமது கையில் ஒப்படைக்கிறெனென்ருன். அதற்குச் சிரேஷ்டர் சொன்னதாவது: அப்படியானுல் நல்லது, நீ மடத்தின் கதவுக்கிட்ட இருந்துகொண்டு அதிலே வருகிறவர்கள் போகிறவர்கள் எல்லாருடைய காலிலே தீர்க்கதண்டமாய் விழுந்து மகா பாவியாகிய எனக்காகச் சர்வேசுரனை வேண்டிக்கொள்ளுங்களென்று சொல்ல வேணுமென்ருர். அவன் இதற்கு உத்தமமாய்க் கீழ்ப்படிந்து இந்த முயற்சியை ஏழு வருஷம் வரைக்கும் செய்துகொண்டுவந்து மகா உத்தம தாழ்ச்சியென்னும் புண்ணியத்தை அடைந்துகொண்டான். அதின்பின் அவனை மடத்திலே சேர்த்து அவனுக்குக் குருப்பட்டம் முதலாய்க் கொடுக்க வேணுமென்று தீர்மானித்தார்கள். ஆனுல் அவன் அர்ச்சியசிஷ்ட கிளிமாக்கருளப்பரையும் வேறே அநேகரையும் தனக்காகச் சிபாரிசு பண்ணச் சொல்லித் தன் ஆயுசுகாலமெல்லாம் தான் இருந்தவிடத்திலேதானே இருக்கும்படியாய் உத்தரவு பெற்றுக்கொண்டான். தனக்குச் சாவு சமீபித்திருக்கிறதென்று தேவ ஏவலால் அவன் அறிந்திருந்ததினுலே, இப்படி உத்தரவு கேட்டுக்கொண்டதாகத் தோன்றுகிறது; ஏனென்ருல் பத்து நாளைக்குப் பிறகு சர்வேசுரன் அவனைத் தம்மிடத்தில் அழைத்துக்கொண்டார். அவன் உயிரோடிருக்குங் காலத்தில் வாசல் காப்பவனை நோக்கி, நான் மோக்ஷத்துக்குப் போனபின் சர்வேசுரனை மன்ருடி உன்னையும் மோக்ஷத்துக்குச் சீக்கிரமாய் அழைத்துக்கொள்ளுவேனென்று அவனுக்கு வார்த்தைப்பாடு கொடுத்திருந்த பிரகாரம் ஏழு நாளைக்குப்பின் அவனையும் மோக்ஷத்துக்கு அழைத்துக்கொண்டான். இடைவிடாத தாழ்ச்சி முயற்சியினுலே அவனுக்கு வந்த சம்பாவனை இதுவே. இந்தத்

தாழ்ச்சி முயற்சியைக் கொண்டு அவன் உத்தம தாழ்ச்சியுள்ளவனாய்ப் போனான். நீ அந்த முயற்சியைச் செய்யுந் தருணத்தில் உன் நினைவில் ஓடுகிறதென்னவென்று அர்ச். கிளிமாக்கருளப்பர் ஒருவிசை அவனிடத்தில் கேட்டதற்கு அவன் சொன்ன மறுமொழியாவது : சந்நியாசிகளோடு புழங்குவதற்கும் அவர்களைப் பார்ப்பதற்கும் நான் அயோக்கியனென்றும் அவர்களை ஏறெடுத்துப் பார்ப்பதற்கு நான் அபாத்திரவானென்றும் நினைத்துக்கொண்டிருக்கிறேனென்றான்.

வனவாசிகள் சரித்திரத்தில் அருளப்பனென்னும் மடாதிபதி வெளிப்படுத்தின வர்த்தமானமாவது : ஞான சாஸ்திரியொருவன் குற்றஞ் செய்த தன் சீஷனை நோக்கி ஒரு நாள் சொன்னதாவது : மூன்று வருஷம் வரைக்கும் சகலரும் உனக்குச் சொல்லுகிற நிந்தை அவமானங்களை நீ பொறுமையோடு சகித்துக்கொள்ளாவிட்டால், உன் குற்றத்தைப் பொறுக்க மாட்டேனென்றான். சீஷன் அதற்குச் சம்மதித்து மூன்று வருஷம் கடந்தபின், எனக்குப் பொறுதி கொடுக்க வேணுமென்று கேட்டுக்கொண்டான். அப்போது அந்த ஞான சாஸ்திரி சொன்னதாவது : இன்னம் மூன்று வருஷம் வரைக்கும் மற்றவர்கள் உன்னை நிந்தை அவமானப் படுத்தும்படியாய் அவர்களுக்கு நீ பணம் கொடுக்க வேண்டும் ; இல்லாவிட்டால் உன் குற்றத்தைப் பொறுக்க மாட்டேனென்றான். சிஷன் இதற்கும் சம்மதித்துப் பணம் கொடுத்துக்கொண்டுவந்தான். அதின்பின் அந்த ஞான சாஸ்திரி சொன்னதாவது : நல்லது, உனக்குப் பொறுதி கொடுக்கிறேன்; இப்போது நீ அத்தேன் பட்டணத்துக்குப் போய் ஞானத்தைப் படிக்கலாமென்றான். அப்படியே அவன் அங்கே போய் ஓர் ஞான சாஸ்திரியிடத்தில் அமர்ந்தான். அந்த ஞான சாஸ்திரியோ ஞானத்தைப் படிக்க வருகிறவர்களுடைய பொறுமையைச் சோதிப்பதற்காக அவர்களுக்கு நிந்தை அவமானத்துக்குரிய வார்த்தை சொல்லுகிறது வழக்கம். இதைக் கேட்டு அந்தச் சிஷன் சிரித்துக்கொண்டிருந்தான். என்ன! உன்னை நிந்திக்கிறேன், நீ அதைக் கேட்டுச் சிரிக்கிறாயென்று அந்த ஞான சாஸ்திரி சொன்னான். அதற்கு அந்தச் சீஷன் சொன்னதாவது : மற்றவர்கள் எனக்கு நிந்தை சொல்லும்படியாய் மூன்று வருஷம் வரைக்கும் அவர்களுக்குப் பணம் கொடுத்துக்கொண்டு வந்தேன் ; இப்போது நீர் இலவசமாய் என்னை நிந்திக்கிறீரே ; இதைக் கண்டு நான் சிரிக்க வேண்டாமோவென்றான். அதற்கு அந்த ஞான சாஸ்திரி நாம் இங்கே படித்துக்கொடுக்கிற ஞா





லத்தைக் கற்றுக்கொள்ளுகிறதற்கு நீ தகுந்தவன்தான், உள்ளே வாவென்றான். பொறுமை ஞானத்துக்குக் கதவென்கிற சத்தியத்தை இந்த வர்த்தமானத்தினாலே அறிந்துகொள்ளலாமென்று அருளப்பனென்னும் மடாதிபதி வசனித்தார்.

மப்பேயென்னும் சுவாமியார் அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் எழுதிவைத்திருக்கிற சங்கதியாவது: ஒரு நாள் அர்ச். இஞ்ஞாசியார் லேயினேசென்னும் சுவாமியாரோடு வேனிஸ் பட்டணத்திலிருந்து பாதுவா பட்டணத்துக்குப் பயணம் புறப்பட்டார். இவ்விருவரும் ஒட்டுப்போட்டுத் தைத்த பழைய உடுப்புப் போட்டிருந்ததினாலே, வழியிலே அவர்களுக்கு எதிர்ப்பட்ட பட்டிக்காட்டுப் பையனொருவன் இந்தக் காலாகோலத்தைக் கண்டு அவர்கள் கிட்ட வந்து பார்த்துச் சிரித்துக் கேலி பண்ணினான். அர்ச். இஞ்ஞாசியார் இதைக் கண்டு அகமகிழ்ந்து நின்றுகொண்டிருந்தார். அப்போது லேயினேசென்னும் சுவாமியார் என் நடவாமல் நிற்கிறீரென்றார். அதற்கு அர்ச். இஞ்ஞாசியார் சொன்னதாவது: இந்தப் பையன் படுகிற சந்தோஷத்தைத்தான் கெடுப்பானேனென்று அவன் தம்மைப் பார்த்துப் பரியாசம்பண்ணிப் பண்ணிக் களைத்துப்போகிற வரைக்கும் அங்கே நின்றுகொண்டு சமுசாரவாசிகள் தங்களுக்குச் சங்கையும் மகிமையும் வரும்போது, சந்தோஷப்படுகிறதைவிட இவர் தமக்கு வந்த அவமானத்தைப்பற்றி அதிக சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தார்.

அர்ச். பிராஞ்சீஸ்கு போர்ஷியா சரித்திரத்தில் எழுதியிருக்கிறதாவது: அவர் ஒரு நாள் புஸ்தமாந்தே யென்னும் சுவாமியாரோடு பிரயாணம் செய்யும்போது, ஒன்றுக்கும் உதவாத ஓர் சத்திரத்திலே போய்த் தங்கினார். அங்கே மிகவும் நெருக்கமும் அசுத்தமுமான ஓரிடத்திலே படுக்கிறதற்குக் கட்டிலில்லாமல் இரண்டு சுருணை வைக்கோல் மாத்திரமிருந்தது. புஸ்தமாந்தேயென்னும் சுவாமியார் மிகவும் விருத்தாப்பியருமாய்ச் சலக்கட்டு வியாதியுள்ளவருமாயிருந்ததினாலே, இரா முழுதும் இருமுகிறதும் துப்புகிறதுமாயிருந்தார். அர்ச். பிராஞ்சிஸ்கு போர்ஷியாவுடைய முகம் சுவரென்று நினைத்து அதின்மேல் அநேகம் விசை காறித் துப்பினார். ஆகிலும் அர்ச்சியசிஷ்டவர் அதுக்கு ஒன்றுஞ் சொல்லாமலும் முகத்தைத் திருப்பாமலும் இருந்தார். விடிந்தவுடனே புஸ்தமாந்தேயென்னும் சுவாமியார் தாம் அவர் முகத்தில் துப்பி





[illegible]ந அறிந்து மிகவும் கஸ்தியும் வெட்கமும்பட்டு வெகுவாய் அங்கலாய்த்துக்கொண்டிருந்தார். இதின் நிமித்தம் அவர் எவ்வளவு கஸ்திப்பட்டாரோ அர்ச்சிஷ்டவர் அவ்வளவுக்குச் சந்தோஷப்பட்டு அவரைப் பார்த்துச் சொன்னதாவது: சுவாமீ, கஸ்திப்படாதேயும்; ஏனென்றால் என்னைத் தவிர அந்த அறையிலே துப்புகிறதற்குத் தகுந்த இடம் வேறே ஒன்றுமில்லையென்றார்.

——— 00000 ———

## உரு-ம் அதிகாரம்.

———0000———

### நமக்குள் வழங்கிவருகிற தாழ்ச்சி முயற்சியின்பேரில்.

சந்நியாசிகள் தனிவாசம்பண்ணுகிறதை விடக் கூடி வசிக்கிறது நல்லதென்று அர்ச். பசிலியார் வசனித்தார். இதற்கு அவர் சொன்ன ஞாயமேதென்றால், தனிவாசம் பண்ணுகிற வனவாசிக்குப்பற்பல கனத்த ஆபத்து நேரிடுகிறதுமன்றிப் புண்ணிய சாங்கோபாங்கத்தைஅடைவதற்கு அவசரமான புண்ணிய முயற்சி செய்யச் சமயம் நேரிடாததினாலே, புண்ணியத்தைச் சம்பாதிப்பதற்கான வழிபாடில்லாமற் போகும், ஏனென்றால் தனிவாசம் பண்ணுகிறவன் யாருக்கு முன்பாகத் தாழ்ச்சி முயற்சி செய்யலாம்? ஒருவரோடும் புழங்காதவன் பிறசினேக முயற்சி செய்கிறதெப்படி? தன் மனசுக்கு விரோதம் பண்ணக் கூடுமானவர்களெல்லாரையும் விட்டுப் பிரிந்து தனியே இருக்கிறவன் எப்படிப் பொறுமை முயற்சி செய்யலாம்? மற்றவர்களோடு கூடிச் சஞ்சாரம்பண்ணுகிற சந்நியாசிக்குச் சகல புண்ணிய முயற்சியும் செய்வதற்கான பற்பல சமயம் அடிக்கடி நேரிடுமென்கிறதினாலே, அந்தப் புண்ணியங்களைச் சம்பாதிப்பதற்குத் தகுந்த வழிபாடுண்டு. மற்றவர்களுக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்தித் தாழ்ச்சி முயற்சி செய்துகொள்ளலாம்; பிறசினேக முயற்சி செய்வதற்குப் புறத்தியார் அவனோடுகூட இருக்கிறார்கள்; தன் சகோதரரோடு அவன் சஞ்சாரம் பண்ணுகிறதினாலே, பொறுமை முயற்சி செய்கிறதற்கு ஆயிரம் சமயம் அவனுக்கு வந்துவாய்க்கும். இன்னம் சகல புண்ணியங்களையும்




செய்கிறதற்கு அநேக்கான சமயமுண்டு. ஆகையால் சர்வேசுரன் சந்நியாசிகளைச் சந்நியாசத்துக்கு அழைத்துப் புண்ணியம் சம்பாதிப்பதற்கான வெகு வழிபாடுகளை அவர்களுக்குத் தந்து சாங்கோபாங்கப் பள்ளிக்கூடத்தில் அவர்களை வைத்ததற்காகச் சகல சந்நியாசிகளும் அவருக்கு மிகவும் நன்றியறிந்திருக்கவேணுமென்பதற்குச் சந்தேகமில்லை; ஆனால் மற்றவர்களைவிட நாம் அவருக்கு நன்றியறிந்திருக்கவேண்டும்; ஏனென்றால் மற்றவர்கள் புண்ணியம் சம்பாதிப்பதற்கு அவர் கொடுத்தருளின பொது வழிபாடுகளுமன்றி முக்கியமாய்த் தாழ்ச்சியை அடைவதற்கு விசேஷ வழிபாடுகளையும் நமக்குத் தந்திருக்கிறார். ஏனென்றால் நமது ஏற்பாட்டாகமத்திலும் ஒழுங்குகளிலும் தாழ்ச்சியை விசேஷமாய்க் கற்பித்திருக்கிறதினாலே, நாம் அந்த ஒழுங்குகளைச் சரியாய் அநுசரித்தாலே போதும்; தாழ்ச்சி முயற்சியிலே நமக்குக் குறைவிராது. இவ்வண்ணமே நமது சிரேஷ்டருக்கு நமதாத்துமத்தைத் திறந்து காண்பிக்கவேணுமென்கிற முக்கியமான ஓர் ஒழுங்குண்டே; இது மிகவும் பிரயோசனமான ஒழுங்கு. நமக்கு நேரிடும் சோதனைகளையும் நம்மிடத்திலுள்ள ஆசாபாசம் கெட்டவழக்கம் நம்முடைய குற்றங் குறை நமதாத்துமத்திலுள்ள ஞான வியாதி முதலியதெல்லாத்தையும் சரியாய்ச் சிரேஷ்டருக்குச் சொல்லிக்காட்ட வேணுமென்று இந்த ஒழுங்கில் கற்பித்திருக்கிறதல்லோ? ஆனால் நாம் இனிமேல் சொல்லுமாப்போலே நம்மைத் தாழ்த்துகிறதற்காக இதையெல்லாம் சொல்லிக் காட்டவேணுமென்று கற்பியாதிருந்தாலும், இது பெலத்த தாழ்ச்சி முயற்சிதானே; தாழ்ச்சியை அடைவதற்கு இது மிகவும் உதவும். அன்றியும் ஞானத்தில் மிகவும் வர்த்தித்து விசேஷமாய்த் தாழ்ச்சியும் வெட்கமும் நம்மிடத்தில் பிறக்கும்பொருட்டுப் பாவ சங்கீர்த்தனத்துக்கு வெளியே நமது குற்றங்களையும் நம்மிடத்திலுள்ள குறைகளையும் அறிந்துகொண்டவர்கள் அதெல்லாத்தையும் சிரேஷ்டருக்கு அறிவித்தால், அதின்பேரில் நாம் சந்தோஷப்படவேணுமென்று ஓர் ஒழுங்குண்டே; இதுவும் தாழ்ச்சியை அடைவதற்கு மிகவும் பிரயோசனமான வழிபாடாகும். இதிலே தாழ்ச்சியும் வெட்கமும் நம்மிடத்தில் பிறக்கும்பொருட்டு இப்படிச் சந்தோஷப்பட வேணுமென்று சொல்லியிருக்கிறதல்லோ? இதை நாம் கவனிக்க வேண்டும்; ஏனென்றால் நம்மிடத்தில் தாழ்ச்சி உண்டாவதற்காக இந்த ஒழுங்கை ஏற்படுத்தியிருக்கிறதேயல்லாமல் மற்றப்படியல்ல. ஆகையால் நீ மெய்யான தாழ்ச்சியை அடையவேணுமானால், உன் குற்றங்களையெல்லாம் மற்றவர்கள் சிரேஷ்





டருக்குச் சொல்லிக் காட்டுகிறதினாலே, அகமகிழ்ந்து அக்களிப்பாய்; ஏற்கனவே மெய்யான தாழ்ச்சி உன்னிடத்திலிருந்தால், நீயே சிரேஷ்டரிடத்தில் உன் குற்றங்களைச் சொல்லிக்காட்டி அதற்குத் தெண்டனையிட வேணுமென்று கேட்டுக்கொள்ளுவாய்; உன் குற்றங்களை நீயே முந்தமுந்த அறிந்துகொள்ளுகிறதினாலே, அதுகளை முந்தமுந்த நீயே வெளிப்படுத்த வேண்டும். இன்னம் இயேசு சபையிலே வேறொரு பெரிய தாழ்ச்சி முயற்சியுமுண்டு. அதென்னவென்றால், நமக்கு நிந்தையுண்டாகும்பொருட்டு எல்லாருக்குமுன்னே நமது குற்றங்களை நாமே வெளிப்படுத்துகிற முயற்சி நம்மிடத்தில் வழங்கும். ஆனால் இந்த முயற்சி செய்யும்போது, மற்றவர்கள் நம்மை நிந்திக்க வேணுமென்கிற கருத்தோடு செய்ய வேணுமேயல்லாமல் நம்மைத் தாழ்ச்சியும் ஒறுத்தலுமுள்ளவர்களென்று எண்ணும்படியாய் இதைச் செய்யப்படாது; ஏனென்றால் அப்போது இது அங்கார முயற்சியேயல்லாமல் தாழ்ச்சி முயற்சியல்ல. இந்தக் கருத்தோடுதானே தனியேயும் பொதுவிலேயும் நமக்குச் செய்கிற கண்டனை தண்டனையெல்லாம் ஏற்றுக்கொண்டு நமக்கு வருகிற தண்டனையெல்லாம் நல்லதென்று சந்தோஷப்பட்டு அப்போது நமக்குச் சொல்லுகிறதெல்லாம் மெய்யென்று சகலரும் ஒத்துக்கொள்ள வேணுமென்று ஆசைப்பட வேண்டும். கடைசியாய் நமக்குள் வழங்குகிற வெளித்தவ முயற்சிகளையெல்லாம் இந்தக் கருத்தோடுதானே செய்துகொண்டு வரவேண்டும். இவ்வண்ணமே நமது சகோதரருடைய காலைமுத்தி செய்கிறதும் மேசைக்குக் கீழேயிருந்து அல்லது முழங்காற் படியிட்டுச் சாப்படுகிறதும் சாப்பாட்டறையின் கதவுக்கிட்ட சாஷ்டாங்கமாய் விழுந்துகிடக்கிறதும் இது முதலிய வேறநேக முயற்சிகளைத் தகுந்த தாழ்ச்சி பற்றுதலோடு நாம் செய்துகொண்டு வந்தால், தாழ்ச்சியை அடைவதற்கும் அதைக் காப்பாற்றுவதற்கும் மிகவும் உதவியாயிருக்கும். ஆகையால் சாப்படுவதற்கு நீ தரையில் உட்காரும்போதும், மற்றவர்களுடைய காலை முத்தமிடும்போதும், அவர்கள் உன்மேலே ஏறி நடக்கும்படியாய் அவர்களுக்கு முன்பாக நீ சாஷ்டாங்கமாய் விழுந்துகிடக்கும்போதும், நீ நினைக்கவேண்டியதென்னவென்றால், நான் இவர்களோடு மேசையிலிருக்க அபாத்திரவானென்றும் இவர்கள் வைக்கிற கால் அடியை நான் முத்தமிட வேணுமென்றும் சகலரும் என்மேலே ஏறி நடப்பதற்கு நான் பாத்திரவானென்றும் எண்ணிக்கொள்ள வேண்டும். நீயே இப்படி எண்ணிக்கொள்ளுகிறதுமல்லாமல் சகலரும் இப்படி மெய்யாகவே நிச்சயித்து






க்கொள்ள வேணுமென்று நீ ஆசைப்பட்டுப் போன அதிகாரத்தில் நாம் சொல்லிக் காட்டின அந்த வம்மிஷபதியைப்போலே இதை மனதில் வைத்து நினைத்துக்கொள்ள வேண்டும். மேற்சொன்ன தவமுயற்சிகளை இப்படிச் செய்துகொண்டு வந்தால், அதினாலே நமதிருதயத்தில் ஆழ்ந்த தாழ்ச்சி உண்டாகாமற் போகமாட்டாது. ஆனால் தகுந்த மனப்பற்றுதலில்லாமல் வெளிச்சாடைக்கு மாத்திரம் இந்த முயற்சிகளைச் செய்தால், இதினாலே ஒரு பிரயோசனமும் வரவறியாது. இதினாலல்லோ சரீர முயற்சியினாலே சொற்பப் பிரயோசன மாத்திரமுண்டாகுமென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினார். இந்த முயற்சிகளை எதுக்காக ஏற்படுத்தியிருக்கிறதோ அதை அடையவேணுமென்கிற ஆசையில்லாமற் செய்கிறது கட்டாயத்தினாலும் வழக்கத்தினாலும் செய்கிறதேயொழிய மற்றப்படியல்ல. ஆகையால் உன் சகோதரருடைய காலைமுத்தி செய்தபின், அல்லது அவர்கள் உன்மேலே நடக்கும்படியாய் நீ சாஷ்டாங்கமாய் விழுந்தபின், அவர்களுக்குக் கண்டிப்பாய்ப் பேசினால், இவ்விரு நடக்கையும் எப்படி ஒத்திருக்கும்? உன் நடக்கையிலே கள்ள ஞானமுண்டென்று எண்ணுகிறதற்கும் நீ ஒப்புக்காக இதைச் செய்தாயென்று நினைக்கிறதற்கும் இடமுண்டல்லோ ?

நமது ஒழுங்கில் கற்பித்திருக்கிற தாழ்ச்சி முயற்சிகளில் சிலதை இங்கே நாம் எடுத்துக் காட்டினாற்போலாயிற்று, வெவ்வேறு சமயங்களில் இதைக் குறித்து நாம் பேசியிருந்தாலும், சகலரும் இதை நன்றாய்ப் பரிசோதித்துத் தாழ்ச்சியை அநுசரிப்பதற்காகத் தெண்டித்து உழைக்கும்படியாய் இதைத் திரும்பி இங்கே எடுத்துக் காட்டினோம் ; ஏனென்றால் தன் ஒழுங்குகளைச் சரியாய் அநுசரிப்பதிலே தான் சந்நியாசியுடைய ஞான வர்த்திப்பும் புண்ணிய சாங்கோபாங்கமும் அடங்கியிருக்கின்றது. ஒழுங்குகளில் கற்பித்திருக்கிற புண்ணிய முயற்சிகளை அநுசரிப்பதற்காகத்தான் சந்நியாசி விசேஷ கவலையோடு பிரயாசப்பட வேண்டும். ஆகையால் ஒழுங்கில் கண்டிருக்கிற ஒறுத்தல் முயற்சியையும் தாழ்ச்சி முயற்சியையும் இவன் செய்யாவிட்டால், தன்னாலே செய்கிற வேறே முயற்சிகள் ஒன்றுக்கும் உதவாது. சகல கிறிஸ்துவர்கள் மட்டிலும் இப்படிச் சொல்லலாம். தேவ கற்பனையை அநுசரிப்பதற்கு அவசரமான தாழ்ச்சி முயற்சியே சகல கிறீஸ்துவர்களுக்கும் அவசரமான முயற்சியென்று சொல்ல வேண்டும் ; இதை யாதொரு கிறீஸ்துவன் செய்யாவிட்டால், மற்ற முயற்சிகளெல்லாம் வீணாயிரு



க்கும். இவ்வண்ணமே வெட்கத்துக்குரிய யாதொரு பாவத்தைப் பாவ
சங்கீர்த்தனத்தில் சொல்லுவதற்கு அவசரமான தாழ்ச்சியில்லாமல்
வெட்கத்தினாலேயும் ஆங்காரத்தினாலேயும் அதை மறைத்து இவ்வள
வு கனமான காரியத்திலே தாழ்ச்சியில்லாமலிருந்தால், இதற்காக அ
வன் நித்திய தீர்வைக்குள்ளாவானென்றிருக்கையிலே, வேறெந்தத் தா
ழ்ச்சி முயற்சியும் செய்கிறதினாலே, அவனுக்கு வரும் இலாபமென்ன ?
சந்நியாசத்துக்குரிய சகல கடமைகளிலும் சந்நியாசியைக் குறித்து இ
ப்படிச் சொல்லலாம். உன் ஒழுங்கில் சொல்லியிருக்கிறபிரகாரம் சி
ரேஷ்டருக்கு உன் ஆத்துமத்தைச் சரியாய்த் திறந்து காட்டப் போது
மான தாழ்ச்சி உன்னிடத்தில் இல்லாவிட்டால், அல்லது உன் குற்ற
ங்களைத் திருத்துவதற்காக அதுகளை மற்றவர்கள் சிரேஷ்டரிடத்தில்
சொல்லுகிறது உனக்குப் பொருந்தாதிருந்தால், அல்லது உனக்குச்
செய்கிற கண்டிப்பையும் தபசையும் நல்ல மனதோடே ஏற்றுக்கொள்
ள நீ கஸ்திப்பட்டால், அல்லது தாழ்மையான அலுவலையும் சிரேஷ்ட
ரிடுகிற சகல வேலையையுஞ் செய்ய உனக்கு மனதில்லாதிருந்தால், உ
ன்னிடத்தில் தாழ்ச்சி யெங்கே? சிரேஷ்டர் உன்னிடத்தில் கேட்கிற ம
னசமநிலை யெங்கே? இப்படிப்பட்ட சமயங்களில் தானே உன்னிடத்தி
லுள்ள தாழ்ச்சியும் மன சமநிலையும் விளங்க வேண்டும். இன்னம் ஒ
ழுங்கில் கற்பித்திருக்கிற தாழ்ச்சி முயற்சிகளை நான் அநுசரித்துவரு
கிற விதமெப்படியென்று ஒவ்வொரு சந்நியாசியும் ஒவ்வொன்றாய் வி
சாரித்துப் பார்க்கட்டும். ஒவ்வொரு கிறீஸ்துவனும் தன் தன் அந்தஸ்
துக்கும் அலுவலுக்கும் தகுந்த தாழ்ச்சி முயற்சிகளை எப்படி அநுசரி
த்துவருகிறேனென்று யோசிக்க வேண்டும்.

---

## உசூ-ம் அதிகாரம்.

---

நமது பேரில் புகழ்ச்சியான காரியம் ஒன்றும் நாம்
சொல்லப்படாதென்பதின் பேரில்.

---

அர்ச். பசிலியார், அர்ச். கிரெகோரியார், அர்ச். பெர்நர்துஸ் முத
லிய ஞானசீவிய கிரந்தகர்த்தாக்கள் எல்லாரும் நமது பேரில் புகழ்







ச்சியான காரியம் ஒன்றையும் நாம் சொல்லாமல் மகா எச்சரிக்கையாயிருக்க வேணுமென்று போதித்திருக்கிறார்கள். தொபியாசென்பவர் தன் மகனுக்குச் சொன்ன புத்தியும் இதற்கு ஒத்திருக்கும். அதென்னவென்றால் ஆங்காரம் உன் இருதயத்திலும் வாக்கிலும் ஆட்கொள்ள விடாதேயென்றார். அர்ச். சின்னப்பரும் தமது மாதிரிகையினாலே நமக்குப் படிப்பித்த போதகம் இதுவே; ஏனென்றால் விசுவாசிகளுடைய நன்மாதிரிகைக்காகவும் தேவ தோத்திரத்துக்காகவும் அவசரமான சமயத்தில் தாம் அடைந்த மேலான வரங்களில் சிலதுகளைக் கிறீஸ்துவர்களுக்குச் சொல்லிக் காட்டினாலும், அவர் மோக்ஷத்தின் மூன்றும் மண்டலம் வரைக்கும் பரவசமாயேறினது முதலிய இன்னம் அதிக மேலான வரங்களை அவர்களுக்குச் சொல்லிக் காட்டலாம். ஆகிலும் அதையெல்லாம் வெளிப்படுத்தாமல் அவர் சொன்னதாவது: ஒருவர் என்னிடத்தில் காண்கிறதையும் கேள்விப்படுகிறதையும்விட என்னை மேலாக எண்ணுதபடிக்கு வேறொன்றுஞ் சொல்ல மாட்டேனென்றார். இவ்வாக்கியத்தின் பேரில் அர்ச். பெர்நர்துஸ் பேரொலியாகக் கூப்பிட்டுச் சொல்லுகிறதாவது: வேறொன்றுஞ் சொல்ல மாட்டேனென்ற இந்த வாக்கியம் எவ்வளவு நேற்றியான போதகம்! ஆங்காரிகளும் அகந்தைக்காரரும் வீம்பு பாராட்டுகிறவர்களும் ஒன்றுஞ் சொல்லாமல் இருக்கிறார்களோ? தங்களிடத்திலுள்ளதை வீம்பாகச் சொல்லிக் காட்டி ஆங்காரத்தினாலே உப்பிப்போவார்கள்; தங்களிடத்தில் இல்லாததை உண்டென்று பொய் சொல்லி மகிமை பாராட்டுவார்களென்றார். மெய்யான தாழ்ச்சியுள்ளவன் மாத்திரம் தன் ஆத்துமத்தைக் காப்பாற்றித் தன்னிடத்தில் இல்லாததை உண்டென்று ஒருவரும் எண்ணுதபடிக்கு உள்ளதை முதலாய் ஒருவரும் அறியாமல் மறைக்க எப்போதும் பிரயாசப்படுவான். மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர் இது காரியத்தை நுணுக்கமாய் விளக்கிக் காட்டி நாம் ஆழ்ந்த சாஸ்திரமும் அபூர்வமான புண்ணியமுமுள்ளவர்களென்று மற்றவர்கள் எண்ணுகிறதற்கு ஏதுவானது ஒன்றுஞ் சொல்லப்படாதென்று அறிக்கையிட்டிருக்கிறார். ஏனென்றால் யாதொரு காரியம் மெய்யாயிருந்தாலும், பிறருடைய நன்மாதிரிகைக்கு உதவியாயிருந்தாலும், அதை நீ எவ்வளவு நல்ல கருத்தோடு சொன்னாலும், அது உனக்குப் புகழ்ச்சியாயிருக்குமானால், அதைச் சொல்லுகிறது எப்போதும் மோசத்துக்குரியது. அது உன்னிடத்திலிருந்தாலே போதும்; அதை வாய்விட்டுப் பேசப் படாது; நீ செய்த நன்மையைச் சொல்லிக் காட்டுகிறதினாலே, அதின் பேறுபல

னை இழந்துபோகாதபடிக்கு இது காரியத்திலே மகா எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.

சந்நியாசி தனக்குத் தெரிந்ததையாகிலும் தனக்கு உலகத்திலிருந்த மகிமை பெருமையையென்கிலும் சொல்லிக் காட்டி வீம்பு பாராட்டப்படாதென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். சந்நியாசி தன் மேற்குல மகிமையையும் தன் உறமுறையாருக்கு உலகத்திலுள்ள மேலான அந்தஸ்தையும்பற்றி மகிமை பாராட்டுகிறது எவ்வளவோ அபோக்கியமான காரியம்? ஏனென்றால் மேற்குலமும் மகிமை பெருமையும் காற்றும் புகையுமேயல்லாமல் வேறென்ன? சந்நியாசியிடத்திலுள்ள மேற்குல மகிமை என்னத்துக்கு உதவுமென்று அறிய வேணுமோ? கேள்: ஆஸ்தியைப்போலே அதையும் பிறக்கணிக்கிறதற்கு உதவுமேயல்லாமல், வேறொன்றுக்கும் உதவாதென்று ஒரு மகாத்துமா வசனித்தார். புண்ணியமும் தாழ்ச்சியும் மாத்திரம் சந்நியாசியிடத்தில் மதிக்கத்தக்க காரியம். உலோகத்திலே அவனுக்கு என்னென்ன இருந்தாலுஞ் சரி, என்னென்ன இல்லாதேபோனாலுஞ் சரி, அதுவெல்லாம் ஒன்றுக்கும் உதவாது; இதைக் கனமாயெண்ணித் தன்னை மேலாக மதிக்கிற சந்நியாசி ஞான நன்மைகளின் பேரில் அற்பப் பற்றுதலுள்ளவனென்றும் வீண் மகிமை நிறைந்த வெங்கனென்றும் தானே வெளியரங்கமாய்க் காட்டுகிறான். இவன் உலோகத்தைப் பிறக்கணித்து அதை மெய்யாகவே வெறுத்துவிடவில்லையென்று நன்றாய் வெளிப்படும். ஏனென்றால் ஞானத்தில் மறுபிறப்பாய்ப் பிறந்து சர்வேசுரனுடைய பிள்ளையாகப் பேறு பெற்றவன் தன் உற்றார் உறமுறையார்பேரில் பேச வெட்கப்படுவானென்று அர்ச். பசிலியார் வசனித்தார்.

தன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறது யாருக்கும் தகாத காரியம். தன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற புகழ்ச்சி இலச்சைகெட்ட பேச்சென்பது பூர்வீகந் துவக்கி மனுஷருக்குள் மிகவும் வழங்கிவருகிற சுலோபமாகும். வேறொருவனுடைய வாய் உன்னைப் புகழ வேணுமேயல்லாமல், உன் வாய் உன்னைப் புகழப்படாதென்று ஞானியானவர் வசனித்தாரல்லோ? ஆனால் எவரும் தன்னைப் புகழக் கூடாதென்றிருக்கையிலே, தாழ்ச்சிக்குரிய அந்தஸ்திலிருக்கிற சந்நியாசி தன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறது எவ்வளவு இலச்சைக் கேடாகும்! இதினாலே தனக்கு மகிமை உண்டாகுமென்று எண்ணின






னும், அவமானம் உண்டாகுமென்பது நிச்சயமாயிருப்பதினாலே, இந்தக் குற்றத்தைத் திருத்திக்கொள்ளுகிறதற்கு இந்த அவமானமே போதும். என் நீசத்தனத்தைக் கண்டு என்னை இரட்சியுமென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கிற வாக்கியத்தின் பேரில் அர்ச். அம்புரோசியார் சொல்லியிருக்கிறதாவது : ஒருவன் எவ்வளவு அற்ப மனுஷனாயிருந்தாலும், எவ்வளவு நிர்ப்பாக்கியனானாலும், அவன் சுத்தமாய் ஆங்காரமில்லாமலும் ஒருவனையும்விடத் தன்னை மேலாக எண்ணாமலும் இருந்தால், அவனிடத்திலுள்ள தாழ்ச்சியினாலே அவன் மகிமையுள்ளவன்தானென்றார். இவனுடைய தாழ்ச்சி இவனைச்சிநேகத்துக்கும் மகிமைக்குமுரியவனாக்கி இவனிடத்தில் இல்லாத மற்ற மற்றக் குணாகுணங்களையெல்லாம் நிவர்த்திபண்ணும். ஆங்காரியிடத்திலே என்னென்ன குணாகுணங்களிருந்தாலும், அவனிடத்திலே எவ்வளவு ஆஸ்தியும் மேற்குல மகிமையும் அதிகாரமும் சாமர்த்தியமும் சாஸ்திரமும் இருந்தாலும், அவனுடைய ஆங்காரம் இதுவெல்லாத்தையும் கெடுத்து அவனைப் பகைக்கும் பிறக்கணிப்புக்கும் ஆளாக்கும்.

அர்ச். அர்சேனியார் சரித்திரத்தில் எழுதியிருக்கிறதாவது : அவர் தேயோதோசென்னும் இராயனுடைய மக்களுமாய் அவனுக்குப் பின் இராயர்களுமாயிருந்த அர்க்காதியூஸ் ஒனோரியூசென்பவர்களுக்கு உபாத்தியாராயிருந்திருந்தாலும், உலோகத்திலே அவர் எவ்வளவு மேலான அந்தஸ்தில் இருந்திருந்தாலும், அவரிடத்திலே எவ்வளவு ஆழ்ந்த சாஸ்திரமிருந்தாலும், அவர் சந்நியாசியானபின் தமதுபேரில் புகழ்ச்சியான வார்த்தை யொன்றும் ஒருகாலும் சொன்னவரல்ல; தம்மிடத்திலுள்ள சாஸ்திரத்தை எள்ளளவேனும் ஒருகாலும் காட்டினவருமல்ல. தமக்கு ஒன்றும் தெரியாததுபோலே, தாழ்ச்சியாய் மற்றச் சந்நியாசிகளோடு சஞ்சரித்துப் பேசிப் புழங்கிக்கொண்டு வருவார் ; அறிவீனரிடத்திலே ஞானத்தைக் கற்றுக்கொள்ளப் போவார் ; இவ்வளவு மேலான தேவ சாஸ்திரத்தை அவர்களிடத்தில் படித்துக்கொள்ள நான் அபாத்திரவானென்பார். அர்ச். எரோணிமூசும் மிகவும் உயர்ந்த வம்மிஷபதியாய் இருந்தாரென்று அவருடைய சரித்திரத்தில் சொல்லியிருக்கின்றது ; ஆகிலும் அவர் எழுதின அத்தனை புத்தகங்களில் ஓரிடத்திலேயாகிலும் தமது உயர்குல மகிமையைக் குறித்துச் சாடையாகிலும் ஒரு வார்த்தையும் சொன்னவரல்ல.

தமதுபேரில் புகழ்ச்சியாய்ப் பேசாதபடிக்கு அர்ச். பொனவெந்





தூர் வெகு நேற்றியான ஓர் ஞாயத்தைச் சொல்லியிருக்கிறார். அதாவது, உன்னிடத்தில் புகழ்ச்சிக்குரிய காரியம் ஏதாகிலும் உண்டானால், மற்றவர்கள் அதைக் கண்டுபிடியாமலிருக்கிறது கூடாத காரியமென்று அறிந்துகொள்ளக் கடவாய். நீ அதை வெளிக்குக் காட்டாதே போனால், அதின் நிமித்தம் மனுஷர் உன்னை அதிகமாய்ச் சிநேகிப்பார்கள்; புகழ்ச்சிக்குரிய காரியம் உன்னிடத்தில் இருக்கிறதினாலேயும் அதை நீ மறைக்கத் தேடுகிறதினாலேயும் உனக்கு இரட்டிப்பான புகழ்ச்சி உண்டாகும். ஆனால் நீ அதை வெளிக்குக் காட்டினால், உன்னைக் கேலிபண்ணுவார்கள். ஆகையால் நீ அதை மறைக்கத் தேடுகிறதினாலே, உனக்குப் புகழ்ச்சியும் மற்றவர்களுக்கு நன்மாதிரிகையுமுண்டாகும்; நீ அதை வெளிக்குக் காண்பித்தால், உனக்கு இகழ்ச்சியும் மற்றவர்களுக்குத் துர்மாதிரிகையும் வருமென்றார். புண்ணியம் பரிமள வர்க்கத்துக்கு ஒப்பாயிருக்கும். பரிமளத்தை எவ்வளவு மூடிவைப்பாயோ அவ்வளவுக்கு அதின் வாசனை குறையாமலிருக்கும்; ஆனால் அதைத் திறந்துவைத்தால், அதின் வாசனை பறந்தொழியும்.

அர்ச். கிரெகோரியார் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது: எலேயுத்தரென்னும் பரிசுத்த மடாதிபதியொருவர் ஓர்தடவை பயணஞ்செய்யும்போது, ஒரு கன்னியாஸ்திரிகள் மடத்திலே தங்கினார். அந்த மடத்திலே பசாசு பிடித்திருந்த ஓர் சிறு பையனிருந்தான். அவன் இருந்த அறையிலே அந்த மடாதிபதியை வைத்தார்கள். மறுநாள் காலமே அந்தப் பையனுக்கு இராத்திரி ஏதாகிலும் நடந்ததோவென்று கன்னியாஸ்திரிகள் அந்த மகாத்துமாவிடத்தில் கேட்டார்கள்; ஒன்றும் நடக்கவில்லையென்று அவர் சொன்னார். அப்போது அவனுக்கு நடக்கிற காரியத்தைச் சொல்லிக் காட்டி அவனைத் தம்மோடு அழைத்துக்கொண்டுபோக வேணுமென்று அவரை மன்றாடினார்கள். அப்படியே அந்த மடாதிபதி அவனைக் கொஞ்ச காலம் தம்மிடத்தில் வைத்திருந்தாலும் பசாசு அவனை அண்டாததினாலே, அவர் கொஞ்சம் வீண் சந்தோஷப்பட்டு அதை வெளியில் காண்பிப்பதற்காக ஒரு நாள் தமது சந்நியாசிகளிடத்தில் அவர் சொன்னதாவது: தம்பிமாரே, அந்த அப்பிராணிக் கன்னியாஸ்திரிகளை ஏய்ப்பதற்காகத்தான் பசாசு இந்தச் சிறு பையனை அவர்கள் மடத்திலே உபாதித்தது; நம்முடைய மடத்துக்கு நாம் அவனைக் கூட்டிக்கொண்டுவந்த பிறகு பசாசு அவன் கிட்டவரத் துணியவில்லையென்றார். இந்த வார்த்தைகளை அவர் சொல்லி

முடிந்த க்ஷணமே பசாசு சகலருக்கு முன்பாக அந்தச் சிறு பையனைக்
கொடூரமாய் உபாதிக்கத் துவக்கினது. உடனே அந்த மகாத்துமா
தாம் சொன்ன வீண் மகிமைக்கடுத்த அந்த வார்த்தைகளே இதற்குக்
காரணமென்றெண்ணி வெகுவாய் அழுதுகொண்டிருந்தார். அவருடை
ய சந்நியாசிகள் அவருக்கு ஆறுதல் வருவிக்கத் தேடுகையில், இந்தச்
சிறுபையன் சொஸ்தமாகிறவரைக்கும் ஒருவரும் சாப்படவும் குடிக்க
வும் படாதென்றார். ஆகையால் எல்லாரும் செபத்திலிருந்து அவன்
முழுதும் குணப்பட்டபிறகு மாத்திரம் செபத்தை விட்டு எழும்பினார்க
ள். இதினாலே யாதொருவன் தனக்குப் புகழ்ச்சியான காரியத்தை இந்
த மகாத்துமாவைப்போலே விளையாட்டுக்காகச் சொன்னபோதிலும்,
அது சர்வேசுரனுக்கு எவ்வளவு அருவருப்பாயிருக்கிறதென்று அறிந்
துகொள்ளலாம்.

———ooooo———

## உஎ-ம் அதிகாரம்.

செபத்தியானத்திலே இரண்டாம் அந்தஸ்துக்குரிய தாழ்ச்சி
முயற்சி செய்கிறது எப்படியென்று சொல்லுவது.

———oooo———

இதற்கு முந்தின ஒரு அதிகாரத்தில் நமது ஏற்பாட்டாகமத்தி
லுள்ள ஓர் பிரதான ஒழுங்கை எடுத்துக் காட்டினோம். அதென்னவெ
ன்றால், சமுசாரவாசிகள் உலோக மகிமை பெருமை கீர்த்தியை ஆவ
லோடு தேடுகிறதுபோலே, இயேசுநாதரை மெய்யாகவே கண்டுபாவி
க்கிறவர்கள் உலக மகிமை முதலியதுக்கெல்லாம் விரோதமானதை
ஆவலோடு தேட வேண்டும். ஆகையால் எவ்வளவாகிலும் தங்கள் திவ்
விய எசமானுக்கு ஒத்தவர்களாகும்பொருட்டுத் தாங்கள் குற்றம் செய்
யாதிருந்தாலும், நிந்தையவமானம் பொய்ச் சாட்சி முதலிய சகலவித
இகழ்ச்சியும் தங்களுக்கு வர வேணுமென்று க்ஷணத்துக்கு க்ஷணம் இ
வர்கள் ஆசைப்பட வேணுமென்று சொல்லியிருக்கின்றது. அன்றியும்
இயேசு சபையில் பிரவேசிக்க வருகிறவர்கள் எல்லாரிடத்திலும் இப்ப





டிப்பட்ட ஆசை உண்டோவென்று துவக்கத்திலேயே கேட்க வேணுமென்று கற்பித்திருக்கின்றது. உலோக பற்றுதலைக் கட்டாயமாய் அறுத்துவிட்டுப் பாவமாகிற காயம் இன்னம் அவனிடத்தில் இரணமாயிருக்கும்போதே, இவ்வளவு அபூருவமான புண்ணிய சாங்கோபாங்கம் அவனிடத்தில் உண்டோவென்று சோதிக்கிறது மிகவும் கடுமையாகத் தோன்றும். முழுதும் உலக பற்றுதல் அற்றவர்களும் உலகத்துக்கு மெய்யாகவே செத்தவர்களுமாத்திரம் நமது சபையில் இருக்க வேணுமென்று நமது எம்பாட்டாகமத்தில் கற்பித்திருக்கிறதினாலே, இயேசு சபையாரிடத்தில் இருக்க வேண்டிய புண்ணிய சாங்கோபாங்கம் எவ்வளவென்று அறிந்துகொள்ளலாம். ஆனால் மேற்சொன்ன ஒழுங்கில் கற்பித்திருக்கிறது வெகு வருத்தமும் மேலான புண்ணிய சாங்கோபாங்கத்துக்கடுத்ததுமாயிருக்கிறதினாலே, மனுஷருக்குரிய பலவீனத்தினிமித்தம் யாதாமொருவனிடத்தில் மேற்சொன்ன ஆசை இல்லாதிருந்தால், அந்த ஆசை தன்னிடத்தில் உண்டாக வேணுமென்று அவனிடத்தில் மனசுண்டோவென்று கேட்க வேணுமென்று மேற்சொன்ன ஒழுங்கில் கற்பித்திருக்கின்றது. சமயம் நேரிடும்போது, சகலத்தையும் பொறுமையோடு சகித்துக்கொள்ள அவனுக்கு மனசிருந்தால், அவனைச் சபையில் சேர்த்துக்கொள்ளலாமென்று கற்பித்திருக்கின்றது. யாதொரு காரியத்தைக் கற்றுக்கொண்டு அதில் விர்த்தியடைய வேணுமென்கிற ஆசையைப் பார்க்க மேலான ஆயத்தம் எங்கேயாகிலுமுண்டோ? யாதொரு அலுவலைப் படித்தறிய வேணுமானால், அதின்பேரில் ஸ்திரமான ஆசைகொண்டு அக்கறையோடு அதிலே பழகுகிறதே போதும். சந்நியாசம் புண்ணிய சாங்கோபாங்கப் பள்ளிக்கூடமாகும். உன் கடமையைச் செய்துமுடிக்க வேணுமென்கிற கருத்தோடு நீ அதில் பிரவேசித்தால், தேவ கிருபையினாலே அது அநுகூலப்படுமென்பது குன்றாத சத்தியமாமே.

நாம் இப்போது சொல்லிக் காட்டின தாழ்ச்சி முயற்சியிலும் இப்படி நடந்து அடிமேலடிவைத்து முன்னிடக் கடவோம். நிந்தனைப் படுவதற்கு இன்னமும் உன்னிடத்தில் ஆசையில்லையென்றும் அந்த ஆசை உனக்கு உண்டாக வேணுமென்று மனதாயிருக்கிறேனென்றும் சொல்லுகிறாயே; நல்லது, செபத்தியான நேரத்தில் தாழ்ச்சி முயற்சி செய்யத் துவக்கு; எக்காலத்திலும் உமது நீதி நியாயங்களை அபேட்சிக்க என் ஆத்துமம் ஆசித்ததென்று தாவீதென்னும் திர்க்கதரிசியைப்





போலே சர்வேசுரனை நோக்கி நீயுஞ் சொல்லு. ஓகோ ! அத்தனை அர்
ச்சியசிஷ்டவர்கள் நிந்தைப்பட வேணுமென்று உருக்கமான ஆசைகொ
ண்டிருந்தார்களே ; அவர்களுக்கும் எனக்கும் எவ்வளவு தூரம் ! ஆனா
ல் சர்வேசுரா, அவர்களைப்போலே நானும் ஆசைப்படுவதற்கு உருக்க
மான ஆசைப்படுகிறேனென்று சொல்லு. இப்படிச் சொன்னால், நீ ந
டக்கிற பாதை நல்லது, நீ துவக்கின காரியமும் நல்லது ; இந்த ஆ
சையை அடைவதற்கு உன்னிடத்தில் நல்ல ஆயத்தமுண்டு. இதுகா
ரியத்தை செபத்தியானத்தில் நிலைபெறச் செய்துகொண்டு வா ; சர்வே
சுரன் உன் இருதயத்தைப் பிரகாசிக்க வேணுமென்று சில நாள் வரை
க்கும் நிலைமையாய் அவரை அலட்டிப் பிரார்த்தித்துக்கொண்டு வா ;
ஏனென்றால் இவ்வித ஆசை அவருக்குப் பிரியமாயிருக்கிறதினாலே,
வெகு தாற்பரியமாய் உன் மன்றாட்டைக் கேட்டருளுவார். இதினா
லல்லோ கர்த்தர் ஏழைகளுடைய ஆசையைக் கேட்டருளினார் ; அ
வர்களுடைய இருதயப் பற்றுதலுக்குக்காது கொடுத்தாரென்று தேவ
சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. தமது சினேகத்துக்காக நீ யா
தொரு கஸ்திப்பட்டு நீ கட்டிக்கொண்ட அத்தனை பாவங்களுக்குத் த
பசுபண்ண வேணுமென்கிற ஆசையைச் சீக்கிரமாய்ச் சர்வேசுரன் உ
னக்குத் தந்தருளுவார். அவர் இந்த ஆசையை உனக்குத் தந்தால், அ
வருடைய சினேகத்துக்காக நீ நிந்தைப்பட வேணுமென்று ஆசைப்ப
ட வேண்டும்; உன் பாவங்களுக்குப் பரிகாரமாகத் தபசுபண்ணிக்கொ
ண்டு வர வேண்டும். தாவீதரசனைத் திட்டிக் கொண்டுபோன செமே
யியென்பவனை இராசாவுடைய ஊழியர் தெண்டிக்க வேணுமென்று
சொல்லும்போது, தாவீதரசன் சொன்னதாவது : ஆண்டவர் கற்பனை
யினாலே அவன் என்னை வையட்டும், சும்மா விட்டுவிடுங்கள் ; கர்த்த
ர் ஒருவேளை என் கஸ்தியைக் கண்டு இன்றைக்கு அந்த வசவுக்காக எ
னக்கு யாதொரு நன்மை செய்வாராக்குமென்றார். உனக்கு மற்றவர்க
ள் செய்கிற நிந்தையவமானத்தின் நிமித்தம் உன் பாவத்துக்காக வர
வேண்டிய ஆக்கினைக் குறையுமாக்கும்.

ஆனால் தேவ சினேகத்துக்காகவும் இயேசுநாதருக்கு ஒத்தவனாக
வும் நிந்தைப்பட வேணுமென்கிற ஆசை தேவ கிருபையினாலே உன்
னிடத்தில் எழும்பினால், எல்லாம் முடிந்துபோயிற்றென்றும் தாழ்ச்சி
யென்னும் புண்ணியத்தை அடைந்தாயிற்றென்றும் எண்ணாதே ; அப்
போதுதான் தாழ்ச்சியை உன் ஆத்துமத்தில் ஊன்றி ஸ்திரப்படுத்தத்




துவக்க வேண்டும். ஆகையால் மேலெழுந்தவாரியாய் இப்படி ஆசைப்படுகிறது பற்றாது; ஆனால் இயன்றமட்டும் நிலைமையோடு இந்த ஆசைமுயற்சி செய்து இந்த ஆசையைக் கிரிகையினாலே செய்துமுடிக்குமட்டும் வெகுகாலம் செபத்தியானத்தில் இந்த முயற்சி செய்துகொண்டு வர வேண்டும். இப்படிச் செய்துகொண்டு வந்தாலும், நிந்தையவமானம் நேரிடும்போது, அதைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளப் போதுமான பெலன் உன்னிடத்தில் உண்டென்று தோன்றினாலும், தாழ்ச்சியின் கொடுமுடியில் ஏறுவதற்கு இன்னம் வெகு படியும் பழுவுமுண்டு. ஆகையால் முந்த முந்த உனக்கு நேரிடுகிற பற்பல தாழ்மையவமானங்களைப் பொறுமையோடு சகிக்கப் பழக வேண்டும். இதிலே பிரயாசப்படுகிறதற்குச் சிறிதுகாலம் செல்லும்; ஒருவேளை வெகுகாலமும் அவசரமாயிருக்கும். இதின்பின் நில்லாமல் அப்புறம் போக வேண்டும். உலகவாசிகள் ஆஸ்தியும் மகிமையும் வரும்போது, சந்தோஷப்படுகிற அம்மாத்திரம் உனக்கு நிந்தையும் அவமானமும் நேரிடும்போது, நீ மெய்யாகவே சந்தோஷப்படப் பழகி ஆஸ்தி சம்பத்துகளின் பேரில் பிரியப்படுகிறதுபோலே, உமது கற்பனையை அநுசரிப்பதில் நான் பிரியப்பட்டேனென்று தாவீதென்னும் தீர்க்கதரிசியோடு மெய்யாகவே சொல்ல வேண்டும். நாம் ஆசித்த காரியத்தை அடைந்தால், சந்தோஷப்படுகிறது வழக்கமல்லோ? நாம் அதை எவ்வளவு ஆவலோடு அபேட்சித்தோமோ அவ்வளவுக்கு அகமகிழ்ந்து அக்களிக்கிறதுமுறை. இதுவே ஒழுங்கு; இதின்பேரில் உன் ஆத்துமத்தைச் சோதித்துப்பார். நிந்தனைப்படுகிறதற்கு உன்னிடத்தில் மெய்யான ஆசை உண்டோவென்றும் நீ தாழ்ச்சியில் வர்த்திக்கிறாயோவென்றும் இதினாலே அறிந்துகொள்ளலாம். மற்றப் புண்ணியங்களையும் இந்த ஒழுங்கைக் கொண்டு சோதித்துப் பார்க்கிறது முறை.

ஆனால் செபத்தியானத்தின் வழியாய்த் தாழ்ச்சி இன்னம் நமது இருதயத்தில் ஸ்திரமாய்ப் பதிந்து நமக்கு அதிக பிரயோசனம் உண்டாகும்பொருட்டுத் தினந்தோறும் நமக்கு வரக்கூடுமான தாழ்மையவமானம் ஏதுவென்று தியானத்தில் சோதித்துப் பார்க்க வேண்டும். அதின்பின் அதை நமது கண்முன்பாக வைத்துக்கொண்டு தாழ்ச்சி முயற்சி செய்வதற்கு நம்மைத் தூண்டி எவி ஸ்திரமாய் அந்த முயற்சியைச் செய்து நம்மிடத்திலுண்டான அருவருப்பெல்லாவற்றையும் முழுதும் அடக்கித் தாழ்ச்சியை அடையுமட்டும் இந்த முயற்சியில் நிலைக்கொ

ள்ள வேண்டும். ஏனென்றால் இதினாலே துர்க்குணம் நமதிருதயத்தி
லிருந்து நீங்கும் ; புண்ணியம் அதிலே ஆழமாய் வேரூன்றி ஸ்திரப்ப
ட்டு மேன்மேலும் உத்தமமாகும். பொன்னை நகாசுப்படுத்துவதற்குத்
தட்டான் செய்கிற வழிபாடு இதை விளக்கிக் காட்டுவதற்கு நல்ல உ
வமையாகும். அதெப்படியென்றால், பொன்னை உலையில்போட்டு உரு
க்கினபின், அதிலே ஒரு மாற்றுப் புடப்பொருளைப் போடுவான் ; உட
னே பொன் பொங்கி நுரைத்துக்கொண்டு எழும்பும். ஆனால் புடப்
பொருள் வெந்து உருகினபின், அந்தப் பொங்குதல் அமர்ந்துபோய்
ப் பொன் முன்னிருந்த அந்தஸ்தில் வந்துசேரும். திரும்பியும் வேறொ
ரு மாற்றுப் புடப்பொருளை அதிலே போடவே, பொன் பொங்கி எழு
ம்பினாலும், முதல்தடவையைப்போலே அவ்வளவு வேகமாய்ப் பொங்
காது. புடப்பொருள் வெந்து உருகினபின், பொங்குதலும் மறுபடி அ
மர்ந்துபோகும். மூன்றும் விசையும் ஒரு மாற்றுப் புடப்பொருளை அ
தில் போடும்போது, கொஞ்சம் இரைச்சல் மாத்திரம் உண்டாகும். க
டைசியாய் நாலாம் விசை புடப்பொருளை அதிலே போட்டால், அதி
லே ஒன்றும் போடாததுபோலே இரைச்சல் முதலாய் உண்டாகாது.
பொன் முழுதும் சுத்தமாகி நகாசுப்பட்டதென்பதற்கு இதுவே தப்பா
த அடையாளமாகும். செபத்தியான நேரத்தில் நாமும் செய்யவேண்
டியதிதுவே. யாதொரு ஒறுத்தலும் அவமானமும்பட உனக்குச் சமய
ம் நேரிட்டிருக்கிறதுபோலே தியானநேரத்தில் ஸ்திரமாய் உரூபிகரித்
துக்கொள்ள வேண்டும். அப்போது உன்னிடத்திலே பயமும் கலக்க
மும் உண்டானால், தியானத்தையும் யோசனையையுங் கொண்டு அந்தக்
கலக்கத்தையும் பயத்தையும் செயித்து முழு அமரிக்கை உண்டாகிற
வரைக்கும் அதின்பேரில் நிலைத்துத் தியானித்துக்கொள். மறுநாள் செ
பத்தியான நேரத்திலே பெலத்த ஒறுத்தலும் மகா அவமானமும் உ
னக்கு வருகிறதாக உரூபிகரித்துக்கொள். இதினிமித்தம் உன் மனம்
பொங்கி எழும்பினால், இந்தப் பொங்குதல் அமர்ந்து மன சமாதானம்
உண்டாகிற வரைக்கும் மேற்சொன்ன அவமானத்தின்பேரில் யோச
னை செய்துகொண்டிரு. அதின்பின் இப்படி அநேகவிசை தியானநேர
த்தில் செய்துகொண்டுவா. உனக்கு வரக்கூடுமான நிந்தை அவமான
த்தை நினைக்கும்போது, உன் மனதிலே கலக்கமும் இருதயத்திலே இ
ரைச்சலுமில்லாமல் எந்தெந்த அவமானமும் நிந்தையும் உனக்கு வரு
மென்று நீ யோசித்தாலும், உன் மனம் கலங்காமல் அமைவாயிருந்தா
ல், அப்போது நீ அந்த முயற்சியை நிறுத்தலாம். தாழ்ச்சியாகிற தங்

கம் உன்னிடத்தில் சுத்தப்பட்டு நகாசானதென்றும் உத்தம தாழ்ச்சியை நீ அடைந்திருக்கிறாயென்றும் இது அடையாளமாகும்.

---

## ௨௮-ம் அதிகாரம்.

தாழ்ச்சியென்கிற புண்ணியத்தின்பேரில் தனி ஆத்துமசோதனை செய்கிறது எப்படியென்று சொல்லுவது.

---

**நா**ம் ஏற்கனவே சொன்னதுபோலே, ஒரே பொருளின்பேரில் மாத்திரம் தனி ஆத்துமசோதனை செய்யவேண்டும்; ஏனென்றால் பல பொருளின்பேரில் ஒன்றாகத் தனி ஆத்துமசோதனை செய்கிறதைவிட ஒரே பொருளின்பேரில் செய்தால், இது அதிக பலாபலனுள்ளதாகும். ஒரே பொருளின்பேரில் இந்த ஆத்தும சோதனை செய்கிறதினாலேதான் இதற்குத் தனி ஆத்தும சோதனையென்று பேராயிற்று. இது மகா பிரதான முயற்சி; இது எளிதாய் அநுகூலமாகும்பொருட்டுத் தனி ஆத்தும சோதனைக்குக் குறித்த துர்க்குணத்தையாகிலும் புண்ணியத்தையென்கிலும் பலபங்காகப் பிரித்துக்கொள்ள வேண்டும். ஆகையால் ஆங்காரத்தை உன் ஆத்துமத்திலிருந்து வேர்ப்பிடுங்காய்ப் பிடுங்கி அதிலே தாழ்ச்சியை நிலைப்படுத்த வேணுமானால், இந்த அலுவலைப் பொதுவிலே செய்ய ஏற்படாதே; ஏனென்றால் ஆங்காரமும் தாழ்ச்சியும் வெகு விரிவான பொருள். ஒரு காரியத்திலும் நான் ஆங்காரப்படமாட்டேன், சகலத்திலும் தாழ்ச்சியாயிருப்பேனென்று பொதுவிலே பிரதிக்கினை செய்தால், இது வெகு விரிவாயிருப்பதினாலே, இரண்டு மூன்று அலுவலை ஒன்றாகச் செய்ய ஏற்பட்டாற்போலாகும்; மிதமிஞ்சி உழைக்க ஏற்பட்டால், ஒன்றுஞ் செய்து முடிக்கமாட்டாய். ஆகையால் கொஞ்சங் கொஞ்சமாய்ச் செய்யத்துவக்கு. எது காரியத்திலே நீ முக்கியமாய் ஆங்காரித்துத் தாழ்ச்சிக் குறைவாயிருக்கிறது வழக்கமென்று யோசித்துப் பார். முந்தமுந்த இதைத் திருத்திக்கொள்; அப்புறம் இதைத் திருத்திக்கொண்டபின், வேறொன்றைத் திருத்திக்கொள்; அப்புறம் இன்னொரு காரியத்திலே ஆங்காரத்தை அடக்கிச் செயித்து

க்கொள். இப்படி நடந்தால், கொஞ்சங் கொஞ்சமாய் ஆங்காரத்தை உன் ஆத்துமத்திலிருந்து பிடுங்கி எறிந்து தாழ்ச்சியை அடைவாய். ஆனால் இவ்வளவு அவசரமான புண்ணியத்திலே அதிக எளிதாய் நாம் ஆத்தும சோதனை செய்யும்பொருட்டுத் தனி ஆத்தும சோதனைக்கு எதெதைப் பொருளாக எடுத்துக்கொள்ளலாமென்று விசேஷித்துக் காட்டக் கடவோம்.

முந்தமுந்த நமக்குப் புகழ்ச்சியான காரியம் ஒன்றும் சொல்லாமலிருக்கிறது தனி ஆத்தும சோதனைக்கடுத்த முதற்பொருளாகும்; ஏனென்றால் மேன்மைப்பட வேணுமென்கிற ஆசை நமது இருதயத்தில் வெகு ஆழமாய் வேரூன்றியிருக்கிறதினாலேயும் மனதில் நிறைந்திருக்கிறதை வாய் பேசுமென்கிறதினாலேயும், நமக்குப் புகழ்ச்சியான காரியத்தை நாம் நினையாமல் முதலாய் அநந்தமுறை சொல்லுகிறது வழக்கம். உனக்கு முன்பாக யாதொரு காரியத்தைப் பேசுகிறார்களென்று வைத்துக்கொள்; அந்தக் காரியத்தை நீயும் கொஞ்சங் கூடமாடச்செய்திருந்து அதினாலே உனக்கு மகிமை வருமென்று அறிந்திருந்தால், அந்த மகிமையெல்லாம் நீ எடுத்துக்கொள்ளப் பார்ப்பாய். ஆமா, அது காரியத்தை நானும் செய்தேன்; இது நன்றாய் நிறைவேறுகிறதற்கு நான்தானே காரணம்; என்னையல்லாமல் அது கைகூடியிருக்கமாட்டாதென்பாய். நீ வாய் திறந்த மாத்திரத்தில் நாம் நினைத்ததாவது: நீ அந்தக் காரியத்தை எவ்வளவு செய்திருந்தாலும், அது கைகூடி வராதிருந்தால், வாயைப் பொத்திக்கொண்டு ஒரு வார்த்தையும் சொல்லியிருக்க மாட்டாய். இவ்விதமாகவே அநேக காரியம் பலமுறை நமது வாயைவிட்டுப் புறப்படும்; அதைச் சொன்னபிறகு மாத்திரம், அதின்பேரில் நமக்கு நினைவுண்டாகும். ஆகையால் இது காரியத்தில் தனி ஆத்தும சோதனை செய்து நமக்குப் புகழ்ச்சியான வார்த்தை ஒன்றும் நமது வாயைவிட்டுப் புறப்படாதபடிக்கு எந்நேரமும் கவனமுற்றிருந்து நமக்குச் சுபாவமான இந்தக் கெட்ட வழக்கத்தைச் செயிக்கிறது நலமாகும்.

இரண்டாவது, அர்ச். பசிலியாரும் அர்ச். எரோணிமுசும் அர்ச். அகுஸ்தீனும் அர்ச். பெர்நர்துசும் சொல்லியிருக்கிற புத்தியின்பேரில் தனி ஆத்துமசோதனை செய்யலாம். அதென்னவென்றால், மற்றவர்கள் நம்மை மெச்சிக்கொண்டு நம்மைப் புகழும்போது, அதின்பேரில்



சந்தோஷப்படாதிருக்கிறது; ஏனென்றால் இதின்பேரில் சந்தோஷப்படுகிறது அபத்துக்குரிய காரியமாமே. அர்ச். அம்புரோசியார் சொல்லுமாப்போலே, பசாசு அவநம்பிக்கையைக் கொண்டு நம்மைக் கெடுக்கக் கூடாதேபோனால், ஆங்காரத்தையும் அகந்தையையுங் கொண்டு நம்மைச் செயிக்கப் பிரயாசப்படும். தாழ்மையவமானத்தைக் கொண்டு நம்மைச் செயங்கொள்ளக் கூடாதேபோனால், மகிமை புகழ்ச்சியைக் கொண்டு நம்மைக் கெடுப்பதற்காக நமக்கு மகிமையையும் புகழ்ச்சியையும் வருவிக்கும். அர்ச். பக்கோமியார் சரித்திரத்தில் சொல்லியிருக்கிறதாவது: அவர் செபத்தியானம் பண்ண வேணுமானால், மடத்தைவிட்டு ஏகாந்தமான இடத்துக்குப் போகிறது வழக்கம். மடத்துக்கு அவர் திரும்பி வருகிறபோது, அநந்தமுறை பசாசுகள் வெகு கூட்டமாய்க் கூடி ஆரவாரம்பண்ணிப்பெரிய இராசாவுக்கு முன்னே புடைசூழ்ந்துகொண்டு போகிறதுபோலே போகும். அதுகளுக்குள்ளே அநேகம் பேய்கள் கட்டியம் கூறித் தேவதாசர் வருகிறார், எட்டிப்போங்கள், எட்டிப்போங்கள், பராக்கு பராக்கென்று பெலத்த சத்தமாய்ச் சொல்லும். அவரை வீண் மகிமையாகிற சோதனையில் விழத்தாட்டுவதற்காக இதெல்லாம் செய்கிறது வழக்கம். அர்ச்சியசிஷ்டவரோவென்றால், இந்த வீண் தந்திரத்தை அறிந்துகொண்டு சிரித்து அதுகளைக் கேலிபண்ணுவார். நீயும் நடக்க வேண்டிய விதமிதுவே. மற்றவர்கள் உன்னைப் புகழும்போதாகிலும், வீண் மகிமைக்கடுத்த நினைவு உன்னிடத்தில் வரும்போதென்கிலும், மேற்சொன்னபடி பசாசு உனக்கும் கட்டியம் கூறுகிறதென்று எண்ணிக்கொண்டு அதைக் கேலிபண்ணு. இப்படி நடந்தால், இந்தச் சோதனையைச் செயங்கொள்ளுவாய்.

அர்ச். கிளிமாக்கருளப்பர் வெகு ஆச்சரியமான ஒரு சங்கதியை வெளிப்படுத்தியிருக்கிறார். அதென்னவென்றால், ஓர் தடவை பசாசு ஒரு வனவாசிக்கு வருவித்த கெட்ட நினைவை வேறொரு வனவாசிக்கு வெளிப்படுத்தினது. இதற்கு முகாந்தரமேதென்றால், தன் இருதயத்தில் மறைந்திருந்த இந்த நினைவை வேறொரு வனவாசி அறிந்து தனக்கு வெளிப்படுத்தினதைச் சோதனைப்பட்ட வனவாசி கண்டு இரகசியமான இந்த நினைவை இவர் அறிந்துகொண்டதினாலே, இவர் தீர்க்கதரிசியென்றும் அர்ச்சியசிஷ்டவரென்றும் எண்ணி இவரைப் புகழவும் இவர் இந்தப் புகழ்ச்சியைக் கேட்டு வீண் மகிமை கொண்டு கெட்டுப்போகவும் பசாசு மேற்சொன்னபடி அந்தக் கெட்ட நினைவை அவருக்கு





வெளிப்படுத்தினது. பசாசு ஆங்காரமும் வீண்மகிமையுமான நினைவை நமக்கு வருவிக்க இவ்வளவு அபூருவமான கபட தந்திரங்களை செய்துகொண்டு வருகிறதினாலே, நாம் வீண் மகிமைக்கு இடம்கொடுக்கிறது எவ்வளவு மோசத்துக்குரிய பொல்லாப்பென்று அறிந்துகொள்ளலாம். ஆகையால் நாம் மோக்ஷ வழியிலே தீவரித்து நடக்கவேணுமானால், குயில்கூவுகிற இன்பத்துக்குக் காதைப் பொத்திக்கொண்டு நடக்கவேணுமென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார்; ஏனென்றால் மனுஷருடைய புகழ்ச்சியாகிற இந்தப் பாட்டு நமது காதுக்கு மிகவும் இன்பமான கீதவாத்தியமாயிருப்பதினாலே, குயில் கூவுகிற இன்பமெல்லாம் இதுக்குச் சரிக்கட்டாது. ஆனால் மனிதருடைய புகழ்ச்சியாகிற கீத வாத்தியம் நமது ஆத்துமத்துக்கு நஞ்சாயிருக்கிறதினாலே, அதுக்கு நாம் காதைப் பொத்திக்கொண்டு செவிடராக வேண்டும; இல்லாவிட்டால், கெட்டுப்போவோமென்பதற்குச் சந்தேகமில்லை. அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லுமாப்போலே, யாதாமொருவர் நம்மைப் புகழ்ந்துகொண்டால், நமது பாவத்தை நினைத்துக்கொள்ள வேண்டும். அப்போது மற்றவர்கள் சொல்லுகிற புகழ்ச்சிக்கு நாம் அபாத்திரவான்களென்று அறிந்துகொண்டு அதிக வெட்கமும் தாழ்ச்சியுமான எண்ணம் நம்மிடத்தில் பிறப்பதற்கு இது உதவும். ஆகையால் உன்னைப் புகழுகிறதைக் கேட்டுச் சந்தோஷப்படாதிருப்பதே நீ தனி ஆத்தும சோதனையில் செய்யவேண்டிய இரண்டாம் முயற்சியாகும். மற்றவர்களுக்கு வருகிற புகழ்ச்சியைக் கேட்டுச் சந்தோஷப்படுகிறது மிகவும் நல்ல காரியமாம்; இதையும் மேற்சொன்ன முயற்சியோடு சேர்த்துச் செய்யலாம். ஆகையால் மற்றவர்களுக்குக் கிடைத்த புகழ்ச்சியைக் கேட்டு உன்னிடத்தில் கஸ்தியாகிலும் காய்மகாரமென்கிலும் எழும்பினால், அல்லது உன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறதைக் கேட்டு வீண் சந்தோஷம் உன்னிடத்தில் பிறந்தால், இதை ஒரு குற்றமாகத் தனி ஆத்தும சோதனைப் புத்தகத்தில் குறித்துக்கொள்.

மூன்றாவது, மற்றவர்கள் நமது கிரிகைகளைக் கண்டு நம்மைக் கனமாய் எண்ணும்படியாக ஒன்றுஞ் செய்யாமலிருக்கிறது. இதின்பேரில் மூன்றாவது தனி ஆத்தும சோதனை செய்யலாம். இது காரியத்திலே நாம் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்று இயேசுநாதர் சுவிசேஷத்தில் அறிக்கையிட்டிருக்கிறார்.' அதெப்படியென்றால், மனிதர் உங்கள் நற்கிரிகைகளைப் பார்க்கும்பொருட்டு அவர்களுக்கு முன்பாக அ





தைச் செய்யாமல் எச்சரிக்கையாயிருங்கள்; இல்லாவிட்டால், மோக்ஷத்திலிருக்கிற உங்கள் பிதாவிடத்தில் ஒரு சம்பாவனையும் பெற்றுக்கொள்ள மாட்டீர்களென்றார். இந்தத் தனி ஆத்தும சோதனை மிகவும் பிரயோசனமாயிருக்கும்; இதைப் பலபங்காகப் பிரித்துக்கொள்ளலாம். முந்தமுந்த முகத்தாட்சணியத்துக்காக ஒன்றும் செய்யாமலிருக்கிறது; அதின்பின் சர்வேசுரனுக்காக மாத்திரம் சகலத்தையும் செய்கிறது; அப்புறம் சர்வேசுரனுடைய சமுகத்தில் இருந்தாற்போலேயும், மனுஷருக்கு ஊழியஞ்செய்யாமல் சர்வேசுரனுக்கு மாத்திரம் ஊழியஞ் செய்கிறதுபோலேயும், அதுகளை மிகவும் நன்றாய்ச் செய்துமுடிக்கிறது; கடைசியாய் நாம், நேர்மையான சுத்தக் கருத்தின்பேரில் பேசும்போது, சொன்னபிரகாரம் நமது கிரிகைகளையெல்லாம் உருக்கமான தேவ சிநேகப் பற்றுதலோடு செய்துமுடித்து அதுகள் தேவ சிநேகத்தினால் பிறந்த பிள்ளைகள்போலே யிருக்க வேண்டும்.

நான்காவது, நாம் யாதொரு குற்றஞ் செய்திருந்தால், அதுக்காகப் போக்குச் சொல்லாமலிருக்கிறது. இதின்பேரில் தனி ஆத்தும சோதனைசெய்கிறதும் வெகு பிரயோசனமாயிருக்கும்; ஏனென்றால் நாம் யாதொரு குற்றஞ் செய்தவுடனேயாகிலும், அதற்காக யாதொரு கண்டனை தண்டனை வரும்போதென்கிலும், போக்குச் சொல்ல வேணுமென்று ஆங்காரம் நம்மைத் தூண்டி ஏவும். நமது பாவத்துக்காகப் போக்குமேல் போக்குச் சேர்த்துச் சொல்லுவதற்கான வார்த்தைகளை நமக்குச் சொல்லிக்கொடுக்கிறது ஆங்காரமாமே. மனிதனைப்போலே என் பாவத்தை மறைத்து என் அக்கிரமத்தை மனதில் ஒளித்துவைத்திருந்தாலென்று யோபென்பவர் வசனித்தார். இதில் மனிதனைப்போலேயென்கிற வார்த்தையை அர்ச். கிரெகோரியார் பற்றும்பற்றாய்ச் சீர்தூக்கிச் சொல்லுகிறதாவது: தன் பாவத்தை மறைத்துப் போக்குச்சொல்லுகிறது மனுஷருக்குரிய சுபாவம்; இதுவே மனுஷ சாதிக்குரிய வழக்கம்; மனிதன் ஆதித்தாய் ஆதித்தகப்பனிடத்திலிருந்து பெற்றுக்கொண்ட தாயதியிதுவே. ஆதித்தகப்பன் பாவம் செய்தவுடனே பூலோக பரகதியிலுள்ள மரங்களுக்குள்ளே போய் ஒளிந்துகொண்டான். அவனுடைய கீழ்ப்படியாமைக்காகச் சர்வேசுரன் அவனைக் கடிந்துகொள்ளும்போது, அந்தக் குற்றத்தைத் தன் பெண்சாதிபேரிலே சுமத்தினான். இதினாலல்லோ நீர் எனக்குத் துணையாகக் கொடுத்த ஸ்திரி அந்த மரத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள்; நான் அதைத் தின்றேனென்





றன். அப்புறம் ஸ்திரி அந்தக் குற்றத்தைப் பாம்பின்பேரிலே சுமத்தி
ப்பாம்பு என்னை எய்த்துப்போட்டது; நான் அந்தப் பழத்தைத் தின்
றேனென்றாள். அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, அவர்கள்
தங்கள் குற்றத்தை அங்கீகரித்துக்கொண்டு அதினாலே பொறுத்தல் அ
டையும்பொருட்டுச் சர்வேசுரன் இந்தக் கேள்வியை அவர்களிடத்தில்
கேட்டார். பாம்புக்குப் பொறுத்தல் கொடுக்க அவருக்குச் சித்தமில்
லாததினாலேயல்லோ அதினிடத்தில் ஒரு கேள்வியும் கேட்கவில்லை.
ஆகிலும் அவர்கள் தங்கள் பாவத்தை அங்கீகரித்துக்கொண்டு தங்களை
த் தாழ்த்தாமல் போக்குச் சொன்னதினாலே, அந்தப் பாவத்தை அதிக
கனமாக்கிக்கொண்டார்கள்; ஏனென்றால் தங்கள் குற்றத்தை ஒருவித
த்திலே சர்வேசுரன்பேரிலேதானே சுமத்த அவர்கள் பிரயாசப்பட்ட
தாகத் தோன்றுகிறது. இதினாலல்லோ நீர் எனக்குக் கொடுத்த பெ
ண்சாதி என்னைப் பாவத்துக்குட்படுத்தினாளென்றான். அதாவது, சர்
வேசுரன் அவளை அவனுக்குத் துணையாகக் கொடாவிட்டால், இந்தப்
பாவம் வந்திருக்க மாட்டாதென்று சொன்னாற்போலாயிற்று. நீர் உண்
டாக்கின பாம்பு என்னை எய்த்துப்போட்டதென்று ஏவாள் சொன்னா
ள். அதாவது, சர்வேசுரன் பாம்பை உண்டாக்கிப் பூலோக பரகதியி
ல் வைக்காவிட்டால், நான் பாவஞ்செய்திருக்க மாட்டேனென்று சொ
ன்னாற்போலாகும். இவ்விஷயத்தில் அர்ச். கிரெகோரியார் சொல்லுகி
றதாவது: தாங்கள் சர்வேசுரனுக்கு ஒத்தவர்களாவோமென்று அவர்க
ள் எண்ணியிருந்தார்கள். அவருடைய தெய்வீகத்துக்குப் பங்காளிக
ளாகி அவருக்கு ஒத்தவர்களாகக் கூடாதென்று கண்டு தங்களுடைய
குற்றத்துக்கு அவரைப் பங்காளியாக்கி அவருக்கு ஒத்தவர்களாகப் பி
ரயாசப்பட்டார்கள்; தங்கள் குற்றத்துக்குப் போக்குச் சொன்னதினா
லே, அதைக் கனத்த பாவமாக்கிக்கொண்டார்களென்றார். சகல மனு
ஷரும் அவர்களுடைய பிள்ளைகளாயிருக்கிறதினாலே, அவர்களுடைய
குற்றத்துக்கு இவர்களும் பங்காளிகளானார்கள். இதினாலேதான் யா
தொரு குற்றத்தின் நிமித்தம் நம்மைக் கண்டிக்கும்போது, உடனே அ
தை மறைப்பதற்கு ஆயிரம் போக்குத்தேடிச் சொல்லுகிறதுமல்லாமல்
அநந்தமுறை புறத்தியார்பேரில் அந்தக் குற்றத்தைச் சுமத்துகிறது வ
ழக்கம். கண்டனை வரும்போது, போக்குச் சொல்லுகிறவர்களை ஓர் ம
காத்துமா முட்பன்றிக்கு ஒப்பிட்டிருக்கிறார். முட்பன்றியைத் தொட
ப்போனால், அது குண்டுபோலே சுருண்டு படுத்துக்கொண்டு எப்பக்க
த்திலும் முள்ளைச்சிலுப்பிக்கொண்டிருக்கும்; அதை எங்கே தொட்டா



னும் முள்க் குத்தும்; உன் இரத்தத்தைக் கண்டபிறகுதான் அதின் சரீரத்தைக் காணலாமென்று தமியானு இராயப்பர் வசனித்தார். போக்குச் சொல்லுகிறவர்களும் நடக்கிற நடக்கையிதுவே. அவர்களைத் தொடுகிறதுபோலே, அவர்கள் செய்கிற குற்றத்தை யாராகிலும் சொல்லிக் காட்டினால், அவர்கள் உடனே சொல்லுகிறதாவது: உன் குற்றத்தையும் திருத்திக்கொள்ளுகிறது அவசரம்; புறத்தியாரைக் கடிந்துகொள்ளப்படாதென்று ஓர் ஒழுங்கு இருக்கிறது; மற்றவர்கள் என் குற்றத்தைவிடப் பெரிய குற்றம் செய்திருந்தாலும், அவர்களுக்கு ஒன்றும் சொல்லுகிறதில்லை; என் குற்றத்தை மாத்திரம் சொல்லிக் காட்டுகிறாயென்று சொல்லி அவர்களைக் குத்துவார்கள். இதுவெல்லாம் அங்காரம் மிகுதியினாலே உண்டாகிற தோஷமாமே. அங்காரத்தினாலே தான் நம்மிடத்திலுள்ள குறைகளெல்லாத்தையும் மனுஷருடைய கண்ணுக்கு மறைக்கப் பிரயாசப்படுவோம். நாம் குற்றஞ் செய்ததினாலே கஸ்திப்படுகிறதில்லை; அந்தக் குற்றத்தை மற்றவர்கள் அறிந்துகொண்டதினாலே, நம்முடைய கீர்த்தி குறைந்துபோனதென்று விசனப்படுகிறோம். இதினாலேதான் மகா எச்சரிக்கையோடு அதை மறைத்து மிகுந்த உபாயதந்திரத்தோடும் மூர்க்கத்தனத்தோடும் அதுக்குப் போக்குச் சொல்லுகிறோம். சிலர் உண்டு; அவர்களிடத்தில் தாழ்ச்சி எள்ப்பிரமாணமும் இல்லாததினாலே, அவர்கள் குற்றத்தைக் குறித்து ஒருவரும் பேசாதிருந்தாலும், அதைக்குறித்து மற்றவர்கள் பேசுமுன்னே தாங்களே பேசி அதற்குப் போக்குச் சொல்லத் துவக்குவார்கள்; மற்றவர்கள் தங்கள்பேரில் குற்றம் சாட்டுமுன்னே தங்கள்பேரில் குற்றமில்லையென்று காட்ட எத்தனிப்பார்கள். நான் இந்திந்தக் காரியம் செய்தது மெய்தான்; ஆனால் இந்திந்த முகாந்தரத்தைப்பற்றி இதைச் செய்தேனென்று சொல்லுவார்கள்; போக்குச் சொல்லுவதற்கு முகாந்தரம் எப்போதும் அவர்கள் வாயில் உண்டு. ஆனால் அவர்களைக் கொட்டுகிறது என்னகொடுக்கு? ஏன் இப்படி அசைந்துகொடுக்கிறார்கள்? அவர்களைக் கொட்டுகிறது அங்காரமென்கிற கொடுக்கு; இதுதான் அவர்களை உபாதித்துக்கொண்டிருக்கிறது; அவர்களுடைய குற்றத்தைச் சொல்லுகிறதற்கு முன்னே அவர்கள் மனங்கலங்கி அதுக்குப் போக்குச் சொல்லுகிறார்களே; இதுக்கு அங்காரமே காரணம். ஆகையால் இந்தக் குறையுள்ளவர்கள் இதின்பேரில் விசேஷமாய்த் தனி ஆத்தும சோதனைசெய்து தங்கள் குற்றத்தை மறைக்க வேணுமென்கிற ஆசையை அடக்கிச் செபிக்க வேண்டும். தாங்கள் குற்றஞ்செய்ததினாலே, ம





ற்றவர்கள் தங்களைப்பேரில் நினைக்க வேண்டியதை நினைத்துக்கொள்ளட்டும்; அதினாலே தங்கள் குற்றத்துக்குப் பரிகாரமாக வேணுமென்று தங்களிடத்தில் ஆசையுண்டாகும் பொருட்டு இவர்கள் பிரயாசப்படவேண்டும். இன்னமும் நீ செய்யாத குற்றத்துக்காக உன்னைக் கடிந்துகொண்டபோதிலும், அதற்காக நீ போக்குச் சொல்லாமலிருக்கிறது எப்போதும் நலமாயிருக்கும். ஏனென்றால் உண்மையை அறிந்துகொள்ள வேணுமென்று சிரேஷ்டருக்கு மனதுண்டானால், அதை அறிந்துகொள்ளுவாரென்பதற்குச் சந்தேகமில்லை. ஒருவேளை முன்னமே அறிந்திருந்தாலும், உன் தாழ்ச்சியைச் சோதித்து உனக்குச் செய்கிற கண்டிப்பை எப்படிப் பட்டநுபவிக்கிறாயென்று அறிய மனதாயிருக்கிறாராக்கும்.

ஐந்தாவது, உனது ரூபிகரத்திலே ஆங்காரமான நினைவு பிறந்து அது அங்கங்கே சுற்றித்திரியாதபடிக்குத் தனி ஆத்துமசோதனை செய்கிறது மிகவும் பிரயோசனமாயிருக்கும். ஏனென்றால் சிலமுறை பெரிய உத்தியோகங்களையும் மேலான அலுவல்களையும் நாம் செய்ய வேணுமென்று நம்மிடத்தில் நினைவுண்டாகும்; சிலமுறை நாம் பிறந்த தேசத்துக்குப் போய் ஆச்சரியமான விதமாய்ப் பிரசங்கித்துச் சகலத்தையும் அநுகூலப்படுத்துகிறதாக நமது நினைவில் ஓடிவரும்; சிலமுறை நாம் சாஸ்திரங்களைப் படித்துக்கொடுக்கிறதாகவும் சகலரும் நமது சாஸ்திரத் திறமையைக் கண்டு நம்மைப் புகழ்ந்துபாராட்டுகிறதாகவும் இதற்கொத்த ஆயிரம் ஆங்காரமான நினைவு நம்மிடத்தில் அடர்ந்து வரும். இது மனதிலிருக்கிற ஆங்காரத்தினால் பிறந்து மனசுக்குள்ளே அடங்கமாட்டாமல் இவ்விதப் பைத்தியத்துக்கடுத்த நினைவுகளைத்தோற்றுவிக்கிறதினாலே, கற்புக்கும் பிறசினேகத்துக்கும் வேறெந்தப் புண்ணியத்துக்கும் விரோதமான நினைவுகளைத் தள்ளுகிறதுபோலே, இந்த ஆங்காரமான நினைவுகளையும் தள்ள வேண்டும்.

ஆறாவது, நமது ஒழுங்கில் சொல்லியிருக்கிறதுபோலே, மற்றவர்கள் எல்லாரையும் நமக்கு மேற்பட்டவர்களென்று எண்ணி நடப்பதற்குத் தனி ஆத்துமசோதனை செய்யவேண்டும். ஏனென்றால் நமது சகோதரரை நமக்கு மேலாக எண்ணி அவர்கள் எல்லாரும் நமக்கு மேற்பட்டவர்களென்று புத்திக் கண்ணைக் கொண்டு யோசித்து அவர்கள் ஒவ்வொருவருடைய அந்தஸ்துக்குத் தகுந்ததுபோலே வினயமில்லா

மல் வெளிச்சங்கை செய்து தாழ்ச்சியை அநுசரிக்க வேணுமென்று நமது ஒழுங்கில் கற்பித்திருக்கின்றது. அவரவருடைய அந்தஸ்துக்குத் தக்கது வெளிப்பார்வைக்கு ஒருவருக்கொருவர் வித்தியாசப்பட்டவர்களாயிருந்தபோதிலும், மனத்தாழ்ச்சியினிமித்தம் நமது சபை எல்லாத்துக்கும் சின்னசபையென்று அர்ச். இஞ்ஞாசியார் அதுக்குப் பேரிட்டிருக்கிறதினாலே, நம்மில் ஒவ்வொருவரும் நமது சகோதரரெல்லாருக்கும் கீழ்ப்பட்டவர்களென்று எண்ணிக்கொள்ள வேணுமென்று சித்தமாயிருக்கிறார். ஒவ்வொருவரும் தாழ்ச்சியினாலே எல்லாரையும் தனக்கு மேற்பட்டவர்களாக எண்ணிக்கொள்ள வேணுமென்று அர்ச். சின்னப்பர் போதித்த போதகத்துக்கு இது ஒத்திருக்கின்றது. நாம் இப்படி மனதில் எண்ணுகிறதும் போதாமல் நமது சகோதரர் எல்லாரும் மெய்யாகவே நமக்கு மேற்பட்டவர்களாயிருந்தாற்போலே, அவர்கள் மட்டில் தாழ்ச்சியோடும் சங்கையோடும் நடந்துகொண்டுவரப் பிரயாசப்பட்டால், இது மகா பிரயோசனமுள்ள தனி ஆத்தும சோதனையாகும். ஏனென்றால் அவர்கள் மெய்யாகவே நமக்கு மேற்பட்டவர்களென்று எண்ணி நடந்தால், அவர்களோடு கண்டிப்பாயும் முரட்டுத்தனமாயும் பேச மாட்டோம்; அவர்களுக்குப் பொருந்தாததும் அவமானத்துக்குரியதுமான வார்த்தை ஒன்றும் சொல்லாதபடிக்கு எச்சரிக்கையாயிருப்போம்; அவர்களுடைய நடக்கையின்பேரில் கெடுதலான எண்ணங்கொள்ள மாட்டோம்; அவர்கள் நம்மோடு எப்படிப் பேசினாலும், நம்மை எவ்வளவு கெடுதலாய் நடத்தினாலும், இதற்காகக் கஸ்தியும் கோபமுங்கொள்ள மாட்டோம். ஆகையால் இப்போது நாம் சொன்னதுகளையெல்லாம் தனி ஆத்தும சோதனை நேரத்தில் சோதித்துப்பார்த்து இந்தக் குற்றங்களுக்கு இடங்கொடுத்திருந்தால், எத்தனை விசையென்று குறித்துக்கொள்ள வேண்டும்.

ஏழாவது, தாழ்மை அவமானம் நமக்கு நேரிடும்போது, அதைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளுகிறதின்பேரில் தனி ஆத்துமசோதனை செய்ய வேண்டும். யாதொருவர் உனக்குக் கண்டிப்பான வார்த்தை சொல்லும்போதும், அதிகாரத்தோடும் மேட்டிமையோடும் யாதொரு காரியத்தை உனக்குக் கற்பிக்கும்போதும், மற்றவர்களைப்போலே உன்னைக் கனமாய் எண்ணவில்லையென்று உனக்குத் தோன்றும்போதும், இதின்பேரில் கஸ்திப்படுகிறது உனக்கு வழக்கமாயிருந்தால், இதெல்லாத்தையும் உனக்கு அவமானமான வேறெந்தக் காரியத்தையு

ம் பொறுமையோடு சகித்துக்கொள்ளுவேனென்று பிரதிக்கினைபண்ணி அதின்பேரில் தனி ஆத்தும சோதனை செய்துகொண்டு வா, தாழ்ச்சியென்னும் புண்ணியத்தைச் சம்பாதிப்பதற்கு அதிக பிரயோசனமும் தகுந்ததுமான ஆத்தும சோதனை இதைவிட வேறொன்றுமில்லையென்று நிச்சயித்துக்கொள். ஏனென்றால் இது க்ஷணத்துக்கு க்ஷணம் உனக்கு வரக்கூடுமான சோதனையெல்லாத்தையும் செயிப்பதற்குத் தகுந்த பரிகாரமாயிருக்கிறதுமல்லாமல் புண்ணியத்தின் மேலான அந்தஸ்தில் உயருவதற்கும் மகா பலாபலனுள்ள வழிபாடாகும். ஆகையால் முந்தமுந்த மேற்சொன்னதுகளை யெல்லாம் பொறுமையோடு சகித்துக்கொள்ளுவேனென்றும் அதின்பின் வருத்தமில்லாமல் எளிதாய் அதுகளைச் சகித்துக்கொள்ளுவேனென்றும் கடைசியாய் அதுகளைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டு நிந்தனைப்பட ஆசைப்படுவேனென்றும் படிபடியாய்ப் பிரதிக்கினைசெய்து இதின்பேரில் தனி ஆத்தும்சோதனை செய்துகொண்டு வரவேண்டும். இப்படி நடந்தால், நாம் மேற்சொன்ன பிரகாரம் தாழ்ச்சியின் மேலான அந்தஸ்தில் வந்து சேருவோம்.

கடைசியாய்க் காலமே இத்தனைவிசை சாயங்காலம் இத்தனைவிசை மனதிலும் வெளியிலும் தாழ்ச்சி முயற்சிசெய்வோமென்று குறித்துக்கொண்டு இதின்பேரில் தனி ஆத்துமசோதனை செய்துகொண்டு வரவேண்டும். துவக்கத்தில் கொஞ்ச முயற்சியும் நாளுக்குநாள் வரவர அதிக முயற்சியும் செய்துகொண்டு தாழ்ச்சியிலே முழுப்பழக்கம் நம்மிடத்தில் உண்டாகிற வரைக்கும் நிலைமையோடு இந்த முயற்சியைச் செய்துகொண்டு வரவேண்டும். இந்தப் புண்ணியத்தின்பேரில் நாம் சொல்லுகிறது வேறெந்தப் புண்ணியத்துக்கும் செல்லும். ஆகையால் நமது சத்துருக்களை வெவ்வேறாய்ப் பிரித்து ஒன்றுக்குப் பிறகு ஒன்றாய் யுத்தம்பண்ணினால், சீக்கிரத்தில் எளிதாய் அதையெல்லாம் செயிப்போமென்பதற்குச் சந்தேகமில்லை.







# உகூ-ம் அதிகாரம்.

---

## தாழ்ச்சியும் கீர்த்தியின்பேரில் ஆசையும் ஒருவனிடத்தில் எப்படியிருக்கக் கூடுமென்பதின்பேரில்.

---

**தா**ழ்ச்சியின்பேரில் ஒரு சந்தேகம் நேரிடுகிறது வழக்கம். இது காரியத்தில் நாம் நடக்க வேண்டிய விதம் இன்னதென்று அறிந்துகொள்ளும்பொருட்டு இந்தச் சந்தேகத்தை நிவாரணம் பண்ணுகிறது மிகவும் அவசரமாமே. நிந்தைப் படுவதற்கு ஆசைப்பட வேணுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் எல்லாரும் ஒருவாக்கொருமொழியாய்ப் போதித்திருக்கிறார்கள். ஆனால் இதிலே நேரிடுகிற சந்தேகமாவது: மனிதர் நம்மை நிந்தித்தால், ஆத்துமாக்களுக்கு நாம் நன்மை செய்கிறதெப்படி? ஏனென்றால் நாம் சொல்லுகிற புத்தி பிறருடைய ஆத்துமத்தில் பதிந்து அவர்கள் நமதுபேரில் நம்பிக்கை வைக்க வேணுமானால், அவர்கள் நம்மைக் கனமாய் எண்ண வேணுமே; ஆகையால் மனிதர் நம்மைக் கனமாயெண்ண வேணுமென்று ஆசைப்படுகிறது அவசரமென்று தோன்றுகிறதென்பாயாக்கும். அர்ச். பசிலியாரும் அர்ச். கிரெகோரியாரும் அர்ச். பெர்நர்துசும் இந்தச் சந்தேகத்தை ஆழ்ந்து விசாரித்து இதற்குச் சொல்லுகிற மறுமொழியாவது: மனிதர் நம்மைக் கனமாயெண்ணிச் சங்கிப்பதினாலே நேரிடுகிற ஆபத்தினிமித்தம் அந்தச் சங்கையை நாம் விலக்கி நடக்க வேணுமென்பது மெய்தான்; நம்மை நாமே யோசித்துப் பார்த்தால், நிந்தைப் படுவதற்கு ஆசைப்பட வேணுமென்பதும் மெய்தான்; ஆகிலும் அதிமிக தேவ ஊழியத்துக்காக மனிதருடைய புகழ்ச்சியையும் மேலான எண்ணத்தையும் தேடலாமென்றார்கள். ஆகையால் அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது: நம்மை நாமே யோசித்துப் பார்த்தால், நமது பலவீனத்தையும் குற்றங்குறைகளையும் நாமே அறிந்துகொள்ளுகிறதுமல்லாமல் மற்றவர்களும் அறிந்துகொள்ளும்படி நாம் விரும்ப வேணுமென்பது உள்ளதுதான்; ஆனால் பிறருடைய ஆத்தும நன்மையை யோசித்துப் பார்த்தால், நமது குற்றங்குறைகளை அவர்கள் அறிந்துகொள்ளுகிறது எப்போதும் நலமாயிருக்கமாட்டா






து; ஆகையால் நமது குற்றங்குறைகளினாலே அவர்களுக்குத் துர்மாதிரிகையும் அவர்கள் புண்ணியத்தில் வர்த்திப்பதற்கு விக்கினமும் நேரிடாதபடிக்கு அவர்கள் நமது குற்றங்குறைகளை அறிந்துகொள்ளாதிருக்க வேணுமென்று நாம் சிலவிசை ஆசைப்படலாமென்றார். ஆனால் இது காரியத்தைச் சரியாய் அறிந்துகொண்டு தேவ தோத்திரத்துக்காக மாத்திரம் இதை நாம் அநுசரிக்கவேண்டும்; ஏனென்றால் இச்சத்தியத்தைத் தகுந்தபடி அறிந்துகொள்ளாதேபோனால், இதினாலே வெகு பொல்லாப்பும் கனத்த மோசமும் நமக்கு நேரிடலாம். நாம் இந்தச் சாக்குப்போக்கை வைத்துக்கொண்டு மகிமை பெருமையை ஆசித்துக் கெட்டுப்போகாதபடிக்கு மேற்சொன்ன அர்ச்சியசிஷ்டவர்கள் இச்சத்தியத்தை இன்னம் விளக்கிக் காட்டியிருக்கிறார்கள். அர்ச். கிரெகோரியார் சொல்லுகிறதாவது: தர்மாத்துமாக்கள் தங்களுக்குக் கிடைத்த மேன்மையின் நிமித்தம் சிலவிசை சந்தோஷிக்கிறது மெய்தான்; ஆனால் ஆத்துமாக்களுக்கு இதினாலே நன்மை உண்டாகுமென்று அவர்கள் நினைக்கிறபோது மாத்திரம், இப்படிச் சந்தோஷிப்பார்களேயல்லாமல் மற்றப்படியல்ல; ஆகையால் தங்களுக்குக் கிடைத்த மகிமையினிமித்தம் அவர்கள் சந்தோஷப்படாமல் அதினாலே பிறருக்கு வருகிற பிரயோசனத்தைப்பற்றிச் சந்தோஷிக்கிறார்களென்பது நிச்சயம்; ஏனென்றால் மனுஷருடைய புகழ்ச்சியைத் தேடுகிறதற்கும் பிறருடைய ஆத்தும ஈடேற்றத்தின்பேரில் சந்தோஷிக்கிறதற்கும் வெகு வித்தியாசமுண்டென்றார். மனுஷருடைய மேலான எண்ணத்தின்பேரில் பிரியம் வைத்துத் தன் மனத்திருத்திக்காகவும் சுயமகிமைப் பிரியத்துக்காகவும் அதைத் தேடுகிறது எப்போதும் கெட்டது; பிறருடைய பிரயோசனத்துக்காகவும் ஆத்தும ஈடேற்றத்துக்காகவும் வேறெந்தச் சுகிர்த கருத்துக்காகவும் மனிதருடைய மேலான எண்ணத்தைத் தேடுகிறது மிகவும் புகழ்ச்சிக்குரிய காரியமாகும். ஆகையால் அதிமிக தேவ தோத்திரத்துக்காகவும் புறத்தியாருடைய நன்மாதிரிகைக்காகவும் அவர்களுடைய புண்ணிய வர்த்திப்புக்காகவு மாத்திரம் மனிதருடைய மேலான எண்ணத்தைத் தேடலாம்; ஏனென்றால் அப்போது நமது கீர்த்தியைத் தேடாமல் பிறருடைய ஆத்தும நன்மையையும் அதிமிக தேவ தோத்திரத்தையு மாத்திரம் அபேட்சிக்கிறோமென்பது நிச்சயம். மருந்தின்பேரில் வெகு அரோசிகமிருந்தாலும், திரேக சௌக்கியத்துக்காக அதைச் சாப்பட்டால், திரேக சௌக்கியத்தை நாம் தேடுகிறதேயல்லாமல் மருந்தை அபேட்சிக்கிறோமென்று சொல்லப்படாது. இவ்




வண்ணமே நாம் உள்ளத்திலே மனிதர் புகழ்ச்சியை நிந்தித்தாலும், அது தேவ ஊழியத்துக்கும் மனிதர் ஆத்தும நன்மைக்கும் பிரயோசனமான வழிபாடாயிருக்கிறதினாலே மாத்திரம் அதைத் தேடினால், தேவ தோத்திரத்தை மாத்திரம் நாடுகிறோமேயல்லாமல் நமது கீர்த்தியைத் தேடுகிறோமென்று சொல்லப்படாது.

மனிதர் நம்மைக் கனமாயெண்ணுகிறதினாலே நாம் சந்தோஷப்படும்போது, தேவ தோத்திரத்துக்காகவும் பிறர் ஆத்தும இரக்ஷணியத்துக்காகவும் நாம் சந்தோஷப்படுகிறோமோ, வீண்மகிமையும் சுயசினேகமும் அதிலே கலந்திருக்கிறதோவென்று அறிந்துகொள்ளுவதற்கான வழிபாடுகளை இப்போது யோசித்துப் பார்க்கக் கடவோம்; ஏனென்றால் இது மிகவும் பிரதான காரியமாகும், இதிலேதான் சுருக்கெல்லாமிருக்கின்றது. இதை அறிந்துகொள்ளுகிறதெப்படியென்று காட்டுவதற்காக அர்ச். கிரெகோரியார் சொல்லுகிறதாவது: மனிதர் நம்மைப் புகழ்ந்துகொள்ளுகிறதினாலே நாம் சந்தோஷித்தால், தேவதோத்திரத்துக்காக மாத்திரம் சந்தோஷிக்க வேண்டும்; அது தேவதோத்திரத்துக்கும் பிறர் இரக்ஷணியத்துக்கும் அவசரமில்லையென்று கண்டமாத்திரத்தில், அதின் நிமித்தம் நாம் சந்தோஷப்படாமல் கஸ்திப்பட வேணுமென்றார். ஆகையால் நமதுமட்டில் நாம் நிந்தைப்பட வேணுமென்று எப்போதும் ஆசித்து நமக்கு நிந்தைநேரிடும்போது, நாம் அபேட்சித்துத் தேடினதைக் கண்டுபிடித்தாற்போலே, எப்போதும் சந்தோஷப்பட வேண்டும். தேவ தோத்திரத்துக்கும் பிறர் ஆத்தும நன்மைக்கும் புகழ்ச்சி அவசரமாயிருக்கும்போது மாத்திரம் அதை ஆசித்து அதுவரும்போது, சந்தோஷப் படலாமேயொழிய வேறெந்த முகாந்தரத்தைப்பற்றியும் அதை ஆசிக்கப்படாது. அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் சொல்லியிருக்கிறாப்போலே, அவர் உள்ளத்திலிருந்த மனப்பற்றுதலாவது: தமது சரீரத்திலே சேற்றைப் பூசிக்கொண்டு இதிலே இறகுகளைச் சொருகிக்கொண்டு தெருவிலே ஓடிப் பைத்தியகாரன் வேஷம்போட்டுக்கொள்ள வேணுமென்று முழு மனப்பற்றுதலோடே ஆசைப்பட்டுக்கொண்டிருப்பார்; ஆனால் ஆத்துமாக்கள் ஈடேற்றத்துக்கு உதவிசெய்ய வேணுமென்று அவரிடத்திலிருந்த உருக்கமான ஆசையினாலே நிந்தையவமானத்தின்பேரில் தம்மிடத்திலிருந்த ஆவலை அடக்கித் தகுந்த மேலாமரியாதையோடும் யோக்கியத்தோடும் நடந்துகொண்டு வருவார். ஆகிலும் நிந்தைப்பட வேணுமென்கிற ஆவல் எப்போ





தும் அவரிடத்தில் நிலைத்திருந்தது ; நிந்தையவமானம் அவருக்கு நேரிடும்போது, வெகு தாற்பரியத்தோடு அதை ஏற்றுக்கொண்டதுமல்லாமல் ஆவலோடும் அதைத் தேடிக்கொள்ளுவார். மனிதர் உன்னைக் கனம்பண்ணிச் சங்கிக்க வேணுமென்று நீ ஆசைப்படும்போது, உன் சுயபிரயோசனத்துக்காகவும் உன் சொந்த மகிமைக்காகவும் அதை ஆசிக்கிறாயோ, தேவ தோத்திரத்துக்காகவும் ஆத்துமாக்கள் ஈடேற்றத்துக்காகவும் அதை அபேட்சிக்கிறாயோவென்று இப்போது சொன்னதைக்கொண்டு அறிந்துகொள்ளலாம். ஏனென்றால் நிந்தை அவமானமும் இகழ்ச்சியும் உனக்கு நேரிடும்போது, அதை ஆவலோடு ஏற்றுக்கொண்டு சந்தோஷப்பட்டு நீ செய்த பிரசங்கம் முதலிய காரியங்கள் உனக்குக் கைகூடிவந்து அதின் நிமித்தம் மனுஷர் உன்னைக் கனமாய் எண்ணிப் புகழும்போது, நீ சந்தோஷப்பட்டுக்கொண்டால், உன் மகிமையின் நிமித்தம் நீ சந்தோஷப்படாமல் அதினாலுண்டாகிற தேவ தோத்திரத்தின் நிமித்தமும் பிறர் ஆத்தும நன்மையின் நிமித்தமும் நீ சந்தோஷப்படுகிறாயென்று அடையாளமாகும். ஆனால் தாழ்மையும் நிந்தையும் உனக்கு நேரிடும்போது, நீ அதைத்தள்ளிவிட்டு அதின் நிமித்தம் சந்தோஷப்படாமலிருந்து மகிமையும் புகழ்ச்சியும் பிறர் ஆத்தும நன்மைக்கு அவசரமில்லாதிருக்கும்போது, நீ அதின்பேரில் பிரியப்பட்டுத் தேடினால், அது பிறர் ஆத்தும நன்மைக்குப் பிரயோசனமாயிருக்கும்போது முதலாய் நீ அதின்பேரில் சந்தோஷப்பட்டாலும் தேவ தோத்திரத்துக்காகவல்ல, உன் சுயமகிமைக்காகவே சந்தோஷப்படுகிறாயென்று அடையாளமாகும்.

ஆகையால் மனிதர் புகழ்ச்சியையும் மேலான எண்ணத்தையும் தகுந்தவிதமாய் ஏற்றுக்கொண்டால், அதினாலே பொல்லாப்பு ஒன்றுமில்லை; அதை அபேட்சித்துத் தேடலாம். இதினாலல்லோ அர்ச். சவேரியார் வெகு பரிவாரம் சூழ மகா மகிமைபிரதாபத்தோடு புங்கோவென்னும் இராசாவைக் காணப்போனார். சுகிர்த கருத்தோடு தன்னை முதலாய்ப் புகழ்ந்துகொள்ளுகிறது சுகிர்த புண்ணியமாயிருக்கலாம். இவ்வண்ணமே அர்ச். சின்னப்பர் கொருந்தியருக்கெழுதின நிருபத்தில் தம்மைப் புகழ்ந்துகொண்டு சர்வேசுரன் தமக்கு அளித்தருளின வரங்களின்பேரில் மகிமைபாராட்டி மற்ற அப்போஸ்தலர்களைவிடத் தாம் தேவ தோத்திரத்துக்காக அதிகமாய் உழைத்தோமென்று சொல்லித் தமக்குக் கிடைத்த தேவகாக்ஷியையும் தாம் மோக்ஷத்தின் மூன்றாம்






மண்டலம் வரைக்கும் பரவசமாய் எழும்பினதையும் வெளிப்படுத்தியி
ருக்கிறார். தேவதோத்திரத்துக்காகவும் கொருந்தியருடைய ஆத்தும
நன்மைக்காகவுமாத்திரம் இதை வெளிப்படுத்தி இதினாலே தாம் இயே
சுநாதருடைய மெய்யான அப்போஸ்தலரென்று அவர்கள் எளிதாய்
அங்கீகரித்துக்கொண்டு தம்முடைய போதகத்தை ஆவலோடு கைக்
கொண்டு ஞானப்பிரயோசனம் அடையும்படியாக இப்படித் தம்மை
ப் புகழ்ந்துகொண்டார். ஆகிலும் இப்படிப் புகழ்ந்துகொள்ளும்போது
முதலாய், உலக மகிமையைப் பிறக்கணித்து இயேசுநாதருக்காக நிந்
தையவமானத்தை அவர் ஆசித்திருந்ததாக அவருடைய வார்த்தைகளை
க்கொண்டே தெரியவரும்; ஏனென்றால் தம்மைப் புகழ்ந்துகொள்ளுகி
றது பிறர் ஆத்தும ஈடேற்றத்துக்கு அவசரமில்லாதிருக்கும்போது, த
ம்மைத் தாழ்த்தித் தம்மை அவமானப்படுத்திக்கொள்ளுவார். இதினா
லல்லோ நான் சர்வேசுரனுடைய திருச்சபைக்குக் கலாபனை செய்ததி
னாலே, அப்போஸ்தலப் பட்டத்துக்கு நான் அயோக்கியவானென்றார்.
வேறோரிடத்தில் நான் நீசன், தேவதூஷணன், துஷ்டக் கலாபக்கார
னென்று சொல்லியிருக்கிறார். அவருக்கு நிந்தையவமானம் வரும்போ
து, அகமகிழ்ந்து அக்களிப்பார். இப்படிப்பட்டவர்களுக்கு மகிமைவந்
தாலும், இவர்கள் தங்களைப் புகழ்ந்துகொண்டாலும், இவர்கள் பயப்ப
டுவதற்குக் காரணமில்லை ; ஏனென்றால் தேவ தோத்திரத்துக்கு அவ
சரமென்று இவர்கள் எண்ணும்போது மாத்திரம், மகிமையை ஏற்றுக்
கொள்ளுவார்களல்லாமல் மற்றப்படியல்ல. இவர்கள் தங்கள் மகிமை
யைத் தேடாமல் தேவ தோத்திரத்தையும் ஆத்துமாக்களுடைய நன்
மையையுமாத்திரம் இச்சமயத்தில் நாடித் தேடுகிறதினாலே, இவர்களு
க்கு வருகிற மகிமையும் இவர்கள் தங்கள்பேரில் சொல்லிக்கொள்ளுகி
ற புகழ்ச்சியும் இவர்கள் இருதயத்திலே வீண்மகிமைக்கடுத்த ஓர் அ
ற்ப நினைவைமுதலாய் எழுப்ப அறியாது.

ஆனால் மகிமை பெருமையினாலே நம்மிடத்தில் ஆங்காரம் பிறந்
து நமக்கு வீண் சந்தோஷம் வராமலிருக்கிறது மிகவும் வருத்தமாயி
ருப்பதினாலே, அநேக அர்ச்சியசிஷ்டவர்கள் பெருங்கீர்த்தியினாலும்
மேலான பட்டத்தினாலும் உயர்ந்த அலுவலினாலும் உண்டாகிற ஆப
த்தைக் கண்டு அதுக்குத் தப்பித்துக்கொள்ளப் பிரயாசப்பட்டார்கள்
இதினாலே மனுஷ சஞ்சாரத்தைவிட்டு ஒதுங்கித் தாழ்ந்த அவமானத்
துக்குரிய அலுவல்களைச் செய்து இதுவே தங்கள் புண்ணிய வர்த்திப்



புக்கு மிகவும் உதவியும் தங்களிடத்தில் தாழ்ச்சியைக் காப்பாற்றுவத
ற்குத் தகுந்ததும் தங்கள் ஈடேற்றத்துக்கு நிச்சயமுமான வழியென்று
கண்டுகொண்டார்கள். இதினாலே அர்ச். பிராஞ்சீஸ்கு திருவுளம்பற்
றினதாவது: மனுஷருடைய புகழ்ச்சியைப் பார்க்க அவர்களுடைய இ
கழ்ச்சியை நான் அதிக சந்தோஷத்தோடு பட்டநுபவியாவிட்டால், நா
ன் மெய்யான சந்நியாசியல்ல; ஏனென்றால் நான் பிரசங்கிக்கும்போ
தும், மற்றவர்களுக்குப் பிரயோசனமான யாதொரு நற்கிரிகை செய்யு
ம்போதும், அவர்கள் சொல்லுகிற புகழ்ச்சி என் ஈடேற்றத்துக்கு மோ
சமாயிருந்தாலும், அதினாலே அவர்களுக்கு வருகிற பிரயோசனத்தைக்
கண்டு நான் சந்தோஷப்படுகிறேனே; இதிப்படியானால், அவர்கள் எ
னக்குப் பண்ணுகிற நிந்தையவமானம் என் ஈடேற்றத்துக்கு உதவி
யாயிருக்கக்கொள்ள, அதினாலே எனக்கு வரும் பிரயோசனத்தைக் க
ண்டு நான் அதிக சந்தோஷப்பட வேண்டாமோவென்றார். முந்தமுந்த
த் தன்னைச் சிநேகிப்பதே சரியான சிநேகமாகக்கொள்ள, பிறருடைய
ஆத்தும இரக்ஷணியத்தைவிட நமது ஆத்தும இரக்ஷணியத்தின்பேரி
ல் நாம் அதிக கவலையாயிருக்க வேணுமென்பது நிச்சயமாமே. ஆகை
யால் நீ செய்த பிரசங்கமும் பிறசிநேகத்துக்கடுத்த வேறெந்தக் கிரி
கையும் அநுகூலப்பட்டு அதின் நிமித்தம் உனக்குப் புகழ்ச்சி உண்டா
னால், பிறருக்கு வந்த நன்மையை நினைத்துச் சந்தோஷப்படுகிறாயே; இ
திப்படியிருக்க, உன்னாலான பிரயாசமெல்லாம் பட்டபின் உன் அலுவ
ல் கைகூடிவராமல் உனக்கு நிந்தையவமானம் நேரிட்டால், இதினாலே
உனக்கு வருகிற ஆத்தும நன்மையை நினைத்துச் சந்தோஷப்படாதிருக்
கிறதென்ன? நிந்தை அவமானம் உன் ஆத்துமத்துக்கு மோசமில்லாத
பாதையல்லோ? ஆத்துமாக்கள் ஈடேற்றத்துக்காக மேலான அலுவ
லைச் செய்யச் சாமர்த்தியம் உன்னிடத்தில் உண்டென்று கண்டால், ச
ந்தோஷப்படுகிறாயே; மேற்சொன்ன சாமர்த்தியம் உன்னிடத்தில் இ
ல்லாதிருந்தால், உன் நீசத்தனத்தைக் கண்டு சர்வேசுரனுக்கு முன்பா
க உன்னை நீயே தாழ்த்திக்கொண்டு தாழ்ச்சியாகிற ஞானப் பிரயோச
னம் அடையலாமென்றிருக்கையிலே, இதின் நிமித்தம் நீ சந்தோஷப்
படாதிருக்கிறதென்ன? பிறருடைய நன்மைக்காக உழைப்பதற்கு உ
ன் சரீரத்திலே வெகு பெலன் உண்டாயிருந்தால், அகமகிழ்ந்து அக்க
ளிக்கிறாயே; நீ வியாதிஸ்தனும் பலவீனனும் ஒன்றுக்கும் உதவாதவ
னுமாயிருந்தால், தாழ்ச்சியுள்ளவனாகி அதினாலே ஞானப் பிரயோசன
ம் அடையலாமே; பிறசிநேகத்துக்கடுத்த பெரிய அலுவல்களைச் செ

ய்கிறதைவிட நீ ஒன்றும் செய்யாமல் இருக்க வேணுமென்று சர்வேசுரனுக்குச் சித்தமாயிருக்கிறதினாலே, அவருக்கு அதிக பிரியப்படலாமே; இதின் நிமித்தம் நீ சந்தோஷப்படாதிருக்கிறதென்ன?

நாம் இதுவரையில் சொன்னதைப் பார்க்குமளவில், கீர்த்தியும் மேலான எண்ணமும் பிறர் ஆத்துமத்துக்கு நன்மைசெய்ய அவசரமான வழிபாடென்று போக்கு வைத்துக்கொண்டு மகிமையான அலுவலையும் மேன்மையாகத் தோன்றுகிறதெல்லாவற்றையும் தேடித் திரிந்து தாழ்மையும் அவமானமுமுள்ள அலுவலினாலே மனிதர் தங்களைத் தாழ்வாயெண்ணுவார்களென்று பயந்து அதை விலக்கி நடக்கிறவர்கள் எவ்வளவு மோசம்போகிறார்களென்று அறிந்துகொள்ளலாம். இப்படி நடக்கிறதிலே வேறோர் தப்பிதமும் உண்டு: அதென்னவென்றால், மனிதருடைய புகழ்ச்சியை அடைவதற்கு உதவியாயிருக்குமென்று ஒருவன் எண்ணுகிற காரியமே அதைப் போக்கடிப்பதற்கு அநந்தமுறை காரணமாயிருக்கும்; தன் கீர்த்தியைப் போக்கடிப்பதற்குரியதென்று அவன் நினைக்கிற காரியமே அதை அடைவதற்கு உதவியாயிருக்கும். பரும்படியான உடை தரித்துக்கொண்டு நீச அலுவல் செய்தால், பிறர் ஆத்தும இரக்ஷணியத்துக்காகச் செய்கிற அலுவல் பிரயோசனமாயிருக்கமாட்டாதென்று சிலர் எண்ணுவார்கள். இவர்கள் ஆங்காரத்தினாலே மோசம்போகிறார்களென்பது நிச்சயம்; ஏனென்றால் பரும்படியான உடையும் நீச அலுவலுமே உன்னை மகிமைப்பட்டவனாக்கும்; மகிமை பெருமை உன்னை நிந்தைக்குரியவனாக்கும். அர்ச். இஞ்ஞாசியார் இச்சத்தியத்தை நன்றாய் அறிந்திருந்ததினாலே, அவர் சொன்னதாவது: உலோக மகிமைக்கடுத்த மேலான நடக்கையைவிடத் தாழ்ச்சியும் பிறசினேகமுமுள்ள நடக்கை பிறர் மனதைத் திருப்புவதற்கு அதிகமாய் உதவுமென்றார். தாமே இந்தப் புத்தியைத் தமது நடக்கையில் அநுசரித்துக்கொண்டு வந்ததுமன்றிப் பிறர் இரக்ஷணியத்துக்கடுத்த அலுவல் செய்வதற்கு அவர் யாரையாகிலும் அனுப்பினால், எப்போதும் தாழ்ச்சியாகிற பாதையிலே நடக்க வேணுமென்று அவர்களுக்குப் புத்தி சொல்லுவார். தாழ்ச்சியாகிற அஸ்திவாரத்தின்மேலே நீங்கள் கட்டுகிறதெல்லாம் ஸ்திரமாயிருக்கும்; மேலான அலுவல்களைச் செய்வதற்குச் சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவர்களைத் தெரிந்துகொள்ளுகிறது வழக்கமென்பார். இதின் நிமித்தம் அர்ச். சவேரியாரையும் சீமோன் ரோதிரீகேசென்னும் சுவாமியாரையும் பொர்த்துக்கால் இராச்சியத்துக்கு அனுப்பும்போது, தரித்




திரமும் தாழ்ச்சியும் உங்கள் அலுவலுக்கு வழிசெப்பனிடும்படியாய் அங்கே சேர்ந்தவுடனே பிச்சை வாங்க வேணுமென்று கற்பித்தார். சால்மெரோன் பாஸ்காசென்னும் சுவாமிமார்கள் அர்ச். பாப்புவின் ஸ்தானுபதிகளாக இர்லாந்துதேசத்துக்குப் போகும்போது, அங்கே பிள்ளைகளுக்கும் சனங்களுக்கும் ஞான உபதேசம் கற்றுக்கொடுக்க வேணுமென்று கற்பித்தார். சால்மெரோன் லேயினெசென்னும் சுவாமிமார்களை மூன்றும் பவுலென்னும் அர்ச். பாப்பானவர் தமது சாஸ்திரிகளாகத் திரிதேந்தினென்னும் திருச்சபை சங்கத்துக்கு முதல்விசை அனுப்பும்போது, அவர்கள் தினந்தோறும் சங்கத்துக்குப் போகுமுன்னே நோவாளிகள் சாலையிலுள்ள வியாதிஸ்தருக்கு ஊழியம்பண்ணிச் சிறுபிள்ளைகளுக்குக் குறிப்பிடம் கற்றுக்கொடுத்தபின், திருச்சபை சங்கத்துக்குப் போய் உங்கள் கருத்தை வெளிப்படுத்தலாம்; அப்போது அது நன்மையாகுமென்பது தப்பாதென்றார். தேவகிருபையினாலே அவர்களுடைய சாஸ்திரம் திருச்சபை சங்கத்துக்கு வெகு பிரயோசனப்பட்டதென்றறிவோம். இதுவெல்லாம் இப்படியிருக்க, உலோகவாசிகளுக்குரிய வீண்புத்தியை நம்பி இப்படிப்பட்ட தாழ்மையான அலுவலைச் செய்கிறதினாலே நமது கீர்த்திக்குக் கெடுதல்வருமென்று கனவிலேமுதலாய் நினைக்கலாமோ? இல்லை, இல்லை. சிறுவர்களுக்கு மந்திரம் குறிப்பிடம் படித்துக் கொடுத்துத் தெருவிலேயும் நோவாளிகள் சாலையிலேயும் சிறைச்சாலையிலேயும் மனுஷர்களுக்குப் புத்திபோதகம் சொல்லிக் கொடுத்தால், சுவிசேஷ வேலையின் மகிமைக்குக் கேடுவருமென்று பயப்படாதே. எளியவர்களுக்குப் பாவசங்கீர்த்தனங் கொடுத்துச் சந்நியாச தரித்திரத்துக்கடுத்த உடுப்புப் போட்டிருந்தால், உன்னைத் தாழ்வாயெண்ணுவார்களென்று அஞ்சாதே. இதின் நிமித்தம் உன்னை அதிக கனமாயெண்ணுவார்கள், அப்போது நீயும் ஆத்துமாக்களுக்கு அதிக நன்மைசெய்வாய்; ஏனென்றால் தாழ்ச்சியுள்ளவர்களை உயர்த்தச் சர்வேசுரன் எப்போதும் பிரியப்படுகிறார்; தாழ்ச்சியுள்ளவர்களைக் கொண்டு சர்வேசுரன் மேலான கிருத்தியங்களைச் செய்து முடிக்கிறது வழக்கம்.

ஆனால் நாம் இப்போது சொல்லிக்காட்டினது முக்கியமான முகாந்தரமாயிருந்தாலும், இதைவிட்டு நேர்மையான புத்தி ஞாயத்துக்கு ஒத்தபிரகாரம் இது காரியத்தை யோசித்துப் பார்த்தால், மனிதருடைய மேலான எண்ணத்தையும் பிரியத்தையும் அடைந்து ஆத்துமாக்க






ளுக்கு வெகு நன்மைசெய்வதற்குத் தாழ்மையான வேலை செய்கிறதைவிடத் தகுந்த வழிபாடு வேறொன்றுமில்லையென்று அறிந்துகொள்ளுவாய். மேலான கிருத்தியங்களைச் செய்வதற்கு உன்னிடத்தில் எவ்வளவு சாமர்த்தியம் உண்டோ, அவ்வளவுக்கு நீசக்கிரிகைகளைச் செய்து தாழ்ந்து நடக்கிறதினாலே உனக்குக் கீர்த்தியும் பிறருக்கு நன்மாதிரிகையும் உண்டாகும். இதற்கு முகாந்தரமேதென்றால், மகிமை பெருமையையும் உயர்ந்த அலுவலையும் மனிதர் வெகு கனமாயெண்ணுகிறதினாலே, யாதொருவன் அதை நிந்தித்து நடக்கிறதைக் கண்டால், வெகு ஆச்சரியப்படுவார்கள். மேலான காரியங்களைச் செய்யச் சாமர்த்தியமுள்ளவன் மனதுபொருந்தி வேணுமென்று தாழ்ந்த அலுவலைச் செய்கிறது எப்படியென்று கண்டுபிடிக்கமாட்டாமல் பிரமிப்பார்கள். ஆகையால் தாழ்ந்த அலுவலைச் செய்துகொண்டு வருகிறவர்கள் அர்ச்சியசிஷ்டவர்களென்றெண்ணி அவர்கள் வாயிலிருந்து புறப்படுகிற வார்த்தையெல்லாம் மோக்ஷத்திலிருந்து வருகிற போதகமென்று வெகு பூச்சியத்தோடே கேட்டுக்கொள்ளுவார்கள்.

அர்ச். சவேரியார் சரித்திரத்தில் எழுதியிருக்கிற சங்கதியாவது: அவர் இந்துதேசத்துக்கு வரக் கப்பல் ஏறுந்தருணத்தில் இவ்வளவு பெரிய யாத்திரைக்கு அவசரமான சாமான் ஒன்றும் தேடினவரல்ல. இந்துதேசத்து கப்பற்படைக்கு அதிகாரியான காஸ்தாஞேதென்னும் வமிஷபதி அர்ச். சவேரியாரை நோக்கிக் கப்பலில் உமக்குப் பணிவிடைசெய்ய யாதொரு ஊழியனை அழைத்துக்கொண்டு வரவேண்டும்; ஏனென்றால் நீர் உமது வஸ்திரங்களைத் துவைத்துச் சாப்பாடு சமைக்கிறதைக் கண்டால், உம்மை ஒருவரும் கனம்பண்ணமாட்டார்கள், உம்முடைய புத்தியை ஆசையோடு கேள்க்கவுமாட்டார்களென்றார். அதுக்கு அர்ச்சியசிஷ்டவர் சொன்ன மாறுத்தரமாவது: சிலாக்கியப்பட்டு மகிமையையும் அதிகாரத்தையும் அடையத் தேடினதினாலே, திருச்சபைக்கும் குருப்பிரசாதிகளுக்கும் வெகு பொல்லாப்பு நேரிட்டது. என் கந்தைத் துணிகளை நானே துவைத்து என் சாப்பாட்டை நானே சமைத்துக்கொண்டு இத்தோடு பிறருக்குப் பிரசங்கித்து அவர்கள் ஆத்தும ஈடேற்றத்துக்காக இடைவிடாமல் உழைப்பதே என்னை மற்றவர்கள் கனம்பண்ணுவதற்கான மெய்யான வழிபாடாகுமென்றார். அர்ச்சியசிஷ்டவர் சொன்ன இந்த மறுமொழியை அந்த வமிஷபதி கேட்டு பிரமித்து ஆச்சரியப்பட்டு ஒன்றும் சொல்லாமல் நின்றார். ஆகை






யால் தாழ்ச்சி முயற்சியைக் கொண்டு மனுஷருடைய மேலான எண்ணத்தையடைந்து அவர்கள் ஆத்துமத்தை ஈடேற்றலாமென்பது நிச்சயம். இவ்வண்ணமே அர்ச். சவேரியார் சிறுபிள்ளைகளுக்கு ஞான உபதேசம் சொல்லிக்கொடுத்துத் தெருவிலே இராத்திரியில் மணியடித்துக் கொண்டுபோய் சனங்களை உத்தரிக்கிற ஆத்துமாக்களுக்காக வேண்டிக்கொள்ளச் சொல்லி வியாதிஸ்தருக்கு ஊழியம் செய்து ஆறுதல் சொல்லிப் பிறசினேகத்துக்கடுத்த தாழ்ந்த வேலைகளையெல்லாம் இடைவிடாமல் செய்துகொண்டு வந்ததினாலே எத்தனையோ ஆத்துமாக்களை ஈடேற்றினார்! அவர் செய்த இந்தத்தாழ்ந்த வேலைகளின் நிமித்தம் மேலான கீர்த்தியை அடைந்தார். மனிதர் அவர்பேரில் வைத்த நம்பிக்கையினாலே எல்லாரும் அவர் சொன்ன புத்தியைக் கேட்டு நடந்து அவரை அர்ச்சியசிஷ்டவரென்று சொல்லுவார்கள். தாழ்ச்சியுள்ளவரென்கிற கீர்த்தியும் அர்ச்சியசிஷ்டவரென்கிற புகழ்ச்சியும் சுவிசேஷத்தைத் தேவ பற்றுதலோடு பிரசங்கிக்கும் மகாத்துமாவென்கிற பெருமே ஆத்துமாக்களை இரட்சிக்கிறதற்கு அவசரமான புகழ்ச்சியாகும். இவ்விதப் புகழ்ச்சியைச் சம்பாதிப்பதற்கு மாத்திரம் நாம் பிரயாசப்படவேண்டும். ஏனென்றால் உயர்ந்த உத்தியோக முதலிய மேலான அலுவல்களைக் கொண்டு நாம் சம்பாதிக்கத் தேடுகிற மகிமையிலே உலோக வீண்மகிமை கலந்திருக்கிறதினாலே, அது பிரயோசனமாயிராமல் கெடுதலாயிருக்கும்; அது பிறருக்கு நன்மாதிரிகையாயிராமல் துர்மாதிரிகையாயிருக்கும்.

நாமோவென்றால் நமது மகிமையைத் தேடுகிறதில்லை; அதைத் தேடித் திட்டம்பண்ணுகிறவர் வேறே ஒருவர் உண்டென்று இரட்சகர் திருவுளம்பற்றினார். இவ்வாக்கியத்தின்பேரில் சாஸ்திரியும் புத்திசாலியுமான மகாத்துமா ஒருவர் மிகவும் நேர்த்தியான ஓர் புத்தி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், நமது மோக்ஷபிதா நமது மகிமையைத்தேடி அதை நமக்கு வருவிக்கக்கொள்ள, நாம் அதைத் தேடுகிறது வீணாயிருக்குமென்றார். உன்னை நீயே தாழ்த்தித் தாழ்மையாயிருக்கப் பிரயாசப்படு; ஆத்துமாக்களுக்கு நன்மைசெய்ய உனக்கு அவசரமான கீர்த்தியைச் சர்வேசுரன் உனக்கு வருவிப்பார். நீ கீர்த்தி அடைவதற்கு வேறெந்த வழிபாடுகளையும் விட்டு உன்னைத் தாழ்த்துகிறதற்கும் அவமானப்படுகிறதற்கும் பிரயாசப்பட்டால், இதினாலே எல்லாத்துக்கு மேலான எண்ணமும் கீர்த்தியும் உனக்குக் கிடைக்குமெ






ன்பதற்குச் சந்தேகமில்லை.

நீ உட்பட்டிருக்கிற சபையின் மகிமையைத் தேட வேணுமென்றும் எண்ணாதே; ஏனென்றால் உன்னிடத்திலுள்ள சுய சிநேகத்தையும் வீண் மகிமையையும் மறைப்பதற்காக நீ எடுத்த உபாயம் இதுவே. என் மகிமையை நான் சட்டைபண்ணுகிறதில்லை; நான் உட்பட்டிருக்கிற சபைக்குச் சங்கை உண்டாகும்பொருட்டு மகிமை கீர்த்தியைத்தேடுகிறேனென்று சொல்லுவாயாக்கும். இந்த வீண் ஞாயத்தையெல்லாம் விட்டுவிடு. நீ தாழ்ச்சியும் அடக்க ஒடுக்கமும் பொறுமையுமுள்ளவனாய் இருந்தால் மாத்திரம், உன் சபைக்கு மகிமை உண்டாகும்; ஏனென்றால் தாழ்ச்சியும் அடக்க ஒடுக்கமும் ஒறுத்தலும் உலக நன்மைகளின்பேரில் முழு வெறுப்புமுள்ள சந்நியாசிகள் இருக்கிற சபைமாத்திரம் மெய்யான மகிமையுள்ள சபையென்று அறிந்துகொள்ளக் கடவாய்.

இந்துதேச சரித்திரத்தில் மாபேயென்னும் சுவாமியார் எழுதிவைத்திருக்கிற வர்த்தமானமாவது: யப்போனிய தீவிலுள்ள மீறுந்தோவென்னும் பட்டணத்துத் தெருவிலே இயேசுசபை சுவாமிமார்களிலொருவர் வேதம் போதித்துக்கொண்டிருக்கையில், தெருவோடே போன ஒரு அஞ்ஞானி அவரையும் அவர் சொன்னதையும் கேலிபண்ணிக் காறி முகத்திலே துப்பினான். அந்தச் சுவாமியார் முகத்திலே ஒரு அற்பக் கோப அடையாளமுமில்லாமலும் ஒன்றுஞ் சொல்லாமலும் இலேஞ்சை எடுத்து முகத்தைத் துடைத்துக்கொண்டு ஒன்றுமில்லாததுபோலே பிரசங்கித்துக்கொண்டிருந்தார். அந்தப் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களிலொருவன் இதைக் கண்டு இவ்வளவு பொறுமையையும் தாழ்ச்சியையும் மனத்திடனையும் போதிக்கிற வேதம் மோக்ஷத்திலிருந்து வரக்கூடுமேயல்லாமல் மற்றப்படியல்லவென்று மனந்தேறி அந்தச் சுவாமியார் பிரசங்கம் முடிந்தவுடனே அவரிடத்திலேபோய் எனக்கு வேத சத்தியங்களைப் போதித்து ஞானஸ்நானங் கொடுக்க வேணுமென்று கேட்டுக்கொண்டான்.

———oooo———





# நக-ம் அதிகாரம்.

——(:o:)——

## தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தின்பேரில்.

——ooo——

**யா**தாமொருவன் திரளான தேவ வரங்களை அடைந்திருக்கிறதிஞலே மற்றவர்கள் அவனைக் கனம்பண்ணிச் சங்கித்தாலும், இதிஞலே அவன் அற்ப ஆங்காரப்படாமலும் தான் அடைந்திருக்கிற தேவ வரங்கள் தன்னுடையதென்று எண்ணுமலும் இது சகல நன்மைக்கும் ஊற்ருகிற சர்வேசுரனுக்கே சொந்தமானதென்று நிச்சயித்துக்கொள்ளுகிறது தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தாகும். புண்ணியத்தில் முழுதும் உத்தமராகி முழுதும் தேர்ந்திருந்தாலும், புண்ணிய சாங்கோபாங்கத்தில் தாங்கள் எவ்வளவு உயர்ந்திருப்பார்களோ, அவ்வளவு தங்களைத் தாழ்த்திக்கொள்ளுகிறவர்களுக்கு மாத்திரம் இந்த மூன்ரும் அந்தஸ்து உரியதென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். குற்றம் குறைபாடுள்ளவன் நான் குறைபாடுள்ளவனென்று எண்ணிக்கொள்ளுகிறது நல்லதுதான்; ஆனல் இது ஆச்சரியமல்ல. பட்டிக்காட்டு பையனொருவன் நான் இராச குமாரனல்லவென்றும், ஏழையானவன் நான் ஏழையென்றும், நோவாளி நான் நோவாளியென்றும் எண்ணிக்கொள்ளுகிறதும் மற்றவர்களும் தன்னை அப்படி எண்ணவேணுமென்று ஆசைப்படுகிறதும் ஆச்சரியமோ? ஆனல் ஆஸ்திபந்தனொருவன் நான் ஏழையென்றும் எல்லாருக்கும் மேற்பட்டவன் நான் கீழ்ப்பட்டவனென்றும் நிச்சயித்துக்கொண்டு நடந்தால், இதுவே அதிசயத்துக்குரிய காட்சி. இதினலல்லோ கெட்டவன் நான் கெட்டவனென்று எண்ணுகிறதைப் பற்றி ஆச்சரியப்பட வேண்டியதில்லை; நான் நீதிமானென்றும் உத்தம புண்ணியவானென்றும் அவன் எண்ணினல், ஆச்சரியப்பட வேண்டியது. திரேகாதியந்தம் குஷ்டரோகம்பிடித்து இரணப்புண்ணுயிருக்கிறவன் நான் முழுச்சௌக்கியமாயிருக்கிறேனென்று நினைக்கிறதற்கு இது ஒப்பாகுமல்லோவென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். மேலான புண்ணியத்தில் தேறித் திரளான தேவவரங்களால் பூரித்துச் சர்வேசுரனலே மெய்யாகவே கனப்பட்டிருக்கிறவன் நான் சகலரிலும்






தாழ்ந்தவனென்று எண்ணி நடந்தால், இது மெய்யாகவே ஆச்சரியத்துக்குரிய காரியம்; இதுவே தாழ்ச்சியின் மேலான கொடுமுடி. இதினாலல்லோ நீ மேலான காரியங்களைச் செய்தாலும், மேலானவனென்று அறியாதிருக்கிறதும் மற்றவர்களெல்லாரும் உன்னை அர்ச்சியசிஷ்டவனென்று எண்ணியிருந்தாலும், நீ அர்ச்சியசிஷ்டவனென்று உனக்குத் தெரியாதிருக்கிறதும் நீ மற்றவர்களுக்கு ஆச்சரியமுள்ளவனாகத் தோன்றினாலும், உனக்கு நீ நீசனென்று தோன்றுகிறதும் மெய்யாகவே அபூருவமான புண்ணியமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இப்படிப்பட்ட புண்ணியம் தேவமாதாவிடத்திலே எல்லாத்துக்கும் மேலானவிதமாய் விளங்கினது; ஏனென்றால் அவளைச் சர்வேசுரன் தமக்குத் தாயாராகத் தெரிந்துகொண்டாரென்கிற சந்தியத்தை அவள் அறிந்தமாத்திரத்தில், தான் கர்த்தருடைய அடிமையென்று அங்கீகரித்துக்கொண்டு இதோ! நான் ஆண்டவருடைய அடிமையென்றாள். அவள் பெண்பிள்ளைகளெல்லாரையும் பார்க்கப் பாக்கியவதியென்று எலிசபெத்தம்மாள் சொல்லும்போது, தம்மிடத்திலுள்ள பேறுபலன்களையும் மகிமையையும் தம்முடையதென்று சொல்லாமல் அதுவெல்லாம் சர்வேசுரனுக்குச் சொந்தமென்று சொல்லி ஆழ்ந்த தாழ்ச்சியில் அமிழ்ந்திச் சர்வேசுரன் தமதுபேரில் பொழிந்தருளிய வரங்களுக்காக அவருக்கு நன்றியறிந்த தோத்திரம் சொன்னாள். இதினாலல்லோ என் ஆத்துமம் கர்த்தனைத் தோத்திரிக்கின்றது; என்னிரட்சகராகிய சர்வேசுரன் தமதடியாளுடைய நீசத்தனத்தைப் பார்த்ததினாலே, என் மனம் சந்தோஷிக்கின்றதென்றாள். இவ்வித தாழ்ச்சி மோக்ஷவாசிகளிடத்திலுமுண்டு. அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, இருபத்துநாலு மூப்பர்களைக் குறித்து அர்ச். அருளப்பர் காட்சியாகமத்தில் சொல்லியிருக்கிறதே இதற்கத்தாட்சியாகும். அதென்னவென்றால் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறவருக்குமுன்பாக இவர்கள் தீர்க்கதண்டம்பண்ணி ஆராதித்துச் சிம்மாசனத்தின் அடியில் தங்கள் முடியை வைத்தார்களென்று சொல்லியிருக்கின்றது ; ஏனென்றால் தன் முடியைத் தேவசிம்மாசனத்தின் அடியில் வைக்கிறதும் சரி, அதைச் சர்வேசுரனிடத்திலிருந்து பெற்றுக்கொண்டோமென்று அங்கீகரித்து அதினால் வரும் மகிமையையெல்லாம் அவருக்கே செலுத்துகிறதும் சரி. இதினாலல்லோ கர்த்தாவே, தேவரீரே சகல மகிமை பெருமை வல்லபத்துக்குமுடையவர் ; ஏனென்றால் நீரே சகலத்தையும் படைத்தீர், உமது சித்தத்தினாலே சகலமும் உண்டானதென்று மேற்சொன்ன மூப்பர்கள் பேரொலி



பிட்டுக் கூறினார்கள். சகலமும் உம்மிடத்திலிருந்து வருகிறது; எங்களிடத்திலுள்ள நன்மையெல்லாம் உமது சித்தத்தினாலேயும் அநுக்கிரகத்தினாலேயும் உண்டானது; ஆகையால் எங்கள் முடியை உமது பாதத்தில் வைக்கிறது ஞாயந்தானென்று சொன்னாற்போலாகும். ஆகையால் சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொண்ட வரங்களினிமித்தம் தன்னைக் கனமாயெண்ணாமலும் அதினால் வரும் மகிமை தன்னுடையதென்று கனவிலேமுதலாய் நினையாமலும் சகல நன்மையும் தந்தருளுகிற சர்வகாருண்ணியரான சர்வேசுரனுக்கே அதுவெல்லாம் உடையதென்று நிச்சயித்துக்கொண்டு நடக்கிறது தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தாரும்.

ஆனால் இது தாழ்ச்சியானால், நாங்களெல்லாரும் தாழ்ச்சியுள்ளவர்கள்தானென்று சொல்லுவாயாக்கும். ஏனென்றால் தன்னிடத்திலுள்ள நன்மையெல்லாம் சர்வேசுரனுக்குச் சொந்தமென்றும் தன் பாவமும் நிர்ப்பாக்கியமுமாத்திரமே தனக்குச் சொந்தமென்றும் அங்கீகரித்துக்கொள்ளாதவனார்? சர்வேசுரன் என்னை ஒரு க்ஷணமாத்திரம் கைவிட்டால், நான் எல்லாரிலும் கெட்டவனாய்ப் போவேனென்று சொல்லாதவனார்? இதினாலல்லோ இஸ்ராயேல் சனங்களே, உங்கள் கேடு உங்களாலேதான் வந்தது; நம்மிடத்தில் மாத்திரம் உங்களுக்கு உதவி உண்டாகுமென்று ஓசேயேயென்னும் தீர்க்கதரிசி வாயாலே கர்த்தர் திருவுளம் பற்றினார். பாவமாத்திரம் நமக்குச் சொந்தமென்பதும் நம்மிடத்திலுள்ள நன்மையெல்லாம் தேவ உதாரத்துவத்தினாலே வந்ததென்பதும் விசுவாச சத்தியமாமே. வேதாகமத்தில் எவ்விடத்திலும் விளங்குகிற இவ்வளவு தெளிவான சத்தியத்தை நாமெல்லாரும் விசுவசித்து அங்கீகரித்துக்கொள்ளுகிறதினாலே, மேற்சொன்ன மூன்றும் வகை மேலான தாழ்ச்சி நாமெல்லாரிடத்திலேயும் உண்டென்று தோன்றுகிறது. வேதாகமத்தில் எங்கும் இச்சத்தியத்தை வெளிப்படுத்தியிருக்கின்றது. இதினாலல்லோ சகல நன்கொடையும் சகல உத்தம வரமும் மேலாவிலிருந்து வருகின்றது; சோதிக்கதிருள்ள பிதாவினிடத்திலிருந்து இறங்கி வருகின்றதென்று அர்ச். இயாகப்பர் வசனித்தார். அர்ச். சின்னப்பரும் தமது நிருபங்களில் பற்பல இடங்களிலே இச்சத்தியத்தைப் போதித்திருக்கிறார். இதினாலல்லோ நீ பெற்றுக்கொள்ளாத காரியமென்ன? நாம் நம்மாலே நன்மையானதொன்றையும் நினைக்கக் கடைப்பட்டவர்களல்ல; நம்மாலே ஏதாகிலும் செய்யக்கூடுமானால், அத

ற்கான வல்லபம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகின்றது. நற்கருத்தை உன்னிடத்தில் ஏவுகிறவரும் சர்வேசுரன்தான்; அதை நிறைவேற்றி முடிக்கச் செய்கிறவரும் சர்வேசுரன்தானென்றார். அவருடைய உதவியில்லாமல் நமது ஈடேற்றத்துக்கு அவசரமானதொன்றையும் செய்யவும் சொல்லவும் துவக்கவும் முடிக்கவும் விரும்பவும் நினைக்கவும் நம்மாலே யேலாது. இச்சத்தியத்தைத் தெளிவாய் விளக்கிக் காட்டுவதற்காக இயேசுநாதர் சுவிசேஷத்தில் வெளிப்படுத்தின உவமையை விடத் தெளிவானதொன்றுமில்லை. அதென்னவென்றால், திராட்சக்கொடி திராட்சச் செடியோடு ஒன்றித்திராவிட்டால், அது பழம் பழுக்கமாட்டாது; அப்படிப்போலே நீங்களும் நம்மோடு ஒன்றித்திராவிட்டால், ஒரு பலனும் பெறமாட்டீர்களென்றார். அதின்பின் அவர்தானே சொன்னதாவது: நாம் திராட்சச் செடி, நீங்கள் திராட்சச் கொடி. யார் நம்மோடு ஒன்றித்திருக்கிறாரோ, யாரோடு நாம் ஒன்றித்திருக்கிறோமோ, அவன் வெகு பலன் பெறுவான்; ஏனென்றால் நம்மையல்லாமல் ஏதாகிலும் செய்ய உங்களாலே முடியாதென்றார். திராட்சக்கொடி செடியோடு ஒன்றித்திருந்தால், அதைப்போலே திரளான பழம் பழுக்கிறது வேறே ஏதாகிலுமுண்டோ? திராட்சக்கொடி செடியைவிட்டு வெட்டுண்டால், அதைப் பார்க்க உதவாத காரியம் எங்கேயாகிலுமுண்டோ? அது எதுக்காகும்? ஒன்றுக்குமாகாது. இதினாலல்லோ திராட்ச விறகு எதுக்காகும்? அது எந்த வேலைப்பாட்டுக்காகிலும் உதவுமோ? அல்லது எந்த வஸ்துவையாகிலும் தாங்குவதற்கான மூட்டுக்காலாகுமோ? அது நெருப்பிலே போடுகிறதுக்குத்தான் உதவுமென்று கர்த்தர் எசேக்கியேலென்னும் தீர்க்கதரிசியிடத்தில் சொன்னார். இயேசுநாதராகிற மெய்யான திராட்சச் செடியோடு நாம் ஒன்றியாதிருந்தால், நாம் இந்தத் திராட்சக் கொடியைப்போலே ஒன்றுக்கும் உதவமாட்டோம். இதினாலல்லோ யாதொருவன் நம்மோடு ஒன்றித்திராதிருந்தால், வெட்டின கொம்பைப்போலே அவனை வெளியே காயப்போடுவார்கள்; அப்புறம் எடுத்து நெருப்பிலே எரியப்போடுவார்களென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். ஆகையால் நாம் விறகுபோலே எரிவதற்கு மாத்திரம் தகுந்தவர்கள்; நம்மிடத்தில் நன்மை ஏதாகிலுமுண்டானால், அதுவெல்லாம் தேவ கிருபையினாலே மாத்திரம் உண்டானது. ஆனால் நாம் மேற்சொன்ன பிரகாரம் இதுவெல்லாம் சகலரும் அறிந்த காரியமாமே; தங்களிடத்திலுள்ளதெல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறதென்றும் பாவமாத்திரமே தங்களுக்குச் சொந்





சிபசிஷ்டவனென்று சங்கித்தாலும், இதினாலே மனசில் ஓர் அற்ப வீண் எண்ணமும் பிறவாதிருப்பதற்கு அருமையான புண்ணியம் அவசரம்.

அர்ச். கிறிசோஸ்தோமுஸ் சொல்லுமாப்போலே, மகிமை பெருமைக்கு நடுவேயிருந்தாலும், ஓர் அற்ப மேலான எண்ணமும் மனசிலே எழும்பாதிருக்கிறது எதுபோலாகுமென்றால், அழகான பெண்களுக்கு நடுவேயிருந்தாலும் அற்ப அக்கிரமமான பார்வையும் பாராதிருக்கிறதற்கு ஒப்பாகும். இது மகா வருத்தமான காரியம்; இதற்கு மகா ஸ்திரமான புண்ணியம் அவசரம். வெகு உயரமாயேறினாலும், மயக்கமில்லாமலிருப்பதற்கு வெகு மனத்திடாரிக்கம் வேண்டும்; சகலரும் இதற்குத் தகுந்தவர்களல்ல. லூசிபேரும் அதோடு சேர்ந்த சம்மனசுகளும் மகா மேலான அந்தஸ்திலிருந்ததினாலே மதிமயங்கி உடனே பாதாளத்திலே தாழ தள்ளுண்டுபோனார்களே. அதையும் அதோடு சேர்ந்த சம்மனசுக்களையும் சர்வேசுரன் மகா உத்தமசாலிகளாய் உண்டாக்கினதினாலே, அதுகள் சத்தியத்திலே நிலைக்கொள்ளாமற்போனது: அதாவது, அதுகள் சர்வேசுரனுக்குச் செய்யவேண்டிய நன்றியறிதலைச் செய்யாமல் தங்களிடத்திலுள்ள தேவ வரங்களை நினைத்து வீண் மகிமைக்கு இடம் கொடுத்தது. ஆகிலும் இதுவெல்லாம் தங்களாலானதல்லவென்றும் இதுகளைப் படைத்துத் தங்களுக்குத் தந்தவர் சர்வேசுரனென்றும் நன்றாயறிந்திருந்தது. இதினாலல்லோ உன் அழகை யோசித்து ஆங்காரங்கொண்டாய்; உன் அழகைப் பார்த்து ஞானத்தைப் போக்கடித்தாயென்று எசக்கியேலென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். தேவ வரங்களைச் சர்வேசுரனிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளாததுபோலே, அதுகளினிமித்தம் லூசிபேர் ஆங்காரித்தது; அதுகளினாலே வரவேண்டிய மகிமை பெருமையை முழுதும் அவருக்குச் செலுத்தாமல் அதுகளைக் கொண்டு தன்னை மகிமைபாராட்டினது. இந்த மகிமையெல்லாம் சர்வேசுரனுக்குச் சொந்தமென்று புத்தியைக் கொண்டு அது நன்றாயறிந்திருந்தாலும், மனதைக் கொண்டு அதைச் சர்வேசுரனிடத்திலிருந்து திருடித் தனக்குச் சொந்தம்பாராட்டினது. ஆகையால் நாம் இப்போது சொல்லிக் காட்டின தாழ்ச்சியின் அந்தஸ்து எளிதான காரியமல்ல; ஏனென்றால் சம்மனசுக்களுக்கே இது வருத்தமாயிருந்ததே; அதுகள் முதலாய் இந்த மேலான அந்தஸ்தில் நிலைக்கொள்ளமாட்டாமல் கீழே விழுந்து கெட்டுப்போனதே. அதுகள்

இந்த மேலான அந்தஸ்தில் நிலைக்கொள்ளமாட்டாமல் விழுந்திருக்க, நிர்ப்பாக்கியமான மனுஷராகிய நாம் பயப்படுகிறதற்கு எவ்வளவோ காரணமுண்டு! அவர்கள் மேலான மகிமையை அடைந்தமாத்திரத்தில், தாழ்த்தள்ளுண்டு புகையைப்போலே மறைந்து ஒழிவார்களென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கிற வாக்கியம் நமக்கு செல்லுமல்லோ? புகை உயரப் போகப்போகக் கலைந்து காணமற்போகும்; அவ்வண்ணமே மனுஷருக்கு எவ்வளவு மகிமை பெருமை வருமோ, அவ்வளவுக்கு ஆங்காரமும் வீண் மகிமையுமாகிற நினைவுக்கு இடம் கொடுத்துக் கெட்டு ஒழிவார்கள்.

இது காரியத்திலே நாம் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்று உலக இரட்சகர் தானே புத்திசொல்லியிருக்கிறார். அதெப்படியென்றால், பிரசங்கிப்பதற்குத் தமது சிஷாக்களை அனுப்பியிருந்தார். அவர்கள் சந்தோஷமாய்த் திரும்பி வந்து அவருடைய பேராலே பசாசுகள் முதலாய்த் தங்களுக்குக் கீழ்ப்படிந்ததென்று அகமகிழ்ந்து சொன்னார்கள். அப்போது அவர் சொன்னதாவது: பசாசு மின்னலைப்போலே மோக்ஷத்திலிருந்து விழுகிறதைக் கண்டோமென்றார்; அதாவது, எச்சரிக்கையாயிருங்கள்; ஆங்காரத்தினாலே லூசிபேர் மோக்ஷத்திலிருந்து விழுந்தது. அது தன்னிடத்திலுள்ள உத்தம இலட்சணங்களைக் கண்டு வீண் மகிமைகொண்டது; தான் அடைந்திருந்த தேவவரங்களுக்குரிய மகிமை சர்வேசுரனுக்குச் சொந்தமென்றெண்ணாமல் தனக்குச் சொந்தமென்றாற்போலே ஆங்காரித்து அடங்காமற்போனது. உங்களுக்கும் இப்படிச் சம்பவியாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; நம்முடைய பேராலே நீங்கள் செய்கிற ஆச்சரியங்களைக் கண்டு வீண்மகிமைகொண்டு உங்கள் நீசத்தனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் மறந்துபோகாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்களென்று அர்த்தமாகும். சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களெல்லாருக்கும் இந்தப் புத்தி செல்லும். சர்வேசுரன் உன்னைக் கொண்டு பிறர் ஆத்துமத்துக்கு வெகு நன்மைசெய்து அவர்களை மோக்ஷத்தில் சேர்க்க வேணுமென்று அவருக்குச் சித்தமானால், இதினிமித்தம் ஆங்காரப்படாதே. மற்றவர்கள் உன்னைக் கனமாய் எண்ணிச் சங்கித்துப் புகழ்ச்சி பாராட்டுகிறதைக் கண்டு வீண் சந்தோஷத்துக்கு இடம் கொடாதே. எதைப்பற்றியும் உன்னைக் கனமாயெண்ணாதே; மனுஷர் உனக்குச் செய்கிற சங்கையும் சொல்லுகிற புகழ்ச்சியும் உன் இருதயத்திலே படாதிருக்கும் பொருட்டு எ






ச்சரிக்கையாயிரு. சோதியுள்ள சம்மனசாகிய லூசிபேரைக் கெடுத்
து அதை இருளடர்ந்த பசாசாக்கினது ஆங்காரமாமே. அர்ச். அகுஸ்
தீன் சொல்லுமாப்போலே, ஆங்காரம் சம்மனசுகளைப் பசாசாக்கினதி
னாலே, அது எவ்வளவு ஆபத்துக்குரியதென்றும் தாழ்ச்சி மனிதரைச்
சம்மனசுக்களுக்கு ஒத்தவர்களாக்கிறதினாலே, அது எவ்வளவு மேன்
மையுள்ளதென்றும் கண்டுகொள்ளலாம்.

——— ooooo ———

## ௩௧-ம் அதிகாரம்.

——— oooo ———

தாழ்ச்சியின் மூன்றாம் அந்தஸ்து இன்னதென்று
சொல்லுவது.

——— ——

**தா**ழ்ச்சியின் மூன்றாம் அந்தஸ்து இன்னதென்று நாம் விவரித்
துக் காட்டினது பற்றாது. ஆகையால் இந்தப் புண்ணிய சாங்கோபா
ங்கத்தை நாம் எளிதாய் அநுசரிக்கும்பொருட்டு இன்னம் இதைத் து
லக்கிக் காட்டுகிறது அவசரமாமே. தேவ கிருபையினாலே நம்மிடத்தி
லிருக்கிறது இன்னதென்றும் கெட்டுப்போன நமது சுபாவ பலவீனத்
தினாலே நம்மிடத்திலுண்டானது இன்னதென்றும் பகுத்தறிந்துகொ
ண்டு சர்வேசுரனிடத்தில் நாம் பெற்றுக்கொண்டதை அவருக்கும் நம்
மாலே மாத்திரம் நமக்கு வந்ததை நமக்கும் கொடுக்க வேண்டும். ஆ
கையால் நம்மாலே ஒன்றும் ஆகாதென்றும் நம்மாலே ஒரு பேறுபல
னும் சம்பாதிக்கக் கூடாதென்றும் நம்மிடத்திலுள்ள நன்மையெல்லா
ம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறதென்றும் நாம் நன்மையை விரு
ம்பி அதைச் செய்துமுடிப்பதற்கான வரப்பிரசாதத்தை அவர் தமது
பிரியம்போலே நமக்குத் தந்தருளுகிறாரென்றும் அறிந்துகொள்ளுகிற
துமாத்திரம் பற்றாது; ஏனென்றால் இது விசுவாச சத்தியமாகக்கொ
ள்ள, சகல கிறீஸ்துவர்களும் இதை நிச்சயமாய் அங்கீகரித்துக்கொள்ள
வேண்டும். ஆனால் இந்தச் சத்தியம் நமது இருதயத்தில் ஆழமாய்ப் ப
திந்து எச்சமயத்திலும் இதை நினைவிலும் வாக்கிலும் கிரிகையிலும் வி
டாத மேரையாய் அநுசரித்துக்கொண்டு வரவேண்டும். இதுவே தா

ழ்ச்சியின் மூன்றுமந்தஸ்து. சர்வேசுரனுடைய விசேஷ வரப்பிரசாதமில்லாமல் இதை அநுசரிக்கமுடியாதென்று அர்ச். அம்புரோசியார் வசனித்தார். இதற்கு அத்தாட்சியாக நாங்கள் உலோகபற்றுதலைக் கொண்டவர்களல்ல; ஆனல் தேவபற்றுதலைக் கொண்டு சர்வேசுரன் எங்களுக்குக் கொடுத்தருளின வரம் இன்னதென்று அறிந்திருக்கிறோமென்று அர்ச். சின்னப்பர் சொன்ன வாக்கியத்தை எடுத்துக் காட்டியிருக்கிறார். இதிலே அர்ச். சின்னப்பர் சொல்லியிருக்கிறதுபோலே, நாம் சர்வேசுரனிடத்தில் அடைந்த வரங்கள் இன்னதென்று அறிந்துகொண்டு அவருடைய உதாரத்துவத்துக்கு அதைச் செல்லப்பண்ணுகிறது சர்வேசுரனுடைய விசேஷ வரப்பிரசாதமாகும்; இது மகா மேலான ஞானமென்று சலோமோன் வசனித்திருக்கிறார். அதெப்படியென்றல், சர்வேசுரன் கற்பென்னும் வரத்தை எனக்குக் கொடாவிட்டால், நான் அதைக் காப்பாற்ற முடியாதென்று எனக்குத் தெரியும்; அது யாருடைய வரமென்று அறிந்துகொள்ளுகிறது முதலாய் மகா மேலான ஞானமென்றார். இங்கே சர்வேசுரனுடைய விசேஷ வரமென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறதும் மகா மேலான ஞானமென்று சலோமோன் சொல்லுகிறதுமே தாழ்ச்சியின் மூன்றுமந்தஸ்தாகும். நீ பெற்றுக்கொள்ளாதது உன்னிடத்தில் என்ன உண்டு? நீ அதைப் பெற்றுக்கொண்டிருந்தால், பெற்றுக்கொள்ளாததுபோலே உன்பேரில் மகிமைபாராட்டுவானேனென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார்.

அர்ச்சியசிஷ்டவர்கள் அநுசரித்துக்கொண்டுவந்த தாழ்ச்சியிதுவே. அவர்கள் தேவ வரங்களால் நிறைந்து சகல புண்ணிய சாங்கோபாங்கத்தில் உயர்ந்திருந்தாலும், சகலரும் அவர்களைக் கனம்பண்ணிச் சங்கித்தாலும், தாங்கள் சர்வேசுரனுக்கு முன்பாக நிந்தைக்குரியவர்களென்றெண்ணித் தங்களுடைய நீசத்தனத்தையும் ஒன்றுமில்லாமையையும் எப்போதும் தங்கள் கண்ணுக்கு முன்பாக வைத்துக்கொண்டு நடந்தார்கள். தங்களுக்குச் சொந்தமானது இன்னதென்றும் தங்களுக்குச் சொந்தமில்லாதது இன்னதென்றும் அவர்கள் பகுத்தறியப் பழகியிருந்ததினலே, மனிதருடைய மகிமை புகழ்ச்சியினிமித்தம் அவர்கள் இருதயத்தில் அற்ப வீண் மகிமையும் பிறக்கவில்லை. ஆகையால் அவர்கள் அடைந்திருந்த மேலான வரங்களும் அவர்களுக்கு வந்த சங்கை மகிமையையும் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறதென்று அந்த மகிமையை முழுதும் அவருக்கே ஒப்புக்கொடுத்துத் தங்களுக்குச் சொ





ந்தமானது ஒன்றுமில்லையென்றும் தங்களாலே ஒரு நன்மையும் செய்யக்கூடாதென்றும் யோசித்துத் தங்கள் நீசத்தனத்தை நினைத்துச் சர்வேசுரனுக்கு முன்பாகத் தங்களைத் தாழ்த்திக்கொண்டிருப்பார்கள். மனிதர் தங்களைக் கனம்பண்ணிச் சங்கித்தாலும், அதினாலே அவர்கள் இருதயத்தில் ஒரு ஆங்காரமான நினைவும் எழும்பினதில்லை; இதினாலே அவர்கள் ஆங்காரித்துத் தங்களைக் கனமாய் எண்ணினதுமில்லை. தங்களுக்கு வந்த புகழ்ச்சி தங்களுக்கல்லவென்றும் சர்வேசுரனுக்கே சொந்தமென்றும் அவர்களுக்குத் தோன்றினது; தங்களுக்கு வருகிற புகழ்ச்சி சர்வேசுரனுக்கு வருகிறதென்று அவர்கள் மனத்திருத்திப்பட்டுச் சந்தோஷ சாகரத்தில் அமிழ்ந்தியிருந்தார்கள்.

ஆகையால் புண்ணிய சாங்கோபாங்கரும் அர்ச்சியசிஷ்டவர்களு மாத்திரம் இவ்வகைத் தாழ்ச்சியை அநுசரிக்கலாமென்று சொல்லுகிறது மிகவும் ஞாயந்தானே. ஏனென்றால் மிகுந்த தேவ வரங்களையும் மேலான தேவ பிரசாதங்களையும் பெற்றுக்கொண்டவர்களை மாத்திரம் சர்வேசுரன் மெய்யாகவே மேலானவர்களென்று மதிப்பார்; இவர்களிடத்திலே மாத்திரம் மேற்சொன்ன தாழ்ச்சியிருக்கக் கூடும். சர்வேசுரனும் மனுஷரும் மேற்பட்டவனென்று யாதொருவனை மதித்துக்கொண்டு வந்தாலும், அவன் தான் நிந்தைக்குரியவனென்று மெய்யாகவே எண்ணிக்கொள்ளுகிறது மகா அபூருவமான உந்நத சாங்கோபாங்கமல்லோ? அர்ச். கிறிசோஸ்தொமுசும் அர்ச். பெர்நர்துசும் சொல்லுமாப்போலே, அப்போஸ்தலர்களிடத்திலும் வேறே பற்பல பெரிய அர்ச்சியசிஷ்டவர்களிடத்திலும் இப்பேர்ப்பட்ட ஆச்சரியத்துக்குரிய புண்ணிய சாங்கோபாங்கம் விசேஷமாய் விளங்கினதென்றறிவோம். இவர்கள் தேவ வரங்களால் பூரித்துச் செத்தவர்களை எழுப்பித் தினந்தோறும் வெகு புதுமைகளைச் செய்துகொண்டு வந்தாலும், சகலரும் இவர்களைப் புகழ்ந்து சங்கித்தாலும், இவர்கள் தங்கள் நீசத்தனத்தை எந்நேரமும் நினைவுகூர்ந்து இந்த மகிமை தங்களுக்குச் சுதந்தமாய் வராததுபோலேயும் வேறொருவர் இந்தப் புதுமைகளைச் செய்ததுபோலேயும் தங்களுக்கு வந்த புகழ்ச்சி தங்களுக்கல்ல, வேறொருவருக்கு வந்ததுபோலேயும் நிச்சயித்துக்கொள்ளுவார்கள். இது காரியத்திலே அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதாவது: நிந்தையவமானப் படும்போது, தாழ்ச்சியாயிருக்கிறது ஆச்சரியமான காரியமல்ல; ஏனென்றால நிந்தையவமானம் நமது நீசத்தனத்தைக் காட்ட உதவும்; ஆனால் சகலரும் நம்மைக் கனம்





பண்ணிச் சங்கித்து நாம் அர்ச்சியசிஷ்டவர்களென்றும் மோக்ஷத்தில் நின்று இறங்கின முத்தர்களென்றும் எண்ணியிருந்தாலும், நம்மிடத்திலொன்றுமில்லாததுபோலே நமது நீசத்தனத்தையும் ஒன்றுமில்லாமையையும் நினைத்து எப்போதும் நமதுபேரில் தாழ்மையான எண்ணங்கொண்டிருக்கிறது மகா மேலான புண்ணியம்; இது மிகவும் அபூருவமான அர்ச்சியசிஷ்டத்தனமென்றார். இன்னம் இந்த அர்ச்சியசிஷ்டவர் சொல்லுமாப்போலே, இப்பேர்ப்பட்டவர்கள்தான் இரட்சகர் கொடுத்தருளின கற்பனையைத் தகுந்த விதமாய் அநுசரிக்கிறவர்கள். அதெப்படியென்றால், உங்கள் பிரகாசம் மனிதருக்கு முன்னே பிரகாசிக்கக்கடவது; அவர்கள் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு மோக்ஷத்திலிருக்கிற உங்கள் பிதாவை ஸ்துதிக்கக் கடவார்களென்று உலக இரட்சகர் திருவுளம்பற்றினர். இவர்களே அப்போஸ்தலரையும் மெய்யான சுவிசேஷ பிரசங்கிகளையும் சரியாய்க் கண்டுபாவிக்கிறவர்கள்; இவர்களே அர்ச். சின்னப்பர் சொல்லுமாப்போலே, தங்களைப் பிரசங்கியாமல் இயேசுநாதரைப் பிரசங்கிக்கிறவர்கள். இவர்களே தங்கள் பிரயோசனத்தை நாடாமலும் சர்வேசுரனுக்குரியதொன்றையும் அபகரித்துக்கொள்ளாமலும் தங்களுக்கு ஒன்றும் வைத்துக்கொள்ளாமலும் சகலத்தையும் பிரமாணிக்கமாய்ச் சர்வேசுரனுக்குச் செலுத்திச் சகலத்திலும் அவரை மகிமைப்படுத்துகிற பிரமாணிக்கமுள்ள நல்ல ஊழியர். ஒருநாள் இவர்கள் கர்த்தருடைய வாயிலிருந்து காதுகுளிரக்கேட்கப்போகிற அமிர்தமான வார்த்தைகளாவது : சவாஸ், பிரமாணிக்கமுள்ள நல்ல ஊழியனே, நீ அற்பக் காரியத்திலே பிரமாணிக்கமாயிருந்ததினாலே, பெரிய காரியத்திலே உனக்கு அதிகாரங் கொடுப்போமென்பார்.

## ௩உ-ம் அதிகாரம்.

### தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தை இன்னம் விரிவாய் விளக்கிக் காட்டுவது.

யாதொருவன் மேலான தேவ வரங்களைப் பெற்று மனுஷராலே புகழ்ச்சியும் மகிமையும் அடைந்திருந்தாலும், இதினாலே அற்ப ஆங்கா

ரப்படாமலும் தனக்குரியது ஏதாகிலும் உண்டென்று எண்ணாமலும்
சகல நன்மைக்கும் ஊற்றாகிய சர்வேசுரனுக்கே இதுவெல்லாம் சொந்
தமென்றெண்ணிச் சகல மகிமையையும் அவருக்கே செலுத்தித் தா
னென்றும் செய்யாததுபோலேயும் தன்னிடத்தில் ஒரு புண்ணியமும்
இல்லாததுபோலேயும் ஆழ்ந்த தாழ்ச்சியில் அமிழ்ந்தியிருப்பதே தா
ழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தென்று சொல்லிக் காட்டினோமே. ஆகிலும்
நாம் செய்கிற நற்கிரிகைகளில் நாம் ஒன்றும் செய்கிறதில்லையென்றும்
அதில் நமக்கு ஓர் பங்குமில்லையென்றும் நாம் சொல்லுகிறதில்லை; இ
து பெலத்த தப்பறையாகும். சர்வேசுரனோடு கூட நமது மனதும்
சேர்ந்து நற்கிரிகைகளைச் செய்து முடிக்கிறதென்பது நிச்சயம்; ஏனெ
ன்றால் நற்கிரிகைகளைச் செய்ய வேணுமென்று நாம் மனம்பொருந்தி
அதைச் செய்வதற்குச் சம்மதிக்கிறோமே; நாம் விரும்புகிறதும் செய்
கிறதுமெல்லாம் வேணுமென்று மனம்பொருந்தி விரும்புகிறோம், செ
ய்கிறோமென்பதற்குச் சந்தேகமில்லை; அதைச் செய்யாதிருக்க நமக்கு
மனதுண்டானால், செய்யாதிருக்கலாம். தாழ்ச்சியின் மூன்றும் அந்த
ஸ்தில் வந்து சேருவதற்கு வருத்தமான காரியம் இதுவே: ஏனென்றால்
புண்ணியத்தைச் சம்பாதிப்பதற்கும் சோதனையைச் செயிப்பதற்கும்
யாதொரு பத்திக்கடுத்த முயற்சியைச் செய்து முடிப்பதற்கும் நம்மு
டைய பெலன் மாத்திரம் போதுமென்றாற்போலே நம்மாலான சுறுசு
றுப்போடும் கவலை விசாரத்தோடும் பிரயாசப்பட வேண்டியது; நம்
மாலானதெல்லாம் செய்தபின், நாம் ஒன்றும் செய்யாததுபோலே நம்
மை நம்பாமல் நாம் ஒன்றுக்கும் உதவாத ஊழியனென்றெண்ணிக்கொ
ண்டு சர்வேசுரன்பேரிலே மாத்திரம் நமது நம்பிக்கையெல்லாம் வைக்
க வேண்டும். இதினாலல்லோ உங்களுக்குக் கற்பித்ததெல்லாம் செய்த
பின், நாங்கள் ஒன்றுக்கும் உதவாத ஊழியர்; நாங்கள் செய்ய வேண்
டியதைத்தான் செய்தோமென்று சொல்ல இரட்சகர் கற்பித்தார். இ
திலே உங்களுக்குக் கற்பித்ததில் ஒரு பங்கைச் செய்தபின்னென்று
இரட்சகர் சொல்லாமல் உங்களுக்குக் கற்பித்ததெல்லாத்தையும் செ
ய்தபின், நாங்கள் ஒன்றுக்கும் உதவாத ஊழியனென்றெண்ணிக்கொள்
ளக் கற்பித்திருக்கிறாரே. இப்படி மெய்யாகவே நிச்சயித்துக்கொள்ளு
கிறதற்கு மகா ஆழ்ந்த தாழ்ச்சி அவசரமாகும். நான் ஒன்றுக்கும் உத
வாத ஊழியனென்றும் நான் செய்கிறதெல்லாங்கூடி ஒரு புண்ணிய
த்தையும் சம்பாதிப்பதற்கு உதவாதென்றும் புண்ணியம் தேவ உதார
த்துவத்தினாலே வருகிற ஞான வரமென்றும் மெய்யாகவே அறிந்து





கொள்ளுகிறவன் புண்ணியத்தை அடைந்தபின் ஆங்காரிக்க மாட்டானென்று காசியான் வசனித்தார்; ஏனென்றால் இது தன் பிரயாசத்தினாலே அடைந்த காரியமல்ல; தேவ இரக்கத்தினாலே தனக்கு வந்த வரமென்று உறுதியாய் நிச்சயித்துக்கொள்ளுவான். இதினாலல்லோ நீ பெற்றுக்கொள்ளாத காரியம் உன்னிடத்தில் என்ன உண்டென்று அர்ச். சின்னப்பர் வசனித்தார்.

அர்ச். அகுஸ்தீன் இச்சத்தியத்தை வெகு நேர்த்தியான உவமையைக் கொண்டு தெளிவித்துக் காட்டியிருக்கிறார். அதாவது, தேவ வரப்பிரசாதமில்லாதேபோனால், நாம் ஆத்துமமில்லாத சரீரம்போலே இருப்போம். ஆத்துமமில்லாத பிரேதம் சற்றாகிலும் அசையக்கூடாததுபோலே, தேவ வரப்பிரசாதமில்லாமல் பேறுபலனுக்குரிய ஓர் கிரிகையும் நம்மாலே செய்ய ஏலாது. உயிரும் அசைவும் உடலுக்குரியதல்ல, ஆத்துமத்துக்குரியது. இவ்வண்ணமே மனுஷன் செய்கிற நற்கிரிகைகளில் ஒன்றும் ஆத்துமத்துக்குரியதல்ல, சர்வேசுரனுக்கு மாத்திரம் உரியது; அவர் மாத்திரம் தமது வரப்பிரசாதத்தால் ஆத்துமத்துக்கு ஞான உயிர்கொடுத்து நற்கிரிகைகளைச் செய்வதற்கான வழிபாடுகளை அதுக்குத் தந்தருளுகிறார். அன்றியும் அர்ச். அகுஸ்தீன் சொல்லுமாப்போலே, கண் எவ்வளவு கூர்மையாயிருந்தாலும், பிரகாசமில்லாவிட்டால், அது ஒன்றையும் காணமுடியாது. அவ்வண்ணமே ஒருவன் எவ்வளவு புண்ணியவானாயிருந்தாலும், தேவ பிரகாசமும் வரப்பிரசாதத்தின் உதவியும் இல்லாவிட்டால், அவன் ஒரு நன்மையும் செய்யக் கூடுமானவனல்ல. இதினாலல்லோ கர்த்தர் பட்டணத்தைக் காக்காவிட்டால், அதைக் காக்கிறவன் வீணாய்க் காத்துக்கொண்டிருக்கிறானென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இச்சத்தியத்தின்பேரில் அர்ச். அகுஸ்தீன் பேரொலியிட்டுச் சொல்லுகிறதாவது: ஓகோ! மனுஷர் தங்களை நன்றாய் அறிந்துகொண்டு மகிமை பாராட்டுகிறவர் ஆண்டவர்பேரில் மகிமை பாராட்டினால், எவ்வளவோ பாக்கியம்! சர்வேசுரன் தமது பிரகாசக் கதிரை மனிதருடைய புத்தியின் அந்தகாரத்தில் உதிக்கவிட்டு சிஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களெல்லாம் அவராலே மாத்திரம் நிலைத்திருக்கிறதென்றும் அவர் தமது இரக்கத்தினாலே அதுகளுக்குக் கொடுத்திருக்கிற நன்மையல்லாமல் வேறே நன்மை அதுகளிடத்தில் ஒன்றும் கிடையாதென்றும் அவர்களுக்குத் தெளிவாய்க் காட்டியருளுவாரானால், எவ்வளவோ பாக்கியம்! இதுவே

தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தாகும். இதின்னதென்று தெளிவிப்பதற்காக நாம் என்னென்ன சொன்னாலும், இதிலடங்கியிருக்கிற மேலான சாங்கோபாங்கத்தைத் துலக்கிக் காட்டுவதற்கான வார்த்தைகளில்லை; ஏனென்ருல் இதை அநுசரிக்கிறது எவ்வளவு வருத்தமாயிருக்கிறதோ அவ்வளவு இதை விளக்கிக் காட்டுகிறதும் வருத்தமாயிருக்கும்.

இன்னமும் ஞானசீவிய கிரந்தகர்த்தாக்கள் சொல்லியிருக்குமாப்போலே, தன் நாசமே தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தாகும். அர்ச். ஆசீர்வாதேந்திரரும் வேறே சில அர்ச்சியசிஷ்டவர்களும் சொல்லுமாப்போலே, தான் ஒன்றுக்கும் உதவாதவனென்றும் எதுக்கும் அயோக்கியனென்றும் நிச்சயமாய் அறிந்துகொள்ளுகிறதே தாழ்ச்சியின் மேலான அந்தஸ்தாமே. வேதாகமத்தில் சொல்லியிருக்குமாப்போலே, ஒருகாலும் தன்னை எள்ளளவும் நம்பாமல் சர்வேசுரன்பேரில் மாத்திரம் இடைவிடாமல் முழு நம்பிக்கை வைக்கிறது தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தென்று சொல்லப்படும். கடைசியாய்த் தன் மனதுக்குள்ளே மெய்யாகவே தன்னை நிந்தித்துத் தன்னாலே தான் பாவமும் நிர்ப்பாக்கியமுமல்லாமல் வேறொன்றுமில்லையென்றும் தன்னிடத்திலுள்ள நன்மையும் தான் செய்கிற புண்ணியமுமெல்லாம் தான் செய்கிறதல்லவென்றும் தனக்குச் சொந்தமல்லவென்றும் அதுவெல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து தனக்கு வருகிறதென்றும் அதினால் வருகிற தோத்திரமெல்லாம் அவருக்கே சொந்தமென்றும் கண்ணாலே பார்க்கிறதுபோலேயும் கையாலே தொடுகிறதுபோலேயும் நிச்சயித்துக்கொள்ளுகிறது தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்தாகும்.

இதுவரையில் நாம் சொன்னதெல்லாத்தையுங்கொண்டு தாழ்ச்சியின் மூன்ரும் அந்தஸ்து இன்னதென்று நீ இன்னம் கண்டுபிடியாதேபோனால், இதினிமித்தம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை; ஏனென்ருல் இது கண்டுபிடிப்பதற்கு மிகவும் மேலான காரியமாயிருக்கிறதினாலே, இது இன்னதென்று எளிதாய்க் கண்டுபிடியாதேபோனால், ஆச்சரியமல்ல. கல்வி சாஸ்திரங்களிலும் நடக்கிறதிதுவே: ஒவ்வொரு சாஸ்திரத்திலும் கல்வியிலும் எளிதாயிருக்கிறதை யாவரும் அறிந்துகொள்ளுவார்கள்; ஆனால் அதில் மறைந்திருக்கிற அபூருவமான பொருளை அதில் தேர்ந்தவர்கள் மாத்திரம் அறிந்துகொள்ளுவார்கள். இவ்வண்ணமே புண்ணியத்திலும் வழக்கமான காரியங்களை யாவரும் எளிதாய்





அறிந்துகொள்ளலாம்; ஆனால் புண்ணியத்தில் தேர்ந்தவர்கள் மாத்திரம் அதின் மேன்மையை முழுதும் நன்றாயறிந்துகொள்ளுவார்கள். இதினாலல்லோ தாழ்ச்சியென்னும் வரத்தைச் சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொண்டவனொழிய வேறொருவனும் தாழ்ச்சி இன்னதென்று அறிந்துகொள்ளமாட்டானென்று அர்ச். லவுரேஞ்சு யூஸ்தினியார் வசனித்தார். அர்ச்சியசிஷ்டவர்களிடத்தில் ஆழ்ந்த தாழ்ச்சியிருந்ததினாலே, நாங்கள் உலோகத்திலுள்ள சகல பாவிகளிலும் பெரிய பாவிகளென்று இதற்கொத்த நிந்தை அவமானங்களைத் தங்கள்பேரில் சொல்லிக்கொள்ளுவார்கள். இவ்வளவு மேலான தாழ்ச்சி நம்மிடத்தில் இல்லாததினாலே, இதை நாம் கண்டுபிடியாமல் போகிறதுமன்றி அவர்கள் உள்ளதுக்குமேலே ஏற்றிச் சொல்லுகிறார்களென்று எண்ணிக்கொள்ளுகிறோம். ஏனென்றால் அவர்களிடத்திலுள்ள ஆழ்ந்த தாழ்ச்சி நம்மிடத்தில் இல்லாததினாலே, அதின் மேன்மையையும் அதில் மறைந்திருக்கிற சத்தியத்தையும் நாம் அறிந்துகொள்ளுகிறதில்லை; இதினாலே அவர்கள் தங்கள்பேரில் கொண்டிருக்கிற தாழ்மையான எண்ணமும் தங்கள்பேரில் சொல்லிக்கொள்ளுகிற நிந்தையும் எப்படி மெய்யாயிருக்குமென்று அறிந்துகொள்ள நம்மாலே கூடவில்லை. ஆகையால் தாழ்ச்சியுள்ளவனாகப் பிரயாசப்படு; தாழ்ச்சியாகிற சாஸ்திரத்திலே எப்போதும் மேன்மேலும் வர்த்திக்கத் தெண்டித்து வருந்து. அப்போது இது காரியத்தை எப்படி மெய்யாகவே தன்பேரில் சொல்லிக்கொள்ளலாமென்று உனக்குத் தெரியவரும்.

———(o)———

## ௩௩-ம் அதிகாரம்.

தாழ்ச்சியின் மூன்றாம் அந்தஸ்தை இன்னம் விளக்கிக் காட்டி
மெய்யான தாழ்ச்சியுள்ளவர்கள் தாங்கள் சகலரிலும்
தாழ்ந்தவர்களென்று எண்ணிக்கொள்ளுகிறது
எப்படியென்று சொல்லிக் காட்டுவது.

தாழ்ச்சியின் மூன்றாம் அந்தஸ்தின் மேன்மையை இன்னம் நன்றாய் அறிந்துகொண்டு அதில் ஸ்திரப்படும்பொருட்டு இது காரியத்





தைத் துவக்கமுதற்கொண்டு யோசித்துப் பார்க்கவேண்டும். நாம் ஒன்றுமில்லாமலிருந்தோமென்றும் சர்வேசுரன் நம்மை உண்டாக்கி நமது சுபாவ இந்திரியங்களை நமக்குக் கொடுத்தருளினாரென்றும் ஐம்பொறிகளுக்கும் புத்தி மனதுக்குமுரிய கிரிகைகளைச் செய்ய நம்மாலே கூடாதென்றும் அதுகளைச் செய்வதற்கு வேண்டிய வல்லமை சர்வேசுரனிடத்திலிருந்து மாத்திரம் வருகிறதென்றும் நமது உயிரும் சுபாவ இந்திரியங்களுமெல்லாம் அவருக்கே சொந்தமென்றும் ஏற்கனவே சொல்லியிருக்கிறோமே. நம்மிடத்திலுள்ள ஞான நன்மைகள் முதலிய வரப்பிரசாதத்தின்மட்டிலும் இப்படிச் சொல்லவேண்டும். வரப்பிரசாதம் சுபாவத்துக்கு மேலாக அளவிறந்த மேன்மையுள்ளதாகக்கொள்ள நம்மிடத்திலுள்ள சுபாவ நன்மைகளைவிட ஞான நன்மைகள் சர்வேசுரனுக்கு அதிக சொந்தமென்பது குன்றாத சத்தியமாகும். நம்மிடத்திலுள்ள ஞான நன்மைகள் நம்மாலேயானதல்ல, சர்வேசுரனாலேயானது ; சர்வேசுரன் நமக்கு அதை இலவசமாய்க் கொடுத்தருளினதினாலே, அதுக்கு வரப்பிரசாத நன்மைகளென்று பேராகும். இதினாலல்லோ நாம் சுபாவமாய்க் கோபத்துக்கு ஆளாயிருந்தோம்; பாவத்தில் சென்மித்துச் சர்வேசுரனுக்குச் சத்துருக்களாய்ப் பிறந்தோம்; அந்தகாரத்திலிருந்து அவர் நம்மை ஆச்சரியத்துக்குரிய பிரகாசத்தில் அழைத்துக்கொண்டாரென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. இதினாலே அவருக்குச் சத்துருக்களாயிருந்த நம்மைத் தமக்குச் சிநேகிதராக்கிக்கொண்டார் ; அடிமைகளாகிய நம்மைத் தமக்குப் பிள்ளைகளாக்கிக் கொண்டார்; கோபத்துக்கும் பகைக்கும் ஆளாகிய நம்மைத் தமக்குப் பட்சமானவர்களாக்கிக்கொண்டார். ஆகிலும் நாம் அவருக்கு முன்னமே செய்திருந்த ஊழியத்தைப் பற்றியும் இனிமேல் செய்யப்போகிற பணிவிடையினிமித்தமும் இந்த நன்மைகளை நமக்குச் செய்யாமல் தமது சுய தயவினாலேயும் நமது இரட்சகராகிய இயேசுநாதருடைய பேறுபலன்களைப் பற்றியும் மாத்திரம் இதுவெல்லாம் இலவசமாய்ச் செய்தருளினார். இதினாலல்லோ தேவ கிருபையினாலேயும் இயேசுநாதரால் உண்டான இரக்ஷணியத்தைப் பற்றியும் நாம் இலவசமாய் நீதிமான்களானோமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். நம்மாலே நாம் ஒன்றுமில்லாமையிலிருந்து உண்டாகவுமில்லை ; நம்மிடத்திலுள்ள சுபாவ இந்திரியங்கள் நம்மாலே நமக்கு வரவுமில்லை ; அதுகள் தேவ உதாரத்துவத்தினாலே நமக்கு வந்த சுத்த வரங்களாகும்; அதினால் உண்டாகும் தோத்திரமெல்லாம் அவருக்கே சொந்தம். இவ்வ

ண்ணமே நாம் பூர்வத்தில் சென்மித்துப் பாவ அந்தகாரத்தில் விழுந்திருந்தோம். சர்வேசுரன் தமது அளவில்லாத நன்மைத்தனத்தினாலே நம்மைப் பாவத்திலிருந்து தூக்காவிட்டால், அதிலேயே கிடந்து கெட்டுப்போவோம். அவர் தமது வரப்பிரசாதத்தை நமக்குக் கொடாவிட்டால், நித்திய சீவியத்துக்குரிய பேறுபலன் ஒன்றும் நாம் அடையக்கூடாது. பணத்திலிருக்கிற இராசா தலையினாலே அதுக்கு விலையுண்டாகிறதுபோலே, தேவ வரப்பிரசாதம் ஒன்றே நமது கிரிகைகளுக்குப் பேறுபலனைக் கொடுக்கும். ஆகையால் நம்மிடத்திலுள்ள சுபாவ நன்மைகளுக்கும் ஞான நன்மைகளுக்கும் சுயகாருண்ணியரான சர்வேசுரனுக்கே சகல தோத்திரத்தையும் நாம் செலுத்தி என் தத்துவமெல்லாம் தேவ கிருபையினால் உண்டானதென்று அர்ச். சின்னப்பர் சொன்னதுபோலே, நாமும் வாயிலும் மனசிலும் எப்போதும் சொல்லிக்கொண்டு வரவேண்டும்.

அன்றியும் நாம் சொன்னதுபோலே, நம்மிடத்திலுள்ள சுபாவ நன்மையெல்லாம் சர்வேசுரன் நமக்குக் கொடுத்தருளினதுமல்லாமல் க்ஷணத்துக்கு க்ஷணம் அதைக் காப்பாற்றித் தமது சர்வ வல்லபமுள்ள கைகளால் நம்மைத் தாங்கி நாமிருந்த ஒன்றுமில்லாமையாகிற பாதாளத்திலே நாம் திரும்பியும் விழாதபடிக்கு நம்மைத் தற்காத்துக் கொண்டு வருகிறார். இவ்வண்ணமே பாவமாகிற அந்தகாரத்திலிருந்து தமது வரப்பிரசாதமாகிற ஆச்சரியமான பிரகாசத்தில் நம்மை அவர் அழைத்துக்கொண்டதுமல்லாமல் பாவமாகிற பாதாளத்திலே நாம் திரும்பவும் விழாதபடிக்குத் தமது கைகளால் இடைவிடாமல் நம்மைக் காப்பாற்றிக்கொண்டு வருகிறார். ஆகையால் நம்மைத் தாங்கிக்கொண்டிருக்கிற கையை ஒரு க்ஷணமாத்திரம் வாங்கிக்கொண்டு பசாசு தன் மனதுபோலே நமக்குச் சோதனைசெய்ய விட்டுவிடுவாராகில், அந்த க்ஷணமே நாம் முன்விழுந்திருந்த பாவத்திலும் வேறநேக தோஷ துரோகங்களிலும் விழுந்து கெட்டுப்போவோமென்பது நிச்சயம். இதினாலல்லோ கர்த்தர் என் வலதுபக்கத்திலிருக்கிறார், என்னை அசைக்கவே முடியாதென்று தாவீதென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். கர்த்தாவே, உமது வரப்பிரசாதமே எங்கள் குற்றத்தை நீக்கி எங்களை விடுவிக்கின்றது; உமது வரப்பிரசாதமே எங்களைப் பாவத்தில் விழாதபடிக்குக் காப்பாற்றுகின்றது; உமது கையை நீட்டி என்னைத் தூக்கினதினாலே நான் எழுந்திருந்தேன்; நீர் என்னைத் தாங்கிக்கொண்






டிருக்கிறதினாலே, இப்போது நட்டமே நிற்கிறேனென்பது நிச்சயம். ஆகையால் நம்மாலே நாம் ஒன்றுமில்லாமையாயிருந்ததினாலேயும், இப்போது சர்வேசுரன் க்ஷணத்துக்கு க்ஷணம் நம்மைக் காப்பாற்றாவிட்டால், ஒன்றுமில்லாமையாய்ப் போவோமென்கிறதினாலேயும், நாம் நம்மாலே ஒன்றுமில்லாமையென்று சத்தியமாய் அங்கீகரித்துக் கொள்ளுகிறோமல்லோ? அவ்வண்ணமே நாம் பாவத்தில் உற்பவித்துப் பாவிகளாயிருந்ததினாலேயும், சர்வேசுரன் தமது கையினாலே இடைவிடாமல் நம்மைத் தாங்கிக்கொண்டிராவிட்டால், நாம் பாவிகளாய்ப் போவோமென்கிறதினாலேயும், நாம் நம்மாலே பாவிகளென்று எப்போதும் எண்ணிக்கொள்ள வேணுமென்பது சத்தியமாமே.

பெரிய ஆல்பேர்த்தென்பவர் சொல்லுமாப்போலே, தாழ்ச்சியை அடைய விரும்புகிறவன் அதின் வேரைத் தன் இருதயத்தில் நட்டுக்கொள்ளவேண்டும்; அதாவது, அவன் தன் பலவீனத்தையும் நிர்ப்பாக்கியத்தையும் அறிந்துகொண்டு தன்னாலே தான் முழுதும் பலவீனனும் நிர்ப்பாக்கியனுமென்று நிச்சயித்துக்கொள்ளுகிறதுமல்லாமல் இக்ஷணத்திலே சர்வேசுரன் தமது அளவில்லாத நன்மைத்தனத்தினாலே தனக்கு நேரிடுகிற பாவ சமயங்களைத் தன்னைவிட்டு நீக்கிச் சோதனை நேரத்தில் தனக்குதவி செய்யாவிட்டால், எவ்வளவு நிர்ப்பாக்கியனாய்ப் போவேனென்று தியானித்து அறிந்துகொள்ளவேண்டும். ஓ! சர்வேசுரா, உமது இரக்கத்தினாலே பாவத்தை என்னை விட்டு நீக்காவிட்டால் எத்தனையோ பாவத்தில் விழுந்திருப்பேன்! தாவீதென்னும் தீர்க்கதரிசியே பாவ சமயத்திலே பாவத்தில் விழுந்தாரே; அப்படியிருக்க, என்னை விட்டுப் பாவ சமயத்தைத் தேவரீர் நீக்காவிட்டால், எத்தனையோ விசை பாவத்தில் விழுந்திருப்பேன்! பசாசு தன் மனதுபோலே என் பலத்துக்கு மேலாக எனக்குச் சோதனை செய்யாதபடிக்கு எத்தனையோவிசை அதின் கையைத் தேவரீர் இறுகக்கட்டினீர்! கர்த்தர் எனக்கு உதவி செய்யாவிட்டால், என் ஆத்துமம் இந்நேரம் நரகத்தில் குடியிருக்குமென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கிறதுபோலே, நானும் எத்தனையோவிசை சொல்லவேண்டும்! எனக்குச் சோதனை வந்து நான் பாவத்தில் விழுருந்தருணமாயிருக்கும்போது, எத்தனையோவிசை உமது சர்வ வல்லபமுள்ள கரங்கள் என்னைத் தாங்கிக் காப்பாற்றினது! என் கால் நடுங்குகிறதென்று நான் அபயசத்தமிடும்போதெல்லாம், கர்த்தாவே, உமது கிருபை என்னைக் காப்பாற்றினது.

சர்வேசுரன் தமது அளவிறந்த நன்மைத்தனத்தினாலும் இரக்கத்தினாலும் நம்மைக் காப்பாற்றாவிட்டால், ஐயோ! எத்தனையோவிசை கெட்டுப்போயிருப்போம்! நம்மாலே நாம் பலவீனமும் நிர்ப்பாக்கியமுமாயிருக்கிறதினாலேயும், சர்வேசுரன் நம்மைத் தாங்கிக்கொண்டிருக்கிற கையை ஒரே க்ஷணம் வாங்கிக்கொண்டு நம்மைக் கைவிட்டால்; சகலவித தோஷ துரோகங்களிலும் விழுந்து கெட்டுப்போவோமென்கிறதினாலேயும், நமது நீசத்தனத்தின்பேரிலும் நிர்ப்பாக்கியத்தின்பேரிலும் நாம் கொண்டிருக்கவேண்டிய எண்ணம் இதுவே.

இதினாலே அர்ச்சியசிஷ்டவர்கள் தங்கள்பேரில் மகா தாழ்மையான எண்ணங் கொண்டு தங்களை நிந்தித்துத் தங்களைக் கெட்டவர்களென்றும் பாவிகளென்றும் எண்ணியிருந்ததுமல்லாமல், சகலத்தையும் விடத் தங்களை நிந்தித்து உலோகத்திலுள்ள சகலரிலும் தாங்கள் பெரும் பாவிகளென்று மெய்யாகவே நினைத்திருந்தார்கள். அர்ச். பிராஞ்சீஸ்கு சபையிலுள்ள ஓர் சந்நியாசியாருக்குச் சர்வேசுரன் காட்சியில் அறிவித்ததுபோலே, சர்வேசுரன் இந்த அர்ச்சியசிஷ்டவரை மகா மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தில் உயர்த்தி மோக்ஷத்திலே பத்திசுவாலகருக்குள்ளே இவருக்கு ஒரு சிம்மாசனத்தை ஏற்படுத்தியிருந்தார். அதின்பின் மேற்சொன்ன சந்நியாசியார் இந்த அர்ச்சியசிஷ்டவரை நோக்கி உமதுபேரில் நீர் என்ன நினைக்கிறீரென்று கேட்டார். அதுக்கு இந்த அர்ச்சியசிஷ்டவர் உலகத்தில் என்னைவிடப் பெரும்பாவி கிடையாதென்று நினைக்கிறேனென்றார். அர்ச். சின்னப்பரும் தமதுபேரில் கொண்டிருந்த எண்ணம் இதுவே. இதினாலல்லோ யேசுநாதர் பாவிகளை இரட்சிக்க இவ்வுலகத்தில் வந்தார்; அவர்களுக்குள் நான் முதற்பாவியென்றார். இதினாலே இவரைப்போலே நாமும் தாழ்மையான எண்ணங் கொண்டிருந்து எல்லாரையும்விட நம்மைத் தாழ்மையாய் எண்ணிச் சகலரையும் நமக்கு மேலாக சங்கித்து வரவேணுமென்று நமக்குப் போதித்தருளினார். மேற்சொன்ன அர்ச். சின்னப்பர் தாமே பிலிப்பியருக்கு எழுதின நிருபத்தில் ஒவ்வொருவரும் தன்னைத் தாழ்த்தி மற்றவர்களைத் தனக்கு மேலாய் எண்ண வேணுமென்றும் ரோமானருக்கு எழுதின நிருபத்தில் ஒவ்வொருவரும் மற்றவர்களை அந்நியோந்நியமாய்க் கனம்பண்ண வேணுமென்றும் கற்பித்திருக்கிறார். இதுகாரியத்திலே அர்ச். சின்னப்பர் நம்மை நாமே ஏய்த்து ஒருவர் ஒருவரை வீணாவிலே பசப்பச் சொல்லவில்லையென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்

தார். அர்ச்சியசிஷ்டவர்கள் பூமியிலுள்ள சகலரிலும் தாங்கள் பெரும் பாவிகளென்று சொல்லும்போது, கள்ளத்தாழ்ச்சியினாலே இப்படிச் சொல்லாமல் மெய்யாகவே இப்படி நினைத்திருந்தார்கள். நாம் இவ்விதத் தாழ்ச்சி முயற்சியை அநுசரிக்கும்போது, இதை வாயினாலேயும் ஒப்புக்காகவும் சொல்லாமல் முழுமனதோடு மெய்யாகவே இப்படி நிச்சயித்துக்கொள்ள வேண்டியது.

கலியாணத்துக்கு உன்னை அழைத்தால், கடைசி இடத்திலே போய் உட்காரென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். அர்ச். பெர்நர்துஸ் இவ்வாக்கியத்தை வியாக்கியானித்து நடுவிடத்திலே போய் உட்கார்; கடைசியிடங்களில் ஒன்றிலே போய் உட்காரென்று இயேசுநாதர் சொல்லாமல் எல்லாத்துக்கும் கடைசியிடத்திலே போய் உட்காரென்று சொல்லியிருக்கிறாரே. ஆனதினாலே தன்னை ஒருவருக்கும் மேலாகவும் சரியாகவும் எண்ணாமலிருக்கிறதுமன்றிச் சகலருக்கும் தாழ்ந்தவனாகவும் எல்லாரிலும் பெரும்பாவியாகவும் எண்ணிக்கொள்ள வேணுமென்று கற்பித்திருக்கிறாரென்றார். சகலருக்கும் கீழாக இப்படி உன்னைத் தாழ்த்துகிறதினாலே, ஒரு மோசமும் வராது; யாதாமொருவனைப் பார்க்க உன்னை மேலாக எண்ணினால், வெகு மோசம் வரும். தாழ்ந்த கதவிலே நுழையும்போது, வெகுவாய்க் குனிந்தால் ஆபத்து ஒன்றுமில்லை; போதுமானமட்டும் குனியாதேபோனால், தலை உடையும். இவ்வண்ணமே நம்மை மிகவும் தாழ்த்துகிறதினாலே, மோசம் ஒன்றுமில்லை; ஆனால் நம்மைச் சரியாய்த் தாழ்த்தாமல் நாம் யாருக்காகிலும் மேற்பட்டவர்களென்று எண்ணினால், வெகு பொல்லாப்புண்டாகலாம். இன்னான் உன்னைவிடக் கெட்டவனென்றும் சகல மனுஷரைவிடப் பொல்லாதவனென்றும் நினைக்கிறாயே; அவன் உன்னையும் சகல மனுஷரையும்விட நல்லவனாவானாக்கும்; ஏற்கனவே நல்லவன் ஆனானாக்கும். யக்கோபென்பவர் மனாசெஸ் எபிராயிமென்பவர்கள்பேரிலே கை உயர்த்திவைத்து அவர்களை ஆசீர்வதித்ததுபோலே, சர்வேசுரனும் மேற்சொன்ன பாவியை ஆசீர்வதிப்பாராக்கும். நேற்றைக்குப் பிறந்த இப்போது ஓர் க்ஷணத்துக்குமுன்னே சர்வேசுரன் அவன் இருதயத்திலே எத்தனை ஆச்சரியங்களைச் செய்தாரோ கண்டதார்? இதினாலல்லோ ஒரு க்ஷணத்திலே ஏழையை ஆஸ்திபக்தனாக்கிறது தேவ சந்நிதானத்தில் எளிதான காரியமென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. சர்வேசுரன் இரக்கமான பார்வை ஒன்று பார்த்தாலே போதும், பாவியாகி





ய ஒரு புப்ளிக்கானையும் திருச்சபைக்கு விரோதியையும் அப்போஸ்தலராகவும் தமது திருநாமத்தைப் பிரசங்கிப்பவராகவுமாக்க அவராலேயாகும். இந்தக் கற்களை அபிராமுடைய புத்திரராக்கச் சர்வேசுரனாலே யாகுமென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். கல்நெஞ்சப் பாவிகளைத் திடமென்று சர்வேசுரனுடைய பிள்ளைகளாக்க அவராலே கூடும். மதலேனம்மாளைப் பாவியென்றெண்ணின பரிசேயன் நினைத்தது தப்பிதமல்லலோ? அவன் நினைத்த இந்த நினைவு தப்பிதமென்று கடிந்துகொள்ளுகிறதற்காக இரட்சகர் திருவுளம்பற்றின உவமைதானே அவள் அந்தப் பரிசேயனைப் பார்க்கப் புண்ணியவதியாயிருந்தாளென்று காட்ட உதவுமே. ஆகையால் தான் எல்லாரிலும் தாழ்ந்தவனென்று மெய்யாகவே நினைத்துக்கொள்ளுகிறதும் சொல்லுகிறதும் தாழ்ச்சியின் பன்னிரண்டு அந்தஸ்துகளில் ஒன்றென்று அர்ச். ஆசிர்வாதப்பரும் அர்ச். தோமாசும் வேறே அநேக அர்ச்சியசிஷ்டவர்களும் நிரூபித்தார்கள். வாயினாலே இப்படிச் சொல்லுகிறது பற்றாது; மனசிலிருந்து இந்த எண்ணம் புறப்பட வேண்டும். உன் சகோதரரெல்லாரிலும் நீ தாழ்ந்தவனென்று மெய்யாகவே எண்ணிக்கொள்ளாவிட்டால், நீ புண்ணியத்திலே வர்த்தித்ததாக நினையாதேயென்று கிறிஸ்துநாதர் அநுசாரத்தில் சொல்லியிருக்கின்றது.

## ௧௪-ம் அதிகாரம்.

நீதிமான்களாகிய தர்மாத்துமாக்களும் அர்ச்சியசிஷ்டவர்களும் தாங்கள் சகலரையும் விடத் தாழ்ந்தவர்களென்றும் சகல பாவிகளிலும் பெரும்பாவிகளென்றும் மெய்யாகவே எண்ணிக்கொள்ளுகிறது எப்படியென்று சொல்லுவது

———(o)———

சகலரையும்விட நாம் தாழ்ந்தவர்களென்றும் சகல பாவிகளிலும் நாம் பெரும்பாவிகளென்றும் எண்ணிக்கொள்ளப் பிரயாசப்படவே






ணுமென்று சொல்லிக் காட்டினது சரியே. இப்போது மகா மேலான அர்ச்சியசிஷ்டவர்கள் முதலாய்த் தாங்கள் சகலரிலும் பெரும்பாவிகளென்று எண்ணிக்கொள்ளுகிறது எப்படியென்று சொல்லிக்காட்டுகிறது வீணாயிராமல் மிகவும் பிரயோசனமாயிருக்கும். சில பெரிய அர்ச்சியசிஷ்டவர்கள் தங்கள்பேரில் இந்தத் தாழ்மையான எண்ணத்தை எப்போதும் மனதில் கொண்டிருந்தார்கள். உங்கள்பேரில் ஏன் இவ்வளவு தாழ்மையான எண்ணங் கொண்டிருக்கிறீர்களென்று கேட்டதற்கு சிலர் ஒரு மறுமொழியுஞ் சொல்லவில்லை. இவ்வண்ணமே மடாதிபதியான அர்ச். சோசிமென்பவர் நான் எல்லாரிலும் பெரும்பாவியென்று எண்ணியிருக்கிறேனென்று ஓர் சாஸ்திரியிடத்தில் சொன்னார். அதற்கு அந்தச் சாஸ்திரி நீர் தேவ கற்பனையெல்லாம் அநுசரித்துக்கொண்டு வருகிறீரென்று உமக்கு நன்றாய்த் தெரியுமே: இதிப்படியிருக்க, உமது பேரில் இவ்வளவு தாழ்மையான எண்ணங் கொண்டிருக்கிறது எப்படியென்று கேட்டான். அதற்கு அந்த அர்ச்சியசிஷ்டவர் சொன்ன மாறுத்தரமாவது: நாம் சொல்லுகிறது மெய்யென்று நமக்குத் தெரியும்; நாம் சொல்லுகிறதை நாமே நிச்சயித்து அறிந்திருக்கிறோம்; இதிலே வேறொன்றும் நம்மிடத்தில் கேளாதேயென்றார். ஆனால் அர்ச். அகுஸ்தினும் அர்ச். தோமாசும் வேறநேக அர்ச்சியசிஷ்டவர்களும் இந்தக் கேள்விக்குப் பற்பல மறுமொழி சொல்லியிருக்கிறார்கள். அர்ச். அகுஸ்தீனும் அர்ச். தோமாசும் சொல்லுகிற மறுமொழியாவது: ஒவ்வொருவனும் தன் குற்றங்குறைகளை அறிந்திருக்கிறான்; ஆனால் பிறருக்குச் சர்வேசுரன் கொடுத்தருளிய வரப்பிரசாதங்கள் இன்னதென்று அவனுக்குத் தெரியாது. ஆகையினாலே தான் சகல பாவிகளிலும் பெரும்பாவியென்று மெய்பாகவே சொல்லலாம்; ஏனென்றால் உன் குற்றம் உனக்குத் தெரியும்; மற்றவர்களுக்குச் சர்வேசுரன் இரகசியமாய் அளித்தருளிய வரங்கள் எவ்வளவென்று உனக்குத் தெரியாது. ஆகையால் உன்னிடத்திலே குற்றங்குறைகளும் மற்றவர்களிடத்திலே தேவ வரங்களும் உண்டென்று நிச்சயித்துக்கொண்டு நீ சகலரிலும்பெரும்பாவியென்று எண்ணிக்கொள்ளலாம். ஆனால் தினந்தோறும் மற்றவர்கள் வெகு பாவம் செய்கிறதை நான் கண்டிருக்கிறேனே; நான் இத்தனை பாவங்களைச் செய்யவில்லையென்பாயாக்கும். ஆனால் இப்போது ஒரு க்ஷணத்துக்குமுன்னே சர்வேசுரன் அவன் இருதயத்திலே எவ்வளவு அச்சரியங்களைச் செய்திருக்கிறாரோ கண்டதார்? இந்த க்ஷணத்திலே அவனுக்கு யாதொரு விசேஷ வரப்பிரசாதம் அளித்திருக்கிறாராக்கும்;

அதினாலே அவன் உன்னைவிடப் புண்ணியவானாய்ப் போனானக்கும்.
சுவிசேஷத்தில் சொல்லியிருக்கிற பரிசேயனும் புப்ளிக்கானும் செபம்
பண்ணக் கோவிலுக்குக் கூடப்போனார்கள். பரிசேயன் நான் புண்ணி
ய்வானென்று எண்ணியிருந்தான்; புப்ளிக்கான் நான் பாவியென்று நி
னைத்திருந்தான். ஆகிலும் புப்ளிக்கான் பரிசேயனைவிட நீதிமானாகி வீ
ட்டுக்குத் திரும்பிப் போனானென்று உலக இரட்சகர் திருவுளம்பற்றி
னார்; பரிசேயனோவென்றால் சாபத்துக்குள்ளாகிக் கோவிலைவிட்டுப் பு
றப்பட்டான். ஆகையால் நாம் ஒருவருக்கும் மேற்பட்டவர்களென்று
எண்ணாமலும் ஒருவருக்கும் சரியானவர்களென்று நினையாமலும் எல்
லாருக்கும் நம்மைக் கடைகெட்டவர்களாக எண்ணிக்கொள்ள வேணு
மென்று மேற்சொன்ன உவமையினாலே தெரியவருமே; இது மோசம
ற்ற வழி.

சகலரிலும் நான் தாழ்ந்தவனென்று எண்ணிக்கொள்ளுகிறது மெ
ய்யான தாழ்ச்சியுள்ளவனுக்கு எளிதாயிருக்கும்; ஏனென்றால் இவன்
மற்றவர்களிடத்திலுள்ள நன்மையை மாத்திரமே கவனிப்பான்; தன்
னிடத்திலுள்ள குற்றங் குறைகளை மாத்திரமே நோக்கிப் பார்ப்பான்;
தன்னிடத்திலுள்ள குற்றங்களை யோசித்து அதுகளைத் திருத்துவதற்
கான பரிகாரத்தைத் தேடி அதுக்காக அழுது பிரலாபிப்பதே வேலை
யாயிருப்பானல்லாமல் பிறருடைய குற்றங்களை ஒருகாலும் எடுத்
துப் பார்க்கமாட்டான். ஆகையால் மற்றவர்கள் எல்லார்பேரிலும் மே
லான எண்ணமும் தன்பேரிலே மாத்திரம் தாழ்வான எண்ணமும்
கொண்டிருப்பான. இவன் அர்ச்சியசிஷ்டத்தனத்தில் வளரவளரத் தன்
னைத் தாழ்த்துகிறதும் அதிக எளிதாயிருக்கும்; ஏனென்றால் மற்றப்
புண்ணியங்களில் இவன் வளருகிறதற்குத் தக்கது தாழ்ச்சியிலும் தன்
னை அறிந்துகொள்ளுகிறதிலும் வளர்ந்து தன்னை அதிக அதிகமாய் நிந்
தித்துக்கொள்ளுவான். அன்றியும் இவன் புண்ணியத்தில் வர்த்திக்க வ
ர்த்திக்கச் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தையும் மகத்துவத்தையு
ம் அதிக அதிகமாய் அறிந்துகொள்ளுகிறதினாலே, தன் நிர்ப்பாக்கியத்
தையும் அதிக அதிகமாய் அறிந்துகொள்ளுவான். இதினாலல்லோ ஒ
ரு பாதாளம் அவனை வேறொரு பாதாளத்தில் இழுத்துக்கொண்டுபோ
கிறதென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. சர்வேசுரனு
டைய மகத்துவமாகிற பாதாளம் மனுஷனுடைய ஒன்றுமில்லாமையா
கிற பாதாளத்தைக் காட்டித் தேவ வரப்பிரசாதமாகிற பிரகாசம் ப





ஜுஷனிடத்திலுள்ள அற்ப அணுப்போன்ற குற்றங்களையும் துலக்கிக்காட்டும். ஆகையால் நம்மை எள்ளளவும் கனமாய் எண்ணினால், நாம் சர்வேசுரனை அற்பமாகிலும் அறிந்துகொள்ளவில்லையென்றும் மோக்ஷபிரகாசம் நம்மிடத்தில் அற்பமாகிலும் உதிக்கவில்லையென்றும் அடையாளமாகும். நீதிசூரியனுடைய கதிர் நமதாத்துமத்தில் இறங்காததினாலே, நமது அற்பக் குற்றங்களாகிற அணுப்போன்ற தூசியையும் நாம் கண்டுபிடியாமற் போகிறதுமன்றி ஞானக் குருட்டாட்டத்தில் அமிழ்ந்தி நமது கனமான குற்றங்களை முதலாய் அறிந்துகொள்ளாமற்போகிறோம்.

அன்றியும் தாழ்ச்சி சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமாயிருக்கிறதினாலே, தமக்குகந்த தாசர் இருதயத்திலே அதைப் பிறப்பித்துக் காப்பாற்றுவதற்காகத் தாம் அவர்களுக்குச் செய்தருளுகிற வரப்பிரசாதங்களை அவர்கள் கண்ணுக்கு மறைத்து இரகசியமாய் அவர்களுக்குத் தமது வரங்களைப் பொழிந்தருளுவார். இதினாலே தேவ வரங்களைப் பெற்றுக்கொள்ளுகிறவர்களுக்கு முதலாய் அது தெரியாமற்போய்த் தாங்கள் ஒரு வரமும் அடையவில்லையென்று எண்ணுவார்கள். தேவ கற்பனைப் பெட்டகத்தின் அழகெல்லாம் மிருகங்களுடைய தோலுக்குள்ளேயும் வெள்ளாட்டு மயிரினால் நெய்த துணிகளுக்குள்ளேயும் மறைந்திருந்ததென்று அர்ச். எரோணிமுஸ் வசனித்தார். இவ்வண்ணமே சர்வேசுரன் தாம் தந்தருளுகிற வரங்கள் முதலிய ஞான நன்மைகளின் மேன்மையைச் சிலவிசை சோதனைகளுக்குள்ளே மறைத்துவைக்கிறது வழக்கம். நெருப்பு சாம்பலுக்குள்ளே கெடாமல் இருக்கிறதுபோலே, தமது ஊழியர்களுடைய தாழ்ச்சி குற்றங்குறைகளுக்குள்ளே கெடாமலிருக்கும்பொருட்டு அவர்கள் சில அற்பக் குற்றங்களில் விழும்படி விட்டுவிடுவார்.

அர்ச். கிளிமாக்கருளப்பர் சொல்லுமாப்போலே, நம்மைக்கெடுக்கத் தேடுகிற பசாசு நம்மிடத்தில் ஆங்காரத்தை மூட்டுவதற்காக நமது புண்ணியத்தையும் நற்கிரிகைகளையும் இடைவிடாமல் நமது கண்ணுக்கு முன்பாக வைத்துக்காட்டும். நமது ஈடேற்றத்தை அபேட்சிக்கிற சர்வேசுரன் நமது அற்பக் குற்றங்குறைகளையும் நாம் அறிந்துகொள்ளும்பொருட்டு விசேஷ ஞானப்பிரகாசத்தை நமக்குத் தந்து நமக்கு அளித்தருளுகிற வரப்பிரசாதத்தை நமது கண்ணுக்கு முழுதும் ம






றைக்கிறதினாலே, இந்த வரப்பிரசாதங்களை நாம் பெற்றுக்கொண்டாலும், அது நமக்கே தெரியாது. சகல அர்ச்சியசிஷ்டவர்களும் போதித்திருக்கிற சத்தியம் இதுவே. இது காரியத்தில் அர்ச். பெர்நர்துஸ் சொல்லியிருக்கிறதாவது : சர்வேசுரன் நம்மிடத்தில் தாழ்ச்சியைக் காப்பாற்றுவதற்காக நாம் புண்ணிய சாங்கோபாங்கத்தில் எவ்வளவு வர்த்திக்கிறோமோ அவ்வளவுக்கு அந்த வர்த்திப்பு நமக்குத் தோன்றாதபடிக்குக் கிருபைசெய்தருளுவார். ஏனென்றால் யாதொருவன் புண்ணியத்தின் மேலான அந்தஸ்திலே வந்து சேர்ந்திருந்தாலும், அவன் தான் புண்ணியத்திலே வெகுவாய் வர்த்தித்துப் போனேனென்று எண்ணாதபடிக்குப் புண்ணிய சாங்கோபாங்கத்திலே யாதொரு அற்பக் குற்றங்குறை அவனிடத்திலிருக்கும்படியாய்ச் சர்வேசுரன் விட்டுவிடுவாரென்றார். தாழ்ச்சியைச் சூரியனுக்கு ஒப்பிடுகிறது சரியான உவமையாகும்; சூரியன் பிரகாசிக்கும்போது, நட்சத்திரங்கள் காணாமல் மறைந்துபோகும். இவ்வண்ணமே தாழ்ச்சி மெய்யாகவே ஆத்துமத்திலிருக்கும்போது, மற்றப் புண்ணியங்களெல்லாம் மறைந்துபோகவே, மெய்யான தாழ்ச்சியுள்ளவர்கள் தங்களிடத்தில் ஒரு புண்ணியமும் இல்லையென்று எண்ணுவார்கள். சகலரும் அவர்களிடத்தில் விளங்குகிற புண்ணியங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டாலும், அவர்கள் மாத்திரம் அதுகளைக் காண்கிறதில்லையென்று அர்ச். கிரெகோரியார் வசனித்தார். மோயீசென்பவர் சீனாயி மலைமேலே நாற்பது நாள் சர்வேசுரனோடு முகமுகமாய்ச் சம்பாஷித்தபின், மலையைவிட்டு இறங்கிவரும்போது, அவர் நெற்றியிலிருந்து பிரகாசக் கதிர் புறப்பட்டது. இஸ்ராயேல் சனங்களெல்லாரும் அந்தக் கதிர்களைக் கண்ணாலே கண்டாலும், அவருக்கு மாத்திரம் அது தெரியவில்லை. இதினாலல்லோ அவர் கர்த்தரோடேப் பேசிப் புழங்கினதினாலே, அவருடைய முகத்தில் பிரகாசக் கதிர் உதித்ததாக அவருக்குத் தெரியவில்லையென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது; தாழ்ச்சியுள்ளவனுக்கும் நடக்கிறது இதுவே. தன் புண்ணியம் தனக்கு மாத்திரம் தெரியாது; தன்னிடத்திலுள்ளதெல்லாம் குற்றங்குறையென்று எண்ணுவான்; தன் குற்றங் குறைகளில் சிலது மாத்திரம் தனக்குத் தெரிகிறதென்றும் தான் அறியாத குற்றங்குறைகள் தன்னிடத்தில் இன்னம் வெகுவாயிருக்கிறதென்றும் நிச்சயித்துக்கொள்ளுவான். ஆகையால் தன் சகோதரர் எல்லாரிலும் தான் தாழ்ந்தவனென்றும் தான் எல்லாரிலும் பெரும் பாவியென்றும் எண்ணிக்கொள்ளுகிறது அவனுக்கு [illegible]யிருக்கும்.






அநேக அர்ச்சியசிஷ்டவர்கள் அடைந்திருக்கிற வரப்பிரசாதங்களை அவர்கள் கண்ணுக்குச் சர்வேசுரன் மறைத்து அவர்களைத் தாழ்ச்சியின் வழியில் நடந்துகிறது வழக்கமாயிருந்தாலும், சர்வேசுரன் தமது தாசனை விபரீதமான பற்பல வழியில் நடத்திக்கொண்டு வருகிறதினாலே, அவர்களுக்குத் தாம் செய்தருளுகிற வரப்பிரசாதங்களை அவர்கள் கனமாய் மதித்து அதற்காகத் தமக்கு நன்றியறிந்ததோத்திரம் செய்யும்பொருட்டு அதுகளைச் சிலவிசை அவர்கள் அறிந்துகொள்ளும்படி செய்வார். ஆகையால் நாம் இவ்வுலோக புத்தியைப் பெற்றுக்கொண்டவர்களல்ல ; சர்வேசுரன் நமக்குச் செய்தருளின வரங்களை நாம் அறிந்துகொள்ளும்பொருட்டுத் தேவ புத்தியை அடைந்திருக்கிறோமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். சர்வ வல்லபமுள்ளவர் என்னிடத்தில் பெரிய அச்சரியங்களைச் செய்ததினாலே, கர்த்தருக்கு ஸ்துதிபாராட்டுகிறேனென்று தேவமாதா தானே திருவுளம்பற்றினாளல்லோ? சர்வேசுரன் தனக்குச் செய்தருளுகிற வரங்களை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சிக்கும் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கும் விரோதமாயிராததுமன்றி மேற்சொன்ன அறிவு உத்தம தாழ்ச்சியை விட்டுப் பிரியாமல் எப்போதும் சேர்ந்திருக்கிறதினாலே, இது புண்ணிய சாங்கோபாங்கருடைய தாழ்ச்சியென்று சொல்லப்படும்.

ஆகிலும் இதிலே ஒரு மோசமும் அபத்தும் உண்டாயிருக்கும்; இது காரியத்தில் எச்சரிக்கையாயிருக்க வேணுமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் போதித்திருக்கிறார்கள். அதென்னவென்றால், சிலர் தங்களிடத்திலுள்ள தேவ வரங்களுக்கு மேலான வரம் தங்களிடத்திலிருக்கிறதென்று சிலவிசை எண்ணுகிறதுண்டு. காட்சியாகமத்தில் சொல்லியிருக்கிறதே இதற்கு அத்தாட்சியாகும். அதென்னவென்றால், கர்த்தர் ஓர்ஆங்காரியை நோக்கித் திருவுளம்பற்றினதாவது : நான் ஆஸ்திபந்தன், திரளான நன்மைகள் என்னிடத்தில் நிறைந்திருக்கின்றது, எனக்கு ஒன்றுமொன்று குறைவில்லையென்று சொல்லுகிறாய்; நீ நிர்ப்பாக்கியனென்றும் இரக்கத்துக்குரியவனென்றும் தரித்திரனென்றும் குருடனென்றும் நிருவாணனென்றும் உனக்கே தெரியாதென்றார். சுவிசேஷத்தில் சொல்லியிருக்கிற பரிசேயன் தான் மற்ற மனுஷரைப்போலே இல்லையென்று சர்வேசுரனுக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ணினானே; அவன நினைத்ததும் தப்பிதந்தான்; தன்னிடத்தில் இல்லாத புண்ணியம் மற்றவர்களுக்கு மேலாகத் தன்னிடத்திலிருந்ததென்று





நினைத்துத் தன்னை அவர்களுக்கு மேலாக எண்ணினான். இவ்வித ஆங்காரம் சிலவிசை நமதிருதயத்தில் நலியாமல் நுழைகிறதினாலே, நாம் இதைக் கண்டுபிடியாமல் நமதுபேரில் வீம்பான எண்ணங்கொள்ளுகிறோம். ஆகையால் எப்போதும் மற்றவர்களுடைய புண்ணியத்தைக் கண்திறந்து பார்த்து நமது புண்ணியத்தைப் பாராமல் கண்ணைமூடிக்கொண்டு தேவ பயத்தோடு நடந்தால், தேவ வரம் நம்மிடத்தில் நிலைக்கொள்ளுமென்பது நிச்சயம்.

ஆகிலும் சர்வேசுரன் எல்லாரையும் ஒரே வழியில் நடத்தாமல் பற்பல மார்க்கத்தில் கூட்டிக்கொண்டு போகிறதினாலே, அர்ச். சின்னப்பரைப் போன்ற சில மகாத்துமாக்களுக்குத் தாம் செய்தருளுகிற வரத்தின் மேன்மையை அவர்களே அறிந்துகொள்ளும்படி சிலவிசை கிருபைசெய்தருளுவார். இதிப்படியிருக்கத் தேவ வரங்களால் நிறைந்திருக்கிறோமென்று அறிந்திருக்கிறவர்கள் தாங்கள் சகலரிலும் தாழ்ந்தவர்களென்றும் சகலரிலும் பெரும்பாவிகளென்றும் நிச்சயித்துக்கொள்ளுகிறதெப்படி? சர்வேசுரன் யாதொருவனுக்குச் செய்தருளுகிற வரங்களை அவன் கண்ணுக்கு மறைத்தால், அவன் தன்னிடத்தில் ஒரு புண்ணியமும் இல்லையென்றும் குற்றங்குறைகள் மாத்திரம் இருக்கிறதென்றும் நினைத்துத் தான் சகலரிலும் பெரும்பாவியென்று எண்ணிக்கொள்ளுகிறது வருத்தமில்லையென்பது மெய்தான். ஆனால் சர்வேசுரன் தங்களை மேலான புண்ணிய சாங்கோபாங்கத்தில் உயர்த்தியிருக்கிறாரென்று அறிந்துகொள்ளுகிற மகாத்துமாக்கள் தாங்கள் சகலரிலும் பெரும்பாவிகளென்று எண்ணிக்கொள்ளுகிறது எப்படியென்று கண்டுபிடிக்க எனக்கு வருத்தமாயிருக்கிறதென்று சொல்லுவாயாக்கும். ஆகிலும் இப்படி எண்ணிக்கொள்ளுகிறது வருத்தமல்ல. அர்ச். பிராஞ்சிஸ்குவைப் போலே தாழ்ச்சியுள்ளவனாயிரு; இதெப்படியென்று உடனே அறிந்துகொள்ளுவாய். உமதுபேரில் இவ்வளவு தாழ்மையான எண்ணங்கொண்டு இவ்வளவு தாழ்வாய் நீர் பேசிக்கொள்ளுகிறது எப்படியென்று ஒரு சந்நியாசியார் அர்ச். பிராஞ்சிஸ்குவிடத்தில் ஓர்நாள் கேட்டார். அதற்கு அந்த அர்ச்சியசிஷ்டவர் சொன்னதாவது: சர்வேசுரன் எனக்குச் செய்தருளின வரப்பிரசாதங்களைச் சகலரிலும் பெரும்பாவி ஒருவனுக்கு அளித்திருந்தால், என்னைவிட அவன் புண்ணியத்தில் அதிகமாய் வர்த்தித்துச் சர்வேசுரனுக்கு அதிகமாய் நன்றியறிந்திருப்பானென்று நிச்சயித்திருக்கிறேன்; சர்வேசுரன் என்னைத் தாங்கி

க்கொண்டிருக்கிற கையை ஒரு க்ஷணமாத்திரம் வாங்கிக்கொண்டால், அந்த க்ஷணமே நான் சகலவித தோஷ துரோகங்களிலும் விழுந்து சகலரிலும் பெரும்பாவியாவேனென்று நிச்சயமாய் எனக்குத் தெரியும்; இதினாலே நான் சகலரிலும் பெரும்பாவியென்றும் நன்றிகெட்ட துரோகியென்றும் எண்ணியிருக்கிறேனென்றார். இதுவே சரியான மறுமொழி, இதுவே ஆழ்ந்த தாழ்ச்சிக்கு அழகு; இதிலே ஆச்சரியத்துக்குரிய ஓர் புத்தி அடங்கியிருக்கின்றது. இந்த நினைவைக் கொண்டு அர்ச்சியசிஷ்டவர்கள் தங்களை எல்லாத்துக்குங் கீழாகத் தாழ்த்தி எல்லாருடைய காலுக்கும் கீழாகத் தங்களை வைத்துச் சகலரிலும் தாங்கள் பெரும்பாவிகளென்று மெய்யாகவே எண்ணியிருந்தார்கள். நமது பலவீனத்தை அறிந்துகொள்ளுகிறது தாழ்ச்சிக்கு வேராகும்; இந்த வேர் அவர்களுடைய இருதயத்தில் ஸ்திரமாய் ஆணியிருந்ததினாலே, தங்களாலே தங்களிடத்தில் உள்ளது இன்னதென்றும் சர்வேசுரனாலே தங்களிடத்தில் உண்டானது இன்னதென்றும் எளிதாய்ப் பகுத்தறிந்திருந்தார்கள். ஆகையால் சர்வேசுரன் ஒரே க்ஷணம் எங்களைக் கைவிட்டால், நாங்கள் சகலரிலும் பெரும்பாவிகளாய்ப் போவோமென்று யோசித்து எங்களாலே நாங்கள் பெரும்பாவிகளென்று எண்ணி எங்களிடத்திலுள்ள தேவ வரங்களைச் சர்வேசுரன் இரவலாய்க் கொடுத்திருக்கிறாரென்றும் அது எங்களுடையதல்லவென்றும் நிச்சயித்துக்கொண்டார்கள். இதினாலே அவர்கள் தாழ்ச்சி குறையாமல் ஆழ்ந்த தாழ்ச்சியில் அமிழ்ந்திச் சர்வேசுரன் தங்களுக்குச் செய்தருளின வரப்பிரசாதங்களைக் கொண்டு தகுந்தபடி தாங்கள் புண்ணியத்தில் வர்த்திக்கவில்லையென்று எண்ணிக்கொள்ளுவார்கள். ஆகையால் நம்மாலே நாம் யாரென்று யோசித்துப் பார்த்தாலுஞ் சரி, சர்வேசுரன் நமக்குச் செய்தருளின வரப்பிரசாதங்களை எடுத்துப் பார்த்தாலுஞ் சரி, எப்பக்கத்திலே கண்ணைத் திருப்பினாலும்; நம்மை நாமே தாழ்த்தி நாம் சகலருக்கும் தாழ்ந்தவர்களென்று நிச்சயித்துக்கொள்ளுகிறதற்கு எப்போதும் இடமுண்டு.

சவுலென்பவன் ஓர் குகையிலே புகுந்திருக்கையில், தாவீதென்பவர் அவனைக் கொல்லக்கூடுமாயிருந்தாலும், கொல்லாமல் விட்டுவிட்டார். அவன் குகையை விட்டு அப்புறம்போகும்போது, தாவீதென்பவர் தூரத்தில் நின்றுகொண்டு சொன்னதாவது: இஸராயேல் இராசாவே, யாரைக்கொல்லத் தேடுகிறீர்? யாரைக்கொல்லத் தேடுகிறீர்?






செத்தநாயும் செள்ளுமாகிய என்னையல்லோ கொல்லத் தேடுகிறீரென்று கூவிச்சொன்னார். இந்த வார்த்தைகளை அர்ச். கிரெகோரியார் பற்றும்பற்றாய்ச் சீர்தூக்கிப் பார்த்துச் சொல்லுகிறதாவது: இதற்கு முன்னையே தாவீதென்பவர் இராசாபிஷேகம் பெற்றிருந்தார்; சவுலென்பவன் கையிலிருந்து சர்வேசுரன் இராச்சியத்தை எடுத்து இவர் கையிலே கொடுப்பாரென்று சமுவேலென்னும் தீர்க்கதரிசி சர்வேசுரன்பேராலே இவருக்கு அறிவித்திருந்தார்; சர்வேசுரன் தானே இவரை இராசாங்கத்துக்குக் குறித்திருந்தாலும், சவுலென்பவனைப் பார்க்கத் தான் சர்வேசுரனுக்கு அதிக பிரியமுள்ளவனென்று அறிந்திருந்தாலும், சவுலென்பவனைப் பார்க்கத் தம்மைத் தாழ்த்திக்கொண்டாரேயென்றார். ஆகையால் மற்றவர்களைச் சர்வேசுரன் எவ்வளவு கனமாயெண்ணியிருக்கிறாரென்று நமக்குத் தெரியாததினாலே, அவர்களுக்குக் கீழாக நம்மைத் தாழ்த்துகிறதற்கு எவ்வளவு அதிக ஞாயமுண்டென்று இதினாலே அறிந்துகொள்ளலாம்.

---

## ௩௫-ம் அதிகாரம்.

---

*தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்து சகலவித சோதனைகளையும் செயிப்பதற்கும் சகலவித புண்ணிய சாங்கோபாங்கத்தையும் அடைவதற்கும் ஆனவழிபாடென்று சொல்லுவது.*

---

ஒருவன் புண்ணியம் சம்பாதிக்கத் தன்னாலே எவ்வளவுதான் பிரயாசப்பட்டாலும், சகல நன்மைகளையும் அளித்தருளுகிற சர்வகாருண்ணியரான சர்வேசுரனுடைய விசேஷ ஒத்தாசையில்லாவிட்டால், அவன் பிரயாசமெல்லாம் வீணாயிருக்குமென்று முந்தமுந்த அவன் ஸ்திரமாய் அறிந்துகொண்டாலொழிய ஆத்தும பரிசுத்தத்தனத்தையும் வேறெந்தப் புண்ணிய சாங்கோபாங்கத்தையும் அடைவது கூடாதகாரியமாமே. இதை அஸ்திவாரமான சத்தியமாகப் பூர்வீக வனவாசிகளெல்லாரும் அங்கீகரித்துக்கொண்டிருக்கிறார்களென்று காசியான் சொல்லியிருக்கிறார். மற்றவர்கள் சொல்லக் கேள்விப்பட்டதினாலேயாகி





லும், புத்தகங்களில் வாசித்திருக்கிறதினாலேயென்கிலும், இது வேத சத்தியமாயிருக்கிறதினாலேயாகிலும், இதை அங்கீகரித்து நிச்சயித்துக்கொள்ளுகிறது பற்றாது. தன் சொந்தப் பரிட்சையினாலே பட்டுத்தேரி இதை அறிந்துகொள்ள வேண்டும்; கண்ணாலேயும் விரலாலேயும் இந்தச் சத்தியத்தைத் தொட்டுப் பரிட்சை பார்த்துக்கொள்ள வேண்டும். இதுவே நாம் இங்கே சொல்லிக்காட்டுகிற தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தாகும். இவ்விதத் தாழ்ச்சியுள்ளவர்களுக்கு மாத்திரம் வெகு திரளான நன்மைகளைத் தருவோமென்று சர்வேசுரன் வேதாகமத்தில் வெகு இடங்களில் வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறதறிவோம். இதினாலேதான் நாம் இப்போது சொல்லிக் காட்டினபடி நம்மை அறிந்துகொள்ளுகிறதே தாழ்ச்சியின் மேலான அந்தஸ்தென்றும் சகல புண்ணியங்களுக்கும் அஸ்திவாரமென்றும் வேறே சகல வரங்களையும் சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொள்ளுகிறதற்கு அவசரமான ஆயத்தமென்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் நிரூபித்தது ஞாயந்தானே. அதின்பின் காசியான் இது காரியத்தை விசேஷித்து விளக்கிக்காட்டி விரத்தத்துவத்தைக் குறித்து அவர் சொல்லுகிறதாவது: விரத்தத்துவத்தை அடைவதற்கு நாம் என்னென்ன பிரயாசப்பட்டாலும், அதுவெல்லாம் வீணாயிருக்கும்; நமது பெலத்தினாலே அதை அடையக்கூடாதென்றும் அது தேவ கிருபாகடாக்ஷத்தின் உதாரத்துவத்தினாலே வருகிற விசேஷவரமென்றும் பரிட்சை பார்த்து அறிந்துகொண்டாலொழிய இந்தப் புண்ணியத்தைஅடைய நம்மாலே ஆகாதென்றார். இது காரியத்திலே அர்ச். அகுஸ்தீன் போதித்திருக்கிற போதகமும் இதுவே. தன் பிரயாசத்தினாலே இந்தப் புண்ணியத்தை அடையக் கூடாதென்று நிச்சயமாய் அறிந்துகொள்ளுகிறதே இந்தப் புண்ணியத்தை அடைவதற்கும் காப்பாற்றுவதற்கும் முக்கியமான வழிபாடாகும்; ஏனென்றால் தன்பேரில் நம்பிக்கை வைக்கிறவன் இந்தப் புண்ணியத்தை இழந்துபோவான்; ஆனால் இது சர்வேசுரனுடைய வரமென்றும் இது மேலாவிலிருந்து வரவேணுமென்றும் விசுவசிக்கிறவன் மாத்திரம் இந்த வரத்தை அடைவானென்றார். பூர்வீக வனவாசி ஒருவர் சொல்லுமாப்போலே, விரத்தத்துவம் தேவ வரமென்றும் நமது பிரயாசத்தினாலே அதை அடையக்கூடாதென்றும் பரிட்சை பார்த்து நிச்சயமாய் அறிந்துகொள்ளுவதற்கு முன்னே மோகசோதனை ஒருவனைவிட்டு ஒருகாலும நீங்க மாட்டாது. மடாதிபதியாகிய மோயிசென்பவர்பேரில் பல்லாதியுஸ் வெளிப்படுத்தின சங்கதி இச்சத்தியத்தை ஒப்பிப்பதற்கு உதவும். இந்த மோ





யீசென்பவர் வெகு இரத்தப் புஷ்டியான சரீரமும் காமகுணமுமுள்ளவராயிருந்ததினாலே, துவக்கத்திலே வெகு காமசோதனை வந்து அவரை உபாதித்தது. அதைச் செயிப்பதற்காக அநேக வனவாசிகள் அவருக்குச் சொல்லிக்கொடுத்த பல வழிபாடுகளைச் செய்துகொண்டு வந்தார். இடைவிடாமல் செபத்தியானம் பண்ணுவார்; ஆறுவருஷம் வரைக்கும் இராத்திரியிலே வெகுநேரம் நின்றுகொண்டு அவர் செபம்பண்ணுகிறது வழக்கம். வெகுவெகு கைவேலை செய்துகொண்டு கொஞ்சம் அப்பமாத்திரம் சாப்பட்டு வனவாசிகளுடைய அறைக்கறை தண்ணீர் சுமந்துகொண்டுபோய் வேறே பல அருந்தவமுயற்சிகளை இடைவிடாமற் செய்துகொண்டு வருவார். இப்படியிருந்தாலும், அவரை உபாதித்த சோதனையின் கடூரம் நீங்கவில்லை; அந்தச் சோதனை வெகு கடூரமாயிருந்ததினாலே, அவர் அதற்கு உட்பட்டு வனாந்தரத்தை விட்டுச் சமுசார வாழ்க்கைக்குப் போகிற தருணமாயிருந்தது. அவர் இப்படி வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போது, மடாதிபதியாகிய அர்ச். இசிதோரென்பவர் சர்வேசுரன்பேராலே அவரிடத்தில் வந்து சொன்னதாவது : இயேசுநாதர்பேராலே உமது சோதனையெல்லாம் உம்மை விட்டு இப்போதே நீங்கிப்போகுமென்றார். அப்படியே அப்போதே அந்தச் சோதனையெல்லாம் நீங்கிப்போனது. இன்னம் இந்த அர்ச்சியசிஷ்டவர் சொன்னதாவது : மோயீசென்பவரே, இதுவரையில் சோதனையின்பேரிலே உமக்கு முழுச்செயம் வராததற்குக் காரணம் என்னவென்று அறியவேணுமோ? கேளும்: இந்தச் செயத்தை நீர் அடைந்திருந்தால், இது உமது பெலத்தினாலே யானதென்றெண்ணி இது நான் அடைந்த செயமென்று நீர் ஆங்காரியாதபடிக்கு இந்தச் செயத்தை இதுவரையில் ஆண்டவர் உமக்குக் கொடுக்கவில்லை ; உமது நன்மைக்காகத்தானே இத்தனை காலம் உமக்குச் சோதனை உண்டாக வேணுமென்று சர்வேசுரன் சித்தமாயிருந்தாரென்றார். மோயீசென்பவர் தன்னை நம்பாமையாகிற புண்ணியத்தை இன்னம் அடையாததினாலே, அவர் அதை அடைந்து ஆங்காரமும் அகந்தையுமாகிற சோதனையில் விழாதபடிக்கு அவ்வளவு காலம் அவர் அவ்வளவு கடூரமான சோதனைப்படவேணுமென்றும் அவர் செய்துவந்த அத்தனை அருந்தவமுயற்சியினாலே ஒரே ஆசாபாசத்தை முழுதும் அடக்கிச் செயிக்கக்கூடாமற் போகவேணுமென்றும் சர்வேசுரன் சித்தமானார்.

மடாதிபதியான பாக்கோனென்பவருக்கும் இப்படி நடந்ததென்






று பல்லாதியுஸ் வெளிப்படுத்தியிருக்கிறூர். எழுபது வயசுவரைக்கும் இவரிடத்தில் மோகசோதனை வந்துகொண்டிருந்தது. ஐம்பது வயசுதுவக்கி அறுபதுவயசு வரைக்கும் பத்துவருஷ காலமாய் இந்தச்சோதனை அடிக்கடி வெகு பலங்கொண்டு வந்ததினாலே, இரவிலும் பகலிலும் இந்தச் சோதனை எப்போதும் என்னை உபாதித்துக்கொண்டிருந்ததென்று சத்தியப் பிரமாணமாக அவர் நிச்சயித்துச் சொன்னூர். இதைத் தள்ளுவதற்கு அவர் செய்ததெல்லாம் ஒன்றுக்கும் உதவாமற் போனது. ஒருநாள் தடவையிலே சர்வேசுரன் என்னைக் கைவிட்டதுபோலேயிருக்கிறதேயென்று அவர் வெகுவாய் அங்கலாய்த்துக்கொண்டிருக்கும்போது; அவர் உள்ளத்திலே பிறந்த சத்தமாவது: உன் பலவீனத்தையும் உனூலே ஒன்றும் ஆகாதென்கிற சத்தியத்தையும் நீ நன்றாய் அறிந்துகொண்டு உன்பேரில் உனக்குள்ள நம்பிக்கையெல்லாம் தள்ளி நமக்குமுன்பாக உன்னைத் தாழ்த்திச் சகலத்திலும் நமது அடைக்கலத்தைத் தேட வேணுமென்று பரிட்சையினாலே நீ அறிந்துகொள்ளும்பொருட்டு இத்தனை காலம் இவ்வளவு கடூரமான சோதனை உனக்கு வரவிட்டோமென்று அறிந்துகொள்ளென்று சத்தித்தது. அதுமுதல் அவர் மேற்சொன்ன சோதனையில்லாமல் வெகு ஆறுதலும் பெலனும் அடைந்தார். ஆகையால் நமது நம்பிக்கையெல்லாம் சர்வேசுரன்பேரில் வைக்க வேணுமென்றும் நமதுபேரில் அற்ப நம்பிக்கையும் வைக்கப்படாதென்றும் சர்வேசுரன் சித்தமாயிருக்கிறூர்.

ஆனூல் இது அர்ச். அகுஸ்தீன் காசியான் முதலிய பூர்வீக வனவாசிகள் மாத்திரம் போதித்த சத்தியமல்லவே; இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் ஞானகமத்திலே பலவிடங்களில் இதைப் போதித்திருக்கிறூர். சர்வேசுரனுடைய வரமில்லாமல் நான் ஒறுத்தலாயிருக்கக் கூடாதென்று அறிந்தவுடனே கர்த்தருக்கு முன்பாகத் தீர்க்கதண்டம்பண்ணி முழு இருதயத்தோடே அவரை வேண்டிக்கொண்டேன்; இந்த வரம் ஆரிடத்திலிருந்து வந்ததென்று அறிந்துகொள்ளுகிறது முதலாய் ஞானமாகுமென்றூர். இவ்விடத்திலே ஒறுத்தலென்கிற வார்த்தையானது விரத்தத்துவத்துக்கு விரோதமான பற்றுதல்களையெல்லாம் அறுத்துத் தள்ளுகிறதுமன்றி நீதிஞாயத்துக்கு விரோதமானதெல்லாத்தையும் அடக்கி ஒடுக்குகிற புண்ணியமென்று அர்த்தமாகும். அன்றியும் உலோகத்திலுள்ள வெள்ளி தங்கமெல்லாம் ஒறுத்தலுள்ள ஒரே ஆத்துமத்துக்கு நிகரல்லவென்று வேதாகமத்திலே வேறூ



ரிடத்தில் சொல்லியிருக்கின்றது. இதிலேயும் ஒறுத்தலென்கிற வார்த்தைக்கு மேற்சொன்ன அர்த்தமே பொருந்தும்: அதாவது, நமது ஆசைபற்றுதலெல்லாத்தையும் நீதி நியாயத்துக்கும் புண்ணியத்துக்கும் ஒத்தவிதமாய் நடத்துகிறதே ஒறுத்தலென்னும் புண்ணியமாகும். ஆகையால் சர்வேசுரனுடைய விசேஷ வரப்பிரசாதமின்றிச் சலோமோன் தமமுடைய ஆசாபாசங்களை அடக்கிப் புண்ணியம் செய்யக் கூடாதென்று அறிந்தமாத்திரத்தில் கர்த்தருடைய அடைக்கலமாய்ப்போய் முழு இருதயத்தோடு அவர் உதவியை இரந்து மன்றாடினேனென்று சொல்லியிருக்கிறார். கர்த்தருடைய ஒத்தாசையில்லாமல் தான் ஒன்றுஞ்செய்யக் கூடாதென்று பரிட்சை பார்த்து அறிந்துகொள்ளுகிறதும் மேலான ஞானமென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் நம்மை நாமே ஒறுத்து நமது ஆசாபாசங்கள் எல்லாத்தையும் அடக்கி ஒழுங்குப்படுத்திச் சகல சோதனைகளையும் செயித்துச் சகலவிதப் புண்ணியங்களையும் சம்பாதிப்பதற்கு மேற்சொன்ன அறிவு தகுந்த வழிபாடாகும். தாவீதென்னும் தீர்க்கதரிசியும் இச்சத்தியத்தை அறிந்துகொண்டிருக்கிறார். இதினாலல்லோ கர்த்தர் வீடு கட்டாதேபோனால், அதைக் கட்டுகிறவர்கள் வீண்வேலை செய்கிறார்கள்; அவர் பட்டணத்தைக் காக்காதேபோனால், அதைக் காக்கிறது வீணாகுமென்றார். சர்வேசுரன் தாமே நமக்குச் சகலத்தையும் கொடுக்க வேண்டும்; கொடுத்தபின்னும் அவர் தானே அதைக் காப்பாற்றவேண்டும்; இல்லாவிட்டால், நாம் செய்கிறதெல்லாம் வீணாயிருக்கும்.

---

## ௲-ம் அதிகாரம்.

---

*தாழ்ச்சி பராக்கிரமத்துக்கு விரோதமாயிராததுமன்றி அதற்கு அஸ்திவாரமும் ஊற்றுமாயிருக்கிறதென்பதின் பேரில்.*

---

அர்ச். தோமாஸ் பராக்கிரமத்தின்பேரில் சொல்லியிருக்கிறதாவது: கிறீஸ்துவர்களுக்குத் தாழ்ச்சி மிகவும் அவசரமென்று சுவிசேஷத்தில் சொல்லியிருக்கின்றது; அர்ச்சியசிஷ்டவர்களும் இப்படிப் போதித்திருக்கிறார்கள். பராக்கிரமமும் அவர்களுக்கு அவசரந்தான்; விசே





ஷமாய் மேலான அலுவல்களைச் செய்கிறவர்களுக்கு அது மிகவும் அவசரம். ஆகிலும் இவ்விரண்டு புண்ணியமும் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கிறதாகத் தோன்றுகிறது ; ஏனென்றால் மகிமைக்குரிய மேலான காரியங்களைத் துவக்கிச் செய்கிறதற்கு நம்மிடத்திலுள்ள தைரியமே பராக்கிரமமென்று சொல்லப்படும்; இதைவிடத் தாழ்ச்சிக்கு விரோதமான காரியம் ஒன்றுமில்லையென்று தோன்றுமாக்கும். ஏனென்றால் முந்தமுந்த மேலான காரியங்களைத் துவக்குகிறது தாழ்ச்சிக்கு முழுதும் விரோதம்போலே யிருக்கும். தான் எதுக்கும் அபாத்திரவானென்றும் ஒன்றுக்கும் உதவாதவனென்றும் ஒத்துக்கொள்ளுகிறது தாழ்ச்சிக்குரிய குணம்ல்லோ ? இதிப்படியிருக்கத் தன்னாலே கூடாததைச் செய்யத் தேடுகிறது ஆங்காரமும் அகந்தையுமென்று தோன்றும். இரண்டாவது, மகிமைக்குரிய அலுவலைத் துவக்குகிறது தாழ்ச்சிக்கு விரோதம் ; ஏனென்றால் மெய்யாகவே தாழ்ச்சியுள்ளவன் மகிமை அடையவேணுமென்று கனவிலேயும் நினைக்க மாட்டானென்பாயாக்கும். ஆனால் மேற்சொன்ன அர்ச். தோமாஸ் இதற்குச் சொல்லும் மறுமொழியாவது: இது காரியத்தை மேலெழுந்தவாரியாய் யோசித்துப் பார்த்தால், இவ்விரு புண்ணியமும் ஒன்றுக்கொன்று விரோதமாகத் தோன்றும் ; ஆகிலும் இது விரோதமல்ல; ஏனென்றால் ஒரு புண்ணியம் வேறோர் புண்ணியத்துக்கு விரோதமாயிருக்கக் கூடாது. அன்றியும் தாழ்ச்சியும் பராக்கிரமமும் இரண்டு சகோதரிகள்போல் ஒத்திருக்கின்றது; ஒன்று வேறொன்றுக்கு அவசரம். முந்தமுந்த மேலான அலுவல்களைத் துவக்குகிறது பராக்கிரமசாலிக்குரிய குணம்; இது தாழ்ச்சிக்கு விரோதமாயிராததுமன்றி மெய்யான தாழ்ச்சியுள்ளவனுக்கே உரிய குணமாகும். யாதொருவன் தன் சொந்தப் பெலத்தின்பேரில் நம்பிக்கை வைத்து மேலான காரியங்களைத் துவக்கினால், இது ஆங்காரமும் அகந்தையுமென்பதற்குச் சந்தேகமில்லை ; ஏனென்றால் நம்மாலே என்ன ஆகும் ? ஒன்றுமாகாது. இதினாலல்லோ நம்மாலே ஒன்றும் நினைக்கமுதலாய்க் கூடாதென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினார். ஆனால் நம்மை நம்பாமல் சர்வேசுரன்பேரில் முழு நம்பிக்கை வைத்து மேலான காரியங்களைத் துவக்குகிறதே பராக்கிரமத்துக்குரிய குணம் ; இதுவே தாழ்ச்சிக்குமடுத்த காரியமாகும். ஏனென்றால் நாம் மேற்சொன்னதுபோலே, தாழ்ச்சி ஞான மாளிகைக்கு அஸ்திவாரம் வெட்டி அதிலுள்ள மணல் முதலிய இலேசான வஸ்துவையெல்லாம் வெளியே எடுத்துத் தள்ளி இயேசுநாதராகிற பாறையின்மேலே அஸ்திவாரம்






போகிறதினாலே, இது சகல புண்ணியத்துக்கும் அஸ்திவாரமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் பேரிட்டார்கள்.

செல்வம் நிறைந்து தனது அன்பர்மேல் சாய்ந்துகொண்டு வனாந்தரத்திலிருந்து எழும்புகிற இவள் யாரென்று தேவகானத்தில் சொல்லியிருக்கின்றது. அர்ச். பெர்நர்துஸ் இவ்வாக்கியத்தை வியாக்கியானித்து நம்முடைய புண்ணியமும் நற்கிரிகைகளுமெல்லாம் இயேசுநாதர் மேலே சாய்ந்து ஊன்றியிருக்க வேண்டும். இச்சத்தியத்துக்கு அத்தாட்சியாக அர்ச். சின்னப்பர் கொருந்தியருக்கெழுதின நிருபத்தில் சொல்லுகிறதாவது: என்னிடத்திலுள்ளதெல்லாம் கூடி தேவ வரப்பிரசாதத்தினாலானது; அவருடைய வரப்பிரசாதம் என்னிடத்தில் வீணாய்ப் போகவில்லை; மற்றவர்களெல்லாரையும் விட நான் அதிகமாய் உழைத்தேனென்றார். இவ்வாக்கியத்தின்பேரில் அர்ச். பெர்நர்துஸ் பேரொலியிட்டு அர்ச். சின்னப்பரை நோக்கிச் சொல்லுகிறதாவது: பெரிய அர்ச்சியசிஷ்டவரே, நீர் சொல்லுகிறதைக் கவனித்துச் சொல்லும்; நீர் செய்த வேலைக்குரிய பலனை இழந்துபோகாதபடிக்கு உமது அன்பராகிய இயேசுநாதர்பேரில் எல்லாத்தையும் சாட்டி அவர்பேரில் மாத்திரம் நம்பிக்கை வைக்க வேணுமென்றார். இதினிமித்தமாக அர்ச். சின்னப்பர் நான் எல்லாரையும்விட அதிகமாய் உழைத்தேனென்று சொன்னபின் உடனே, சொல்லுகிறதாவது: ஆகிலும் நானல்ல, என்னோடு தேவ வரப்பிரசாதமே உழைத்ததென்றார். அன்றியும் அவர்தானே பிலிப்பியருக்கெழுதின நிருபத்தில் சொல்லுகிறதுமிதுவே; அதென்னவென்றால், என்னாலே சகலமும கூடுமென்று அவர் சொன்னபின், என்னைப் பலப்படுத்துகிறவரைக் கொண்டு என்னாலே சகலமும் கூடுமென்று சொல்லியிருக்கிறார். தேவ ஒத்தாசையைக் கொண்டு நம்மாலாகாத காரியம் ஒன்றுமில்லை; தேவ வரப்பிரசாதத்தைக் கொண்டு நம்மாலே சகலமும் கூடும்; இதின்பேரிலேதான் நாம் ஊன்றி நம்பிக்கை வைக்க வேண்டும்; இதினாலேதான் கிறீஸ்துவனுக்கு மிகுந்த தைரியமுண்டாக வேண்டும். இதினாலல்லோ சர்வேசுரனை நம்புகிறவர்களுக்குப் பெலன் மாறுமென்று இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். சர்வேசுரனை நம்புகிறவர்கள் உலோக பெலனைத் தள்ளி மோட்சபெலனைக் கைக்கொள்ளுவார்கள்; தங்கள் பலவீனத்தை நீக்கிக் கர்த்தருடைய பெலனைக் கைப்பற்றுவார்கள்; கர்த்தருடைய பெலனைக்கொண்டு அவர்களாலே சகலமும் செய்யலாமென்கிறதினாலே, அவர்கள் நிறை

வேற்றக் கூடாத காரியம் ஒன்றுமில்லை. இதினலல்லோ தாழ்ச்சியுள்ளவர்களுக்கு வருத்தமான காரியம் ஒன்றுமில்லையென்று அர்ச். சிங்கராயர் வசனித்தார்; ஏனென்ருல் மெய்யான தாழ்ச்சியுள்ளவன் தைரியசாலியும் பராக்கிரமமுள்ளவனுமாயிருப்பான், மேலான காரியங்களைத் துணிந்துசெய்வான், ஒன்றும் அவனுக்கு வருத்தமாகத்தோன்ருது. ஏனென்றல் தன்னை அற்பமாகிலும் நம்பாமல் சர்வேசுரன்பேரில் தன் நம்பிக்கையெல்லாம் வைப்பான்; சர்வேசுரனை ஏறெடுத்துப் பார்ந்தயாத்திரத்தில் அவனுக்கு விக்கினம் ஒன்றும் தோன்ருது. இதினலல்லோ தேவ ஒத்தாசையைப் கொண்டு அப்புதங்களைச் செய்வோம்; நம்மை உபத்திரவப் படுத்துகிறவர்களை அவர் கெடுத்துப்போடுவாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. இதற்கொத்த தைரியமும் பொறும் தேவ நம்பிக்கையுமாகிற எண்ணத்தை நாம் கொள்ள வேணுமேயல்லாமல் பயத்துக்கும் கோழைத்தனத்துக்குமுரிய நினைவுகளை நினைக்க ஒண்ணுது; இல்லாவிட்டால், ஆத்துமாக்கள் இரக்ஷணியத்துக்குரிய அலுவலைச்செய்ய நம்மிடத்தில் ஆசையற்றுப் போகும். ஆகையால் நம்மாலே நாம் ஒன்றுமில்லையென்றும் நம்மாலே ஒன்றும் ஆகாதென்றும் அங்கீகரித்துக்கொண்டு தாழ்ச்சியாயிருக்க வேண்டும்; ஆனல் நமது நம்பிக்கை யெல்லாம் சர்வேசுரன்பேரில் வைத்து மனத்திடாரிக்கமாகி அவருடைய வரப்பிரசாதத்தையும் உதவியையுங் கொண்டு நம்மாலே சகலமும் ஆகுமென்று நிச்சயித்துக்கொள்ளவேண்டும்.

இசாயிபாசென்னும் தீர்க்கதரிசி சர்வேசுரனை நோக்கி இதோ! என்னை அனுப்புமென்ருர். அர்ச். பசிலியார் இவ்வாக்கியத்தின்பேரில் வியாக்கியானம்பண்ணி இச்சத்தியத்தை நன்ருய விளக்கிக் காட்டியிருக்கிருர். அதெப்படியென்ருல், சர்வேசுரன் தமது பிரசைகளிடத்தில் யாதாமொருவனை அனுப்பச் சித்தமாயிருந்தார்; ஆனல் அவர் மனுஷிடத்தில் நிறைவேற்றச் சித்தமாயிருக்கிற காரியத்துக்கு மனுஷரும் சம்மதித்துக்கொள்ள வேணுமென்று தாற்பரியமாயிருக்கிறதினலே, இசாயிபாசென்பவரை நோக்கிச் சொன்னதாவது: யாரை அனுப்புவோம், நமது பேராலே யார் போவானென்ருர். உடனே அந்தத் தீர்க்கதரிசி இதோ! என்னை அனுப்புமென்ருர். நான் போவேன், வேண்டியதெல்லாம் நன்ருய் நிறைவேற்றுவேனென்று இந்தத் தீர்க்கதரிசி சொல்லவில்லை. இவர் தாழ்ச்சியுள்ளவராயிருந்ததினலே, தன் பலவீனத்





தை அறிந்துகொண்டு மனிதர் பெலத்துக்கு மேற்பட்ட இந்த அலுவலைத் தன்னாலே செய்யத் துணிகிறது ஆங்காரமாயிருக்குமென்று அவருக்கு நன்றாய்த் தெரிந்திருந்தது. இதினாலே கர்த்தாவே, இதோ! என்னை அனுப்புமென்று சொன்னார்; அதாவது, இவ்வளவு மேலான அலுவலைச் செய்ய நான் கடைப்பட்டவனல்லவென்று எனக்குத் தெரியும்; ஆனால் அதற்கு என்னைக் கடைப்பட்டவனாக்க உம்மாலாகும்; கல்நெஞ்சை முதலாய்க் கரைக்கிறதற்கான பெலமுள்ள வார்த்தைகளை என் வாயில் வைக்கத் தேவரீராலே கூடும்; தேவரீர் என்னை அனுப்பினால், தேவரீர் பேராலே நான் செய்யக்கூடாத காரியம் ஒன்றுமில்லையென்ற அர்த்தமாகும். இதைக் கேட்டமாத்திரத்தில் கர்த்தர் அவரை நோக்கி நமது பிரசைகளிடத்தில் போவென்றார். இது காரியத்தில் அர்ச். பசிலியார் சொல்லுமாப்போலே, இசாயியாசென்பவர் தாழ்ச்சியில் அடங்கித் தேவ பிரசைகளுக்குத் தலைவராகத் தம்மாலே அணியாமல் தமது பலவீனத்தை அங்கீகரித்துக்கொண்டு தேவ ஒத்தாசையினாலே சகலமும் கூடுமென்று நிச்சயித்துக்கொண்டு சர்வேசுரன்பேரில் மாத்திரம் தமது நம்பிக்கையெல்லாம் வைத்ததினாலே, அன்றுமுதல் அவர் சர்வேசுரனுக்கு ஸ்தானாபதியும் தேவ கற்பனைகளைப் பிரசைகளுக்கு வெளிப்படுத்தும் மந்திரியுமானார். உயர்ந்த அலுவல்களைச் செய்கிறதற்கு நமக்கு அவசரமான பராக்கிரமம் இதுவே; நமது பலவீனத்தையும் கோழைத்தனத்தையுங் கண்டு மனத்திடாரிக்கமற்றுப் போகாதிருப்பதற்கு வழியிதுவே. கர்த்தர் எரேமியாசென்னுந் தீர்க்கதரிசியை நோக்கிச் சொன்னதாவது: நீ குழந்தைப் பிள்ளையென்று சொல்லாதே; நாம் உன்னை அனுப்புகிற இடத்துக்கெல்லாம் போய் நாம் உனக்குக் கற்பிக்கிறதெல்லாத்தையும் சொல்லவேண்டும்; அவர்களுடைய முகத்தாட்சணியத்துக்குப் பயப்படாதே; ஏனென்றால் நாம் உன்னோடுகூட இருக்கிறோமென்றார். ஆகையால் மேலான காரியங்களைச் செய்ய அவசரமான பராக்கிரமத்துக்குத் தாழ்ச்சி விரோதமாயிராததுமன்றி அதற்கு அஸ்திவாரமும் ஊற்றுமாயிருக்கின்றது.

மகிமைக்குரிய காரியங்களைச் செய்யத் தேடுகிறது தாழ்ச்சிக்கு விரோதமோவென்று இப்போது பார்க்கக் கடவோம். இதுவும் தாழ்ச்சிக்கு விரோதமல்ல; ஏனென்றால் அர்ச். தோமாஸ் சொல்லுமாப்போலே, பராக்கிரமசாலி மகிமையான காரியத்தை அபேட்சித்தாலும், அதினால் உண்டாகும் மகிமைக்காக அவன் அதை அபேட்சிக்கிறதில்லை;

தான் மகிமைக்குரியவனாய் இருந்தாலே போதும்; மகிமை அடைய வேணுமென்று அவன் எண்ணுகிறதில்லை. மனிதருடைய மேலான எண்ணத்தை அவன் பிறக்கணிக்கிறதினாலே, புண்ணியம் ஒன்றே மகிமைக்குரியதென்று அவன் நிச்சயித்து மனிதருடைய புகழ்ச்சியும் இகழ்ச்சியும் சரிதானென்று எண்ணிப் புகழ்ச்சியை அடைவதற்காக ஒன்றுஞ் செய்ய மாட்டான். புண்ணியம் மேலான பொருளாகக்கொள்ள, மனிதர் அதைச் சரியாய்க் கனம்பண்ணவும் அதற்குச் சம்பாவனை அளிக்கவும் கூடுமானவர்களல்ல; சர்வேசுரன் ஒருவரே இதைச் செய்யக்கூடுமானவர். பராக்கிரமசாலி இதுவெல்லாம் நன்றாய் அறிந்திருக்கிறதினாலே, மனிதருடைய சங்கையை அற்பமாகிலும் சட்டைபண்ண மாட்டான்; தான் அதை ஏறெடுத்துப் பார்ப்பதற்கு முதலாய் அது அயோக்கியமான காரியமென்று எண்ணிக்கொள்ளுவான். அவனுடைய கருத்து இதெல்லாத்துக்கும் மேலாய் எழும்பும்; தேவ சிநேகத்துக்காகவும் புண்ணியத்துக்காகவுமாத்திரமே மேலான காரியங்களைச் செய்ய ஏற்படுவான்; மற்ற நினைவெல்லாம் அவன் மனதில் அற்பமாகிலும் தரிக்காது. ஆனால் பராக்கிரமசாலியைப்போலே, மனிதருடைய புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் இப்படிச் சட்டைபண்ணாதிருப்பதற்கு மகாமகாப்பட்ட தாழ்ச்சி அவசரம். இப்படிப்பட்ட தாழ்ச்சி அர்ச். சின்னப்பரிடத்தில் விளங்கினதினாலே, அவர் சொன்னதாவது: தாழவும் உயரவும் எனக்குத் தெரியும்; திருத்தியடையவும் பசியாயிருக்கவும் செல்வத்தையும் தரித்திரத்தையும் அநுபவிக்கவும் மகிமையிலும் அவமானத்திலும் நிந்தையிலும் புகழ்ச்சியிலும் காலம்போக்கிச் சத்தியத்துக்கு சாட்சிசொல்லும்போது, கள்ள ஞானியென்று எண்ணப்படவும் என்னை அறிந்தவர்கள் அறியாதவனைப்போலே நடத்தினாலும், அதைச் சகித்துக்கொள்ளவும் உலோகத்துக்குச் செத்தவர்களைப்போலே சீவிக்கவும் எவ்விடத்திலும் எல்லாத்திலும் அப்பியாசப்பட்டிருக்கிறேனென்றார். இதற்குத் தாழ்ச்சியாகிற அஸ்திவாரம் பெலப்பட்டிருக்க வேண்டும். மகிமையும் நிந்தையும் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் மனிதருடைய தயவும் விரோதமுமாகிற காற்று பெலன்கொண்டு அடிக்கும்போது, நாம் அசையாமலும் மாறாமலும் இதுக்கு நடுவே ஒரே அந்தஸ்திலே எப்போதும் ஸ்திரமாய் நிலைத்திருப்பதற்கு மேலான மோட்ச ஞானமென்னும் வரம் அவசரமாமே. அர்ச். சின்னப்பரைப்போலே, மகிமைக்குள்ளே தாழ்ச்சியாயிருக்கிறது வருத்தம். மனிதர் உன்னை ஆகாதவனென்று துரத்தி நீ தரித்திரமும் நிந்தை அவமான






மும் படும்போது, நீ தாழ்ச்சியாயிருக்கிறது வருத்தமல்ல; ஆனால் மனிதர் உன்னைக் கனம்பண்ணிப் புகழ்ந்துகொண்டாடும்போதும் மகிமைக்குரிய மேலான அலுவல்களையும் உத்தியோகங்களையும் நீ செய்யும்போதும் தாழ்ச்சியாயிருக்க உன்னாலே கூடுமோ இல்லையோவென்று சந்தேகிப்பட வேண்டும். சம்மனசுகள் முதலாய் மோட்சத்திலே தாழ்ச்சியாயிருக்கமாட்டாமல் கெட்டுத் தாழ தள்ளுண்டுபோனார்களே. தாழ்மைக்கும் மகிமைக்கும் ஞானி பயப்படவேண்டியதுதான்; ஆனால் தாழ்மையைப் பார்க்க மகிமைக்கு அவன் அதிகமாய்ப் பயப்படவேணுமென்று போயேசியார் வசனித்தார். தாழ்மைப்படும்போது, தாழ்ச்சியாயிருக்கிறதைவிட மேன்மைப்படும்போது தாழ்ச்சியாயிருக்கிறது அதிக வருத்தம்; சுபாவமாய்த் தாழ்மை நம்மிடத்தில் தாழ்ச்சியையும் மேன்மை ஆங்காரத்தையும் வீண் மகிமையையும் பிறப்பிக்கும். இதினாலல்லோ சாஸ்திரம் ஆங்காரத்தை மூட்டுமென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். மேன்மைக்குரிய சகல காரியமும் நம்மிடத்தில் ஆங்காரத்தை எழுப்புகிறது வழக்கம். இதினிமித்தமாகச் சர்வேசுரனிடத்தில் உச்சிதமான வரங்களை அடைந்து மனிதராலே சங்கையும் மகிமையும் படும்போது, தாழ்ச்சியாயிருக்கிறது புண்ணிய சாங்கோபாங்கருக்கு மாத்திரமுரிய குணமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் நிரூபித்தார்கள்.

அர்ச். பிரான்சிஸ்குவுக்கு மனிதர் ஓர் தடவை மகிமை செய்யவேணுமென்று யோசித்திருக்கும்போது, அதை விலக்குவதற்காக அவர் காலாலே மண்ணை மிதித்துக்கொண்டிருந்தார். இதற்கு விரோதமான வேறோர் சங்கதி அவர் சரித்திரத்தில் எழுதியிருக்கிறதறிவோம். அதென்னவென்றால், ஒருநாள் அவர் ஒரு ஊரிலே சேர்ந்தவுடனே அந்த ஊரார் அவரை அர்ச்சியசிஷ்டவரென்று எண்ணியிருந்ததினாலே, அவருக்குச் சகலவித சங்கையும் மகிமையும் செய்து அவருடைய உடுப்பையும் கைகாலையும் முத்தமிட்டார்கள். அர்ச்சியசிஷ்டவர் இதற்கு அற்பமாகிலும் விக்கினம்பண்ணினவரல்ல. அவரோடு கூடவிருந்த சந்நியாசியார் இதைக் கண்டு இவர் மகிமையின்பேரில் பிரியப்படுகிறாரென்றெண்ணி சுவாமீ, இந்த மகிமை உமக்குப் பிரியமாயிருக்கிறாப்போலே தோன்றுகிறதேயென்றார். அதற்கு அர்ச்சியசிஷ்டவர் தம்பீ, இவர்கள் செய்யவேண்டிய மகிமையிலே இன்னம் ஆயிரத்தில் ஒரு பங்குமுதலாய்ச் செய்யவில்லையென்றார். அந்தச் சந்நியாசியார் இதைக் கேட்டு





இதற்கு அர்த்தமின்னதென்று அறியாமல் ஆச்சரியப்படும்போது, அர்ச்சியசிஷ்டவர் சொன்னதாவது : இவர்கள் நமக்குச் செய்கிற மகிமையினிமித்தம் நாம் ஆங்காரிக்கிறதுமில்லை, அது நமக்குரியதென்று எண்ணுகிறதுமில்லை ; நமது நீசத்தனத்தில் அமிழ்ந்தி இந்த மகிமையையெல்லாம் சர்வேசுரனுக்கே செலுத்துகிறோம் ; இதுவெல்லாம் அவருக்கே சொந்தம் ; இவர்கள் நம்மிடத்தில் சர்வேசுரனை அங்கீகரித்து அவரை மகிமைப்படுத்துகிறதினாலே, இவர்கள் செய்கிறது இவர்களுக்கே பிரயோசனமல்லாமல் நமக்கொன்றுமில்லையென்றார். இந்த மறுமொழியைக் கேட்டு அந்தச் சந்நியாசியார் இந்த அர்ச்சியசிஷ்டவருடைய புண்ணிய சாங்கோபாங்கத்தின்பேரில் வெகுவாய் ஆச்சரியப்பட்டார். இது ஞாயந்தானே. அர்ச்சியசிஷ்டவரென்று சங்கைப்படுகிறது மனுஷனுக்குக் கிடைக்கக் கூடுமான மகிமையெல்லாத்திலும் மேலான மகிமையாகக்கொள்ள இதினிமித்தம் ஆங்காரியாமலும் இது தனக்குரியதென்று எண்ணாமலும் இதிலே அற்பமும் தனக்கெடுத்துக்கொள்ளாமலும் சொற்பச் சந்தோஷப்படாமலும் சகல மகிமையும் சர்வேசுரனுக்கே செலுத்தித் தனக்கொரு மகிமையும் வராததுபோலேயும் தனக்கு வந்த மகிமை வேறொருவருக்கு வந்ததுபோலேயும் தன் நீசத்தனத்தை நினைத்து அதில் அமிழ்ந்தியிருக்கிறது மகா மேலான புண்ணிய சாங்கோபாங்கமும் மிகவும் ஆழ்ந்த தாழ்ச்சியுமென்பது நிச்சயம்.

இப்பேர்ப்பட்ட தாழ்ச்சியின் மேலான அந்தஸ்துக்குச்சகலரும் வந்துசேரப் பிரயாசப்படவேண்டும் ; விசேஷமாய் பிறர் ஆத்தும ஈடேற்றத்துக்காக உழைக்க உத்தியோகமாயிருக்கிறவர்கள் மரக்காலுக்குள்ளே ஒளிந்திராமல் மலைமேல் கட்டியிருக்கிற பட்டணம்போலே சகலருடைய கண்ணுக்கும் தென்பட வேண்டியிருப்பதினாலேயும் விளக்குத்தண்டில் எரிகிற வெளிச்சம்போலே இவர்கள் எல்லாரையும் பிரகாசிக்க வேண்டியிருப்பதினாலேயும் இவர்கள் முக்கியமாய் இந்த மேலான தாழ்ச்சியின் மூன்றாம் அந்தஸ்தில் வந்து சேரவேண்டும். ஆனால் இதற்காக நல்ல அஸ்திவாரம் போடுகிறது அவசரம் ; சகலராலும் நிந்தனைப்படவேணுமென்று உருக்கமான ஆசைப்படவேண்டும் ; நம்முடைய ஒன்றுமில்லாமையை ஆழ்ந்து தியானித்து அறிந்துகொண்டு இப்படி ஆசைப்படுகிறது அவசரம். தம்மைப் பைத்தியகாரரென்று மற்றவர்கள் நினைப்பதற்காக அர்ச். பிராஞ்சீஸ்கு சேற்றை மிதித்துக்கொண்டிருந்தபோது, அவரிடத்தில் விளங்கின ஆசையிதுவே.





ஏனென்றால் அவர் தம்மை ஆழ்ந்து அறிந்திருந்ததினாலே, நிந்தனைப்பட ஆசைப்பட்டார்; தம்மை ஆழ்ந்து அறிந்திருந்ததினாலே மற்றவர்கள் தம்மைக் கனம்பண்ணித் தமது வஸ்திரத்தையும் காலையும் முத்தி செய்யும்போது, இதினிமித்தம் தம்மைக் கனமாய் எண்ணவுமில்லை, வீண் மகிமைக்கு இடம் கொடுக்கவுமில்லை; தமது நீசத்தனத்தில் உறுதியாய் நிலைகொண்டு மற்றவர்கள் தமக்கு ஒரு மகிமையும் செய்யாதது போலே தமக்கு வந்த மகிமை தமக்கல்ல, சர்வேசுரனுக்கே வந்ததென்று நிச்சயித்துக்கொண்டிருந்தார். ஆகையால் அர்ச். பிராஞ்சீஸ்கு செய்த இவ்விரு கிரிகையும் ஒன்றுக்கொன்று விரோதமென்று தோன்றினாலும், இவ்விரண்டும் ஓரே தாழ்ச்சியினால் உண்டான கிரிகைகளாகும்.

## ௩௭-ம் அதிகாரம்.

### தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தினால் உண்டாகும் வேறநேக உச்சிதமான பிரயோசனங்களின்பேரில்.

கர்த்தாவே, சகலமும் உமக்குச் சொந்தம்; உமது கையிலிருந்து நாங்கள் பெற்றுக்கொண்டதையே உமக்குச் செலுத்தினோமென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. தாவீதரசன் தேவாலயங்கட்டுகிறதற்காகச் சேகரித்திருந்த தங்கம் வெள்ளி முதலிய தளவாடங்களைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கும்போது, அவர் சொன்ன வார்த்தைகள் இதுவே. நாம் எந்தெந்த நற்கிரிகைகளைச் செய்தாலும், எப்போதும் இந்த வார்த்தைகளைச் சொல்லவேண்டும். ஏனென்றால் கர்த்தாவே, யாதொருவன் தன் பேறுபலன்களை உமக்குக் காட்டும்போது, தேவரீர் அவனுக்கு அளித்தருளின உபகாரங்களை உமக்குக் காட்டுகிறானல்லாமல் மற்றப்படியல்லவென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார்; உமது அளவிறந்த நன்மைத்தனத்தினாலேயும் உதாரத்துவத்தினாலேயுமாத்திரம் எங்கள் நற்கிரிகைகளை எங்களுக்குப் பேறுபலனாக்கினீர். நாங்கள் செய்த ஊழியத்துக்குத் தேவரீர் சம்பாவனை அளிக்கும்போது, உமது வரங்களுக்காகத்தானே சம்பாவனை அளித்து வரப்பிரசாதத்தின்மேல் வரப்பிரசாதத்தை எங்கள்பேரில் பொழியவிடுகிறீர்.

கூசையென்பவர் தன் சகோதரருக்குச் செய்ததைச் சர்வேசுரனும் நமக்குச் செய்கிறார். நமது பிழைப்புக்கு அவசரமான கோதும்பையை நமக்குக் கொடுக்கிறதுமல்லாமல் அது பெருமான பணத்தையும் நமக்குத் தந்தருளுகிறார். இதினாலல்லோ வரப்பிரசாதத்தையும் மகிமையையும் நமக்குத் தந்தருளுவாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. சகலமும் அவரிடத்திலிருந்து வருகின்றது; ஆகையால் சகல மகிமையையும் அவருக்கே செலுத்திச் சகலமும் அவரிடத்தில் திரும்பி வந்துசேரும்படி செய்யவேண்டும்.

சர்வேசுரனிடத்தில் நாம் பெற்றுக்கொண்ட உபகாரங்களுக்காக அவருக்கு உத்தம நன்றியறிந்த தோத்திரம் செய்கிறதற்குத் தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தைப்போலே உச்சிதமான வழிபாடு வேறொன்றுமில்லை. சர்வேசுரனுக்கு நன்றியறிந்திருக்க வேணுமென்று வேதாகமத்தில் வெகுவாய்ப் போதித்திருக்கிறதறிவோம். இதினாலல்லோ சர்வேசுரன் தமது பிரசைகளுக்கு யாதொரு கனமான உபகாரம் செய்தபின், அதுக்கு நன்றியறிந்த தோத்திரமாக ஒருதிருநாள் கொண்டாடவேணுமென்று கற்பிக்கிறது வழக்கம். வேறே உபகாரங்களைப் பெற்றுக்கொள்ளவேணுமானால், முன் அடைந்த உபகாரத்துக்கு மிகவும் நன்றியறிந்திருக்கிறது அவசரமென்று இதினாலே காட்டியருளினார். தாழ்ச்சியின் மூன்றும் அந்தஸ்தில் வந்து சேர்ந்தவர்கள் இவ்வித மேலான நன்றியறிதலைச் சர்வேசுரனுக்குச் செலுத்துகிறார்கள்; ஏனென்றால் நாம் ஏற்கனவே சொன்னதுபோலே, சர்வேசுரன் இவர்களுக்குச் செய்தருளுகிற வரங்களை இவர்கள் தங்களுக்குச் சொந்தமென்றெண்ணாமல் இதெல்லாத்தையும் சர்வேசுரனுக்கே ஒப்புக்கொடுத்து இதினால் வரும் மகிமையெல்லாத்தையும் அவருக்கே செலுத்திப்போடுகிறதினாலே, அவருக்கு உத்தம நன்றியறிதலைக் காண்பிக்கிறார்கள். இதுவே மெய்யான நன்றியறிதல்; கர்த்தாவே, உம்முடைய உபகாரங்களுக்காக நன்றியறிந்த தோத்திரம் பண்ணுகிறேனென்று வாயினாலே மாத்திரம் சொல்லுகிறது மெய்யான நன்றியறிதலல்ல; வாயினாலே அவருக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ண வேண்டியிருந்தாலும், வாயினாலே மாத்திரம் சொன்னால், இது நன்றியறிந்த தோத்திரமல்ல, உபசார வார்த்தையாகும். ஆகையால் நாம் சர்வேசுரனுக்கு உபசார வார்த்தைமாத்திரம் சொல்லாமல் மெய்யான நன்றியறிந்த தோத்திரம் பண்ணி வாயினாலும் மனதினாலும் அவரை மெய்யாகவே துதிக்க வேணுமானால், ந



ம்மிடத்திலுள்ள நன்மையெல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிற தென்று சத்தியமாக ஒத்துக் கொள்ளவேண்டும்; சகல மகிமையையும் அவருக்கே சாட்டி நமக்கு ஒன்றையும் எடுத்துக்கொள்ளாமல் சகலத்தையும் அவருக்கே கொடுத்துவிட வேண்டும். ஆகையால் எந்த மகிமையும் நமக்குச் சொந்தமல்லவென்று நாம் நிச்சயித்துக்கொண்டால், அதற்குச் சொந்தக்காரராகிய சர்வேசுரனுக்கே அதை முழுதும் செலுத்தினாற்போலாகும். இயேசுநாதர் இச்சத்தியத்தை நமக்குப் போதித்திருக்கிறார். அதெப்படியென்றால், அவர் பத்துக் குஷ்டரோகிகளைக் குணப்படுத்தினபின் அவர்களில் சமாரித்தனாயிருந்த ஒருவன் மாத்திரம் அவருக்கு நன்றியறிந்த தோத்திரம் செய்ய அவரிடத்தில் திரும்பி வந்தான். அப்போது அந்நியனாகிய இவன் மாத்திரம் திரும்பிவந்து சர்வேசுரனுக்குத் தோத்திரம் பண்ணினானென்று இரட்சகர் திருவுளம்பற்றினார். வேதாகமத்தில் சர்வேசுரன் இஸ்ராயேல் சனங்களுக்குச் சொல்லிக்கொடுத்த புத்தியும் இதுவே. ஏனென்றால் அவர் மோயீசென்பவர் வாயாலே அவர்களுக்குச் சொல்லுவித்ததாவது: உங்கள் கர்த்தரான சர்வேசுரனை ஒருகாலும் மறந்துபோகாமல் எச்சரிக்கையாயிருங்கள். நீங்கள் சகலவித செல்வமும் சுகித்து அநுபவிக்கும்போது, மனதில் கர்வங்கொண்டு உங்களை எஜிப்த்து தேசத்திலிருந்து மீட்டிரக்ஷித்த உங்கள் கர்த்தரான சர்வேசுரனை மறந்துபோகாமல் எச்சரிக்கையாயிருங்கள். என் வல்லபமே என் கைப்பிலனே எல்லாத்தையும் செய்து முடித்ததென்று சொல்லாமல் உங்கள் கர்த்தரான சர்வேசுரனை நினைவுகூர்ந்து உங்கள் முன்னோர்களுக்கு அவர் அளித்தருளின வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுவதற்கான பலத்தை அவரே உங்களுக்குத் தந்தருளினாரென்று நினைத்துக்கொள்ளுங்களென்றார். சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொண்ட உபகாரங்களைத் தனதென்று எண்ணுகிறவன் சர்வேசுரனை மறந்துபோகிறான்; அவருக்கு மகா நன்றியறியாத துரோகம் பண்ணுகிறான். நான் பெற்றுக்கொண்ட உபகாரங்களை அவருடைய உதாரத்துவத்தினாலே அடைந்தேனென்று அங்கீகரித்துக் கொள்ளுகிறவன் அவருக்கு மெய்யான நன்றியறிதலைச் செலுத்துகிறான். இந்தப் புகழ்ச்சியாகிற பலியே நம்மை மகிமைப்படுத்துமென்று சர்வேசுரன் திருவுளம்பற்றியிருக்கிறார். சர்வ சீவிகரும் அரூபிகருமான இராசாவாகிய சர்வேசுரனொருவருக்கே சகல தோத்திரமும் மகிமையும் உண்டாகக் கடவதென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினபோது, சர்வேசுரனுக்கு அவர் செலுத்தின நன்றியறிந்த தோத்திரம் இதுவே.

இன்னம் இதிலே வேறொரு பிரயோசனமுமுண்டு. மெய்யான தாழ்ச்சியுள்ளவன் சர்வேசுரனிடத்தில் எவ்வளவு வரங்களைப் பெற்றுக்கொண்டிருந்தாலும், அதினாலே மனிதர் அவனை எவ்வளவு சங்கித்தாலும் இதினிமித்தம் அவன் தன்னைக் கனமாயெண்ணாமல் தன்னிடத்தில் ஒன்றுமில்லாததுபோலே தன் நீசத்தனத்தை நினைவுகூர்ந்து அதிலே ஸ்திரமாய் நிலைத்திருப்பான்: ஏனென்றால் தனக்குரியது ஏதுவென்றும் தனக்குச் சொந்தமல்லாதது எதுவென்றும் அவன் நன்றாய்ப் பகுத்தறிந்துகொண்டு ஒவ்வொருவருக்கும் அவரவருக்குச் சொந்தமானதைக் கொடுத்துவிடுவான். ஆகையால் சர்வேசுரனிடத்தில் தான் பெற்றுக்கொண்ட உபகாரங்கள் தனக்குச் சொந்தமான நன்மையல்லவென்றும் இரவலாகத் தன்னிடத்தில் இருக்கிற பொருளென்றும் எண்ணி எப்போதும் தன் நீசத்தனத்தைக் கண்முன்பாக வைத்துக்கொண்டு சர்வேசுரன் இடைவிடாமல் தன்னைத் தாங்கிக்கொண்டிருக்கிற கையை வாங்கிக்கொண்டு ஒரு க்ஷணமே தன்னைக் கைவிட்டால், தான் எவ்வளவு நிர்ப்பாக்கியனாய்ப்போவேனென்று இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருப்பான். இதினாலே அவன் எவ்வளவு தேவ வரங்களால் பூரித்திருப்பானோ அவ்வளவு சர்வேசுரனுக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்திக்கொண்டிருப்பான். அர்ச். தொரோத்தேயார் சொல்லுமாப்போலே, மரத்தில் வெகு பழம் பழுத்திருந்தால், கொம்பு வெகுவாய் வளைந்து சிலவிசை ஒடிந்துவிழும்; பழமில்லாத கொம்பு வளையாமல் நேராய் உயர்ந்திருக்கும். கருதிலே வெகு மணிகட்டியிருந்தால், அது வளைந்து ஒடிந்துபோகிறதுபோலே யிருக்கும்; ஆனால் கருது நேராய் நின்றால், அதிலே மணி நன்றாய்க்கட்டவில்லையென்று அடையாளமாகும். ஞான நன்மைகளின் மட்டிலும் நடக்கிறதிதுவே. ஞான நன்மைகளை அடையாதவர்கள் எப்போதும் தலை உயர்த்தி ஆங்காரிப்பார்கள்; ஆனால் தேவ வரப்பிரசாதமும் நற்கிரிகைகளும் திரளாய் அடைந்திருக்கிற மகாத்துமாக்கள் எப்போதும் தாழ்ச்சியில் அமிழ்ந்தியிருப்பார்கள். சர்வேசுரனிடத்தில் தாங்கள் பெற்றுக்கொண்ட உபகாரங்களைப்பற்றித் தங்களை அதிகமாய்த் தாழ்த்தி அதிக தேவ பயம் கொள்ளுவார்கள். அர்ச். கிரெகோரியார் சொல்லுமாப்போலே, யாதொருவன் வெகு பணம் கடன்வாங்கும்போது, அந்தப் பணம் தன் கையிலிருக்கிறதைக் கண்டு சந்தோஷப்பட்டாலும், இது கடன்தானே, இதைச் செலுத்த வேணுமே; குறித்த கெடுவிலே இதைச் செலுத்தக்கூடுமோ இல்லையோவென்று நினைக்கும்போது, மேற்சொன்ன சந்தோ






ஷங் குலைந்துபோகும். இவ்வண்ணமே தாழ்ச்சியுள்ளவன் சர்வேசுர
னிடத்தில எவ்வளவு வரங்களைப் பெற்றுக்கொள்ளுகிருனே அவ்வளவு
நான் சர்வேசுரனுக்குக் கடனாளி, அவருக்கு அதிக ஊழியம் செய்ய எ
ன்பேரில் கடன் உண்டென்று நிச்சயித்துக்கொள்ளுவான். நான் பெற்று
க்கொண்ட கனமான வரப்பிரசாதங்களுக்கும் உபகாரங்களுக்கும் ஆ
ன ஊழியமும் நன்றியறிந்த தோத்திரமும் சர்வேசுரனுக்குச் செலுத்
தவில்லை; என்னையல்லாமல் வேறொருவனுக்குச் சர்வேசுரன் இந்த உ
பகாரங்களைச் செய்திருந்தால், அவன் அதிக ஊழியஞ் செய்திருப்பா
னென்று நினைத்து நடுங்குவான். மற்றெவரையும்விடத் தேவதாசரை
அதிக தாழ்ச்சியுள்ளவர்களாக்குகிற சத்தியம் இதுவே; ஏனென்றால்
தாங்கள் கட்டிக்கொள்ளுகிற பாவத்துக்குமல்லாமல் தாங்கள் பெற்று
க்கொள்ளுகிற உபகாரங்களுக்காக முதலாய்த் தங்களிடத்தில் சர்வேசு
ரன் கணக்குக் கேட்பாரென்று அவர்களுக்குத் தெரியும். இதினலல்
லோ அதிகம் வாங்கினவனிடத்திலே அதிக கணக்குக் கேட்பார்கள் ;
அதிக ஈடுபெற்றுக்கொண்டவனிடத்திலே அதுக்குத் தக்கது அதிக க
ணக்குக் கேட்பார்களென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினர். அர்ச்.
மக்காரியார் சொல்லுமாப்போலே, தாழ்ச்சியுள்ளவன் தேவ வரங்களை
ச் சர்வேசுரன் தன்னிடத்தில் ஈடாக வைத்திருக்கிறரென்றும் தேவ
பொக்கிஷங்களைத் தன்னிடத்தில் இரவலாகக் கொடுத்திருக்கிறரென்
றும் நிச்சயித்துக்கொண்டு அதினலே வீண்மகிமை கொள்ளாமல் அ
தற்காகத் தான் கணக்குச் சொல்லவேண்டிய காலம் வருமென்றும் த
ன் குற்றத்தினலே அதைப் போக்கடித்தால், அதற்கு உத்தரவாதம் ப
ண்ண வேணுமென்றும் ஓயாமல் பயந்து நடுங்கிக்கொண்டிருப்பான்.

தாழ்ச்சியாயிருக்கிறதினலே வேறொரு பிரயோசனமுமுண்டு.
அதென்னவென்றால், புறத்தியார் என்னென்ன பாவத்தில் விழுகிற
தைத் தாழ்ச்சியுள்ளவன் கண்டாலும்; அதினலே அவர்களைப் பிறக்க
ணியாமலும் ஆங்காரியாமலும் அதினிமித்தம் தன்னைக் கனமாயெண்
ணமலும் இருப்பான். இவன் பாவத்தில் உற்பவித்துப் பிறந்ததினலே,
பாவத்தில் விழுந்தான் ; நானும் பாவத்தில் உற்பவித்துப் பிறந்திருக்கி
றதினலே, இவனைப்போலே பாவத்தில் விழலாமென்று எண்ணித் தன்
னை அதிகமாய்த் தாழ்த்திக்கொள்ளுவான். சர்வேசுரன் தமது கிருபா
கடாக்ஷத்தினலே இடைவிடாமல் நம்மைத் தமது கையால் தாங்கிக்
கொண்டிராவிட்டால், வேறொருவன் செய்கிற பாவத்தை நாமும் கட்
டிக்கொள்ளுவோமென்பது தப்பாதென்று அர்ச். அகுஸ்தீன் அருளிச்.

செய்தார். ஆகையால் யாதொருவன் பாவத்தில் விழுந்து கெட்டானென்று கேட்டமாத்திரத்தில், பூர்வீக வனவாசியொருவர் தாரை தாரையாய்க் கண்ணீர் சிந்தி அழுது இன்றைக்கு அவன் விழுந்தான், நாளைக்கு நான் விழலாம்; அவனைப்போலே நானும் மனிதன்தான்; அவனுடைய பலவீனம் என்னிடத்திலுமுண்டு; சர்வேசுரனுடைய விசேஷ வரப்பிரசாதம் என்னைத் தாங்கிக்கொண்டிருக்கிறதினாலே, நான் இன்னம் விழவில்லையென்பான். ஒரு குருடன், செவிடன், நொண்டி முதலிய யாதொரு ஊனமுள்ளவனை நாம் கண்டால், அப்படிப்பட்ட ஊனம் நம்மிடத்தில் இல்லாததினாலே, அதற்காக நாம் சர்வேசுரனுக்கு நன்றியறிந்திருக்க வேணுமல்லோ? இவ்வண்ணமே சர்வேசுரன் தமது அளவில்லாத கிருபாகடாக்ஷத்தினாலே நம்மை க்ஷணத்துக்கு க்ஷணம் தாங்கிக்கொண்டிராவிட்டால், சகல மனுஷரும் கட்டிக்கொள்ளுகிற தோஷதுரோகங்களை நாமும் கட்டிக்கொள்ளலாமென்கிறதினாலே, மற்றவர்கள் பாவஞ்செய்கிறதைக் காணும்போதெல்லாம், நாமும் அதைச் செய்யாததினாலே சர்வேசுரனுக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ணவேண்டும். இதினாலே தேவநேசர் புறத்தியாரை ஒருகாலும் நிந்தியாமலும் அவர்களுடைய பாவத்தினிமித்தம் அவர்களைக் கோபித்துக்கொள்ளாமலும் தாழ்ச்சியாயிருப்பார்கள். ஏனென்றால் மெய்யான புண்ணியம் இரக்கம் நிறைந்திருக்கும்; பொய்யான புண்ணியந்தான் மேட்டிமைப்படுமென்று அர்ச். கிரேகோரியார் வசனித்தார். ஆகையால் பிறருடைய குற்றத்தினிமித்தம் எப்போதும் கோபங்கொள்ளுகிறவர்கள், அர்ச். சின்னப்பர் சொல்லுமாப்போலே, தாங்களும் சோதனைக்குட்படாதபடிக்குத் தாங்களே எச்சரிக்கையாயிருக்கவேண்டும். பிறரை வெகு கண்டிப்பாய்த் தீர்வையிடுகிறவர்களுடைய ஆங்காரத்துக்கு ஆக்கினையாக இவர்களும் அந்தக் குற்றத்திலேயே விழுந்து மனுஷருடைய பலவீனம் எவ்வளவென்று இவர்களே அநுபவசித்தியினாலே அறிந்துகொள்ளும்பொருட்டுச் சர்வேசுரன் இவர்களைக் கைவிடுகிறது வழக்கம். பூர்வீக வனவாசியொருவர் மற்றவர்கள்பேரில் மூன்று காரியத்திலே இரக்கமில்லாமல் கெடுதியான எண்ணங்கொண்டதினாலே, அந்த மூன்று குற்றத்திலே நாமும் விழுந்தோமென்று சொல்லியிருக்கிறார். இதினாலே நாமும் மனுஷரென்று அறிந்துகொண்டு ஒருவர்பேரிலும் கெடுதியான எண்ணங்கொள்ளாமலும் ஒருவரையும் நிந்தியாமலும் இருக்கப்பழகவேணுமென்று சர்வேசுரன் சித்தமாயிருக்கிறதாகத் தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது.



௩அ-ம்

சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவ
செய்தருளுகிறொன்
மேலாக உ
சொ

சலோமோனென்பவர் ஞ
த்தோடு எனக்குச் சகல நன்மை
ளைத் தாழ்ச்சியைக் குறித்துஞ்
ன்மையும் வருமென்று எண்ணி
எங்கேயிருக்கிறதோ அங்கே ஞ
ன் வசனித்தார். சர்வேசுரன் சி
ளுவாரென்று தாவீதென்னும் தீ
து, தாழ்ச்சியினாலே சின்னவர்
தைக்கொடுத்தருளுவாரென்று
ழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்
தச் சத்தியத்தைத் துலக்கமாய்
யான மனத்தாழ்ச்சியுள்ளவர்க
யோரென்றும் மனத்தரித்திரமு
க்கு வெகு வரப்பிரசாதங்களையு
வோமென்று சர்வேசுரன் வாக்
பேரிலும் மனஸ்தாபப்படுகிறவ
ட்டு நடுங்குகிறவர்கள் பேரிலும்
ல் வேறே யார்பேரிலே அ
யாசென்னும் தீர்க்கதரிசி வாயா
சகல நன்மைகளாலும் வரப்ப
அவர்கள்பேரில் தமது க
களை விரோதித்துத் தாழ்ச்சியு



# ௩௮-ம் அதிகாரம்.

சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவர்களுக்கு எவ்வளவு உபகாரங்களைச் செய்தருளுகிறாரென்றும் ஏன் அவர்களை வெகு மேலாக உயர்த்துகிறாரென்றும் சொல்லுவது.

சலோமோனென்பவர் ஞானத்தைக்குறித்துப் பேசும்போது, அத்தோடு எனக்குச் சகல நன்மையும் வந்ததென்றார்; இந்த வார்த்தைகளைத் தாழ்ச்சியைக் குறித்துஞ் சொல்லலாம்; தாழ்ச்சியோடு சகல நன்மையும் வருமென்று எண்ணிக்கொள்ளலாம்; ஏனென்றால் தாழ்ச்சி எங்கேயிருக்கிறதோ அங்கே ஞானமும்; இருக்கிறதென்று சலோமோன் வசனித்தார். சர்வேசுரன் சிறியோருக்கு ஞானத்தைக் கொடுத்தருளுவாரென்று தாவீதென்னும் தீர்க்கதரிசி அருளிச்செய்தார். அதாவது, தாழ்ச்சியினாலே சின்னவர்களாகிறவர்களுக்குக் கர்த்தர் ஞானத்தைக்கொடுத்தருளுவாரென்று அர்த்தமாகும். ஆனால் இதுவும் தவிர பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் அநேக இடங்களிலே இந்தச் சத்தியத்தைத் துலக்கமாய்ப் போதித்திருக்கிறதறிவோம். மெய்யான மனத்தாழ்ச்சியுள்ளவர்களைத் தாழ்ச்சியுள்ளவர்களென்றும் சிறியோரென்றும் மனத்தரித்திரமுள்ளவர்களென்றும் சொல்லி அவர்களுக்கு வெகு வரப்பிரசாதங்களையும் திரளான நன்மைகளையும் தந்தருளுவோமென்று சர்வேசுரன் வாக்குத்தத்தம் செய்திருக்கிறார்: ஏழைகள் பேரிலும் மனஸ்தாபப்படுகிறவர்கள் பேரிலும் நமது கற்பனையைக் கேட்டு நடுங்குகிறவர்கள் பேரிலும் நமது கண்ணைத் திருப்புவோமல்லாமல் வேறே யார்பேரிலே அதைத் திருப்புவோமென்று கர்த்தர் இசாயியாசென்னும் தீர்க்கதரிசி வாயாலே திருவுளம்பற்றினார். அவர்களைச் சகல நன்மைகளாலும் வரப்பிரசாதங்களாலும் பூரிப்பிக்கும்பொருட்டு அவர்கள்பேரில் தமது கண்ணைத் திருப்புவார். சர்வேசுரன் ஆங்காரிகளை விரோதித்துத் தாழ்ச்சியுள்ளவர்களுக்குத் தமது வரப்பிரசாதத்



தைக் கொடுப்பாரென்று அர்ச். இராயப்பரும் அர்ச். இயாகப்பரும் திருவுளம்பற்றினார்கள். அர்ச். தேவமாதாவும் இச்சத்தியத்தை நமக்குப் போதித்திருக்கிறாள். இதினாலல்லோ கர்த்தர் வலியவர்களைத் தங்கள் ஆசனத்தில் நின்று தள்ளித் தாழ்ச்சியுள்ளவர்களை உயர்த்தினார்; பசித்திருந்தவர்களைச் சகல நன்மைகளால் நிரப்பித் தனமுடையவர்களை வெறுமையுள்ளவர்களாய் விட்டுப்போனாரென்றாள். கர்த்தர் தாழ்ச்சியுள்ள சனங்களைக் காப்பாற்றி ஆங்காரிகளுடைய கண்ணைத் தாழ்த்துவாரென்று இராச தீர்க்கதரிசி வசனித்தார். கடைசியாய்த் தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான், தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவானென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். கணவாயில் வெள்ளம் பாய்கிறதுபோலே, தாழ்ச்சியுள்ளவர்கள் மேலே தேவ வரங்களாகிற மழை திரளாய்ப் பொழியும்; வெள்ளம் கணவாய்களைச் செழிப்பாக்குகிறதுபோலே, தேவ வரங்களின் திரட்சி மற்றவர்களைவிடத் தாழ்ச்சியுள்ளவர்களைத் தனவான்களாக்கும். தாழ்ச்சி சர்வேசுரனைத் தன் பாரிசமாயிழுத்துக்கொள்ளும். சர்வேசுரன் உயர்ந்தவர்; நீ தாழ்ந்தால் அவர் உன்னிடத்தில் இறங்குவார்; நீ உயர்ந்தால், அவர் உன்னை விட்டு நீங்குவாரென்று அர்ச். அகுஸ்தின் வசனித்தார். இதற்குக் காரணமென்ன? காரணமேதென்றால், சர்வேசுரன் மேலாக உயர்ந்தவர்; அவர் தாழ்ந்தவைகளைக் கிருபைக் கண்கொண்டு பார்க்கிறாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அதாவது, தாழ்ச்சியுள்ளவர்களை அவர் கிருபாகடாக்ஷமாய் நோக்கி அவர்களைச் சகல நன்மைகளாலும் நிரப்புவார்; ஆனால் உயர்ந்தவைகளை அவர் தூரத்தில் நின்று பார்க்கிறாரென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது. அதாவது, ஆங்காரிகளை அவர் தூரத்தில் நின்று பார்க்கிறார்; வெகு தூரத்திலிருந்து பார்க்கிற காரியம் இன்னதென்று மனிதருக்குத் தெரியாததுபோலே, ஆங்காரிகளைச் சர்வேசுரனுக்குத் தெரியவுமாட்டாது; அவர்களுக்குத் தமது வரப்பிரசாதங்களை அளித்தருளவுமாட்டார். இதினாலல்லோ உங்களை நமக்குத் தெரியாதென்று மெய்யாகவே சொல்லுகிறோமென்று இயேசுநாதர் திருவுளம்பற்றினார். இளகின மெழுகிலே எவ்வித ரூபத்தையும் பதிக்கலாமென்கிறதுபோலே, தாழ்ச்சியுள்ளவன் ஆத்துமத்திலே சகலவித தேவ வரப்பிரசாதங்களும் பதிகிறதற்கு இடமுண்டென்று அர்ச். பொனவெந்தூர் வசனித்தார். சூசையென்பவர் தமது சகோதரருக்குச் செய்த விருந்திலே எல்லாருக்கும் சிறியவனுக்குப்பெரும் பங்கு அகப்பட்டதல்லோ?





ஆனால் சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவர்களை உயர்த்தி அவர்களுக்கு அத்தனை உச்சிதமான உபகாரங்களைச் செய்கிறதற்குக் காரணமென்ன? இதற்குக் காரணமென்னவென்று அறியவேணுமோ? கேள்: அவர்களுக்கு அவர் செய்தருளுகிற நன்மையெல்லாம் அவரிடத்தில் திரும்பி வருகிறதினாலே, அவர்களுக்கு மேன்மேலும் உபகாரங்களைச் செய்ய அவர் தாற்பரியப்படுகிறார்; ஏனென்றால் தாழ்ச்சியுள்ளவர்கள் தாங்கள் பெற்றுக்கொள்ளுகிற வரங்களில் ஒன்றையும் தங்களுக்கு எடுத்துக்கொள்ளாமல் சகலத்தையும் சர்வேசுரனுக்கே ஒப்புக்கொடுத்துத் தேவவல்லமை ஒன்றே பெரிதல்லாமல் மற்றதெல்லாம் ஒன்றுமில்லையென்று அங்கீகரித்துக்கொண்டு சகல மகிமை தோத்திரத்தையும் அவருக்கே செலுத்திவிடுவார்கள். அவர்களுடைய மனதை நன்றாய் அறிந்திருக்கிற சர்வேசுரன் தமது வரப்பிரசாதமாகிற பொக்கிஷங்களைப் பயமில்லாமல் அவர்களிடத்தில் வைக்கலாமென்றும் அதுகளில் எதையாகிலும் அவர்கள் தங்களுக்கு எடுத்துக்கொண்டு மோசம்பண்ணுவார்களென்று பயப்படுகிறதற்கு இடமில்லையென்றும் அவர் நன்றாய் அறிந்திருக்கிறதினாலே அவர்களுக்கு ஏராளமான வரங்களை அளித்தருளுவார். ஆகையால் அவர்களுக்கு அவர் செய்கிற வரப்பிரசாதங்களினால் வரும் மகிமையெல்லாத்தையும் அவர்கள் அவருக்குச் செலுத்திவிடுகிறதினாலே அவர்களுக்குச் சர்வேசுரன் யாதோர் நன்மைசெய்யும்போது, தமக்கே செய்துகொள்ளுகிறாரென்று சொல்லவேண்டும். அன்றியும் கனவான்கள் சிலவிசை நீசரிடத்தில் தங்கள் பெருமையைக் காட்டுவதற்காக அவர்களை உயர்த்தி அவர்களுக்கு வெகு உபகாரங்களைச் செய்கிறதைக் கண்டிருக்கிறோமே; நமதுமட்டிலும் சர்வேசுரன் நடக்கும் விதம்இதுவே. இதினாலல்லோ தேவ வரப்பிரசாதமாகிற பொக்கிஷத்தை மண்பாண்டங்களில் வைத்திருக்கிறோம்; இதினாலே நமது மேன்மை தேவவல்லபத்துக்குச் செல்லுமேயல்லாமல் நமக்குச் செல்லாதென்று அர்ச். சின்னப்பர் அருளிச்செய்தார். ஆகையால் சர்வேசுரன் தாழ்ச்சியுள்ளவர்களை உயர்த்தி அவர்களுக்கு வெகு உபகாரங்களைச் செய்கிறதற்குக் காரணம் இதுவே. சகலமும் தங்களுக்குரியதென்று எண்ணித் தாங்கள் செய்கிற நற்கிரிகைகளும் புண்ணியமும் தங்கள் பிரயாசத்தால் ஆனதென்று வீண் மகிமைகொண்டு சகலத்துக்குமுடையவராகிய சர்வேசுரனுடைய மகிமையைத் திருடிக்கொள்ளுகிற ஆங்காரிகளைச் சர்வேசுரன் கைவிடுவதற்குக் காரணம் இதுவே. நாம் செபத்தியானம் பண்ணும்போது, தேவ பத்தி உருக்கம் நம்மிடத்தில் அற்பமாகிலும் எழும்பினால், செ





பத்தியானநேரத்திலே நாம் ஒரு துளி இரு துளி கண்ணீர் சிந்தினால், உடனே நாம் தியான வரம் அடைந்தாயிற்றென்றும் ஞானத்திலே வெகுவாய் வர்த்தித்துப் போனோமென்றும் நினைக்கிறோம். இதினிமித்தம் மற்றவர்களைவிட நம்மைக் கனமாய் எண்ணி அவர்கள் புண்ணியத்திலே நமக்கு வெகு தூரமாயிருக்கிறார்களென்று எண்ணிக்கொள்ளுகிறோமே. இதினாலேதான் நாம் நன்மையைத் தின்மையாகவும் ஞான அமிர்தத்தை நஞ்சாகவுமாக்கிக்கொண்டு தேவ வரங்களும் உபகாரங்களும் நமது ஆங்காரத்தினாலே நமக்குச் சாபம் உண்டாவதற்குக் காரணமாயிராதபடிக்குச் சில விசை சர்வேசுரன் வேறே வரப்பிரசாதங்களை நமக்கு அளிக்காததுமன்றி முன் கொடுத்த வரப்பிரசாதங்களிலும் சிலதை எடுத்துக்கொள்ளுவார். வெகு பலவீனப்பட்டவனுக்கு எவ்வளவு நல்ல சாப்பாட்டையும் கொஞ்சமாத்திரம் கொடுக்கிறது வழக்கம்; ஏனென்றால் வெகு சாப்பாட்டைச் செரிப்பதற்கு அவனிடத்தில் பெலனில்லை; வெகு சாப்பாடு அவனுக்குக் கொடுத்தால், அதுவெல்லாம் கெட்டுப் பித்தத்தையும் சிலேஷ்மத்தையும் அவனிடத்தில் பிறப்பிக்கும். வேதாகமத்தில் சொல்லியிருக்கும் விதவையின் குடத்திலிருந்து எண்ணெய் இடைவிடாமல் வடிந்து அந்த வீட்டிலுள்ள குடங்களெல்லாம் நிறைந்துபோனது; ஆனால் குடங்களெல்லாம் நிறைந்தபின், எண்ணெயும் வடியவில்லை. நமதுமட்டிலும் நடக்கிறவிதமிதுவே. தேவ இரக்கத்துக்கு மட்டுமில்லை, எல்லையுமில்லை. இதினாலல்லோ சர்வேசுரனுடைய கை குறுகிப்போகவில்லையென்று வேதாகமத்தில் சொல்லியிருக்கின்றது. சர்வேசுரன் மாறுகிறதுமில்லை, மாறவுங்கூடாது; அவர் எப்போதும் ஒரே அந்தஸ்தில் நிலைத்திருக்கிறார். நாம் அவரிடத்தில் வரப்பிரசாதங்களைப் பெற்றுக்கொள்ளுகிறதற்கு ஆசைப்படுகிறதைவிட அதுகளை நமக்கு அளித்தருளுகிறதற்கு அவர் அதிக ஆசைப்படுகிறார். அவருடைய வரங்கள் நமக்கு வராவிட்டால், அதற்கு நம்முடைய குற்றமே காரணம். நாம் நமது பெலத்தின்பேரில் நம்பிக்கை வைத்து நம்மைக் கனமாய் எண்ணுகிறதினாலே, தேவ வரங்களாகிற எண்ணெயைக்கொள்ளுவதற்கான பாண்டம் நம்மிடத்தில் ஒன்றுமில்லை. தாழ்ச்சியும் தனது பலவீனத்தையும் நீசத்தனத்தையும் அறிந்துகொள்ளுகிற அறிவுமே தேவ வரங்களைக் கைப்பற்றுவதற்கான பாண்டங்களாகும். தன் பலவீனத்தை நம்பாதவனுக்குச் சர்வேசுரன் தமது வரங்களைக் கைநிறையக் கொடுத்தருளுவார். இதினாலல்லோ சர்வேசுரனுக்கு முன்பாக உன்னைத் தாழ்த்து; அவர்





கையிலிருந்து சகலமும் வருமென்று காத்திருவென்று வேதாகமத்தி
ல் சொல்லியிருக்கின்றது.

———(:o:)———

## ௩௯ம்- அதிகாரம்.

நமது புண்ணியத்தில் குறைவாயிருக்கிறதெல்லாத்தையும
நிவர்த்திபண்ணிச் சர்வேசுரன் நம்மைத் தாழ்த்தி
தெண்டியாதபடிக்குத் தாழ்ச்சியாயிருக்கிறது
எவ்வளவு அவசரமென்று சொல்லுவது.

**தா**ழ்ச்சியைத் தவிர வேறே எதிலேயாகிலும் நம்பிக்கை வைக்கி றவன் பைத்தியகாரன் ; ஏனென்றால் சகோதரரே, நாமெல்லோரும் அநேகாநேக குற்றஞ் செய்திருக்கிறோம் ; இதினாலே சர்வேசுரனிடத்தி ல் ஒரு உபகாரத்தையும் அடைவதற்கு அபாத்திரவான்களானோமென் று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். யாதொருவன் சர்வேசுரனோடு கண க்குத் தீர்க்க எத்தனித்தால், அவர் அவன்பேரில் சாட்டுகிற ஆயிரம் கு ற்றத்துக்கு அவன் ஒரு மறுமொழியும் சொல்லக் கடைப்பட்டவனல் லவென்று யோபென்பவர் வசனித்தார். இதிப்படியிருக்க, நாம் செய்ய வேண்டியதென்ன ? முழு இருதயத்தோடு தாழ்ச்சியாகிற பரிகாரத் தைத் தேடி நமக்குக் குறைவாயிருக்கிறதெல்லாத்தையும் தாழ்ச்சி யைக்கொண்டு நிவர்த்தி பண்ணவேணுமென்று அர்ச். பெர்நர்துஸ் வச னித்தார். இது மிகவும் முக்கியமான முயற்சியாயிருக்கிறதினாலே, இ தைப் பலவிடங்களில் இந்த அர்ச்சியசிஷ்டவர் படித்துப் படித்துப் போதித்திருக்கிறார். உன்னிடத்தில் அத்தும சுத்தமில்லாவிட்டால், இந்தக் குறையைத் தாழ்ச்சியைக் கொண்டு நிவர்த்திபண்ணிக்கொள் ; உன்னிடத்தில் தேவ பத்தி உருக்கமில்லாவிட்டால், இது மெய்தானெ ன்று தாழ்ச்சியோடு அங்கீகரித்துக்கொள். இதுவே இதற்கான பரிகா ரமாகும். அர்ச். தொரோத்தேயார் சொல்லுமாப்போலே, அருளப்பரெ ன்னும் மடாதிபதி இந்த ரகசியத்தை அடிக்கடி போதித்துக்கொண்டு வருவார். நமதாத்தும ஈடேற்றத்தை அடையும்பொருட்டு நம்மை நா

மே தாழ்த்திக்கொள்ளக் கடவோம்; நமது பலவீனத்தினிமித்தம் வேலைசெய்யக் கூடாவிட்டால், நம்மைத் தாழ்த்திக்கொள்ளுகிறதே நமக்கு வேலையாயிருக்கக் கடவதென்றார். இப்படி நடந்தால், வெகு வேலைசெய்கிறவர்களைப்போலே நாமும் புண்ணியத்திலே வர்த்திப்போமென்பதற்குச் சந்தேகமில்லை. நீ வெகு காலமாய்ப்பாவத்தில் புரண்டு கிடந்தபின், அதற்காக அருந்தவம் செய்வதற்கான பெலனும் சௌக்கியமும் உன்னிடத்தில் இல்லாவிட்டால, தாழ்ச்சியின் பாதையிலே நட; நீ போகவேண்டிய இடத்துக்கு உன்னைக் கூட்டிக்கொண்டு போவதற்கு இதைவிட நிச்சயமான பாதை ஒன்றுமில்லை நீ செபத்தியானம் பண்ணக் கூடாவிட்டால், இது உன்னாலே கூடாததினாலே வெட்கப்பட்டுத் தாழ்ச்சி முயற்சி செய்துகொள்; மேலான அலுவல்செய்ய உன்னிடத்தில் சாமர்த்தியமில்லாவிட்டால், இதை நினைத்துத் தாழ்ச்சியாயிரு. இதுவே உன்னிடத்தில் குறைவாயிருக்கிறதையெல்லாம் நிவர்த்திபண்ணுகிறதற்கான பரிகாரமாகும்.

இங்கே சர்வேசுரன் நம்மிடத்தில் கேட்கிறது எவ்வளவு அற்பக் காரியமென்று யோசித்துப் பார்க்கக் கடவோம். நாம் எப்படியிருக்கிறோமோ அப்படிப்பட்டவர்கள்தானென்று அங்கிகரித்துக்கொண்டு நமது பலவீனத்துக்குத் தகுந்த எண்ணமுற்றிருக்க வேணுமென்று சித்தமாயிருக்கிறார். நாம் கடின தவம் புரிய வேணுமென்றும் மகா மேலான தியானயோகஞ் செய்ய வேணுமென்றும் அவர் சித்தமாயிருந்தால், அதற்கு எங்களிடத்தில் பெலனில்லையென்றும் எங்களிடத்தில் சாமர்த்தியம் கிடையாதென்றும் போக்குச் சொல்லலாமாக்கும். ஆனால் நம்மை நாமே தாழ்த்துகிறதற்கு ஏதாகிலும் விக்கினமுண்டோ? இதற்குச் சரீரப் பெலனும் புத்திசாமர்த்தியமும் அவசரமில்லையே; இதை வேணுமென்று விரும்பினாலே போதுமென்று அர்ச். பெர்நர்துஸ் வசனித்தார். இது சகலருக்கும் எளிதான முயற்சி. இதினாலல்லோ நம்மைத் தாழ்த்துவதற்கான காரணம் நமக்குள்ளே யிருக்கிறதென்று மிக்கேயாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். ஆகையால் நமக்குப் புண்ணிய சாங்கோபாங்கத்தில் குறைவாயிருக்கிறதெல்லாத்தையும் நிவர்த்தி பண்ணிக்கொள்ளுகிறதற்காக நம்மை நாமே தாழ்த்திக்கொள்ளக் கடவோம். இப்படித் தாழ்த்திக்கொண்டால், தேவ கிருபாகடாக்ஷம் நம்மிடத்தில் நிரந்தரம் நிலைக்கொள்ளும். நீ ஞான ஆஸ்தியற்றவன், நீ ஞானத் தரித்திரனென்று வைத்துக்கொள்ளுவோம். தாழ்ச்சியாயிரு;





இதுவே சர்வேசுரனுக்குப் போதும். ஆனால் தரித்திரமும் அங்கார அ
கந்தையும் யாதாமொருவனிடத்தில் இருந்தால், இவனைச் சர்வேசுரன்
பொறுக்கமாட்டார். ஞானியானவர் சொல்லுமாப்போலே, சர்வேசுரன்
அருவருக்கிற மூன்று காரியங்களில் ஆங்காரமுள்ள எளிமையை அருவ
ருக்கிறதே முதற்காரியமாகும். உலோகவாசிகளும் இப்பேர்ப்பட்டவ
னை அருவருத்துத் தள்ளுவார்கள்.

நம்மைத் தாழ்ச்சியுள்ளவர்களாக்குவதற்கு நாம் இப்போது சொன்
னதெல்லாம் பற்றாதேபோனால், நம்மைச் சர்வேசுரன் தாழ்த்துவாரெ
ன்று பயந்தாகிலும் தாழ்ச்சியுள்ளவர்களாகக் கடவோம்; ஏனென்றா
ல் ஆங்காரிகளை அவர் அழிக்கிறது வழக்கம். இதினாலல்லோ தன்னை
உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவானென்று அவர் தாமே சுவிசேஷத்தி
ல் திருவுளம்பற்றினார். ஆகையால் சர்வேசுரன் உன்னைத் தாழ்த்தாத
படிக்கு உனக்கு மனதுண்டானால், உன்னை நீயே தாழ்த்திக்கொள்; இ
து மகா முக்கியமான சத்தியம்; இதைப் பற்றும்பற்றாய்ச் சீர்தூக்கி
ப் பார்க்கிறது அவசரமென்பதற்குச் சந்தேகமில்லை. இதினாலல்லோ
சர்வேசுரன் நீதிமான்களாகிய புண்ணியவாளருடைய இருதயத்தைச்
சுத்திகரிக்கத் தாற்பரியப்பட்டாலும், அதிலே யாதொரு அற்பக் குறை
ங் குறையிருக்கட்டுமென்று பலமுறை விட்டுவிடுவார். இதைக் கண்டு
மேற்சொன்ன தர்மாத்துமாக்கள் எவ்வளவு மேலான புண்ணிய வரங்
களால் மற்றவர்கள் கண்ணுக்குத் துலங்கினாலும், அவர்கள் தங்களிட
த்திலுள்ள குற்றங் குறைகளைக் கண்டு தங்களைத் தாழ்த்தி அற்பக் கு
ற்றத்தைமுதலாய்த் திருத்திக்கொள்ளத் தங்களால் ஆகாததினாலே, தங்
களிடத்தில் விளங்குகிற மேலான வரங்களினிமித்தம் ஆங்காரிக்க மா
ட்டார்கள். அற்பச் சமயங்களிலே தங்களைச் செயித்து அடக்கக்
கூடாததினாலே, கனத்த பாவ சமயங்களில் தாங்கள் கொள்ளுகிற
செயத்தினிமித்தம் வீண்மகிமைப் பட மாட்டார்களென்று அர்ச். கிரெ
கோரியார் வசனித்தார். இதினாலே அவர்கள் எப்போதும் தாழ்ச்சி
யோடும் பயத்தோடும் நடந்து தேவ வரப்பிரசாதமில்லாமல் தங்களா
ல் ஒன்றும் ஆகாதென்று எண்ணி இடைவிடாமல் தேவ கிருபையை
இரந்து மன்றாடுவார்கள். அர்ச். பெர்நர்துஸ் சொல்லுகிறதுமிதுவே; ச
கல அர்ச்சியசிஷ்டவர்களும் போதித்திருக்கிற சத்தியமிதுவே. அவ
ரையல்லாமல் ஒன்றும் உண்டாகவில்லையென்று அர்ச். அருளப்பர் சு
விசேஷத்தில் சொல்லியிருக்கின்றது. வெட்டுக்கிளியும் பூச்சியும் வ



ண்டும் கம்பளிப்பூச்சியும் அரித்த வருஷங்களை உங்களுக்குத் தந்தருளுவேனென்று யோவேலென்னும் தீர்க்கதரிசி வாயாலே சர்வேசுரன் திருவுளம்பற்றினார். இவ்வாக்கியங்களின் பேரில் அர்ச். அகுஸ்தீனும், அர்ச். எரோனிமுசும் சொல்லுமாப்போலே, மனிதனைத் தாழ்த்துகிறதற்காகவே சர்வேசுரன் அந்த வண்டுகளையும பூச்சிகளையும் உண்டாக்கினார். எஜிப்த்து தேசத்தாருடையவும் பரவோனுடையவும் கல்நெஞ்சத்தனத்துக்கு ஆக்கினையாக அவர் கரடிகளையும் சிங்கங்களையும் பாம்புகளையும் அனுப்பியிருக்கலாம்; ஆனால் அவர்களை அதிகமாய் இச்சை கெடுப்பதற்காக ஈயையும் விட்டிலக்கிளியையும் தவளையையுங் கொண்டு அவர்களுடைய ஆங்காரத்தை அடக்கச் சித்தமானார். நமது பட்டில் அவர் நடக்கிறவிதமும ஏறக்குறைய இதுவே. நம்மை வெகுவாய்த் தாழ்த்துவதற்காக நம்மை அற்பக் குற்றங்களில் விழவிடுவார்; ஈயும் எறும்புமபோன்ற இந்த அற்பக் குற்றங்கள் நம்மோடு சண்டைபோட்டு நம்மை உபாதிக்கும். ஏனென்றால் நமக்கு அதிக கஸ்திக்குக் காரணமெதுவென்று யோசித்துப் பார்த்தால், அது ஏறக்குறைய ஒன்றுமில்லாத காரியமென்று அறிந்துகொள்ளுவோம். ஒருவர் நமக்குச் சொன்ன ஒரு அற்ப வார்த்தையாகிலும் அதைச் சொன்ன சத்தத்தைப்பற்றியாகிலும் நம்மை ஒருவர் சட்டைபண்ணுகிறதில்லையென்று நமக்குத் தோன்றுகிற ஒரு அற்ப அடையாளத்தையாகிலும் இது முதலான ஈபோன்ற காரியத்தையென்கிலும் யானைபோலெண்ணி நமக்கு வருகிற அற்ப வருத்தத்தின் நிமித்தம் ஆயிரம் மனக்கலக்கமும் கஸ்தியும பட்டுக்கொண்டு வருகிறோமல்லவோ? ஈபோன்ற இந்தக் காரியங்களினாலே நமக்கு இவ்வளவு வருத்தமுண்டாகச் செய்தே புலியையும் சிங்கத்தையும் சர்வேசுரன் அனுப்பி நமதுமேலே பாயவிட்டால், என்ன செய்யப்போகிறோம்? யாதொரு கனத்த சோதனை நமக்கு வந்தால், எவ்வளவோ மனங்கலங்குவோம்? இதற்கொத்த யோசனைகளை நாம் அடிக்கடி செய்து நம்மிடத்தில் தாழ்ச்சியையும் வெட்கத்தையும் எழுப்பிக்கொள்ளப் பிரயாசப்பட வேண்டும். நமக்கு நேரிடுகிற அற்பப் பொல்லாப்புகளை யோசித்துத் தாழ்ச்சியாகிற பிரயோசனத்தை நாம் அடைந்தால், அற்பக் குற்றங்களைச் சர்வேசுரன் நம்மை விட்டு முழுதும் நீக்காமலிருக்கிறது அவருடைய கிருபாகடாக்ஷத்தாலென்று அர்ச். பெர்நார்துஸ் வசனிக்கிறார்.

[illegible] தாழ்ந்துக்





றதற்குப் பற்றுதேபோனல், இன்னம் சர்வேசுரன் உனக்கு அதிக பொல்லாப்பை வரவிடுவாரென்று அறிந்துகொள்; அவர் நடக்கிறவிதமிதுவே. ஆங்காரத்தையும் அகந்தையையும் அவர் வெகுவாய்ப் பகைத்துத் தாழ்ச்சியை வெகுவாய்ச் சிநேகிக்கிறதினாலே, ஆங்காரிகளைத் தாழ்த்துவதற்காக அவர்கள் யாதொரு சாவான பாவத்தில் விழும்படியாய் நீதிப்பிரகாரம் சர்வேசுரன் அவர்களை விட்டுவிடுகிறது வழக்கமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அற்ப சொற்ப சாவான பாவத்திலேயுமல்லாமல் எல்லாத்திலும் வெட்கத்துக்குரிய காமபாவத்திலேயும் அவர்களை விழவிடுவார். அவர்களுடைய ஆங்காரமாகிற இரகசியமான பாவத்துக்கு ஆக்கினையாகக் காமமாகிற பிரசித்தமான பாவங்களிலே இடறிவிழுவார்கள். இதற்கு அத்தாட்சியாக அஞ்ஞான சாஸ்திரிகள்பேரில் அர்ச். சின்னப்பர் சொல்லியிருக்கிறதை வேதபாரகர் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அதென்னவென்றால், சர்வேசுரன் அவர்களுடைய ஆங்காரத்தை அழிப்பதற்காக அவர்கள் இருதயத்தில் நின்றெழும்பின அசுத்தமான ஆசைக்கும் அவர்கள் தங்கள் பேரில் சகலவித அசுத்தத்தையும் செய்துகொள்ளுவதற்கான காமப் பாவத்துக்கும் மிருகத்துக்குரிய வெட்கமான ஆசாபாசங்களுக்கும் அவர்களைக் கையளித்தாரென்று அர்ச். சின்னப்பர் திருவுளம்பற்றினர். இதுவெல்லாம் இப்படியிருக்கச் சனங்களுடைய இராசாவே, உமக்குப் பயப்படாதவனாரென்று எரேமியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். இவ்வளவு அகோரமான ஆக்கினையைக் கண்டு நடுங்காதவனார்? நரகத்திலே முதலாய் இதைவிடக் கொடூரமான ஆக்கினையில்லையே; பாவம் நரகத்தைவிடக் கொடிய ஆக்கினையல்லோ? உமது கோபாக்கினையின் அகோரத்தைக் கண்டுபிடிப்பவனார்? உமக்குப் பயப்படுகிறவன் உமது கோபாக்கினையை எப்போவாகிலும் கூட்டிச் சொல்ல முடியுமோவென்று தேவ சங்கீதத்தில் சொல்லியிருக்கின்றது.

அர்ச்சியசிஷ்டவர்கள் சொல்லுமாப்போலே, சர்வேசுரன் நமக்கு இருவகை இரக்கஞ் செய்கிறது வழக்கம்: ஒன்று பெரிய இரக்கம், வேறொன்று சின்ன இரக்கம். நமது சரீரத்துக்கடுத்த இலௌகீக பொல்லாப்புகளில் அவர் நமக்கு உதவிசெய்யும்போது, நமக்குச் சின்ன இரக்கம் செய்கிறார்; ஆத்துமத்துக்கடுத்த ஞானப் பொல்லாப்புகளில் அவர் நமக்கு உதவிசெய்யும்போது, பெரிய இரக்கம் பண்ணுகிறார். இதினாலே தாவீதரசன் காமபாவத்தையும் கொலைபாதகத்தையும் கட்டிக்கொண

டபின், சர்வேசுரன் அவரைக் கைநெகிழ்ந்து அவர் கனத்த பொல்லாப்புக்குள் அகப்பட்டிருக்கும்போது, சர்வேசுரனுடைய பெரிய இரக்கத்தை இரந்து மன்றாடியிருக்கிறார். இதினாலல்லோ சர்வேசுரா, உமது பெரிய இரக்கத்தின்படி என்பேரில் இரக்கமாயிருமென்றார். இவ்வண்ணமே சர்வேசுரன் மனிதருக்கு இரண்டுவிதக் கோபாக்கினை செய்கிறதுமுண்டு: ஒன்று பெரிய கோபாக்கினை, வேறொன்று சின்ன கோபாக்கினை. நமது ஆஸ்தி மகிமை சரீர சௌக்கியம் முதலிய இதுபோன்ற சரீரத்துக்கடுத்த இலௌகிக நன்மைகளில் நமக்குச் சேதத்தை வரவிடும்போது, நமக்குச் சின்ன கோபாக்கினை செய்கிறார்; நமதாத்துமத்துக்கடுத்த காரியங்களில் நம்மைத் தெண்டிக்கும்போது, நமக்குப் பெரிய கோபாக்கினை செய்கிறார். இதினாலல்லோ இதோ! வாள் ஆத்துமம் வரைக்கும் ஊடுருவினதென்று எரேமியாசென்னும் தீர்க்கதரிசி வசனித்தார். ஐசுவரியரான சனங்களுக்கு விரோதமாய் வெகு கோபாக்கினை கொள்ளுகிறோமென்று சக்கரியாசென்னும் தீர்க்கதரிசி வாயாலே சர்வேசுரன் திருவுளம்பற்றினார். அதாவது, ஆங்காரிகளுக்கும் மேட்டிமைக்காரருக்கும் விரோதமாய் நம்மிடத்தில் பெரிய கோபாக்கினை எழும்பினதென்று அர்த்தமாகும். சர்வேசுரன் யாதொருவனைக் கைவிட்டு அவனுடைய ஆங்காரத்துக்கு ஆக்கினையாக யாதொரு சாவான பாவத்தில் அவனை விழவிடும்போது, இது அவருடைய பெரிய கோபாக்கினையாகும். அப்போது அவர் பட்சமும் இரக்கமுமுள்ள தகப்பனைப்போலே அவனைத் தெண்டியாமல் கோபாக்கினையால் எரிகிற கண்டிப்பான நடுவனைப்போலே அவனுக்கு ஆக்கினையிடுவார். இவ்வித பயங்கரமான ஆக்கினையைக் குறித்து எரேமியாசென்னும் தீர்க்கதரிசி சொன்ன வார்த்தைகளாவது: சத்துருவைப்போலே உன்னைக் காயப்படுத்தினேன்; உன்னைக் கொடூரமாய்த் தெண்டித்தேனென்றார். அன்றியும் வேசியின் வாய் வெகு ஆழமான பாதாளம்; கர்த்தர் யார்பேரில் கோபமாயிருப்பாரோ அவன் அதில் விழுவானென்று ஞானியானவர் வசனித்தார்.

கடைசியாய் ஆங்காரம் மகா கெட்ட பொல்லாப்புமாய்ச் சர்வேசுரனுக்கு மிகவும் அருவருப்புமாயிருக்கிறதினாலே, ஆங்காரி ஆங்காரத்தைவிட்டுக் குணப்படும்படியாய் இப்பேர்ப்பட்ட ஆக்கினை அவனுக்கு வருகிறது சிலவிசை பிரயோசனமாயிருக்குமென்று அர்ச்சியசிஷ்டவர்கள் நிரூபித்தார்கள். யாதொரு பாவத்திலே வெளியரங்கமாய் விழுகி

றது ஆங்காரிகளுக்குப் பிரயோசனமாயிருக்குமென்று துணிந்து சொல்லுகிறோம்; ஏனென்றால் அவர்கள் வெளியரங்கமாய் விழுந்த இந்தப் பாவத்தினாலே வெட்கப்பட்டுத் தங்களை அறியாமல் தாங்கள் கொண்டிருந்த இரகசியமான வீண் மகிமையை விட்டுக் குணப்படுவார்களென்று அர்ச். அகுஸ்தீன் வசனித்தார். ஆங்காரம் பாவத்துக்கு முந்தி நடக்கும்; பாவத்தில் விழுவதற்குமுன் மனம் ஆங்காரித்தெழும்புமென்று இஸ்பிரித்துசாந்து திருவுளம்பற்றினார். அர்ச். கிரெகோரியாரும் அர்ச். பசிலியாரும் போதித்திருக்கிற சத்தியம் இதுவே. தாவீதரசனுடைய பாவத்தைக் குறித்து அர்ச். கிரெகோரியார் பேசும்போது, சர்வேசுரன் நித்திய காலமாய்த் தெரிந்தெடுத்துக்கொண்டு தேவ வரங்களால் நிரப்பியருளின மகாத்துமாக்களை வெட்கத்துக்குரிய காமபாவத்தில் ஏன் சிலவிசை விழவிடுகிறாரென்று கேட்டு அதற்கு அவர்தானே சொல்லுகிற மறுமொழியாவது: தேவ வரங்களைத் திரளாய் அடைந்திருக்கிற மகாத்துமாக்கள் சிலவிசை ஆங்காரமான எண்ணம் கொள்ளுகிறதுண்டு; இந்த எண்ணம் அவர்களுடைய இருதயத்துக்குள் ஆழமாய் மறைந்திருக்கிறதினாலே, அவர்கள் இதைக் கண்டுபிடிக்கிறதில்லை; தங்கள்பேரில் நம்பிக்கையும் வீண்மகிமையும் வெகுவாய்க் கொண்டிருந்தாலும், சர்வேசுரனை மாத்திரம் நாடி நடக்கிறோமென்று நினைப்பார்கள். இதினாலல்லோ அர்ச். இராயப்பர் இயேசுநாதர்பேரில் தம்மிடத்தில் வெகு சினேக உருக்கமும் அவருக்காகப் பாடுபடுவதற்குமிருந்த தைரியமும் உண்டென்றெண்ணி வீம்புக்குள்ளாகி இயேசுநாதரைப் பார்த்துச் சகலரும் நீர் பாடுபடுகிறதைக் கண்டு துர்மாதிரிகைப்பட்டாலும், நான் ஒருகாலும் துர்மாதிரிகைப்பட மாட்டேனென்றார். யாதொருவன் இப்படிப்பட்ட இரகசியமான மறைந்த ஆங்காரத்தில் விழும்போது, இதைக் குணப்படுத்துவதற்காக அவன் காமபாவத்தில் விழட்டுமென்று சிலவிசை சர்வேசுரன் விட்டுவிடுவார். இது சரீரத்துக்கடுத்த பாவமாகக்கொள்ள, மனதினால் கட்டிக்கொள்ளுகிற பாவத்தைப் பார்க்க இதை எளிதாய் அறிந்துகொள்ளுவான். ஏனென்றால் இப்படிப்பட்ட பாவத்தில் விழுந்தவன் இதினாலே தன் பலவீனத்தை அறிந்துகொண்டு தன்னை அறியாமல் தன்னிடத்திலிருந்த இரகசியமான ஆங்காரமாகிற பொல்லாப்பைக் கண்டுபிடித்து அதைப் பரிகரிக்கத் தேடுவான். ஆகையால் அவன் கட்டிக்கொண்ட பாவம் அவன் சர்வேசுரனுக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்தித் தன் பாவத்துக்கும் ஆங்காரத்துக்கும் தபசுசெய்து பரிகாரம்பண்ண உதவும். அர்ச். இரா






பப்பர் இயேசுநாதனை மறுதலித்த துரோகம் அவர் இருதயத்தில் மறைந்திருந்த வீம்பை வெளியரங்கமாய்க் காட்டினது. இவ்விரு பாவத்தாக்காகவும் அவர் அழுது தபசுபண்ணினதினாலே, இந்தப் பாவம் அவருக்குப் பிரயோசனமாயிற்று. தாவீதரசன் தான் கட்டிக்கொண்ட பாவத்தினாலேயும் இப்படிப் பிரயோசனப்பட்டார். இதினாலே கர்த்தாவே, தேவரீரென்னைத் தாழ்த்தினது உமது கற்பனைகளை நான் அநுசரிக்கிறதற்கு உதவியாயிருந்ததென்றார். கெட்டிக்காரனான வைத்தியன் உள்வியாதியைச் சொஸ்தப்படுத்துவதற்கான அவிஷ்தம் இல்லையென்று கண்டால், அந்த வியாதியை எளிதாய்க் குணப்படுத்துவதற்காக அதை வெளியிலே கொண்டுவரப் பிரயாசப்படுவான். இவ்வண்ணமே ஆங்காரத்தை விட்டுச் சில ஆத்துமாக்களைக் குணப்படுத்துவதற்காகச் சர்வேசுரன் அவர்களைக் கனமான பாவத்திலே வெளியரங்கமாய் விழவிடுவார். அவர்கள் தாங்கள் கட்டிக்கொண்ட பாவத்தின் கனத்தைக் கண்டு வெட்கப்படுவார்கள். இந்த வெட்கம் அவர்களைச் சுத்திகரித்து அவர்களிடத்திலுள்ள உள்வியாதியாகிற ஆங்காரத்தையும் வீம்பையும் சொஸ்தப்படுத்த உதவும். சர்வேசுரன் நம்மை நடத்துகிற விதமிதுவே. இதினாலல்லோ இஸ்ராயேல் சனங்களிடத்தில் நாம் சொன்னதை நிறைவேற்றுவோம்; இதைக்கேட்ட எவருக்கும் இருகாதும் கிணீர் கிணீரென்குமென்றார். இவ்வளவு பயங்கரமான ஆக்கினையின்பேரைக் கேட்கும்போதே நடுங்காதவனார்?

ஆகிலும் கர்த்தர் இரக்கமுள்ளவரானதால், மனுஷனுடைய ஆங்காரத்தை நீக்குவதற்கு எளிதான பரிகாரங்களை முந்தமுந்தச் செய்து பார்ப்பார். இதினாலே அவன் ஆங்காரம் தீராதேபோனால், பிரலாபத்துக்குரிய கண்டிப்பான ஆக்கினையை அவனுக்கு இடுகிறது வழக்கம். இதினாலே சிலவிசை வியாதி விக்கினங்களையும் சிலவிசை பொருள் சேதத்தையும் கீர்த்திச் சேதத்தையும் நமக்குக் கொண்டுவந்து விட்டு நமதாத்துமத்தைக் குணப்படுத்தி நம்மைத் தம்மிடத்தில் சேர்த்துக்கொள்ளப் பிரயாசப்படுவார். இப்பேர்ப்பட்ட இலௌகிக ஆக்கினை நமக்குத் தாழ்ச்சியுள்ளவர்களாக்கப் பற்றாதேபோனால், நமக்கு ஞான ஆக்கினையிடுவார். முந்தமுந்த நம்மை அற்பக் குற்றங்களில் விழவிடுவார்; அதின்பின் கனமான சோதனை வரவிடவே நாம் அதற்கு உட்படுகிற தருணமாயிருக்கும்; அதற்கு உட்பட்டோமோ இல்லையோவென்று சந்தேகப்படுகிறதற்கு முதலாய் இடமாயிருக்கும். இதைக் கண்டு சோ





# சய-ம் அதிகாரம்

நடந்த சிலவர்த்தமானங்களைக் கொண்டு மேற்சொன்ன சத்தியத்தை ஸ்திரப்படுத்துவது.

செவேருசென்னும் சுல்பீசியாரும் சூரியூசென்பவரும் வெளிப்படுத்தின வர்த்தமானமாவது: வியாதிகளைச் சொஸ்தப்படுத்தி ஆவேஷமேறின பசாசைத் துரத்தி வேறநேக புதுமைகளைச் செய்ய வரம்பெற்றிருந்த ஒரு மகாத்துமா எண்ணிறந்த சனங்கள் எப்பக்கத்திலுமிருந்து அவரிடத்தில் ஓடிவந்து அவருடைய வஸ்திரத்தைத் தொட்டு முத்திசெய்து அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ள வருவார்கள். இதைக் கண்டு அவர் இருதயத்தில் வீண் மகிமையான எண்ணம் பிறக்கத் துவக்கினது. ஆங்காரமான இந்த நினைவைத் தள்ளவும் சனங்களைத் தம்மிடத்தில் வராமல் விலக்கவும் கூடாதென்று அவர் கண்டு தம்மை உபாதித்துக்கொண்டிருக்கிற இந்தச் சோதனையை நீக்கித் தாழ்ச்சியைக் காப்பாற்றுவதற்காகச் சிறிது காலம் பசாசு தம்மைப் பிடித்து ஆட்டவேணுமென்று சர்வேசுரனைப் பிரார்த்தித்துக்கொண்டார். அவர் கேட்ட மன்றாட்டு அநுகூலப்பட்டுப் பசாசு அவரைப் பிடித்தது. பசாசைத் துரத்துவதற்காகப் பசாசு பிடித்தவர்களை அவரிடத்தில் கொண்டு வருகிறது முன்னமே வழக்கமாயிருந்ததுபோக இப்போது அவரைத்தானே பசாசு பிடித்தவனைப்போலே இழுத்துக்கொண்டு போய்த் திருச்சபை ஆசாரத்தின் பிரகாரம் பசாசை ஓட்ட வேண்டியதாய் வந்தது. ஐந்து மாசம் இப்படிப் பசாசு பிடித்திருந்தார். அதின்பின் அவர் சரீரத்தைப் பிடித்திருந்த பசாசையும் அவர் ஆத்துமத்தை நலியாமல் பிடித்திருந்த ஆங்காரம் அகந்தையான நினைவுகளெல்லாத்தையும் சர்வேசுரன் அவரைவிட்டு நீக்கினார்.

மேற்சொன்ன சூரியூசென்பவர் தானே இதற்கொத்த வேறொரு சங்கதி சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், அர்ச். சேவரீனென்பவர் மடத்திலே மகா ஆங்காரமும் வீண் மகிமையும் நிறைந்த மூன்று சந்நியாசிகள் இருந்தார்கள். இந்த அர்ச்சியசிஷ்டவர் அவர்களுக்கு



எவ்வளவு கடிந்து புத்தி சொன்னாலும், அவர்கள் திருந்தவில்லை. இதைக் கண்டு இந்த அர்ச்சியசிஷ்டவர் அவர்களைத் தாழ்த்தித் திருந்துவதற்கான ஆக்கினையைச் சர்வேசுரன் அவர்களுக்கு இடவேணுமென்று ஒரு நாள் கண்ணீர் சிந்தி வேண்டிக்கொண்டார். இந்த வேண்டுதல் செய்து முடிந்த அக்ஷணமே சர்வேசுரன் அவர்களுடைய சரீரத்தை மூன்று பசாசுகள் கையில் ஒப்புக்கொடுத்தார். அது அவர்களைப் பிடித்து நாற்பது நாள் வரைக்கும் கொடூரமாய் உபாதித்தது. அதின்பின் அர்ச்சியசிஷ்டவர் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளவே, சர்வேசுரன் அந்தப் பசாசுகளை அவர்களைவிட்டுத் துரத்தினார். இந்த ஆக்கினை அவர்களிடத்திலிருந்த ஆங்காரமும் வீண் மகிமையுமாகிற புகையை முழுதும் நீக்கினதினாலே, அவர்களுக்குச் சரீர சௌக்கியத்தோடே ஆத்தும சௌக்கியமும் வந்தது.

சேசாரியார் எழுதிவைத்த வர்த்தமானமாவது: பசாசு பிடித்திருந்த ஒருவனைக் குணப்படுத்துவதற்காகச் சித்தோவென்னும் சபையைச் சேர்ந்த ஒரு மடத்துக்குக் கொண்டு வந்தார்கள். சிரேஷ்டர் இந்தப் பசாசை ஓட்டப் போகும்போது, மகா புண்ணியவானென்று பேர்போனவருமாய்த் தமது ஆயுசுகாலமெல்லாம் விரத்தத்துவத்தை வெகு பரிசுத்தமாய் அநுசரித்திருந்தவருமாயான ஒரு வால சந்நியாசியாரைத் தம்மோடு அழைத்துக்கொண்டு போனார். சிரேஷ்டர் பசாசைப் பார்த்து இந்த வால சந்நியாசியார் உன்னை ஓடிப் போகச் சொன்னால், ஓடிப்போகாமலிருக்க உனக்குத் துணிவு வருமோவென்று கேட்டார். அதற்குப் பசாசு சொன்னதாவது: ஆம், இவருடைய ஆங்காரத்தினிமித்தம் இவருக்கு நான் பயப்படுகிறதில்லையென்றது.

. கிளிமாக்கருளப்பர் எழுதி வைத்ததாவது: மகா பெரிய தேவதாசர் ஒருவர் தாழ்ச்சியின் பாதையிலே நடக்க வேணுமென்று தீர்மானித்திருந்தார். அவருடைய புண்ணிய வர்த்திப்பைக் கண்டு காய்மகாரப்பட்ட பசாசு வீண் மகிமையாகிற விதையை அவர் இருதயத்தில் விதைத்து அவரைக் கெடுக்க ஏற்பட்டது. அவரோவென்றால் பசாசின் சோதனையைச் செயிப்பதற்காகத் தேவ ஏவலால் எளிதான ஒரு பரிகாரத்தைக் கண்டுபிடித்தார். அதென்னவென்றால், அவருடைய அறைச் சுவற்றிலே உத்தம பிறசினேகம், மிகவும் ஆழ்ந்த தாழ்ச்சி, சமனசுக்குரிய விரத்தத்துவம், செபத்தியானத்திலே இடைவிடாத தே



வபத்தி உருக்கம் இதுமுதலிய மேலான சாங்கோபாங்கத்துக்குரிய சில பிரதான புண்ணியங்களை எழுதிவைத்துக்கொண்டார். அப்புறம் வீண் மகிமையான நினைவு வரும் பொழுதெல்லாம், அவர் பசாசைப் பார்த்துச் சொல்லுவார்: எங்கே பார்ப்போம்: மிகவும் ஆழ்ந்த தாழ்ச்சியென்று எழுதியிருக்கின்றதே; இவ்வித தாழ்ச்சி என்னிடத்திலுண்டோ? ஐயோ! இப்பேர்ப்பட்ட தாழ்ச்சியில் நான் இன்னம் வந்து சேரவில்லை; அதற்குக் கிட்டத்தில் அணுகிப்போகக் கூடுமானால், நான் எவ்வளவோ பாக்கியவானாயிருப்பேன்! தாழ்ச்சியின் மேற்படியிலே நான் போய்ச் சேராததுமல்லாமல் கீழ்ப்படியில் முதலாய் நான் இன்னம் சேரவில்லையாக்குமென்பார். அதின்பின் உத்தம பிறசிநேகமென்று எழுதியிருக்கிறதை வாசித்து என்னிடத்திலே கொஞ்சம் பிறசிநேகம் இருக்கிறது மெய்தான்; ஆனால் என் சகோதரரிடத்தில் சிலவிசை கண்டிப்பாய்ப் பேசுகிறேனே; ஆகையால் என்னிடத்தில் உத்தம பிறசிநேகமில்லையென்பார். அப்புறம் சம்மனசுக்குரிய விரத்தத்துவமென்று எழுதியிருக்கிறதை வாசித்து விரத்தத்துவத்துக்கு விரோதமான வெகு நினைவுகளும் பற்றுதலும் என்னிடத்தில் பிறக்கிறதினாலே, சம்மனசுக்குரிய விரத்தத்துவம் என்னிடத்தில் இல்லையென்பார். கடைசியாய்ச் செபத்தியானத்திலே தேவபத்தி உருக்கமென்று எழுதியிருக்கிறதை வாசித்து நான் செபத்தியான நேரத்திலே பலமுறை பராக்காகித் தூங்கி விழுகிறேனே; ஆகையால் இப்பேர்ப்பட்ட தேவபக்தி உருக்கம் என்னிடத்தில் இல்லையென்பார். இதின்பின் அவர் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டிருப்பது: இந்தப் புண்ணியமெல்லாம் நான் அடையாதிருந்தும், நான் ஒன்றுக்கும் உதவாத ஊழியனென்று சொல்லிக்கொண்டு மெய்யாகவே இப்படி எண்ணிக்கொள்ள வேண்டும்; ஏனென்றால் உங்களுக்குக் கற்பிக்கப்பட்டதெல்லாம் நீங்கள் செய்து முடித்தபின், நாங்கள் ஒன்றுக்கும் உதவாத ஊழியரென்று சொல்லுங்களென்று சேசுநாதர் திருவுளம்பற்றினாரே. இப்படியிருக்க நான் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கு இன்னம் வெகு தூரமாயிருக்கிறதினாலே, என்னைப்பற்றி நான் எவ்வளவு தாழ்மையான எண்ணம் கொண்டிருக்க வேண்டுமென்பார்.

மூன்றாம் போதகம் முற்றும்.

---

பொருள

| அதிகாரம். | |
|---|---|
| | முதற் |
| | ஒறுத்த |
| க | செபத்தியானத்தோடு ஒற... விரண்டையும் ஒன்று... ள வேணுமென்று செ... |
| உ | ஒறுத்தலாகிறது இன்னதெ... அவசரமாயிருக்கிறதெ... |
| ங | தன் இச்சைபோலே நடக்... யட்டுமென்று சர்வே... கனமான தேவகோபா... |
| ச | தன்னைப் பகைப்பதின்பே... றுத்தலின்பேரிலும் த... |
| ரு | நமது புண்ணியவர்த்திப்பு... அடங்கியிருக்கிறதென்... |
| சா | ஒறுத்தலானது சந்நியாச... த்துக்கடுத்த ஒறுத்தலை... லுக்கும் அவசரமென்... |
| எ | இரண்டுவித ஒறுத்தலின்... |
| அ | தன்னை ஒறுக்கிறவன் தன்... த்தையும் சரீரத்தையும்... ன்று சொல்லுவது... |





# பொருளட்டவணை.

——ooo——





உ-ம் ...

அடக்க ஒடு...

மவுனத்தி...










cm 1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15




| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| 13 | 10 | வஞந்திரத்திலே. | வஞந்தரத்திலே. |
| 14 | 22 | காச்சினது. | காய்ச்சினது. |
| 54 | 1 | மாட்டானென்கிறதிலுலே. | மாட்டேனென்கிறதிலுலே. |
| 56 | 29 | வம்மிஷபதிகள். | வமிசபதிகள். |
| 63 | 10 | நம்மெல்லாரிடத்தில். | நாமெல்லாரிடத்தில். |
| 131 | 5 | சும்மாயிருக்க | சும்மா இருக்க. |
| 139 | 23 | மஞ்சலாயிருக்கின்றது. | மஞ்சளாயிருக்கின்றது. |
| 176 | 23 | சும்மாயிருந்து | சும்மா இருந்து. |
| 192 | 24 | போசனத்திலுலே, | போசனத்திலே. |
| 224 | 7 | நூற்றிமுப்பதினுயிரம். | நூற்றுமுப்பதினுயிரம். |
| 257 | 20 | வம்மிஷபதி. | வமிசபதி. |
| 261 | 33 | வம்மிஷபதிகளும். | வமிசபதிகளும். |
| 267 | 20 | கருத்துகொண்டிருந்தாய். | கருத்துக்கொண்டிருந்தாய். |
| 311 | 8 | வ[illegible]ஷபதிகளுக்கும். | வமிசபதிகளுக்கும். |
| 329 | 2 | வம்மிஷபதி. | வமிசபதி. |
| 335 | 2 | வம்மிஷபதியை. | வமிசபதியை. |
| 339 | 28 | வம்மிஷபதியாய் | வமிசபதியாய். |
| 345 | 2 | வேறான்றி. | வேருன்றி. |
| 375 | 32 | மகிமையையும். | மகிமையும். |
| 412 | 7 | என்பான். | என்பார். |
| 424 | 28 | நமக்கு. | நம்மை. |
| 427 | 31 | சுவற்றிலே. | சுவரிலே. |





